# இராவணன் சோகப் படலம்

*தன் மகன் இந்திரசித்து இறந்த செய்தி கேட்டுப் பெருந்துயருற்ற இராவணன் நிலையைக் கூறுதலின் இது இராவணன் சோகப் படலம் எனப் பெயர் பெற்றது.*

*இலக்குவனால் இந்திரசித்து இறந்ததும் அதனைத் தூதர் சிலர் ஓடிச்சென்று நடுக்கத்துடன் இராவணனிடம் கூறுகின்றனர். அங்ஙனம் கூறிய தூதர்களை வாளால் எறிந்த இராவணன் துயரம் தாளாமல் விழுந்து புலம்புகின்றான். பின்பு போர்க்களம் புகுந்து ஒருநாள் முழுதும் தேடி இந்திரசித்துவின் தலையைக் காணாது பெருந்துயருற்றுப் புலம்பித் வித்துத் தன் அரண்மனைக்கு உடம்பை மட்டும் எடுத்துச் செல்லுகின்றான். மண்டோதரி, மகன் உடல் மேல் விழுந்து கதறுகின்றாள். இராவணன், இவையெல்லாம் சீதையால் வந்ததன்றோ என நினைந்து அவளைக் கொல்ல வாளெடுத்து ஓடுகின்றான். இதனைக் கண்ணுற்ற மகோதரன் என்ற அமைச்சன் தன் மன்னவனுக்கு ஏற்படும் பழியை நினைந்து அஞ்சி, துணிவோடு இராவணன் பாதங்களில் விழுந்து பெண் கொலையால் வரும் பழியினைப் பலவாறு எடுத்துக் கூறுகின்றான். அதனைச் செவி மடுத்த இராவணன் அச்செயலைக் கைவிட்டு, மைந்தன் உடலைத் தைலத்தோணியில் வளர்த்துமாறு கட்டளையிடுகின்றான். இச்செய்திகள் இப்படலத்துக் கூறப்படுகின்றன.*

## *தூதர் இராவணனுக்கு இந்திரசித்து இறந்தமை தெரிவித்தல்*

***9186. ஓத ரோதன வேலை கடந்துளார்,***
***பூதரோதரம் புக்கென, போர்த்து இழி***
***சீதரோதக் குருதித் திரை ஒரீஇ,***
***தூதர் ஓடினர், தாதையின் சொல்லுவார்.***

***தூதர் தாதையின் சொல்லுவார்*** *- (போர்க்களத்திலிருந்து இராவணனின்) தூதுவர்கள் (நடந்தவற்றை) தந்தையாகிய இராவணனிடம் சொல்லும் பொருட்டு;* **ரோதன ஓத வேலை கடந்துளார்** *- அழுகையாகிய அலைகடலைக் கடந்தவர்களாய்;* **போர்த்துஇழி சீதரோதக் குருதித்திரை ஒரீஇ** *- (போர்க்களமெங்கும்) போர்த்தது போல் மூடிக்கொண்டு இழிந்து ஓடுகின்ற குளிர்ந்த கரையை உடைய இரத்த அலைகளைக் கடந்து,;* ***பூதர உதரம் புக்கென ஓடினர்*** *- மலை வயிற்றுள் புகுந்தாற்போல் (கோபுர வாயிலில் புகுந்து) (இலங்கையினுள்) ஓடினர்.*

*தூதர், ரோதனம், பூதரம், உதரம், ரோதம் என்பன வடசொற்கள். ரோதனம் - அழுகை; பூதரம் - மலை; உதரம் - வயிறு, நடுவிடம்; ரோதம் கரை; ஓதம் - அலை; வேலை - கடல்; சீதம் - குளிர்ச்சி, ரோதம் என்பதற்குத் துன்பம் என்று பொருள் கொள்ளினுமாம்.*

***9187. அன்றில் அம் கரும் பேடைகள் ஆம் என,***
***முன்றில் எங்கும் அரக்கியர் மொய்த்து அழ,***
***'இன்று இலங்கை அழிந்தது' என்று ஏங்குவார்,***
***சென்று, இலங்கு அயில் தாதையைச் சேர்ந்துளார்.***

***அன்றில் அம் கரும் பேடைகள் ஆம் என*** - *(தூதர்கள்) அன்றிற் பறவைகளின் அழகிய கரிய பேடைகளைப் போல;* ***அரக்கியர் முன்றில் எங்கும் மொய்த்து அழ*** - *அரக்கியர் தம் முன்றில் எங்கும் மொய்த்துக் கொண்டு அழ;* ***'இன்று இலங்கை அழிந்தது' என்று ஏங்குவார்*** - *'இன்று இலங்கை நகரம் அழிந்தது' என்று கூறிக் கொண்டு ஏங்குபவராய்;* ***இலங்கு அயில் தாதையைச் சென்று சேர்ந்துளார்*** - *விளங்குகின்ற வேற்படையையுடைய இந்திரசித்தின் தந்தையைச் சேர்ந்தார்கள்.*

*இலங்கை மாநகரின் செல்வத் திருமகனும் இளவரசனும் ஆகையினால் இந்திரசித்தின் இறப்பு இலங்கை அழிவதற்கு ஒப்பாகும் எனவே 'இன்று இலங்கை அழிந்தது' என்று தூதர் ஏங்கினர் என்பதாகும்.*

***9188. பல்லும் வாயும் மனமும் தம் பாதமும்***
***நல் உயிர்ப் பொறையோடு நடுங்குவார், -***
***'இல்லை ஆயினன், உன் மகன் இன்று' எனச்***
***சொல்லினார் - பயம் சுற்றத் துளங்குவார்.***

***தம் பல்லும் வாயும் மனமும் பாதமும்*** - *(சேர்ந்த தூதுவர்) தமது பற்களும், வாயும், மனமும், பாதமும்;* ***நல்உயிர்ப் பொறையோடு நடுங்குவார்*** - *சிறந்த உயிர்ப் பாரத்தோடு நடுங்கப் பெற்றவரும்;* ***பயம் சுற்றத் துளங்குவார்*** - *அச்சம் சூழ்ந்து கொள்ள நிலை கலங்கினவரும் ஆகி,;* ***'உன்மகன் இன்று இல்லை ஆயினன்' எனச் சொல்லினார்*** - *'உன் மகன் இன்று இல்லாமற் போனான்' என்று இராவணனிடம் கூறினர்.*

*இல்லை ஆயினன் - இறந்தான் என்று மங்கலமல்லாத சொல்லைச் சொல்லுதற்கு அஞ்சி இங்ஙனம் சொல்லினர்.*

***9189. மாடு இருந்த வர மாதவர், வானவர்,***
***ஆடல் நுண் இடையார் மற்றும் யாவரும்,***
***'வீடும், இன்று, இவ் உலகு' என விம்முவார்,***
***ஓடி, எங்கணும் சிந்தி ஒளித்தனர்.***

***மாடு இருந்த வரமாதவர் வானவர்*** - *(தூதர் சொன்னபோது) இராவணன் அருகில் இருந்தவர்களாகிய பெருந்தவமுடையவர்களும், தேவர்களும்;* ***ஆடல் நுண் இடையார் மற்றும் யாவரும்*** - *ஆடும் இயல்பினராகிய நுண்ணிய இடையையுடைய பெண்டிரும் மற்றும் யாவரும்;* ***வீடும், இன்று, இவ்உலகு' என விம்முவார்*** - *'இவ்வுலகம் இன்று அழியும்' எனப் புலம்பி;* ***ஓடி, எங்கணும் சிந்தி ஒளித்தனர்*** - *ஓடி எங்கும் சிதறி ஒளித்துக் கொண்டனர்.*

*மாடு - பக்கம், வீடுதல் - அழிதல், விம்முதல் - தேம்பிப் புலம்புதல்.*

## *தூதரை இராவணன் வாளால் வீசுதல்*

***9190. சுடர்க் கொழும் புகை தீ விழி தூண்டிட,***
***தடற்று வாள் உருவி, தரும் தூதரை***
***மிடற்று வீசல் உறா, விழுந்தான்அரோ -***
***கடல் பொருந் திரைபோல் கரம் சோரவே.***

***விழி கொழும்புகை சுடர்த்தீ தூண்டிட*** - *(இராவணன்) கண்கள் கொழுவிய புகையையும் ஒளி வாய்ந்த சின நெருப்பினையும் கக்க;* ***தடற்று வாள் உருவி தரும் தூதரை*** - *தன் உறையிலிருந்த வாளை உருவித் துன்பச் செய்தியைக் கொணர்ந்த தூதரை;* ***மிடற்று வீசல் உறா, பெரும் கடல் திரைபோல்*** - *கழுத்தின்கண் வீசத் தொடங்கி பெரிய கடல் அலைகள் போல்;* ***கரம் சோரவே விழுந்தான்*** - *இருபது கரங்களும் சோர்ந்து விழுந்தான்.*

*தடறு - உறை. 'தடற்றிடங்கொள்வாள்' (களவழி - 18)*

## *இராவணன் புலம்பல்*

***9191. 'வாய்ப் பிறந்தும், உயிர்ப்பின் வளர்ந்தும்,வான்***
***காய்ப்பு உறும்தொறும் கண்ணிடைக் காந்தியும்,***
***போய்ப் பிறந்து, இவ் உலகைப் பொதியும் வெந்***
***தீப் பிறந்துளது, இன்று' எனச் செய்ததால்.***

***வாய்ப்பிறந்தும் உயிர்ப்பின் வளர்ந்தும்*** - *(இராவணனது) வாயில் பிறந்தும் அவனது மூச்சுக்காற்றில் வளர்ந்தும்;* ***வான் காய்ப்பு உறும் தொறும் கண்ணிடைக் காந்தியும் போய்ப் பிறந்து*** - *பெரும் வெறுப்பு (வளர்ந்து) தோன்றுந் தோறும் கண்களிலே எரிந்து போய்த் தோன்றி;* ***'இவ்உலகைப் பொதியும் வெந்தீ*** - *'இவ்வுலகத்தையெல்லாம் மூடுகின்ற வெப்பமிக்க தீ;* ***இன்று பிறந்துளது' எனச் செய்ததால்*** - *இன்று பிறந்தது' என்று உலகம் சொல்லுமாறு பரவியது.*

*உலகைப் பொதியும் வெந்தீ - ஊழித்தீ. வான் - பெருமை, காய்ப்பு - வெறுப்பு.*

***9192. படம் பிறங்கிய பாந்தளும் பாரும் பேர்ந்து,***
***இடம் பிறங்கி, வலம்பெயர்ந்து ஈடு உற,***
***உடம்பு இறங்கிக் கிடந்து உழைத்து, ஓங்கு தீ***
***விடம் பிறந்த கடல் என வெம்பினான்.***

***படம் பிறங்கிய பாந்தளும் பாரும்*** *- படம் விளங்குகின்ற ஆதிசேடனும், அவனால் தாங்கப்பட்ட பூமியும்;* ***இடம் பேர்ந்து பிறங்கி, வலம் பெயர்ந்து ஈடு உற*** *- இடப்பக்கமாகப் பேர்ந்து பொருந்தியும் வலப்பக்கமாகப் பெயர்ந்து பொருந்தியும் வருத்தமுற;* ***இறங்கிக் கிடந்து உடம்பு உழைத்து*** *- இராவணன் தன் ஆசனத்திலிருந்து இறங்கி தரையில் கிடந்து உடம்பு வருந்தி;* ***ஓங்குதீ விடம் பிறந்த கடல் என வெம்பினான்*** *- ஓங்கிய கொடுமையுடைய நஞ்சு தோன்றிய கடல்போல வெதும்பினான்.*

*இராவணன் தரையில் கிடந்து வருந்தும்போது இடப்பக்கமும் வலப்பக்கமுமாக உருண்டு புரண்டான். அங்ஙனம் அவன் புரளும் போது பூமியும் அதனைத் தாங்கியுள்ள ஆதிசேடனும் அவன் புரளுதற்கேற்ப இடப்பக்கமும் வலப்பக்கமுமாகச் சாய்ந்து நிலை கெட்டு வருந்தின என்பதாம். நஞ்சு தோன்றிய கடல் அந்நஞ்சினால் வெதும்பியது போல இராவணன் தன்னிடத்துத் தோன்றிய புத்திர சோகத்தினால் வெதும்பினான் என்றார்.*

***9193. திருகு வெஞ் சினத் தீ நிகர் சீற்றமும்,***
***பெருகு காதலும், துன்பும், பிறழ்ந்திட,***
***இருபது என்னும் எரி புரை கண்களும்,***
***உருகு செம்பு என, ஓடியது ஊற்று நீர்.***

***திருகுவெஞ்சினத்தீ நிகர் சீற்றமும்*** *- (பகைவர் மேலெழுந்த) மாறுபட்ட கொடிய சினம் என்று சொல்லப்படுகின்ற தீயை ஒத்த சீற்றமும்;* ***பெருகு காதலும், துன்பும் பிறழ்ந்திட*** *- (மகன் மேல்) பெருகுகின்ற அன்பும் (அவன் இறந்தமையால்) துன்பமும் மாறி மாறித் தோன்றுதலால்;* ***இருபது என்னும் எரிபுரை கண்களும்*** *- இராவணனுடைய தீயை ஒத்த இருபது என்ற எண்ணிக்கையை உடைய கண்களும்;* ***ஊற்று நீர் உருகு செம்பு என ஓடியது*** *- ஊற்றுகின்ற துன்பக் கண்ணீர் உருகிய செம்பு போலப் பெருகி ஓடியது.*

***9194. கடித்த பற் குலம், கற் குலம் கண் அற***

***இடித்த காலத்து உரும் என எங்கணும்,***
***அடித்த கைத்தலம் அம் மலை, ஆழி நீர்,***
***வெடித்த வாய்தொறும் பொங்கின, மீச் செல.***

***கற்குலம் கண் அற*** - *மலைக்கூட்டங்கள் துகளாக அற்றுப் போமாறு;* ***இடித்த காலத்து உரும் என எங்கணும்*** - *'மேகம் இடித்த காலத்துத் தோன்றும் இடியொலியே' என எவ்விடத்தவரும் பேசுமாறு;* ***பற்குலம் கடித்த*** - *இராவணனது பல்வரிசைகள் கடித்தன;* ***அம்மலை வெடித்தவாய் தொறும் ஆழிநீர் பொங்கின மீச்செல*** *- அத்திரிகூட மலை வெடித்த வாய்தொறும் கடல் நீர் பொங்கி மேல் வழியுமாறு; கைத்தலம் அடித்த - அவன் கைகள் தரையில் மோதின.*

***9195. 'மைந்தவோ!' எனும்; 'மா மகனே!' எனும்;***
***'எந்தையோ!' எனும்; 'என் உயிரே!' எனும்;***
***'முந்தினேன் உனை; நான் உளெனோ!' எனும்;-***
***வெந்த புண்ணிடை வேல் பட்ட வெம்மையான்.***

***வெந்த புண்ணிடை வேல் பட்ட வெம்மையான்*** - *வெந்த புண்ணில் வேல் பட்டாற் போன்ற கொடுந்துன்பத்தை அடைந்தவனான இராவணன்;* ***'மைந்தவோ!' எனும் 'மாமகனே!' எனும்*** - *'மைந்தா ஓ!' என்பான்; சிறந்த மகனே! என்பான்;* ***'எந்தையோ!' எனும்; 'என் உயிரே!' எனும்*** - *'என் அப்பா ஓ!' என்பான்; 'என் உயிரே!' என்பான்;* ***'உனை முந்தினேன்; நான் உளனோ!' எனும்*** - *'உனக்கு முன்னர் உயிர் விட வேண்டியவனாகிய நான் இன்னும் இருக்கின்றேனே' என்பான்.*

*கும்பகருணனை இழந்த துன்பம் வெந்தபுண் போன்றது எனவும், இந்திரசித்தனை இழந்த துன்பம் அப்புண்ணில் வேல் நுழைந்தது போன்றதெனவும் கொள்க. 'ஓ' என்பது இரக்கக் குறிப்புணர்த்தும் இடைச் சொல். மகனை எந்தை என்பது அன்பு பற்றி வந்த வழுவமைதி.*

***9196. 'புரந்தரன் பகை போயிற்று அன்றோ!' எனும்;***
***'அரந்தை வானவர் ஆர்த்தனரோ!' எனும்;***
***'கரந்தை சூடியும், பாற்கடல் கள்வனும்,***
***நிரந்தரம் பகை நீங்கினரோ!' எனும்.***

***புரந்தரன் பகை போயிற்று அன்றோ!' எனும்*** - *'இந்திரனது பகை போயிற்று அல்லவோ!' என்பான்;* ***'அரந்தை வானவர் ஆர்த்தனரோ!' எனும் ;*** - *(நம்மால்) துன்பமடைந்த தேவர்கள் (துன்பம் நீங்கி மகிழ்ச்சியால்) ஆரவாரித்தனரோ?' என்பான்;* ***'கரந்தை சூடியும் பாற்கடல் கள்வனும்*** - *'கரந்தையைச் சூடிய சிவனும் பாற்கடலில்*

*ஒளிந்துகொண்டுள்ள திருமாலும்;* ***நிரந்தரம் பகை நீங்கினரோ!' எனும்*** *- நிரந்தரமாகத் தம் பகை நீங்கப் பெற்றனரோ?' என்பான்.*

*அரந்தை - துன்பம், கரந்தை - கரந்தை மலர், திருநீற்றுப்பச்சை நிரந்தரம் - இனி எப்பொழுதும், இந்திரன், சிவன், திருமால் என்போர் இந்திரசித்தனுக்கு அஞ்சி அடங்கி இருந்தவர் இனி அச்சம் தீர்ந்து மகிழ்வர் என்றவாறு.*

***9197. 'நீறு பூசியும் நேமியும் நீங்கினார்,***
***மாறு குன்றொடு வேலை மறைந்துளார்,***
***ஊறு நீங்கினராய், உவணத்தினோடு***
***ஏறும் ஏறி, உலாவுவார்' என்னுமால்.****

***'நீறு பூசியும் நேமியும்*** *- திருநீறு பூசிய சிவனும், சக்கரப் படை தாங்கிய திருமாலும்;* ***மாறு குன்றொடு வேலை மறைந்துளார் நீங்கினார்*** *- மேடும் பள்ளமுமாய் மாறுபட்டுள்ள மலையிலும் கடலிலும் மறைந்துள்ளவர்களாய் (முன்பு உன் எதிரில் வராமல்) விலகிக்கொண்டனர்;* ***ஊறு நீங்கினராய், உவணத்தினோடு ஏறும் ஏறி உலாவுவார்' என்னுமால்*** *- (இப்பொழுது) துன்பம் நீங்கப் பெற்றவராய் கருடன் மீதும் ஏற்றின் மீதும் ஏறிக்கொண்டு உலாவுவார்கள்' என்று கூறுவான்.*

*நீறு பூசியும் நேமியும் குன்றொடு வேலை மறைந்துளார் என்பது நிரல் நிறைப் பொருள்கோள். 'உவணத்தினோடு ஏறும் ஏறி' என்பது எதிர் நிரல் நிறைப்பொருள்கோள்.*

***9198. 'வான மானமும், வானவர் ஈட்டமும்,***
***போன போன திசை இடம் புக்கன,***
***தானம் ஆனவை சார்கில; சார்குவது,***
***ஊன மானிடர் வென்றிகொண்டோ?' எனும்.***

***'வானவர் ஈட்டமும் வானமானமும்*** *- தேவர்களின் கூட்டமும் அவர்கள் ஏறிச் செல்லுதற்குரிய வானவிமானமும்;* ***போன போன திசை இடம் புக்கன*** *- (இந்திரசித்தின் முன்னிற்கவியலாது) போன போன திசையிடங்களில் புகுந்தனவாய் மறைந்திருந்து,;* ***தானம் ஆனவை சார்கில சார்குவது*** *- தம் இருப்பிடத்தை இதுகாறும் சேர்ந்தில, அவை மீண்டும் சேர்வது;* ***ஊன மானிடர் வென்றி கொண்டோ?' எனும்*** *- குறைபாடுடைய மனிதர்களின் வெற்றியைத் துணையாகக்கொண்டு தானோ?' என்பான்.*

*மானம் - விமானம் என்பதன் முதற்குறை. 'ஈட்டம்' என்னும் அஃறிணை 'சார்கில' என்னும் அஃறிணை முடிவு கொண்டது. தானம் - ஸ்தானம் அவரவர் இருப்பிடமாம். உயர்வுடைய தேவர்கள் குறைபாடுடைய மனிதர்கள் பெற்ற வெற்றியைத்*

*துணையாகக் கொண்டு தத்தம் தானத்தை அடைவது பெருமைக்குரியதாயிற்றோ? என்றவாறு.*

***9199. 'கெட்ட தூதர் கிளத்தினவாறு ஒரு***
***கட்ட மானிடன் கொல்ல, என் காதலன்***
***பட்டு ஒழிந்தனனே!' எனும்; பல் முறை***

***விட்டு அழைக்கும்; உழைக்கும்; வெதும்புமால்.***

**கெட்ட தூதர் கிளத்தினவாறு** - *கொடிய தூதர்கள் கூறியவாறு;* **ஒரு கட்ட மானிடன் கொல்ல** - *ஒரு வருந்துந் தன்மையை உடைய மனிதன் கொல்ல;* **என் காதலன் பட்டு ஒழிந்தனனே' எனும்** - *என் அன்புக்குரிய மகன் இறந்து பட்டனனே!' என்பான்;* **பல்முறை விட்டு அழைக்கும் உழைக்கும் வெதும்புமால்** - *பலமுறை 'மகனே! மகனே!' என்று குரல் விட்டு அழைப்பான்; (அவன் வாராமையால்) வருந்துவான்; பின் மனம் வெதும்புவான்.*

***9200. எழும்; இருக்கும்; இரைக்கும்; இரக்கம் உற்று***
***அழும்; அரற்றும்; அயர்க்கும்; வியர்க்கும், போய்***
***விழும்; விழிக்கும்; முகிழ்க்கும்; தன் மேனியால்,***
***உழும் நிலத்தை; உருளும்; புரளுமால்.***

**எழும்; இருக்கும்; இரைக்கும்; இரக்கம் உற்று அழும்** - *(துன்ப மிகுதியால் இராவணன்) எழுவான். பிறகு தரையில் இருப்பான்; பெருமூச்சு விடுவான், இரக்கமிக்கு அழுவான்;* **அரற்றும்; அயர்க்கும்; வியர்க்கும்; போய் விழும்** - *வாய் திறந்து அரற்றுவான்; சோர்வுறுவான்; வியர்ப்பான்; சிறிது நடந்து விழுவான்;* **விழிக்கும்; முகிழ்க்கும்; தன் மேனியால் நிலத்தை உழும்; உருளும்; புரளுமால்** - *(பேதலித்து ஒன்றும் தோன்றாமல்) கண்களை விழிப்பான்; பின்பு மூடுவான், தன் உடம்பினால் நிலத்தை உழுவான்; பின்பு தரையில் உருண்டு செல்வான், மீண்டும் புரண்டு வருவான்.*

*இரைத்தல் - பெருமூச்சு விடுதல், அயர்த்தல் - சோர்தல், முகிழ்த்தல் - கண்களை மூடுதல், கலப்பையால் நிலத்தை உழுவது போலத் துன்ப மிகுதியால் இராவணன் தன் உடம்பால் நிலத்தை உழுவான் போல் இயங்கித் துன்புற்றான்.*

***9201. 'அய்யனே!' எனும், ஓர் தலை; 'யான் இனம்***
***செய்வெனே அரசு!' என்னும், அங்கு ஓர் தலை;***
***'கய்யனேன், உனைக் காட்டிக் கொடுத்த நான்,***
***உய்வெனே!' என்று உரைக்கும், அங்கு ஓர் தலை.***

***ஓர் தலை, 'அய்யனே!' எனும்*** - *(இராவணனுடைய பத்துத் தலைகளுள்) ஒருதலை 'அய்யனே!' என்று அழைக்கும்;* ***ஆங்கு ஓர் தலை 'யான் இனம் அரசு செய்வனே!' என்னும்*** - *மற்றொரு தலை 'யான் இன்னும் அரசு செய்வேனோ!' என்றும் சொல்லும்;* ***'உனைக் காட்டிக் கொடுத்த கய்யனேன் நான்*** - *உன்னைப் பகைவன் கொல்ல வழி செய்து கொடுத்த சிறுமையனாகிய நான்;* ***உய்வனே!' என்று உரைக்கும் அங்கு ஓர் தலை*** - *உயிர் வாழ்ந்திருப்பேனோ?' என்று ஒருதலை சொல்லும்.*

*இராவணனுடைய பத்துத் தலைகளுள் மூன்று தலைகள் கூறியவை இங்கு கூறப்பெற்றன. வாய் கூறியதைத் தலை கூறியதாகச் சொன்னது தானியாகுபெயர். கய்யன் - சிறுமையுடையவன். கை - சிறுமை. தான் செய்த செயலுக்குத் தானே பொறுப்பேற்று முந்திச் சென்று உயிர் விடாமல், தன் அன்புக்குரிய மகனை உயிர் விடச் செய்த சிறுமை இராவணனை வாட்டுகின்றது.*

***9202. 'எழுவின் கோலம் எழுதிய தோள்களால்***
***தழுவிக் கொள்கலையோ!' எனும், ஓர் தலை;***
***'உழுவைப் போத்தை உழை உயிர் உண்பதே!***
***செழு வில் சேவகனே!' எனும், ஓர் தலை.***

***ஓர் தலை; 'எழுவின் கோலம் எழுதிய தோள்களால்*** - *இராவணனது ஒருதலை "சந்தனக்கோலம் எழுதிய இரும்புத்தூண் போன்ற தோள்களால்;* ***'தழுவிக் கொள்கலையோ!' எனும்*** - *தழுவிக்கொள்ள மாட்டாயோ?" என்று சொல்லும்;* ***ஓர் தலை, 'செழு வில் சேவகனே! 'உழுவைப் போத்தை*** - *மற்றொரு தலை 'செழுமையான வில்லேந்திய வீரனே! ஆண்புலியை;* ***உழை உயிர் உண்பதே!' எனும்*** - *பெண்மான் உயிர் வாங்குவதோ?' என்று சொல்லும்.*

*எழு - இரும்புத்தூண். உழுவைப் போத்து - ஆண்புலி. உழை - பெண்மான். ஆடவர் தோளுக்கு எழு - 'எழுவுறழ் திணிதோள்' (பெருங் 2, 6, 131) தோளில் எழுதுதல்; 'எழிற்றோள் எழுதி' (பெருங், 1, 34, 201) வீரனுக்குப் புலிப்போத்து; 'புலிப்போத்தன்ன புல்லணற்காளை' (பெரும்பான். 138) 'வயப்புலிப் போத்தன்னார்' (பெரி. ஏனாதி 13) புலிப்போத்து, 'பொறி வரியிடும் புலிப்போத்து நவ்வி வெரீஇ' (பெருங், 1, 54, 37)*

***9203. 'நீலம் காட்டிய கண்டனும், நேமியும்***
***ஏலும் காட்டின் எறிந்த படை எலாம்***
***தோலும் காட்டி, துரந்தனை; மீண்டும் நின்***

***ஓலம் காட்டிலையோ!' எனும், ஓர் தலை.****

***நீலம் காட்டிய கண்டனும் நேமியும்*** - *நீலநிறம் பொருந்திய கண்டத்தை உடைய சிவனும், சக்கரப்படையை உடைய திருமாலும்;* ***ஏலும் காட்டின் எறிந்த படை எலாம்*** - *பொருந்திய போர்க்களத்தின் கண் எய்த ஆயுதங்களை எல்லாம்;* ***தோலும் காட்டி துரந்தனை மீண்டநின்*** - *நின் கேடகத்தைக் காட்டித் துரத்தி மீண்டநின்;* ***ஓலம் காட்டிலையோ?' எனும் ஓர் தலை*** - *வீர கர்ச்சனையை (அம்மனிதனிடம்) காட்டவில்லையோ?' என்று மற்றோர் தலை சொல்லும்.*

*காடு, இங்கே பறந்தலையைக் குறித்தது. தோல் - கேடயம். இதற்குத் தோல்வி என்று பொருள் கூறலும் ஆம். ஓலம் காட்டுதல் - கர்ச்சித்தல்; இதற்குக் குரலைக் காட்டுதல் என்று பொருள் கொண்டு 'என்னோடு பேச மாட்டாயோ' எனப் பொருளுங் கொள்வர்.*

***9204. 'துஞ்சினாய்கொல், துணை பிரிந்தேன்' எனும்;***
***'வஞ்சமோ!' எனும்; 'வாரலையோ!' எனும்;***
***'நெஞ்சு நோவ, நெடுந் தனியே கிடந்து,***
***அஞ்சினேன்!' என்று அரற்றும்;- அங்கு ஓர் தலை.****

***துஞ்சினாய் கொல், துணை பிரிந்தேன்' எனும்*** - *நீ உண்மையாக இறந்து விட்டாயோ? யான் என் துணையாக இருந்த உன்னைப் பிரிந்தேனே!' என்று சொல்லும்;* ***'வஞ்சமோ!' எனும் 'வாரலையோ' எனும்*** - *(நீ இறந்தாய் என்பது) 'வஞ்சனையோ' என்று சொல்லும். (உண்மையாகவே) 'என் முன் வரமாட்டாயோ!' என்று சொல்லும்;* **நெஞ்சு நோவ, நெடுந்தனியே கிடந்து** - *நெஞ்சு நோவுமாறு நெடுநேரம் (தன் துன்பத்தோடு) தனித்துக் கிடந்த (பின்பு);* ***'அஞ்சினேன்' என்று அரற்றும், அங்கு ஓர் தலை*** - *'அஞ்சினேன்' என்று வாய்விட்டு அரற்றும் ஒருதலை.*

*பெருந்துயரிலிருப்போர் பலவாறு புலம்பிக் கதறிய பின்பு சிறிது தமக்குத்தாமே புழுங்கிய வண்ணம் கிடப்பர். பின்பு திடீரென்று வாய் விட்டு அரற்றுவர். இவ்வுலகியல் நடப்பைக் கவனித்திருந்த கவிஞன் 'நெஞ்சு நோவ நெடுந்தனியே, தனக்குத்தானே ஏக்குற்று புழுங்கிச் சிறிது போது கிடந்த இராவணன் பின்பு திடீரென்று வாய் விட்டு அரற்றுவதாக அமைத்திருக்கும் நுட்பம் அறிந்து பாராட்டத்தக்கதாம்.*

***9205. 'காகம் ஆடு களத்திடைக் காண்பெனோ,***
***யாகசாதனன் மௌலியொடும் பொறித்து;***
***ஓகை மாதவர் உச்சியின் வைத்த நின்***
***வாகை நாள்மலர்?' என்னும் - மற்று ஓர் தலை.***

***யாகசாதனன் மௌலியோடும்*** - *தேவேந்திரனுடைய முடியுடன்;* ***ஓகைமாதவர் நின் உச்சியின் பொறித்து வைத்த*** - *(நீ அவனை வெற்றி கண்டதனைக் கண்ட) உவமை மிக்க தவமுனிவர்கள் (நின் வெற்றிக்கு அறிகுறியாகப்) பொறித்து வைத்த;* ***வாகை நாள் மலர் காகம் ஆடு களத்திடைக்*** - *வாகையின் அன்றலர்ந்த மலர்மாலையை இப்போது காகங்கள் (பிணங்களை உண்டு) ஆடுகின்ற போர்க்களத்தின் கண்;* ***காண்பேனோ' என்னும் மற்று ஓர் தலை*** - *காணப்பெறுவனோ?" என்று மற்றோர் தலை சொல்லும்.*

*யாக சாதனன் - யாகங்களால் பதவி பெற்ற இந்திரன்.*

## *9206. 'சேல் இயல் கண் இயக்கர்தம் தேவிமார்,*
## *மேல் இனித் தவிர்கிற்பர்கொல், வீர! நின்*
## *கோல வில் குரல் கேட்டுக் குலுங்கித் தம்*
## *தாலியைத் தொடல்' என்னும் - மற்று ஓர் தலை.*

***மற்று ஓர் தலை*** - *மற்று ஒரு தலை;* ***'வீர! சேல் இயல் கண் இயக்கர் தம் தேவிமார்*** - *'வீரனே! சேல் மீனை ஒத்த கண்களை உடைய இயக்கர் தம் மனைவியர்;* ***நின் கோலவில் குரல் கேட்டுக் குலுங்கி*** - *நினது அழகிய வில்லின் நாண் ஒலி கேட்டு நடுங்கி;* ***தம் தாலியைத் தொடல் மேல் இனித் தவிர்கிற்பர் கொல்' என்னும்*** - *தத்தம் தாலியைத் தொட்டுப் பார்த்துக்கொள்ளும் இயல்பை இனிமேல் நீங்குவார்களோ?' என்று சொல்லும்.*

*இந்திரசித்து வாழ்ந்த காலத்தில் அவனது வில் நாணின் ஒலி கேட்டு இயக்க மாதர்கள் தம் கணவர் உயிர்க்கு ஊறு வந்ததாக நடுங்கித் தத்தம் தாலியைத் தொட்டு அறுந்து போய்விடுமோ என நடுங்கி நிற்பர். 'இனி அங்ஙனம் அவர்கள் நடுங்குதல் ஒழிவார்களோ?' எனத் தன் மகனது பகை நடுக்கும் ஆற்றலை நினைத்து இரங்கியவாறு.*

## *9207. 'கூற்றம் உன் எதிர் வந்து, உயிர் கொள்வது ஓர்*
## *ஊற்றம்தான் உடைத்து அன்று; எனையும் ஒளித்து*
## *ஏற்ற எவ் உலகு உற்றனை? எல்லை இல்*
## *ஆற்றலாய்!' என்று உரைக்கும் - அங்கு ஓர் தலை.*

***எல்லை இல் ஆற்றலாய்!*** - *எல்லை இல்லாத வல்லமையை உடையவனே!* ***கூற்றம் உன் எதிர் வந்து*** - *கூற்று உன் எதிரில் வந்து;* ***உயிர் கொள்வது ஓர் ஊற்றம் தான் உடைத்து அன்று*** - *உனது உயிரைக் கொள்ளத் தக்க மிகுவலி உடையதன்று;* ***எனையும் ஒளித்து ஏற்ற எவ்உலகு உற்றனை?'*** - *(ஆதலால் நீ இறந்திருக்க மாட்டாய் உனக்கு ஏற்ற எந்த உலகத்துக்கோ சென்றிருக்கின்றாய்) எனக்குத் தெரியாமல்; மறைந்து உனக்கு*

*ஏற்ற எந்த உலகத்தை அடைந்தாய்?'* ***என்று உரைக்கும் ஆங்கு ஓர் தலை*** *- என்று வினவும் அங்கு ஒருதலை.*

*இது இராவணின் பத்தாவது தலை கூறுவது.*

## *இராவணன், மைந்தன் உடலைத் தேடிக் களம் புகுதல்*

***9208. இன்னவாறு அழைத்து ஏங்குகின்றான் எழுந்து,***
***உன்னும் மாத்திரத்து ஓடினன், ஊழி நாள்***
***பொன்னின் வான் அன்ன போர்க்களம் புக்கனன்,***
***நன் மகன்தனது ஆக்கையை நாடுவான்.***

***இன்னவாறு அழைத்து ஏங்குகின்றான் எழுந்து*** *- இவ்வாறு இந்திரசித்தனை அழைத்து ஏங்குகின்ற இராவணன் எழுந்து;* ***உன்னும் மாத்திரத்து ஓடினன்*** *- நினைக்கும் அளவில் ஓடிச்சென்று;* ***ஊழிநாள் பொன்னின் வான் அன்ன போர்க்களம்*** *- ஊழி இறுதியில் தோன்றும் பொன்னிறமுடைய செவ்வானம் போன்று குருதியால் சிவந்து காட்டும் போர்க்களத்தில்;* ***தனது நன்மகன் ஆக்கையை நாடுவான் புக்கனன்*** *- தனது சிறந்த புதல்வனுடைய உடம்பைத் தேடுவதற்காகப் புகுந்தான்.*

***9209. தேவரே முதலாகிய சேவகர்***
***யாவரும் உடனே தொடர்ந்து ஏகினார்,***
***'மூவகைப் பேர் உலகின் முறைமையும்***
***ஏவது ஆகும்?' என்று எண்ணி இரங்குவார்.***

***தேவரே முதலாகிய சேவகர் யாவரும்*** *- தேவர் முதலிய பணியாளர்கள் யாவரும்;* ***உடனே தொடர்ந்து ஏகினார்*** *- இராவணனுடனே தொடர்ந்து சென்றவர்களாய்;* ***மூவகைப் பேர் உலகின் முறைமையும்*** *- (இராவணனின் கோபத்தால்) மூவுலகங்களின் முறைமையும்;* ***ஏவது ஆகும்?' என்று எண்ணி இரங்குவார்*** *- 'இனி என்னாகுமோ?' என்று எண்ணி இரங்குவாராயினர்.*

***9210. அழுதவால் சில; அன்பின போன்று, அடி***
***தொழுதவால் சில; தூங்கினவால் சில;***
***உழுத யானைப் பிணம் புக்கு ஒளித்தவால் -***
***கழுதும் புள்ளும், அரக்கனைக் காண்டலும்.****

***கழுதும் புள்ளும் அரக்கனைக் காண்டலும்*** - *(போர்க்களத்தில் பிணங்களைத் தின்று கொண்டிருந்த) பேய்களும் கழுகு முதலிய பறவைகளும் இராவணனைக் கண்டவுடனே;* ***சில அழுத, சில அன்பின போன்று அடி தொழுத*** - *அஞ்சிச் சில அழுதன, சில அவன்பால் அன்பு கொண்டவை போலத் தொழுதன;* ***சில தூங்கின, உழுத யானைப் பிணம்புக்கு ஒளித்த*** - *(பொய்யாகச்) சில தூங்கின (சில) ஆனைப் பிணங்களைத் தலையால் உழுது வழி செய்து கொண்டு புகுந்து ஒளிந்து கொண்டன.*

*கழுது - பேய், புள் - கழுகு முதலான பறவைகள், அசைநிலைகள்.*

***9211. கோடி கோடிக் குதிரையின் கூட்டமும்,***
***ஆடல் வென்றி அரக்கர்தம் ஆக்கையும்,***
***ஓடை யானையும், தேரும், உருட்டினான்,***
***நாடினான், தன் மகன் உடல், நாள் எலாம்.****

***தன் மகன் உடல் நாடினான்*** - *(இராவணன்) தன் உடலைத் தேடுபவனாய்;* ***கோடி கோடிக் குதிரையின் கூட்டமும்*** - *கோடி கோடிக் குதிரைப் பிணங்களின் கூட்டங்களையும்;* ***ஆடல் வென்றி அரக்கர்தம் ஆக்கையும்*** - *வலிமையும் வெற்றியுமுடைய அரக்கர் தம் உடம்புகளையும்;* ***ஓடை யானையும் தேரும்*** - *முக பட்டத்தை உடைய யானைப் பிணங்களையும் தேர்களையும்;* ***நாள் எலாம் உருட்டினான்*** - *ஒருநாள் முழுவதும் புரட்டிப் புரட்டிப் பார்த்தான்.*

***9212. மெய் கிடந்த விழி வழி நீர் விழ,***
***நெய் கிடந்த கனல் புரை நெஞ்சினான்,***
***மொய் கிடந்த சிலையொடு மூரி மாக்***
***கய் கிடந்தது கண்டனன், கண்களால்.***

***மெய் கிடந்த விழி வழி நீர்விழ*** - *உடம்பில் பொருந்திய (பத்துத் தலைகளிலும் உள்ள) இருபது விழிகளிலும் நீர் உழுக;* ***நெய் கிடந்த கனல்புரை நெஞ்சினான்*** - *நெய் பெய்த நெருப்புப் போல எரியும் நெஞ்சினையுடைய இராவணன்;* ***மொய் கிடந்த சிலையொடு மூரிமாக்கய்*** - *வலிமை பொருந்திய வில்லோடு வலிய பெரிய கை;* ***கிடந்தது கண்டனன் கண்களால்*** - *போர்க்களத்தில் விழுந்து கிடந்ததைக் கண்களால் கண்டான்.*

*கை என்பது எதுகை நோக்கிக் 'கய்' எனப் போலியாயிற்று.*

***9213. பொங்கு தோள்வளையும் கணைப் புட்டிலோடு***
***அங்கதங்களும் அம்பும் இலங்கிட,***

***வெங் கண் நாகம் எனப் பொலி வெய்ய கை***
***செங் கையால் எடுத்தான், சிரம் சேர்த்தினான்.***

***பொங்க தோள்வளையும் கணைப்புட்டிலோடு*** *- ஒளி விளங்குகின்ற தோள் வளையும் அம்புப் புட்டிலோடு;* ***அங்கதங்களும் அம்பும் இலங்கிட*** *- வாகுவலயங்களும் அம்பும் விளங்கிட;* ***வெங்கண் நாகம் எனப் பொலிவெய்யகை*** *- கொடுங்கண்ணையுடைய நாகம் போலப் பொலிகின்ற இந்திரசித்தின் விரும்பத்தக்க கையை;* ***செங்கையால் எடுத்தான், சிரம் சேர்த்தினான்*** *- இராவணன் தன் சிவந்த கையால் எடுத்துத் தலைமேல் வைத்துக் கொண்டான்.*

*அங்கதம் - வாகுவலயம். கொடுமையும் வடிவும் தோன்ற இந்திரசித்தின் கையினுக்கு வெங்கண் நாகம் உவமை கூறப்பெற்றது. புத்திர பாசத்தால் துடிக்கும் இராவணன் இந்திரசித்தின் கையினைக் கண்டவுடன் பேரன்பின் காரணமாக அதனை ஒரு புனிதப் பொருளினைப் போலச் சிரமிசை வைத்துக் கொள்ளுகின்றான்.*

***9214. கல் திண் மார்பில் தழுவும்; கழுத்தினில்***
***சுற்றும்; சென்னியில் சூட்டும்; சுழல் கணோடு***
***ஒற்றும்; மோந்திட்டு உருகும்; உளைக்குமால்;***
***முற்றும் நாளின் விடும் நெடு மூச்சினான்.***

***முற்றும் நாளின் விடும் நெடுமூச்சினான்*** *- (மேலும்) ஆயுள் முடியும்நாளில் விடுகின்றது போன்ற நீண்ட மூச்சினையுடையவனாகிய இராவணன் (அக்கையினை);* ***கல்திண் மார்பில் தழுவும் கழுத்தினில் சுற்றும்*** *- மலை போன்ற மார்பில் தழுவுவான் பின் கழுத்தினில் (மாலைபோலச்) சுற்றுவான்;* ***சென்னியில் சூட்டும்; சுழல் கணோடு ஒற்றும்*** *- தலையில் (கண்ணிபோல) சூட்டுவான் சுழல்கின்ற தன் கண்களிலே வைத்து ஒற்றிக் கொள்வான்;* ***மோந்திட்டு உருகும்; உளைக்கும்*** *- அதைத்தன் மூக்கில் வைத்து மோந்து பார்த்து மனம் உருகுவான்; வருந்துவான்.*

*முற்றும் நாள் - இறக்கும் நாள், ஆல் - அசை*

***9215. கை கண்டான், பின் கருங் கடல் கண்டென,***
***மெய் கண்டான், அதன்மேல் விழுந்தான்அரோ -***
***பெய் கண் தாரை அருவிப் பெருந் திரை,***
***மொய் கண்டார் திரை வேலையை மூடவே.***

***கை கண்டான்*** *- இந்திரசித்தனின் கையைக் கண்ட இராவணன்;* ***பின் கருங்கடல் கண்டென மெய் கண்டான்*** *- பின்பு கருங்கடலைக் கண்டாற் போன்ற அவன்*

*உடம்பினைக் கண்டான்;* ***பெய் கண் தாரை அருவிப் பெருந்திரை*** *- கண்கள் தாரை தாரையாகப் பொழிகின்ற கண்ணீர் அருவியின் பெரிய அலைகள்;* ***மொய் கண்டார் திரை வேலையை மூடவே*** *- வலிமை கொண்டு ஆரவாரிக்கின்ற அலைகளோடு கூடிய கடலையும் சென்று மூடுமாறு;* ***அதன்மேல் விழுந்தான் அரோ!*** *- அழுதுகொண்டு அவ்வுடம்பின் மீது விழுந்தான்.*

*கைகண்டான் - வினையால் அணையும் பெயர். இங்கு இராவணனை உணர்த்தியது. கருங்கடல் - கருமையும் பரப்பும் பற்றி இந்திரசித்தின் உடம்பிற்கு உவமையாயிற்று. மொய் - வலிமை, ஆர்திரை - வினைத்தொகை. அரோ - அசை.*

***9216. அப்பு மாரி அழுந்திய மார்பைத் தன்***
***அப்பு மாரி அழுது இழி யாக்கையின்***
***அப்பும்; மார்பில் அணைக்கும்; அரற்றுமால்;***
***அப் புமான் உற்றது யாவர் உற்றார்அரோ!***

***அப்பு மாரி அழுந்திய மார்பை*** *- அம்பு மாரி அழுந்தி இருந்த இந்திரசித்தின் மார்பை;* ***அப்புமாரி அழுது இழி தன் யாக்கையின்*** *- அழுது அழுது கண்ணீர் மாரி இழிகின்ற தன் உடம்பின் கண்;* ***அப்பும், மார்பில் அணைக்கும் அரற்றுமால்*** *- ஒற்றிக் கொள்வான். பின் மார்பில் அணைத்துக் கொள்வான்; வாயால் அரற்றுவான்;* ***அப்புமான் உற்றது யாவர் உற்றார்*** *- அந்த ஆண்மையுள்ள*

*இராவணன் உற்ற துன்பம் இவ்வுலகில் யாவர் அடைந்திருக்கின்றார்கள்!*

*'அம்புமாரி', 'அப்புமாரி' எனத் தம்மின வன்தொடராயிற்று. இரண்டாவது அப்புமாரி கண்ணீர் மழை என்ற பொருளது. அப்புதல் - ஒற்றிக்கொள்ளுதல் புமான் - ஆடவன் என்ற பொருளுடைய வடசொல்.*

*இச்செய்யுளில் நான்கடியினும் முதற்சீர் முழுமையும் ஒத்து வந்தமையால் 'யமகம்' என்னும் சொல்லணி அமைந்தது.*

***9217. பறிக்கும், மார்பின் பகழியை; பல் முறை***
***முறிக்கும்; மூர்ச்சிக்கும்; மோக்கும்; முயங்குமால்;***
***'எறிக்கும் வெங் கதிரோடு உலகு ஏழையும்***
***கறிக்கும், வாயில் இட்டு, இன்று' எனக் காந்துமால்.***

***மார்பின் பகழியைப் பறிக்கும்*** *- (இந்திரசித்தின்) மார்பில் தைத்திருக்கும் அம்புகளை அவன் மார்பிலிருந்து (இராவணன்) பறிப்பான்;* ***பல்முறை முறிக்கும்; மூர்ச்சிக்கும்; மோக்கும்; முயங்கும்*** *- அவற்றைப் பல முறை முறிப்பான்; பின்பு மூர்ச்சையுறுவான்; பின் மூக்கில் வைத்து மோந்து பார்ப்பான்; பின் மார்பில்*

*அணைப்பான்;* **எறிக்கும் வெங்கதிரோடு உலகு ஏழையும்** *- வெயில் வீசும் வெப்பமுள்ள சூரியனோடு உலகம் ஏழினையும்;* **வாயில் இட்டு இன்று கறிக்கும் எனக் காந்தும்** *- வாயில் இட்டு இன்று கறிப்போம்' என்று வெகுள்வான்.*

*இந்திரசித்தின் மார்பில் தைத்திருந்த அம்புகளைப் பறித்தலும், முறித்தலும் செய்தது. அவன் உயிரை வாங்கியதே என்னும் வெறுப்பினாலாம். கறித்தல் - கடித்தல். கறிக்கும் என்பது உம்மீற்றுத் தன்மைப் பன்மை வினைமுற்று. ஆல் - அசைகள்.*

***9218. தேவரோடு முனிவரும், சீரியோர்***
***ஏவரோடும், இடம் இன்றி நின்றவன் -***
***'மூவரோடும், உலகு ஒரு மூன்றொடும்***
***போவதேகொல், முனிவு?' எனும் பொம்மலான்.***

**தேவரோடு** *- தேவர்களோடு;* **முனிவரும், சீரியோர் ஏவரோடும்** *- முனிவர்களும், சிறந்துள்ள ஏவரோடும்;* **இடம் இன்றி நின்றவன் முனிவு -** *சமானமின்றி நின்றவனாய இராவணன் சீற்றம்;* **மூவரோடும் உலகு ஒரு மூன்றோடும்** *- மும்மூர்த்திகளோடும் மூன்று உலகினோடும்;* **போவதே கொல்? எனும் பொம்மலான்** *- போய் விடக்கூடியதோ? எனும் (அச்சத்தை ஏற்படுத்தும்) பெருஞ்சீற்றமுடையவனானன்.*

*இந்திரசித்தின் தலைகாணாது இராவணன் அரற்றுதல்*

***9219. கண்டிலன் தலை; 'காந்தி, அம் மானிடன்***
***கொண்டு இறந்தனன்' என்பது கொண்டவன்,***
***புண் திறந்தன நெஞ்சன், பொருமலன்,***
***விண் திறந்திட, விம்மி, அரற்றினான்:***

***தலை கண்டிலன், காந்தி*** *- (இந்திரசித்தின் கையையும் உடம்பையும் கண்ட இராவணன்) தலையைக் காணாதவனாய் மனம் எரிந்து;* **அம் மானிடன் கொண்டு இறந்தனன் என்பது கொண்டவன்** *- அம்மனிதன் (இலக்குவன்) எடுத்துச் சென்றனன் என்று அறிந்துகொண்டு;* **புண்திறந்தன நெஞ்சன் பொருமலன்** *- புண் திறந்தாற் போன்ற நெஞ்சத்தோடு பொருமுகின்ற இராவணன்;* **விண்திறந்திட, விம்மி, அரற்றினான்** *- விண்முகடு பிளக்குமாறு விம்மி விம்மி வாய்திறந்து அரற்றலானான்.*

*காந்துதல் - சினத்தல், இறத்தல் - கடத்தல். பொருமுதல் - விம்முதல் - துன்பமுறல் எனினுமாம்.*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***9220. 'நிலையின் மாதிரத்து நின்ற யானையும், நெற்றிக்***
***கண்ணன்***
***மலையுமே, எளியவோ, நான் பறித்தற்கு? மறு இல்***
***மைந்தன்***
***தலையும் ஆர் உயிரும் கொண்டார்அவர் உடலோடும்***
***தங்க,***
***புலையனேன் இன்னும் ஆவி சுமக்கின்றேன் போலும்***
***போலும்!***

***நிலையின் மாதிரத்து நின்ற யானையும்*** *- நிலைத்துள்ள எட்டுத் திசையிலும் நின்ற யானைகளும்;* ***நெற்றிக்கண்ணன் மலையுமே*** *- நெற்றிக்கண்ணை உடைய சிவன் தங்கியுள்ள கயிலை மலையுமே;* ***நான் பறித்தற்கு எளியவோ?*** *- யான் பறித்தற்கு எளிய ஆயினவோ? (இம்மானிடர் எளியரல்லரோ);* ***மறுஇல் மைந்தன்***

***தலையும் ஆர் உயிரும் கொண்டார்*** *- குற்றமற்ற என் மகன் தலையையும் அரிய உயிரையும் கொண்டவர்;* ***அவர் உடலோடும் தங்க*** *- தமது உடலோடும் (இன்னும் உயிர்விடாமல்) தங்கி இருக்க;* ***புலையனேன் இன்னும் ஆவி சுமக்கின்றேன் போலும் போலும்*** *- இழிவுடையவனாகிய யான் உயிர் சுமந்திருக்கின்றேன் போலும்! போலும்!*

*மாதிரம் - திசை, மறு - குற்றம், போலும் - ஒப்பில் போலி; உரையசைப் பொருளில் வந்தது.*

***9221. 'எரி உண அளகை மூதூர், இந்திரன் இருக்கை***
***எல்லாம்***
***பொரி உண, உலகம் மூன்றும் பொது அறப்***
***புரந்தேன் போலாம்!***
***அரி உணும் அலங்கல் மௌலி இழந்த என் மதலை***
***யாக்கை***
***நரி உணக் கண்டேன்; ஊணின், நாய் உணும்***
***உணவு நன்றால்!***

***அளகை மூதூர் எரிஉண*** *- குபேரனுக்கு உரிமையான அளகை என்னும் பழமையான ஊர் எரியுண்ணவும்;* ***இந்திரன் இருக்கை எல்லாம் பொரி உண*** *- இந்திரன் இருப்பிடமாகிய அமராவதி தீயில் பொரிந்து போகவும் செய்து;* ***உலகம்***

***மூன்றும் பொது அறப் புரந்தேன் போலாம்*** - *உலகம் மூன்றும் பிறர்க்கும் பொது என்பது இல்லாமல் (எனக்கே உரிமையாக்கிக்) காப்பாற்றினேன் போலும்!* ***அரி உணும் அலங்கல் மௌலி இழந்த என் மதலை யாக்கை*** - *வண்டுகள் தேனை உண்கின்ற மாலையை அணிந்த தலையை இழந்த என் புதல்வனது உடம்பை;* ***நரி உணக் கண்டேன்; ஊணின் நாய் உணும் உணவு நன்றால்*** - *நரி உண்ணக் கண்டேனாகிய யான் உண்ணும் உணவைக் காட்டிலும் (தான் கக்கியதையே உண்கின்ற) நாய் உண்ணும் (எச்சில்) உணவு சிறந்ததாகும்.*

***9222. 'பூண்டு, ஒரு பகைமேல் புக்கு, என் புத்திரனோடும் போனார்***
***மீண்டிலர் விளிந்து வீழ்ந்தார்; விரதியர் இருவரோடும்***
***ஆண்டு உள குரங்கும், ஒன்றும் அமர்க் களத்து, ஆரும் இன்னும்***
***மாண்டிலர்; இனி மற்று உண்டோ, இராவணன் வீர வாழ்க்கை?***

***பூண்டு, ஒரு பகை மேல் புக்கு*** - *போர்க்கோலம் பூண்டு ஒரு பகை மேல் (இலக்குவன் மேல் போர் செய்ய) புகுந்து;* ***என் புத்திரனோடும் போனார்*** - *என் மகனோடும் (போர்க்களம்) போனவர்களெல்லாம்;* ***மீண்டிலர் விளிந்து வீழ்ந்தார்*** - *மீளாதவர்களால் இறந்து வீழ்ந்தார்கள்;* ***விரதியர் இருவரோடும் ஆண்டு உள குரங்கும்*** - *தவ விரதம் பூண்ட (இராம இலக்குவராகிய) இருவரோடும் ஆங்கு இருக்கின்ற குரங்கும்;* ***ஒன்றும் அமர்க்களத்து, ஆரும் இன்னும் மாண்டிலர்*** - *பொருந்திய போர்க்களத்தில் யாரும் இன்னும் இறந்திலர்;* ***இராவணன் வீர வாழ்க்கை இனிமற்று உண்டோ?*** - *இராவணனது வீரவாழ்க்கை இனிவேறு உண்டோ?*

*போர்க்களத்தினின்றும் தப்பியோடிய அரக்கர் உளரேனும், குரங்குகள், மருந்து மலையாலும், தேவர் அருளாலும் அனைத்தும் உயிர்த்தெழுந்தமையை நோக்க இராவணன் தன்னைப் பழித்துக் கூறிக் கொள்ளும் இக்கூற்றின் பொருத்தத்தை உணரலாம்.*

***9223. கந்தர்ப்பர், இயக்கர், சித்தர், அரக்கர்தம் கன்னிமார்கள்,***
***சிந்து ஒக்கும் சொல்லினார், உன் தேவியர், திருவின் நல்லார்,***
***வந்து உற்று, 'எம் கணவன்தன்னைக் காட்டு' என்று, மருங்கில் வீழ்ந்தால்,***
***அந்து ஒக்க அரற்றவோ, நான் கூற்றையும் ஆடல் கொண்டேன்!****

***கந்தர்ப்பர், இயக்கர், சித்தர் அரக்கர் தம் கன்னிமார்கள்*** - *கந்தருவர், இயக்கர், சித்தர் அரக்கர் என்பார் தம் புதல்வியராய்;* ***சிந்து ஒக்கும் சொல்லினார்*** - *'சிந்து' என்னும் பண்ணினை ஒத்துப் பேசும் சொல்லினிமையை உடையவர்களும்;* ***திருவின் நல்லார் உன் தேவியர் வந்து உற்று*** - *திருமகளினும் அழகு மிக்கவர்களுமாகிய உன் மனைவிமார்கள் வந்து அடைந்து;* ***'எம் கணவன்***

***தன்னைக் காட்டு' என்று மருங்கில் வீழ்ந்தால்*** - *'எம் கணவனைக் காட்டு' என்று அரற்றிக்கொண்டு என் பக்கத்திலே வீழ்ந்தால்;* ***கூற்றையும் ஆடல் கொண்டேன் நான் அந்து ஒக்க அரற்றவோ?*** - *எமனையும் வெற்றி கொண்ட யான் அப்படியே அவர்களோடு சேர்ந்து (செய்வதறியாது) அரற்றுவேனோ?*

## *9224. 'சினத்தொடும் கொற்றம் முற்றி, இந்திரன் செல்வம் மேவி,*
## *நினைத்தது முடித்து நின்றேன்; நேரிழை ஒருத்தி நீரால்,*
## *எனக்கு நீ செய்யத்தக்க கடன் எலாம், ஏங்கி ஏங்கி,*
## *உனக்கு நான் செய்வதானேன்! என்னின் யார் உலகத்து உள்ளார்?'*

***சினத்தொடும் கொற்றம் முற்றி*** - *சினத்தோடு நின்று வெற்றியை முழுமையாக எய்தி;* ***இந்திரன் செல்வம் மேவி*** - *இந்திரனுடைய செல்வத்தை அடைந்து;* ***நினைத்தது முடித்து நின்றேன்*** - *நினைத்ததைச் செய்து முடித்து நின்ற யான்;* ***நேரிழை ஒருத்தி நீரால்*** - *(இப்போது) பொருந்திய அணிகலன்களை அணிந்த (சீதை என்கின்ற) ஒருத்தியின் காரணமாக, (அந்நிலையிழந்து);* ***எனக்கு நீ செய்யத்தக்க கடன் எலாம்*** - *எனக்கு நீ செய்யத் தக்க இறுதிக் கடன்களை எல்லாம்;* ***ஏங்கி ஏங்கி உனக்கு நான் செய்வதானேன்*** - *வருந்தி வருந்தி உனக்கு யான் செய்யும் நிலைமையை அடைந்தேன்;* ***என்னின் யார் உலகத்து உள்ளார்?*** - *என்னைவிட இழிந்தவர்கள் இவ்வுலகத்து யாருளர்?*

*மகன் இறக்கும் நிலை, சீதை மேல் தான் கொண்ட காதல் என்பதை இராவணன் தனித்துத் துயருறும்போது ஒத்துக் கொள்ளுகின்றமையை இங்கு காணலாம். "நுந்தைக்கு நீ செயக்கடவன கடன்கள், இரக்கம் உற்று, உனக்கு அவன் செயும்" (பிரமாத்திர - 67) என்ற இலக்குவனின் கூற்றுக்கு ஏற்ப இப்பாடல் அமைந்திருப்பது காண்க. முதிய தந்தை இறக்க மகன் அவற்கு அந்திமக் கடன்கள் செய்வது இயல்பு. மாறி அமையினும் விதி எனலாம். இங்கு தந்தையின் தவறான காமம் காரணமாக மகன் இறக்க அம்மகனுக்கு அந்தந்தையே ஈமக்கடன் செய்வதாய் இருப்பதால், 'என்னின் யார் உலகத்து உள்ளார்' எனப் புலம்புகின்றான் இராவணன்.*

## *இந்திரசித்தின் உடலோடு இராவணன் இலங்கை புகல்*

***9225. என்பன பலவும் பன்னி, எடுத்து அழைத்து, இரங்கி ஏங்கி,***
***அன்பினால் மகனைத் தாங்கி, அரக்கியர் அரற்றி வீழ,***
***பொன் புனை நகரம் புக்கான்; கண்டவர் புலம்பும் பூசல்,***
***ஒன்பது திக்கும், மற்றை ஒரு திக்கும், உற்றது அன்றே.***

***என்பன பலவும் பன்னி*** *- என்பன போன்ற பலவற்றையும் சொல்லிக்கொண்டு;* ***எடுத்து அழைத்து இரங்கி ஏங்கி*** *- உரத்த குரலில் மகனை அழைத்து இரக்கமுற்று வருந்தி;* ***அன்பினால் மகனைத் தாங்கி*** *- அன்பினால் மகனுடைய உடம்பைத் தூக்கிக் கொண்டு;* ***அரக்கியர் அரற்றி வீழ பொன் புனை நகரம் புக்கான்*** *- அரக்கியர்களெல்லாம் அரற்றிக்கொண்டு சோர்ந்து வீழப் பொன்கொண்டு புனைந்த இலங்கை நகரத்தில் புகுந்தான்;* ***கண்டவர் புலம்பும் பூசல்*** *- அதனைக் கண்டவர்கள் புலம்பும் அழுகை ஒலி;* ***ஒன்பது திக்கும், மற்றை ஒரு திக்கும், உற்றது அன்றே*** *- பத்துத் திசைகளிலும் பரவியது.*

*பூசல் - அழுகை ஆரவாரம்.*

***9226. கண்களைச் சூல்கின்றாரும், கழுத்தினைத் தடிகின்றாரும்,***
***புண் கொளத் திறந்து, மார்பின் ஈருளைப் போக்குவாரும்***
***பண்கள் புக்கு அலம்பும் நாவை உயிரொடு பறிக்கின்றாரும்,-***
***எண்களில் பெரிய ஆற்றார் - இருந் துயர் பொறுக்கல் ஆற்றார்.***

***இருந்துயர் பொறுக்கல் ஆற்றார் கண்களைச் சூழ்கின்றாரும்*** *- (இந்திரசித்து இறந்த) அந்தப் பெரிய துயரைப் பொறுக்க முடியாதவராய் கண்களைத் தோண்டுகின்றவர்களும்;* ***கழுத்தினைத் தடிகின்றாரும்*** *- தம் கழுத்தினை வெட்டுகின்றவர்களும்;* ***புண்கொள மார்பின் திறந்து ஈருளைப் போக்குவாரும்*** *- புண் கொள்ளுமாறு மார்பினைப் பிளந்து திறந்து, ஈரலை வெளிப்படுத்துவாரும்;* ***பண்கள் புக்கு அலம்பும் நாவை*** *- பண்கள் புகுந்து ஒலிக்கின்ற நாவை;* ***உயிரொடு***

***பறிக்கின்றாரும்*** - உயிரோடு பறிக்கின்றவர்களும் ஆகிய பெண்கள்; ***எண்களில் பெரிய ஆற்றார்*** - எண்ணில் அடங்காதவராயினர்;

*சூல்கின்றார் - தோண்டுகின்றார். தடிதல் - வெட்டுதல் "வாளோச்சிமிகத் தடிந்தார்" (பு.வெ. 5,8) ஈருள் - ஈரல். அலம்புதல் - ஒலித்தல், இந்திரசித்தின் இறத்தல் துன்பத்தைத் தாள முடியாதவர்களின் செயல் கூறப்பட்டது. துன்பத்தின் மிகுதி காட்டுவான் பெண்கள் மேல் வைத்துக் கூறினார்.*

***9227. மாதிரம் கடந்த திண் தோள் மைந்தன்தன் மகுடச் சென்னி***
***போதலைப் புரிந்த யாக்கை பொறுத்தனன் புகுதக் கண்டார்,***
***ஓத நீர் வேலை அன்ன கண்களால் உகுத்த வெள்ளக்***
***காதல் நீர் ஓடி, ஆடல் கருங் கடல் மடுத்தது அன்றே.***

***மாதிரம் கடந்த திண்தோள் மைந்தன் தன்*** - திசைகளையெல்லாம் வென்ற திண்ணிய தோள்களையுடைய மகனுடைய; ***மகுடச் சென்னி போதலைப் புரிந்த யாக்கை*** - முடியணிந்த தலை நீங்கப் பெற்ற உடலை; ***பொறுத்தனன் புகுதக் கண்டார்*** - சுமந்தவனாய் இராவணன் இலங்கைக்குள் புகக் கண்டவர்கள்; ***ஓதநீர் வேலை அன்ன கண்களால்*** - வெள்ளமான நீரைக் கொண்ட கடலைப் போன்ற பரந்த கண்களால்; ***உகுத்த வெள்ளக் காதல் நீர் ஓடி*** - சொரிந்த, அன்பினை வெளிப்படுத்தும் வெள்ளநீர் ஓடிச்சென்று; ***ஆடல் கருங்கடல் மடுத்தது*** - அலையாடுதலை யுடைய கரிய கடலைக் கலந்தது.

*அன்று, ஏ - அசைகள்.*

***9228. ஆவியின் இனிய காதல் அரக்கியர் முதல்வர் ஆய***
***தேவியர் குழாங்கள் சுற்றி, சிரத்தின்மேல் தளிர்க் கை சேர்த்தி,***
***ஓவியம் வீழ்ந்து வீழ்ந்து புரள்வன ஒப்ப, ஒல்லைக்***
***கோ இயல் கோயில் புக்கான், குருதி நீர்க் குமிழிக் கண்ணான்.***

***ஆவியின் இனிய காதல்*** - இந்திரசித்தின் உயிரினும் இனிய காதலை உடைய; ***அரக்கியர் முதல்வர் ஆய*** - அரக்கியர் முதலோராகிய; ***தேவியர் குழாங்கள் சுற்றி*** - அவன் மனைவியர் கூட்டங்கள் சூழ்ந்துகொண்டு; ***சிரத்தின் மேல் தளிர்க்கை சேர்த்தி*** - தத்தம் சிரங்களின் மேல் தளிர்போன்ற கரங்களைச் சேர்த்துக் குவித்துக்கொண்டு; ***ஓவியம் வீழ்ந்து வீழ்ந்து புரள்வன ஒப்ப*** - சித்திரப் பதுமைகள்

*தரையில் வீழ்ந்து புரள்வன போலப் புரளா நிற்க;* ***குருதிநீர்க் குமிழிக் கண்ணான்*** *- இரத்தம் நீர்க்குமிழிகளைப் போலக் கொப்பளித்துக் கொண்டிருக்கும் கண்களை உடைய இராவணன்;* ***ஒல்லைக்கோ இயல் கோயில் புக்கான்*** *- விரைவாக அரசியற்குரிய அரண்மனையில் புகுந்தான்.*

*முன்பு இராவணன் கூறியவாறு (பாடல் 38) இந்திரசித்தின் மனைவியர் பலவகையினராதலின் "அரக்கியர் முதல்வராய தேவியர்" என்றார். இராவணன் கூறி அரற்றியவாறு போலவே, அவன் தன் மைந்தன் உடலோடு இலங்கைக்குள் புகுந்தவுடனே இந்திரசித்தின் தேவிமார் வந்து அரற்றி வீழ்ந்தனராக. அவர்தம் அழகிய தோற்றம் புலப்பட, 'ஓவியம் புரள்வன ஒப்ப' எனக் கூறினார்.*

## *மண்டோதரி மைந்தன் மேல் வீழ்ந்து, புலம்புதல்*

***9229. கருங் குழல் கற்றைப் பாரம் கால் தொட, கமலப் பூவால்***
***குரும்பையைப் புடைக்கின்றாள்போல் கைகளால் முலைமேல் கொட்டி,***
***அருங் கலச் சும்மை தாங்க, 'அகல் அல்குல் அன்றி, சற்றே***
***மருங்குலும் உண்டு உண்டு' என்ன, - மயன் மகள் - மறுகி வந்தாள்.***

***மயன் மகள்*** *- மயனுடைய மகளாகிய மண்டோதரி;* ***பாரம் கருங்குழல் கற்றை கால் தொட*** *- பாரமுள்ள கரிய கூந்தல் கற்றை (அவிழ்ந்து) கால்களைத் தொடா நிற்க;* ***கமலப் பூவால் குரும்பையைப் புடைக்கின்றாள் போல்*** *- தாமரைப் பூவினால் (தென்னங்) குரும்பையை அடிப்பவளைப் போல;* ***கைகளால் முலைமேல் கொட்டி*** *- கைகளால் முலைகள் மேல் அடித்துக் கொண்டு;* ***'அருங்கலச் சும்மை தாங்க*** *- அரிய அணிகலன்களாகிய சுமையைத் தாங்குவதற்கு;* ***அகல் அங்குல் அன்றி, சற்றே மருங்குலும் உண்டு உண்டு' என்ன, மறுகி வந்தாள்*** *- அகன்ற அல்குல் மட்டும் அல்லாது, சிறிது இடையும் உண்டு' எனக் கண்டோர் வியந்து கூறுமாறு (ஒல்கி நடந்து) மனம் கலங்கி வந்துற்றாள்.*

*துன்பம் மிகுந்ததால் தலைவிரி கோலத்துடன் மண்டோதரி வந்தனள் என்பதாம். உத்தமப் பெண்ணாகையால் காலளவு நீண்ட கற்றைக் கூந்தலையுடையவள் என்றார்.*

***9230. தலையின்மேல் சுமந்த கையள், தழலின்மேல் மிதிக்கின்றாள்போல்***
***நிலையின்மேல் மிதிக்கும் தாளன், நேசத்தால்***

***நிறைந்த நெஞ்சள்,***
***கொலையின் மேல் குறித்த வேடன் கூர்ங் கணை***
***உயிரைக் கொள்ள,***
***மலையின்மேல் மயில் வீழ்ந்தென்ன, மைந்தன்மேல்***
***மறுகி வீழ்ந்தாள்.***

***தலையின் மேல் சுமந்த கையள்*** - *மண்டோதரி தலையின் மேல் வைத்த கையை உடையவளாய்;* ***தழலின் மேல் மிதிக்கின்றாள் போல்*** - *நெருப்பின் மேல் மிதிக்கின்றவளைப் போல;* ***நிலையின் மேல் மிதிக்கும் தாளள்*** - *நிலையாக உள்ள தரையின் மேல் மிதிக்கின்ற (பதைபதைக்கும்) பாதங்களை உடையவளாய்;* ***நேசத்தால் நிறைந்த நெஞ்சள்*** - *மகன் மேல் வைத்த பேரன்பினால் துக்கத்தால் நிறைந்த நெஞ்சுடையவளாய் வந்து;* ***கொலையின் மேல் குறித்த வேடன்*** - *கொலைமேல் சென்ற குறிப்புடைய வேட்டுவனது;* ***கூர்ங்கணை உயிரைக் கொள்ள*** - *கூரிய அம்பு தன் உயிரை வாங்க,* ***மயில் மலையின் மேல் வீழ்ந்தென்ன*** - *ஒரு மயில் மலையின் மேல் வீழ்ந்தாற்போல;* ***மைந்தன் மேல் மறுகி வீழ்ந்தாள்*** - *மகனது உடம்பின் மேல் சுழன்று வீழ்ந்தாள்.*

***9231.*** ***உயிர்த்திலள்; உணர்வும் இல்லள்; 'உயிர்***
***இலள்கொல்லோ!' என்னப்***
***பெயர்த்திலள், யாக்கை; ஒன்றும் பேசலள்; விம்மி***
***யாதும்***
***வியர்த்திலள்; நெடிது போது விம்மலள்; மெல்ல***
***மெல்ல,***
***அயர்த்தனள் அரிதின் தேறி, வாய் திறந்து,***

***அரற்றலுற்றாள்;***

***உயிர்த்திலள், உணர்வும் இல்லள்*** - *(அங்ஙனம் வீழ்ந்த மண்டோதரி) மூச்சடங்கி உணர்வற்றவளாய்;* ***'உயிர் இலள் கொல்லோ!' என்ன யாக்கை பெயர்த்திலள்*** - *உயிர் நீங்கப் பெற்றாளோ என ஐயுறுமாறு உடம்பு அசையாதவளாய்;* ***விம்மி யாதும் ஒன்றும் பேசலள் வியர்த்திலள்*** - *விம்மலெடுத்து எதைப் பற்றியும் பேசாதவளாய், வியர்வரும்பாதவளாய்;* ***நெடிது போது அயர்த்தனள்*** - *நீண்ட நேரம் அயர்ச்சியுற்றுக் கிடந்து;* ***மெல்ல மெல்ல அரிதின் தேறி விம்மலள்*** - *பின்பு மெல்ல மெல்ல அரிதில் தெளிந்து தேம்பி;* ***வாய் திறந்து அரற்றலுற்றாள்*** - *வாய் திறந்து அரற்றத் தொடங்கினாள்.*

*பெருந்துயர் உற்றவர்களின் மெய்ப்பாடுகள் கவிஞரால் நுட்பமாகப் புலப்படுத்தப் பெறுகின்றன. இலக்குவன் பிரமாத்திரத்தால் வீழ்ந்து கிடந்ததைக் கண்ட இராமனின் மெய்ப்பாடுகளாக (கம்ப. 8639) விவரிக்கப்படுபவை இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாம்.*

***9232. 'கலையினால் திங்கள் என்ன வளர்கின்ற காலத்தே உன்,***
***சிலையினால் அரியை வெல்லக் காண்பது ஓர் தவம் முன் செய்தேன்;***
***தலை இலா ஆக்கை காண எத் தவம் செய்தேன்! அந்தோ!***
***நிலை இலா வாழ்வை இன்னும் நினைவெனோ, நினைவு இலாதேன்?***

***கலையினால் திங்கள் என்ன*** - *நாளுக்கு நாள் கலையினால் (வளர்கின்ற) சந்திரனைப் போல;* ***வளர்கின்ற காலத்தே*** - *வளர்கின்ற இளம் பருவத்தே;* ***உன் சிலையினால் அரியை வெல்லக்*** - *உன் வில்லினால் இந்திரனை வெல்ல;* ***காண்பது ஓர் தவம் முன் செய்தேன்*** - *கண்டு மகிழும் தவத்தை முன் செய்திருந்தேன்;* ***தலை இலா ஆக்கை காண*** - *தலையில்லாத நின் உடம்பைக் காண்பதற்கு;* ***எத்தவம் செய்தேன்! அந்தோ!*** - *எந்தத் தவத்தை (பாவத்தை)ச் செய்தேன்! அந்தோ!* ***நினைவு இலாதேன்*** - *நல்ல நினைவு இல்லாத யான்;* ***நிலை இலா வாழ்வை இன்னும் நினைவேனா*** - *(இவ்வாறு) நிலையில்லாத வாழ்வினை இனியும் மதித்திருப்பேனா? கலை - கலை, அறிவையும் குறித்ததென்க. "எத்தவம் செய்தேன்" என்றவிடத்துத் "தவம்" என்ற சொல் எதிர்மறையாய்ப் பாவத்தைக் குறித்தது.*

***9233. 'ஐயனே! அழகனே! என் அரும் பெறல் அமிழ்தே! ஆழிக்***
***கையனே, மழுவனே, என்று இவர் வலி கடந்த கால***
***மொய்யனே!- முளரி அன்ன நின் முகம் கண்டிலாதேன்,***
***உய்வெனோ?- உலகம் மூன்றுக்கு ஒருவனே! செரு வலோனே!***

***ஐயனே! அழகனே! என் அரும் பெறல் அமிழ்தே*** - *என் ஐயனே! அழகிற் சிறந்தவனே! என் பெறுதற்கரிய அமிழ்தம் போன்றவனே;* ***ஆழிக் கையனே, மழுவனே என்று*** - *சக்கரப் படையை ஏந்திய கையை உடைய திருமாலும், மழுப்படையை உடைய சிவனும்;* ***என்று இவர் வலி கடந்த கால மொய்யனே!*** - *என்று சொல்லப்படுகின்ற (முதல் தேவர்களாகிய) இவர்களின் வலிமையை வெற்றி கொண்ட எமனைப் போன்ற வலிமையை உடையவனே!* ***உலகம் மூன்றுக்கு ஒருவனே! செருவலோனே!*** - *உலகம் மூன்றினுக்கும் ஒருவனாய்ச் சிறந்தவனே! போரில் வல்லவனே;* ***முளரி அன்ன நின் முகம் கண்டிலாதேன் உய்வெனோ*** - *தாமரை மலர் போன்ற நினது முகத்தைக் கண்டிலாத யான் உயிர் வாழ்ந்திருப்பேனோ? (வாழேன்).*

*ஆழி - சக்கரம், ஆழிக்கையன் - திருமால், மழுவன் - சிவன், செரு - போர்.*

***9234. 'தாள் அரிச் சதங்கை ஆர்ப்பத் தவழ்கின்ற பருவம்தன்னில்,***
***கோள் அரி இரண்டு பற்றிக் கொணர்ந்தனை; கொணர்ந்து, கோபம்***
***மூளுறப் பொருத்தி, மாட முன்றினில் முறையின் ஓடி***
***மீள அரு விளையாட்டு இன்னம் காண்பெனோ, விதியிலாதேன்!***

***தாள் அரிச் சதங்கை ஆர்ப்பத்*** - *(நின்) காலில் பரலோடு கூடிய சதங்கை ஆரவாரிக்க;* ***தவழ்கின்ற பருவம் தன்னில்*** *தவழ்ந்து விளையாடுகின்ற இளம் பருவத்தில்;* ***கோள் அரி இரண்டு பற்றி*** *- வலிமையுள்ள சிங்கங்கள் இரண்டினைப் பிடித்து;* ***மாட முன்றினில் கொணர்ந்தனை*** *- மாடத்தின் முற்றத்தில் கொணர்ந்தாய்;* ***கொணர்ந்து கோபம் மூளுறப் பொருத்தி*** *- அவ்வாறு கொணர்ந்து அவற்றிற்குக் கோபம் மூளுமாறு ஒன்றோடு ஒன்று போர் செய்யுமாறு விடுத்து;* ***முறையின் ஓடி மீள அருவிளையாட்டு*** *- முறையாக ஓடி மீளா நிற்க, அவ்விளையாட்டினை;* ***விதியிலாதேன் இன்னம் காண்பெனோ*** *- நல்லூழ் இல்லாத யான் இனி மேலும் காண்பேனோ?*

*அரி - சதங்கையின் உள்ளிடும் பரல். கோள் அரி - வலிமை பொருந்திய சிங்கம். "அரி பொலி கிண்கிணியார்ப் போவா வடி" (கலி - 81, 6) "சுடுபொன் வளைஇய ஈரமை சுற்றொடு பொடியழல் புறந்தந்த செய்வுறு கிண்கிணி" (கலி 85-1-2) "கிண்கிணி களைந்த கால்" (புறம் 77-1) முதலானவை காண்க. இந்திரசித்தின் இளம் பருவத்தில் விளையாடிய அஞ்சாமையோடு கூடிய விளையாட்டினை நினைத்து மண்டோதரியின் தாயுள்ளம் தவிக்கின்ற தவிப்பினை இப்பாடல் படம் பிடித்துக் காட்டும் நலன் காண்க.*

***9235. 'அம்புலி! அம்ம வா!' என்று அழைத்தலும், அமர் வெண் திங்கள்***
***இம்பர் வந்தானை அஞ்சல் என இரு கரத்தின் ஏந்தி,***
***வம்புறும் மறுவைப் பற்றி, 'முயல்' என வாங்கும் எண்ணம்,***
***எம் பெருங் களிறே! காண, ஏசற்றேன்; எழுந்திராயோ!***

***'அம்புலி! அம்ம வா! என்று அழைத்தலும்*** *- (இளம் பருவத்தில் சந்திரனைக் கண்டு நீ) 'அம்புலி! அம்ம வா!' என்று அழைத்த அளவில்;* ***அமர்வெண் திங்கள் இம்பர் வந்தானை*** *- விளக்கமுடைய வெண்திங்கள் இந்த உலகிற்கு (நின்கட்டளையை மறுக்க*

*அஞ்சி) வந்தவனை,* ***'அஞ்சல்' என இரு கரத்தின் ஏந்தி*** *- 'அஞ்சாதே எனக் கூறியபடி இரு கைகளாலும் ஏந்திக் கொண்டு;* ***வம்புறும் மறுவைப் பற்றி*** *- புதுமையாக உள்ள (நீ நினைத்த) களங்கத்தைப் பற்றி;* ***'முயல்' என வாங்கும் வண்ணம்*** *- 'முயல்' எனக் கருதி எடுக்கும் தன்மையைக்;* ***காண ஏசற்றேன்*** *- காணுதற்கு ஆசைப்பட்டேன்;* ***எம்பெருங்களிறே எழுந்திராயோ*** *- எம் பெரிய களிறு போன்றவனே (அந்த ஆடலை மீண்டும் செய்து காட்ட) எழுந்திருக்க மாட்டாயோ?*

*அம்புலி - சந்திரன், அம்ம - கேட்டற் பொருளைத் தழுவி வரும் இடைச்சொல். 'அம்ம கேட்பிக்கும்' (தொல், சொல் - 278) இம்பர் - இவ்வுலகம். வம்பு - புதுமை. ஏசற்றேன் - ஆசைப்பட்டேன்.*

***9236. 'இயக்கியர், அரக்கிமார்கள், விஞ்சையர் ஏழைமாதர்,***
***முயல் கறை பயிலாத் திங்கள் முகத்தியர், முழுதும் நின்னை***
***மயக்கிய முயக்கம்தன்னால், மலர் அணை அமளிமீதே***
***அயர்த்தனை உறங்குவாயோ? அமர் பொருது அலசினாயோ?***

***முயல் கறை பயிலாத் திங்கள் முகத்தியர்*** *- முயற் களங்கம் பொருந்தாத சந்திரனைப் போன்ற முகத்தினை உடையவரான;* ***இயக்கியர், அரக்கிமார்கள் விஞ்சையர் ஏழை மாதர்*** *- இயக்கியரும், அரக்கியரும், வித்யாதர மகளிருமான நின் மனைவியர்;* ***முழுதும் நின்னை மயக்கிய முயக்கம் தன்னால்*** *- நின்னை முழுதுமாகத் தம் காதலால் மயக்கிச் சேர்ந்த புணர்ச்சியாலாகிய மெலிவினால்;* ***மலர் அணை அமளிமீதே அயர்த்தனை உறங்குவாயோ?*** *- மலரணை பரப்பிய படுக்கை மீது சோர்ந்து உறங்குகின்றாயோ?* ***அமர் பொருது அலசினாயோ*** *- (அல்லது) போர் செய்து இளைத்தமையால் படுத்திருக்கின்றாயோ?*

*மயக்கிய முயக்கம் - முயக்கத்தாற் பிறந்த அவசத்தைக் குறித்தது. ஏழையர் - பெண்கள். "எருதேறி யேழையுடனே" (தேவா 1171-2) அலசுதல் - வருந்துதல்; இளைத்தல். "காதலால் உளதாகிய அயர்ச்சியும், பொருதமையால் உளதாகிய இளைப்பும் அன்றி அசைவறக் கிடத்தற்குக் காரணம் வேறு இருக்க இயலாது என்று இந்திரசித்தின் இறப்பினால் பொங்கும் துன்பத்தை மாற்ற முயல்கிறாள் மண்டோதரி.*

***9237. 'முக்கணான் முதலினோரை, உலகு ஒரு மூன்றினோடும்,***
***புக்க போர் எல்லாம் வென்று நின்ற என் புதல்வன் போலாம்,***
***மக்களில் ஒருவன் கொல்ல, மாள்பவன்? மான மேரு***
***உக்கிட, அணு ஒன்று ஓடி உதைத்தது போலும் அம்மா!***

***முக்கணான் முதலினோரை*** - *சிவபிரான் முதலிய முத்தேவர்களுடன்;* ***உலகொரு மூன்றினோடும்*** - *மூன்று உலகங்களோடும்;* ***புக்கபோர் எல்லாம் வென்று நின்ற*** - *உண்டான போர்கள் அனைத்தையும் வெற்றி கொண்டு நின்ற;* ***என் புதல்வன் மக்களில் ஒருவன் கொல்ல மாள்பவன் போலாம்*** - *என் மகன் மானிடரில் ஒருவன் கொல்ல இறப்பவனோ?* ***மானமேரு உக்கிட அணு ஒன்று ஓடி*** - *(இந்நிகழ்ச்சி) பெருமையை உடைய மேரு மலை சிதறும்படி ஓர் அணு ஓடிச்சென்று;* ***உதைத்தது போலும் அம்மா!*** - *'உதைத்தது' என்று சொல்லுவது போல உள்ளது! என்னே வியப்பு!*

*போலாம் - உரையசை, அம்மா - வியப்பிடைச் சொல்.*

### *9238. 'பஞ்சு எரி உற்றது என்ன அரக்கர்தம் பரவை எல்லாம்*
### *வெஞ் சின மனிதர் கொல்ல, விளிந்ததே; மீண்டது இல்லை;*
### *அஞ்சினேன் அஞ்சினேன்; அச் சீதை என்று அமுதால் செய்த*
### *நஞ்சினால், இலங்கை வேந்தன் நாளை இத் தகையன் அன்றோ?'*

***பஞ்சு எரி உற்றது என்ன*** - *பஞ்சுப் பொதியில் நெருப்புப் பற்றி எரிந்தது என்னுமாறு;* ***அரக்கர் தம் பரவை எல்லாம்*** - *அரக்கர் தம் படைக்கடல் எல்லாம்;* ***வெஞ்சின மனிதர் கொல்ல*** - *கொடிய கோபத்தை உடைய (இரு) மனிதர் - கொல்ல;* ***விளிந்ததே, மீண்டது இல்லை*** - *இறந்ததே அன்றி உயிர் மீண்டது இல்லை!* ***அச்சீதை என்று அமுதால் செய்த நஞ்சினால்*** - *அந்தச் சீதை என்ற பெயரை உடைய அமிழ்தினால் செய்த நஞ்சினால்;* ***இலங்கை வேந்தன் நாளை இத்தகையன் அன்றோ*** - *இலங்கைக்கு அரசனாகிய இராவணன் நாளைக்கு இத்தகையன் (இறந்து பட்டவன்) அன்றோ?* ***அஞ்சினேன்! அஞ்சினேன்!*** - *(ஆதலால்) அஞ்சினேன் அஞ்சினேன்!*

*தன் கணவன் மேல் குற்றம் காணாளாய், சீதையை அமுதாகத் தோன்றிய நஞ்சு என்றாள். தன் கணவன் கண்களுக்கு அமுதெனத் தோன்றியதனாலன்றோ அவன் கொணர்ந்தான் என்றபடி, இனி 'இராவணன் நாளை இங்ஙனம் மடிவானே' என கூறப்பொறாளாய், "இலங்கை வேந்தன் நாளை இத்தகையன் அன்றோ" என்றாள்!*

## *இராவணன் சீதையை வெட்டச் சொல்லுதல்*

### *9239. என்று அழைத்து இரங்கி ஏங்க, 'இத் துயர் நமர்கட்கு எல்லாம்*

***பொன் தழைத்தனைய அல்குல் சீதையால் புகுந்தது'
என்ன,
'வன் தழைக் கல்லின் நெஞ்சின் வஞ்சகத்தாளை,
வாளால்
கொன்று இழைத்திடுவென்' என்னா, ஓடினன்,
அரக்கர் கோமான்.***

***என்று அழைத்து இரங்கி ஏங்க*** - *என்று, மண்டோதரி அழைத்து ஏங்கா நிற்க;* ***அரக்கர் கோமான்*** - *(அதைக் கேட்டிருந்த) அரக்கர் வேந்தனாகிய இராவணன்;* ***நமர்கட்கு எல்லாம் இத்துயர்*** - *நம்மவர்க்கு எல்லாம் இந்தத் துயரம்;* ***'பொன் தழைத்தனைய அல்குல்*** - *பொன் தழைத்தாற்போன்ற அல்குலை உடைய;* ***சீதையால் புகுந்தது என்ன*** - *சீதையினால் வந்தது என்று சினந்து;* ***'வன்தழைக் கல்லின் நெஞ்சின் வஞ்சகத்தாளை*** - *வன்மை தழைத்த கல் போன்ற நெஞ்சினை உடைய வஞ்சகத்தாளை (சீதையை);* ***வாளால் கொன்று இழைத்திடுவேன்' என்னா ஓடினான்*** - *வாளால் கொன்று பகைவர்க்குத் தீங்கு புரிவேன் என்று (சீதை இருக்குமிடம் நோக்கி) ஓடினான்.*

*தான் பிறன்மனை நோக்கிய பிழை நினையாமல், தன்மேல் அன்பு செலுத்தாமல் தன் கணவனையே நினைந்து நிற்கும் சீதையைக் 'கல் நெஞ்சங் கொண்ட 'வஞ்சகி' எனக்கடிய நினைக்கும் இராவணச் செயல் மிகவும் அடாத செயலாம். இத் தன் குற்றம் நோக்காத் தன்மையே அவன் குலத்தோடு அழிதற்குக் காரணமாயிற்று.*

## *மகோதரன் இராவணனைத் தடுத்தல்*

***9240. ஓடுகின்றானை நோக்கி, 'உயர் பெரும் பழியை
உச்சிச்
சூடுகின்றான்' என்று அஞ்சி, மகோதரன், துணிந்த
நெஞ்சன்,
மாடு சென்று, அடியின் வீழ்ந்து, வணங்கி, 'நின்
புகழ்க்கு மன்னா!
கேடு வந்து அடுத்தது' என்னா, இனையன
கிளத்தலுற்றான்:***

***ஓடுகின்றானை நோக்கி*** - *(அவ்வாறு சீதை இருக்கும் இடம் நோக்கி) ஓடுகின்ற இராவணனைப் பார்த்து;* ***உயர் பெரும் பழியை உச்சிச்*** - *உயர்ந்த பெரிய பழியைத் தலையில்;* ***சூடுகின்றான் என்று அஞ்சி*** - *சூடிக் கொள்கின்றான் என்று அஞ்சி;* ***மகோதரன் துணிந்த நெஞ்சன் மாடு சென்று*** - *மகோதரன் துணிந்த நெஞ்சனாய் அவன் பக்கத்தில் சென்று;* ***அடியின் வீழ்ந்து வணங்கி*** - *அவன் பாதங்களில் வீழ்ந்து*

*வணங்கி;* ***மன்னா! நின்புகழ்க்கு கேடு வந்து அடுத்தது என்னா*** *- 'மன்னா! நின் புகழுக்கு கேடு வந்துவிட்டது என்று முன் சொல்லி;* ***இனையன கிளத்தலுற்றான்*** *- இத்தன்மையான சொற்களைப் பின்சொல்லலானான்.*

*உச்சிச் சூடுதலாவது - எல்லோரும் காணுமாறு தலையில் சூடிக் கொள்ளும் மாலை போலப் பழியை ஏற்றலாம். கற்புடைப் பெண்டிரைக் கொல்லுதல் பழிகளுள் தலையாயதாதலின் 'உயர்பெரும் பழி' எனப்பட்டது. தன் மன்னனுக்கு வரும் பழிக்குப் பெரிதும் அஞ்சும் அமைச்சனாதலின் அவன் கோபத்துக்கு அஞ்சானாய் துணிந்த நெஞ்சனாய்த் தன் மன்னனைத் தடுக்கத் துணிகின்றான் என்பதாகும். வான்மீகத்தில் இங்கு இராவணனைத் தடுத்து நிறுத்துபவனாகக் கூறப்படுபவன் 'சுபார்சுவன்' என்பவனாம்.*

***9241. 'நீர் உளதனையும், சூழ்ந்த நெருப்பு உளதனையும், நீண்ட***
***பார் உளதனையும், வானப் பரப்பு உளதனையும், காலின்***
***பேர் உளதனையும், பேராப் பெரும் பழி பிடித்தி போலாம் -***
***போர் உளதனையும் வென்று, புகழ் உளதனையும் உள்ளாய்.***

***போர் உளதனையும் வென்று புகழ் உளதனையும் உள்ளாய்*** *- போர்கள் அனைத்தையும் வென்று புகழ் அனைத்தையும் பெற்றுள்ளாய்;* ***நீர் உளதனையும் சூழ்ந்த நெருப்பு உளதனையும்*** *- நீர் உள்ளவரையும் பரவிச் சூழும் இயல்பைப் பெற்ற நெருப்பு உள்ளவரையும்;* ***நீண்ட பார் உளதனையும், வானப் பரப்புளதனையும்*** *- நீட்சியை உடைய பூமி உள்ளவரையும், ஆகாயப்பரப்பு உள்ளவரையும்;* ***காலின் பேர் உளதனையும் பேராப் பெரும்பழி பிடித்திபோலாம்*** *- காற்றின் பெயர் உலகில் வழங்கும் வரையிலும், நீங்காத பெரும் பழியைப் பெறுகின்றாய் போலும்.*

*தனை - அளவு குறிக்கப் பிற சொல்லின் பின் வரும் ஒரு சொல். "இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய்" (திருவாச - 7, 3) போலும் - உரையசை.*

***9242. 'தெள்ள அருங் காலகேயர் சிரத்தொடும், திசைக் கை யானை***
***வெள்ளிய மருப்புச் சிந்த வீசிய விசயத்து ஒள் வாள்,***
***வள்ளி அம் மருங்குல், செவ் வாய், மாதர்மேல் வைத்த போது,***
***கொள்ளுமே ஆவி தானே, நாணத்தால் குறைவது***

*அல்லால்?*

***தெள்ளரும் காலகேயர் சிரத்தொடும்*** - *(இவர் வலிமை எவ்வளவு என்று) தெளிதற்கு அரிய பெருவலி பெற்ற காலகேயர் தலைகளோடு;* ***திசைக்கை யானை வெள்ளிய மருப்புச் சிந்த*** - *திசை யானைகளின் வெள்ளிய கொம்பு சிதற;* ***வீசிய விசயத்து ஒள்வாள்*** - *வீசிய நின் வெற்றியை உடைய ஒள்ளிய வாள்;* ***வள்ளி அம் மருங்குல், செவ்வாய்*** - *கொடி போன்ற இடையினையும் சிவந்த வாயினையும் உடைய;* ***மாதர்மேல் வைத்த போது*** - *பெண் பாலர்மேல் செலுத்தியபோது;* ***நாணத்தால் தானே குறைவது அல்லால்*** - *வெட்கத்தால் அந்த வாள் தன் தொழிலில் குறைவு படுவதல்லாமல்;* ***கொள்ளுமே ஆவி?*** - *அவர் உயிரைக் கொள்ளுமோ? (கொள்ளாது)*

*காலகேயர் - காசிபருக்குக் கலை என்பவளிடம் பிறந்த அசுரர். இவர்கள் பொன்னிறமுடையவர்; வலிமை மிக்கவர். இந்திரனை வென்றவர்கள். கடலில் இருந்த இவர்களை இராவணன் வருணனை வெல்லச் செல்லுங்காலத்து வென்றான் என்பது உத்தர காண்டத்தில் உள்ளது. (உத்தர. திக்விசயப் 83) திக்கயங்களை இராவணன் வென்றமையையும் உத்தர காண்டத்தால் (திக்விசயப் 227) அறியலாம். வீரம் விளைத்த வாளைப் பேதைப் பெண் மேல் வீசுவது அவ்வாளுக்கே இழிவைச் சேர்க்கும் செயல் என்பதாம்.*

***9243. 'மங்கையை, குலத்துளாளை, தவத்தியை, முனிந்து, வாளால்***
***சங்கை ஒன்று இன்றிக் கொன்றால், ''குலத்துக்கே தக்கான்'' என்று,***
***கங்கை அம் சென்னியானும், கண்ணனும், கமலத்தோனும்,***
***செங் கையும் கொட்டி, உன்னைச் சிரிப்பரால், ''சிறியன்'' என்னா.***

***மங்கையை, குலத்துளாளை, தவத்தியை*** - *ஒரு பெண்ணை, சிறந்த குலத்துள் தோன்றியவளை, தவ ஒழுக்கமுடையவளை;* ***முனிந்து, வாளால் சங்கை ஒன்று இன்றிக் கொன்றால்*** - *முனிந்து வாட்படையினால் ஐயமின்றிக் கொன்றால்;* ***கங்கை அம் சென்னியானும் கண்ணனும் கமலத்தோனும்*** - *கங்கை சூடிய தலையை உடைய சிவனும், திருமாலும், பிரமனும்;* ***'குலத்துக்கே தக்கான்' என்று*** - *'அரக்கர் குலத்துக்கே தகுந்தவன் இவன்' என்று;* ***செங்கையும் கொட்டி உன்னை ''சிறியன்'' என்னா சிரிப்பர்*** - *சிவந்த கைகளைக் கொட்டி உன்னைச் ''சிறியன்'' என்று எள்ளிச் சிரிப்பர்.*

*பெண்ணைக் கொல்லுதல் பெரும்பாவம். அதுவும் நற்குலத்தில் தோன்றியவளைக் கொல்லுதல் அதனிலும் பாவம். அதனினும் கற்புக் கடம்பூண்டு நின்ற தவத்தியைக் கொல்லும் பாவம் பெரிது; எனவே தன் மன்னனை இப்பழியினின்று காக்க முயலும் மகோதரன் இராவண ஆணவத்தை அறிந்தவனாதலின், 'குலத்துக்கே தக்கான் என்றும் 'சிறியன்' என்றும் முத்தேவரும் நகைப்பர் எனக் கூறித் தடுக்கின்றான்.*

*9244.* ***'நிலத்து இயல்பு அன்று; வானின் நெறி அன்று; நீதி***
***அன்று;***
***தலத்து இயல்பு அன்று; மேலோர் தருமமேல், அதுவும்***
***அன்று;***
***புலத்தியன் மரபின் வந்து, புண்ணிய விரதம்***
***பூண்டாய்!***
***வலத்து இயல்பு அன்று; மாயாப் பழி கொள***
***மறுகுவாயோ?***

***புலத்தியன் மரபில் வந்து புண்ணிய விரதம் பூண்டாய்*** - *புலத்திய முனிவனுடைய மரபில் பிறந்து புண்ணிய விரதங்களை மேற்கொண்டவனே!* ***நிலத்து இயல்பு அன்று; வானின் நெறி***

***அன்று*** - *பெண்ணைக் கொலை செய்தல் என்பது மண்ணுலக இயல்பன்று வானுலகத்தோர் நெறி அன்று;* ***நீதி அன்று; தலத்து இயல்பு அன்று*** - *நீதிக்குரியதும் அல்ல எவ்விடத்துக்கும் இயல்பல்ல;* ***மேலோர் தருமமேல், அதுவும் அன்று*** - *பெரியோர்கள் பின்பற்றிய தரும நெறியோ எனில் (இத்தருமத்தால் இதைச் செய்யலாம் என அனுமதிக்கப் பட்டதோ எனின்) அதுவும் அன்று;* ***வலத்து, இயல்பு அன்று*** - *இது செய்தல்) வலிமையின் பாற்பட்டதுமன்று;* ***மாயாப் பழிகொள மறுகுவாயோ?*** - *(அப்பெண்ணைக் கொலை செய்து) என்றும் அழியாத பழயை ஏற்று (பின்பு எண்ணி) மனங்கலங்குவாயோ?*

*புலத்தியன் - பிரம தேவனின் மகன். அம்முனிவனின் மகன் விச்சிரவசு. அவன் மகன் இராவணன். மறுகுதல் - கலங்குதல். இராவணன் புண்ணிய விரதம் மேற்கொண்டதனை மாரீசன் கூற்றால் (கம்ப. 3245) அறியலாம்.*

*9245.* ***'இன்று நீ இவளை வாளால் எறிந்துபோய்***
***இராமன்தன்னை***
***வென்று மீண்டு, இலங்கை மூதூர் எய்தினை***
***வெதும்புவாயோ?***
***பொன்றினள் சீதை; இன்றே, புரவல!***
***புதல்வன்தன்னைக்***
***கொன்றவர்தம்மைக் கொல்லக் கூசினை போலும்!'***
***என்றான்.***

***நீ இன்று இவளை வாளால் எறிந்துபோய்*** - *நீ இன்றைக்கு இச்சீதையை வாளால் வெட்டிவிட்டுச் சென்று;* ***இராமன் தன்னை வென்று இலங்கை மூதூர் மீண்டு எய்தினை***

*- இராமனை வென்று இலங்கையாகிய பழமை வாய்ந்த (நம்) நகரத்துக்குத் திரும்பி வந்து;* ***இன்றே பொன்றினள் சீதை வெதும்புவாயோ*** *- இன்றே (நீ கொல்வாயானால்) இறந்துபடும் சீதைக்காக (பிறகு நினைந்து) மனம் வெதும்புவாயோ?* ***புரவல! புதல்வன் தன்னைக் கொன்றவர் தம்மை*** *- அரசே! (நின்) மகனைக் கொன்றவர் தம்மை;* ***கொல்லக் கூசினை போலும் என்றான்*** *- கொல்லுவதற்குப் பின்வாங்கினை போலும்' என்றான்.*

*'சீதையைக் கொன்ற பின்பு சென்று இராமனை வென்று மீள்வதால் என்பயன்' என்கிறான் மகோதரன். அத்துடன் பெண்ணைக் கொல்வதற்கு இவ்வளவு ஆவேசப்படுகின்ற நீ உன் புதல்வனைக் கொன்றவனைக் கொல்ல ஏன் பின்தங்குகின்றாய்; உன் வீரத்தையும் ஆவேசத்தையும் அவரிடமன்றோ காட்டவேண்டுமென்பதனையும் குறிப்பால் உணர்த்துகின்றான். கூசுதல் - மனம் பின்வாங்குதல்.*

## *இந்திரசித்தின் உடலைத் தைலத்தோணியில் இடப் பணித்தல்*

***9246. என்னலும், எடுத்த கூர் வாள் இரு நிலத்து இட்டு,***
***மீண்டு,***
***மன்னவன், 'மைந்தன்தன்னை மாற்றலார் வலியால்***
***கொண்ட***
***சின்னமும், அவர்கள் தங்கள் சிரமும் கொண்டு***
***அன்றிச் சேர்கேன்;***
***துன்னரும் தயிலத்தோணி வளர்த்துமின்' என்னச்***
***சொன்னான்.***

***என்னலும், எடுத்த கூர்வாள் இருநிலத்து இட்டு*** *- என்று மகோதரன் கூறிய அளவில் தான் சீதையை வெட்ட எடுத்த கூரிய வாளைப் பெரிய நிலத்தின் மேல் போட்டுவிட்டு;* ***மன்னவன் மீண்டு*** *- மன்னவனாகிய இராவணன் தான் செய்யக்கருதியதினின்றும் மீண்டு;* ***'மைந்தன் தன்னை மாற்றலார் வலியால் கொண்ட சின்னமும்*** *- 'மைந்தன் இந்திரசித்தினை பகைவர்கள் வலிமையால் கொன்று கொய்து (தம்) வெற்றிக்குச் சின்னமாகக் கொண்டு சென்ற தலையினையும்;* ***அவர்கள் தங்கள் சிரமும் கொண்டு அன்றிச் சேர்கேன்*** *- (பழிக்குப் பழியாக) அப்பகைவர் தங்கள் தலையையும் கொண்டல்லது இங்கு வாரேன்;* ***துன்னரும் தயிலத்தோணி வளர்த்துமின்' என்னச் சொன்னான்*** *- நெருங்குதற்கரிய எண்ணைத் தாழியில் இந்திரசித்தின் உடம்பை இட்டு வையுங்கள் என்று கூறினான்.*

## *படைக்காட்சிப் படலம்*

*தன் ஆணையை ஏற்றுப் பலவிடங்களிலிருந்தும் வந்த அரக்கர் படைகளை இராவணன் காண்பதைத் தெரிவிக்கும் பகுதியாதலின் இப்பெயர் பெற்றது. இப்படலம் 'மூலபல வரவு காண் படலம்' எனவும், 'படைக்காட்டுறு படலம்' எனவும், 'படை வரவுப் படலம்' எனவும் வெவ்வேறு பெயர்களுடன் சுவடிகளில் காணப்பெறுகின்றது.*

*இராவணன் தூதுவர்களின் மூலம் உலகின் பல பாகங்களிலுமுள்ள அரக்கர் சேனைகளை வரவழைக்க அவை வருகின்றன. அவற்றைக் காண்பதற்காக இராவணன் கோபுரத்தின் மேல் ஏறிப் பார்க்கின்றான். படைப்பெருக்கத்தை அளவிட முடியாதெனத் தூதுவர் கூறக் கேட்டு மகிழ்ந்த இராவணன் அப்படைகளின் தலைவர்களை அழைப்பிக்கின்றான். வந்த தலைவர்கள் செய்தியறிந்து, 'மனிதர்கள்' என்று இராம இலக்குவர்களை அற்பமாக மதித்துப் பேச, மாலியவான் இராம இலக்குவரின் பெருமையினையும் வானரங்களின் வலிமையையுங் கூறிச் சீதையை விட்டுவிடுதலே விரும்பத்தக்கது என்கின்றான். ஆனால் வன்னி என்ற அரக்கர் தலைவன் அதற்கு உடன்படாது இந்திரசித்து இறந்தபின்பு போராற்றி வெல்லுதலே தகுந்தது எனக்கூறுகின்றான். 'பகை வென்று வருவோம்' என வஞ்சினம் கூறி அரக்கர் எல்லோரும் எழுகின்றனர். இது இப்படலத்தின் சுருக்கமாகும்.*

### *அரக்கர் சேனை இலங்கையில் நிறைதல்*

***9247. அத் தொழில் அவரும் செய்தார்; ஆயிடை,<br>அனைத்துத் திக்கும்<br>பொத்திய நிருதர் தானை கொணரிய போய தூதர்,<br>ஒத்தனர் அணுகி வந்து வணங்கினர், 'இலங்கை<br>உன் ஊர்ப்<br>பத்தியின் அடைந்த தானைக்கு இடம் இலை; பணி<br>என்?' என்றார்.***

***அத்தொழில் அவரும் செய்தார்*** *- (இந்திரசித்தின் உடலைத் தயிலத் தோணியில் இடும்) அத்தொழிலை அந்த ஏவலாளரும் செய்தனர்;* ***ஆயிடை அனைத்துத்திக்கும் பொத்திய*** *- அப்போது எல்லாத் திசைகளிலும் நிரம்பியுள்ள;* ***நிருதர் தானை காணரிய போய தூதர்*** *- அரக்கர் சேனையைக் கொண்டு வரச் சென்ற தூதர்கள்;* ***ஒத்தனர் அணுகி வந்து வணங்கினர்*** *- ஒரு சேர நெருங்கி வந்து வணங்கினராய்;* ***இலங்கை உன் ஊர்ப் பத்தியின் அடைந்த*** *- (அரசே!) இலங்கையாகிய உனது ஊரில் வரிசையாக வந்து அமைந்த;* ***தானைக்கு இடம் இலை; பணி என்?' என்றார்*** *- சேனைக்கு இடம் இல்லை; இனி, யாம் செய்யத்தக்க பணி என்ன?' என்று வினவினார்கள்.*

*அத்தொழில் - இந்திரசித்துவின் உடலைத் தயிலத் தோணியில் இடும் தொழில். ஆயிடை - அவ் + இடை. அனைத்துத் திக்கும் - திக்கு அனைத்தும். பொத்திய - நிரம்பிய.*

***9248. ஏம்பலுற்று எழுந்த மன்னன், 'எவ் வழி எய்திற்று?' என்றான்;***
***கூம்பலுற்று உயர்ந்த கையர், 'ஒரு வழி கூறலாமோ?***
***வாம் புனல் பரவை ஏழும் இறுதியின் வளர்ந்தது என்னாத்***
***தாம் பொடித்து எழுந்த தானைக்கு உலகு இடம் இல்லை' என்றார்.***

***ஏம்பலுற்று எழுந்த மன்னன் 'எவ்வழி எய்திற்று?' என்றான்*** *- மகிழ்ச்சியுற்று எழுந்த இராவணன் (அப்படை) எவ்விடத்து வந்துளது? என வினவினான்;* ***கூம்பலுற்று உயர்ந்த கையர்*** *- குவிந்து உயர்ந்த கையை உடையவர்களாகிய தூதுவர்கள்;* ***'ஒருவழி கூறலாமோ? வாம்புனல் பரவை எழும்*** *- (அச்சேனை இன்ன இடத்தில் இருந்தது என்று சுட்டி) ஓரிடத்தைச் சொல்லுதல் கூடுமோ? அலைகள் தாவிச் செல்லுகின்ற கடல்கள் ஏழும்;* ***இறுதியின் வளர்ந்தது என்னா*** *- ஊழி இறுதியில் பொங்கிப் பரந்தது என்னுமாறு;* ***தாம் பொடித்து எழுந்த தானைக்கு உலகு இடம் இல்லை' என்றார்*** *- தாமே கிளர்ந்து எழுந்த சேனை தங்குவதற்கு உலகம் இடமுடையதாக இல்லை என்று கூறினார்கள்.*

*ஏம்பல் - மகிழ்ச்சி. கூம்பல் உற்று உயர்ந்த கையர் என்றது சிரமேற் குவிந்த கரத்தவர் என்றவாறு. "கூம்பலங்கைத்தலத் தன்பரென் பூடுருகக்குனிக்கும்" (திருக்கோவை - 11) "குவிகையேவலர்" (குசேலர் - 2:78) எவ்வழி எய்திற்று? என்ற வினாவிற்கு "ஒரு வழி கூறலாமோ?" என்ற வினவிப் பதிலிறுத்தனர் தூதர். 'அரக்கர் தானைக்கு உலகில் இடமில்லை' என்றதனால் அது இறந்துபடும் என்ற குறிப்புப் பொருளும் தொக்கது.*

***9249. மண் உற நடந்த தானை வளர்ந்த மாத் தூளி மண்ட,***
***விண் உற நடக்கின்றாரும் மிதித்தனர் ஏக, மேல் மேல்,***
***கண்ணுற அருமை காணாக் கற்பத்தின் முடிவில் கார்போல்,***
***எண்ணுற அரிய சேனை எய்தியது, இலங்கை நோக்கி.***

***மண் உற நடந்த தானை வளர்ந்த மாத்தூளி மண்ட*** *- பூமியில் பொருந்த நடந்த சேனையால் பெருகிய துகள் மிகுந்து எழுந்து நெருங்குதலால்;* ***விண்ணுற நடக்கின்றாரும் மிதித்தனர் ஏக*** *- விண்ணிற் பொருந்த நடக்கின்ற தேவர்களும் (மண்ணில் நடப்பது போல) அத்துகளின் செறிவை மிதித்து நடக்க;* ***கற்பத்தின்***

***முடிவில் கார் போல் எண்ணுற அரிய சேனை*** - *யுக முடிவில் எழும் மேகம் போன்று, கணக்கிட முடியாத அந்த அரக்கர் சேனை;* ***கண்ணுற அருமை காணா*** - *(தூளிப் பரப்பினால்) பார்த்தற்கு அருமையாகக் காணப்பட்டு;* **இலங்கை நோக்கி மேல் மேல் *எய்தியது*** - *இலங்கா புரியை நோக்கி மேலும் மேலும் சென்றடைந்தது.*

*தூளிமண்ட விண்ணுற நடக்கின்றாரும் (ஒப்பு) "கதிகொண்ட சேனை நடவெழுதுகள் ககனம் சுலாவி யனிலகதியுற முதிர் சண்ட சூர கிரணமிருளெழ முகில் பஞ்ச பூதவடிவு பெறவிய, னதிவண்டலாக வமரகுறை தருநகரம் பொன்வீதி புழுதியெழ' (வில்லி. பா. 16, 78)*

***9250. வாள்தனின் வயங்க மின்னா; மழை அதின்***
***இருளமாட்டா;***
***ஈட்டிய முரசின் ஆர்ப்பை, இடிப்பொடு முழக்கமாட்டா;***
***மீட்டு இனி உவமை இல்லை, வேலை மீச் சென்ற***
***என்னின்-***
***தீட்டிய படையும் மாவும் யானையும் தேரும் செல்ல.***

***வாள்தனின் வயங்கமின்னா மழை அதின் இருள மாட்டா*** - *அரக்க சேனை ஏந்திய வாட்களைப் போல மின்ன மாட்டாதனவான மேகங்கள் அப்படைஞரைப் போல (கடுமையால்) இருண்டிருக்கமாட்டா;* ***ஈட்டிய முரசின் ஆர்ப்பை இடிப்பொடு முழக்கமாட்டா*** - *(மேலும் அப்படை) நெருக்கமாக அடித்துச் செல்லுகின்ற முரசங்களின் ஆரவாரத்தை ஒப்ப அம் மேகங்கள் இடியொடு முழங்கமாட்டா;* **தீட்டிய படையும் மாவும் யானையும் தேரும்** - *இங்ஙனமாக ஒளி மிகுமாறு தீட்டப் பெற்ற ஆயுதங்களையும், குதிரைகள் யானைகள் மற்றும் தேர்களுமாக;* **வேலை *மீச்சென்ற என்னின்*** - *அச்சேனை (நிலத்தில் நடத்தற்கு இடமின்மையால்) கடலின் மீது எழுந்து நடந்து சென்றது என்றால்;* **செல்ல மீட்டு இனி உவமை இல்லை** - *(அங்ஙனம்) செல்லுகின்ற சேனைக்கு (மேகத்தைத் தவிர) வேறு இனி உவமை கூற ஏதுமில்லை.*

***9251. உலகினுக்கு உலகு போய்ப் போய், ஒன்றின் ஒன்று***
***ஒதுங்கலுற்ற,***
***தொலைவு அருந் தானை மேன்மேல் எழுந்தது***
***தொடர்ந்து சுற்ற;***
***நிலவினுக்கு இறையும் மீனும் நீங்கின, நிமிர்ந்து;***
***நின்றான்,***
***அலரியும், முந்து செல்லும் ஆறு நீத்து, அஞ்சி,***
***அப்பால்.***

***தொலைவு அருந்தானை மேன்மேல் எழுந்தது தொடர்ந்து  சுற்ற*** - *அழிவு இல்லாத சேனை மேலும் மேலும் எழுந்து தொடர்ந்து  வந்து சூழ்ந்து நிற்க;* ***உலகினுக்கு உலகு போய்ப் போய் ஒன்றின் ஒன்று  ஒதுங்கலுற்ற*** - *உலகத்திற்கு  உலகம்  ஒதுங்கி சென்று ஒருலகத்தில்  மற்றோருலகம்  மறைந்து  ஒதுங்கத்  தொடங்கின;* ***நிலவினுக்கு இறையும் மீனும் நீங்கின*** - *நிலவுக்குத் தலைவனாகிய  சந்திரனும் விண்மீன்களும் (அஞ்சி அப்பால்) நீங்கின;* ***அலரியும்,  முந்து செல்லும் ஆறு நீத்து*** - *சூரியனும் முன் செல்லுகின்ற வழியை  விடுத்து;* ***அஞ்சி அப்பால் நிமிர்ந்து நின்றான்*** - *அச்சமுற்று அப்பால்  உயர்ந்து நின்றான்.*

***9252. மேற்பட விசும்பை முட்டி, மேருவின் விளங்கி, விண்ட***
***நாற் பெரு வாயிலூடும், இலங்கை ஊர், நடக்கும் தானை,-***
***கார்க் கருங் கடலை, மற்றோர் இடத்திடை, காலன்தானே***
***சேர்ப்பது போன்றது, யாண்டும் சுமை பொறாது உலகம் என்ன.***

***மேற்பட விசும்பை முட்டி மேருவின் விளங்கி*** - *மேலிடம் பொருந்த ஆகாயத்தை முட்டி மேருவைப் போல ஒளிர்ந்து;* ***விண்ட நாற்பெரு வாயிலூடும்*** - *திறந்த நான்கு பெரிய வாயில் வழியாக;* ***இலங்கை ஊர் நடக்கும் தானை*** - *இலங்கை மாநகரை நோக்கி நடக்கின்ற அச்சேனையானது;* ***காலன்தானே கார்க் கருங்கடலை*** - *யமனே கரிய நிறம் வாய்ந்த பெரிய கடலை;* ***உலகம் யாண்டும்  சுமை பொறாது என்ன*** - *உலகம் எவ்விடத்தும் சுமை தாங்காது  என்ற காரணத்தால்;* ***மற்றோர் இடத்திடை சேர்ப்பது போன்றது*** - *பிறிதோர் இடத்தில் சேர்ப்பதைப் போன்றிருந்தது.*

***9253. 'நெருக்குடை வாயிலூடு புகும் எனின், நெடிது காலம்***
***இருக்கும் அத்தனையே' என்னா, மதிலினுக்கு உம்பர் எய்தி,***
***அரக்கனது இலங்கை உற்ற - அண்டங்கள் அனைத்தின் உள்ள***
***கருக் கிளர் மேகம் எல்லாம் ஒருங்கு உடன் கலந்தது என்ன.***

***நெருக்குடை வாயிலூடு புகும் எனின்*** - *நெருக்கத்தை உடைய வாயிலின்  வழியாக உள்ளே நுழைவோம் என்றால்;* ***நெடிது காலம் இருக்கும்  அத்தனையோ  என்னா*** - *'நெடிதுகாலம்  காத்துக் கொண்டிருக்கும் அவ்வளவே; (உள்ளே புகல் அரிது)' என்று கருதி* ***மதிலினுக்கு உம்பர் எய்தி*** - *மதிலுக்கு  மேல்  ஏறிச் சென்று;* ***அண்டங்கள் அனைத்தின் உள்ள*** - *எல்லா அண்டங்களிலுமுள்ள;* ***கருக்கிளர்  மேகம்  எல்லாம்*** -

*கருக்கொண்ட மேகங்கள் எல்லாம்;* **ஒருங்குடன் கலந்தது என்ன அரக்கனது இலங்கை உற்ற** *- ஒருசேர உடன் கலந்தது என்னுமாறு வந்த சேனைகள் அரக்கனாகிய இராவணனுடைய இலங்கை நகரை அடைந்தன.*

## *இராவணன் சேனைகளை நோக்குதல்*

***9254. அதுபொழுது, அரக்கர்கோனும், அணிகொள்***
***கோபுரத்தின் எய்தி,***
***பொதுவுற நோக்கலுற்றான், ஒரு நெறி போகப் போக,***
***விதி முறை காண்பென் என்னும் வேட்கையான்,***
***வேலை ஏழும்***
***கதுமென ஒருங்கு நோக்கும் பேதையின்காதல்***

***கொண்டான்.***

**அதுபொழுது அரக்கர் கோனும் அணிகொள் கோபுரத்தின் எய்தி** *- அப்பொழுது அரக்கர் தலைவனாகிய இராவணனும் அழகு மிக்க கோபுரத்தின் மேலே ஏறி;* **பொதுவுற நோக்கலுற்றான்** *- அச்சேனையைப் பொதுவகையால் நோக்கத் தொடங்கினவன்;* **வேலை ஏழும் கதுமென ஒருங்கு நோக்கும்** *- ஏழு கடல்களையும் விரைவாக ஒருங்கு காண (ஆவல் கொண்ட);* **பேதையின் காதல் கொண்டான்** *- அறிவிலி போல ஆசை கொண்டவனாய்;* **ஒரு நெறி போகப் போக விதிமுறை காண்பென் என்னும் வேட்கையான்** *- தன் பார்வையை ஒரு நெறியே செல்லுமாறு செலுத்தி விதிமுறைப்படி தனித்தனியே காண்பேன் என்னும் விருப்பத்தை உடையவனானான்.*

*மிகப்பெரிய அச்சேனையை இராவணன் விரும்பியவாறு தனித்தனியே காணவியலாது என்பதனைக் கூறவந்த கவிஞர், "வேலை ஏழும் கதுமென ஒருங்கு நோக்கும் பேதையின் காதல் கொண்டான்" என உவமை கூறினார்.*

***9255. மாதிரம் ஒன்றின்நின்று, மாறு ஒரு திசைமேல் மண்டி,***
***ஓத நீர் செல்வது அன்ன தானையை, உணர்வு***
***கூட்டி,***
***வேத வேதாந்தம் கூறும் பொருளினை***
***விரிக்கின்றார்போல்,***
***தூதுவர் அணிகள்தோறும் வரன்முறை காட்டிச்***
***சென்றார்;***

***மாதிரம் ஒன்றின் நின்று மாறு ஒரு திசை மேல்*** - ஒரு திசையில் நின்று மற்றொரு திசைமேல்; ***ஓதநீர் மண்டிச் செல்வது அன்ன தானையை*** - கடல்நீர் விரைந்து செல்வது போன்று இலங்கை நோக்கிச் செல்லுகின்ற சேனையை; ***தூதுவர் உணர்வு கூட்டி*** - தூதுவர்கள் (கேட்கின்றவனாகிய) இராவணனுடைய அறிவு கூடும்படி; ***வேதவேதாந்தம் கூறும் பொருளினை விரிக்கின்றார் போல்*** - வேதங்களும் வேதாந்தங்களும் கூறும் பரம் பொருளின் இயல்பினை விரித்துக் கூறுவோர் போல,; ***அணிகள் தோறும் வரன் முறை காட்டிச் சென்றார்*** - அணிகள் தோறும் உள்ளவர்களை வரன் முறையாக விளக்கிக் காட்டிச் சென்றார்கள்.

*பரம் பொருள் வேத வேதாந்தங்களாலும் எட்ட முடியாதது. அங்ஙனமாய பொருளை ஒருவாறு தர்க்கரீதியாக விளக்கிச் செல்லுவாரும், அதனைக் கேட்பாரும் எங்ஙனம் அப்பொருளை முற்றிலும் உணராமல் இருக்கின்றார்களோ அங்ஙனமே விளக்க முடியாத பெரும் எண்ணிக்கையான படைகளைத்தாமே முழுவதும் உணராதவராய தூதுவர் ஒருவாறு விளக்கிக் கூறக் கேட்டான் இராவணன்.*

**கலித்துறை**

***9256. 'சாகத் தீவினின் உறைபவர், தானவர் சமைத்த***
***யாகத்தில் பிறந்து இயைந்தவர், தேவரை எல்லாம்***
***மோகத்தின் பட முடித்தவர், மாயையின் முதல்வர்,***
***மேகத்தைத் தொடும் மெய்யினர், இவர்' என***
***விரித்தார்.***

***சாகத் தீவினின் உறைபவர்*** - இவர் சாகத் தீவில் வாழ்பவர்; ***தானவர் சமைத்த யாகத்தில் பிறந்து இயைந்தவர்*** - அரக்கர்களை செய்த வேள்வியில் தோன்றி அமைந்தவர்; ***தேவரை எல்லாம் மோகத்தின் படமுடித்தவர்*** - தேவர்களை எல்லாம் மோகத்தில் விழுமாறு மாயை செய்து முடித்தவர்; ***மாயையின் முதல்வர்*** - மாயை செய்வதில் முதன்மை பெற்றவர்; ***மேகத்தைத் தொடும் மெய்யினர்*** - (வானில் இயங்கும்) மேகத்தைத் தொடும்படி உயர்ந்துள்ள உடம்பினை உடையவர்; ***'இவர்' என விரித்தார்*** - இவர்கள் என ஓரணியைக் காட்டி விரித்துக் கூறினர் தூதர்கள்.

*சாகம் - தேக்கு. அம்மரங்கள் மிகுந்திருந்தமையால் அத்தீவு சாகத்தீவு எனப்பட்டது என்பர். இதனைத் தேக்கத் தீவு எனவும் கூறுவர். இது ஏழுதீவுகளுள் ஒன்றெனவும் கூறுவர். ஏனையவை நாவலந்தீவு. இறலித்தீவு, இலவந்தீவு,கிரவுஞ்சத்தீவு, குசைத்தீவு, புட்கரத் தீவு என்பனவாம்.*

***9257. 'குசையின் தீவினின் உறைபவர், கூற்றுக்கும்***
***விதிக்கும்***

***வசையும் வன்மையும் வளர்ப்பவர், வான நாட்டு உறைவார்***
***இசையும் செல்வமும் இருக்கையும் இழந்தது, இங்கு, இவரால்;***

***விசையம்தாம் என நிற்பவர், இவர் - நெடு விறலோய்!***

***நெடு விறலோய்! இவர் குசையின் தீவினின் உறைபவர்*** - *நீண்ட வெற்றியை உடையவனே! இவர்கள் குசைத்தீவில் வாழ்பவர்கள்;* ***கூற்றுக்கும் விதிக்கும் வசையும் வன்மையும் வளர்ப்பவர்*** - *யமனுக்கும் பிரமனுக்கும் பழியையும் வலிமையையும் வளர்க்கின்றவர்;* ***வானநாட்டு உறைவார் இசையும் செல்வமும் இருக்கையும் இழந்தது, இங்கு இவரால்*** - *வானுலகில் வாழ்கின்ற தேவர்கள் தம் புகழையும் செல்வத்தையும் இருப்பிடத்தையும் இழந்தது இங்குள்ள இவராலேயாம்;* ***விசையம் தாம் என நிற்பவர்*** *- வெற்றி என்றால் அதற்குப் பொருள் தாமே என்னுமாறு வெற்றியே பெற்று நிற்கும் இயல்பினர் ஆவார்.*

*குசை - தருப்பைப்புல். அது நிறைந்திருந்தமை பற்றி அத்தீவு குசைத்தீவு எனப் பெயர் பெற்றது. கூற்றுக்கு வசையும், விதிக்கு வன்மையும் என இயையும். கூற்று இவர் உயிரைக் கொள்ள வியலாமையால் வசை. அங்ஙனம் இவர் உயிரைக் கொள்ளவியலாதவாறு படைத்தமையால் பிரமனுக்கு வலிமை என்பதாம். விசையம் - வெற்றி. சென்ற போர் தோறும் வெற்றியே பெற்று வருதலின் வெற்றியே இவர்கள் தாமோ எனப் பிறர் வியக்குமாறு வாழ்பவர் என்றவாறு, விசயம் என்ற சொல் எதுகை நோக்கி விசையம் எனவாயிற்று.*

***9258. 'இலவத் தீவினின் உறைபவர், இவர்கள்; பண்டு இமையாப்***
***புலவர்க்கு இந்திரன் பொன்னகர் அழிதரப் பொருதார்;***
***நிலவைச் செஞ் சடை வைத்தவன் வரம் தர, நிமிர்ந்தார்;***
***உலவைக் காட்டு உறு தீ என வெகுளி பெற்றுடையார்.***

***இவர்கள் இலவத்தீவினில் உறைபவர்*** - *இவர்கள், இலவத் தீவினில் வாழ்பவர்கள்;* ***இமையாப் புலவர்க்கு இந்திரன்*** - *இமையா நாட்டமுடைய தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனது;* ***பொன்னகர் அழிதரப் பண்டு பொருதார்*** - *பொன்மயமான அமராவதி நகரம் அழிவெய்துமாறு முன்பு போர் செய்தவர்கள்;* ***நிலவைச் செஞ்சடை வைத்தவன் வரம் தர, நிமிர்ந்தார்*** - *பிறைச் சந்திரனைச் சிவந்த சடையில் வைத்த சிவபிரான் வரம் தந்தமையால் மேன்மை பெற்றவர்கள்;* ***உலவைக் காட்டுஉறு தீஎன வெகுளி பெற்றுடையார்*** - *உலர்ந்த மரங்கள் நெருங்கிய காட்டில் பற்றிய தீப்போல் பெருங்கோபம் கொண்டவர்கள்.*

*இலவ மரங்கள் நிறைந்த தீவாகலின் 'இலவத்தீவு' எனப்பட்டது. இமையாப்புலவர் - கண்ணிமைத்தலில்லாத தேவர்கள். பொன்னகர் - பொன்னமராவதி. குற்றம் செய்து சாபம் பெற்ற சந்திரனையே முடிமிசை வைத்த அருளாளன் முக்கட் பெருமான் ஆகலின் தீமையே புரியினும் அவர்தம் தவத்திற்காக வரம் நல்கினான் என்பதாம். உலவை - உலவை மரம். காட்டுத்தீ விரைந்து பரவுந் தன்மையது. அதுவும் உலர்ந்த மரங்கள் நெருங்கிய காடெனில் பெருந்தீக்கதுமென பரவுமன்றோ? அத்தகைய கடுங்கோபத்தினர் இவர்கள் என்றவாறு.*

***9259. 'அன்றில் தீவினின் உறைபவர், இவர்; பண்டை அமரர்க்கு***
***என்றைக்கும் இருந்து உறைவிடம் என்றிட மேருக்***
***குன்றைக் கொண்டு போய், குரை கடல் இட, அறக் குலைந்தோர்***
***சென்று, 'இத் தன்மையைத் தவிரும்' என்று இரந்திடத் தீர்ந்தோர்.***

***இவர் அன்றில் தீவினின் உறைபவர்** - இவர்கள் அன்றில் தீவில் வாழ்பவர்கள்; **அமரர்க்கு என்றைக்கும் இருந்து உறைவிடம் என்றிட** - தேவர்கட்கு எக்காலத்தும் இருந்து வாழ்கின்ற இடம் இது என்று பிறர் கூறிய அளவில்; **மேருக்குன்றைக் கொண்டு போய் பண்டைக் குரைகடல் இட** - அம்மேருமலையினைப் பெயர்த்துக் கொண்டு போய்ப் பண்டைக்காலத்தில் ஒலிக்கின்ற கடலில் இட முயலாநிற்க; **அறக்குலைந்தோர் சென்று** - மிகவும் நிலை குலைந்தவர்களாகிய அத்தேவர்கள் சென்று; **இத்தன்மையைத் தவிரும் என்று இரந்திடத் தீர்ந்தோர்** - 'இந்தச் செயலைக் கைவிடுங்கள்' என்று இரந்து கேட்டுக்கொள்ள அச்செயலை விடுத்த வீரமுடையவர்கள்.*

*அன்றில் தீவு - அன்றில் பறவைகள் நிறைந்த தீவாகலின் இப்பெயர் பெற்றது. இதனைக் கிரௌஞ்சம் என்பர் வடமொழியாளர். அறக்குலைதல் - மிகவும் நிலை குலைதல்.*

***9260. 'பவளக் குன்றினின் உறைபவர்; வெள்ளி பண்பு அழிந்து, ஓர்***
***குவளைக் கண்ணி, அங்கு, இராக்கதக் கன்னியைக் கூட,***
***அவளின் தோன்றினர், ஐ-இரு கோடியர்; நொய்தின்***
***திவளப் பாற்கடல் வறள்படத் தேக்கினர், சில நாள்.***

***பவளக் குன்றினின் உறைபவர்*** - (இவர்கள்) பவளக் குன்றினில் வாழ்பவர்கள்; ***வெள்ளி பண்பு அழிந்து ஓர் குவளைக் கண்ணி*** - சுக்கிரன் குணங்கெட்டு (க்காமுகனாகி) ஒரு குவளை மலர் போன்ற கண்களை உடையவளான; ***இராக்கதக் கன்னியை அங்கு கூட*** - அரக்கர் குலக்கன்னிகையை அவ்விடத்துப் புணர; ***அவளின் தோன்றினர் ஐ - இரு கோடியர்*** - அவளிடத்துத் தோன்றியவர் பத்துக்கோடி என்னும் தொகையினராவர்; ***திவளப் பாற்கடல் வறள்பட நொய்தின் சிலநாள் தேக்கினர்*** - வெண்ணிறமுடைய பாற்கடல் வற்றுமாறு எளிதாக சில நாட்களில் பருகினவர்கள்.

*பவளம் நிறைந்த தீவு பவளக்குன்று எனப்பட்டது வெள்ளி - அசுர குருவாகிய சுக்கிரன்.*

***9261. 'கந்தமாதனம் என்பது, இக் கருங் கடற்கு அப் பால்***
***மந்தமாருதம் ஊர்வது ஓர் கிரி; அதில் வாழ்வோர்,***
***அந்த காலத்து அவ் ஆலகாலத்துடன் பிறந்தோர்;***
***இந்த வாள் எயிற்று அரக்கர் எண்***
***இறந்தவர் - இறைவ!***

***இறைவ! இந்த வாள் எயிற்று அரக்கர்*** - அரசே! இந்த வாள் போன்ற கோரைப் பல்லினை உடைய அரக்கர்கள்; ***இக்கருங்கடற்கு அப்பால் மந்த மாருதம் ஊர்வது*** - இந்தக் கரிய கடலுக்கு அப்புறத்தே தென்றல் தவழ்கின்ற; ***கந்த மாதனம் என்பது ஓர் கிரி அதில் வாழ்வோர்*** - கந்த மாதனம் என்பதோர் மலை, அம்மலையில் வாழ்பவராவார்; அந்த காலத்து அவ்ஆல காலத்துடன் பிறந்தோர் எண்ணிறந்தவர் - (பாற்கடல் கடையப் பெற்ற) அந்தக் காலத்து ஆலகாலத்தோடு உடன் பிறந்தவர் என்று சொல்லத் தக்கவர் எண்ணிக்கை இல்லாதவர்.

***9262. 'மலயம் என்பது பொதிய மாமலை; அதில் மறவோர்***
***நிலயம் அன்னது சாகரத் தீவிடை நிற்கும்;***
***''குலையும் இவ் உலகு'' எனக் கொண்டு, நான்முகன்***
***கூறி,***
***''உலைவிலீர்! இதில் உறையும்'' என்று இரந்திட,***
***உறைந்தார்.***

***மலையம் என்பது பொதியமாமலை*** - மலையம் என்பது பொதிய மாமலையாகும்; ***அதில் மறவோர் நிலையம் அன்னது சாகரத் தீவிடை நிற்கும்*** - அதில் பிறந்த வீரராகிய இவர் இருப்பிடம் கடலில் உள்ள தீவில் இருக்கின்றது; 'இவ்உலகு குலையும்' எனக் கொண்டு - (இவர்கள் இங்கிருந்தால்) இந்த உலகமே அழியும்' என்று நினைந்து; உலைவிலீர்! இதில் உறையும் என்று நான்முகன் கூறி இரந்திட உறைந்தார் -

*'அழிவில்லாதவர்களே! இதில் தங்கி இருங்கள்' என்று கூறிப் பிரமன் இரந்து வேண்டியதனால் அத்தீவில் தங்கி இருந்தனர்.*

***9263. 'முக்கரக் கையர்; மூ இலை வேலினர்; முசுண்டி***
***சக்கரத்தினர்; சாபத்தர்; இந்திரன் தலைவர்;***
***நக்கரக் கடல் நால் ஒரு மூன்றுக்கும் நாதர்;***
***புக்கரப் பெருந் தீவிடை உறைபவர் - புகழோய்!***

***புகழோய்! முக்கரக் கையர் மூஇலை வேலினர்*** *- புகழினோய் (இவர்கள்) மூன்று கைகளை உடையவர்கள் (அவற்றில்) மூன்று இலைகளை உடைய வேலினை உடையவர்கள்;* ***முசுண்டி சக்கரத்தினர்; சாபத்தர்; இந்திரன் தலைவர்*** *- முசுண்டி என்னும் ஆயுதத்துடன் சக்கரத்தை உடையவர்கள், வில்லை ஏந்தியவர்கள், இந்திரனுக்கும் மேலான தகுதி உடையவர்கள்;* ***நக்கரக் கடல் நால் ஒரு மூன்றுக்கும் நாதர்*** *- முதலைகள் வாழுகின்ற ஏழு கடல்களுக்கும் இறைமை பூண்டவர்கள்;* ***புக்கரப் பெருந்தீவிடை உறைபவர்*** *- (இத்தகைய சிறப்பினரான இவர்கள்) புட்கரம் என்னும் பெரும் தீவிடை வாழ்பவராவர்.*

*கரக்கை - மீமிசைச்சொல். முசுண்டி - ஒருவகை ஆயுதம். சாபம் - வில். நக்கரம் - முதலை 'புட்கரம்' என்ற சொல் எதுகை நோக்கி 'புக்கரம்' என நின்றது.*

***9264. 'மறலியை, பண்டு, தம் பெருந் தாய் சொல, வலியால்,***
***புற நிலைப் பெருஞ் சக்கர மால் வரைப் பொருப்பின்,***
***விறல் கெடச் சிறையிட்டு, அயன் இரந்திட, விட்டோர்;***
***இறலி அப் பெருந் தீவிடை உறைபவர் - இவர்கள்.***

***இவர்கள் இறலி அப்பெருந் தீவிடை உறைபவர்*** *- இவர்கள் இறலி என்கின்ற அந்தப் பெரிய தீவில் வாழ்பவர்கள்;* ***பண்டு பெருந்தாய் சொல தம் வலியால் மறலியை*** *- முன்பு (தம்) பெருமையுடைய தாய் சொல்லத்தமது வலிமையினால் எமனை;* ***புறநிலைப் பெருஞ்சக்கர மால்வரைப் பொருப்பின்*** *- (ஏழுலகங்கட்கும்) புறத்தே நிலைத்துள்ள பெரிய சக்கரவாளம் என்கின்ற பெரிய மலையில்;* ***விறல் கெடச் சிறையிட்டு அயன் இரந்திட விட்டோர்*** *- அவனுடைய வலிமை கெட வென்று சிறைவைத்துப் பின்பு பிரமன் இரந்து வேண்டியதால் அவனை விடுத்தவர்கள்;*

*இறலி - இத்தி என்றும் மருதமரம் என்றும் கூறுவர். சக்கரவாளகிரி மணி. 6. 355 உரைக்குறிப்புக் காண்க.*

***9265. 'வேதாளக் கரத்து இவர், ''பண்டு புவியிடம் விரிவு***
***போதாது உம்தமக்கு; எழு வகையாய் நின்ற புவனம்,***
***பாதாளத்து உறைவீர்'' என, நான்முகன் பணிப்ப,***
***நாதா! புக்கு இருந்து, உனக்கு அன்பினால், இவண்***
***நடந்தார்.***

***நாதா! வேதாளக் கரத்து இவர்*** - *தலைவனே! வேதாளத்தின் கையைப் போன்ற கையை உடைய இவர்கள்;* ***நான்முகன் 'பண்டு உம் தமக்கு புவியிடம் விரிவு போதாது*** *- நான்முகனாகிய பிரமன் முற்காலத்து, ''உமக்கு இந்நிலவுலகத்தின் பரப்பு விரிவு போதாது ஆதலால்;* ***எழுவகையாய் நின்ற புவனம் பாதாளத்து உறைவீர் எனப் பணிப்ப*** *- ஏழு வகையாக நின்ற புவனங்களில் பாதாளத்தில் தங்குவீர்களாக'' எனக் கட்டளை இட;* ***புக்கு இருந்து, உனக்கு அன்பினால் இவன் நடந்தார்*** *- அங்கு சென்று வாழ்ந்திருந்து உன்பால் கொண்ட அன்பால் இங்கு வந்தவர்களாவர்.*

*வேதாளம் - பேய் எனினுமாம். ''வேதாளம் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே'' (நல்வழி - 23)*

***9266. 'நிருதி தன் குலப் புதல்வர்; நின் குலத்துக்கு நேர்வர்;***
***''பருதி தேவர்கட்கு'' எனத் தக்க பண்பினர்; பானக்***
***குருதி பெற்றிலரேல், கடல் ஏழையும் குடிப்பார்;***
***இருள் நிறத்தவர்; ஒருத்தர் ஏழ் மலையையும்***
***எடுப்பார்.***

***இருள் நிறத்தவர் நிருதி தன்குலப் புதல்வர்*** *- இருள் போன்ற நிறத்தினை உடைய இவர் நிருதி என்னும் திசைக்காவலனது குலப் புதல்வர்கள்;* ***நின் குலத்துக்கு நேர்வர்*** *- (தகுதிகளில்) நின் குலத்துக்கு ஒப்பானவர்கள்;* ***''தேவர்கட்குப் பருதி'' எனத் தக்க பண்பினர்*** *- 'தேவர்கட்குச் சூரியன்' என்னத் தக்க பண்புடையவர்கள்;* ***பானக் குருதி பெற்றிலரேல் கடல் ஏழையும் குடிப்பர்*** *- பருகுவதற்கு உரிய உதிரம் பெறாமற் போவாரே ஆயின் ஏழு கடல்களையும் பருகிவிடக் கூடியவர்;* ***ஒருத்தர் ஏழ் லையையும் எடுப்பர்*** *- ஒருவரே ஏழு மலைகளையும் எடுக்கத் தக்க மிடுக்குடையவர்.*

*நிருதி - தென்மேற்குத் திசையின் காவலனாம். இவன் மனைவி தீர்க்காதேவியின் வயிற்றுப்பிறந்த மக்கள் இப்படையினராம். வீரம், தவம் முதலான தகுதிகளில் இராவணன் குலத்துக்கு ஒப்பானவர் என்பதாம். தேவர்களில் பருதி சிறந்திருத்தல் போல அரக்கரில் இவர் சிறந்தவர். நிருதி பெண் மகள் என்றலும் ஒரு கருத்து. ''இந்திரன் கலையா யென் மருங்கிருந்தான், அக்கினி உதிரம் விட்டகலான். எமனெனைக் கருதா னரனெனக் கருதி, நிருதி வந்தென்னையென் செய்வாள்; அந்தமாம் வருணனிருகண் விட்டகலான்'' (தனிப்பா) என்றவிடத்துக் காண்க.*

*9267. 'பார் அணைத்த வெம் பன்றியை அன்பினால் பார்த்த*
*காரணத்தின், ஆதியின் பயந்த பைங் கழலோர்;*
*பூரணத் தடந் திசைதொறும் இந்திரன் புலரா*
*வாணத்தினை நிறுத்தியே, சூடினர் வாகை.*

***பார் அணைத்த வெம் பன்றியை*** *- பூமிதேவி, தன்னை அணைத்தெடுத்த வராக மூர்த்தியை;* ***அன்பினால் பார்த்த காரணத்தின்*** *- அன்பினால் பார்த்த காரணத்தினால்;* ***ஆதியின் பயந்த பைங்கழலோர்*** *- திருமாலாற் பெறப்பட்ட பசிய பொன்னால் செய்யப்பட்ட வீரக்கழலை உடையவர்கள்;* ***பூரணத் தடந்திசை தொறும்*** *- முழுமையான பெருந்திசைகள் தோறும்;* ***புலராவாரணத்தினை நிறுத்தியே இந்திரன் வாகை சூடினர்*** *- மதம் வற்றாத தம்முடைய யானைகளை (வென்றதற்கு அடையாளமாக) நிறுத்தி இந்திரனை வென்ற வெற்றி மாலையைச் சூடினர்.*

*இந்திரனை வென்றமைக்கு அறிகுறியாக திசையானைகளை விலக்கித் தமது யானைகளை அவ்விடத்தில் நிறுத்தினர் என்பது கருத்து. ஒன்றார் இகல் அற நூறித்தன் மதவாரணந், திசைதொறு நிறுவிய - சீயகங்கன்" என்றதும் காண்க.*

*9268. 'மறக் கண் வெஞ் சின மலை என இந் நின்ற*
*வயவர்,*
*இறக்கம் கீழ் இலாப் பாதலத்து உறைகின்ற*
*இகலோர்;*
*அறக் கண் துஞ்சிலன், ஆயிரம் பணந் தலை*
*அனந்தன்,*
*உறக்கம் தீர்ந்தனன், உறைகின்றது, இவர் தொடர்ந்து*
*ஒறுக்க.*

***மறக்கண் வெஞ்சின மலை என இந்நின்ற வயவர்*** *- கொடுங் கண்ணையும் கடும் சினத்தையும் உடைய மலை போல இங்கு நின்ற வீரர்கள்;* ***இறக்கம் கீழ் இலாப் பாதலத்து உறைகின்ற இகலோர்*** *- (தன்னினும்) இறக்கமுடைய கீழிடம் இல்லாத, பாதலத்தில் வாழ்கின்ற வலிமையுடையோராவர்;* ***ஆயிரம் பணந்தலை அனந்தன் அறக்கண் துஞ்சிலன்*** *- ஆயிரம் படத்தோடு கூடிய தலைகளை உடைய ஆதிசேடன் முழுவதும் கண் துஞ்சாமல்;* ***உறக்கம் தீர்ந்தனன். உறைகின்றது, இவர் தொடர்ந்து ஒறுக்க*** *- உறக்கம் நீங்கினவனாய்த் தங்கி இருப்பது இவ்வீரர் அவனைத் தொடர்ந்து வருத்துதலாலேயாம்.*

*9269. 'காளியைப் பண்டு கண்ணுதல் காட்டியகாலை,*
*மூள முற்றிய சினக் கடுந் தீயிடை முளைத்தோர்;*
*கூளிகட்கு நல் உடன்பிறந்தார்; - பெருங் குழுவாய்*

***வாள் இமைக்கவும், வாள் எயிறு இமைக்கவும்,***
***வருவார்.***

***பெருங்குழுவாய் வாள் இமைக்கவும், வாள் எயிறு இமைக்கவும் வருவார்*** - *பெருங் கூட்டமாக, வாள் ஒளி வீசவும், வாள் போன்ற பற்கள் ஒளி வீசவும் வருகின்றவர்களாகிய இவர்கள்;* ***கண்ணுதல் பண்டு காளியைக் காட்டிய காலை*** - *நெற்றிக்கண்ணை உடைய இவன் முற்காலத்தில் காளியை வெல்ல ஊர்த்துவ தாண்டவம் செய்து காட்டிய காலத்தில்;* ***மூள முற்றிய சினக்கடுந் தீயிடை முளைத்தோர்*** - *(அந்தக் காளியின்) மூளுமாறு முதிர்ந்த சினமாகிய கடுமையான நெருப்பில் தோன்றியவர்கள்;* ***கூளிகட்கு நல்உடன் பிறந்தார்*** - *பேய்கட்கு நல்ல உடன்பிறப்புப் போன்றவர்கள்.*

*காளியை நடனத்தில் வெல்லச் சிவன் ஒரு காலைத் தலையில் தூக்கி ஊர்த்துவ தாண்டவம் புரியக் காளி அங்ஙனம் செய்து காட்டி வெல்ல முடியாமையால் நாணிச் சினங்கொள்ள, அச்சினத்தீயில் தோன்றியவர்கள்.*

*9270.* ***'பாவம் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்;***
***தீவம் தோன்றிய முழைத் துணை எனத்***
***தறுகண்ணார்;***
***கோவம் தோன்றிடின், தாயையும் உயிர் உணும்***
***கொடியோர்;-***
***சாவம் தோன்றிட, வட திசைமேல் வந்து சார்வார்.***

***சாவம் தோன்றிட வட திசை மேல் வந்து சார்வார்*** - *வில் கையில் தோன்றிட வடதிசைமேல் வந்து தோன்றுகின்ற இவர்கள்;* ***பாவம் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்*** - *பாவம் தோன்றிய காலத்திலே தோன்றிய பழையவர்;* ***தீவம் தோன்றிய துணை முழை எனத் தறு கண்ணார்*** - *விளக்கு மிளிர்கின்ற இரண்டு குகைகளென்று சொல்லுமாறு (தோன்றி) பயம் விளைக்கின்ற விழிகளுடன் கூடியவர்கள்;* ***கோவம் தோன்றிடின் தாயையும் உயிர் உணும் கொடியோர்*** - *கோபம் வந்தால் தாயையும் உயிர் உண்கின்ற கொடியவர்கள் ஆவர்.*

*கண்ணோட்டமற்ற கோபமுடையவர் என்பதனைக் குறிக்க "தாயையும் உயிருணும் கொடியார்" எனக் கூறினார்.*

*9271.* ***'சீற்றம் ஆகிய ஐம்முகன், உலகு எலாம் தீப்பான்,***
***ஏற்ற மா நுதல் விழியிடைத் தோன்றினர், இவரால்;***
***கூற்றம் ஆகிய கொம்பின் ஐம்பாலுடை, கொடுமைக்கு***
***ஊற்றம் ஆகி, பண்டு உதித்தனர் என்பவர், உவரால்.***

***இவர் சீற்றம் ஆகிய ஐம்முகன்*** - இவர்கள், சீற்றம் மிக்கவனாகிய ஐந்து முகங்களை உடைய சிவன்; **உலகு எலாம் தீப்பான் ஏற்றமாநுதல் விழியிடைத் தோன்றினர்** - உலகம் முழுவதையும் எரிக்கும்படி கொண்டுள்ள பெரிய நெற்றிக் கண்ணில் பிறந்தவர்கள்; **உவர், ஐம்பாலுடைக் கூற்றம் ஆகிய**

**கொம்பின்** - அதோ அங்கிருப்பவர் கூந்தலைக் கொண்ட யமன் என்று கூறத்தக்க ஓர் பெண்ணின், **கொடுமைக்கு ஊற்றம் ஆகி, பண்டு உதித்தனர் என்பவர்** - கொடுமைக்கு ஊன்றுகோலாக முற்காலத்தில் தோன்றியவர் எனப்படுவார்.

ஆல் - ஈரிடத்தும் அசை, சிவபிரான் சங்காரத் தொழில் முதலிரண்டடிகளில் குறிக்கப் பெறுகின்றது. அங்ஙனம் அழிவு செய்யுங் காலத்து அவ்விழியினின்றும் தோன்றியவர் என்பதாம். ஈசனின் ஐந்து முகங்களாவன, 1. ஈசானம், 2. தற்புருடம், 3. அகோரம், 4. வாமதேவம், 5. சத்யோசாதம் என்பனவாம். ஐம்பால் - கூந்தல். இவர்களை ஆதியில் பெற்ற தாய் கூற்றுப் போன்ற கொடுமையுடையளாய் இருந்தாள் என்பதனை இங்ஙனம் குறித்தார். கொம்பு - உவமையாகு பெயராய்ப் பெண்ணைக் குறித்தது.

***9272. 'காலன் மார்பிடைச் சிவன் கழல் பட, பண்டு கான்ற***
***வேலை ஏழ் அன்ன குருதியில் தோன்றிய வீரர்,***
***சூலம் ஏந்தி முன் நின்றவர்; இந் நின்ற தொகையார்,***
***ஆலகாலத்தில், அமிழ்தின், முன் பிறந்த போர்***
***அரக்கர்.***

**சூலம் ஏந்தி முன் நின்றவர்** - சூலம் ஏந்திக்கொண்டு நம்முன் நின்ற இவர்; **காலன் மார்பிடைச் சிவன் கழல் பட** - எமனுடைய மார்பில் சிவனது திருவடி படுதலால்; **பண்டு கான்ற வேலை ஏழ் அன்ன குருதியில் தோன்றிய வீரர்** - முன்பு அவனது உடம்பிலிருந்து வெளிப்பட்ட இரத்தத்தில் தோன்றிய வீரர் ஆவார். **இந்நின்ற தொகையார் ஆலகாலத்தின் அமிழ்தின் முன் பிறந்தபோர் அரக்கர்** - இங்கு நின்ற குழுவினர் ஆலகாலத்தில் அமிழ்திற்கு முன்னாகப் பிறந்த போர்த்திறன் மிக்க அரக்கராவார்.

காலன் - உரிய காலத்தில் உயிர்களைக் கவர்ந்து செல்லும் யமன். "காலனும் காலம் பார்க்கும்" (புறநா - 41) என்பது காண்க. மார்கண்டேயனுக்காக சிவபெருமான் காலாலுதையுண்ட யமன் கக்கிய இரத்தத்தினின்றும் தோன்றியவர். 'சூலம் ஏந்தி முன்னின்றவர்' என்றும், தொகையாக நின்றோர் பாற்கடல் கடைந்த காலத்து முன்பு தோன்றி வந்த ஆலகால விடத்தில் அமிழ்துக்கு முன்பு தோன்றியவர்' என்றும் கூறப்பட்டது.

***9273. 'வடவைத் தீயினை, வாசுகி கான்ற மாக் கடுவை***

***இட, அத் தீயிடை எழுந்தவர், இவர்; இன மழையைத்***

***தடவ, தீ நிகர் குஞ்சியர் இவர்; உவர், தனித் தேர்***
***கடவ, தீந்த வெம் புரத்திடைத் தோன்றிய கழலோர்.***

***இவர் வாசுகி கான்ற மாக்கடுவை*** - *இவர்கள் (பாற்கடல் கடைந்தபொழுது) வாசுகி என்னும் அரவம் கக்கிய கொடிய நஞ்சினை;* ***வடவைத் தீயினை இட, அத்தீயிடை எழுந்தவர்*** - *வடவா முகாக்கினியில் இட அத்தீயிடத்துத் தோன்றியவர்;* ***இவர் இன மழையைத் தடவ தீநிகர் குஞ்சியர்*** - *இவர்கள் தொகுதியான மேகத்தைத் தடவா நிற்கும் தீப்போலும் சிவந்த குஞ்சியை உடையவராய்ப் பருத்துள்ளவர்கள்;* ***உவர், தனித்தேர் கடவ, தீந்த வெம்புரத்திடைத் தோன்றிய கழலோர்*** - *அதோ நிற்கின்ற அவர்கள் (பிரமனால் செலுத்தப் பெற்ற) ஒப்பற்ற தேரினை செலுத்தியதினால் வெந்த முப்புரங்களினிடையில் தோன்றிய கழலணிந்த வீரர்களாவர்.*

*வடவைத்தீ - பெண் குதிரையின் முகத்துடன் கடலின் கண் மறைந்து நின்று ஊழிக்காலத்து வெளிப்பட்டு உலகினை அழிக்கும் மாபெருந்தீ. அத்தீயில் கடல் கடைந்த காலத்து வாசுகி என்ற அரவங் கக்கிய ஆலகால விடம் படப் பிறந்தவர்களும், வானளாவிய நெடிய தோற்றத்தையும் சிவந்த தலைமுடியினையும் உடையவரும், பிரமனால் செலுத்தப் பெற்ற ஒப்பற்ற தேரிலிருந்து இறைவனால் அழிக்கப்பெற்ற முப்புரங்களின் அழிவினின்றும் தோன்றியவர்களுமாகிய அரக்கர்கள் இங்கு கூறப்பெற்றனர்.*

***9274. 'இனையர் இன்னவர் என்பது ஓர் அளவு***
***இலர் - ஐய !-***
***நினையவும், குறித்து உரைக்கவும், அரிது; இவர்***
***நிறைந்த***
***வினையமும் பெரு வரங்களும் தவங்களும் விளம்பின்,***
***அனைய பேர் உகம் ஆயிரத்து அளவினும் அடங்கா.***

***ஐய! இனையர் இன்னவர் என்பது ஓர் அளவு இலர்*** - *ஐயனே! இவர் இத்தன்மையர் என்று தனித்தனியே சொல்லுதற்குரிய சிறிய அளவினர் அல்லர்;* ***நினையவும், குறித்து உரைக்கவும் அரிது*** - *இவர்கள் தன்மை நினைப்பதற்கும், குறித்துச் சொல்லுதற்கும் அரிது;* ***இவர் நிறைந்த வினையமும் பெரு வரங்களும் தவங்களும் விளம்பின்*** - *இவர் தம் நிறைந்த வஞ்சகங்களும், பெற்ற வரங்களும் அவ்வரங்களைப் பெற இவர் செய்த தவங்களும் சொல்லத் தொடங்கின்;* ***அனைய பேருகம் ஆயிரத்து அளவினும் அடங்கா*** - *அத்தன்மையான பெரிய ஊழிகள் ஆயிரத்தினும் அடங்காவாம்.*

*வினையம் - வஞ்சகம். அனைய என்பது நெஞ்சறி சுட்டாய் மிகப்பல ஆண்டுகளை விளக்கின.*

*9275. 'ஒருவரே சென்று, அவ் உறு திறல் குரங்கையும், உரவோர்*
*இருவர் என்றவர்தம்மையும், ஒரு கையோடு எற்றி,*
*வருவர்; மற்று இனிப் பகர்வது என்? - வானவர்க்கு அரிய*
*திருவ!' என்றனர், தூதுவர். இராவணன் செப்பும்:*

***வானவர்க்கு அரிய திருவ !*** *- தேவர்கட்கும் பெறுதற்கரிய பெருஞ்செல்வத்தைப் பெற்றவனே!* ***ஒருவரே சென்று அவ் உறு திறல் குரங்கையும்*** *- இப்படையில் உள்ள ஒருவரே சென்று அந்த மிக்க திறமையுடைய குரங்கையும்;* ***உரவோர் இருவர் என்றவர் தம்மையும்*** *- வலியவர் இருவர் என்ற இராம இலக்குவர் தம்மையும்;* ***ஒரு கையோடு ஏற்றி வருவர்*** *- ஒரு கையினால் தாக்கி அழித்து வருவர்;* ***மற்று இனிப் பகர்வது என்? என்றனர், தூதுவர். இராவணன் செப்பும்*** *- வேறு இனிச் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? என்று தூதுவர் சொல்லக் கேட்ட இராவணன் சொல்லுவான்.*

*குரங்கு - இங்கு அனுமனைக் குறித்தது. உரவோர் - வலியவர். செப்பும் - செய்யும் என்னும் முற்று ஆண்பாற்கண் வந்தது.*

*9276. 'எத் திறத்து இதற்கு எண் எனத் தொகை வகுத்து, இயன்ற*
*அத் திறத்தினை அறைதிர்' என்று உரைசெய, அவர்கள்,*
*'ஒத்த வெள்ளம் ஓர் ஆயிரம் உளது' என உரைத்தார்,*
*பித்தர்; இப் படைக்கு 'எண் சிறிது' என்றனர், பெயர்ந்தார்.*

***இதற்கு எண் எத்திறத்து எனத்தொகை வகுத்து இயன்ற*** *- இப்படைக்கு எண்ணிக்கை எனைத்து என்று தொகையை வகுத்துப் பொருந்திய;* ***அத்திறத்தினை அறைதிர்' என்று உரை செய*** *- அந்த வகையினைக் கூறுங்கள்' என்று இராவணன் கேட்க;* ***அவர்கள், ஒத்த வெள்ளம் ஓர் ஆயிரம் உளது' என உரைத்தார் பித்தர்*** *- அத்தூதுவர்கள் ஒத்த அளவினை உடைய வெள்ளம் ஓராயிரம் உளது' எனக் கூறினார்கள், அவர் பித்தராவார்;* ***இப்படைக்கு 'எண் சிறிது' என்றனர், பெயர்ந்தார்*** *- இப்படையின் அளவிற்கு 'அந்த எண் சிறிது' என்று கூறினராய்ச் சென்றார்கள்.*

***9277. 'படைப் பெருங் குலத் தலைவரைக் கொணருதிர், என்பால் -***
***கிடைத்து, நான் அவர்க்கு உற்றுள பொருள் எலாம் கிளத்தி,***
***அடைத்த நல் உரை விளம்பினென் அளவளாய், அமைவுற்று,***
***உடைத்த பூசனை வரன்முறை இயற்ற' என்று உரைத்தான்.***

***நான் கிடைத்து அவர்க்கு உற்றுள பொருள் எலாம் கிளத்தி*** *- (இராவணன் தூதுவரை நோக்கி) நான் அவர்களை நெருங்கி இருந்து இங்கு நிகழ்ந்துள்ள செய்திகள் எல்லாவற்றையும் விளக்கி;* ***அடைத்த நல் உரை விளம்பினென் அளவளாய், அமைவுற்று*** *- (என மனத்தே) பொருந்திய நல்ல இனிய சொற்களைச் சொல்லி அளவளாவி மனம் நிறைவுற்று;* ***உடைத்த பூசனை வரன் முறை இயற்ற படைப்பெருங்குலத் தலைவரை*** *- அவர்களுக்கு உரித்தான பூசனையை வரன் முறையாகச் செய்யப் படையிலுள்ள பெருஞ் சிறப்புடைய தலைவர்களை;* ***கொணருதிர், என்பால் என்று உரைத்தான்*** *- என்னிடம் கொணர்வீர்களாக என்று சொன்னான்.*

*குலம் - சிறப்பு, கிடைத்தல் - நெருங்குதல் "விடைத்தனி யேறன்னானோர் விடலையோர் வேற்கணாள் முன் கிடைத்து" (திருவிளை - திருமிக்கு - 42) உற்றுள பொருள் என்றது, இதுவரை போரில் நிகழ்ந்தனவற்றை. அளவளாவுதல் - ஒருவர்க்கொருவர் மனம் விட்டுப் பேசுதல். பூசனை என்றது வீரர்க்கு அளிக்கும் பெருஞ்சோறு முதலானவற்றை.*

***9278. தூதர் கூறிட, திசைதொறும் திசைதொறும் தொடர்ந்தார்,***
***ஓத வேலையின் நாயகர் எவரும் வந்து உற்றார்;***
***போது தூவினர், வணங்கினர், இராவணன் பொலன் தாள்***
***மோதும் மோலியின் பேர் ஒலி வானினை முட்ட.***

***தூதர் கூறிட ஓத வேலையின் நாயகர் எவரும்*** *- தூதுவர் இராவணன் ஆணையைக் கூறவும் பெருக்கெடுத்த கடல்போற் பரந்த சேனைத் தலைவர் எல்லோரும்;* ***திசைதொறும் திசைதொறும் தொடர்ந்தார் வந்து உற்றார்*** *- திக்குகளிலெல்லாமிருந்து அணி வகுத்து வந்தவராய்;* ***இராவணன் பொலன்தாள் போது தூவினர்*** *- இராவணனுடைய அழகிய பாதங்களில் மலர் தூவினவராய்;* ***மோதும் மோலியின் பேர் ஒலி வானினை முட்ட வணங்கினர்*** *- மகுடத்தோடு மகுடம் மோதுவதால் உளதாய பெரிய ஒலிவானை முட்டுமாறு ஒருவர்க்கு ஒருவர் முற்பட்டு வணங்கினர்.*

*ஓதம் - நீர்ப்பெருக்கு, "திரைய வீங்கோதம் தந்து" (சிலம் கானல் வரி - சார்த்துவரி) 'போது' - மலரும் பருவத்தரும்பு 'காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி' (குறள் - 1227)*

***9279. அனையர் யாவரும் அருகு சென்று, அடி முறை வணங்கி,***
***வினையம் மேவினர், இனிதின் அங்கு இருந்தது ஓர் வேலை,***
***'நினையும் நல் வரவு ஆக, நும் வரவு!' என நிரம்பி,***
***'மனையும் மக்களும் வலியரே?' என்றனன், மறவோன்.***

***அனையர் யாவரும் அருகு சென்று அடிமுறை வணங்கி*** - *(அவ்வாறு) அப்படைத்தலைவர் யாவரும் இராவணன் அருகிற் சென்று அவனடிகளை முறையாக வணங்கி;* ***வினையம் மேவினர் இனிதின் அங்கு இருந்தது ஓர் வேலை*** - *பணிவு பொருந்தினவராய் இனிதாக அங்கு இருந்தபோது;* ***மறவோன், நும் வரவு நினையும் நல்வரவு ஆக! என நிரம்பி*** - *பெருவீரனாகிய இராவணன் (அவர்களை நோக்கி) நும் வரவு யான் நினைக்கின்றபடி நல்வரவு ஆவதாக! என்று வரவேற்புச் செய்து முடித்து;* ***'மனையும் மக்களும் வலியரே?' என்றனன்*** - *'நும் மனைவியும் மக்களும் மெலிவின்றி வலியராக இருக்கின்றனரோ' என நலம் உசாவினான். வினையம் - பணிவு. நினையும் நல்வரவாவது - இராம இலக்குவரை வென்றழித்தலாம். வலியரே? என்றது நலமாக உள்ளனரோ? என வினவியவாறாம்.*

***9280. 'பெரிய திண் புயன் நீ உளை; தவ வரம் பெரிதால்;***
***உரிய வேண்டிய பொருள் எலாம் முடிப்பதற்கு ஒன்றோ?***
***இரியல் தேவரைக் கண்டனம்; பகை பிறிது இல்லை;***
***அரியது என் எமக்கு?' என்றனர், அவன் கருத்து அறிவார்.***

***அவன் கருத்து அறிவார்*** - *அவ்விராவணனது கருத்தை அறியும் நோக்கத்தினராய் (படைத்தலைவர் இராவணனை நோக்கி);* ***பெரிய திண்புயன் நீ உளை தவ வரம் பெரிதால்*** - *பெரிய வலிமையான தோள்களை உடைய தலைவன் நீ இருக்கின்றாய்; யாங்கள் தவத்தினால் பெற்றுள்ள வரமும் மிகப்பெரிது;* ***உரிய வேண்டிய பொருள் எலாம் முடிப்பதற்கு ஒன்றோ*** - *நமக்கு உரியனவாய் வேண்டியுள்ள காரியங்களை யெல்லாம் முடிப்பதற்கு அரிதோ?* ***தேவரை இரியல் கண்டனம் பகை பிறிது இல்லை*** - *தேவரைத் தோற்றோடச் செய்து விட்டோம்; வேறு பகையும் இல்லை;* ***அரியது என் எமக்கு என்றனர்*** - *எமக்குச் செய்தற்கரியது என் உளது என்றனர்.*

*உளை - முன்னிலை ஒருமை வினைமுற்று. ஒன்றோ? என்பது 'ஒரு பொருட்டோ?' என்னும் பொருளது.*

***9281. 'மாதரார்களும் மைந்தரும் நின் மருங்கு இருந்தார்***
***பேது உறாதவர் இல்லை; நீ வருந்தினை, பெரிதும்;***
***யாது காரணம்? அருள்' என, அனையவர்***
***இசைத்தார்;***
***சீதை காதலின் புகுந்துள பரிசு எலாம் தெரித்தான்.***

***நின் மருங்கு இருந்தார் மாதரார்களும் மைந்தரும்*** *- நின்பக்கத்து இருந்தவர்களாகிய பெண்டிர் பிள்ளைகளில்;* ***பேது உறாதவர் இல்லை நீ பெரிதும் வருந்தினை*** *- கலக்கமுறாதவர்கள் இல்லை நீ பெரிதும் வருந்திக் கொண்டிருக்கின்றாய்;* ***யாது காரணம்? அருள்'' என அனையவர் இசைத்தார்*** *- யாது காரணம்? அருள் செய்க' என அப்படைத் தலைவர் வினவினார்;* ***சீதை காதலின் புகுந்துள பரிசு எலாம் தெரித்தான்*** *- (இராவணன்) சீதை மேல் வைத்த காதலால் உண்டான தன்மைகள் எல்லாவற்றையும் அவர்கட்குத் தெரிவித்தான்.*

***9282. 'கும்பகன்னனோடு இந்திரசித்தையும், குலத்தின்***
***வெம்பு வெஞ் சினத்து அரக்கர்தம் குழுவையும்,***
***வென்றார்***
***அம்பினால், சிறு மனிதரே! நன்று, நம் ஆற்றல்!***
***நம்ப! சேனையும் வானரமே!' என நக்கார்.***

***நம்ப*** *- நமது தலைவனே! கும்பகர்ணனோடு இந்திரசித்தையும்;* ***குலத்தின் வெம்புவெஞ் சினத்து அரக்கர் தம் குழுவையும்*** *- நம் குலத்தில் பிறந்த மனம் வெதும்புகின்ற கொடிய கோபத்தையுடைய அரக்கர் தம் கூட்டத்தையும்;* ***அம்பினால் வென்றார் சிறு மனிதரே! சேனையும் வானரமே!*** *- அம்பினால் வென்றவர்கள் சிறிய மனிதர்களா? அவர் சேனையும் குரங்கா?* ***நம் ஆற்றல் நன்று! என நக்கார்*** *- நமது வலிமை நன்று! என்று படைத்தலைவர்கள் சிரித்தனர்.*

***9283. உலகைச் சேடன்தன் உச்சிநின்று எடுக்க அன்று,***
***ஓர் ஏழ்***
***மலையை வேரொடும் வாங்க அன்று, அங்கையால்***
***வாரி***
***அலைகொள் வேலையைக் குடிக்க அன்று,***

***அழைத்தது; மலரோடு***
***இலைகள் கோதும் அக் குரங்கின்மேல் ஏவக்கொல்,***
***எம்மை?'***

***எம்மை அழைத்தது*** - *(நீ) எம்மை இங்கு வரவழைத்தது;* ***உலகைச் சேடன்தன் உச்சி நின்று எடுக்க அன்று*** - *உலகத்தை ஆதிசேடனது உச்சியினின்றும் எடுப்பதற்கு அன்று;* ***ஓர் ஏழ் மலையை வேரொடும் வாங்க அன்று*** - *ஒப்பற்ற ஏழு குலமலை மகளை வேரோடும் பறிக்க அன்று;* ***அங்கையால் வாரி அலைகொள் வேலையைக் குடிக்க அன்று*** - *உள்ளங்கையால் அள்ளி அலைகளைக் கொண்ட கடலைக் குடிக்கவும் அன்று;* ***மலரோடு இலைகள் கோதும் அக்குரங்கின் மேல் ஏவக்கொல்?*** - *மலர்களோடு இலைகளைக் கோதித்தின்னுகின்ற அந்தச் சிறிய குரங்கின் மேல் ஏவுதற்குத்தானோ?*

***9284. என்ன, கை எறிந்து, இடி உரும்ஏறு என நக்கு,***
***மின்னும் வாள் எயிற்று அரக்கரை அம் கையால்***
***விலக்கி,***
***வன்னி என்பவன், புட்கரத் தீவுக்கு மன்னன்,***
***'அன்ன மானுடர் ஆர் வலியாவது' என்று***
***அறைந்தான்.***

***என்ன, கை எறிந்து, இடி உரும் ஏறு என நக்கு*** - *என்று கூறிக் கைதட்டி இடிக்கின்ற இடியேறு போலச் சிரித்த;* ***மின்னும் வாள் எயிற்று அரக்கரை அம்கையால் விலக்கி*** - *மின்னுகின்ற வெள்ளிய பல்லினையுடைய அரக்கர்களை (அவ்வாறு சிரிக்காமல் இருக்கும்படி) தன் அகங்கையால் அமைத்து, விலக்கி விட்டு;* ***புட்கரத்தீவுக்கு மன்னன் வன்னி என்பவன்*** - *புட்கரம் என்னும் தீவினுக்கு அரசனாகிய வன்னி என்பவன்;* ***அன்ன மானுடர் ஆர்? வலி யாது? என்று அறைந்தான்*** - *அந்த மனிதர்கள் யார்? அவரது வலிமை எத்தகையது? என்று (இராவணனை நோக்கிக்) கேட்டான்.*

*மனிதர்களையும், குரங்குகளையும், அற்பமாக மதித்துச் சிரித்த படைத்தலைவர்களின் ஏளன நகையை கையமர்த்தி அடக்கிய புட்கரத் தீவின் மன்னனாகிய வன்னி கும்பகன்னனையும் இந்திரசித்துவையும் வென்றழித்தவர் சாதாரணவராக இருக்கமுடியாது என்ற கருத்தினால் அம்மனிதர் யார்? அவர் வலிமை யாது? என வினவினான் என்க.*

*மாலியவான் மனிதர் வலிமையை உரைத்தல்*

***9285. மற்று அவ் வாசகம் கேட்டலும், மாலியவான் வந்து,***
***'உற்ற தன்மையும், மனிதரது ஊற்றமும், உடன் ஆம்***

***கொற்ற வானரத் தலைவர்தம் தகைமையும், கூறக்***
***கிற்றும், கேட்டிரால்' என்றனன், கிளத்துவான்***
***துணிந்தான்:***

***மற்று அவ்வாசகம் கேட்டலும் மாலியவான் வந்து*** - *(வன்னி கூறிய) அச்சொல்லைக் கேட்டவுடனே மாலியவான் முன்வந்து;* ***உற்ற தன்மையும், மனிதரது ஊற்றமும்*** - *இது காறும் நடந்துள்ள வற்றின் தன்மையையும், மனிதர்களின் வலிமையையும்;* ***உடன் ஆம் கொற்ற வானரத் தலைவர் தம் தகைமையும்*** - *அம்மனிதரோடு வந்துள்ள வெற்றி பொருந்திய வானரத் தலைவர் தம் பெருமையையும்;* ***கூறக்கிற்றும் கேட்டிரால் என்றனன் கிளத்துவான் துணிந்தான்*** - *சொல்லும் வல்லமையுடையேம், கேட்பீர்களாக என்று சொல்லத் துணிந்தான்.*

*ஊற்றம் - வலிமை, கொற்றம் - வெற்றி கிற்றும் - ஆற்றலுடையேம் வலிமையுடையேம் கில் - ஆற்றலுணர்த்தும் இடைச்சொல். அதன் அடியாகப் பிறந்த 'கிற்றும்' என்பது தன்மைப் பன்மை வினைமுற்றாம். சொல்லுபவை இராவணனுக்குப் பிடிக்காதவையும், அவனது தோல்விகளுமாதலால் மாலியவான் சொல்லத் துணிந்தான்.*

***9286. 'பரிய தோளுடை விராதன், மாரீசனும் பட்டார்;***
***கரிய மால் வரை நிகர் கர தூடணர், கதிர் வேல்***
***திரிசிரா, அவர் திரைக்கடல் அன பெருஞ் சேனை,***
***ஒரு விலால், ஒரு நாழிகைப் பொழுதினின், உலந்தார்.***

***ஒருவிலால் பரிய தோளுடை விராதன், மாரீசனும் பட்டார்*** - *(இராமனுடைய) ஒரே வில்லினால் பருத்த தோள்களையுடைய விராதனும், மாரீசனும் இறந்து பட்டார்கள்;* ***கரிய மால்வரை நிகர் கரதுடணர், கதிர்வேல் திரிசிரா*** - *கரிய பெரிய மலையை ஒத்தவரான கரனும், தூடணனும், ஒளி பொருந்திய வேற்படையை உடைய திரிசிராவும்;* ***அவர் திரைக்கடல் அன பெருஞ்சேனை*** - *அவர்களுடைய அலைகடல் போன்ற பெருஞ்சேனையும்;* ***ஒரு நாழிகைப் பொழுதினின் உலந்தார்*** - *ஒரு நாழிகைப் பொழுதினில் அழிந்துபட்டார்கள்.*

*இராமனுடைய ஒரு வில்லால் விராதன், மாரீசன், கரன், தூடணன், திரிசிரா முதலானவர்களும் அரக்கர் பெரும் படையும் அழிந்தமை கூறப்பட்டது.*

***9287. 'ஆழி அன்ன நீர் அறிதிர் அன்றே, கடல் அனைத்தும்***
***ஊழிக் கால் எனக் கடப்பவன் வாலி என்போனை?***
***ஏழு குன்றமும் எடுக்குறும் மிடுக்கனை, இந் நாள்,***
***பாழி மார்புஅகம் பிளந்து, உயிர் குடித்தது, ஓர் பகழி.***

***ஆழி அன்னநீர் கடல் அனைத்தையும் ஊழிக்கால் எனக்*** *- கடலைப்போன்று பரவியுள்ள நீங்கள், கடல்கள் எல்லாவற்றையும் ஊழிக்காற்று போல விரைந்து;* ***கடப்பவன் வாலி என்போனை அறிதிர் அன்றே?*** *- கடந்து செல்பவனாகிய வாலி என்பவனை அறிவீரன்றோ?* ***எழு குன்றமும் எடுக்குறும் மிடுக்கனை*** *- ஏழு குல மலைகளையும் எடுக்கவல்ல மிடுக்கினை உடைய அவ்வாலியை;* ***இந்நாள் ஓர் பகழி பாழி மார்பு அகம் பிளந்தது உயிர் குடித்தது*** *- இந்நாளில் இராமனுடைய ஓர் அம்பு வலிமை மிக்க மார்பகத்தைப் பிளந்து உயிரைக் குடித்தது.*

*ஏழு மலைகளாவன, கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், கந்தமாதனம் என்பவை.*

***9288. 'இங்கு வந்து நீர் வினாயது என்? எறி திரைப் பரவை***
***அங்கு வெந்திலதோ? சிறிது அறிந்ததும் இலிரோ?***
***கங்கைசூடிதன் கடுஞ் சிலை ஒடித்த அக் காலம்,***
***உங்கள் வான் செவி புகுந்திலதோ, முழங்கு ஓதை?***

***நீர் இங்கு வந்து வினாயது என்*** *- நீர் (இரு மனிதரின் ஆற்றலைப்பற்றி) இங்கு வந்து வினவியது என்?* ***எறி திரைப் பரவை அங்கு வெந்திலதோ?*** *- இராமனுடைய அக்கினிக்கணையால் அலை வீசுங்கடல் அங்கு வேகவில்லையோ?* ***சிறிதும் அறிந்ததும் இலிரோ?*** *- அது இராமனால் நிகழ்ந்தது என்பதைச் சிறிதும் அறிந்ததும் இல்லீரோ?* ***கங்கை சூடிதன் கடுஞ்சிலை ஒடித்த அக்காலம்*** *- கங்கையைச் சடையில் கொண்டுள்ள சிவனது கடுமையான வில்லை (இராமன் சீதையை மணக்கும் பொருட்டு) ஒடித்த அக்காலத்து;* ***முழங்கு ஓதை உங்கள் வான் செவி புகுந்திலதோ?*** *- (அவ்வில் ஒடிந்ததாலாய) முழங்கும் பேரொலியானது உங்களது சிறந்த செவியில் புகுந்திலதோ?*

*கடல் வெந்தமை கண்டும், வில்லொடித்த ஓசையைக் கேட்டும் இவற்றிற்குக் காரணம் தெரிந்திருக்க வேண்டிய நீர் இங்கு வந்து வினவுவது என்? என்கின்றான் மாலியவான்.*

***9289. 'ஆயிரம் பெரு வெள்ளம் உண்டு, இலங்கையின் அளவில்,***
***தீயின் வெய்ய போர் அரக்கர்தம் சேனை; அச் சேனை***
***போயது, அந்தகன் புரம் புக நிறைந்தது போலாம்,***
***ஏயும் மும்மை நூல் மார்பினர் எய்த வில் இரண்டால்.***

***இலங்கையின் அளவில் தீயின் வெய்யபோர் அரக்கர் தம் சேனை*** - *இலங்கையின் எல்லையில் நெருப்பினும் கொடியவர்களாய்ப் போராற்றும் அரக்கர் தம் சேனை;* ***ஆயிரம் பெரு வெள்ளம் உண்டு அச்சேனை போயது*** - *ஆயிரம் பெருவெள்ளம் உண்டு அச்சேனை அழிந்துபோயது;* ***அந்தகன் புரம்புக நிறைந்தது போலாம்*** - *எமபுரத்தில் அது நிறைந்தது போலும்!* ***ஏயும் மும்மை நூல் மார்பினர் எய்தவில் இரண்டால்*** - *(இவ்வளவும் செய்தவை) முந்நூல் பொருந்திய மார்பினர் ஆகிய இராம இலக்குவர் எய்த வில் இரண்டே ஆம்.*

***9290. 'கொற்ற வெஞ் சிலைக் கும்பகன்னனும், நுங்கள் கோமான்***
***பெற்ற மைந்தரும், பிரகத்தன் முதலிய பிறரும்,***
***மற்றை வீரரும், இந்திரசித்தொடு மடிந்தார்;***
***இற்றை நாள் வரை, யானும் மற்று இவனுமே இருந்தேம்.***

***கொற்றை வெஞ்சிலைக் கும்பகன்னனும்*** - *வெற்றியே பெறுதற்குரிய கொடிய வில்லையேந்திய கும்பகன்னனும்;* ***நுங்கள் கோமான் பெற்ற மைந்தரும்*** - *நும் அரசனாகிய இராவணன் பெற்ற மைந்தரும்;* ***பிரகத்தன் முதலிய பிறரும்*** - *பிரகத்தன் முதலிய பிறரும்;* ***மற்றை வீரரும் இந்திரசித்தொடு மடிந்தார்*** - *மற்றைய வீரர்களும், இந்திரசித்தோடு மடிந்தார்கள்;* ***இற்றை நாள் வரை யானும் மற்று இவனுமே இருந்தேம்*** - *இன்று வரையில் யானும் இந்த இராவணனுமே மடியாதிருந்தோம்.*

***9291. 'மூலத் தானை என்று உண்டு; அது மும்மை நூறு அமைந்த***
***கூலச் சேனையின் வெள்ளம்; மற்று அதற்கு இன்று குறித்த***
***காலச் செய்கை நீர் வந்துளீர்; இனி, தக்க கழலோர்***
***சீலச் செய்கையும், கலிப் பெருஞ் சேனையும், தெரிக்கில்.***

***மூலத்தானை என்று உண்டு*** - *மூலபலப்படை என்ற ஒன்று உண்டு;* ***அது மும்மை நூறு அமைந்த கூலச்சேனையின் வெள்ளம்*** - *அது மூன்று நூறாக அமைந்த திரண்ட சேனையாகிய வெள்ளம்;* ***மற்று அதற்கு இன்று குறித்த காலச்செய்கை நீர் வந்துளீர்*** - *அப்படைக்கு இன்று போர் செய்யுமாறு குறிக்கப்பெற்ற காலத்தின் செயலால் (அதற்கு உதவியாக) நீவிர் வந்திருக்கின்றீர்கள்;* ***இனி, தக்க கழலோர் சீலச் செய்கையும்*** - *இனித்தகுதி அமைந்த கழல் களை அணிந்த வானரப் படைத்தலைவரின் ஒழுங்கமைந்த செய்கையையும்;* ***கவிப்பெருஞ்சேனையும் தெரிக்கில்*** - *மிகுந்த குரங்குப்படையின் தன்மையையும் கூற வேண்டின்.*

*முந்நூறு வெள்ளம் மூலத்தானை போர் செய்ய வேண்டிய நாள் இன்று ஆதலின் அத்தானைக்குத் துணையாக நீவிர் வந்துளீர் என்றவாறு. மும்மை நூறு - முந்நூறு கூலம் - திரட்சி. தக்க கழலோர் - வானரப் படைத்தலைவர். சீலம் - ஒழுங்கு. கவி - குரங்கு.*

***9292. 'ஒரு குரங்கு வந்து இலங்கையை மலங்கு எரியூட்டி,***
***திருகு வெஞ் சினத்து அக்கனை நிலத்தொடும்***
***தேய்த்து,***
***பொருது, தூது உரைத்து, ஏகியது, - அரக்கியர் புலம்ப,***
***கருது சேனையாம் கடலையும் கடலையும் கடந்து.***

***ஒரு குரங்கு வந்து இலங்கையை மலங்கு எரியூட்டி*** *- ஒரு குரங்கு வந்து இலங்கையைக் கலங்குதற்குக் காரணமான தீயை மூட்டி;* ***திருகு வெஞ்சினத்து அக்கனை நிலத்தொடும் தேய்த்து*** *- மாறுபட்ட சினத்தினை உடைய அக்க குமாரனையும் நிலத்தோடு தேய்த்துக் கொன்று;* ***பொருது, தூதுரைத்து அரக்கியர் புலம்ப*** *- போர் செய்து, தூது சொல்லி அரக்கியர் புலம்புமாறு;* ***கருது சேனையாம் கடலையும் கடலையும் கடந்து ஏகியது*** *- மதிக்கத்தக்க, சேனையாகிய கடலையும், பெரிய கடலையும் கடந்து சென்றது.*

*ஒரு குரங்கு - அனுமன். மலங்கு எரி - கலங்குதற்குக் காரணமாகிய தீ, அக்கன் - அக்ககுமாரன், இராவணன் மகன். குரங்குதானே என எள்ளிய படைத்தலைவர்க்கு அதன் வலிமை கூறினான்.*

***9293. 'கண்டிலீர்கொலாம், கடலினை மலை கொண்டு கட்டி,***
***மண்டு போர் செய, வானரர் இயற்றிய மார்க்கம்?***
***உண்டு வெள்ளம் ஓர் எழுபது; மருந்து ஒரு நொடியில்***
***கொண்டு வந்தது, மேருவுக்கு அப்புறம் குதித்து.***

***மண்டு போர் செய, கடலினை மலை கொண்டு கட்டி*** *- நெருங்கிப் போர் செய்யும் பொருட்டு கடலினை மலை கொண்டு அடைத்துக் கட்டி;* ***வானரர் இயற்றிய மார்க்கம் கண்டிலீர் கொலாம்*** *- (நீவிர் இகழ்ந்து கூறிய) குரங்குகள் ஏற்படுத்திய சேதுவாகிய வழியினைக் கண்டிலீரோ?* ***ஓர் எழுபது வெள்ளம் உண்டு*** *- பகைவரிடம் (இந்த வல்லமையுள்ள குரங்குகள் கொண்ட) ஓர் எழுபது வெள்ளம் சேனை உளது;* ***மேருவுக்கு அப்புறம் குதித்து மருந்து ஒரு நொடியில் கொண்டு வந்தது*** *- (அப்படையில் ஒரு குரங்கு) மேரு மலைக்கு அப்புறத்தே குதித்து ஒரு நொடிப் பொழுதில் (உயிரைத் தருகின்ற) மருந்தினைக் கொண்டு வந்தது.*

*மார்க்கம் - வழி. இங்கு சேதுவைக் குறித்தது, கொலாம் - கொல் ஐயம்.*

***9294. 'இது இயற்கை; ஓர் சீதை என்று இருந்தவத்து இயைந்தாள்,***
***பொது இயற்கை தீர் கற்புடைப் பத்தினி பொருட்டால்,***
***விதி விளைத்தது; அவ் வில்லியர் வெல்க! நீர் வெல்க!***
***முதுமொழிப் பதம் சொல்லினென்' என்று, உரை முடித்தான்.***

***இது இயற்கை; ஓர் சீதை என்று இருந்தவத்து இயைந்தாள்*** - *இது பகைவர் தம் சேனையின் இயல்பு; ஒப்பற்ற சீதை என்று மிக்க தவத்துடன் கூடியவளான;* ***பொது இயற்கை தீர் கற்புடைப் பத்தினி பொருட்டால்*** - *பொது இயற்கையொழிந்த (பிறர் எவர்க்கும் இல்லாது தனக்கே சிறப்பாக அமைந்த) கற்பினை உடைய ஒரு பத்தினியை முன்னிட்டு;* ***விதி விளைத்தது; அவ்வில்லியர் வெல்க, நீர் வெல்க*** - *விதியே (இத்தகு பகையை) விளைவித்தது. அந்த வில்லாளர்களே வெற்றி பெறுக (அன்றி) நீர் வெற்றி பெறுக;* ***முதுமொழிப்பதம் சொல்லினென் என்று உரை முடித்தான்*** - *முதுவோர் மொழிதற்குரிய சொல்லைச் சொன்னேன் என்று மாலியவான் தன் உரையை முடித்துக் கொண்டான். இது இயற்கை எனப் பகைப் படையின் தன்மையைக் கூறியவன் இப்போர் ஒப்புவமையற்ற ஓர் கற்புடைப் பெண்ணின் பொருட்டால் விதி கூட்ட விளைந்துள்ளது. இதில் அவர்களே வெல்வர் என்ற கருத்தை உடையவனாயினும் நிலமைக்கேற்ப அவரே வெல்க அல்லது நீவிரே வெல்க எனப் பொதுவாகக் கூறித்தான் அனுபலங்களாலும் வயதாலும் முதிர்ந்தவனாதலின் தன்னுரையினை முதுமொழி எனக் குறிப்பிட்டு மாலியவான் உரை முடிக்கின்றான்.*

*வன்னி 'பொருதலே தக்கது' எனல்*

***9295. வன்னி, மன்னனை நோக்கி, 'நீ இவர் எலாம் மடிய,***
***என்ன காரணம், இகல் செயாதிருந்தது?' என்று இசைத்தான்;***
***'புன்மை நோக்கினென்; நாணினால் பொருதிலேன் என்றான்;***
***'அன்னதேல், இனி அமையும் எம் கடமைஅஃது' என்றான்.***

***வன்னி, மன்னனை நோக்கி, இவர் எலாம் மடிய*** - *வன்னி, இராவணனை நோக்கி 'இவரெலாம் மடிந்து போகவும்;* ***நீ இகல் செயாதிருந்தது என்ன காரணம்? என்று இசைத்தான்*** - *நீ போர் செய்யாதிருத்தற்கு என்ன காரணம்? என்று வினவினான்;*

***புன்மை நோக்கினன்; நாணினால் பொருதிலேன்' என்றான்*** - *(மனிதரையும் குரங்குகளையும் எதிர்த்துப் போர் செய்தலாகிய) இழிவை நோக்கி, வெட்கத்தால் போர் செய்யவில்லை' என்று இராவணன் (அதற்குக்) கூறினான்;* ***'அன்னதேல், இனி எம் கடமை அஃது அமையும்' என்றான்*** *-அவ்வாறாயின் அவரோடு போர் செய்வது எம் கடமையாக அமையும் என வன்னி கூறினான்.*

*முதல் நாளே போருக்குப் போய்ப் பட்ட புன்மை காரணமாக ஏற்பட்ட நாணத்தினால் பொருதிலேன்;" என்ற பொருளும் அமைந்திருத்தல் காண்க, இங்கு இராவணன் தான் முதல் நாளே போருக்குப் போய்த் தோற்று வந்ததனை மறைத்துக்கொண்டு பொய் கூறுகின்ற அளவுக்குத் தாழ்ந்து போகின்ற நிலையினைக் காணுகின்றோம்.*

***9296. 'மூது உணர்ந்த இம் முது மகன் கூறிய முயற்சி***
***சீதை என்பவள்தனை விட்டு, அம் மனிதரைச் சேர்தல்;***
***ஆதியின்தலை செயத்தக்கது; இனிச் செயல் அழிவால்,***
***காதல் இந்திரசித்தையும் மாய்வித்தல் கண்டும்?***

***மூது உணர்ந்த இம்முதுமகன் கூறிய முயற்சி*** - *பழையனவற்றை உணர்ந்த இம்முதியவன் மாலியவான் கூறிய முயற்சிப்பயன்;* ***சீதை என்பவன் தனைவிட்டு அம்மனிதரைச் சேர்தல்*** - *சீதை என்பவளைச் சிறையிலிருந்து விடுத்து அம்மனிதரைச் சேர்வது என்பதாகும்;* ***ஆதியின் தலை செயத்தக்கது*** - *அது, முன்னமே தொடக்கத்தில் செய்யத்தக்க செயல் ஆகும்;* ***காதல் இந்திரசித்தையும் மாய்வித்தல் கண்டும், இனிச் செயல் அழிவால்*** - *அன்பிற்குரிய இந்திரசித்தினையும் பகைவர் கொல்லக்கண்டும் இனி அவ்வாறு செய்வது நமது புகழுக்கு இழிவாகும்.*

*'மாலியவான் வெளிப்படையாகச் சீதையை விட்டுவிடலாமெனக் கூறவில்லையாயினும் அவன் சொன்னதைக் கொண்டு அதன் பின்னணியாகிய அவன் கருத்தை உணர்ந்த வன்னி, அக்கருத்தின்படி சீதையை விட்டுவிட்டுச் சமாதானமாகப் போதல் என்பது தொடக்கத்திலேயே செய்ய வேண்டியசெயலாம். அங்ஙனம் செய்திருப்பின் கும்பகன்னன், அதிகாயன் முதலான வீரர்களும், அரக்கர் படையும் அழிந்திருக்க மாட்டார்கள். ஆனால் அன்பிற்கினிய இந்திர சித்துவும் பகைவர்களால் கொல்லப்பட்ட நிலையில் அப்படிச் செய்வது அரக்கர் குலம் இதுவரையும் தேடிய வீரப்பண்பாகிய பெருமைக்கு அழிவைத் தருவதாகும் என்றான்.*

***9297. 'விட்டம்ஆயினும் மாதினை, வெஞ் சமம் விரும்பிப்***
***பட்ட வீரரைப் பெறுகிலெம்; பெறுவது பழியால்;***

***முட்டி, மற்றவர் குலத்தொடு முடிக்குவது அல்லால்,
கட்டம், அத் தொழில்; செருத் தொழில் இனிச்
செயும் கடமை'***

***மாதினை விட்டம் ஆயினும் வெஞ்சமம் விரும்பி*** - *சீதையை விட்டு விட்டோம் எனினும், கொடிய போரை விரும்பிச் சென்று;* ***பட்ட வீரரைப் பெறுகிலம், பெறுவது பழியால்*** - *இறந்துபட்ட வீரர்களைத் திரும்பப் பெறமாட்டோம், அது மட்டுமின்றிப் பெறப்போவது பழியேயாகும்;* ***முட்டி, மற்றவர் குலத்தொடு முடிக்குவது அல்லால்*** - *பகைவரைத் தாக்கி, அவர்களை முற்றும் அழித்து முடிப்பதே அல்லால்;* ***அத்தொழில் கட்டம்; இனிச் செயும் கடமை செருத்தொழில்*** - *சமாதானத் தொழில் வருத்தம் தருவதாகும், இனிச் செய்யத்தக்க கடமை போர்த் தொழிலை மேற்கொள்வதே.*

*முட்டி - தாக்கி குலத்தொடு முடிக்குவது - முற்ற முடித்தல், கட்டம் - வருத்தம்.*

***9298. என்று, எழுந்தனர் இராக்கதர், 'இருக்க நீ; யாமே
சென்று, மற்றவர் சில் உடல் குருதி, நீர் தேக்கி,
வென்று மீளுதும்; வெள்குதுமேல், மிடல் இல்லாப்
புன் தொழில் குலம் ஆதும்' என்று உரைத்தனர்,
போனார்.***

***என்று, எழுந்தனர் இராக்கதர் நீ இருக்க யாமே சென்று*** - *என்று சொல்லிப் படைத் தலைவராகிய இராக்கதர்கள் எழுந்தவர்களாய் (இராவணனை நோக்கி) நீ இங்கு இருப்பாயாக யாங்களே சென்று;* ***மற்றவர் சில் உடல் குருதி நீர் தேக்கி வென்று மீளுதும்*** - *அப்பகைவரின் சிறிய உடலில் உள்ள இரத்தத்தைக் குடித்து வென்று மீளுவோம்;* ***வெள்குதுமேல், மிடல் இல்லாப் புன்தொழில் குலம் ஆதும்'*** - *அவர்களுக்கு நாணிப் பின்வாங்குவோமாயின் வலிமை இல்லாத சிறுதொழில் செய்யும் குலத்தவர் ஆவோம்'* ***என்று உரைத்தனர் போனார்*** - *என்று கூறியவர்களாய்ப் போயினர்.*

*சில் உடல் - சிறிய உடல் - அரக்கரை நோக்கச் சிற்றுடல் பெற்றவர் மனிதர். வெள்குதல் இங்கு நாணிப் பின்வாங்குதலைக் குறித்தது. மிடல் - வலிமை. புன்தொழில் - வலிமையற்ற சிறு தொழில்.*

## மூலபல வதைப் படலம்

*இராவணனுக்கும் அவன் குலத்தினருக்கும் மூல பலமாக இருந்த படையை இராமபிரான் ஒருவனே தனித்து நின்று அழித்ததை விளக்குகின்ற செய்தியைச் சொல்லும் படலம் இது.*

*மூலப்* ***படை*** *வதைப் படலம் என்று வெளிப்படையாகக் குறிக்காமல், மூல* ***பல*** *வதைப் படலம் என்று குறித்ததை எண்ண வேண்டும். வான்மீகரும் இப்பகுதிக்கு மூல பல யுத்தம் என்றே பெயரிட்டுள்ளார். 'பலம்' என்ற சொல்லுக்குப் 'படை' என்ற பொருளும் உண்டு. 'தந்திரக் கடலை நீந்தித் தன் பெரும் படையைச் சார்ந்தான் (7400) என்ற அடியில் தன் பெரும் பலத்தைச் சேர்ந்தான்' என்ற பாடம் கொண்டு 'பலம்' என்ற சொல்லுக்குப் 'படை' என்றே பொருள் கொண்டார் வை.மு.கோ.*

*மூலப்படையைத் 'தொல்படை' என்று வள்ளுவர் குறிக்கிறார். (குறள் 762) தொல்படையாகிய மூலப்படை பற்றிப் பரிமேலழகர் தெளிவுற விளக்கியுள்ளார். "மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்னும் அறுவகைப் படையுள்ளும் சிறப்புடையது மூலப்படை யாதலால், அம்மூலப் படையை அரசன் அவல் பொரி முதலியவற்றைக் கொடுத்துக் காப்பாற்றும் என்பதுகுறிப்பெச்சம்" என்பது, கோ. வடிவேலு செட்டியாரவர்கள் தெளிவுரை. இப்படையின் சிறப்புப் பற்றி மேலும் தந்துள்ள விளக்கம் வருமாறு: "மூலப் படை அரசனது முன்னோரைத் தொடங்கிவரும் சேனை. இது மூல பலம் எனப்படும். இராமாயணம், இராவணன் இந்திரசித்து மாண்ட பிறகு இராமர் முதலாயினோரை அழித்தொழிக்குமாறு மூலபலச் சேனையை அனுப்பினான் என்று கூறுவதாலும் இஃது அறியப்படும். அம் மூலப்படைக்குச் சிறப்பாவது அரசனிடத்து அவன் முன்னோரைத் தொடங்கிவரும் அன்பும் தான் சிறிதாகிய விடத்தும் பயந்து நீங்காத சௌரியம் (வீரம்) உடைமையுமாம்.*

*மூலம், பலம் என்ற இரண்டு சொற்களுக்கும் வேர் என்ற பொருளும் உண்டு என்பது இங்கே நினைக்கத் தக்கது. ஆதிதொட்டு வருதல், மூலம் ஆகி வேராகியிருத்தல், முதலான பண்புகளை உடையது மூலப்படை என்பது புலப்படுகிறது. வேரே அழிந்ததென்றால் பின் வாழ்வு இல்லை என்பது தெளிவு.*

*கம்பராமாயணப் படலங்களில் பெரியனவற்றுள் இப்படலமும் ஒன்று. இதில் கூறப்படும் செய்திகளின் சுருக்கம் வருமாறு. வன்னி என்ற அரக்கர் தலைவன் தான் சென்று பகை முடித்து வருவதாகப் புறப்பட்ட பொழுது அரக்க வீரர்கள் அவனை இருக்கச் சொல்லித் தாமே போர்முனை செல்ல முனைந்தனர் என்ற செய்தியொடு முந்திய படைக்காட்சிப் படலம் முடிந்தது. அந்த அரக்கர் மூலபல வீரர்களை நோக்கி, இராவணன் பேசுவதிலிருந்து தொடங்குகிறது இப்படலம்.*

*"நீங்கள் யாவரும் முனைந்து சென்று இராம இலக்குவரைக் கொன்றிடுங்கள். நான் வானர சேனையை அழிக்கிறேன்" என்று இராவணன் கூறினான். அவன் சொற்படி அரக்கர் தலைவர்கள் தம் படைகளோடு இராம, இலக்குவரை எதிர்த்துப்போர் செய்யப் போயினர். இராவணன் தனது மூலபலச் சேனையையும் அவ் அரக்கர்க்கு முன்னே இராம இலக்குவரை அழித்திட அனுப்பினான். ஆக, மூல பலப்படையும்*

எஞ்சியிருந்த அரக்கர் படையும் இராம, இலக்குவரை அழித்திடும் கடமை பூண்டன. இராவணன், தேர் ஏறி, வானர சேனையை முற்றும் அழித்திடப் போர்க்கோலம் கொண்டு புறப்பட்டான். போர்க்களமெங்கும் அரக்கர் சேனையே தென்பட்டது கண்டு அஞ்சிய தேவர்கள் சிவபிரானிடம் முறையிட்டனர். 'இராமபிரான் இப்படைகளை யொழிப்பார்' எனத்தேவர்க்குச் சிவபிரான் தேறுதல் கூறினார். அரக்கர் சேனையைக் கண்ட வானர வீரர்கள் அஞ்சிச் சிதறி ஓடினர். சுக்கிரீவன், அங்கதன், அனுமன் மூவர் மட்டுமே அஞ்சி ஓடாது நின்றனர். அரக்கர் சேனையின் வரலாறும் தன்மையும் கேட்டறிந்த இராமபிரான், அச்சம் தவிர்த்துப் போர்க்களம் மீளுமாறு அழைத்திடச் சொன்னான். அங்கதன் அழைத்தபோது முதலில் வரத் தயங்கிய ஜாம்பவான் உட்பட வானர சேனையினர் யாவரும் பின்னர்ப் போர் புரிதலே தக்கதெனத் துணிந்து மீண்டனர். அவர்களுக்குப் பாதுகாவலாகத் துணை இருக்கும்படி இலக்குவனை இராமன் ஏவினான். சுக்கிரீவன் முதலோர் இலக்குவனுக்குத் துணையாகுமாறு பணிக்கப்பட்டனர். தான் ஒருவனே மூலபலப் படையைத் தனித்து நின்று அழிக்கப்போவதாக இராமபிரான் கூறினன். அநுமன் தான் மட்டிலுமாக உடன்வந்து பெருமானைத் தோள்மீது சுமப்பதாக வேண்டியதையும் மறுத்து, அவனை இலக்குவனுக்குத் துணையாக இருக்குமாறு வற்புறுத்திப் பணித்து, இராமபிரான் மூலபலப் படையைத் தனியொருவனாக எதிர்த்துப் பொருதிடலானான்.

இராமபிரான் ஒருவனே பல திக்கிலும் சாரி திரிந்து பொழிந்த அம்பு மழையின் பெருக்கத்தில் அரக்கர் சேனை அழியலாயிற்று. "ஒருவன் மட்டும் எதிர்நிற்க நாம் இத்துணைப் பேர் இருந்தும் கலங்குவதா? நாம் அனைவரும் ஒருமுகமாக அவன்மீது விழுந்து அவனைச் செயலற்றிடச் செய்வோம்" என வன்னி என்பான் பொங்கினான். அவர்களின் தீவிரத் தாக்குதலும் பயனற்றுப் போயிற்று. பெருமான் சாரிகை திரிந்து பொருதமையால் எங்கு நோக்கினும் அரக்கர் கண்களுக்கு இராமனே தென்பட்டான். அரக்கர்களே கூட இராமனாகத் தென்பட்டமையால் அரக்கர்கள் தம்மவரையே தாக்கி அழிதலும் நிகழ்ந்தது" பல கோடி அரக்கர் மாண்ட பின்னும் இராமன் சளையாதிருத்தல் கண்ட அரக்கர்கள் நாராயணாஸ்திரம் முதலான தெய்வப் படைக்கலங்களை ஏவினர். இராமனும் அவ்வப்படைகள் கொண்டே அரக்கர் ஏவிய தெய்வப் படைக்கலங்களின் ஆற்றலழியச் செய்தார்.

மூலபலப் படையை முழுமையாக அழித்தொழித்துவிட்டு, இணைப்பு நீக்கி, இலக்குவன் முதலியோர் இராவணனோடு போரிடுகின்ற களத்தை நோக்கி இராமபிரான் சென்றான். இது இப்படலச் செய்திகளின் சுருக்கம்.

இப்போரில் இறந்தவர் தொகை கணக்கில் அடங்காது என்பதைக் கலிக்கூற்றாகக் (9513) கூறியுள்ள பாடல் கற்பனை வளம் மிக்கது. இலக்குவன், சுக்கிரீவன், அங்கதன், அனுமன் போன்ற மாவீரர்களை எதிர்த்து முன் எப்போதும் தோற்றிலா விறலோன் ஆகிய இராவணன் போர் செய்துகொண்டிருக்கிறான். மூலபலப் படையின் பெருக்கமும் திறமும் நோக்க வானர சேனையின் அளவும் ஆற்றலும் சுருங்கியவையே. ஆயினும், அந்தப் போர் முடிந்துவிடாமல் நடந்துகொண்டிருக்கும் போதே அளவு காணமுடியாத பெரும்படையைத் தான் ஒருவனே தனி நின்று அழித்துவிட்டான். இராமபிரான் என்பது கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவனாகிய இராமன், செயராமனே என்பதை நிலைநாட்டும். இப்படலத்தின் சிறப்பான குறிப்பு இது.

*படைத்தலைவர்களுக்கு இராவணன் கட்டளை*

***9299. 'வானரப் பெருஞ் சேனையை யான் ஒரு வழி சென்று,***
***ஊன் அறக் குறைத்து, உயிர் உண்பென்; நீயிர் போய், ஒருங்கே***
***ஆன மற்றவர் இருவரைக் கோறிர் என்று அறைந்தான் -***
***தானவப் பெருங் கரிகளை வாள் கொண்டு தடிந்தான்.***

***தானவப் பெருங் கரிகளை*** *- அசுரராகிய பெரிய யானைகளை;* ***வாள் கொண்டு தடிந்தான்*** *- வாளினைக் கொண்டு துணித்தவனாகிய இராவணன் (சேனைத் தலைவர்களை நோக்கி);* ***யான் ஒருவழி சென்று*** *- நான் ஒரு புறமாகப் போய்;* ***வானரப் பெருஞ்சேனையை*** *- வானரப் பெரும்படைகளை;* ***ஊன் அறக்*** *குறைத்து - உடல்கள் சிதையும்படி வெட்டி;* ***உயிர் உண்பென்*** *- உயிரைக் குடிப்பேன்;* ***நீயிர் ஒருங்கே போய்*** *- நீங்கள் யாவரும் ஒன்றாகச் சென்று;* ***மற்றவர் ஆன இருவரை*** *- வானரர் தவிர இராம இலக்குவராகிய இருவரை;* ***கோறிர்*** *- கொல்லுவீர்களாக;* ***என்று அறைந்தான்*** *- என்று கட்டளை இட்டான்.*

*தானவர் - அரக்கரில் ஓர் இனத்தார். இராவணன் இவர்களை அழித்த செய்தி உத்தரகாண்டத்துள் பேசப்படுகிறது என்பர்.*

***9300. என உரைத்தலும், எழுந்து, தம் இரதமேல் ஏறி,***
***கனை திரைக் கடல் சேனையைக் கலந்தது காணா,***
***'வினையம் மற்று இலை; மூல மாத் தானையை விரைவோடு***
***இனையர் முன் செல, ஏவுக!' என்று இராவணன் இசைத்தான்.***

***என உரைத்தலும்*** *- மேற்கண்டவாறு இராவணன் கட்டளை இட்டவுடனே;* ***எழுந்து*** *- புறப்பட்டு;* ***தம் இரதம் மேல் ஏறி*** *- தங்களுக்குரிய தேர்களில் ஏறி;* ***கனை திரைக் கடல் சேனையைக் கலந்தது காணா*** *- ஒலிக்கும் கடல்மேல் பரந்த தம் சேனைகளோடு அரக்கத் தலைவர்கள் சென்று சேர்ந்ததைக் கண்டு;* ***வினையம் மற்று இலை*** *- இனிச் செய்யத்தக்க பணி வேறு இல்லை;* ***மாமூலத் தானையை*** *- பெரிதாகிய மூல பல சேனையை;* ***இனையர் முன் விரைவோடு செல ஏவுக என்று*** *- இப்போது போருக்குப் போகின்ற இவர்களுக்கு முன்னே வேகமிகச் செல்லும்படியாக*

*ஏவுவீர்களாக என்று;* **இராவணன் இசைத்தான்** - *இராவணன் (மேலும்) கட்டளை இட்டான்.*

***9301. ஏவி அப் பெருந் தானையை, தானும் வேட்டு எழுந்தான்,***
***தேவர் மெய்ப் புகழ் தேய்த்தவன், சில்லிஅம் தேர்மேல்,***
***காவல் மூவகை உலகமும் முனிவரும் கலங்க,***
***பூவை வண்ணத்தன் சேனைமேல் ஒரு புறம் போனான்.***

**அப்பெருந்தானையை ஏவி** - *அந்தப் பெரிய மூலபலச் சேனையை இராமனை எதிர்த்தழித்திடுமாறு ஏவியபின்;* **தேவர் மெய்ப்புகழ் தேய்த்தவன்** - *தேவர்களின் மெய்யான புகழை அழித்தவனாகிய இராவணன்;* **வேட்டு** - *போர் செய்தலை விரும்பி;* **சில்லி அம் தேர்மேல்** - *சக்கரங்கள் கொண்ட அழகிய தேர் மீது;* **தானும் எழுந்தான்** - *தானும் ஏறியவனாய்;* **காவல் மூவகை உலகமும்** - *தன் ஆட்சியில் உள்ள மூன்று உலகத்தவரும்;* **முனிவரும்** - *முனிவர்களும்;* **கலங்க** - *மனம் கலங்கும்படியாக;* **பூவை வண்ணத்தன் சேனைமேல்** - *பூவைப் பூவின் நிறம் கொண்டவனாகிய இராமனுக்கு உதவியாக வந்த சேனையை எதிர்த்து;* **ஒரு புறம் போனான்** - *(மூலபலப்படை ஒருபுறம் போக) தான் வேறு ஒரு பக்கம் போனான்;*

### *மூல பலப் படையின் சிறப்பு*

***9302. 'எழுக, சேனை!' என்று, யானைமேல் மணி முரசு ஏற்றி,***
***வழு இல் வள்ளுவர் துறைதொறும் விளித்தலும், வல்லைக்***
***குழுவி ஈண்டியது என்பரால், குவலயம் முழுதும்***
***தழுவி, விண்ணையும் திசையையும் தடவும் மாத் தானை,***

**வழு இல் வள்ளுவர்** - *தம் கடமையில் குற்றம் இல்லாத (முரசறையும்) வள்ளுவன்மார்;* **யானை மேல் மணி முரசு ஏற்றிக்** - *யானை மீது இருந்த அழகிய முரசுகளை அறைந்து;* **எழுக சேனை என்று** - *சேனைகள் எழுவதாக என்று;* **குவலயம் முழுதும் தழுவி** - *உலகம் முழுவதையும் அளாவி;* **விண்ணையும் திசையையும் தடவும் மாத்தானை** - *ஆகாயத்தையும் திசைகளையும் வருடுகின்ற பெரிய (மூலபலச்) சேனையானது;* **வல்லை** - *விரைவாக;* **ஈண்டியது என்பர்** - *கூடியது என்பர்.*

*ஆல் - அசை.*

***9303. அடங்கும் வேலைகள், அண்டத்தின் அகத்து; அகல் மலையும்***
***அடங்கும், மன் உயிர் அனைத்தும், அவ் வரைப்பிடை அவைபோல***
***அடங்குமே, மற்று அப் பெரும் படை அரக்கர்தம் யாக்கை,***
***அடங்கும் மாயவன் குறள் உருத் தன்மையின் அல்லால்?***

***அண்டத்தின் அகத்து வேலைகள் அடங்கும்*** *- அண்டத்தின் எல்லைக்குள்ளே கடல்கள் அடங்கி நிற்கும்;* ***அகல் மலையும் மன் உயிர் அனைத்தும் அடங்கும்*** *- பெரியனவாய் விரிந்த மலைகளும் நிலைபேறுடைய எல்லா உயிர்களும் (அவ்வாறே) அண்டத்தின் எல்லையுள் அடங்கி நிற்கும்;* ***அவ் வரைப்பின் அவை போல்*** *- அந்த (அண்டத்து) எல்லையுள் அவை அடங்குதல் போல;* ***அடங்கும் மாயவன் குறள் உருத் தன்மையின் அல்லால்*** *- யாவும் அடங்குமாறு ஓங்கிய திருமாலின் வாமன உருவினுள் யாவும் அடங்கிவிடும் தன்மை கொண்டதுபோல் அல்லாமல்;* ***அப்பெரும்படை அரக்கர் தம் யாக்கை அடங்குமே*** *- அந்தப் பெரிய படை கொண்ட அரக்கர்களின் பேருருவம் அடங்கிவிடுமோ? (அடங்காது என்றபடி).*

## *மூலபலப் படை வீரரின் தன்மை*

***9304. அறத்தைத் தின்று, அருங் கருணையைப் பருகி, வேறு அமைந்த***
***மறத்தைப் பூண்டு, வெம் பாவத்தை மணம் புணர் மணாளர்***
***நிறத்துக் கார் அன்ன நெஞ்சினர், நெருப்புக்கு நெருப்பாய்,***
***புறத்தும் பொங்கிய பங்கியர், காலனும் புகழ்வார்;***

***அறத்தைத் தின்று*** *- (அந்த மூலபலத்தைச் சேர்ந்த அரக்க வீரர்கள்) அறத்தையே உணவாகத் தின்று;* ***அருங் கருணையைப் பருகி*** *- (அந்த உணவுக்கு ஏற்ப) அரிய கருணையையே நீராகக் குடித்து;* ***வேறு அமைந்த*** *- (அறத்துக்கு) மாறாக அமைந்ததாகிய;* ***மறத்தைப் பூண்டு*** *- மறநெறியையே மேற்கொண்டு;* ***வெம் பாவத்தை மணம் புணர் மணாளர்*** *- கொடிய பாவத்தையே மணம் செய்து சேரும்*

*மாப்பிள்ளைகளாய்;* ***நிறத்துக் கார் அன்ன நெஞ்சினர்*** *- நிறத்தினால் மேகத்தை ஒத்த கரிய நெஞ்சகத்தை உடையவர்களாய்;* ***நெருப்புக்கு நெருப்பார்*** *- சேர்ந்தவர்களை எரிக்கும் இயல்புடைய நெருப்புக்கு நெருப்புப் போன்ற சினமுடையவர்களாய்;* ***புறத்தும் பொங்கிய பங்கியர்*** *- (அகத்தில் உள்ள சின நெருப்புக்கு அடையாளமாய்) வெளியே விரிந்து தோன்றும் செம்முடியுடையவராய்;* ***காலனும் புகழ்வார்*** *- (கொல்லுதலில்) யமனாலும் புகழப்படுவோராய் விளங்கினர்.*

*அரக்கரை மணவாளப் பிள்ளைகளாகக் கூறியதற்கு ஒப்ப, 'மறத்தைப் பூண்டு' என்ற தொடருக்கு மறத்தையே அழகு செய்யும் அணிகளாகப் பூண்டு எனவும் பொருள் கொள்ளலாம். இப்பாடலில் வரும் வருணனை படிமக் (இமேஜரி) களஞ்சியமாக உள்ளது.*

***9305. நீண்ட தாள்களால் வேலையைப் புறம் செல நீக்கி,***
***வேண்டும் மீனொடு மகரங்கள் வாயிட்டு விழுங்கி***
***தூண்டு வான் உரும் ஏற்றினைச் செவிதொறும்***
***தூக்கி,***
***மூண்ட வான் மழை உரித்து உடுத்து, உலாவரும்***
***மூர்க்கர்;***

***நீண்ட தாள்களால் வேலையைப் புறம் செல நீக்கி*** *- தங்கள் நீண்ட கால்களால் கடல் நீரை அப்பாற் செல்லும்படி போக்கி;* ***வேண்டும் மீனொடு மகரங்கள்*** *- வேண்டிய அளவு மீன்களோடு மகரப்பெரு மீன்களையும்;* ***வாயிட்டு விழுங்கி*** *- வாயில் போட்டு விழுங்கி;* ***தூண்டுவான் உரும் ஏற்றினை*** *- (மேகங்களால்) உண்டாக்கப்படுகின்ற பேரிடிகளை;* ***செவிதொறும் தூக்கி*** *- காதுகளிலெல்லாம் தொங்க விட்டுக்கொண்டு;* ***மூண்டவான் மழை*** *- திரண்டெழுந்து வருகின்ற பெரிய மேகங்களை;* ***உரித்து உடுத்து*** *- பிய்த்து ஆடையாக உடுத்துக்கொண்டு;* ***உலா வரும் மூர்க்கர்*** *- எங்கணும் உலவி வருவர் அந்த முருடர்கள்.*

***9306. மால் வரைக் குலம் பரல் என, மழைக் குலம்***
***சிலம்பா***
***கால் வரைப் பெரும் பாம்பு கொண்டு அசைத்த பைங்***
***கழலார்;***
***மேல் வரைப்பு அடர் கலுழன் வன் காற்று எனும்***
***விசையோர்;***
***நால் வரைக் கொணர்ந்து உடன் பிணித்தால் அன்ன***

***நடையார்;***

***மால்வரைக் குலம் பரல் என*** - *பெரிய மலைக் கூட்டங்களே உட்பரலாக அமைய;* ***மழைக்குலம் சிலம்பா*** - *மேகக் கூட்டங்களே காலில் அணியும் சிலம்புகளாக;* ***கால் வரை*** - *கால்களாகிய பெருமலைகளில்;* ***பெரும்பாம்பு கொண்டு அசைத்த பைங்கழலார்*** - *பெரிய பாம்பு கொண்டு கட்டிய பசும் பொன் கழல் அணிந்தவர்கள் (அவ் அரக்கர்கள்);* ***மேல்வரைப் படர் கலுழன்*** - *விண்ணக எல்லை வரை பறந்து செல்லும் கருடனால் எழுப்பப்படுகின்ற;* ***வன் காற்று எனும் விசையோர்*** - *வலிய காற்றுப் போன்ற வேகத்தை உடையவர்கள்;* ***நால் வரைக் கொணர்ந்து*** - *தொங்கி அசைகின்ற (துதிக்கை கொண்ட) மலையனைய யானைகளைக் கொண்டுவந்து;* ***உடன் பிணித்தால் அன்ன நடையார்*** - *ஒன்றாகக் கட்டியது போன்ற நடையை உடையவர்கள்.*

*நால்வரை கொணர்ந்து எனற்பாலது நால்வரைக் கொணர்ந்து என வந்தமை முந்தைய வரிகளில் அமைந்த ஓசையைப் பேணும் நயத்திற்காக.*

***9307. உண்ணும் தன்மைய ஊன் முறை தப்பிடின், உடனே***
***மண்ணில் நின்ற மால் யானையை வாயிடும் பசியார்;***
***தண்ணின் நீர் முறை தப்பிடின், தடக் கையால் தடவி,***
***விண்ணின் மேகத்தை வாரி, வாய்ப் பிழிந்திடும்***
***விடாயர்;***

***உண்ணும் தன்மைய ஊன் முறை தப்பிடின்*** - *உண்ணுதற்கு உரிய தசைகள் உரிய நேரத்தில் கிடைக்காமல் போனால்;* ***உடனே மண்ணில் நின்ற மால் யானையை வாயிடும் பசியார்*** - *மண் மீது நிற்கின்ற பெரிய யானைகளை உடனே வாய்க்குள் போட்டுக் கொள்கின்ற பசியை உடையவர்கள் (அந்த அரக்கர்கள்);* ***தண் இன் நீர் முறை தப்பிடின்*** - *குளிர்ந்த இனிய நீர் குடிப்பதற்கு உரிய நேரத்தில் கிடைக்காமல் தடைப்பட்டால்;* ***தடக் கையால் தடவி*** - *பெரிய கைகளால் ஆகாயத்தைத் தடவி;* ***விண்ணின் மேகத்தை வாரி*** - *அவ் ஆகாயத்திலே படர்கின்ற மேகத் திரள்களை அள்ளி;* ***வாய்ப் பிழிந்திடும் விடாயர்*** - *தங்கள் வாயிலே பிழிந்திடுகின்ற நீர் வேட்கை உடையவர்கள் அவர்கள்.*

***9308. உறைந்த மந்தரம் முதலிய கிரிகளை உருவ***
***எறிந்து, வேல் நிலை காண்பவர், இந்துவால் யாக்கை***
***சொறிந்து, தீர்வு உறு தினவினர்; மலைகளைச் சுற்றி***
***அறைந்து, கற்ற மாத் தண்டினர்; அசனியின்***
***ஆர்ப்பர்;***

***உறைந்த மந்தரம் முதலிய கிரிகளை*** - *திண்ணெனச் செறிந்த மந்தரம் முதலிய மலைகளை;* ***உருவ எறிந்து*** - *ஊடுருவும்படியாக தங்கள் வேலால் தாக்கி;* ***வேல் நிலை காண்பவர்*** - *தாங்கள் ஏந்திய வேற்படையின் கூர்மையைப் பரிசோதித்து*

*அறிபவர்கள் அந்த அரக்கர்கள்;* ***இந்துவால் யாக்கை சொறிந்து*** *- சந்திரனைப் பற்றி தங்கள் உடம்பைச் சொறிந்து;* ***தீர்வு உறு தினவினர்*** *- தங்கள் உடல் தினவைத் தீர்த்துக் கொள்பவர்கள்;* ***மலைகளைச் சுற்றி அறைந்து*** *- கையில் அகப்படும் மலைகளைச் சுழற்றி மோதி;* ***கற்ற மாத் தண்டினர்*** *- பயிற்சி செய்யும் கதாயுதங்களைப் பயன்படுத்தியவர்கள்;* ***அசனியின் ஆர்ப்பர்*** *- இடிபோல முழங்குவார்கள்;*

*திருப்பாற்கடலைக் கடைவதற்குத் தேவர்கள் முதலியோர் பலரும் ஒன்றாகத் திரண்டு பற்றிப் பயன்படுத்திய மந்தரமலையையே தன் தோளுக்கு ஏற்ற கதாயுதம் என இரணியன் எடுத்தான். எடுத்தவன் 'இது நொய்ம்மையானது' எனக் கைவிட்டான். இக்கருத்தினை (கம்ப. 6199) கம்பர் பாடுவார். இச்செய்யுளோடு அதனை ஒப்பிட்டு நயம் உணர்க.*

***9309. சூலம் வாங்கிடின், சுடர் மழு எறிந்திடின், சுடர் வாள்***
***கோல வெஞ் சிலை பிடித்திடின், கொற்ற வேல் கொள்ளின்***
***சால வன் தண்டு தரித்திடின், சக்கரம் தாங்கின்***
***காலன், மால், சிவன், குமரன் என்று, இவரையும் கடப்பார்;***

***சூலம் வாங்கிடின்*** *- சூலாயுதத்தைக் கையில் எடுத்தாலும்;* ***சுடர் மழு எறிந்திடின்*** *- ஒளி வீசும் மழுவாயுதம் கொண்டு தாக்கினாலும்;* ***சுடர் வாள் கோல வெஞ்சிலை பிடித்திடின்*** *- ஒளிர்கின்ற வாளினையும் அழகிய கொடிய வில்லையும் கையில் பிடித்தாலும்;* ***கொற்றவேல் கொள்ளின்*** *- வெற்றி வேலைக் கையிலே கொண்டாலும்;* ***சால வன் தண்டு தரித்திடின்*** *- மிக வலிய கதாயுதத்தைத் தாங்கினாலும்;* ***சக்கரம் தாங்கின்*** *- சக்கராயுதத்தைத் தாங்கினாலும்;* ***காலன், மால், சிவன், குமரன் என்று இவரையும்*** *- யமன், திருமால், சிவபிரான், முருகன் என்ற இவர்களையும்;* ***கடப்பார்*** *- போரில் வென்று மேம்படுவர் அவ் அரக்கர்கள்.*

*இவரையும் என்பதில் உம்மை, உயர்வு சிறப்பு.*

***9310. ஒருவரே வல்லர், ஓர் உலகத்தினை வெல்ல;***
***இருவர் வேண்டுவர், ஏழ் உலகத்தையும் இறுக்க;***
***திரிவரேல், உடன் திரிதரும், நெடு நிலம்; செவ்வே***
***வருவரேல் உடன் கடல்களும் தொடர்ந்து, பின் வருமால்.***

***ஓர் உலகத்தினை வெல்ல ஒருவரே வல்லர்*** *- ஓர் உலகத்தை வெல்ல வேண்டுமாயின் அவ் அரக்கர்களில் ஒருவரே அதற்கு வேண்டிய வல்லமை*

உடையவர்; **ஏழ் உலகத்தையும் இறுக்க இருவர் வேண்டுவர்** - ஏழு உலகங்களையும் அழிப்பதற்கு அவர்களில் இருவர் தேவைப்படுவார்கள்; **திரிவரேல் நெடுநிலம் உடன் திரிதரும்** - அவர்கள் ஓர் இடத்தில் நில்லாமல் திரிந்து கொண்டிருப்பாராயின் பெரிய நிலவுலகம் அவர்களுடனே சேர்ந்து திரியும்; **செவ்வே வருவரேல்** - நேராக அவர்கள் வந்தால்; **கடல்களும் உடன் தொடர்ந்து பின்வரும்** - கடல்களெல்லாம் ஒன்றாகத் தொடர்ந்து அவர்கள் பின்னே வரும்.

ஆல் - அசை.

## நால்வகைப் படைகள்

**9311. மேகம் எத்தனை, அத்தனை மால் கரி, விரிந்த**
**நாகம் எத்தனை, அத்தனை தேர்; நனி நாளாப்**
**போகம் எத்தனை, அத்தனை புரவியின் ஈட்டம்;**
**ஆகம் உற்றன எத்தனை, அத்தனை அனிகம்.**

**மேகம் எத்தனை அத்தனை மால் கரி** - மேகங்கள் எத்தனை உண்டோ அத்தனை பெரிய யானைகள்; **விரிந்த நாகம் எத்தனை அத்தனை தேர்** - எங்கணும் பரவியுள்ள யானைகள் எத்தனையோ அத்தனைக்கு ஈடான தேர்கள்; **நனி நாளாப் போகம் எத்தனை அத்தனை புரவியின் ஈட்டம்** - நெடுநாளாகி விளைந்த (நெல்மணிகள்) விளைச்சலில் எத்தனையோ அத்தனை குதிரைகளின் கூட்டம்; **ஆகம் உற்றன எத்தனை அத்தனை அனிகம்** - உடல் பெற்ற உயிர்கள் எத்தனையோ அத்தனை காலாட்படை வீரர்கள் (என்று அளவிறந்தன அரக்கரின் நால்வகைப் படைகள்)

உயிர்கள் அனுபவிப்பதற்கென இறைவனால் எத்தனையோ பல போகங்கள் படைக்கப்பட்டுள்ளனவோ அத்தனை புரவிகளின் கூட்டம் எனவும் மூன்றாவது வரிக்குப் பொருள் கொள்ளலாம். 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா எங்கள் இறைவா' எனச் சுப்பிரமணிய பாரதியார் பாடியது இங்கு நினைவுகூரத் தக்கது.

**9312. இன்ன தன்மைய யானை, தேர், இவுளி என்று**
**இவற்றின்**
**பன்னு பல்லணம், பருமம், மற்று உறுப்பொடு பலவும்,**
**பொன்னும் நல் நெடு மணியும் கொண்டு அல்லது**
**புனைந்த**
**சின்னம் உள்ளன இல்லன, மெய்ம் முற்றும்**
**தெரிந்தால்.**

***இன்ன தன்மைய*** - *இத்தன்மைகளைக் கொண்ட;* ***யானை தேர் இவுளி என்று இவற்றின்*** - *யானை, தேர், குதிரை ஆகிய இவற்றின்;* ***மெய் முற்றும் தெரிந்தால்*** - *உடல் முழுவதையும் ஆராய்ந்து பார்த்தால்;* ***பன்னு பல்லணம் பருமம்*** - *சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற (குதிரை மீது உள்ள) தவிசும், (யானை மேல் இடும் ஆசனமாகிய) இருக்கையும்;* ***மற்று உறுப்பொடு பலவும்*** - *மற்றும் உள்ள பலவேறு உறுப்புகளும்;* ***பொன்னும் நல் நெடு மணியும் கொண்டு அல்லது*** - *பொன்னும் நல்ல பெரிய மணிகளும் கொண்டல்லது;* ***புனைந்த சின்னம் உள்ளன இல்லன*** - *வேறு செய்த அடையாளக் குறிகள் கொண்டவை இல்லையாம்.*

***9313. இப் பெரும் படை எழுந்து இரைத்து ஏக, மேல் எழுந்த***
***துப்பு உதிர்ந்தன தூளியின் படலம் மீத் தூர்ப்ப,***
***தப்பு இல் கார் நிறம் தவிர்ந்தது; கரி மதம் தழுவ,***
***உப்பு நீங்கியது, ஓங்கு நீர் வீங்கு அலை உவரி.***

***இப் பெரும் படை எழுந்து இரைத்து ஏக*** - *அரக்கரின் இந்தப் பெரிய படை போர்க்களம் நோக்கிப் புறப்பட்டு ஆரவாரம் செய்து போகும்போது;* ***ஓங்கு நீர் வீங்கு அலை உவரி*** - *பெருகிவரும் நீர் கொண்டதும் பொங்கும் அலைகள் கொண்டதுமான கடல்;* ***மேல் எழுந்த துப்பு உதிர்ந்தன தூளியின் படலம் மீத் தூர்ப்ப*** - *மேல் எழுந்து பரவியதும் பவளம் தூளாகி உதிர்ந்தது போன்றதுமான தூசிப் படலம் (கடற்பரப்பின்) மேற்பரப்பின் மீது வீழ்ந்து தூர்த்தமையால்;* ***தப்பு இல் கார் நிறம் தவிர்ந்தது*** - *இயல்பான கரிய நிறத்தை இழந்தது;* ***கரி மதம் தழுவ*** - *சேனையில் உள்ள யானைகளின் மத நீர் கலந்ததால்;* ***உப்பு நீங்கியது*** - *உவர்ப்புச் சுவை நீங்கியது.*

***9314. மலையும், வேலையும், மற்று உள பொருள்களும், வானோர்***
***நிலையும், அப் புறத்து உலகங்கள் யாவையும், நிரம்ப***
***உலைவுறாவகை உண்டு, பண்டு உமிழ்ந்த பேர் ஒருமைத்***
***தலைவன் வாய் ஒத்த - இலங்கையின் வாயில்கள் தருவ.***

***தருவ*** - *(மூலப் படையை) வெளியே விடுக்கின்ற;* ***இலங்கையின் வாயில்கள்*** - *இலங்கையின் வாசல்கள்;* ***மலையும் வேலையும் மற்று உள பொருள்களும்*** - *மலைகளும் கடல்களும் மற்றும் உள்ள பொருள்களும்;* ***வானோர் நிலையும்*** - *தேவர் உலகமும்;* ***அப்புறத்து உலகங்கள் யாவையும்*** - *அப்பால் உள்ள எல்லா உலகங்களும்;* ***நிரம்ப*** - *திருவயிறு நிறையும்படியாக;* ***உலைவுறாவகை உண்டு*** - *சிதைவுறாமல் உண்டு;* ***பண்டு உமிழ்ந்து*** - *முன்பு உமிழ்ந்தருளிய;* ***பேர் ஒருமைத் தலைவன் வாய்***

***ஒத்த*** - *பெரியவனும் தனிப் பெருந் தலைவனுமாகிய திருமாலினது திருவாயினைப் போன்று காணப்பட்டன.*

***9315. கடம் பொறா மதக் களிறு, தேர், பரி, மிடை, காலாள்***
***படம் பொறாமையின் நனந் தலை அனந்தனும் பதைத்தான்;***
***விடம் பொறாது இரி அமரர்போல் குரங்குஇனம் மிதிக்கும்***
***இடம் பொறாமையின், இரிந்து போய், வடதிசை இறுத்த.***

***கடம் பொறா மதக்களிறு*** - *கன்னத்திலிருந்து தடையின்றிப் பெருகும் மதநீர் கொண்ட ஆண்யானைகள்;* ***தேர், பரி, மிடை, காலாள்*** - *மற்றும் தேர்கள், குதிரைகள், நெருங்கியுள்ள காலாட்படை ஆகியவற்றைச் சுமைமிகுதியை;* ***படம் பொறாமையின்*** - *ஆயிரந் தலையிலுள்ள படங்களால் தாங்கமுடியாமையால்;* ***அனந்தனும் பதைத்தான்*** - *ஆதிசேடன் கூடத் துடித்தான்;* ***விடம் பொறாது*** - *பாற்கடல் கடைந்த போது எழுந்த ஆலகால நஞ்சினைக் காணவும் பொறாமல்;* ***இரி அமரர்போல்*** - *ஓடிய தேவர்களைப் போல;* ***குரங்கு இனம் மிதிக்கும் இடம் பொறாமையின்*** - *குரங்குகள் தாம் நின்ற இடத்தில் நிலைக்க முடியாமல்;* ***இரிந்துபோய்*** - *ஓடிச்சென்று;* ***வடதிசை இறுத்த*** - *திசையின் வடகோடியில் தங்கின.*

***9316. ஆழி மால் வரை வேலி சுற்றிட வகுத்து அமைத்த***
***ஏழு வேலையும், இடு வலை; அரக்கரே, இன மா;***
***வாழி காலனும் விதியும் வெவ் வினையுமே, மள்ளர்;***
***தோழம் மா மதில் இலங்கை; மால் வேட்டம் மேல் தொடர்ந்தார்.***

***ஆழி மால் வரை வேலி சுற்றிட*** - *சக்கரவாளமாகிய பெரிய மலையே வேலியாகச் சுற்றி நிற்கும்படி;* ***வகுத்து அமைத்த*** - *நடுவில் வகுத்து அமைக்கப்பட்ட;* ***ஏழு வேலையும்*** - *ஏழு கடல்கள் கொண்ட இடம்;* ***இடு வலை*** - *இடப்பட்ட வலை வீசுதலுக்கு உரிய இடம்;* ***அரக்கரே மா இனம்*** - *அரக்கர்களே விலங்குகளின் கூட்டம்;* ***காலனும் விதியும் வெவ்வினையுமே மள்ளர்*** - *யமனும் பிரமனும் கொடிய ஊழ்வினையுமே (வேட்டையாடும்) வீரர்கள்;* ***மாமதில் இலங்கை தோழம்*** - *பெரிய மதில்களைக் கொண்ட இலங்கையே கொட்டில்;* ***மால் வேட்டம் மேல் தொடர்ந்தார்*** - *அந்த இலங்கையில் மயக்கம் ஊட்டும் (போர்) வேட்டையைத் தொடர்ந்தார்கள்.*

***9317. ஆர்த்த ஓசையோ? அலங்கு தேர் ஆழியின்***
***அதிர்ப்போ?***
***கார்த் திண் மால் கரி முழக்கமோ? வாசியின்***
***கலிப்போ?***
***போர்த்த பல் இயத்து அரவமோ? - நெருக்கினால்***
***புழுங்கி***
***வேர்த்த அண்டத்தை வெடித்திடப் பொடிந்தது***
***மேன்மேல்.***

***நெருக்கினால் புழுங்கி*** *- நெருக்கத்தில் வெந்து;* ***வேர்த்த அண்டத்தை வெடித்திட*** *- வேர்த்திடுகின்ற அண்டகோளம் வெடித்திடுமாறு;* ***மேன்மேல் பொடிந்தது*** *- மேலும் மேலும் விளங்கித் தோன்றியது;* ***ஆர்த்த ஓசையோ*** *- வீரர்கள் ஆரவாரித்து எழுப்பிய ஓசையோ?* ***அலங்கு தேர் ஆழியின் அதிர்ப்போ*** *- அசைந்து செல்லும் தேர்ச் சக்கரங்களின் ஓசையா?* ***கார்த்திண் மால் கரி முழக்கமோ*** *- கருநிறமும் திண்மையும் கொண்ட பெரிய ஆண்யானைகள் பிளிறிய ஓசையா?* ***வாசியின் கலிப்போ*** *- குதிரைகளின் ஓசையா?* ***போர்த்த பல் இயத்து அரவமோ?*** *- இத்தனை ஓசைகளையும் உள்ளடக்கிய பல்வகை இசைக் கருவிகளின் ஓசையா?*

***9318. வழங்கு பல் படை மீனது; மத கரி மகரம்***
***முழங்குகின்றது; முரி திரைப் பரியது; முரசம்***
***தழங்கு பேர் ஒலி கலிப்பது; தறுகண் மா நிருதப்***
***புழுங்கு வெஞ் சினச் சுறவது - நிறைபடைப் புணரி.***

***நிறை படைப் புணரி*** *- இடமெலாம் பரவி நிறைந்த சேனையாகிய கடல்;* ***வழங்கு ப ல் படை மீனது*** *- பகைவரை நோக்கிச் செலுத்தப்படுதற்கு உரிய படைக்கலங்களாகிய மீன்களைக் கொண்டது;* ***முழங்குகின்றது மத கரி மகரம்*** *- பிளிறுகின்ற யானைகளாகிய திமிங்கலங்களை உடையது;* ***முரி திரைப் பரியது*** *- கரையில் மோதிச் சிதைகின்ற அலைகளாகிய குதிரைகளைப் பெற்றது;* ***முரசம் தழங்கு பேரொலி கலிப்பது*** *- போர் முரசுகள் ஒலிப்பதால் எழுகின்ற சத்தத்தைக் கொண்டது;* ***தறுகண் மா நிருத*** *- அஞ்சாமை கொண்ட பெரிய அரக்கராகிய;* ***புழுங்கு வெஞ்சினச் சுறவது*** *- மன வேக்காடுடைய கொடிய சினங்கொண்ட சுறாமீன்கள் உடையது.*

*சேனை, யானை, குதிரை, முரசொலி, அரக்கர் இவை முறையே கடல், திமிங்கலம், அலை, கடலோசை, சுறாமீன்கள் ஆகியவையாக உருவகம் செய்யப்பட்டன. முற்றுருவகம் மீன் + அது. 'அது' பகுதிப் பொருளில் விகுதி. அஃதாவது விகுதிக்கெனத் தனிப்பொருள் இல்லை. இப்படியே பரியது, கலிப்பது, சுறவது என்பனவும் பகுதிப் பொருள் விகுதி கொண்டவை.*

***9319. தசும்பின் பொங்கிய திரள் புயத்து அரக்கர்தம் தானை***
***பசும் புல் தண் தலம் மிதித்தலின், கரி படு மதத்தின்***
***அசம்பின் சேறு பட்டு, அளறு பட்டு, அமிழுமால், அடங்க;***
***விசும்பின் சேறலின் கிடந்தது, அவ் விலங்கல்மேல் இலங்கை.***

***தசும்பின் பொங்கிய*** - *குடம் போல ஓங்கிய;* ***திரள் புயத்து அரக்கர் தம் தானை*** - *திரண்ட தோள்களையுடைய அரக்கரின் சேனை;* ***பசும்புல் தண் தளம் மிதித்தலின்*** - *பச்சைப் புல்லால் குளிர்ந்துள்ள தரையை மிதித்துப் போவதாலும்;* ***கரிபடு மதத்தின்*** - *யானைகளிலிருந்து பொழியும் மதநீர்ப் பெருக்கத்தாலும்;* ***அசும்பின் சேறுபட்டு*** - *வழுக்கு நிலத்துச் சேறுபோல;* ***அளறுபட்டு*** - *நெகிழும் சேறு உண்டாவதால்;* ***அடங்க அமிழும்*** - *எல்லாம் புதைபட்டுவிடும்; (ஆனால்)* ***விசும்பின் சேறலின்*** - *(சேற்றில் அமிழ்வதற்குத் தப்பி) யாவரும் விண்வழியே சென்றதால்;* ***அவ் விலங்கல் மேல் இலங்கை*** - *அந்தத் திரிகோண மலை மேல் இருந்த இலங்கை;* ***கிடந்தது*** - *(அமிழாமல்) இருந்தது.*

*ஆல் - அசை.*

*சிவபிரானிடம் முறையிடுதல்*

***9320. படியைப் பார்த்தனர்; பரவையைப் பார்த்தனர்; படர் வான்***
***முடியைப் பார்த்தனர்; பார்த்தனர், நெடுந் திசை முழுதும்;***
***வெடியப் பார்ப்பது ஓர் வெள்ளிடை கண்டிலர்; மிடைந்த***
***கொடியைப் பார்த்தனர்; வேர்த்தனர், வானவர் குலைந்தார்.***

***வானவர்*** - *தேவர்கள்;* ***படியைப் பார்த்தனர்*** - *நிலவுலகத்தைப் பார்த்தார்கள்;* ***பரவையைப் பார்த்தனர*** - *கடலிடத்தைப் பார்த்தார்கள்;* ***படர் வான் முடியைப் பார்த்தனர்*** - *எங்கெங்கும் பரவியுள்ள ஆகாயத்தின் உச்சியைப் பார்த்தார்கள்;* ***நெடும் திசை முழுதும் பார்த்தனர்*** - *நீண்ட திசைகள் முழுவதையும் பார்த்தார்கள்;* ***வெடியப் பார்ப்பது ஓர் வெள்ளிடை கண்டிலர்*** - *(அரக்கர் சேனை இல்லா இடம்) ஒழிந்ததால் பார்ப்பதற்கு ஒரே ஒரு வெற்றிடத்தைக்கூட அவர்கள் காணவில்லை;* ***மிடைந்த கொடியைப் பார்த்தனர்*** - *நெருங்கிச் செறிந்த கொடிகளைப் பார்த்தார்கள்;* ***வேர்த்தனர் குலைந்தார்*** - *அச்சத்தால் உடல் வேர்த்தவராய் மனம் குலைந்தார்கள்.*

***9321. உலகில் நாம் அலா உரு எலாம் இராக்கத உருவா,***
***அலகு இல் பல் படை பிடித்து அமர்க்கு எழுந்தவோ?***
***அன்றேல்***
***விலகு நீர்த் திரை வேலை ஓர் ஏழும் போய் விதியால்***
***அலகு இல் பல் உருப் படைத்தனவோ?' என***
***அயிர்த்தார்.***

***உலகில் நாம் அலா உரு எலாம்*** - *உலகத்தில் நம்மைத் தவிர உள்ள எல்லா உருவங்களும்;* ***இராக்கத உருவா*** - *அரக்கர் உருவாகி;* ***அலகு இல்பல் படை பிடித்து*** - *அளவில்லாத பல வகைப் போர்க்கருவிகளை ஏந்தி;* ***அமர்க்கு எழுந்தவோ*** - *போர் செய்வதற்குப் புறப்பட்டு வந்தனவோ?* ***அன்றேல்*** - *அவ்வாறு இல்லையென்றால்;* ***விலகு நீர்த்திரை*** - *விலகிச் செல்லுகின்ற நீர் அலைகளையுடைய;* ***வேலை ஓர் ஏழும் போய்*** - *ஏழு கடல்களும் சென்று;* ***விதியால்*** - *முறைப்படி;* ***அலகுஇல் பல் உருப் படைத்தனவோ*** - *அளவில்லாத பல வடிவங்களை உண்டாக்கினவோ?* ***என அயிர்த்தார்*** - *என்று ஐயப்பட்டனர்.*

***9322. நடுங்கி, நஞ்சு அடை கண்டனை, வானவர், 'நம்ப!***
***ஒடுங்கி யாம் கரந்து உறைவிடம் அறிகிலம்; உயிரைப்***
***பிடுங்கி உண்குவர்; யார் இவர் பெருமை பண்டு***
***அறிந்தார்?***

***முடிந்தது, எம் வலி? என்றனர், ஓடுவான் முயல்வார்.***

***வானவர்*** - *தேவர்கள்;* ***நடுங்கி*** - *(அச்சத்தால்) நடுங்கி, ஓடுவான் முயல்வார் - ஓடத் தொடங்கியவர்கள்;* ***நஞ்சு அடை கண்டனை*** - *நஞ்சு தங்கிய கழுத்துடைய சிவபிரானை (அடைந்து)* ***நம்ப*** - *(எம்) தலைவனே;* ***யாம் கரந்து ஒடுங்கி உறைவிடம் அறிகிலம்*** - *நாங்கள் (இந்த அரக்கரிடமிருந்து தப்பி) மறைந்து ஒடுங்கி வாழ்வதற்கு ஏற்ற இடத்தை அறிகிலேம்;* ***உயிரைப் பிடுங்கி உண்குவர்*** - *நாங்கள் மறைந்து ஒடுங்கி விடவில்லையென்றால் எம் உயிரைப் பறித்து உண்டுவிடுவார்கள்;* ***இவர் பெருமை*** - *இவ் அரக்கர்களின் பெருமையை;* ***பண்டு அறிந்தார் யார்*** - *முன்பு தெரிந்தவர்கள் யார்? (எவரும் இல்லை);* ***முடிந்தது எம் வலி என்றனர்*** - *எங்கள் வலிமையெல்லாம் அழிந்தது என்றனர்.*

***9323. 'ஒருவரைக் கொல்ல, ஆயிரம் இராமர் வந்து,***
***ஒருங்கே***
***இருபதிற்றிரண்டு ஆண்டு நின்று அமர் செய்தால்,***

***என் ஆம்?***
***நிருதரைக் கொல்வது, இடம் பெற்று ஓர் இடையில்***
***நின்று அன்றோ?***
***பொருவது, இப் படை கண்டு, தம் உயிர் பொறுத்து***
***அன்றோ?'***

**ஒருவரைக் கொல்ல** - *இந்த அரக்கருள் ஒருவனைக் கொல்ல வேண்டுமென்றாலும்;* **ஆயிரம் இராமர் ஒருங்கே வந்து** - *ஆயிரம் இராமர்கள் ஒன்றாகச் சேர்ந்து வந்து;* **இரு பதிற்றிரண்டு ஆண்டு** - *இருபத்து நான்கு ஆண்டுக்காலம்;* **நின்று அமர் செய்தால் என் ஆம்** - *புறமுதுகு இட்டு ஓடாமல் உறுதியாக நிலைத்து நின்று போர் செய்தாலும் என்ன விளைவு ஆகப்போகிறது? (ஒன்றும் செய்துவிட முடியாது);* **நிருதரைக் கொல்வது** - *அரக்கர்களைக் கொல்வதென்பது;* **இடம் பெற்று ஓர் இடையில் நின்று அன்றோ** - *நிற்பதற்குப் போர்க்களத்தில் இடம் பெற்று, அந்த ஓரிடத்தில் உறுதியாக நின்றபிறகு அன்றோ? (நிற்பதற்கு இடம் கிடைக்கவும் போவதில்லை; ஓர் இடத்தில் நின்று போர் செய்ய முடியப்போவதும் இல்லை என்பதாம்.)* **பொருவது** - *போர் செய்வதென்பது;* **இப்படை கண்டு** - *இந்தப் படையைக் கண்ட பிறகும்;* **தம் உயிர் பொறுத்து அன்றோ?** - *தங்கள் உயிரைத் தாங்கி நிற்கும் சாகசம் பெற்றால் அன்றோ? பதிற்றிரண்டு - பன்னிரண்டு. இரு பதிற்றிரண்டு - இரண்டு பன்னிரண்டுகள்; இருபத்து நான்கு. இருபதிற்றிரண்டு எனப்பிரியாது இருபதிற்றி இரண்டு - எனப்பிரித்து நாற்பதாண்டுகள் என்பார் உளர். பன்னிரண்டு என்பது ஒரு வியாழ வட்டம். எனவே ஒரு வியாழ வட்டங்கள் இருபத்து நான்கு என்றாராம்.*

***9324. என்று இறைஞ்சலும், மணி மிடற்று இறைவனும்***
***'இனி, நீர்***
***ஒன்றும் அஞ்சலிர்; வஞ்சனை அரக்கரை ஒருங்கே***
***கொன்று நீக்கும், அக் கொற்றவன்; இக் குலம்***
***எல்லாம்***
***பொன்றுவிப்பது ஓர் விதி தந்ததாம்' எனப்***
***புகன்றான்.***

**என்று இரைஞ்சலும்** - *மேற்குறித்தவாறு முறையிட்டுத் தேவர்கள் வணங்கிய அளவில்;* **மணி மிடற்று இறைவனும்** - *நீல மணியை ஒத்த நிறம் கொண்ட கழுத்தினையுடைய சிவபிரான்;* **இனி நீர் ஒன்றும் அஞ்சலிர்** - *இதுவரை அஞ்சியிருந்தது போதும் இனிமேல் நீங்கள் சிறிதும் அஞ்சாதீர்கள்;* **அக்கொற்றவன்** - *அந்த வெற்றி கொள்ளும் இராமன்;* **வஞ்சனை அரக்கரை ஒருங்கே கொன்று நீக்கும்** - *வஞ்சகராகிய அரக்கர் அனைவரையும் கொன்று நீக்குவான்;* **இக்குலம் எல்லாம் பொன்றுவிப்பது** - *இந்த அரக்கர் குலம் முழுவதையும் கொல்லுவதாகிய;* **ஓர் விதி** - *ஒப்பற்ற ஊழ்வினை;* **தந்தது** - *இவர்களை இங்கே கொண்டு வந்து சேர்த்திருக்கிறது;* **எனப் புகன்றான்** - *என்று கூறினான்.*

ஆம் - உரையசை.

*மூலபலச் சேனையைக் கண்டு வானரர் அஞ்சி ஓடுதல்*

**9325. புற்றின்நின்று வல் அரவுஇனம் புறப்பட, பொருமி,**
**'இற்றது, எம் வலி' என விரைந்து இரிதரும் எலிபோல்**
**மற்ற வானரப் பெருங் கடல் பயம் கொண்டு மறுகி,**
**கொற்ற வீரரைப் பார்த்திலது; இரிந்தது, குலைவால்.**

**புற்றின் நின்று வல் அரவு இனம் புறப்பட** - புற்றுகளிலிருந்து வலிய பாம்புக்கூட்டங்கள் புறப்படக் கண்டு; **பொருமி** - பொருமிக்கொண்டு; **எம் வலி இற்றது** - எங்கள் ஆற்றல்அழிந்தது; **என** - என்று சொல்லிக்கொண்டு; **விரைந்து இரிதரும் எலிபோல்** - விரைவாக ஓடுகின்ற எலிக்கூட்டம் போல; **மற்ற வானரப் பெருங்கடல்** - மற்று அங்கு உள்ள வானர சேனையாகிய பெரிய கடல் (கடல் போன்ற பெரிய வானர வீரர்கள்); **பயம் கொண்டு மறுகி** - அச்சம் கொண்டு கலங்கி; **கொற்ற வீரரைப் பார்த்திலது** - வெற்றிக்கு உரிய இராம இலக்குவராகிய வீரர்கள் தம் பக்கல் இருக்கிறார்கள் என்பதைக் கருதிப்பார்க்கவில்லையாய்; **குலைவால் இரிந்தது** - மன நடுக்கத்தோடு ஓடியது.

'எலிப் பகை நாகம் உயிர்ப்பக் கெடும்' (திருக்குறள் 763) என்ற குறட்கருத்தை நினைவு கூர்க. இக்கருத்து முன்னும் 'எலியெலாம் இப்படை அரவம் யான்' (கம்ப. 2312) என வந்தது. 'அரவின் நாமத்தை எலி இருந்து ஓதினால் அதற்கு விரவும் நன்மை என்' (கம்ப. 6238) என இரணியன் கூற்றிலும் வந்தது.

**9326. அணையின்மேல் சென்ற, சில சில; ஆழியை நீந்தப்**
**புணைகள் தேடின, சில; சில நீந்தின போன;**
**துணைகளோடு புக்கு, அழுந்தின சில; சில தோன்றாப்**
**பணைகள் ஏறின; மலை முழை புக்கன, பலவால்.**

**சில சில அணையின் மேல் சென்ற** - மூல பலச் சேனையைக் கண்டு ஓடிய வானரங்களில் சிலசில தாம் கட்டிய அணைமேல் தப்பி ஓடின; **சில ஆழியை நீந்தப் புணைகள் தேடின** - வேறு சில வானரங்கள் கடலை நீந்திக் கடப்பதற்குத் தெப்பம் தேடின; **சில நீந்தின போன** - மேலும் சில வானரங்கள் கடலில் நீந்திச் சென்றன; **சில துணைகளோடு புக்கு அழுந்தின** - மற்றும் சில வானரங்கள் துணைவந்த வானரங்களோடு கடலில் மூழ்கின; **சில தோன்றாப் பணைகள் ஏறின** - இன்னும் சில வானரங்கள் பார்ப்போர்க்குத் தெரியாத மரக்கிளைகளில் ஏறிக்கொண்டன; **பல, மலை முழை புக்கன** - பல வானரங்கள் மலைக்குகைகளுக்குள் புகுந்தன.

*ஆல் - அசை.*

## *9327. 'அடைத்த பேர் அணை அளித்தது நமக்கு உயிர்; அடைய*
## *உடைத்துப் போதுமால், அவர் தொடராமல்' என்று, உரைத்த;*
## *'புடைத்துச் செல்குவர், விசும்பினும்' என்றன; 'போதோன்*
## *படைத்த திக்கு எலாம் பரந்தனர்' என்றன, பயத்தால்.*

***அடைத்த பேர் அணை நமக்கு உயிர் அளித்தது** - கடலைத் தூர்ப்பதற்காக நாம் அமைத்த பெரிய அணை இப்போது நமக்கு உயிர் அளித்தது; **அவர் தொடராமல் அடைய உடைத்துப் போதும்** - நம்மைப் பிடிப்பதற்கு அந்த அரக்கர் தொடர்ந்து வர முடியாமல் அணை முழுவதையும் உடைத்துக் கொண்டே போவோம். **விசும்பினும் புடைத்துச் செல்குவர் என்றன** - தப்பி ஓடுகின்ற நம்மை ஆகாய வழியிலும் வந்து அடித்துப் போடுவார்கள்; **போதோன் படைத்த திக்கு எலாம் பரந்தனர்** - தாமரை மலரில் உள்ள நான்முகன் படைத்த எல்லாத் திசைகளிலும் அவ் அரக்கர்கள் பரவியுள்ளனர்; **என்றன பயத்தால்** - பயங்கொண்டமையால் இவ்வாறு (வானரங்கள்) கூறின.*

## *9328. அரியின் வேந்தனும், அனுமனும், அங்கதன் அவனும்*
## *பிரியகிற்றிலர் இறைவனை, நின்றனர் பின்றார்;*
## *இரியலுற்றனர் மற்றையோர் யாவரும்; எறி நீர்*
## *விரியும் வேலையும் கடந்தனர்; நோக்கினன், வீரன்.*

***அரியின் வேந்தனும் அனுமனும் அங்கதன் அவனும்** - குரங்குகளின் அரசனாகிய சுக்கிரீவன், அனுமன், அங்கதன், ஆகியோர்; **இறைவனைப் பிரியகிற்றிலர்** - தலைவனாகிய இராமனைப் பிரிய முடியாதவர்களாய்; **பின்றார் நின்றனர்** - பின்னிட்டு ஓடாமல் நின்றனர்; **மற்றையோர் யாவரும் இரியலுற்றனர்** - வானரர் படையில் இருந்த மற்றவர் எல்லோரும் ஓடலாயினர்; **எரிநீர் விரியும் வேலையும் கடந்தனர்** - அலை வீசும் நீர் பரந்த கடலையும் தாண்டிச்சென்றனர்; **வீரன் நோக்கினான்** - இந்த நிலையை வீரனாகிய இராமன் பார்த்தான்.*

### *புதிதாக வந்த மூலப்படை பற்றி வீடணனிடம் இராமன் உசாவி அறிதல்*

*9329.* ***'இக்கொடும் படை எங்கு உளது? இயம்புதி' என்றான்;***
***மெய்க் கொடுந் திறல் வீடணன் விளம்புவான்; 'வீர!***
***திக்கு அனைத்தினும், ஏழு மாத் தீவினும், தீயோர்***
***புக்கு அழைத்திடப் புகுந்துளது, இராக்கதப் புணரி.***

***இக்கொடும்படை எங்கு உளது, இயம்புதி என்றான்*** *- 'இதுவரை இல்லாமல் திடீரென இப்போது தோன்றியுள்ள இந்தக் கொடிய படை எங்கே இருப்பது என்று இராமன் கேட்டான்;* ***மெய்க் கொடுந்திறல் வீடணன் விளம்புவான்*** *- சத்தியமாகிய வலிய ஆற்றலனாகிய வீடணன் விளக்கமாகச் சொன்னான்;* ***வீர*** *- வீரனே;* ***இராக்கதப் புணரி*** *- இந்த அரக்கராகிய கடல்;* ***திக்கு அனைத்தினும்*** *- எல்லாத் திசைகளிலும்;* ***ஏழு மாத் தீவினும்*** *- ஏழு பெரிய தீவுகளிலும்;* ***தீயோர் புக்கு அழைத்திட*** *- இலங்கை அரக்கர் புகுந்து அழைத்திடலால்;* ***புகுந்துளது*** *- இலங்கைக்கு வந்துள்ளது.*

*9330.* ***'ஏழ் எனப்படும் கீழ் உள தலத்தின்நின்று ஏறி,***
***ஊழி முற்றிய கடல் எனப் புகுந்ததும் உளதால்;***
***வாழி மற்று அவன் மூல மாத் தானை முன் வருவ;***
***ஆழி வேறு இனி அப் புறத்து இல்லை, வாள் அரக்கர்.***

***ஏழ் எனப்படும் கீழ் உள தலத்தின் நின்று ஏறி*** *- ஏழு எனக் கணக்கிடப்படுகின்ற நிலவுலகின் கீழ் உள்ள பாதாளத்திலிருந்து ஏறி;* ***ஊழி முற்றிய கடல் எனப் புகுந்ததும் உள*** *- பிரளய காலத்தில் உலகத்தைச் சுற்றி வளைக்கின்ற கடல்போல இங்கு வந்து புகுந்துள்ள படைக்கூட்டமும் இச்சேனையுள் உண்டு;* ***முன் வருவ*** *- இப்போது வருவதில் முன்னே வருவது;* ***அவன் மூல மாத்தானை*** *- இராவணனின் மூலபலப் படையாகும்;* ***வாள் அரக்கர் ஆழி*** *- வாளேந்திய கொடிய அரக்கராகிய கடல்;* ***இனி அப்புறத்து வேறு இல்லை*** *- இதற்குமேல் அப்பால் வேறு இல்லை.*

*கீழ் உள தலம் ஏழு; அதல, விதல, சுதல, தராதல, மகாதல, ராசதல, பாதல என்பனவாம். வாழி, ஆல் - அசை.*

*9331.* ***'ஈண்டு, இவ் அண்டத்துள் இராக்கதர் எனும் பெயர் எல்லாம்***
***மூண்டு வந்தது, தீவினை முன் நின்று முடுக்க;***
***மாண்டு விழும் இன்று, என்கின்றது என் மதி; வலி ஊழ்***
***தூண்டுகின்றது' என்று, அடி மலர் தொழுது, அவன்***

**சொன்னான்.**

***அவன்*** - *வீடணன்;* ***அடிமலர் தொழுது*** - *இராமபிரானின் திருவடி மலரில் விழுந்து வணங்கி;* ***இவ் அண்டத்துள் இராக்கதர் எனும் பெயர் எல்லாம்*** - *இந்த அண்டம் முழுவதிலும் இராக்கதர் என்று பெயர் கொண்ட கூட்டம் முழுவதும்;* ***தீவினை முன்நின்று முடுக்க*** - *அவர்கள் செய்த, தீவினை முனைந்து நின்று விரைந்து உந்துவதால்;* ***ஈண்டு*** - *இங்கே;* ***மூண்டு வந்தது*** - *ஏற்பட்டு வந்து சேர்ந்திருக்கிறது;* ***இன்று மாண்டு வீழும் என்கின்றது என் மதி*** - *இன்றைக்கு இவ் அரக்கர் சேனை முழுவதும் இறந்து விழும் என்று என் அறிவு சொல்கிறது;* ***வலி ஊழ் தூண்டுகின்றது*** - *வலிமையான் ஊழானது இங்கு வந்து இறக்க அவர்களைத் தூண்டுகின்றது. என்று சொன்னான்.*

*வானரர்களை அழைத்து வர அங்கதனை இராமன் ஏவுதல்*

***9332. கேட்ட அண்ணலும், முறுவலும் சீற்றமும் கிளர,***
***'காட்டுகின்றனென்; காணுதி ஒரு கணத்து' என்னா***
***ஓட்டின் மேற்கொண்ட தானையைப் பயம் துடைத்து,***
***உரவோய்!***
***மீட்டிகொல்?' என, அங்கதன் ஓடினன் விரைந்தான்.***

***கேட்ட அண்ணலும்*** - *மேற்கண்டவாறு வீடணன் கூறியதைக் கேட்ட இராமபிரான்;* ***முறுவலும் சீற்றமும் கிளர*** - *புன்சிரிப்பும் கோபமும் பொங்கிவர;* ***காட்டுகின்றனென்*** - *என் (வீரச்செயல்) இப்படிப்பட்டது என்பதைக் காட்டுகின்றேன்;* ***ஓர் கணத்தில் காணுதி*** - *(என் சீற்றத்தின் விளைவால் இச்சேனை முழுவதும் அழிவதை) ஒரு கண நேரத்தில் காண்பாயாக;* ***என்னா*** - *என்று (வீடணனிடம்) சொல்லிவிட்டு;* ***உரவோய்*** - *வலிமை மிக்க வீரனே!* ***ஓட்டின் மேற்கொண்ட தானையை*** - *ஓட்டம் பிடித்த சேனை வீரர்களை;* ***பயம் துடைத்து*** - *அவர்கள் கொண்ட அச்சத்தைப் போக்கி;* ***மீட்டி*** - *திரும்பக் கொண்டு வருவாயாக;* ***என*** - *என்று இராமபிரான் சொல்ல;* ***அங்கதன் ஓடினன் விரைந்தான்*** - *அங்கதன் விரைந்து ஓடினான்.*
*முறுவல் வெளியே புலப்படத் தோன்றிய மெய்ப்பாடு. கொல் அசைநிலை. விரைந்து (விரைந்தான்) ஓடினன் என்று இருக்கவேண்டிய தொடர் ஓடினான் விரைந்தான் என மாறிநின்றது. ஓட்டத்தின் வேகத்தைப் புலப்படுத்த முனைந்த கவியின் சொல் ஓட்டம்.*

*அழைத்த அங்கதனுக்குச் சேனைத் தலைவர்கள் பதில் உரைத்தனர்*

***9333. சென்று சேனையை உற்றனன், 'சிறை சிறை***

***கெடுவீர்!***
***நின்று கேட்டபின், நீங்குமின்' எனச் சொல்லி***
***நேர்வான்;***
***'ஒன்றும் கேட்கிலம்' என்றது அக் குரக்குஇனம்;***
***உரையால்***
***வென்றி வெந் திறல் படைப் பெருந் தலைவர்கள்***
***மீண்டார்.***

***சென்று சேனையை உற்றனன்*** - *(இராமபிரான் ஏவிய வண்ணம்) அங்கதன் ஓடிக்கொண்டிருந்த வானர சேனையை அடைந்தான்;* ***சிறை சிறை கெடுவீர்*** - *கண்ட கண்ட பக்கமெல்லாம் சிதறி ஓடுகின்றவர்களே!* ***நின்று கேட்டபின் நீங்குமின்*** - *(நான் சொல்லப்போவதை) நின்று கேட்டபிறகு ஓட வேண்டுமென்று நினைத்தால் பிறகு செல்லுங்கள்!* ***எனச் சொல்லி நேர்வான்*** - *எனச் சொல்லி அவர்களை நெருங்கினான்;* ***அக்குரக்கு இனம்*** - *அங்கதன் கூறியதைக் கேட்ட அந்தக் குரங்குக் கூட்டம்;* ***ஒன்றும் கேட்கிலம் என்றது*** - *நீ சொல்வது எதையும் கேட்க மாட்டோம் என்று சொல்லியது;* ***உரையால்*** - *அங்கதன் சொன்ன சொல்லால்;* ***வென்றி வெந்திறல்*** - *வெற்றியை விளைக்கின்ற கொடிய ஆற்றல் கொண்ட;* ***படைப் பெருந் தலைவர்கள் மீண்டார்*** - *சேனையை நடத்துகின்ற பெரிய சேனைத்தலைவர்கள் (மட்டும்) திரும்பி வந்தார்கள்.*

*தலைவர்கள் முதலில் ஓடினாலும் அங்கதன் சொன்னதைக் கேட்டபின் சற்றே பொறுப்புணர்வு தோன்ற, திரும்பி வந்தனர். இது தலைமைக்குரிய பாங்கு; பொறுப்புணர்வு இல்லாதது தலைமையாகாதே.*

***9334. மீண்டு, வேலையின் வட கரை, ஆண்டு ஒரு***
***வெற்பின்***
***ஈண்டினார்களை, 'என் குறித்து இரிவுற்றது?'***
***என்றான்;***
***'ஆண்ட நாயக! கண்டிலை போலும், நீ அவரை?***
***மாண்டு செய்வது என்?' என்று உரை கூறினர்,***
***மறுப்பார்.***

***மீண்டு*** - *அங்கதன் சொல்லால் திரும்பி;* ***வேலையின் வடகரை ஆண்டு ஒரு வெற்பின்*** - *கடலின் வடக்குக் கரையிலே இருந்த ஒரு மலையிடத்தில்;* ***ஈண்டினார்களை*** - *நெருங்கி வந்த படைத்தலைவர்களை நோக்கி;* ***என் குறித்து இரிவுற்றது என்றான்*** - *எதனை நினைத்து இப்படி ஓடினீர்கள் என்று அங்கதன் கேட்டான்;* ***மறுப்பார்*** - *அங்கதனின் கருத்தை மறுப்பவர்களாய்;* ***ஆண்ட நாயக*** - *எங்களை ஆளாகக் கொண்ட தலைவனே;* ***நீ அவரைக் கண்டிலை போலும்*** - *நீ அந்த அரக்கர்களை (சரியாகப்) பார்க்கவில்லை போல் தெரிகிறது (பார்த்திருந்தால் நீயும் எம்மோடு ஓடி வந்திருப்பாய்);* ***மாண்டு செய்வது என்*** - *வீணாக உயிர் விடுதல் சாதிக்கக்கூடியது என்ன?;* ***என்று உரை கூறினர்*** - *என விடை சொன்னார்கள்.*

***9335. 'ஒருவன் இந்திரசித்து என உள்ளவன் உள நாள்,***
***செருவின் உற்றவை, கொற்றவ! மறத்தியோ?***
***தெரியின்***
***பொரு இல் மற்றவர் இற்றிலர், யாரொடும்***
***பொருவார்;***
***இருவர் வில் பிடித்து, யாவரைத் தடுத்து நின்று***
***எய்வார்?***

**கொற்றவ** - *மன்னனே!* **இந்திரசித்து என உள்ளவன் ஒருவன்** - *இந்திரசித்து என்னும் பெயர் கொண்ட ஒருவன்;* **உள நாள்** - *இருந்த வரையுள்ள காலத்தில்;* **செருவின் உற்றவை மறத்தியோ** - *போரிலே நாம் அடைந்த (வேதனைகளையெல்லாம்) மறந்துவிட்டாயோ;* **தெரியின்** - *இப்போதுள்ள நிலையை ஆராய்ந்து பார்த்தால்;* **பொரு இல் மற்றவர்** - *ஒப்பற்றவர்களாயுள்ள மற்ற அரக்கர்கள்;* **இற்றிலர்** - *(இறந்து போன இந்திர சித்துக்கு) வன்மையால் குறைந்தவர்களல்லர்;* **யாரொடும் பொருவார்** - *எவருடனும் போர் செய்வார்கள்;* **இருவர் வில் பிடித்து** - *(அரக்கர்கள் அத்தனை பேரும் எவருடனும் போர் செய்வாராயின்) இராம, இலக்குவர் இருவர் மட்டும் வில்லைப் பிடித்து;* **யாவரைத் தடுத்து நின்று எய்வார்** - *இத்துணை அரக்கர்களில் எவரைத்தான் தடுத்து நின்று அம்பு எய்வார்கள்.*

***9336. 'புரம் கடந்த அப் புனிதனே முதலிய புலவோர்***
***வரங்கள் தந்து, உலகு அளிப்பவர் யாவரும்,***
***மாட்டார்,***
***கரந்து அடங்கினர்; இனி, மற்று அவ் அரக்கரைக்***
***கடப்பார்***
***குரங்கு கொண்டு வந்து, அமர் செயும் மானுடர்***
***கொல்லாம்?***

**புரம் கடந்த அப் புனிதனே முதலிய புலவோர் யாவரும்** - *முப்புரத்தை அழித்து வென்ற தூய சிவபிரான் முதலிய தேவர்கள் எல்லாரும்;* **உலகு அளிப்பவர்** - *உலகங்களைக் காப்பவர்கள்;* **வரங்கள் தந்து** - *(இந்தப் பொல்லா அரக்கர்களுக்கெல்லாம்) வரங்களை வழங்கி;* **மாட்டார்** - *(அதனால் தங்கள் கடமையாகிய உலகு காத்தலைச்) செய்ய மாட்டாராய்;* **கரந்து அடங்கினர்** - *(அரக்கர்களை எதிர்த்து ஒழிக்க மாட்டாமல்) மறைந்து அடங்கிப் போய்விட்டார்கள்;* **இனி** - *இதற்கு மேல்;* **அவ் அரக்கரைக் கடப்பார்** - *அந்த அரக்கர்களை வெல்லப் போகிறவர்கள்;* **குரங்கு கொண்டு வந்து** - *தங்களுக்குத் துணையாகக் குரங்குப் படையைக் கொண்டுவந்து;* **அமர் செயும் மானுடர்கொல்** - *போர் செய்கின்ற இந்த இரண்டு மனிதர்கள் தாமா? (முடிகிற காரியமாக இல்லையே!)*

*9337. 'ஊழி ஆயிர கோடி நின்று, உருத்திரனோடும்*
***ஆழியானும் மற்று அயனொடு புரந்தரன் அவனும்,***
***சூழ ஓடினர், ஒருவரைக் கொன்று, தம் தோளால்***
***வீழுமா செய்ய வல்லரேல், வென்றியின் நன்றே!***

**உருத்திரனோடும்** - *அழித்தற் கடவுளாகிய உருத்திர மூர்த்தியோடு;* **ஆழியானும்** - *சக்கராயுதம் ஏந்திய திருமாலும்;* **அயனொடு புரந்தரன் அவனும்** - *பிரமனோடு இந்திரனும்;* **ஆயிர கோடி ஊழி நின்று** - *ஆயிரங்கோடி ஊழிக் காலமாக;* **சூழ ஓடினர்** - *இவ்வரக்கர்களைச் சுற்றிச் சுற்றி ஓடினவர்களாய்;* **ஒருவரைக் கொன்று** - *இந்த அரக்கர்களிடையே ஒரே ஒருவரை மட்டிலுமாவது கொன்று;* **தம் தோளால் வீழுமா செய்ய வல்லரேல்** - *தங்களுடைய தோள்வலிமை கொண்டு செத்து விழுமாறு செய்யும் வல்லமை உடையவராயின்;* **வென்றியின் நன்றே** - *பிற வெற்றிகளையெல்லாம் விடப் பெரியதாகும்.*

*9338. 'என் அப்பா! மற்று, இவ் எழுபது வெள்ளமும்,*
***ஒருவன்***
***தின்னப் போதுமோ? தேவரின் வலியமோ, சிறியேம்?***
***முன் இப் பார் எலாம் படைத்தவன்; நாள் எலாம்***
***முறை நின்று,***
***உன்னிப் பார்த்து நின்று, உறையிடப் போதுமோ,***
***யூகம்?***

**என் அப்பா** - *என் தந்தை போன்றவனே!* **இவ் எழுபது வெள்ளமும்** - *இந்த எழுபது வெள்ளம் வானரசேனை முழுவதும்;* **ஒருவன் தின்னப் போதுமோ** - *அரக்கரில் ஒருவனுக்கேனும் தின்பதற்குப் போதுமா?* **சிறியேம்** - *வடிவாலும் வலிமையாலும் சிறியவர்களாகிய நாங்கள்;* **தேவரின் வலியமோ?** - *பல்வகைப் பேராற்றல் கொண்ட தேவர்களைவிட வலிமை உடையவர்களா? (இல்லை)* **முன் இப் பார் எலாம் படைத்தவன்** - *முன்னே இந்த உலகமெல்லாம் படைத்த பிரமன்;* **நாள் எலாம்** - *தன் வாழ் நாளெல்லாம்;* **முறை நின்று உன்னிப் பார்த்து நின்று** - *முறையாகக் கவனமாகப் பார்த்து நின்று கணக்கிட்டாலும்;* **யூகம்** - *நம் வானரசேனை;* **உறையிடப் போதுமோ** - *உறையிடுவதற் காவது போதுமானதாகுமோ? (ஆகாது).*

*பிரமன் தன் வாழ்நாள் முழுவதும் அரக்கர் சேனையைக் கணக்கிட்டு உணரும் முயற்சியில் வானர சேனை வீரர்களை யாவரையும் உறையிட்டுப் பார்த்தாலும் முடிவு காணமுடியாது. மிகப் பெரிய அளவாக உள்ளவற்றைக் கணக்கிடும்போது நூற்றுக்கு ஒன்றாக அடையாளம் கொண்டு கணக்கிடுவது உறையிடுதல் எனப்படும். வியூகம் என்ற வடமொழிச் சொல் யூகம் எனத் திரிந்து நின்றது. யூகம் - குரங்கு. "உறை இடப்போதுமோ யூகம்" என இயையும்.*

***9339. "நாயகன் தலை பத்து உள; கையும் நால் - ஐந்து"
என்று
ஓயும் உள்ளத்தேம்; ஒருவன் மற்று அவன், வந்து
இங்கு உற்றார்
ஆயிரம் தலை; அதற்கு இரட்டிக் கையர்; ஐயா!
பாயும் வேலையின் கூலத்து மணலினும் பலரால்!***

*__நாயகன்__ - இந்த அரக்கர்களின் தலைவனுக்கு; __தலை பத்து உள__ - பத்துத் தலைகள் இருக்கின்றன; __கையும் நால் ஐந்து__ - கைகள் இருபது; __என்று ஓயும் உள்ளத்தேம்__ - என்று நினைக்கும் போதே தளர்ந்து போகும் உள்ளம் உடையவர்களாய் இருக்கிறோம்; __மற்று அவன் ஒருவன்__ - பத்துத் தலையும் இருபது கைகளும் உடைய அவன் ஒருவன்தான்; __இங்கு வந்து உற்றார்__ - (தலைவனாகிய இராவணன் அப்படி இருக்க) இங்கே போருக்கு வந்துள்ள அரக்கர் ஒவ்வொருவருக்கும்; __ஆயிரம் தலை__ - ஆயிரம் தலைகள்; __அதற்கு இரட்டிக் கையர்__ - அதற்கு இரண்டு மடங்கு கைகள் (இரண்டாயிரம் கைகள்); __ஐயா__ - ஐயனே!; __பாயும் வேலையின்__ - அலை மோதுகின்ற கடலின்; __கூலத்து__ - கரையிலே உள்ள; __மணலினும் பலர்__ - மணலை விட அதிகமானவர்கள்.*

***9340. 'கும்பகன்னன் என்று உளன், மற்று இங்கு ஒருவன்,
கைக்கொண்ட
அம்பு தாங்கவும் மிடுக்கு இலம்; அவன் செய்தது
அறிதி;
உம்பர் அன்றியே, உணர்வு உடையார் பிறர்
உளரோ?
நம்பி! நீயும் உன் தனிமையை அறிந்திலை; நடந்தாய்.***

*__நம்பி!-; கும்பகன்னன் என்று ஒருவன் மற்று இங்கு உளன்__ - கும்பகர்ணன் என்று பெயர் கொண்ட ஒருவன் இங்கு இருந்தான்; __கைக்கொண்ட அம்பு தாங்கவும் மிடுக்கு இலம்__ - அவன் கையில் எடுத்தெய்த அம்பைக்கூடத் தாங்கிக் கொள்ளக்கூடிய வலிமை இல்லாதவர்கள் ஆனோம் நாம்; __அவன் செய்தது அறிதி__ - அவன் செய்த போரின் கொடுமையை நீ அறிவாய்; __உம்பர் அன்றியே__ - தேவர்களைத் தவிர; __உணர்வுடையார் பிறர் உளரோ__ - நல்லது இதுவே என உணரக் கூடியவர்கள் வேறு எவரேனும் இருக்கிறார்களா? (இல்லை); __நீயும் உன் தனிமையை அறிந்திலை நடந்தாய்__ - நீயும் தனியாக உள்ளோம் என்பதை உணராதவனாகி இங்கே வந்தாய்.*

***9341. 'அனுமன் ஆற்றலும், அரசனது ஆற்றலும்., இருவர்
தனுவின் ஆற்றலும், தம் உயிர் தாங்கவும் சாலா;
கனியும் காய்களும் உணவு உள; முழை உள, கரக்க;***

***மனிதர் ஆளின் என், இராக்கதர் ஆளின் என்,***
***வையம்?***

***அனுமன் ஆற்றலும் அரசனது ஆற்றலும்*** - *அனுமன் வலிமையும் நம் மன்னனாகிய சுக்கிரீவனது வலிமையும்;* ***இருவர் தனுவின் ஆற்றலும்*** - *இராமன், இலக்குவன், ஆகிய இரண்டு பேரின் வில் ஆற்றலும்;* ***தம் உயிர் தாங்கவும் சாலா*** - *தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்கே போதா (இப்படிப்பட்ட நிலையில் நாமெல்லாம் பிழைத்திருக்க முடியுமா?);* ***கனியும் காய்களும் உணவு உள*** - *உண்பதற்குப் பழங்களும் காய்களும் இருக்கின்றன;* ***கரக்க முழை உள*** - *மறைந்து கொள்ள குகைகள் இருக்கின்றன;* ***வையம்*** - *இந்த உலகத்தை;* ***மனிதர் ஆளின் என் இராக்கதர் ஆளின் என்*** - *மனிதர்கள் ஆண்டால் என்ன, அரக்கர்கள் ஆண்டால் என்ன (அதைப் பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?)*

*இராமன் ஆண்டால் என்ன இராவணன் ஆண்டால் என்ன என்ற பழமொழி பிறந்த சூழலை இப்பாட்டு உணர்த்துகிறது.*

***9342. 'தாம் உளார் அன்றே புகழினைத் திருவொடும்***
***தரிப்பார்?***
***யாம் உளோம் எனின், எம் கிளை உள்ளது; எம்***
***பெரும!***
***''போமின் நீர்'' என்று விடை தரத் தக்கனை,***
***புரப்போய்!***
***''சாமின் நீர்'' என்றல் தருமம் அன்று'' என்றனர்,***
***தளர்ந்தார்.***

***எம் பெரும !*** - *எங்கள் தலைவனே!* ***தாம் உளார் அன்றே புகழினைத் திருவொடும் தரிப்பார்*** - *தாம் உயிரோடு இருப்பவர்கள் தாமே புகழைச் செல்வத்தோடு தாங்கியிருப்பார்கள்?* ***யாம் உளோம் எனின்*** - *நாங்கள் உயிரோடு இருந்தால்தான்;* ***எம் கிளை உள்ளது*** - *எங்கள் சுற்றமும் இருப்பதாகும்;* ***புரப்போய்*** - *எங்களைப் பாது காப்பவனே;* ***போமின் நீர் என்று விடைதரத் தக்கனை*** - *இந்தப் போர்க்களத்தை விட்டு நீங்கள் செல்லுங்கள் என்று விடை கொடுத்து எங்களை அனுப்புதற்கு உரியவனாகிய நீ;* ***சாமின் நீர் என்றால் தருமம் அன்று*** - *நீங்கள் யாவரும் (இங்கே அரக்கரால்) சாவீராக என்று கூறுதல் அறமாகாது;* ***என்றனர் தளர்ந்தார்*** - *என்று மனம் தளர்ந்தவர்களாய்க் கூறினர்;*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***9343. ''சாம்பனை வதனம் நோக்கி, வாலிசேய், 'அறிவு***

***சான்றோய்!***
***''பாம்புஅணை அமலனே மற்று இராமன்'' என்று,***
***எமக்குப் பண்டே***
***ஏம்பல் வந்து எய்தச் சொல்லித் தேற்றினாய்***
***அல்லையோ, நீ?***
***ஆம்பல் அம் பகைஞன்தன்னோடு அயிந்திரம்***
***அமைந்தோன் அன்னாய்!***

***வாலி சேய்*** - *வாலியின் மகனான அங்கதன்;* ***சாம்பனை வதனம் நோக்கி*** - *சாம்பவானின் முகத்தைப் பார்த்து;* ***ஆம்பல் அம பகைஞன் தன்னோடு அயிந்திரம் அமைந்தோன் அன்னாய்*** - *ஆம்பற் பூவுக்குப் பகைவனாகிய சூரியனோடு இலக்கணம் கற்றறிந்த அனுமனை ஒத்தவனே!* ***அறிவு சான்றோய்!*** - *அறிவால் நிறைந்தவனே;* ***பாம்பு அணை அமலனே மற்று இராமன் என்று*** - *பாம்புப் படுக்கையில் எழுந்தருளியுள்ள திருமாலே இராமன் என்று;* ***எமக்குப் பண்டே*** - *முன்பே எங்களுக்கு;* ***ஏம்பல் வந்து எய்தச் சொல்லி*** - *மகிழ்ச்சி வந்து சேரும் வகையாகச் சொல்லி;* ***தேற்றினாய் அல்லையோ நீ*** - *தெளிவித்தவன் நீ அல்லவா?*

*'உன்னை நீ அறிகிலை அடியனேன் உனை முன்னமே அறிகுவேன் (8784) என்று இராமபிரான் இன்னான் என்று தான் முன்பே அறிந்துளதாக இராமபிரானிடமே சாம்பவான் கூறும் இடம் ஒன்று உண்டு.*

***9344. 'தேற்றுவாய் தெரிந்து சொல்லால் தெருட்டுவாய்***
***தெளிவிலோரை***
***ஆற்றுவாய் அல்லை; நீயும் அஞ்சினை போலும்! ஆவி***
***போற்றுவாய் என்ற போது, புகழ் என் ஆம்? புலமை***
***என ஆம்?***
***கூற்றின்வாய் உற்றால், வீரம் குறைவரே இறைமை***
***கொண்டார்?***

***தெரிந்து தேற்றுவாய்*** - *நிலைமையை நன்றாகத் தெரிந்து கொண்டபின் கலக்கமுற்றவர்களைத் தேற்றுவாய்;* ***தெளிவிலோரைச் சொல்லால் தெருட்டுவாய்*** - *அறிவிலே தெளிவில்லாதவர்களை உன் தெளிவான சொல்லால் தெளிவு படுத்துவாய்;* ***ஆற்றுவாய் அல்லை*** - *அப்படிப்பட்ட நீயே இப்போது எதிரிகளின் ஆற்றலைத் தாங்க முடியாதவனாகி விட்டாய்;* ***நீயும் அஞ்சினை போலும்*** - *நீ கூடப் பயந்து விட்டாயோ?* ***ஆவி போற்றுவாய் என்றபோது*** - *வீரத்தையும் குறிக்கோளையும் போற்றாமல் உன் உயிரையே பெரிது எனப் போற்றுகிறாய் என்றால்;* ***புகழ் என் ஆம்*** - *புகழ் என்ன ஆகும்?* ***புலமை என் ஆம்*** - *அறிவுதான் என்னாகும்?* ***இறைமை கொண்டார்*** - *தலைமைப் பண்பு கொண்டவர்;* ***கூற்றின் வாய் உற்றால்*** - *யமன் வாயில் அகப்பட்டு விட்டால்;* ***வீரம் குறைவரே*** - *வீரத்தில் குறைவு படுவார்களோ? (வீரத்தில் குறையார் என்பது இயல்பு)*

*9345.* ***'அஞ்சினாம்; பழியும் பூண்டாம்; அம் புவி யாண்டும், ஆவி***
***துஞ்சுமாறு அன்றி, வாழ ஒண்ணுமோ, நாள்மேல் தோன்றின?***
***நஞ்சு வாய் இட்டாலன்னது அமுது அன்றோ? நம்மை, அம்மா,***
***தஞ்சம் என்று அணைந்த வீரர் தனிமையின் சாதல் நன்றே!***

***அஞ்சினாம்*** - *நாம் இப்போது அஞ்சியவர்களானோம்;* ***பழியும் பூண்டாம்*** - *ஆகையால் பழியையும் மேற்கொண்டு விட்டோம்;* ***அம் புவி யாண்டும்*** - *அழகிய இந்தப் பூமியில் எங்குச் சென்றாலும்;* ***துஞ்சுமாறு அன்றி வாழ ஒண்ணுமோ*** - *சாவைத் தவிர வாழமுடியுமா?* ***நாள் மேல் தோன்றின்*** - *சாவு வருதற்குரிய நாள் நம் முன்னே வந்து தோன்றினால்;* ***நஞ்சு வாய் இட்டாலன்னது அமுது அன்றோ*** - *நஞ்சினை வாயிலிட்டது போல்வதாகிய அமுதம் அல்லவா?* ***நம்மைத் தஞ்சம் என்று அணைந்த*** - *நம்மை பற்றுக்கோடு என்று கொண்டு சேர்ந்த;* ***வீரர்*** - *இராம இலக்குவர் ஆகிய வீரர்கள்;* ***தனிமையின் சாதல் நன்றே*** - *நாம் துணையாக நிற்காமல் விலகிவிட்டதால் அவர்கள் தனிமையில் சாவது; இது நல்லதாகுமா?*

*அம்மா - வியப்பிடைச் சொல்.*

*9346.* ***'தானவரோடும், மற்றைச் சக்கரத் தலைவனோடும்,***
***வானவர் கடைய மாட்டா மறி கடல் கடைந்த வாலி***
***ஆனவன் அம்பு ஒன்றாலே உலந்தமை அயர்த்தது என் நீ?***
***மீன் அலர் வேலை பட்டது உணர்ந்திலைபோலும்? - மேலோய்!***

***மேலோய் !*** - *நீ எங்களிலே யாவரினும் மேம்பட்டவனே!* ***தானவரோடும் மற்றைச் சக்கரத் தலைவனோடும்*** - *அசுரர்களோடும் சக்கராயுதம் ஏந்திய திருமாலோடும் சேர்ந்து;* ***வானவர் கடைய மாட்டா மறிகடல்*** - *தேவர்கள் கடைய முடியாமல் தளர்ந்த போது அலைகள் மறித்துவிழும் அந்தக் கடலை;* ***கடைந்த வாலி ஆனவன்*** - *கடைந்த வாலி என்பவன்;* ***அம்பு ஒன்றாலே*** - *இராமன் செலுத்திய ஒரே அம்பினால்;* ***உலந்தமை நீ அயர்த்தது என்?*** - *இறந்ததை நீ மறந்தது ஏன்?* ***மீன் அலர் வேலைபட்டது*** - *மீன்கள் நிறைந்து விளங்குகின்ற கடல்பட்ட துன்பத்தை;* ***உணர்ந்திலை போலும்*** - *(நேரே கண்டிருந்தும் அதனில் விளங்கும் இராமபிரான் சிறப்பினை மனத்தில் பதியுமளவுக்கு) உணரவில்லை போலும்.*

*9347.* ***'எத்தனை அரக்கரேனும், தருமம் ஆண்டு இல்லை அன்றே;***
***அத்தனை அறத்தை வெல்லும் பாவம் என்று அறிந்தது உண்டோ?***
***பித்தரைப் போல நீயும் இவருடன் பெயர்ந்த தன்மை***
***ஒத்திலது' என்னச் சொன்னான், அவன் இவை உரைப்பதானான்;***

***எத்தனை அரக்கரேனும்*** - *எதிர்த்து வந்துள்ள அரக்கர்கள் மிகவும் பலராக இருந்தாலும்;* ***ஆண்டுத் தருமம் இல்லை அன்றே*** - *அந்தப் பக்கத்தில் தருமம் இல்லையன்றோ? (எனவே*

*அவர்களுக்கு வெற்றி கிடைக்காது)* ***அத்தனை அறத்தை*** - *மிகப் பெரிதாகிய தருமத்தை;* ***பாவம் வெல்லும் என்று அறிந்தது உண்டோ*** - *பாவம் வென்றுவிடும் என அனுபவத்தில் அறிந்தது உண்டா? (இல்லையே);* ***பித்தரைப் போல*** - *அறிவும் மனமும் குழம்பிய பயித்தியக்காரர்களைப் போல;* ***நீயும் இவருடன் பெயர்ந்த தம்மை*** - *நீ கூட இவர்களோடு நீங்கிவந்த பாங்கு;* ***ஒத்திலது*** - *உன் தகைமைக்கு ஏற்றதாகப் பொருந்தவில்லை;* ***என்னச் சொன்னான்*** - *என்று அங்கதன் கூறினான்;* ***அவன் இவை உரைப்பதானான்*** - *அதைக் கேட்ட சாம்பவான் இவற்றை (வரும் சொற்களை)ச் சொல்லலானான்.*

## *சாம்பவான் மறுமொழி*

*9348.* ***நாணத்தால் சிறிது போது நலங்கினன் இருந்து, பின்னர்***
***'தூண் ஒத்த திரள் தோள் வீர! தோன்றிய அரக்கர் தோற்றம்***
***காணத்தான், நிற்கத்தான், அக் கறை மிடற்றவற்கும் ஆமே?***
***கோணற் பூ உண்ணும் வாழ்க்கைக் குரங்கின்மேல் குற்றம் உண்டோ?***

***சிறிது போது நாணத்தால் நலங்கினன் இருந்து*** - *சிறிது நேரம் சாம்பவான் வெட்கத்தால் கலங்கியிருந்து;* ***பின்னர்*** - *பிறகு (அங்கதனை நோக்கி);* ***தூண் ஒத்த திரள் தோள் வீர!*** - *தூண்போலத் திரண்ட தோள் கொண்ட வீரனே!* ***தோன்றிய அரக்கர் தோற்றம்*** - *பேரளவிலும் பெரிய உருவிலும் தோன்றியுள்ள அரக்கர்களின் அஞ்சத்தக்க காட்சியை;* ***காணத்தான் நிற்கத்தான்*** - *பார்க்கவோ பார்த்தபின்*

*துணிவுடன் நிற்கவோ;* **அக்கறை மிடற்றவற்கும் ஆமே** - *நஞ்சுக் கறை கொண்ட அந்த நீலகண்டனானும் முடிகிற காரியமா (முடியாதே) அப்படியிருக்க)* **பூ உண்ணும் வாழ்க்கை** - *பூக்களைத் தின்று வாழும் எளிய வாழ்க்கையுடைய;* **கோணற் குரங்கின் மேல் குற்றம் உண்டோ** - *கூனி நிற்பதை இயல்பாகவே கொண்ட குரங்குகளிடம் குற்றம் உண்டா? (இல்லை)*

***9349. 'தேவரும் அவுணர்தாமும் செருப் பண்டு செய்த காலம்,***
***ஏவரே என்னால் காணப்பட்டிலர்? இருக்கை ஆன்ற***
***மூவகை உலகின் உள்ளார்; இவர் துணை ஆற்றல் முற்றும்***
***பாவகர் உளரே? கூற்றை அஞ்சினால், பழியும் உண்டோ?***

**தேவரும் அவுணர் தாமும்** - *தேவர்களும் அசுரர்களும்;* **பண்டு செருச் செய்த காலம்** - *முன்பு போர் செய்த காலத்தில்;* **என்னால் காணப் பட்டிலர் ஏவரே** - *என்னால் காணப்படாதவர்கள் யார்?* **இருக்கை ஆன்ற மூவகை உலகின் உள்ளார்** - *நிலை பெறுதல் மிக்க மூன்று உலகிலும் வாழ்வோரில்;* **இவர் துணை ஆற்றல் முற்றும் பாவகர் உளரே** - *இந்த அரக்கர்கள் அளவுக்கு ஆற்றல் நிரம்பிய கொடியவர்கள் இருக்கிறார்களா?;* **கூற்றை அஞ்சினால் பழியும் உண்டோ** - *யமனுக்குப் பயந்தால் அந்த மரண அச்சம் காரணமாகப் பழி உண்டோ?*

*உளரே, உண்டோ - இரண்டும் எதிர்மறைப் பொருள் தரும் வினாக்கள். துணை - அளவு.*

***9350. 'மாலியைக் கண்டேன்; பண்டை மாலியவானைக் கண்டேன்;***
***கால நேமியையும் கண்டேன்; இரணியன்தனையும் கண்டேன்;***
***ஆல மா விடமும் கண்டேன்; மதுவினை அனுசனோடும்***
***வேலையைக் கலக்கக் கண்டேன்; இவர்க்கு உள மிடுக்கும் உண்டோ?***

**மாலியைக் கண்டேன்** - *மாலியைக் கண்டவன் நான்;* **பண்டை மாலியவானைக் கண்டேன்** - *பழங்காலத்து மாலியவானையும் பார்த்தவன் நான்;* **கால நேமியையும் கண்டேன்** - *கால நேமியையும் பார்த்திருக்கிறேன்;* **இரணியன் தனையும் கண்டேன்** - *இரணியனையும் பார்த்திருக்கிறேன்;* **ஆலமாவிடமும் கண்டேன்** - *ஆலகாலமாகிய பெரு நஞ்சையும் நான் பார்த்துள்ளேன்;* **மதுவினை அனுசனோடும் வேலையைக்**

***கலக்கக் கண்டேன்*** - *மது என்ற அரக்கனோடு அவன் தம்பியாகிய கைடபன் ஆகிய இருவரும் கடலைக் கலக்கியதையும் பார்த்திருக்கிறேன்;* **இவர்க்கு உள மிடுக்கும் உண்டோ** - *இங்கே தோன்றியுள்ள அரக்கர்களுக்கு உள்ள வலிமை நான் மேலே சொன்ன அரக்கர்களுக்கு உண்டோ? இல்லை; அவர்கள் அத்தனை பேரையும் விட இவர்கள் வலிமை மிக்கவர்கள்.*

***9351. 'வலி இதன் மேலே, பெற்ற வரத்தினர்; மாயம் வல்லார்;***
***ஒலி கடல் மணலின் மிக்க கணக்கினர்; உள்ளம் நோக்கின்;***
***கலியினும் கொடியர்; கற்ற படைக்கலக் கரத்தர்; என்றால்,***
***மெலிகுவது அன்றி உண்டோ, விண்ணவர் வெருவல் கண்டால்?***

**வலி இதன் மேலே** - *இத்தகைய வலிமைக்கு மேலே;* **பெற்ற வரத்தினர்** - *தேவர்களிடமிருந்து பெற்ற வரங்களையும் உடையவர்கள்;* **மாயம் வல்லார்** - *வலிமை வரம் ஆகியவற்றோடு மாயங்களிலும் வல்லவர்கள்;* **ஒலி கடல் மணலின் மிக்க கணக்கினர்** - *ஒலிக்கின்ற கடலில் உள்ள மணலை விட மிகுந்த எண்ணிக்கை உடையவர்கள்;* **உள்ளம் நோக்கின்** - *இவர்களுடைய மனம் எத்தகையது என்று பார்த்தால்;* **கலியினும் கொடியர்** - *கலி புருஷனை விட கொடியவர்கள்;* **படைக்கலங்கற்ற கரத்தர்** - *போர்க் கருவிகளைக் கையாளுவதில் தேர்ச்சி பெற்ற கைகளை உடையவர்கள்;* **என்றால்** - *என்று இவ்வாறானால்;* **விண்ணவர் வெருவல் கண்டால்** - *இவர்களை நினைத்தும் பார்த்து தேவர்களே அஞ்சுவதை நோக்கினால்;* **மெலிகுவது அன்றி உண்டோ** - *எளியவர்களாகிய நாங்களெல்லாரும் தளர்வது தவிர வேறு வழி உண்டா?*

***9352. 'ஆகினும், ஐய! வேண்டினார்க் கென அமரின் அஞ்சிச்***
***சாகிலம், பெயர்ந்த தன்மை பழி தரும்; நரகில் தள்ளும் ஏகுதும், மீள; இன்னும் இயம்புவது உளதால்; எய்தி***
***மேகமே அனையான் கண்முன் எங்ஙனம் விழித்து நிற்றும்?***

***ஐய*** - *ஐயனே!* **ஆகினும்** - *எங்கள் செயல் இப்படியாகி விட்டாலும்;* **வேண்டினார்க்கு என** - *நம் உதவியை வேண்டி வந்தவர்களுக்காக;* **அமரின் சாகிலம்** -

*போரில் ஈடுபட்டுச் சாகாதவர்களாய்;* ***அஞ்சிப் பெயர்ந்த தன்மை*** *- அரக்கர்களுக்கு அஞ்சி விலகி வந்து விட்ட தன்மை;* ***பழி தரும்*** *- நமக்குப் பழியைத் தரும் (மேலும்);* ***நரகில் தள்ளும்*** *- மறுமையிலே நகரத்தில் தள்ளி விடும்;* ***ஏகுதும் மீள*** *- (எனவே, பழியிலிருந்தும் நரகிலிருந்தும் தப்புவதற்காக) மீண்டும் போர்க்களம் போகிறோம்;* ***இன்னும் இயம்புவது உளது*** *- மேலும் சொல்லவேண்டிய ஒன்று இருக்கிறது;* ***எய்தி*** *- போர்க்களத்தை அடைந்து;* ***மேகமே அனையான் கண் முன்*** *- மேகம் போன்றவனாகிய இராமபிரானுக்கு முன்னே சென்று;* ***எங்ஙனம் விழித்து நிற்றும்*** *- எப்படி விழித்து நிற்கப் போகிறோம்?*

*ஆல் - அசை.*

***9353. 'எடுத்தலும், சாய்தல்தானும், எதிர்த்தலும்***
***எதிர்ந்தோர் தம்மைப்***
***படுத்தலும், வீர வாழ்க்கை பற்றினர்க்கு உற்ற,***
***மேல்நாள்;***
***அடுத்ததே அஃது; நிற்க, அன்றியும் ஒன்று கூறக்***
***கடுத்தது; கேட்டீர் நீரும் கருத்துளீர், கருதி***
***நோக்கின்.***

***எடுத்தலும் சாய்தல் தானும்*** *- பகைவரை எதிர்க்கும்போது அவரினும் மிகுதலும் அவரிடம் தோற்பதும்;* ***எதிர்த்தலும்*** *- பகைவர்களை எதிர்த்துத் தாக்குப்பிடித்து நிற்றலும்;* ***எதிர்ந்தோர் தம்மைப் படுத்தலும்*** *- எதிர்த்தவர்களைக் கொல்லுதலும்;* ***வீர வாழ்க்கை பற்றினார்க்கு*** *- வீர வாழ்க்கையை மேற்கொண்டவர்களுக்கு;* ***மேல் நாள்*** *- பழங்காலத்திலிருந்தே;* ***உற்ற*** *- பொருந்தி வருவனவேயாகும்;* ***அஃது அடுத்ததே*** *- அப்படி வருவது பொருத்தமே;* ***நிற்க*** *- அஃது அப்படி ஒரு புறம் இருக்க;* ***அன்றியும்*** *- மேலும்;* ***ஒன்று கூறக் கடுத்தது*** *- ஒரு செய்தியைச் சொல்ல என் நெஞ்சம் விரைகிறது;* ***கேட்டீர் கருதி நோக்கின் நீரும் கருத்துளீர்*** *- எண்ணிப் பார்த்தால் உமக்கும் பெரும் ஆராய்ச்சி உடையதாகும்.*

***9354. 'ஒன்றும் நீர் அஞ்சல், ஐய! யாம் எலாம் ஒருங்கு***
***சென்று***
***நின்றும், ஒன்று இயற்றல் ஆற்றேம்; நேமியான் தானே***
***நேர்ந்து,***
***கொன்று போர் கடக்கும்ஆயின், கொள்ளுதும்***
***வென்றி; அன்றேல்,***
***பொன்றுதும், அவனோடு' என்றான்; 'போதலோ***
***புகழ் அன்று' என்றான்.***

***ஐய! ஒன்றும் நீர் அஞ்சல்*** - *நீர் சிறிதும் அஞ்சல் வேண்டா;* ***யாம் எலாம் ஒருங்கே சென்று நின்றும்*** - *நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து போய் அரக்கர்களை எதிர்த்து நின்றால் கூட;* ***ஒன்று(ம்) இயற்றல் ஆற்றேம்*** - *அரக்கர்களை அழிப்பதில் எதுவும் செய்ய முடியாதவர்கள் நாம்;* ***நேமியான் தானே நேர்ந்து*** - *சக்கரப் படை கொண்ட திருமாலாகிய இராமனே எதிர்த்து நின்று;* ***கொன்று போர் கடக்குமாயின்*** - *அரக்கர்களைக் கொன்று வென்றானானால்;* ***கொள்ளுதும் வென்றி*** - *நாம் வெற்றி பெறுவோம்;* ***அன்றேல்*** - *அப்படி இராமபிரான் வெல்லாவிடின்;* ***அவனோடு பொன்றுதும்*** - *அந்த இராமனோடு நாமும் சாவோம்;* ***என்றான்*** - *எனச் சாம்பவான் சொன்னான்;* ***போதலோ புகழ் அன்று என்றான்*** - *போர்க்களத்தை விட்டுப் போவது புகழாகாது என்றும் அவன் சொன்னான்.*

### *சேனைத்தலைவர் மீள்வதும் அரக்கர் சேனை பற்றி*

### *இலக்குவனிடம் இராமன் உரைத்தலும்*

***9355. 'ஈண்டிய தானை நீங்க, நிற்பது என்? யாமே சென்று***
***பூண்ட வெம் பழியினோடும் போந்தனம்; போதும்'***
***என்னா,***
***மீண்டனர் தலைவர் எல்லாம், அங்கதனோடும்; வீரன்***
***மூண்ட வெம் படையை நோக்கி, தம்பிக்கு மொழிவதானான்:***

***ஈண்டிய தானை நீங்க நிற்பது என்*** - *நெருங்கிய சேனை நிற்க நாம் விலகி நிற்பது ஏன்;* ***யாமே சென்று*** - *நாமே புறப்பட்டு;* ***பூண்ட வெம்பழியினோடும் போந்தனம்*** - *மேற்கொண்ட கொடிய பழியோடு வந்து விட்டோம்;* ***போதும் என்னா*** - *(இனிப் பழி துடைக்க இராமனிடம்) போவோம் என்று முடிவு செய்து;* ***அங்கதனோடு தலைவர் எல்லாம் மீண்டனர்*** - *அங்கதனோடு சேர்ந்து வானரப் படைத்தலைவர்கள் யாவரும் திரும்பி வந்தனர்;* ***மூண்ட வெம் படையை நோக்கி*** - *எதிர்த்தெழுந்த கொடிய அரக்கர் சேனையைப் பார்த்து;* ***வீரன்*** - *இராமன்;* ***தம்பிக்கு மொழிவதானான்*** - *இலக்குவனுக்குச் சொல்லலானான்.*

*மூண்ட வெம்படையை நோக்கி' திரும்பி வந்து செறிந்த வானரப் படையைப் பார்த்து என உரைப்பினும் அமையும்.*

***9356. 'அத்த! நீ உணர்தி அன்றே, அரக்கர்தான்,***
***அவுணரேதான்***
***எத்தனை உளர் என்றாலும், யான் சிலை***
***எடுத்தபோது***
***தொத்துறு கனலின் வீழ்ந்த பஞ்சு எனத் தொலையும்***
***தன்மை!***

**ஒத்தது; ஓர் இடையூறு உண்டு என்று உணர்விடை**
**உதிப்பது அன்றால்.**

*அத்த நீ* - அத்தனே நீ; *அரக்கர் தான் அவுணரே தான்* - அரக்கர் என்றாலும் அவுணர்களே என்றாலும்; **எத்தனை உளர் என்றாலும்** - எத்தனை பேர் என்னை எதிர்த்துப் போர் செய்ய உள்ளார் எனினும்; **யான் சிலை எடுத்தபோது** - நான் வில்லை எடுத்த சமயத்தில்; **தொத்துறு கனலின் வீழ்ந்த பஞ்சு என** - தொகுதியாகப் பெருகி எரியும் நெருப்பில் விழுந்துவிட்ட பஞ்சு போல; **தொலையும் தன்மை** - தோற்று அழிந்து போகும் தன்மையை; **உணர்தி அன்றே** - தெரிந்திருக்கிறாய் அல்லவா?; **ஒத்தது ஓர் இடையூறு உண்டு என்று** - என் போர்த்திறமைக்கு ஈடாக எழக்கூடிய இடையூறு உண்டு என; **உணர்விடை உதிப்பது அன்று** - என் உணர்விலே எழுவதில்லை.

ஆல் - அசை.

*வானர சேனையைக் காக்க இலக்குவனிடம் கூறுதல்*

*9357.* **'காக்குநர் இன்மை கண்ட கலக்கத்தால், கவியின் சேனை**
**போக்கு அறப் போகித் தம்தம் உறைவிடம் புகுதல் உண்டால்;**
**தாக்கி, இப் படையை முற்றும் தலை துமிப்பளவும், தாங்கி**
**நீக்குதி, நிருதர் ஆங்கு நெருக்குவார் நெருங்கா வண்ணம்.**

**காக்குநர் இன்மை கண்ட கலக்கத்தால்** - தங்களைக் காப்பவர்கள் எவரும் இல்லை என்று உணர்ந்த கலக்கத்தினால்; **கவியின் சேனை** - குரங்குப் படையில் உள்ள வீரர்கள்; **போக்கு அறப் போகி** - புகலிடம் இல்லாமல் ஓடி; **தம்தம் உறைவிடம் புகுதல் உண்டு** - தத்தம் வாழும் இடங்களை அடைய நேரிடும் (அப்படி அவர்களைக் கதியற்றவர்களாக்குவது நமக்கு இழுக்கு); **இப்படையை** - இந்த அரக்கர் சேனையை; **தாக்கி முற்றும் தலை துமிப்பளவும்** - எதிர்த்துத் தாக்கி முழுவதையும் தலைகளைத் துண்டித்து வரும் வரை; **தாங்கி** - பாதுகாத்து; **ஆங்கு** - அந்த வானரர் இருக்கும் இடத்திற்கு; **நிருதர் நெருக்குவார்** - அரக்கர்கள் நெருக்குவாராகி; **நெருங்கா வண்ணம்** - குறுகாதபடி; **நீக்குதி** - அரக்கர் சேனை வீரர்களை நீக்குவாயாக.

*9358.* **'இப் புறத்து இனைய சேனை ஏவி, ஆண்டு இருந்த தீயோன்,**

***அப் புறத்து அமைந்த சூழ்ச்சி அறிந்தவன், அயலே வந்து,***
***தப்பு அறக் கொன்று நீக்கில், அவனை யார் தடுக்கத் தக்கார், -***
***வெப்புறுகின்றது உள்ளம், - வீர! நீ அன்றி, வில்லோர்?***

***வீர*** - *வீரனே!* ***இப்புறத்து*** - *இங்கே;* ***இனைய சேனை ஏவி*** - *இத்தகைய அரக்கர் படையை வருமாறு கட்டளை இட்டு;* ***ஆண்டு இருந்த*** - *அங்கே இருந்த;* ***தீயோன்*** - *கொடியவனும்;* ***அமைந்த சூழ்ச்சி அறிந்தவன்*** - *பொருத்தமான தந்திரம் அறிந்தவனும் ஆகிய*

*இராவணன்;* ***அப்புறத்து அயலே வந்து*** - *அந்தப் பக்கத்தில் வானர சேனை உள்ள இடத்துக்குப் பக்கமாக வந்து;* ***தப்பு அற*** - *தப்புதல் இன்றி;* ***கொன்று நீக்கின்*** - *குரக்குப் படையைக் கொன்று தீர்த்தால்;* ***அவனை*** - *அந்த இராவணனை;* ***நீ அன்றி*** - *நீ அல்லாமல்;* ***வில்லோர்*** - *வில் ஏந்திய வீரர்களில்;* ***யார் தடுக்கத் தக்கார்*** - *யார் தடுக்கத் தகுதி உடையவர்கள்?* ***உள்ளம் வெப்பு உறுகின்றது*** - *(இந்த நிலையை எண்ணினால்) மனம் வெதும்புகின்றது.*

***9359. 'மாருதியோடு நீயும், வானரக்கோனும், வல்லே,***
***பேருதிர் சேனை காக்க; என்னுடைத் தனிமை பேணிச்***
***சோருதிர்என்னின், வெம் போர் தோற்றும், நாம்' என்னச்சொன்னான்,***
***வீரன்; மற்று அதனைக் கேட்ட இளையவன் விளம்பலுற்றான்:***

***வீரன்*** - *இராமன்;* ***மாருதியோடு வானரக் கோனும் நீயும்*** - *அனுமனோடு சேர்ந்து சுக்கிரீவனும் நீயும்;* ***சேனை காக்க*** - *வானரப் படையைக் காப்பதற்கு;* ***வல்லே*** - *விரைவாக;* ***பேருதிர்*** - *புறப்படுங்கள்;* ***என்னுடைத் தனிமை பேணி*** - *என் தனிமையைப் பெரிதாகப் போற்றி;* ***சோருதிர் என்னின்*** - *தளர்வீர்களானால் (அந்தத் தளர்வினால் தாமதிப்பீர்களானால்);* ***நாம் வெம் போர் தோற்றும்*** - *நாம் இந்தக் கொடிய போரிலே தோற்றுப் போவோம்;* ***என்ன சொன்னான்*** - *என்று சொன்னான்;* ***அதனைக் கேட்ட இளையவன் விளம்பலுற்றான்*** - *இராமபிரான் சொல்லிய அதனைக் கேட்ட தம்பியாகிய இலக்குவன் சொல்லலானான்.*

### *இலக்குவன் இசைதல்*

***9360. 'அன்னதே கருமம்; ஐய! அன்றியும், அருகே நின்றால்,***
***என் உனக்கு உதவி செய்வது - இது படை என்ற போது,***
***சென்னியில் சுமந்த கையர், தேவரே போல, யாமும்***
***பொன்னுடை வரி வில் ஆற்றல் புறன் நின்று***

***காண்டல்போக்கி?'***

*(இலக்குவன் அதனைக் கேட்டு)* ***ஐய அன்னதே கருமம்*** *- அதுதான் செய்யவேண்டிய செயல்;* ***அன்றியும்*** *- அது மட்டுமின்றி;* ***இது படை என்ற போது*** *- அரக்கர் படை இத்தகையதாக இருப்பதால்;* ***தேவரே போல்*** *- (போரில் உதவிக்கு வராமலே தூர நின்று பார்த்திருக்கும்) தேவர்களைப் போல;* ***சென்னியில் சுமந்த கையர்*** *- தலைமேல் கை வைத்திருப்பவராகி;* ***பொன்னுடை வரிவில் ஆற்றல்*** *- உனது பொன்னாலாய கட்டமைந்த ஆற்றலை;* ***புறம் நின்று காண்டல் போக்கி*** *- வெளியிலிருந்து பார்ப்பதை நீக்கிவிட்டு;* ***உனக்கு உதவி செய்வது என்*** *- உனக்கு நாங்கள் செய்யக்கூடிய உதவி யாது?*

## *அனுமன் செய்த விண்ணப்பம்*

***9361. என்று அவன் ஏகலுற்ற காலையின், அனுமன் 'எந்தாய்!***
***''புன் தொழில் குரங்கு'' எனாது, என் தோளின்மேல் ஏறிப் புக்கால்,***
***நன்று எனக் கருதா நின்றேன்; அல்லது, நாயினேன் உன்***
***பின் தனி நின்றபோதும், அடித் தொழில் பிரியேன்' என்றான்.***

***என்று அவன் ஏகலுற்ற காலையின்*** *- மேற்குறித்தவாறு இலக்குவன் சொல்லி வானர சேனையை நோக்கிப் போகத் தொடங்கிய போது;* ***அனுமன்*** *- அனுமன் (இராமனை நோக்கி) எந்தாய் - எம் பெருமானே!* ***புன் தொழில் குரங்கு எனாது*** *- அற்பச் செயல் திறம் கொண்ட குரங்குதானே என்று புறக்கணிக்காமல்;* ***என் தோளின் மேல் ஏறிப் புக்கால்*** *- என் தோளின் மீது ஏறிப் போர்க்களம் புகுந்தால்;* ***நன்று எனக் கருதா நின்றேன்*** *- நல்லது என்று நினைக்கின்றேன்;* ***அல்லது*** *- அவ்வாறு செய்யாவிடினும்;* ***நாயினேன் உன் பின்*** *- அடியனேன் உனக்குப் பின்புறமாக;* ***தனி நின்றபோதும்*** *- தனியாக நின்றாலும்;* ***அடித் தொழில் பிரியேன்*** *- திருவடிக்குரிய பணி செய்வதிலிருந்து பிரியாதவன் ஆவேன்; என்றான்.*

*அனுமன் உட்பட யாவரும் இலக்குவன் பின் செல்லுமாறு*

*இராமன் பணித்தல்*

***9362. 'ஐய! நிற்கு இயலாது உண்டோ? இராவணன் அயலே வந்துற்று***
***எய்யும் வில் கரத்து வீரன் இலக்குவன் தன்னோடு ஏற்றால்***
***மொய் அமர்க் களத்தின் உன்னைத் துணை பெறான்என்னின், முன்ப!***
***செய்யும் மா வெற்றி உண்டோ? சேனையும் சிதையும் அன்றே!***

***ஐய! நிற்கு இயலாது உண்டோ*** *- உன்னால் செய்ய முடியாதது என ஏதாவது உண்டா?;* ***இராவணன் அயலே வந்துற்று*** *- இராவணன் வானர சேனையின் பக்கம் வந்து சேர்ந்து;* ***எய்யும் வில் கரத்து வீரன் இலக்குவன் தன்னோடு*** *- அம்புகளை எய்கின்ற வில் ஏந்திய இலக்குவனை;* ***ஏற்றால்*** *- எதிர்த்து நின்றால்;* ***மொய் அமர்க் களத்தின்*** *- செறிந்த அந்தப் போர்க்களத்தில்;* ***உன்னைத் துணை எனப்பெறான் என்னில்*** *- உன்னைத் தனக்கு துணையாகப் பெறாமற் போனால்;* ***முன்ப*** *- வலிமை மிக்கவனே;* ***செய்யும் மா வெற்றி உண்டோ*** *- இலக்குவன் விளைக்கக் கூடிய பெரிய வெற்றி உண்டோ;* ***சேனையும் சிதையும் அன்றே*** *- மேலும், வானரப் படையும் சிதைந்து போகுமன்றோ?*

***9363. 'ஏரைக் கொண்டு அமைந்த குஞ்சி இந்திரசித்து என்பான் தன்***
***போரைக் கொண்டு இருந்த முன்நாள், இளையவன் தன்னைப் போக்கிற்று***
***ஆரைக் கொண்டு? உன்னால் அன்றே, வென்றது அங்கு அவனை? இன்னும்***
***வீரர்க்கும் வீர! நின்னைப் பிரிகலன், வெல்லும் என்பேன்.***

***ஏரைக் கொண்டு அமைந்த குஞ்சி இந்திரசித்து என்பான் தன்*** *- அழகோடு கூடியமைந்த குடுமியை உடைய இந்திரசித்து என்பவனுடைய;* ***போரைக் கொண்டு இருந்த முன்நாள்*** *- போரினை மேற்கொண்ட முன் நாளில்;* ***இளையவன் தன்னைப் போக்கிற்று*** *- இலக்குவனை அனுப்பியது;* ***ஆரைக் கொண்டு*** *- யாரை முன்னிட்டுக் கொண்டு போருக்கு அனுப்பியது?* ***அங்கு அவனை வென்றது உன்னால் அன்றே*** *- அவனை வெற்றி கொண்டது உன்னால்தான் அல்லவா?* ***வீரர்க்கு வீர!*** *-*

*வீரர்களுக்கெல்லாம் வீரனே! **நின்னைப் பிரிகலன்** - உன்னை விட்டுப் பிரியாதவனாயின்; **வெல்லும் என்பேன்** - (இலக்குவன் இனியும்) வெல்வான் என்று உறுதியாகச் சொல்வேன்.*

***9364. 'சேனையைக் காத்து, என் பின்னே திரு நகர் தீர்ந்து போந்த***
***யானையைக் காத்து, மற்றை இறைவனைக் காத்து, எண் தீர்ந்த***
***வானை இத் தலத்தினோடும் மறையொடும் வளர்த்தி' என்றான்;***
***ஏனை மற்று உரைக்கலாதான், இளவல்பின் எழுந்து சென்றான்.***

*__சேனையைக் காத்து__ - வானரப் படையைப் பாதுகாத்து; __திருநகர் தீர்ந்த__ - அயோத்தியாகிய செல்வ நகரை விடுத்து; __என் பின்னே போந்த__ - என்னைத் தொடர்ந்து (காட்டுக்கு) வந்த; __யானையைக் காத்து__ - களிறு போல்வானாகிய இலக்குவனைப் பாதுகாத்து; __எண் தீர்ந்த வானை__ - மன எண்ணத்தின் எல்லையைக் கடந்த விண்ணுலகத்தை; __இத் தலத்தினோடும்__ - இந்த நிலவுலகத்தோடும்; __மறையொடும்__ - வேத நெறியோடும்; __வளர்த்தி என்றான்__ - வளர்ப்பாயாக என்று இராமபிரான் கூறினான்; __ஏனை மற்று உரைக்கிலாதான்__ - இராமன் சொன்னதற்கு மறு மாற்றமாக வேறு ஒன்றும் சொல்லமாட்டாதவனாகிய அனுமன்; __எழுந்து இளவல் பின் சென்றான்__ - புறப்பட்டு இலக்குவன் பின்னால் போகலானான்.*

***9365. 'வீடண! நீயும் மற்று உன் தம்பியொடு ஏகி, வெம்மை***
***கூடினர் செய்யும் மாயம் தெரிந்தனை கூறி, கொற்றம்***
***நீடுறு தானை தன்னைத் தாங்கினை, நில்லாய்என்னின்***
***கேடு உளது ஆகும்' என்றான்; அவன் அது கேட்பதானான்.***

*__வீடண__ - விபீஷணா! __நீயும் உன் தம்பியோடு ஏகி__ - நீயும் உன் தம்பியுடன் சென்று; __வெம்மை கூடினர்__ - கொடுமையால் மிக்க அரக்கர்கள்; __செய்யும் மாயம் தெரிந்தனை கூறி__ - செய்கின்ற மாயங்களை ஆராய்ந்து சொல்லி; __கொற்றம் நீடு உறு தானை தன்னை__ - வெற்றி நிலை பெறுகின்ற (நம்) சேனையை; __தாங்கினை நில்லாய் என்னின்__ - தாங்கி நிற்க மாட்டாயென்றால்; __கேடு உளது ஆகும்__ - கெடுதல் உண்டாகும்; __என்றான்__ - என இராமன் கூறினான்; __அவன் அது கேட்பதானான்__ - வீடணன் அதைக்கேட்டு நடந்தான்.*

***9366. சூரியன் சேயும், செல்வன் சொற்றதே எண்ணும் சொல்லன்;***
***ஆரியன் பின்பு போனான்; அனைவரும்,' அதுவே நல்ல***
***காரியம்' என்னக் கொண்டார்; கடற்படை காத்து நின்றார்,***
***வீரியன் பின்னர்ச் செய்த செயல் எலாம் விரிக்கலுற்றாம்:***

**சூரியன் சேயும்** - *அனுமனுக்கும் வீடணனுக்கும் இராமன் இட்ட கட்டளை கேட்டு நின்ற சுக்கிரீவனும்;* **செல்வன் சொற்றதே எண்ணும் சொல்லன்** - *இராமபிரான் என்ன சொன்னானோ அதனையே நினைக்கின்ற தன்மை உடையவன் ஆதலால்;* **ஆரியன் பின்பு போனான்** - *(இராமன் வாயால் சொல்லுமுன்பே) இலக்குவன் பின் போனான்;* **அனைவரும் அதுவே நல்ல காரியம் என்னக் கொண்டார்** - *அவன் செய்கையைப் பார்த்த எல்லாரும் அதுவே நல்ல செயல் என முடிவு கட்டினவராய்;* **கடற்படை காத்து நின்றார்** - *கடல்போல் பரந்த வானரப் படையைக் காத்து நின்றார்கள் (எனவே யாவரும் போய்விட இராமன் தனியே மூல பலத்தை எதிர்க்க நின்றான்.);* **வீரியன் பின்னர்ச் செய்த செயல் எலாம் விரிக்கலுற்றாம்** - *வீரனாகிய இராமன் அதன்மேல் செய்த செயல்களையெல்லாம் விரித்துரைக்கலானோம்.*

## *இராமபிரான் போர் தொடங்க முனைதல்*

***9367. வில்லினைத் தொழுது, வாங்கி, ஏற்றினான்; வில் நாண் மேருக்***
***கல் எனச் சிறந்ததேனும், கருணை அம் கடலே அன்ன***
***எல் ஒளி மார்பில் தீராக் கவசம் இட்டு, இழையா வேதச்***
***சொல் எனத் தொலையா வாளித் தூணியும் புறத்துத் தூக்கி.***

**மேருக்கல் எனச் சிறந்ததேனும்** - *இராமபிரானின் மார்பு மேரு மலைபோல் திண்மையால் சிறந்ததேயாயினும்;* **கருணை அம் கடலே அன்ன** - *கருணையாகிய கடலினையே போன்றதும்;* **எல் ஒளி மார்பில்** - *விளங்குகின்ற ஒளி பொருந்தியதும் ஆகிய மார்பில்;* **தீராக் கவசம் இட்டு** - *அழியாத கவசம் அணிந்து;* **இழையா வேதச் சொல் எனத் தொலையா** - *எவராலும் செய்யப்படாத வேத மந்திரம் போல் என்றும் வற்றாத;* **வாளித் தூணியும் புறத்துத் தூக்கி** - *அம்பறாத் தூணியையும் முதுகிலே*

*தொங்க விட்டு;* ***வில்லினைத் தொழுது வாங்கி*** *- வில்லை வணங்கி வளைத்து;* ***வில் நாண் ஏற்றினான்*** *- அந்த வில்லிலே (இராமன்) நாண் ஏற்றினான்.*

***9368. ஓசனை நூற்றின் வட்டம் இடைவிடாது உறைந்த சேனைத்***
***தூசி வந்து அண்ணல்தன்னைப் போக்கு அற வளைந்து சுற்றி***
***வீசின படையும் அம்பும் மிடைதலும், விண்ணோர் ஆக்கை***
***கூசின, பொடியால்; எங்கும் குமிழ்த்தன, வியோம கூடம்.***

***நூற்றின் சேனை வட்டம்*** *- நூறு யோசனை தூரப் பரப்பில் வட்டமாக;* ***இடைவிடாது உறைந்த சேனைத் தூசி வந்து*** *- சற்றும் இடைவெளியில்லாமல் தங்கிய அரக்கர் படையின் முன்னணிப் படையானது புறப்பட்டு;* ***போக்கு அற அண்ணல் தன்னை வளைத்துச் சுற்றி*** *- தப்ப முடியாமல் இராமபிரானை வளைத்துச் சூழ்ந்துகொண்டு;* ***வீசின படையும் அம்பும் மிடைதலும்*** *- வீசிய படைக்கலங்களும் அம்பும் செறிந்தமையால்;* ***விண்ணோர் யாக்கை கூசின*** *- தேவர்கள் உடல்கள் கூசின;* ***பொடியால்*** *- (போர்க்களத்து மோதுதலால் எழுந்த) தூசுகளால்;* ***வியோம கூடம்*** *- ஆகாயமாகிய கூடம்;* ***எங்கும் குமிழ்த்தன*** *- எவ்விடத்தும் சிலிர்ப்பு அடைந்தன.*

***9269. 'கண்ணனே! எளியேம் இட்ட கவசமே! கடலே அன்ன***
***வண்ணனே! அறத்தின் வாழ்வே! மறையவர் வலியே! மாறாது***
***ஒண்ணுமே, நீ அலாது, ஓர் ஒருவர்க்கு இப் படைமேல் ஊன்ற?***
***எண்ணமே முடித்தி!' என்னா, ஏத்தினர், இமையோர் எல்லாம்.***

***இமையோர் எல்லாம்*** *- தேவர்கள் எல்லோரும்; கண்ணனே - எமக்குக் கண்ணானவனே!* ***எளியேம் இட்ட கவசமே*** *- எளியவர்களாகிய எங்களுக்குப் பாதுகாவலாக இடப்பட்ட கவசமே;* ***கடலே அன்ன வண்ணனே*** *- கடல்போல் (நீல) நிறம் உடையவனே;* ***அறத்தின் வாழ்வே*** *- தருமத்திற்கு வாழ்வாய் இருப்பவனே;* ***மறையவர் வலியே*** *- வேதியர்க்கு வலிமையானவனே;* ***நீ அலாது*** *- உன்னைத் தவிர;* ***இப்படைமேல் ஊன்ற*** *- இந்த அரக்கர் படையை எதிர்த்து நிற்க;* ***ஓர் ஒருவர்க்கு மாறாது ஒண்ணுமே*** *- வேறு ஒருவருக்கு மாறாமல் முடியுமா?* ***எண்ணமே முடித்தி*** *- உன் அவதார எண்ணத்தை முடிப்பாயாக;* ***என்னா ஏத்தினர்*** *- என்று இராமபிரானைத் துதித்தனர்.*

***9370. முனிவரே முதல்வர் ஆய அறத் துறை முற்றினோர்கள்***
***தனிமையும், அரக்கர் தானைப் பெருமையும்,***
***தரிக்கலாதார்,***
***பனி வரு கண்ணர், விம்மிப் பதைக்கின்ற நெஞ்சர்,***
***'பாவத்து***
***அனைவரும் தோற்க! அண்ணல் வெல்க!' என்று***
***ஆசி சொன்னார்.***

***முனிவரே முதல்வர் ஆய அறத்துறை முற்றினோர்கள்*** - *முனிவர்கள் முதலியோராகிய அறநெறியில் நிரம்பியவர்கள்;* ***தனிமையும்*** - *(இராமபிரானது) தனிமையையும்;* ***அரக்கர் தானைப் பெருமையும்*** - *இராக்கதர்களின் சேனைப் பெருக்கத்தையும்;* ***தரிக்கலாதார்*** - *பொறுக்க இயலாதவர்களாய்;* ***பனிவரு கண்ணர்*** - *நீர் சொரியும் கண்ணினராயும்;* ***விம்மிப் பதைக்கின்ற நெஞ்சினர்*** - *விம்மலுற்று நடுங்குகின்ற நெஞ்சினராயும்;* ***பாவத்து அனைவரும் தோற்க*** - *பாவத்தின் சார்பிலுள்ள (அரக்கர்) எல்லாரும் தோற்றிடுக;* ***அண்ணல் வெல்க*** - *தலைவராகிய இராமபிரானே வெல்க;* ***என்று ஆசி சொன்னார்*** - *என வாழ்த்தினார்கள்.*

*அரக்கர் வியப்பு*

**எழுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்**

***9371. இரிந்து சேனை சிந்தி, யாரும் இன்றி ஏக, நின்று,***
***நம்***
***விரிந்த சேனை கண்டு, யாதும் அஞ்சல் இன்றி,***
***வெஞ் சரம்***
***தெரிந்த சேவகம் திறம்பல் இன்றி நின்ற***
***செய்கையான்***
***புரிந்து தன்மை வென்றி மேலும் நன்று! மாலி***
***பொய்க்குமோ?***

***இரிந்து சிந்தி*** - *ஓடிச் சிதறி;* ***யாரும் இன்றிச் சேனை ஏக*** - *போர்க்களத்திலே எவரும் எஞ்சி நிற்காமல் வானர சேனை முழுவதும் போய்விட;* ***நின்று*** - *உறுதியாகப் போர்க்களத்திலே நிலைத்து நின்று;* ***விரிந்த நம் சேனை கண்டு யாதும் அஞ்சல் இன்றி*** - *பரந்துள்ள நம் அரக்கர் சேனையைக் கண்டு சிறிதும் பயம் இல்லாமல்;* ***வெஞ்சரம் தெரிந்த சேவகம் திறம்பல் இன்றி*** - *பகைவரை அழித்தலில் கொடிய கணைகளைத் தேர்ந்தெடுத்து எய்யும் வீரர்க்குரிய*

*நெறியிலிருந்து பிறழாமல்;* ***நின்ற செய்கையான்*** *- போரிலே உறுதியாக நிற்கும் வீரச் செய்கை உடைய இந்த இராமன்;* ***புரிந்த தன்மை வெற்றி*** *- போர் விரும்பும் தன்மையால் பெறும் வெற்றி;* ***மேலும் நன்று*** *- மேன்மேலும் சிறப்புடையதே யாகும்;* ***மாலி பொய்க்குமோ*** *- மாலியவான் சொன்னது பொய்யாகுமா (ஆகாது என்று அரக்கர் வியந்தனர்).*

***9372. புரங்கள் எய்த புங்கவற்கும் உண்டு தேர்;***
***பொருந்தினார்***
***பரந்த தேவர்; மாயன் நம்மை வேர் அறுத்த பண்டை***
***நாள், விரைந்து புள்ளின்மீது***
***விண்ணுளோர்களோடு***
***மேவினான்;***
***கரந்திலன், தனித்து ஒருத்தன் நேரும், வந்து,***
***காலினான்.***

***புரங்கள் எய்த புங்கவற்கும் தேர் உண்டு*** *- முப்புரங்களை எய்த மேலானவனாகிய சிவனுக்கும் தேர் இருந்தது;* ***பரந்த தேவர் பொருந்தினார்*** *- பெருகிய தேவர்களும் (வாகனங்களைப்) பொருத்தியவர்களே;* ***பண்டை நாள் நம்மை வேர் அறுத்த மாயன்*** *- முன்னாளில் நம் குலத்தை வேரோடு அழித்த திருமால்;* ***விண்ணுளோர்களோடு*** *- தேவர்களோடு;* ***புள்ளின் மீது விரைந்து மேவினான்*** *- வாகனமாகிய (கருடப்) பறவையோடு வேகமாக வந்தான்;* ***தனித்து ஒருத்தன்*** *- (அவர்களெல்லாம் அப்படி வாகனங்களோடு வர) இந்தத் தனி ஒருவன்;* ***கரந்திலன்*** *- ஒளியாதவனாய்;* ***காலினான் வந்து நேரும்*** *- காலால் நடந்து வந்து எதிர் நிற்கிறான்;*

***9373. 'தேரும், மாவும், யானையோடு சீயம், யாளி, ஆதியா***
***மேரு மானும் மெய்யர் நின்ற வேலை ஏழின் மேலவா;***
***''வாரும், வாரும்'' என்று அழைக்கும் மானுடற்கு, இம்***
***மண்ணிடைப்***
***பேருமாறும் நம்முழைப் பிழைக்குமாறும் எங்ஙனே?'***

***தேரும் மாவும் யானையோடு சீயம் யாளி ஆதியா*** *- தேர், குதிரை, யானைகளோடு சிங்கங்கள் யாளி முதலானவையும்;* ***மேரு மானும் மெய்யர்*** *- மேரு மலை போன்ற பெரிய உடல் கொண்டவர்களுமாய்;* ***ஏழின் வேலை மேலவா நின்ற*** *- ஏழு கடல்களுக்கும் அதிகமான பரப்போடு அமைப்போடு (படைகள் பெருகி) நின்றன; (எனினும்)* ***வாரும் வாரும் என்று அழைக்கும் மானுடற்கு*** *- போர் செய்ய வாருங்கள் என்று அழைக்கும் மனிதனுக்கு எதிராக;* ***இம்மண்ணிடைப் பேருமாறும்*** *- (போர் செய்து) இந்த உலகத்திலே தப்பிப் போகும் வகையும்;* ***நம் முழைப்***

***பிழைக்குமாறும்*** - நம்மிடையே உள்ளவர்கள் உயிர் தப்பிப் பிழைக்கும் வகையும்; ***எங்ஙனே*** - எப்படி?

*இராமபிரான் வில் நாண் தெறித்தல்;*
*அரக்கரிடையே தீய*
*நிமித்தம் தோன்றுதல்*

***9374. என்று சென்று, அடர்த்து இரைத்து, ஓர் சீய ஏறு அடர்ந்ததைக்***
***குன்று வந்து சூழ் வளைந்தபோல், தொடர்ந்து கூடலும்,***
***'நன்று இது!' என்று, ஞாலம் ஏழும் நாகம் ஏழும் மானும் தன்***
***வென்றி வில்லை வேத நாதன் நாண் எறிந்த வேலைவாய்.***

***என்று சென்று*** - மேற்கூறியபடி அரக்கர்கள் மேலே சென்று; ***இரைத்து அடர்த்து*** - ஆரவாரம் செய்து தாக்க முனைந்து; ***ஓர் சீய ஏறு அடர்ந்ததை*** - ஓர் ஆண்சிங்கம் தாக்க வந்ததை; ***குன்று சூழ் வளைந்தபோல்*** - மலைகள் சூழ்ந்து வளைத்துக்கொண்டது போல்; ***தொடர்ந்து கூடலும்*** - அரக்கர் சேனை மேன்மேல் கூடியதும்; ***வேதநாதன்*** - மறைகளின் தலைவனாகிய இராமபிரான்; ***ஞாலம் ஏழும் நாகம் ஏழும் மானும் தன் வென்றி வில்லை*** - ஏழு உலகங்களையும் ஏழு மலைகளையும் ஒத்ததாகியதும் வெற்றிக்கே உரியதுமான தன் கோதண்டம் என்ற வில்லினது; ***நாண் எறிந்த வேலைவாய்*** - கயிற்றினை இறுக்கித் தெறித்தபோது (தொடரும்)

***9375. கதம் புலர்ந்த, சிந்தை வந்த, காவல் யானை; மாலொடு***
***மதம் புலர்ந்த; நின்ற வீரர் வாய் புலர்ந்த; மா எலாம்***
***பதம் புலர்ந்த; வேகம் ஆக, வாள் அரக்கர் பண்பு சால்***
***விதம் புலர்ந்தது; என்னின், வென்ற வென்றி சொல்ல வேணுமோ?***

***காவல் யானை சிந்தை வந்த கதம் புலர்ந்த*** - காவலாக வந்த அரக்கர் சேனை யானைகளின் மனத்தில் எழுந்த கோபம் உலரப் பெற்றன; ***மாலொடு மதம் புலர்ந்த*** - மதத்தோடு மத நீரும் உலர்ந்தன; ***நின்ற வீரர் வாய் புலர்ந்த*** - ஓடிவிடாமல் நின்ற அரக்க வீரர்களின் வாய்கள் உலர்ந்தன; ***மா எலாம் பதம் புலர்ந்த*** -

*குதிரைகளெல்லாம் தங்கள் வேகம் இழந்தன;* ***வாள் அரக்கர் பண்பு சால் வீதம் வேகமாகப் புலர்ந்தது*** *- வாள் ஏந்திய அரக்கர்களின் வீரப் பண்பு மிக்க போர்வேகம் விரைவாகக் குறைந்தது;* ***என்னின்*** *- என்றால்;* ***வென்ற வெற்றி சொல்ல வேணுமோ*** *- இராமபிரான் வென்ற வெற்றியின் சிறப்பைத் தனியே சொல்லவேண்டுமா? (வேண்டியதில்லை).*

***9376. வெறித்து இரிந்த வாசியோடு, சீய மாவும் மீளியும்,***
***செறித்து அமைந்த சில்லி என்னும் ஆழி கூடு தேர் எலாம்***
***முறித்து எழுந்த முற்கை யானை வீசும் மூசு பாகரைப்***
***பிறித்து இரிந்து சிந்த, வந்து ஓர் ஆகுலம் பிறந்ததால்***

***வெறித்து இரிந்த வாசியோடு*** *- அஞ்சி மருண்டு ஓடிய குதிரைகளோடு;* ***சீய மாவும்*** *- சிங்கமாகிய விலங்குகளும்; மீளியும் - பேய்களும்;* ***செறித்து அமைந்த சில்லி என்னும் ஆழி கூடு தேரெலாம்*** *- நன்கு செறிவுற அமைக்கப்பட்ட சில்லி என்னும் சக்கரங்கள் சேர்ந்த தேர்களையெல்லாம்;* ***முறித்து எழுந்த*** *- முறித்து முன்னேறி ஓடின;* ***முற்கை யானை*** *- முன்னே (தொங்கும்) துதிக்கையுடைய யானைகள்;* ***வீசும் மூசு பாகரை*** *- (அங்குசம்) வீசி நெருங்குகின்ற பாகர்களை;* ***பிறித்து இரிந்து சிந்த*** *- பிரித்து ஓடிச் சிதறும்படியாக;* ***ஓர் ஆகுலம் வந்து பிறந்தது*** *- ஒரு துயரம் வந்து தோன்றியது.*

*ஆல் - அசை.*

***9377. 'இந் நிமித்தம் இப் படைக்கு இடம் துடித்து அடுத்தது ஓர்***
***துன்னிமித்தம்' என்று கொண்டு, வானுளோர்கள் துள்ளினார்;***
***அந் நிமித்தம் உற்ற போது, அரக்கர் கண் அரங்க, மேல்***
***மின் நிமிர்த்தது அன்ன வாளி வேதநாதன் வீசினான்.***

***இந் நிமித்தம்*** *- இப்போது ஏற்பட்டுள்ள இந்த உற்பாதங்கள்;* ***இப் படைக்கு*** *- இந்த அரக்கர் சேனைக்கு;* ***இடம் துடித்து அடுத்தது ஓர் துன்னிமித்தம்*** *- இடப் புறம் துடித்து, அதன் பின் தொடர்ந்து வந்த தீய நிமித்தமாகும்;* ***என்று கொண்டு*** *- என்று கருதி;* ***வானுளோர்கள் துள்ளினார்*** *- விண்ணுலகத்துத் தேவர்கள் மகிழ்ச்சியால் துள்ளினார்கள்;* ***அந்நிமித்தம் உற்றபோது*** *- அந்தத் தீய சகுனம் உண்டான போது;* ***அரக்கர் கண் அரங்க*** *- அரக்கர்கள் கண் கலங்கும்படி;* ***வேத நாதன்*** *- வேதங்களுக்குத்*

*தலைவனாகிய இராமன்;* ***மேல்மின் நிமிர்த்தது அன்ன*** *- விண்ணில் தோன்றும் மின்னலை நிமிர்த்தி அமைத்தது போன்ற;* ***வாளி வீசினான்*** *- அம்புகளை எய்தான்.*

***9378. ஆளி மேலும், ஆளின் மேலும், ஆனை மேலும், ஆடல் மா***
***மீளி மேலும், வீரர் மேலும், வீரர் தேரின் மேலும், வெவ்***
***வாளி மேலும், வில்லின் மேலும், மண்ணின்மேல் வளர்ந்த மாத்***
***தூளி மேலும் ஏற ஏற, வீரன் வாளி தூவினான்.***

***ஆளி மேலும்*** *- அரக்கர் படையில் வந்த சிங்கங்களின் மீதும்;* ***ஆளின் மேலும்*** *- காலாட்படை வீரர்கள் மீதும்; ஆனை மேலும் - யானைகள் மீதும்;* ***ஆடல் மா மேலும்*** *- ஆடுகின்ற குதிரைகள் மீதும்;* ***மீளி மேலும்*** *- பேய்கள் மீதும்;* ***வீரர் மேலும்*** *- வீரர்கள் மேலும்;* ***வீரர் தேரின் மேலும்*** *- வீரர்கள் செலுத்தி வந்த தேரின் மேலும்;* ***வெவ் வாளி மேலும்*** *- அரக்கர் ஏவிய கொடிய அம்புகளின் மீதும்;* ***வில்லின் மேலும்*** *- அந்த அம்புகளை எய்த விற்களின் மேலும்;* ***மண்ணின் மேல் வளர்ந்த மாத்தூளி*** *- போர்க்கள நிலத்தில் மேலும் மேலும் பெருகிய பெருந் தூசிப்படலம்;* ***மேலும் ஏற ஏற*** *- மேன்மேல் ஏறிப் பெருகும்படியாக;* ***வீரன்*** *- இராமபிரான்;* ***வாளி தூவினான்*** *- அம்புகளை (எங்கெங்கும்) சிதறினான்.*

***9379. மலை விழுந்தவா விழுந்த, மான யானை; மள்ளர் செந்***
***தலை விழுந்தவா விழுந்த, தாய வாசி; தாள் அறும்***
***சிலை விழுந்தவா விழுந்த, திண் பதாகை; திங்களின்***
***கலை விழுந்தவா விழுந்த, வெள் எயிற்ற காடு எலாம்.***

***மான யானை*** *- பெருமை மிக்க யானைகள்;* ***மலை விழுந்த வா விழுந்த*** *- மலைகள் விழுந்ததுபோல விழுந்தன;* ***தாய வாசி*** *- தாவிச் செல்லும் குதிரைகள்;* ***மள்ளர் செந்தலை விழுந்தவா விழுந்த*** *- அரக்க வீரர்களின் சிவந்த (குடுமியுடைய) தலைகள் விழுந்ததுபோல விழுந்தன;* ***திண் பதாகை*** *- வலிய கொடிகள்;* ***தாள் அறும் சிலை விழுந்த வா விழுந்த*** *- அடிப்பகுதி அறுபட்ட விற்கள் விழுந்ததுபோல் விழுந்தன;* ***வெள் எயிற்ற காடு எலாம்*** *- யானைத் தந்தங்களும் அரக்கர்களின் கோரைப் பற்களும் ஆகிய தொகுதிகள்;* ***திங்களின் கலை விழுந்தவா விழுந்த*** *- சந்திர கலைகள் விழுந்தது போல் விழுந்தன.*

***9380. வாடை நாலு பாலும் வீச, மாக மேக மாலை வெங்***
***கோடை மாரி போல வாளி கூட, ஓடை யானையும்***
***ஆடல் மாவும், வீரர் தேரும், ஆளும், மாள்வது***
***ஆனவால்,***
***பாடு பேருமாறு கண்டு, கண் செல் பண்பும்***
***இல்லையால்.***

***வாடை நாலு பாலும் வீச*** - *வாடைக் காற்று நான்கு பக்கங்களிலும் வீச;* ***மாக மேக மாலை*** - *வானத்திலுள்ள மேகக் கூட்டங்கள்;* ***வெங்கோடை மாரி போல*** - *கொடிய கோடைக் காலத்து மழை போல;* ***வாளி கூட*** - *இராமபிரான் விடுக்கும் கணைகள் மிகுதியாகப் பெருகுவதால்;* ***ஓடை யானையும்*** - *முகபடாம் அணிந்த யானைகளும்;* ***ஆடல் மாவும்*** - *வெற்றி தரும் குதிரைகளும்;* ***வீரர் தேரும்*** - *வீரர்கள் செலுத்துகின்ற தேர்களும்;* ***ஆளும்*** - *காலாட்படை வீரர்களும்;* ***மாள்வது ஆனவால்*** - *இறந்து பட்டன(ர்);* ***பாடு பேருமாறு கண்டு*** - *எல்லாப் பக்கங்களிலும் (குருதி வெள்ளம்) பெருகி ஓடுகின்றதைக் கண்டு;* ***கண் செல் பண்பும் இல்லை*** - *கண்ணின் பார்வை செல்கின்ற பண்பும் இல்லை.*

*ஆல் : அசை*

***9381. விழித்த கண்கள், கைகள், விற்கள், வேல்கள்,***
***வாள்கள், விண்ணினுள்***
***தெழித்த வாய்கள், செல்லலுற்ற தாள்கள், தோள்கள்***
***செல்லினைப்***
***பழித்த வாளி சிந்த, நின்று பட்ட அன்றி, விட்ட***
***கோல்***
***கழித்த ஆயுதங்கள் ஒன்று செய்தது இல்லை***
***கண்டதே .***

***செல்லினைப் பழித்த வாளி சிந்த*** - *மேகத்தைப் பழித்தது போல இராமபிரான் அம்புகளைப் பொழிந்திட;* ***விழித்த கண்கள்*** - *அரக்கரின் திறந்த கண்களும், கைகளும்;* ***விற்கள், வேல்கள், வாள்கள்*** - *வில், வேல், வாள் முதலியவைகளும்;* ***விண்ணினுள் தெழித்த வாய்கள்*** - *ஆகாயத்தில் பரவும்படி உரப்பிய வாய்களும்;* ***செல்லலுற்ற தாள்கள்*** - *போர்க்களத்தை விட்டுப் போய் நடக்கும் கால்களும்;* ***தோள்கள்*** - *தோள்களும்;* ***நின்று பட்ட அன்றி*** - *நின்ற நின்ற இடங்களிலேயே அழிந்தனவே தவிர;* ***விட்ட கோல்*** - *அரக்கர்கள் இராமனை நோக்கிச் செலுத்திய அம்புகளோ;* ***அழித்த ஆயுதங்கள்*** - *செலுத்திய (மற்றுள்ள) ஆயுதங்களோ;* ***ஒன்று செய்தது கண்டதில்லை*** - *இராமபிரானுக்கு ஒரு கெடுதலையும் செய்யக் கண்டதில்லை.*

*9382.* ***தொடுத்த வாளியோடு வில் துணிந்து வீழும், முன் துணிந்து***
***எடுத்த வாள்களோடு தோள்கள் இற்று வீழும்; மற்று உடன்***
***கடுத்த தாள்கள் கண்டம் ஆகும்; எங்ஙனே, கலந்து நேர்***
***தடுத்து வீரர்தாமும் ஒன்று செய்யுமா, சலத்தினால்?***

**தொடுத்த வாளியோடு வில் துணிந்து முன் விழும்** - *நாணிலே இணைக்கப்பட்ட அம்போடு விற்கள் கணை விடுபடுமுன் துண்டுபட்டு விழும்;* **துணிந்து எடுத்த வாள்களோடு தோள்கள் இற்று வீழும்** - *அரக்க வீரர்கள் துணிவுடன் எடுத்த வாள்களோடு தோள்களும் துண்டுபட்டு விழும்;* **மற்று** - *மேலும்;* **கடுத்த தாள்கள் உடன் கண்டம் ஆகும்** - *விரைந்து இயங்கும் கால்கள் உடனே துண்டு பட்டு விழும் (இவ்வாறு இராமபிரான் ஏவும் கணைகள் செயல்படுதலால்);* **வீரர் தாமும்** - *அரக்க வீரர்கள்;* **கலந்து நேர் தடுத்து** - *எதிர்நின்று (இராமபாணங்களை) விலக்கி;* **சலத்தினால்** - *சினத்தினால்;* **ஒன்று செய்யுமா எங்ஙனே** - *ஏதேனும் ஓர் எதிர்ச்செயல் செய்வது எப்படி?*

*9383.* ***குரம் துணிந்து, கண் சிதைந்து, பல்லணம் குலைந்து, பேர்***
***உரம் துணிந்து, வீழ்வது அன்றி, ஆவி ஓட ஒண்ணுமே -***
***சரம் துணிந்த ஒன்றை நூறு சென்று சென்று தள்ளலால்,***
***வரம் துணிந்த வீரர் போரின் முந்த உந்து வாசியே?***

**துணிந்த ஒன்றை** - *இராமபிரான் தன் அம்புக்கு இலக்காக முடிவு செய்த ஒன்றை;* **சரம் நூறு** - *அம்புகள் நூற்றுக்கணக்கில்;* **சென்று சென்று தள்ளலால்** - *மேலும் மேலும் சென்று விழச் செய்வதால்;* **வரம் துணிந்த வீரர்** - *வரங்களின் வலிமையால் இராமனையே எதிர்க்கத் துணிந்த அரக்க வீரர்கள்;* **போரின் முந்த உந்து வாசி** - *போர்முனை நோக்கி முன்னேறும்படி செலுத்துகின்ற குதிரைகள்;* **குரம் துணிந்து** - *குளம்புகள் சிதையப் பெற்றும்;* **கண் சிதைந்து** - *கண்கள் சிதையப் பெற்றும்;* **பல்லணம் குலைந்து** - *(குதிரையின் மீதுள்ள) இருக்கை சிதைவுற்றும்;* **பேர் உரம் துணிந்து** - *பெரிய மார்பு சிதைவுற்றும்;* **வீழ்வதன்றி** - *மடிந்து விழுவதைத் தவிர;* **ஆவி ஓட ஒண்ணுமே** - *உயிரோடு ஓட முடியுமா? (முடியாது என்றபடி)*

*9384.* ***ஊர உன்னின், முன்பு பட்டு உயர்ந்த வெம் பிணங்களால்***
***பேர ஒல்வது அன்று; பேரின், ஆயிரம் பெருஞ் சரம்***

***தூர, ஒன்று நூறு கூறுபட்டு உகும்; துயக்கு அலால்,***
***தேர்கள் என்று வந்த பாவி என்ன செய்கை***
***செய்யுமே?****

***தேர்கள் ஊர உன்னின்*** - பகையரக்கர்களின் தேர்கள் மெல்லவாவது போக நினைத்தால்; ***முன்பு*** - அப்படிச் செல்ல முற்படும் தேர்களின் முன்புறத்தில்; ***பட்டு உயர்ந்த வெம் பிணங்களால்*** - இறந்து உயரமாகக் குவிந்து கிடக்கின்ற பிணங்களால்; ***பேர ஒல்வது அன்று*** - போக முடிவதில்லை (பிணக் குவியல்களே தடை); ***பேரின்*** - தடையையும் மீறி மேலே சென்றால்; ***ஆயிரம் பெருஞ்சரம் தூர*** - இராமபிரான் செலுத்தும் ஆயிரம் பெருங் கணைகள் பெருகுதலால்; ***ஒன்று நூறு கூறுபட்டு உகும்*** - ஒவ்வொன்றும் நூறு துண்டுகளாகி விழும்; ***துயக்கு அலால்*** - இதனால் மனச்சோர்வே அன்றி; ***தேர்கள் என்று வந்த பாவி*** - தேர்கள் எனச் சொல்லப்பட்ட பாவிகள்; ***என்ன செய்கை செய்யுமே*** - என்னத்தைத்தான் செய்துவிடும்! (மனங் கலங்குவதன்றிச் செய்யத்தக்கது ஒன்றுமில்லை).

*தேர்களைப் பாவிகள் என்றதற்கேற்ப அவற்றுக்கு மனச் சோர்வு உண்டென்றும் கற்பித்தார், கவிஞர். அழுக்காறு என ஒரு பாவி (குறள் 168) இன்மை என ஒரு பாவி (குறள் (1042) என்றது போன்ற ஆட்சி இது.*

***9385. எட்டு வன் திசைக்கண் நின்ற யாவும், வல்ல யாவரும்***
***கிட்டின், உய்ந்து போகிலார்கள் என்ன நின்ற, கேள்வியால்;***
***முட்டும் வெங் கண் மான யானை, அம்பு உராய, முன்னமே,***
***பட்டு வந்தபோல் விழுந்த; என்ன தன்மை பண்ணுமே?****

***எட்டு வன் திசைக்கண் நின்ற யாவும்*** - எட்டுத் திசைகளிலும் காவலுக்கு அமைந்த வலிய யானைகள் எல்லாமும்; ***வல்ல யாவரும்*** - அவற்றைப் போல வன்மை மிக்க யாவரும்; ***கிட்டின்*** - போரிலே மோதினால்; ***உய்ந்து போகிலார்கள் என்ன*** - உயிருடன் பிழைத்துப் போக முடியாதவர்கள் ஆவர் என்று சொல்லும்படி; ***கேள்வியால் நின்ற*** - புகழோடு நின்ற அரக்கர் சேனையின் யானைகள்; ***முட்டும் வெங்கண் மான யானை*** - பகைவரைத் தாக்கும், கொடிய பார்வை கொண்ட மான உணர்வுடைய (அந்த) யானைகள்; ***அம்பு உராய*** - இராமபிரான் செலுத்திய அம்புகள் உராய்ந்த அளவிலேயே; ***முன்னமே பட்டு வந்த போல் விழுந்த*** - ஏற்கெனவே இறந்து வந்தவை போல விழுந்தன; ***என்ன தன்மை பண்ணுமே*** - இராமனுக்கு எதிராக அவை என்னதான் பண்ண முடியும்!

***9386. வாவி கொண்ட புண்டரீகம் அன்ன கண்ணன் வாளி ஒன்று***
***ஏவின், உண்டை நூறு கோடி கொல்லும் என்ன, எண்ணுவான்***
***பூவின் அண்டர் கோனும், எண் மயங்கும்; அன்ன போரின் வந்து***
***ஆவி கொண்ட காலனார் கடுப்பும் அன்னது ஆகுமே?***

**வாவி கொண்ட புண்டரீகம் அன்ன கண்ணன்** - *பொய்கையில் உள்ள தாமரை போன்ற கண் கொண்ட இராமபிரான்;* **வாளி ஒன்று ஏவின்** - *அம்பு ஒன்றைச் செலுத்தினால்;* **உண்டை நூறு கோடி கொல்லும்** - *அப்படி ஏவிய ஓர் அம்பின் படைவகுப்பு நூறு கோடி உயிர்களைக் கொல்லும்;* **என்ன** - *என்பதாக;* **எண்ணுவான்** - *(மாண்ட உயிர்களைக்) கணக்கிடுவோ னாகிய;* **பூவின் அண்டர் கோனும்** - *பூவில் உதித்தவனும் தேவர் தலைவனுமாகிய பிரமனும்;* **எண் மயங்கும்** - *எண்ணிக்கை கணக்கிடுவதில் திகைப்பான்;* **அன்ன போரில் வந்து** - *அந்தப் போர்க்களத்துக்கு வந்து;* **ஆவி கொண்ட காலனார் கடுப்பும்** - *உயிர்களைக் கவர்ந்த யமனுடைய வேகமும்;* **அன்னது ஆகுமே** - *(இராமபிரான் கணை செலுத்திய) அந்த வேகம் ஆகுமோ? (ஆகாது)*

***9387. கொடிக் குலங்கள், தேரின் மேல, யானை மேல, கோடை நாள்***
***இடிக் குலங்கள் வீழ வெந்த காடுபோல் எரிந்தவால் -***
***முடிக் குலங்கள் கோடி கோடி சிந்த, வேகம் முற்றுறா***
***வடிக் குலங்கள் வாளி ஓட வாயினூடு தீயினால்!****

**வடி வாளிக் குலங்கள்** - *கூர்மையான அம்பின் கூட்டங்கள்;* **வாயினூடு தீயினால் ஓட** - *அந்த அம்புகளின் முனையில் எழும் தீயோடு பாய்தலால்;* **முடிக்குலங்கள் கோடி கோடி சிந்த** - *அரக்க வீரர்களின் தலைகளின் கூட்டம் கோடிக்கணக்கில் சிதைவு படவும்;* **வேகம் முற்றுறா** - *கோடிக்கணக்கில் தலைகளை வீழ்த்திய பிறகும் தம் வேகம் முடிவு பெறாமையால்;* **தேரின் மேல யானை மேல** - *தேர்கள் மீதும் யானைகள் மீதும் விளங்கியனவாகிய;* **கொடிக் குலங்கள்** - *கொடிகளின் கூட்டங்கள்;* **கோடை நாள்** - *கோடைக் காலத்தில்;* **இடிக்குலங்கள் வீழ** - *இடிக் கூட்டங்கள் விழுதலால்;* **வெந்த காடுபோல்** - *எரிந்தொழியும் காடுபோல்;* **எரிந்த** - *தீப் பற்றி எரிந்தன.*

***9388. அற்ற வேலும் வாளும் ஆதி ஆயுதங்கள் மீது எழுந்து***

***உற்ற வேகம் உந்த ஓடி, ஓத வேலை ஊடுற,***
***துற்ற வெம்மை கைம்மிக, சுறுக்கொளச்***
***சுவைத்ததால்,***
***வற்றி நீர் வறந்து, மீன் மறிந்து, மண் செறிந்தவால்.***

***அற்ற*** - *சிதைந்துபோன;* ***வேலும் வாளும் ஆதி ஆயுதங்கள்*** - *வேல், வாள் முதலான ஆயுதங்கள்;* ***மீது எழுந்து*** - *மேல் நோக்கிப் பாய்ந்து;* ***உற்ற வேகம் உந்த ஓடி*** - *மிகுந்த வேகம் செலுத்துதலால் மேலே சென்று;* ***ஓத வேலை ஊடுற*** - *நீர்ப் பெருக்குடைய கடலிலே ஊடுருவி;* ***துற்ற வெம்மை கைம்மிக*** - *நெருங்கிய வெப்பம் மிகுதலாலும்;* ***சுறுக்கொளச் சுவைத்ததால்*** - *சுறுக்கெனும் ஓசையுடன் கடல்நீரை உறிஞ்சிச் சுவைத்ததாலும்;* ***நீர் வற்றி வறந்து*** - *கடல் நீர் வற்றி வறண்டிட;* ***மீன் மறிந்து*** - *மீன்கள் மடங்கி;* ***மண் செறிந்த*** - *கடலடி நிலத்திலே செறிந்து விட்டன.*

***9389. போர் அரிந்தமன் துரந்த புங்க வாளி, பொங்கினார்***
***ஊர் எரிந்த நாள் துரந்தது என்ன மின்னி ஓடலால்,***
***நீர் எரிந்த வண்ணமே, நெருப்பு எரிந்த, நீள் நெடுந்***
***தேர் எரிந்த, வீரர்தம் சிரம் பொடிந்து சிந்தவே.***

***போர்*** - *போர்க்களத்திலே;* ***அரிந்தமன்*** - *பகைவர்களை அடக்குவோனாகிய இராமன்;* ***துரந்த*** - *செலுத்திய;* ***புங்க வாளி*** - *மேலான அம்புகள்;* ***பொங்கினார் ஊர் எரிந்த நாள்*** - *எதிர்த்தெழுந்த அசுரர்களின் திரிபுரம் எரிந்த காலத்தில்;* ***துரந்தது என்ன*** - *(சிவபிரான்) செலுத்திய அம்பு என்னும்படி;* ***மின்னி ஓடலால்*** - *ஒளி வீசிப் பாய்வதால்;* ***நீர் எரிந்த வண்ணமே*** - *நீர் பற்றி எரிந்தது போலவே;* ***நெருப்பு எரிந்த*** - *நெருப்புப் பற்றி எரிந்தன;* ***வீரர் தம் சிரம்*** - *அரக்க வீரர்களின் தலைகள்;* ***பொடிந்து சிந்தவே*** - *பொடியாகிச் சிதறும்படி;* ***தேர் எரிந்த*** - *தேர்கள் பற்றி எரிந்தன.*

*நீர் எரிதல் என்பது கடல்நீர் வற்றியதைக் குறித்தது. நெருப்புக்கு நெருப்பாய் அம்பு பொசுக்கியது என்பதை நெருப்பு எரிந்த என்றார்.*

***9390. பிடித்த வாள்கள் வேல்களோடு, தோள்கள் பேர் அரா***
***எனத்***
***துடித்த; யானைமீது இருந்து போர் தொடங்கு சூரர்***
***தம்***
***மடித்த வாய்ச் செழுந் தலைக் குலம் புரண்ட,***
***வானின் மின்***
***இடித்த வாயின் இற்ற மா மலைக் குலங்கள்***
***என்னவே.***

**பிடித்த வாள்கள் வேல்களோடு** - கையில் பிடித்த வாள்களோடும் வேல்களோடும்; **பேர் அரா என** - பெரிய பாம்புகளைப் போல; **தோள்கள் துடித்த** - (அரக்க வீரர்களின்) தோள்கள் துடித்தன; **யானைமீது இருந்து** - யானைகள் மேல் அமர்ந்து; **போர் தொடங்கு சூரர் தம்** - போர் செய்யத் தொடங்கும் வீரர்களின்; **மடித்த வாய்ச் செழுந் தலைக்குலம்** - மடித்த வாயோடு கூடிய பெரிய தலைத் தொகுதிகள்; **வானின் மின் இடித்த வாயின்** - விண்ணிலிருந்து வரும் மின்னல் தாக்கிய இடத்தில்; **இற்ற** - பிளவுற்ற; **மாமலைக் குலங்கள் என்ன** - பெரிய மலைக் கூட்டங்கள் போல; **புரண்ட** - புரண்டன.

போர் முற்றுமளவு வாழார் என்பது தோன்றப் போர் தொடங்கு சூரர் என்றார்.

***9391. கோர ஆளி, சீயம், மீளி, கூளியோடு ஞாளியும்,***
***போர ஆளினோடு தேர்கள் நூறு கோடி பொன்றுமால் -***
***நார ஆளி, ஞால ஆளி, ஞான ஆளி, நாந்தகப்***
***பார ஆளி, வீர ஆளி, ஏக வாளி பாயவே.***

**நார ஆளி** - அன்பினால் ஆள்பவனும்; **ஞால ஆளி** - உலகங்களை ஆள்பவனும்; **ஞான ஆளி** - ஞானத்தை ஆள்பவனும்; **நாந்தகப் பார ஆளி** - நாந்தகம் என்ற வாளின் பாரத்தை ஆள்பவனும்; **வீர ஆளி** - வீரத்தை ஆள்பவனுமாகிய இராமபிரானின்; **ஏக ஆளி பாய** - ஒரே அம்பு பாய்ந்ததனால்; **கோர ஆளி** - பயமூட்டும் யாளிகளும்; **சீயம் மீளி கூளியோடு ஞாளியும்** - சிங்கம், வலிய பேய்கள் மற்றும் (செந்) நாயும்; **போர ஆளினோடு** - போர்க் களத்தில் வந்த வீரர்களோடு; **தேர்கள் நூறு கோடி பொன்றும்** - நூறு கோடி தேர்கள் அழியும்.

***9392. ஆழி பெற்ற தேர் அழுந்தும்; ஆள் அழுந்தும்; ஆளொடும்***
***சூழி பெற்ற மா அழுந்தும்; வாசியும் சுரிக்குமால் -***
***பூழி பெற்ற வெங் களம் குளம் பட, பொழிந்த பேர்***
***ஊழி பெற்ற ஆழி என்ன சோரி நீரினுள் அரோ.***

**பூழி பெற்ற வெங்களம்** - புழுதி பரவிய கொடிய போர்க்களத்தில்; **குளம் பட** - குளங்கள் உண்டாகும்படியாக; **பேர் ஊழி பெற்ற ஆழி என்ன** - பெரிய யுகமுடிவுக் காலத்துக் கடல்போல்; **பொழிந்த சோரி நீரினுள்** - பொழிந்த இரத்தமாகிய வெள்ளத்தில்; **ஆழி பெற்ற தேர் அழுந்தும்** - சக்கரங்களோடு கூடிய தேர்கள் அழுந்திப் போகும்; **ஆள் அழுந்தும்** - காலாட்படை வீரர்கள் அழுந்திப் போவர்; **ஆளொடும்** - மேலே அமர்ந்து செலுத்தும் பாகரோடு; **சூழி பெற்ற மா அழுந்தும்** -

*நெற்றிப் பட்டம் அணிந்த யானைகள் மூழ்கும்;* **வாசியும் சுரிக்கும்** - *குதிரைகளும் மூழ்கும்.*

*அரோ : அசை.*

***9393. அற்று மேல் எழுந்த வன் சிரங்கள்தம்மை அண்மி, மேல்,***
***ஒற்றும் என்ன அங்கும் இங்கும் விண்ணுளோர் ஒதுங்குவார்;***
***'சுற்றும் வீழ் தலைக் குலங்கள் சொல்லு கல்லின் மாரிபோல்***
***எற்றும்' என்று, பாரின் எங்கும் வாழுவார்; இரங்குவார்.***

**அற்று மேல் எழுந்த வன் சிரங்கள்** - *உடம்பிலிருந்து துண்டு பட்டு மேல்நோக்கி எழுந்த வலிய தலைகள்;* **தம்மை அண்மி** - *தங்களை நெருங்கி;* **மேல் ஒற்றும் என்ன** - *தங்கள் மேல் ஒட்டும் என்று;* **விண்ணுளோர் அங்கும் இங்கும் ஒதுங்குவார்** - *தேவர்கள் அங்கும் இங்குமாக ஒதுங்கிக் கொண்டார்கள்;* **சுற்றும் வீழ் தலைக் குலங்கள்** - *சுற்றிலும் எங்கெங்கும் விழுகின்ற தலைகளின் தொகுதிகள்;* **சொல்லு கல்லின் மாரிபோல்** - *சிறப்பாகச் சொல்லப் படுகின்ற கல் மழை போல்;* **எற்றும் என்று** - *மோதித் தாக்கும் என்று;* **பாரின் எங்கும் வாழுவார்** - *மண்ணுலகெங்கும் வாழ்கின்றவர்கள்;* **இரங்குவார்** - *வேதனைப்பட்டார்கள்.*

***9394. மழைத்த மேகம் வீழ்வ என்ன, வான மானம் வாடையின்***
***சுழித்து வந்து வீழ்வ என்ன, மண்ணின்மீது துன்னுமால் -***
***அழித்து ஒடுங்கு கால மாரி அன்ன வாளி ஒளியால்***
***விழித்து எழுந்து, வானினூடு மொய்த்த பொய்யர் மெய் எலாம்.***

**அழித்து ஒடுங்கு கால மாரி அன்ன** - *உலகங்களையெல்லாம் அழித்து ஒடுக்குகின்ற ஊழிக்கால மழைபோல;* **வாளி ஒளியால்** - *இராமபிரான் எய்த அம்புகளின் வரிசையால்;* **விழித்து எழுந்து** - *கண்கள் திறந்தபடியே (விண்ணின்மீது) எழும்பி;* **வானினுக்கு மொய்த்த பொய்யர் மெய் எலாம்** - *ஆகாயவெளியிலே நெருங்கிச் செறிந்த பொய்யர்களாகிய அரக்கர்களின் உடம்புகளெல்லாம்* **மழைத்த மேகம் வீழ்வ என்ன** - *மழைநீர் நிரம்பிய மேகங்கள் விழுபவை போலவும்;*

***வாடையின் கழித்து வந்து*** - வாடைக் காற்றினால் சுழன்று வந்து; ***வான மானம்*** - ஆகாயத்தில் பறக்கும் விமானங்கள்; ***வீழ்வ என்ன*** - விழுபவை போலவும்; ***மண்ணின் மீது துன்னும்*** - நிலத்தை வந்து அடையும்.

*ஆல் - அசை. ஒளி - வரிசை, மானம் - விமானம்.*

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

### *அரக்கர் செய்த போர்*

***9395. தெய்வ நெடும் படைக் கலங்கள் விடுவர் சிலர்;***
***சுடு கணைகள் சிலையில் கோலி,***
***எய்வர் சிலர்; எறிவர் சிலர்; எற்றுவர்***
***சுற்றுவர், மலைகள் பலவும் ஏந்தி;***
***பெய்வர் சிலர்; 'பிடித்தும்' எனக் கடுத்து உறுவர்;***
***படைக் கலங்கள் பெறாது, வாயால்***
***வைவர் சிலர்; தெழிப்பர் சிலர்; வருவர் சிலர்;***
***திரிவர் சிலர் - வயவர் மன்னோ.***

***வயவர் சிலர் தெய்வ நெடும் படைக்கலங்கள் விடுவர்*** - அரக்க வீரருள் சிலர் தெய்வ வரங்களால் பெற்ற பெரிய போர்க்கருவிகளை ஏவுவர்; ***சிலர்*** - அவர்களிலே மற்றும் சிலர்; ***சிலையில் சுடு கணைகள் கோலி எய்வர்*** - வில்லில் வெப்பம் உமிழும் அம்புகளைப் பொருத்தி எய்வார்கள்; ***சிலர் எறிவர்*** - மேலும் சிலர் கிடைத்த கருவிகளைக் கொண்டு எறிவார்கள்; ***மலைகள் பலவும் ஏந்தி எற்றுவர், சுற்றுவர்*** - இன்னும் சில அரக்கர் பல மலைகளைக் கையால் ஏந்தித் தாக்குவர், மேலும் கைக்கொண்ட மலைகளைச் சுழற்றுவர்; ***சிலர் பெய்வர்*** - வேறு சிலர் (அந்த மலைகளை) பொழிவர்; ***(சிலர்) பிடித்தும் எனக் கடுத்து உறுவர்*** - மற்றுள்ள சில அரக்கர்கள் அப்படிப் பெய்யப்பட்ட மலைகளைப் 'பற்றுவோம்' என விரைவாக மலை வருமிடத்தை அடைவார்கள்; ***படைக்கலங்கள் பெறாது சிலர் வாயால் வைவர்*** - எவ்வித போர்க் கருவிகளும் பெறாத சிலர் வாயால் திட்டுவார்கள்; ***சிலர் தெழிப்பர்*** - மேலும் சிலர் அதட்டுவார்கள்; ***வருவர் சிலர், திரிவர் சிலர்*** - மற்றும் சிலர் புதிதாகப் போர்க்களத்துள் வருவர்; படைக்கலம் பெற்றிடாத வேறு சிலர் போர்க்களத்தில் இங்குமங்குமாகத் திரிவார்கள்.

*மன், ஓ : அசைகள்.*

***9396. ஆர்ப்பர் பலர்; அடர்ப்பர் பலர்; அடுத்து அடுத்தே,***

***படைக் கலங்கள் அள்ளி அள்ளித்***
***தூர்ப்பர் பலர்; மூவிலைவேல் துரப்பர் பலர்;***
***கரப்பர் பலர்; சுடு தீத் தோன்றப்***
***பார்ப்பர் பலர்; நெடு வரையைப் பறிப்பர் பலர் -***
***பகலோனைப் பற்றிச் சுற்றும்***
***கார்ப் பருவ மேகம் என, வேக நெடும்***
***படை அரக்கர் கணிப்பு இலாதார்.***

***கணிப்பு இலாதார்*** - *கணக்கிட முடியாதவராகிய;* ***பகலோனைப் பற்றிச் சுற்றும் கார்ப்பருவ மேகம் என*** - *சூரியனைச் சூழ்ந்து சுழலும் கார்கால மேகம் போல;* ***வேக நெடும் படை அரக்கர்*** - *வேகமாகச் செல்லக் கூடிய படையிலுள்ள அரக்கர்களில்;* ***பலர் ஆர்ப்பர்*** - *பலர் போர் முழக்கம் செய்வார்கள்;* ***பலர் அடர்ப்பர்*** - *பகைஞரை நெருங்கிப் போர் செய்வார்கள்;* ***பலர் அடுத்தடுத்தே படைக்கலங்கள் அள்ளி அள்ளி*** - *மற்றும் பலர் போர்க்கருவிகளைத் தொடர்ந்து எடுத்து;* ***தூர்ப்பர்*** - *நிரப்புவார்கள்;* ***பலர் மூவிலை வேல் துரப்பர்*** - *பலர் திரிசூலத்தைச் செலுத்துவார்கள்;* ***பலர் கரப்பர்*** - *பலர் ஒளிந்து கொள்வார்கள்;* ***பலர் சுடுதீத் தோன்றப் பார்ப்பர்*** - *பலர் தன் கண்களிலே சுடும் நெருப்புப் புலப்படும்படியாகப் பார்ப்பார்கள்;* ***பலர் நெடுவரையைப் பறிப்பர்*** - *பலர் பெரிய மலைகளைப் பெயர்த்து எடுப்பார்கள்.*

## *இராமபிரான் வெற்றி விளக்கம்*

***9397. எறிந்தனவும், எய்தனவும், எடுத்தனவும்,***
***பிடித்தனவும், படைகள் எல்லாம்***
***முறிந்தன, வெங் கணைகள் பட; முற்றின***
***சுற்றின தேரும், மூரி மாவும்;***
***நெறிந்தன குஞ்சிகளோடும் நெடுந் தலைகள்***
***உருண்டன; பேர் இருளின் நீங்கி***
***பிறிந்தனன் வெய்யவன் என்னப்***
***பெயர்ந்தனன் - மீது***
***உயர்ந்த தடம் பெரிய தோளான்.***

***எறிந்தனவும், எய்தனவும், எடுத்தனவும், பிடித்தனவும் படைகள் எல்லாம்*** - *வீசி எறியப்பட்டவை, எய்யப் பெற்றவை, கைகளில் பிடிக்கப்பட்டவை ஆகிய பல்வேறு போர்க்கருவிகளெல்லாம்;* ***வெங்கணைகள் பட முறிந்தன*** - *இராமபிரானின் கொடிய அம்புகள் தாக்கியதால் ஒடிந்தொழிந்தன;* ***சுற்றின தேரும்*** - *சுழன்று சூழ்ந்த தேர்களும்;* ***மூரி மாவும்*** - *வலிய யானைகளும், குதிரைகளும்;* ***முற்றின*** - *வாழ்வின் முடிவைப் பெற்றன;* ***நெறிந்தன குஞ்சிகளோடும் நெடுந்தலைகள் உருண்டன*** - *செறிந்து வளர்ந்தனவாகிய தலைமுடிகளோடு (அரக்க வீரரின்) பெரிய தலைகள்*

*உருண்டன;* **பேர் இருளின் நீங்கிப் பிறந்தனன் வெய்யவன் என்ன** - *செறிவுற்ற இருளைவிட்டு நீங்கிப் பிற சூரியனைப் போல;* **மீது உயர்ந்த தடம் பெரிய தோளான்** - *மிக உயர்ந்தனவும் அகன்றனவும் ஆகிய பெரிய தோள்களை உடைய இராமபிரான்;* **பெயர்ந்தனன்** - *அரக்கர் கூட்டத்திலிருந்து வெளியேறினான்.*

***9398. சொல் அறுக்கும் வலி அரக்கர், தொடு கவசம்***
***துகள் படுக்கும்; துணிக்கும் யாக்கை;***
***வில் அறுக்கும்; தலை அறுக்கும்; மிடல் அறுக்கும்;***
***அடல் அறுக்கும்; மேல் மேல் வீசும்***
***கல் அறுக்கும்; மரம் அறுக்கும்; கை அறுக்கும்***
***செய்ய மள்ளர் கமலத்தோடு***
***நெல் அறுக்கும் திரு நாடன் நெடுஞ் சரம்***
***என்றால், எவர்க்கும் நிற்கலாமோ?***

**செய்ய மள்ளர்** - *வயல்களில் இறங்கும் உழவர்கள்;* **கமலத்தோடு நெல் அறுக்கும்** - *தாமரையோடு நெற்பயிரை அறுவடை செய்கின்ற;* **திருநாடன்** - *தெய்வத்தன்மை பொருந்திய (கோசல) நாட்டவனாகிய இராமபிரான் ஏவிய;* **நெடுஞ் சரம்** - *நெடிய அம்புகள்;* **சொல் அறுக்கும் வலி அரக்கர்** - *சொல்லின் எல்லைக்கு முடிவு கட்டும் வலிமையுடைய அரக்கர்கள்;* **தொடும் கவசம்** - *கட்டியுள்ள கவசங்களை;* **துகள் படுக்கும்** - *தூளாக்கும்;* **யாக்கை துணிக்கும்** - *உடல்களைத் துண்டாக்கும்;* **வில் அறுக்கும்** - *விற்களை அறுத்திடும்;* **தலை அறுக்கும்** - *தலைகளை அறுக்கும்;* **மிடல் அறுக்கும்** - *வலிமையை அழிக்கும்;* **அடல் அறுக்கும்** - *(அரக்கர்களின்) கொல்லுதல் தொழிலை அழிக்கும்;* **மேல் மேல் வீசும் கல் அறுக்கும்** - *தொடர்ந்து (அரக்கரால்) வீசப்படுகின்ற பெருங்கற்களை நொறுக்கும் ;* **மரம் அறுக்கும்** - *(தாக்குதற்கு அரக்கர் ஏந்தும்) மரங்களை அறுக்கும்;* **கை அறுக்கும்** - *அவற்றை ஏந்தியுள்ள கைகளைத் துணிக்கும்;* **என்றால்** - *இப்படி இராமன் கணை செயல்பட்டது என்றால்;* **எவர்க்கும் நிற்கலாமோ** - *எவரேனும் (இராமனை) எதிர்த்து நிற்க முடியுமா? (முடியாது)*

*சொல் - சொல்லுதல், புகழ், அரக்கர் புகழ் சொல்லி மாளாது என்பது கருத்து. அடல் - வெற்றி எனினும் ஆம்.*

***9399. 'கால் இழந்தும், வால் இழந்தும், கை இழந்தும்***
***கழுத்து இழந்தும், பருமக் கட்டின்***
***மேல் இழந்தும், மருப்பு இழந்தும், விழுந்தன'***
***என்குநர் அல்லால், வேலை அன்ன,***
***மால் இழந்து, மழை அனைய மதம் இழந்து;***
***வலி இழந்து, மலைபோல் வந்த***
***தோல் இழந்த தொழில் ஒன்றும் சொல்லினர்கள்***

***இல்லை - நெடுஞ் சுரர்கள் எல்லாம்.***

**நெடுஞ் சுரர்களெல்லாம்** - *தரத்தால் பெருமையுடைய தேவர்கள் யாவரும்;* **கால் இழந்தும் வால் இழந்தும் கை இழந்தும் கழுத்து இழந்தும்** - *கால், வால், தும்பிக்கை, கழுத்து ஆகியவற்றை இழந்தும்;* **பருமக் கட்டின் மேல் இழந்தும்** - *மேல் இருந்த அம்பாரியை இழந்தும்;* **மருப்பு இழந்தும் விழுந்தன** - *தந்தங்களை இழந்தும் இறந்து விழுந்தன;* **என்குநர் அல்லால்** - *என்று பேசினார்களே தவிர;* **மலை போல் வந்த தோல்** - *மலைகளைப் போன்ற வடிவுகொண்ட யானைகள்;* **மால் இழந்து** - *கோபம் அழிந்து;* **மழை அனைய மதம் இழந்து** - *மழைபோல் சொரியும் மதநீர் ஒழுகுதலை இழந்து;* **இழந்த தொழில் ஒன்றும் சொல்லினர்கள் இல்லை** - *இழந்துவிட்ட செயல் எதையும் சொல்லவில்லை.*

**சந்தக் கலிவிருத்தம்**

***9400. வேல் செல்வன், சத கோடிகள்; விண்மேல் நிமிர் விசிகக்***
***கோல் செல்வன, சத கோடிகள்; கொலை செய்வன, மலைபோல்,***
***தோல் செல்வன, சத கோடிகள்; துரகம் தொடர் இரதக்***
***கால் செல்வன, சத கோடிகள்; ஒருவன், அவை கடிவான்!***

*(அரக்கர் ஏவி, இராமன் மேல்)* **செல்வன சத கோடிகள் வேல்** - *செலுத்தப்படுகின்றவை நூறு கோடி வேல்களாகும்;* **விண் மேல் நிமிர் விசிகக் கோல் சத கோடிகள் செல்வன** - *வானம் நோக்கி உயரப் பாய்ந்த அம்புக்கோல்கள் நூறு கோடியாகும்;* **கொலை செய்வன மலைபோல் செல்வன** - *கொலை செய்கின்றவை யாவும் மலை போன்றனவாயும் செல்லுகின்றனவாகிய;* **தோல் சதகோடிகள்** - *யானைகள் நூறு கோடியாகும்;* **துரகம் தொடர்** - *குதிரைகள் பூட்டப் பெற்று; கால் செல்வன இரதம் சதகோடி - சக்கரங்களால் இயங்கும் தேர்கள் நூறு கோடியாகும்;* **அவை கடிவான் ஒருவன்** - *மேலே குறித்த நூறு கோடிகள் கணக்காயினவற்றை ஒழிப்பவன் (இராமன்) ஒருவன்.*

***9401. ஒரு வில்லியை, ஒரு காலையின், உலகு ஏழையும் உடற்றும்***
***பெரு வில்லிகள், முடிவு இல்லவர், சர மா மழை பெய்வார்;***
***பொரு வில்லவர் கணை மாரிகள் பொடியாம் வகை பொழிய,***

***திருவில்லிகள் தலை போய் நெடு மலைபோல் உடல்
சிதைவார்.***

**உலகு ஏழையும் உடற்றும் முடிவில்லவர் பெரு வில்லினர்** - ஏழு உலகங்களையும் எதிர்த்துப் போரிட வல்லவர்களும் பெரிய விற்கள் ஏந்தியோருமாகிய கணக்கற்ற அரக்கர்கள்; **ஒரு வில்லியை** - வில்லை ஏந்தித் தனியொருவனாயுள்ள இராமனை எதிர்த்து; **சர மா மழை பெய்வார்** - பெரு மழையாக அம்புகளைப் பெய்தனர்; **பொருவில்லவர்** - போர் செய்யும் அந்த வில்லேந்திகளின்; **கணை மாரிகள் பொடியாம் வகை** - அம்பு மழை தூளாகும் வண்ணம்; **பொழிய** - (இராமபிரானும்) வில் மழை பொழிதலினால்; **திருவில்லிகள்** - (வீரச்) செல்வம் இல்லாதவர்களாகிய அரக்கர்கள்; **தலைபோய்** - தலைகள் அறுபட்டு; **நெடு மலை போல் உடல் சிதைவார்** - பெரிய மலை போன்ற தங்கள் உடல்கள் அழிந்தனர்.

***9402. 'நூறாயிர மத யானையின் வலியோர்' என
நுவல்வோர்,
மாறு ஆயினர், ஒரு கோல் பட, மலை போல் உடல்
மறிவார்;
ஆறு ஆயிரம் உளவாகுதல் அழி செம் புனல் அவை
புக்கு,
ஏறாது, எறி கடல் பாய்வன, சின மால் கரி இனமால்.***

**நூறாயிரம் மத யானையின் வலியோர்** - லட்சம் மத யானைகளின் வலிமை கொண்டவர்கள்; **என நுவல்வோர்** - என்று (சிறப்பித்துச்) சொல்லப்படுவோராகிய அரக்கர்கள்; **ஒரு கோல் பட** - (இராமபிரான் ஏவிய) ஓர் அம்பு பட்டவுடன்; **மாறு ஆயினர்** - தம் வீரம் மாறுபட்டவராய்; **மலை மேல் உடல் மறிவார்** - மலை போன்ற உடல்கள் மடங்கப் பெற்றனர்; **ஆயிரம் ஆறு உள ஆகுவ** - (மேலும்) ஆயிரம் (குருதி) ஆறுகள் உண்டாயினவாக; **வழி செம்புனல் அவை புக்கு** - களத்தில் வழிந்த இரத்தம் ஆகிய ஆறுகளிலே கலந்து; **சின மால் கரி இனம்** - சினமும் மதமும் கொண்ட யானைக் கூட்டங்கள்; **ஏறாது** - (அந்தக் குருதியாற்றின் கரை) ஏறமுடியாமல்; **எறி கடல் பாய்வன** - அலைகள் மோதும் கடலிலே போய்க் கலந்தன.

ஆல் - அசை.

***9403. மழு அற்று உகும்; மலை அற்று உகும்; வளை அற்று
உகும்; வயிரத்து
எழு அற்று உகும்; அயில் அற்று உகும்; இலை அற்று
உகும்; எழு வேல்;
பழு அற்று உகும், மத வெங் கரி; பரி அற்று உகும்;***

**இரதக்**
**குழு அற்று உகும்;- ஒரு வெங் கணை தொடை**
**பெற்றது ஓர் குறியால்.**

***ஒரு வெங்கணை*** - *(இராமன் ஏவிய) ஒப்பற்ற ஒரு கொடிய அம்பு;* ***தொடை பெற்றது ஓர் குறியால்*** - *தொடுக்கப்பட்டதாகிய ஓர் இலக்கினால்;* ***மழு அற்று உகும்*** - *மழுக்கள் சிந்தி விழும்;* ***மலை அற்று உகும்*** - *அரக்கரால் எறியப்பட்ட மலைகள் சிதறி விழும்;* ***அற்று உகும் வளை*** - *சிந்தி விழும் வளை என்னும் கருவிகள்;* ***அற்று உகும் வயிரத்து எழு*** - *வயிரம் போல் உறுதி வாய்ந்த எழு என்னும் கருவிகள் உடைந்துவிழும்;* ***அற்று உகும் அயில்*** - *வேல்கள் உடைந்துவிடும்;* ***எழுவேல்*** - *ஓங்கி எழுகின்ற வேல்களின்;* ***இலை அற்று உகும்*** - *(கூரிய) இலை போன்ற பகுதி சிதைந்துவிழும்;* ***மத வெங்கரி*** - *மத நீர் பொழியும் கொடிய யானைகள்;* ***பழு அற்று உகும்*** - *விலா எழும்பு முறிந்து விழும்;* ***பரி*** - *குதிரைகள்;* ***அற்று உகும் -; இரதக் குழு*** - *தேர்களின் கூட்டம்;* ***அற்று உகும் -.***

***9404. ஒரு காலையின், உலகத்து உறும் உயிர் யாவையும்***
***உண்ண***
***வரு காலனும், அவன் தூதரும், நமன்தானும், அவ்***
***வரைப்பின்***
***இரு கால் உடையவர் யாவரும் திரிந்தார்***
***இளைத்திருந்தார்;***
***அருகு ஆயிரம் உயிர் கொண்டு தம் ஆறு ஏகலர்,***

***அயர்த்தார்.***

***ஒரு காலையின்*** - *ஒரே நேரத்தில்;* ***உலகத்து உறும் உயிர் யாவையும் உண்ண*** - *உலகில் வாழும் எல்லா உயிர்களையும் கவர்வதற்கு;* ***வரு காலனும்*** - *வருகின்ற இயமனும்;* ***அவன் தூதரும்*** - *இயம தூதர்களும்;* ***நமன் தானும்*** - *நமன் என்பவனும்;* ***அவ் வரைப்பின்*** - *அப்போர்க்களத்தில்;* ***இரு கால் உடையவர்*** - *இரண்டு கால்கள் மட்டுமே உடையவராய்;* ***யாவரும் திரிந்தார்*** - *அவர்கள் எல்லாரும் திரிகின்றவர்களாகி;* ***இளைத்திருந்தார்*** - *தளர்ச்சி அடைந்தார்கள்;* ***அருகு ஆயிரம் உயிர் கொண்டு*** - *பக்கத்தே ஆயிரக் கணக்கான உயிர்களைக் கவர்ந்துகொண்டு;* ***தம் ஆறு ஏகலர்*** - *தமக்குரிய வழியில் போகாமல்;* ***அயர்த்தார்*** - *உயிர் கவர்தலாகிய தம் தொழிலை மறந்தார்கள்.*

*இயமன், நமன் இரண்டு சொற்களும் கூற்றுவனையே குறிப்பதாகக் கொள்ளும் பொதுக் கருத்தைக் கம்பர் இப்பாடலில் ஏற்கவில்லை. வை.மு.கோ. பதிப்பு, ஐயரவர்கள் நூலகப் பதிப்பு இரண்டும் நமன் என்பான் இயமனின் பிரதானி எனக் குறிக்கும். 'நமன் என்பது யமனைக் காட்ட, காலன் என்பது அவ் யமனுடைய மந்திரியைக் காட்டும் எனவும் வை.மு.கோ. குறித்துள்ளார். திருநாவுக்கரசர் தேவாரத்தையும் (4, 49, 2) பரிபாடல் (3 - 8) அடிகளுக்குப் பரிமேலழகர் தந்த*

*விளக்கத்தையும் எடுத்துக்காட்டி, தருமன் - யமன், மடங்கல் அவன் ஏவல் செய்யும் கூற்றம்' என அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு விளக்கம் தருகிறது.*

***9405. அடுக்குற்றன மத யானையும், அழி தேர்களும், பரியும்***
***தொடுக்குற்றன விசும்பூடு உறச் சுமந்து ஓங்கின எனினும்***
***மிடுக்குற்றன கவந்தக் குலம் எழுந்து ஆடலின், எல்லாம்,***
***நடுக்குற்றன, பிணக் குன்றுகள், உயிர் நண்ணின் என்ன.****

***அடுக்குற்றன (அழி) மத யானையும்** - அடுக்கடுக்காக, வந்து அழிந்த மத யானைகளும்; **அழி தேர்களும்** - அழிந்த தேர்களும்; **பரியும்** - அழிந்த குதிரைகளும்; **தொடுக்குற்றன** - ஒன்றொடொன்று தொடர்புடையனவாய்; **விசும்பு ஊடுற** - ஆகாயத்தினூடு சென்று; **சுமந்து ஓங்கின** - மிக உயரமாய்க் குவிந்து விட்டன; **எனினும்** - இப்படிப் பிணங்களாய்க் குவிந்துவிட்டாலும்; **மிடுக்குற்றன கவந்த குலம்** - வலிமையான உடல்வாகு கொண்ட கவந்தங்களின் கூட்டம்; **எழுந்து ஆடலின்** - குதித்தெழுந்து ஆடுவதால்; **பிணக்குன்றுகள் எல்லாம்** - பிண மலைகளெல்லாம்; **உயிர் நண்ணின என்ன** - மீண்டும் உயிர் பெற்றுவிட்டதைப் போல்; **நடுக்குற்றன** - அதிர்ந்தன.*

***9406. பட்டார் உடல் படு செம்புனல் திருமேனியில் படலால்***
***கட்டு ஆர் சிலைக் கரு ஞாயிறு புரைவான், கடையுகநாள்,***
***சுட்டு, ஆசு அறுத்து உலகு உண்ணும் அச் சுடரோன் எனப் பொலிந்தான்;***
***ஒட்டார் உடல் குருதிக் குளித்து எழுந்தானையும் ஒத்தான்.****

***பட்டார் உடல் படு செம்புனல்** - இறந்துவிட்ட அரக்கர்களின் உடலிலே தோன்றிய குருதி; **திருமேனியில் படலால்** - தெய்வீக உடம்பிலே பட்டதால்; **கட்டு ஆர்சிலைக் கருஞாயிறு புரைவான்** - உறுதி பெறக் கட்டப்பட்ட வில்லாளியும் கரிய சூரியனைப் போல்வானுமாகிய இராமபிரான்; **யுகக் கடை நாள்** - ஊழிக் காலத்தின் கடைசி நாளில்; **சுட்டு** - எரித்து; **ஆசு அறுத்து** - பற்றுக் கோடானவற்றை அழித்து; **உலகு உண்ணும்** - உலகங்களை உண்ணுகின்ற; **சுடரோன் எனப் பொலிந்தான்** - சூரியனைப் போல அழகுற விளங்கினான்; **ஒட்டார் உடல் குருதி***

***குளித்து எழுந்தானையும் ஒத்தான்*** - *பகைவர்களின் குருதியிலே மூழ்கி எழுந்த பரசுராமனைப் போலவும் இருந்தான்.*

*குருதி குளித்து எனற்பாலது ஓசை நியதிக்காகக் குருதிக் குளித்து என நின்றது. கருநிறம் ஆயினும் ஒளி மேனியன் ஆதலின் கரு ஞாயிறு என இல்பொருள் உவமை கூறினார்.*

***9407. தீ ஒத்தன உரும் ஒத்தன சரம் சிந்திட, சிரம் போய்***
***மாய, தமர் மடிகின்றனர் எனவும், மறம் குறையா,***
***காயத்திடை உயிர் உண்டிட, உடல் மொய்த்து எழு***
***களியால்***
***ஈ ஒத்தன நிருதக் குலம்; நறவு ஒத்தனன்***

***இறைவன். ****

***தீ ஒத்தன உரும் ஒத்தன*** - *நெருப்பையும் இடியையும் ஒத்தனவாகிய;* ***சரம் சிந்திட*** - *அம்புகளை இராமபிரான் செலுத்தியதால்;* ***சிரம் போய் மாய*** - *தலை அறுபட்டு மாய்தலால்;* ***தமர் மடிகின்றனர் எனவும்*** - *தம்மைச் சார்ந்தவர்கள் இறக்கின்றனர் என்பதை உணர்ந்தும் கூட;* ***மறம் குறையா*** - *தங்கள் வீரத்தில் குறையாமல்;* ***காயத்திடை உயிர் உண்டிட*** - *உடலில் உள்ள உயிரை இராமபாணங்கள் உண்ணும்படியாக;* ***எழு களியால்*** - *பொங்குகின்ற மன எக்களிப்போடு;* ***நிருதக் குலம்*** - *அரக்கர் கூட்டங்கள்; உடன் மொய்த்து - ஒருங்கே மொய்த்து;* ***ஈ ஒத்தன*** - *தேனீக்களைப் போன்று இருந்தன;* ***இறைவன்*** - *தலைவனாகிய இராமன்;* ***நறவு ஒத்தனன்*** - *தேன் அடையினைப் போன்றவன் ஆனான்.*

***9408. மொய்த்தாரை ஓர் இமைப்பின்தலை, முடுகத் தொடு***
***சிலையால்***
***தைத்தான்; அவர், கழல் - திண் பசுங்காய் ஒத்தனர்,***
***சரத்தால்,***
***கைத்தார் நெடுந் தேரும், கடுங் களிறும், களத்து***
***அழுந்தக்***
***குத்தான், அழி குழம்பு ஆம்வகை, வழுவாச் சரக்***
***குழுவால்.****

***மொய்த்தான்*** - *தன்னை சூழவந்து நெருங்கிய அரக்கர்களை;* ***ஓர் இமைப்பின் தலை*** - *ஒரு நொடி நேரத்தில்;* ***முடுகத் தொடு சிலையால்*** - *விரைவாக அம்பு தொடுக்கும் வில்லினைக் கொண்டு;* ***தைத்தான்*** - *(இராமபிரான்) தைத்தான்;* ***அவர் சரத்தால்*** - *அவ்வாறு அம்புகளால் தைக்கப்பட்ட அரக்கர்கள்;* ***திண் பசுங் கழல்காய் ஒத்தனர்*** - *திண்ணிய பசிய கழற்சிக்காய் போன்று காட்சியளித்தனர்;* ***கைத்தார் நெடுந்தேரும்***

*- வெறுப்புக் கொண்ட பகைவர்களுடைய பெரிய தேர்களையும்;* ***கடுங்களிறும்*** *- விரைவுடைய யானைகளையும்;* ***வழுவாச் சரக் குழுவால்*** *- இலக்குத் தப்பாத அம்புக் கூட்டத்தால்;* ***அழி குழம்பால் வகை*** *- மிகுத்துப் பெருகும் குழம்பாகும் வகையில்;* ***களத்து அழுந்தக் குத்தான்*** *- போர்க்களத்திலே புதையும்படி சிந்தினான்.*

***9409. பிரிந்தார் பலர்; இரிந்தார் பலர்; பிழைத்தார் பலர்; உழைத்தார்,***
***புரிந்தார் பலர்; நெரிந்தார் பலர்; புரண்டார் பலர்; உருண்டார்;***
***எரிந்தார் பலர்; கரிந்தார் பலர்; எழுந்தார் பலர்; விழுந்தார்;***
***சொரிந்தார் குடல்; துமிந்தார் தலை; கிடந்தார், எதிர் தொடர்ந்தார்.***

***பிரிந்தார் பலர்*** *- தம் குழுவிலிருந்து பிரிந்தவர்கள் பலர்;* ***இரிந்தார் பலர்*** *- ஓடினவர்கள் பலர்;* ***பிழைத்தார் பலர் -; உழைத்தார் (பலர்)*** *- வேதனை அடைந்தார்கள் பலர்;* ***புரிந்தார் பலர்*** *- அவருள்ளும் போர் தொடர்ந்து செய்வர்கள் பலர்;* ***நெரிந்தார் பலர்*** *- உடல் நெரிந்தவர்கள் பலர்;* ***புரண்டார் பலர், உருண்டார் பலர் எரிந்தார் பலர்-; கரிந்தார் பலர்*** *- உடல் கருகியவர்கள் பலர்;* ***எழுந்தார் பலர்*** *- போர்க்களத்தில் விழுந்தவர்களில் மீண்டும் எழுந்தவர்கள் பலர்;* ***விழுந்தார்*** *- அப்படி எழுந்தவர்கள் மீண்டும் விழுந்தனர்;* ***குடல் சொரிந்தனர் (பலர்)*** *- குடல் சொரியப் பெற்றவர்கள் பலர்;* ***தலை துமிந்தார் (பலர்)*** *- தலை வெட்டப் பட்டவர்கள் பலர்;* ***எதிர் தொடர்ந்தார்*** *- இராமனை எதிர்த்துத் தொடர்ந்து போர் செய்தவர்கள்;* ***கிடந்தார்*** *- மேற்குறித்தபடி வீழ்ச்சி அடைந்தார்கள்.*

***9410. மணி குண்டலம், வலயம், குழை, மகரம், சுடர் மகுடம்***
***அணி கண்டிகை, கவசம், கழல்; திலகம், முதல அகலம்***
***துணியுண்டவர் உடல், சிந்தின; சுடர்கின்றன தொடரும்***
***திணி கொண்டலினிடை மின் குலம் மிளிர்கின்றன சிவண.****

***திணி கொண்டலினிடை*** *- செறிந்த மேகங்களினிடையே;* ***மின் குலம் மிளிர்கின்றன சிவண*** *- மின்னல் கூட்டங்கள் ஒளி விடுவன போல்;* ***சுடர்கின்றன தொடரும்*** *- ஒளிர்வனவாய்த் தொடர்ந்துள்ள;* ***மணி குண்டலம்*** *- இரத்தின மணி இழைத்த குண்டலங்கள்;* ***வலயம்*** *- தோளில் அணியும் (வாகு) வலயம்;* ***மகரம் குழை*** *- மகரக் குழைகள்;* ***சுடர் மகுடம்*** *- ஒளி வீசும் கிரீடங்கள்;* ***அணி கண்டிகை*** *- அழகிய கண்டிகை;*

***கவசம், கழல், திலகம் முதல*** - *கவசம், வீரக் கழல், வெற்றித் திலகம் முதலாகிய;* ***கலம்*** *- அணிகள்;* ***சிந்தின*** *- சிதைவுற்றன.*

*அரக்கர் உடல்கள் மேகத்திரள்கள் போலவும், அவர் உடல்களிலிருந்து சிதறி ஒளி வீசும் அணிகலன்கள் மின்னல் திரள் போலவும் காணப்பட்டன.*

***9411. முன்னே உளன்; பின்னே உளன்; முகத்தே உளன்;***
***அகத்தின் -***
***தன்னே உளன்; மருங்கே உளன்; தலைமேல் உளன்;***
***மலைமேல்***
***கொன்னே உளன்; நிலத்தே உளன்; விசும்பே உளன்;***
***கொடியோர்***
***'என்னே ஒரு கடுப்பு!' என்றிட, இருஞ் சாரிகை***
***திரிந்தான்.***

***முன்னே உளன், மின்னே உளன்*** *- முன்னாலே இருக்கிறான், பின்னாலே இருக்கிறான்;* ***முகத்தே உளன்*** *- அணிவகுப்பின் முற் பகுதியிலே இருக்கிறான்;* ***அகத்தின் தன்னே உளன்*** *- போர்ப் படைகளின் உட்பகுதியிலே இருக்கிறான்;* ***மருங்கே உளன்*** *- பக்கத்திலே இருக்கிறான்;* ***தலைமேல் உளன்*** *- நம் தலைக்குமேல் இருக்கிறான்;* ***மலைமேல் கொன்னே உளன்*** *- மலை மீது பெருமை தோன்ற இருக்கிறான்;* ***நிலத்தே உளன்*** *- பூமியில் காணப்படுகிறான்;* ***என்னே ஒரு கடுப்பு*** *- இப்படி எல்லா இடங்களிலும் காணப்படும் இவனது வேகம் இருந்தவாறு என்னே;* ***கொடியோர் என்றிட*** *- என்று வியப்போடு கொடிய அரக்கர் கூறிடுமாறு;* ***இருஞ்சாரிகை திரிந்தோன்*** *- (இராமன்) பெருஞ்சாரிகை சுற்றினான்.*

***9412. 'என் நேரினன்; என் நேரினன்' என்று யாவரும்***
***எண்ண,***
***பொன் தேர் வரு வரி வில் கரத்து ஒரு கோளரி***
***பொருவான்***
***ஒன்னார் பெரும் படைப் போர்க் கடல் உள் நின்று***
***உளன் எனினும்***
***அல் நேரலர் உடனே திரி நிழலே எனல் ஆனான்.***

***பொன் நேர் வரு வரிவில் கரத்து*** *- பொன்னை ஒத்ததாய் கட்டமைந்த வில்லினைக் கையிலே கொண்ட;* ***ஒரு கோளரி பொருவான்*** *- ஒரு சிங்கம் போன்றவனாகிய இராமன்;* ***ஒன்னார்*** *- பகைவர்களுடைய;* ***பெரும் படைப் போர்க்கடல் உள் நின்றுளன் எனினும்*** *- பெரிய போர்ப் படையாகிய கடலுக்கு நடுவிலேயே நின்றானென்றாலும்;* ***'என் நேரினன்; என் நேரினன்' என்று யாவரும்***

***எண்ண*** - என் எதிரில் உள்ளான் என்று எல்லோரும் நினைக்கும் படியாக; ***அல் நேரலர் உடனே*** - இருட்டினைப் போன்ற பகைவர்களுடனேயே; ***திரி நிழலே எனல் ஆனான்*** - திரிகின்ற நிழல் போன்றவனானான்.

***9413. பள்ளம் படு கடல் ஏழினும், படி ஏழினும், பகையின்***
***வெள்ளம் பல உள என்னினும், வினையம் பல***
***தெரியா,***
***கள்ளம் படர் பெரு மாயையின் சுரந்தார், உருப்***
***பிறந்தார்***
***உள் அன்றியும், புறத்தேயும் உற்று, உளனாம் என***
***உற்றான்.****

***பள்ளம் படு கடல் ஏழினும்*** - பள்ளமாக உண்டாகிய ஏழு கடலிலும்; ***படி ஏழினும்*** - ஏழு உலகங்களிலும்; ***பகையின் வெள்ளம் பல உள என்னினும்*** - பகை கொண்ட சேனைப் பெருக்கம் பலவாக இருந்தாலும்; ***வினையம் பல தெரியா*** - வஞ்சங்கள் பலவற்றை அறிந்து; ***கள்ளம் படர்*** - கள்ளத்தனம் நிறைந்த; ***பெரு மாயையின் கரந்தார்*** - பெரிய மாயைகளால் தங்கள் உருவங்களை மறைப்பவராகிய; ***உருப் பிறந்தார்*** - உடலோடு பிறந்த அரக்கர்களின்; ***உள் அன்றியும்*** - மனத்தில் மட்டுமல்லாமல்; ***புறத்தேயும் உற்று உளனாம் என*** - வெளியேயும் வந்துள்ளான் என்று கருதும்படியாக; ***உற்றான்*** - (இராமபிரான்) போர்க் களத்திலே நின்றான்.

***9414. நானாவிதப் பெருஞ் சாரிகை திரிகின்றது நவிலார்***
***போனான் இடை புகுந்தான், எனப் புலன் கொள்கிலர்***
***மறந்தார்***
***'தானாவதும் உணர்ந்தான், உணர்ந்து, உலகு***
***எங்கனும் தானே***
***ஆனான்; வினை, துறந்தான்' என, இமையோர்களும்***

***அயிர்த்தார்.***

***நானாவிதப் பெருஞ்சாரிகை திரிகின்றது நவிலார்*** - பல்வேறு விதமான பெரிய சாரிகை திரிவதைச் சொல்லாதவராய்; ***போனான் இடை புகுந்தான் என*** - போர்க்களத்துள் போன இராமன் அரக்கர் சேனையிடையே புகுந்துவிட்டான் என்று; ***புலன் கொள்கிலர் மறந்தார்*** - அறிவால் கொள்ளமாட்டாதவராய் இராமபிரானின் செயலை மறந்தாராகி; ***தானாவதும் உணர்ந்தான்*** - இந்த இராமபிரான் தானே பரம்பொருள் என்பதை உணர்ந்து விட்டான் போலும்; ***உணர்ந்து*** - அவ்வாறு உணர்ந்து கொண்டு; ***உலகு எங்ஙனும் தானே ஆனான்*** - உலகங்கள் எல்லாவற்றிலும் தானே கலந்துவிட்டான்; ***வினை துறந்தான்*** - (பரம் பொருளுக்குரிய நிலையை

*அடைந்துவிட்டதால்) அவதாரத்துக்கு உரிய செயலை விட்டுவிட்டான் போலும்;* ***என இமையோர்களும் அயிர்த்தார்*** *- எனத் தேவர்களும் ஐயப்பட்டனர்.*

***9415. சண்டக் கடு நெடுங் காற்றிடை துணிந்து எற்றிட, தரைமேல்,***
***கண்டப் படு மலைபோல், நெடு மரம்போல், கடுந் தொழிலோர்***
***துண்டப் பட, கடுஞ் சாரிகை திரிந்தான், சரம் சொரிந்தான் -***
***அண்டத்தினை அளந்தான் எனக் கிளர்ந்தான், நிமிர்ந்து அகன்றான்.***

***அண்டத்தினை அளந்தான் என*** *- எல்லா அண்டங்களையும் அளந்த விக்கிரமாவதாரப் பரமன் என்று சொல்லும்படியாக;* ***கிளர்ந்தான்*** *- எழுச்சி பெற்றவனாகிய இராமபிரான்;* ***நிமிர்ந்து அகன்றான்*** *- நிமிர்ந்து போர்க்களத்தின் பல பக்கங்களையும் அடைந்தவனாய்;* ***கடுந்தொழிலோர்*** *- கொடுஞ் செயல் உடையவர்களாகிய அரக்கர்கள்;* ***கடு நெடுஞ் சண்டக் காற்று*** *- விரைவுடன் வீசுகின்ற நெடிய சண்ட மாருதக் காற்றானது;* ***இடை*** *- நடுவே புகுந்து; துணிந்து எற்றிட - பிளந்து மோதுதலால்;* ***தரை மேல்*** *- மண்ணின் மீது;* ***கண்டப்படு மலைபோல்*** *- துண்டாகி விழும் மலை போலவும்;* ***நெடு மரம் போல்*** *- பெரிய மரங்களைப் போலவும்;* ***துண்டப்பட*** *- துண்டு துண்டாகும்படி;* ***கடுஞ் சாரிகை திரிந்தான்*** *- விரைவாகச் சாரிகையிட்டான்;* ***சரம் சொரிந்தான்*** *- (சாரிகை திரிந்த வேகத்துடனேயே) அம்புகளைப் பொழிந்தான். சண்டம் - வேகம், வெப்பம்.*

***9416. களி யானையும், நெடுந் தேர்களும், கடும் பாய் பரிக் கணனும்***
***தெளி யாளியும், முரட் சீயமும், சின வீரர்தம் திறமும்,***
***வெளி வானகம் இலதாம்வகை விழுந்து ஓங்கிய பிணப் பேர்***
***நளிர் மா மலை பல தாவினன், நடந்தான் - கடல் கிடந்தான்.***

***களி யானையும்*** *- மதங்கொண்டிருந்த யானைகளும்;* ***நெடுந் தேர்களும் கடும் பாய் பரிக் கணமும்*** *- உயரமான தேர்களும் விரைவுடன் பாய்ந்து ஓடுகின்ற குதிரைக் கூட்டமும்;* ***தெளி யாளியும்*** *- தாக்கும் முறையில் தெளிவு கொண்ட யாளிகளும்;* ***முரட்சீயமும்*** *- முரண் படுகின்ற சிங்கங்களும்;* ***சின வீரர் தம் திறமும்*** *-*

கோபங்கொண்ட வீரர்களின் பகுதியும்; **வானகம் வெளி இலதாம் வகை** - வானத்திலே இடைவெளியே இல்லாத வகையில்; **விழுந்து ஓங்கிய** - செத்து விழுந்து உயர்ந்த; **பிணப்போர் நளிர் மா மலை பல** - பிணங்களென்ற பேர் கொண்ட குளிர்ந்த பெரிய மலைகள் பலவற்றை; **கடல் கிடந்தான்** - திருப்பாற் கடலில் பள்ளி கொண்டிருந்தவனாகிய இராமன்; **தாவினன் நடந்தான்** - தாண்டி நடந்தான்.

**சந்தக் கலி விருத்தம் (வேறுவகை)**

**9417. அம்பரங்கள் தொடும் கொடி ஆடையும்,**
**அம்பரங்களொடும் களி யானையும்,**
**அம்பு அரங்க, அழுந்தின, சோரியின்**
**அம்பரம் கம் அருங் கலம் ஆழ்ந்தென.**

**அம்பரங்கள் தொடும் கொடி ஆடையும்** - ஆகாயத்தைத் தொடுகின்ற கொடிச் சீலையும்; **அம்பரங்களொடும் களி யானையும்** - அம்பாரிகளோடு மத யானைகளும்; **அம்பு அரங்க** - (இராமன் ஏவிய) கணைகள் அழுத்துதலால்; **சோரியின் அம்பரம் கம்** - இரத்தக் கடலாகிய நீரிலே; **அருங்கலம் ஆழ்ந்தென** - அரிய கப்பல்கள் மூழ்கியதென்னும்படி; **அழுந்தின** - மூழ்கின. பொருள் விளக்கத்துக்காகச் சொற்களைப் பிரிக்காதிருந்தால் நான்கு அடிகளிலும் 'அம்பரங்க' என்ற பல எழுத்துகள் ஒன்றாகவே வரும். இப்படி வருவது யமகம் என்னும் சொல்லணி. அடுத்த பாடலும் இது போன்றதே.

**9418. கேட கங்கண அம் கையொடும் கிளர்**
**கேடகங்கள் துணிந்து கிடந்தன;**
**கேடு அகம் கிளர்கின்ற களத்த நன்கு**
**ஏட கங்கள் மறிந்து கிடந்தவே.***

**கேட** - அழித்தல் தொழிலையுடைய; **கங்கண அம்கையொடும்** - கங்கணம் அணிந்த அழகிய கையோடு; **கிளர் கேடகங்கள்** - சிறந்து விளங்கும் கேடயங்கள்; **துணிந்து கிடந்தன** - துண்டுபட்டுக் கிடந்தன; **கேடு அகம் கிளர்கின்ற** - கேடுகளைத் தன்னிடத்தே நிரம்பப் பெற்றுள்ள; **களத்த** - போர்க்களத்திலே; **நன்கு ஏட** - நன்றாக (தும்பை மலர்களின்) இதழ்கள் கொண்ட; **கங்கள்** - தலைகள்; மறிந்து கிடந்த - உருண்டு கிடந்தன.

**9419. அங்கதம் களத்து அற்று அழிந் தாரொடும்**

***அம் கதம் களத்து அற்று அழிவுற்றவால் -***
***புங்கவன் கணைப் புட்டில் பொருந்திய***
***புங்க வன் கணைப் புற்று அரவம் பொர.****

***புங்கவன்*** - *உயர்ந்தவனாகிய இராமனுடைய;* ***கணைப் புட்டில் பொருந்திய*** - *அம்பறாத்துாணியில் இருந்த;* ***புங்கம் வன் கணை*** - *கூர்மையான நுனியினை யுடைய வலிய அம்பாகிய;* ***புற்று அரவம் பொர*** - *புற்றிலுள்ள பாம்பு தாக்கியதால்;* ***அங்கதம் களத்து அற்று*** - *தோள்வளை கழுத்தோடு அறுபட்டு;* ***அழிந்தாரொடும்*** - *இறந்து பட்டவர்களோடு;* ***களத்து*** - *போர்க்களத்திலே;* ***அம் கதம் அற்று*** - *(வீரர்க்கு) அழகு தருவதாகிய கோபமும் அழிந்து;* ***அழிவுற்ற*** - *அரக்கர் சேனைகள் அழிவுற்றன.*

*அங்கதம் - தோள்வளை. கதம் - கோபம். வீரர்கள் அழிந்ததோடு அவர்களின் கோப உணர்வும் அழிந்தது என்பதாம்.*

***9420. தம் மனத்தில் சலத்தர் மலைத் தலை***
***வெம்மை உற்று எழுந்து ஏறுவ மீளுவ,***
***தெம் முனைச் செரு மங்கை தன் செங் கையால்***
***அம்மனைக் குலம் ஆடுவ போன்றவே.***

***தம் மனத்தில் சலத்தர்*** - *தங்கள் மனத்திலே வஞ்சனை உடையவராகிய அரக்கர்களின்;* ***மலைத் தலை*** - *மலை போன்ற தலைகள்;* ***வெம்மை உற்று*** - *இராமபிரானது கொடுமை உற்றதால்;* ***எழுந்து*** - *உடலிலிருந்து தனியாக எழுந்து;* ***ஏறுவ மீளுவ*** - *மேலே போய்க் கீழே வருவதைப் பார்த்தால்;* ***தெவ் முனைச் செரு மங்கை*** - *போர்க்களத்துக்கு வந்த போர் மகள்;* ***தன் செங்கையால்*** - *தன்னுடைய சிவந்த கைகளால் (எறியப்படுகின்ற);* ***அம்மனைக்குலம் ஆடுவ போன்ற*** - *அம்மனைக் காய்களின் கூட்டம் மேலும் கீழுமாய் ஆடுகின்றவை போல் காணப்பட்டன.*

*ஏ - ஈற்றசை.*

***9421. கயிறு சேர் கழல் கார் நிறக் கண்டகர்***
***எயிறு வாளி படத் துணிந்து, யானையின்***
***வயிறுதோறும் மறைவன, வானிடைப்***
***புயல்தொறும் புகு வெண் பிறை போன்றவை.****

***கயிறு சேர் கழல்*** - *கயிற்றினால் காலில் கட்டப்பட்ட கழலினையுடைய;* ***கார் நிறக் கண்டகர்*** - *கரிய நிறங்கொண்ட அரக்கர்களின்;* ***எயிறு*** - *பற்கள்;* ***வாளிபட*** - *இராமன் ஏவிய அம்புகள் பட்டதால்;* ***துணிந்து*** - *துண்டுபட்டு;* ***யானையின் வயிறு***

***தோறும் மறைவன*** - *யானைகளின் வயிறுகளிலெல்லாம் மறைந்தவை;* ***வானிடை*** - *ஆகாயத்தில் உலவும்; புயல் தொறும் - மேகங்களிலெல்லாம்;* ***புகு வெண்பிறை போன்ற*** - *புகுகின்ற வெள்ளைப் பிறை போன்றிருந்தன.*

***9422. வென்றி வீரர் எயிறும், விடா மதக்***
***குன்றின் வெள்ளை மருப்பும், குவிந்தன -***
***என்றும் என்றும் அமைந்த இளம் பிறை***
***ஒன்றி மா நிலத்து உக்கவும் ஒத்தவால்.***

***குவிந்தன*** - *குவிந்தனவாகிய;* ***வென்றி வீரர் எயிறும்*** - *வெற்றி (தேடிய) அரக்க வீரரின் பற்களும்;* ***மதம் விடாக் குன்றின் வெள்ளை மருப்பும்*** - *மத நீர் ஒழுகுதல் நீங்காத குன்றுகளாகிய யானைகளின் வெள்ளைத் தந்தங்களும்;* ***என்றும் என்றும் அமைந்த இளம்பிறை -*** *ஒவ்வொரு நாளும் தோன்றுகின்ற இளம்பிறைகள்;* ***ஒன்றி*** - *பலவும் ஒன்றாக;* ***உக்கவும் ஒத்த*** - *சிதறியவை போன்றன.*

*ஆல் - அசை. அரக்க வீரரின் கோரைப் பற்களும் யானைகளின் தந்தங்களும் மிகப் பல. அவற்றுக்கு நேரான பிறைகளும் பலவாதல் வேண்டுமென்பதால் ஒவ்வொரு நாளும் தோன்றும் பிறைகளாகக் குறித்தான்.*

***9423. ஓவிலார் உடல் உந்து உதிரப் புனல்***
***பாவி வேலை உலகு பரத்தலால்,***
***தீவுதோறும் இனிது உறை செய்கையார்***
***ஈவு இலாத நெடு மலை ஏறினார்.***

***ஓவிலார்*** - *ஒழிதல் இல்லாதவராகிய அரக்கர்களின்;* ***உடல் உந்து உதிரப் புனல்*** - *உடல்களிலிருந்து பெருகிய இரத்தமாகிய நீர்;* ***பரவி*** - *பரவி;* ***வேலை உலகு பரத்தலால்*** - *கடல் சூழ்ந்த உலக முழுவதிலும் பரவுதலால்;* ***தீவுதோறும் இனிது உறை செய்கையார்*** - *தீவுகள் தோறும் இனிமையாக வாழ்கின்ற செயலுடையவர்கள்;* ***ஈவு இலாத*** - *ஒழிவு இல்லாத;* ***நெடு மலை ஏறினார்*** - *உயரமான மலைகள்மீது ஏறினார்கள்.*

***9424. விண் நிறைந்தன, மெய் உயிர்; வேலையும்***
***புண் நிறைந்த புனலின் நிறைந்தன;***
***மண் நிறைந்தன, பேர் உடல்; வானவர்***
***கண் நிறைந்தன. வில் தொழில் கல்வியே.****

***மெய் உயிர்*** - *உடல்களில் இருந்த உயிர்கள்;* ***விண் நிறைந்தன*** - *விண்ணுலகில் நிறைந்தன;* ***வேலையும் புண் நிறைந்த புனலின் நிறைந்தன*** - *கடல்களும் அரக்கரின் புண்களில் பெருகிய குருதி நீரால் நிறையப் பெற்றன;* ***பேர் உடல் மண் நிறைந்தன*** - *அரக்கரின் பெரிய உடல்கள் நிலவுலகை நிரப்பின;* ***வில் தொழில் கல்வி*** - *வில்லையாளும் செயல்முறைக் கலை கண்டு;* ***வானவர் கண் நிறைந்தன*** - *தேவர்களின் கண்கள் நிறைந்தன.*

***9425. செறுத்த வீரர் பெரும் படை சிந்தின***
***பொறுத்த சோரி புகக் கடல் புக்கன,***
***இறுத்த நீரின் செறிந்தன, எங்கணும்***

***அறுத்து, மீனம் உலந்த அனந்தமே.****

***செறுத்த வீரர்*** - *சினம் கொண்ட வீரர்கள் தாங்கியிருந்த;* ***பெரும் படை சிந்தின*** - *பெரிய படைக்கலங்களாகிய ஆயுதங்கள் சிதறினவாய்;* ***பொறுத்த சோரி புக*** - *தங்களைத் தாங்கி (ஈர்த்துச் சென்ற) இரத்தம் புகுந்ததால்;* ***கடல் புக்கன*** - *தாமும் (அதாவது போர்க்கருவிகளும்) கடலிலே புகுந்தனவாகி;* ***நீரின்*** - *அந்தக் கடலிலே;* ***இறுத்த செறிந்தன*** - *தங்கினவும் செறிந்தனவுமாகிய;* ***மீனம்*** - *மீன் முதலிய உயிர்களை;* ***எங்கணும் அறுத்த*** - *எல்லாப் பக்கங்களிலும் அறுத்தமையால்;* ***உலந்த அனந்தமே*** - *இறந்தவை எண்ணற்றனவாகும்.*

*வன்னி என்ற அரக்கர் படைத்தலைவன்*

***9426. 'ஒல்வதே! இவ் ஒருவன், இவ் யூகத்தைக்***
***கொல்வதே, நின்று! குன்று என யாம் எலாம்***
***வெல்வது ஏதும் இலாமையின், வெண் பலை***
***மெல்வதே!' என வன்னி விளம்பினான்.***

***ஒல்வதே*** - *தனியாக நிற்கும் இந்த ஒருவனுக்கு இத்துணை வலிமை இருக்கமுடியுமா!* ***இவ் ஒருவன் நின்று இவ் யூகத்தைக் கொல்வதே*** - *இந்த ஒருவன் தனியாக நின்று அணி வகுத்துள்ள இந்த வியூகத்தை அழிப்பதா;* ***குன்று என யாம் எலாம்*** - *மலைபோல ஓங்கி நிற்கும் நாமெலாம்;* ***வெல்வது ஏதும் இலாமையின்*** - *வெல்லுவதற்கு யாதொரு வழியும் இல்லாமையால்;* ***வெண் ப(ல்)லை மெல்வதே*** - *வெள்ளைப் பல்லை மென்று கொண்டிருப்பதா?* ***என வன்னி விளம்பினான்*** - *என்று வன்னி என்ற அரக்கர் படைத்தலைவன் மொழிந்தான்.*

*வ்யூகம் - யூகம் என நின்றது. வியூகம் - அணிவகுப்பு.*

***9427. கோல் விழுந்து அழுந்தாமுனம், கூடியாம்***
***மேல் விழுந்திடினும், இவன் வீயுமால்,***
***கால் விழுந்த மழை அன்ன காட்சியீர்!***
***மால் விழுந்துளிர் போலும், மயங்கி, நீர்!****

***கோல் விழுந்து அழுந்தாமுனம்*** *- இந்த இராமனுடைய அம்பு நம் மேல் விழுந்து நாம் அழுந்துவதற்கு முன்பே;* ***யாம் கூடி மேல் விழுந்திடினும்*** *- நாம் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து இவன்மேல் விழுந்தாலும்;* ***இவன் வீயும்*** *- இவன் அழிவான்;* ***மழை கால் விழுந்தன்ன காட்சியீர்*** *- மேகம் கால் இறங்கியிருப்பது போன்ற தோற்றம் உடையவர்களே!* ***நீர் மயங்கி*** *- நீங்கள் செய்வது அறியாமல் கலங்கி;* ***மால் விழுந்துளிர் போலும்*** *- மயக்கத்திலே அழுந்தியிருக்கிறீர்கள் போலும்,*

*ஆல் - அசை*

***9428. ஆயிரம் பெரு வெள்ளம் அரைபடத்***
***தேய நிற்பது; பின்பு, இனி என் செய?***
***பாயும், உற்று, உடனே' எனப் பன்னினான்.***
***நாயகற்கு ஓர் உதவியை நல்குவான்.****

***நாயகற்கு ஓர் உதவியை நல்குவான்*** *- தன் தலைவனாகிய இராவணனுக்கு ஓர் உதவி செய்பவனாகி;* ***ஆயிரம் பெருவெள்ளம்*** *- மிகப் பெரிய அளவினதாகிய ஆயிர வெள்ளம் அரக்கர் சேனை;* ***அரைபட*** *- அரைக்கப்படுவதால்;* ***தேய நிற்பது*** *- அழிந்து மெலியும் நிலையிலே இருக்கிறது;* ***பின்பு இனி என் செய*** *- இந்த நிலை அடைந்தபின் மேலே என்ன செய்வது?* ***உடனே உற்று*** *- உடனடியாகப் (ஊக்கம்) பெருகி எழுந்து;* ***பாயும்*** *- இராமன் மேல் பாயுங்கள்;* ***எனப் பன்னினான்*** *- என்று (வன்னி) கூறினான்.*

*பன்னுதல் - பல முறை வற்புறுத்தல். உறு என்பது மிகுதி குறித்த இடைச்சொல்; இங்கு உற்று என வினையெச்சமாகி நின்றது.*

### *வன்னி தூண்டுதலால் பொங்கி எழுந்த அரக்கர் படையை இராம பாணம் அழித்தல்*

***9429. உற்று, உருத்து எழு வெள்ளம் உடன்று எழா,***
***சுற்றும் முற்றும் வளைந்தன, தூவின -***
***ஒற்றை மால் வரைமேல் உயர் தாரைகள்***
***பற்றி மேகம் பொழிந்தென, பல் படை.***

***உருத்து எழு வெள்ளம்*** - *சினந்த எழுந்த பெருஞ்சேனை வெள்ளம்;* ***உடன்று எழா*** - *மாறுபாடு கொண்டு எழுந்து; உற்று - இராமனை அடைந்து;* ***சுற்றும் முற்றும்*** - *சூழ்ந்து முழுவதாக; வளைந்தன - வளைத்துக்கொண்டு;* ***ஒற்றை மால் வரைமேல்*** - *தனியேயுள்ள ஒரு பெரிய மலைமீது;* ***மேகம் பற்றி உயர் தாரைகள் பொழிந்தன*** - *மேகம் பொழிந்தது போல;* ***பல் படை தூவின*** - *பலவகைப் படைக்கலங்களைத் தூவின.*

***9430. குறித்து எறிந்தன, எய்தன, கூறுறத்***
***தறித்த தேரும் களிறும் தரைப் பட,***
***மறித்த வாசி துணித்து, அவர் மாப் படை***
***தெறித்துச் சிந்த, சர மழை சிந்தினான்.***

***குறித்து எறிந்தன எய்தன*** - *அரக்கர் குறிபார்த்து வீசிய படைக்கலங்கள் மற்றும் எய்த அம்பு முதலியவைகளும்;* ***கூறு உற*** - *துண்டாகிட;* ***தறித்த தேரும்*** - *வெட்டப்பட்ட தேரும்;* ***களிறும்*** - *யானைகளும்;* ***தரைப்பட*** - *நிலத்தில் சாய்ந்திட;* ***மறித்த வாசி துணித்து*** - *குறுக்காகப் பாய்ந்த குதிரைகளை வெட்டி;* ***அவர் மாப் படை தெறித்துச் சிந்த*** - *இப்படியாக அந்த அரக்கர்களின் பெரிய சேனை சிதையும்படி;* ***சர மழை சிந்தினான்*** - *இராமன் அம்பு மழையைத் துவினான்.*

***9431. வாய் விளித்து எழு பல் தலை வாளியில்***
***போய் விளித்த குருதிகள் பொங்கு உடல்,***
***பேய் விளிப்ப நடிப்பன, பெட்புறும்***
***தீ விளிப்புறு தீபம் நிகர்த்தவால்.****

***வாய் விளித்து எழு பல் தலை வாளியில்*** - *(விரைந்து பாய்ந்து செல்வதால்) நுனிப்பகுதியில் ஓசை எழுப்பிப் பாயும் பன்முக அம்பிலே;* ***போய் விளித்த பொங்கு உடல்*** - *வலியச் சென்று இறந்து போன வீரர்களின் குருதி பொங்கிப்பாயும் உடல்கள்;* ***பேய் விளிப்ப நடிப்பன*** - *பேய்கள் மகிழ்ச்சியால் ஆரவாரித்து கூத்தாடுபவை;* ***பெட்புறும்*** - *(திகைக்கும் மாலுமிகளுக்கு) விருப்பம் மிகுகின்ற;* ***தீ விளிப்புறு தீபம் நிகர்த்த*** - *தீச்சுடரால் அழைத்திடும் (கலங்கரை) விளக்குகளைப் போன்றிருந்தன.*

*இரண்டாமடியில் விளிந்த என்றிருக்கவேண்டிய சொல் எதுகை (ஓசை) நயம் பற்றி விளித்த என விகாரப்பட்டது. அம்பு விரைந்து பாயும் போது அதன் நுனியில் காற்று உராயும்போது ஓசை எழும். அதனை 'வாய் விளித்து' எனக் குறித்தார். போர்க்களத்திலே தாக்குதற்கு முன்னேறுகிறவர்களை அம்பு தாக்கும். இங்கு அம்பிலே வீரர்கள் போய் வீழ்ந்து விளிவதாகக் கூறினார். (விளிதல் - இறத்தல்) கலங்கரை விளக்கம் உடல்களுக்கும் அதில் எரியும் தீ உடல்களில் (கழுத்திலே) பொங்கப் பாயும் குருதிக்கும் உவமைகளாயின.*

*9432. நெய் கொள் சோரி நிறைந்த நெடுங் கடல்*
*செய்ய ஆடையள், அன்ன செஞ் சாந்தினள்,*
*வைய மங்கை பொலிந்தனள், மங்கலச்*
*செய்ய கோலம் புனைந்தன்ன செய்கையாள்.*

***நெய்கொள் சோரி நிறைந்த*** - *கொழுப்புச் செறிந்த குருதியால் நிறைந்த;* ***நெடுங்கடல்*** - *பெரிய கடலாகிய;* ***செய்ய ஆடையள்*** - *சிவந்த ஆடை அணிந்தவளாயும்;* ***அன்ன செஞ்சாந்தினள்*** - *அதே நிறமுடைய சாந்தினை அழகுறப் பூசியவளாகவும்;* ***மங்கலச் செய்ய கோலம்*** - *கணவனோடு சேரும் மங்கலச் செயலுக்குரிய சிவந்த கோலத்தினை;* ***புனைந்தன்ன செய்கையாள்*** - *பூண்டு கொண்டது போன்ற செயல் உடையவளாகவும்;* ***வைய மங்கை*** - *நிலமகள்;* ***பொலிந்தனள்*** - *அழகாக விளங்கினாள்.*

*9433. உப்பு, தேன், மது, ஒண் தயிர், பால், கரும்பு,*
*அப்புத்தான் என்று உரைத்தன ஆழிகள்*
*துப்புப்போல் குருதிப் புனல் சுற்றலால்,*
*தப்பிற்று அவ் உரை, இன்று ஓர் தனுவினால்.*

***உப்பு, தேன், மது, ஒண் தயிர், பால், கரும்பு, அப்பு என்று உரைத்தன ஆழிகள்*** - *உப்பு, தேன், கள், ஒள்ளிய தயிர், பால், கருப்பஞ்சாறு, தண்ணீர் என்று உரைக்கப்பட்ட ஏழு கடல்களும்;* ***இன்று*** - *இப்போது;* ***ஓர் தனுவினால்*** - *(இராமனுடைய) ஒப்பற்ற வில்லினால்;* ***துப்புப் போல்*** - *பவழம் போல் உள்ள;* ***குருதிப் புனல் சுற்றலால்*** - *இரத்த நீரால் சூழப்பட்டதால்;* ***அவ் உரை தப்பிற்று*** - *தனித்தனி ஏழு கடல்கள் என்று சொல்லப்பட்ட பழைய பேச்சுத் தவறாகிவிட்டது.*

*மது என்பதற்குப் பதில் நெய் சேர்த்துச் சொல்வது வேறு பாடம். இப்போது ஏழு கடல்கள் இல்லை. எல்லாம் ஒரே குருதிக் கடலே என்பதாம். தான் - தான் உரை அசை.*

*9434. ஒன்றுமே தொடை; கோல் ஒரு கோடிகள்*
*சென்று பாய்வன; திங்கள் இளம் பிறை*
*அன்றுபோல் எனல் ஆகியது அச் சிலை;*

*என்று மாள்வர் எதிர்த்த இராக்கதர்?*

***ஒன்றுமே தொடை*** - *(அம்பு) தொடுத்தல் ஒரு தடவைதான்;* ***கோல் ஒரு கோடிகள் சென்று பாய்வன*** - *(ஆனால்) கோடிக் கணக்கான அம்புகள் அந்த ஒரு தடவையிலேயே பாய்ந்தன;* ***அச்சிலை*** - *இராமனது அந்த வில்;* ***இளம்பிறை அன்றுபோல் எனல் ஆகியது***

*- அன்றைய சிறிய பிறை என்று சொல்லுமாறு அமைந்தது;* ***எதிர்த்த இராக்கதர் என்று மாள்வர்*** *- எதிர்த்துப் பொருத அரக்கர்கள் என்றுதான் செத்து ஒழிவரோ?*

### அறுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்

***9435. எடுத்தவர், இரைத்தவர், எறிந்தவர்***
***செறிந்தவர், மறங்கொடு எதிரே***
***தடுத்தவர், சலித்தவர், சரிந்தவர்***
***பிரிந்தவர், தனிக் களிறுபோல்***
***கடுத்தவர், கலித்தவர், கறுத்தவர்***
***செறுத்தவர், கலந்து, சரம் மேல்***
***தொடுத்தவர், துணிந்தவர், தொடர்ந்தனர்***
***கிடந்தனர் - துரந்த கணையால்.***

***எடுத்தவர்*** *- படைக்கலங்களை எடுத்தவரும்; இரைத்தவர் - ஆரவாரம் செய்தவர்களும்;* ***எறிந்தவர்*** *- படைக்கலங்களை இராமனை நோக்கி எறிந்தவர்களும்;* ***செறிந்தவர்*** *- ஒருங்கே கூடி வந்தவர்களும்;* ***மறங்கொடு எதிரே தடுத்தவர்*** *- வீரத்தோடு எதிர்த்து வந்த கணைகளைத் தடுத்தவர்களும்;* ***சலித்தவர்*** *- போரை முடிக்க இயலவில்லையே என மனம் சலித்தவர்களும்;* ***சரிந்தவர்*** *- ஆற்ற மாட்டாமல் நிலத்திலே சரிந்தவர்களும்;* ***பிரிந்தவர்*** *- தம் உடன் வந்தோரிடமிருந்து பிரிந்து வந்தவர்களும்;* ***தனிக் களிறு போல் கடுத்தவர்*** *- தனியாக வந்த யானைபோல் விரைந்தவர்களும்;* ***கலித்தவர்*** *- செருக்கியவர்களும்;* ***கறுத்தவர்*** *- சினம் கொண்டவர் களும்;* ***செறுத்தவர்*** *- சீறியவர்களும்;* ***கலந்து*** *- நெருங்கி வந்து;* ***சரம் மேல் தொடுத்தவர்*** *- அம்புகளை (இராமன்) மேல் தொடுத்தவர்களும் (ஆகிய அனைவரும்);* ***துரந்த கணையால்*** *- இராமபிரான் செலுத்திய அம்புகளால்;* ***துணிந்தவர்*** *- வெட்டப்பட்டவராய்;* ***தொடர்ந்தனர் கிடந்தனர்*** *- அணியணியாகக் கிடந்தார்கள். போர்க்களத்திலே போர் செய்வோரின் செயல்களை எத்தனை சொற்களால் கம்பர் குறிக்கிறார் என்பதை மனம் கொள்க.*

***9436. தொடுப்பது சுடர்ப் பகழி ஆயிரம்***
***நிரைத்தவை துரந்த துறை போய்ப்***
***படுப்பது, வயப் பகைஞர் ஆயிரரை***
***அன்று, பதினாயிரவரை,***
***கடுப்பு அது; கருத்தும் அது; கட்புலன்***
***மனம் கருதல் கல்வி இல; வேல்***
***எடுப்பது படப் பொருவது அன்றி, இவர்***
***செய்வது ஒரு நன்றி உளதோ?***

***தொடுப்பது ஆயிரம் சுடர்ப் பகழி*** - இராமபிரானால் தொடுத்துச் செலுத்தப்படுகின்ற ஒளிமிக்க அம்புகள் ஆயிரம்; ***நிரைத்தவை*** - வரிசையாகத் தொடுக்கப்படுகின்ற அவை; ***துரந்த துறைபோய்ப் படுப்பது*** - செலுத்தப்பட்ட இலக்குகளை அடைந்து அழிப்பது; ***வயப் பகைஞர் ஆயிரரை அன்று*** - வலிமை மிக்க பகைஞர் ஆயிரம் பேரை அன்று; ***பதினாயிரவரை*** - பதினாயிரம் பேரையாகும்; ***கடுப்பு அது*** - செலுத்தப்படும் வேகம் அது; ***கருத்தும் அது*** - செலுத்திய இராமனுடைய கருத்தும் அதுவே; ***கட் புலன் மனம் கருதல் கல்வி இல*** - அம்புகள் வேகமாகச் செல்வதைக் கண்டறிவதற்கு கண்ணுக்கோ விளைவைக் கருதிப் பார்ப்பதற்கு மனத்துக்கோ பயிற்சி இல்லை; ***வேல் எடுப்பது*** - அரக்கர்கள் இராமனைத் தாக்குவதற்கு வேற்படையை எடுப்பது; ***படப் பொருவது அன்றி*** - தாங்கள் இறப்பதற்கு போர் செய்வதைத் தவிர; ***இவர் செய்வது ஒரு நன்றி உளதோ*** - இந்த அரக்கர்கள் செய்து கொள்ளக்கூடிய வேறு நல்ல செயல் உளதோ? (இல்லை).

***9437. தூசியொடு நெற்றி இரு கையினொடு***
***பேர் அணி கடைக் குழை தொகுத்து,***
***ஊசி நுழையா வகை சரத்து அணி***
***வகுக்கும்; அவை உண்ணும் உயிரை;***
***ஆசைகளை உற்று உருவும்; அப் புறமும்***
***ஓடும்; அதன் இப் புறம் உளார்***
***ஈசன் எதிர் உற்று, உகுவது அல்லது, இகல்***
***முற்றுவது ஓர் கொற்றம் எவனோ?***

***தூசியொடு நெற்றி, இரு கையினொடு பேரணி, கடைக்குழை*** - தூசிப்படை, நெற்றிப் படை, இரு பக்கங்களில் நிற்கும் கைகோட்படை, பேரணிப் படை, பின்னணிப் படை ஆகிய அத்துணை வகையான படைகளையும்; ***ஊசி நுழையா வகை தொகுத்து*** - அந்த அரக்கர் படைநடுவே ஊசிகூட நுழையமுடியாதவாறு ஒரே இடத்தில் கூட்டி வளைத்து; ***சரத்து அணி வகுக்கும்*** - அம்புகளை (இராமபிரான்) வரிசையாகச் செலுத்தினான்; ***அவை உயிரை உண்ணும்*** - அந்த அம்புகள் (ஒரே இடத்தில் கூட்டியதோடு) அரக்கரின் உயிரைப் போக்கிவிடும்; ***ஆசைகளை உற்று உருவும்*** - (செறிந்து கூடிய அரக்கரைக் கொன்றதோடு) மேலும் திசைகளை அடைந்து திசைகளை ஊடுருவும்; ***அதன் இப்புறம் உளார்*** - அம்புகள் பாய்ந்த திசைகளின் எல்லைகளுக்கு இந்தப் பக்கத்தில் இருந்த அரக்கர்கள்; ***ஈசன் எதிர் உற்று*** - இறைவனாகிய இராமன் முன்பு வந்து; ***உகுவது அல்லால்*** - தங்கள் உயிரைச் சிந்துவதைத் தவிர; ***இகல் முற்றுவது ஓர் கொற்றம் எவனோ?*** - பகையினை முடிப்பதாகிய ஒரு வெற்றி பெறுவது எது?

*தூசி - முன்வரிசைப் படை; தார் என்றும் இதனைக் குறிப்பர். நெற்றி என்பதும் முன்னணிப் படையேயாகும். இரு பக்கங்களில் வருவன கைகோட் படை; கை - பக்கம். பேரணி - படையின் நடுப்பகுதி. கடைக்கூழை - படையின் பின்பகுதி அணி. (கூழை என்பது குழை எனக் குறுகி நின்றது)*

***9438. ஊன் நகு வடிக் கணைகள் ஊழி அனல்***
***ஒத்தன; உலர்ந்த உலவைக்***
***கானகம் நிகர்த்தனர் அரக்கர்; மலை***
***ஒத்தன, களித்த மத மா;***
***மானவன் வயப் பகழி வீசு வலை***
***ஒத்தன; வளைப்புனலுள் வாழ்***
***மீன் குலம் ஒத்தன, கடற் படை***
***இனத்தொடும் விளிந்துறுதலால்.***

***ஊன் நகு*** - தசைகள் விளங்கிய; ***வடிக் கணைகள்*** - கூர்மையான அம்புகள்; ***ஊழி அனல் ஒத்தன*** - ஊழிக்காலத்தில் (அனைத்தையும் எரித்தழிக்கும்) தீயை நிகர்த்தன; ***அரக்கர் உலர்ந்த உலவைக் கானகம் நிகர்த்தனர்*** - அரக்க வீரர்கள் காய்ந்து பட்டுப்போன காட்டை நிகர்த்தனர்; ***களித்த மத மா*** - வெறி கொண்ட மதம் பொழியும் யானைகள்; ***மலை ஒத்தன*** - மலைகளைப் போன்றிருந்தன; ***மானவன் வயப்பகழி*** - மனு குலத்தவனாகிய இராமன் ஏவிய வலிமை மிக்க அம்புகள்; ***வீசு வலை ஒத்தன*** - (கடலுள்) வீசப்படுகின்ற வலையை நிகர்த்தன; ***கடற்படை*** - கடல் போலப் பெருகிய அரக்கரின் படைகள்; ***இனத்தொடும் விளிந்து உறுதலால்*** - இனத்தோடு (கூட்டமாக) இறந்துபடுவதால்; ***வளைப் புனலுள் வாழ் மீன்குலம் ஒத்தன*** - சங்குகள் நிரம்பிய கடலிலே வாழ்கின்ற மீன் கூட்டங்களை நிகர்த்தன.

***9439. ஊழி இறுதிக் கடுகு மாருதமும்***
***ஒத்தனன், இராமன், உடனே***
***பூமி என உக்கு உதிரும் மால் வரைகள்***
***ஒத்தனர், அரக்கர், பொருவார்,***
***ஏழ் உலகும் உற்று உயிர்கள் யாவையும்***
***முருக்கி, இறுதிக்கணின் எழும்***
***ஆழியையும் ஒத்தனன்; அம் மன்னுயிரும்***
***ஒத்தனர், அலைக்கும் நிருதர்.***

***இராமன் ஊழி இறுதிக் கடுகு மாருதமும் ஒத்தனன்*** - ஊழிக் காலத்து முடிவிலே விரைந்து வீசும் சண்ட மாருதத்தைப் போன்றவனானான்; ***பொருவார் அரக்கர்*** - அவனோடு போர் செய்கின்றவராகிய அரக்கர்கள்; ***பூழி என உக்கு உதிரும்*** - புழுதி யெனச் சொல்லும்படியாகப் பொடிபட்டு உதிர்கின்ற; ***மால் வரைகள் ஒத்தனர்*** - பெரிய மலைகளைப் போன்றவர் ஆனார்; ***ஏழ் உலகமும் உற்று*** - ஏழு உலகங்களையும் அடைந்து; ***உயிர்கள் யாவையும் முருக்கி*** - எல்லா உயிர்களையும் அழித்து; ***இறுதிக்கண் எழும்*** - யுக முடிவிலே பொங்குகின்ற; ***ஆழியையும் ஒத்தனன்*** - கடலைப் போன்றவன் ஆனால் (இராமன்); ***அலைக்கும் நிருதர்*** - உயிரினங்களைத் துன்புறுத்தும் அரக்கர்கள்; ***அம் மன் உயிரும் ஒத்தனர்*** - (ஊழிக் காலத்து அழிகின்ற) அந்த நிலையான உயிர்களை ஒத்தவர் ஆனார்.

*மன் உயிர் - நிலையான உயிர். ஊழிக் காலத்து உயிர் அழியும் என்றது அக்காலத்து அவ் உயிர்கள் கொண்ட உடல் வாழ்வின் அழிவினைக் குறித்தது. உயிருக்கு அழிவில்லை.*

***9440. மூல முதல் ஆய், இடையும் ஆய், இறுதி***
***ஆய், எவையும் முற்றும் முயலும்***
***காலம் எனல் ஆயினன் இராமன்; அவ்***
***அரக்கர், கடைநாளில் விளியும்***
***கூலம் இல் சராசரம் அனைத்தினையும்***
***ஒத்தனர்; குரை கடல் எழும்***
***ஆலம் எனலாயினன் இராமன்; அவர்***
***மீனம் எனல் ஆயினர்களால்.***

***மூல முதல் ஆய்*** *- எல்லாவற்றுக்கும் மூல காரணமாகி;* ***இடையும் ஆய்*** *- ஆதியாக மட்டுமின்றி நடுவும் ஆகி; இறுதி ஆய் - முடிவும் ஆகி;* ***எவையும் முற்றும் முயலும்*** *- யாவையும் முடிவாக முயல்கின்ற;* ***காலம் எனல் ஆயினன் இராமன்*** *- இராமன் கால தத்துவம் என்று விளக்கப்படும் நிலையை உடையவன் ஆனான்;* ***அவ் அரக்கர்*** *- அந்த அரக்கர்கள்;* ***கடைநாளில் விளியும்*** *- ஊழிக்கால இறுதியில் அழிகின்ற;* ***கூலம் இல் சராசரம் அனைத்தினையும் ஒத்தனர்*** *- அளவில்லாத சராசரங்கள் யாவற்றையும் ஒத்தனர்;* ***இராமன் குரை கடல் எழும்*** *- ஒலிக்கின்ற கடலிலே தோன்றிய;* ***ஆலம் எனலாயினன்*** *- ஆலகால நஞ்சு போன்றவனானான்;* ***அவர்*** *- அந்த அரக்கர்கள்;* ***மீனம் எனல் ஆயினர்கள்*** *- அந்தக் கடலில் உள்ள மீன்கள் போன்றவராயினர்.*

*ஆல் : அசை.*

***9441. வஞ்ச வினை செய்து, நெடு மன்றில் வளம்***
***உண்டு, கரி பொய்க்கும் மறம் ஆர்***
***நெஞ்சம் உடையோர்கள் குலம் ஒத்தனர்***
***அரக்கர்; அறம் ஒக்கும் நெடியோன்;***
***நஞ்ச நெடு நீரினையும் ஒத்தனன்;***
***அடுத்து அதனை நக்குநரையும்,***
***பஞ்சம் உறு நாளில் வறியோர்களையும்***
***ஒத்தனர், அரக்கர், படுவார்.***

***அரக்கர் வஞ்ச வினை செய்து*** *- வஞ்சகச் செயல்களைச் செய்து;* ***நெடு மன்றில் வளம் உண்டு*** *- பெருமை வாய்ந்த நீதி மன்றத்துக்குரிய பொருளைக் கவர்ந்துண்டு;* ***கரி பொய்க்கும்*** *- பொய்ச்சான்று பகரும் (பொய்ச்சாட்சி சொல்லும்);* ***மறம் ஆர்***

***நெஞ்சம் உடையோர்*** - *பாவம் பொருந்திய மனம் கொண்டோரின்;* ***குலம் ஒத்தனர்*** - *கூட்டத்தைப் போன்றவர் ஆனார்கள்;* ***நெடியோன் அறம் ஒக்கும்*** - *இராமபிரான் அறத்தினை நிகர்த்தான்;* ***(நெடியோன்) நஞ்ச நெடு நீரினையும் ஒத்தனன்*** - *இராமபிரான் நஞ்சு மயமாகிய பெருங்கடலைப் போன்றவனானான்;* ***படுவார் அரக்கர்*** - *சாகின்றவர்களாகிய அரக்கர்கள்;* ***அதனை அடுத்து நக்குநரையும்*** - *அந்த நச்சுக்கடலை அடைந்து நக்குகின்றவர்களையும்;* ***பஞ்சம் உறு நாளில் வறியோர்களையும்*** - *பஞ்சம் பெருகுகின்ற காலத்தில் விழும் ஏழைகளையும்;* ***ஒத்தனர்-*** .

*பஞ்சக் காலத்து உணவற்ற வறியோர் கூட்டமாக இறப்பர். ஆதலின் அது உவமை ஆயிற்று.*

### *அரக்க மகளிரும் துன்புற்றனர்*

***9442. வெள்ளம் ஒரு நூறு படும் வேலையின், அவ்***
***வேலையும் இலங்கை நகரும்***
***பள்ளமொடு மேடு தெரியாதவகை***
***சோர் குருதி பம்பி எழலும்,***
***உள்ளும் மதிலும் புறமும் ஒன்றும் அறியாது***
***அலறி ஓடினார்களால்,***
***கள்ள நெடு மான் விழி அரக்கியர்***
***கலக்கமொடு கால்கள் குலைவார்.***

***வெள்ளம் ஒரு நூறு படும் வேலையின்*** - *நூறு வெள்ள அளவு கொண்ட அரக்கர் சேனை அழியும் அந்த நேரத்தில்;* ***அவ் வேலையும் இலங்கை நகரும்*** - *இலங்கையைச் சூழ்ந்த அந்தக் கடலும் இலங்கை நகரமும்;* ***பள்ளமொடு மேடு தெரியாத வகை*** - *பள்ளம் எது மேடு எது என்று தெரியமுடியாதபடி;* ***சோர் குருதி பம்பி எழலும்*** - *சொரிகின்ற இரத்தம் பரவி எழுந்ததால்;* ***உள்ளும் மதிலும் புறமும் ஒன்றும் அறியாது*** - *இலங்கையின் உட்பகுதி மதில் எது, இலங்கையின் வெளிப்பகுதி எது என ஒன்றும் அறிய முடியாமல்;* ***கள்ள நெடு மான் விழி அரக்கியர்*** - *வஞ்சகம் கொண்டதும் மான் போன்ற மருட்சி கொண்டதுமான கண்ணுடைய அரக்க மாதர்கள்;* ***கலக்கமொடு*** - *மனம் கலங்கியதோடு; கால்கள் குலைவார் - கால் தடுமாறினவர்களாய்;* ***அலறி ஓடினார்கள்*** - *அலறிக்கொண்டு ஓடினார்கள்.*

*ஆல் : அசை.*

***9443. நீங்கினர், நெருங்கினர், முருங்கினர்,***
***உலைந்து உலகில் நீளும் மலைபோல்***
***வீங்கின, பெரும் பிணம் விசும்பு உற;***
***அசும்பு படு சோரி விரிவுற்று,***

***ஓங்கின, நெடும் பரவை, ஒத்து உயர***
***எத் திசையும் உற்று, எதிர் உற,***
***தாங்கினர், படைத் தலைவர், நூறு சத***
***கோடியர், தடுத்தல் அரியார்.***

***நீங்கினர் நெருங்கினர் முருங்கினர்*** - *இராமனை விட்டு நீங்கினராய் (இழுக்கு நினைந்து மீண்டும்) அவனை நெருங்கி அழிந்தனர் (அரக்கர்);* ***உலைந்து*** - *சிதைவுற்று;* ***உலகில் நீளும் மலைபோல்*** - *நிலவுலகிலே நீண்டு கிடக்கும் மலைபோல;* ***விசும்பு உற*** - *ஆகாயத்தை அளாவி;* ***பெரும் பிணம் வீங்கின*** - *பெரிய பிணங்கள் பெருகிக் குவிந்தன;* ***அசும்பு படு சோரி விரிவுற்று*** - *(வீழ்ந்தவர் உடலிலிருந்து) ஊற்றெடுக்கும் இரத்தம் பெருகி;* ***நெடும் பரவை ஒத்து*** - *பெரிய கடல்களைப் போல;* ***உயர*** - *பெருக்கு அதிகமானதால்;* ***எத்திசையும் உற்று*** - *எல்லாத் திசைகளையும் அடைந்து;* ***எதிர் உற*** - *கடல்கள் யாவும் ஒன்றையொன்று எதிரெதிர் சேர;* ***ஓங்கின-; நூறு சத கோடியர்*** - *பதினாயிரம் கோடியராகிய;* ***படைத்தலைவர்*** - *அரக்கரின் படைத்தலைவர்கள்;* ***தடுத்தல் அரியார்*** - *இராமனைத் தடுத்து நிறுத்த முடியாதவராய்;* ***தாங்கினர்*** - *எதிர்த்தனர்.*

***9444. தேரும், மதமாவும், வரை ஆளியொடு***
***வாசி, மிகு சீயம், முதலா***
***ஊரும் அவை யாவையும் நடாயினர்***
***கடாயினர்கள், உந்தினர்களால்;***
***காரும் உரும்ஏறும் எரிஏறும் நிகர்***
***வெம் படையொடு அம்பு கடிதின்***
***தூரும்வகை தூவினர்; துரந்தனர்கள்,***
***எய்தனர், தொடர்ந்தனர்களால்.***

***தேரும், மத மாவும், வரை, ஆளியொடு, மிகு சீயம் முதலா*** - *தேர் மதங்கொண்ட யானை, மலையில் வாழும் யாளி, வலிமை மிக்க சிங்கம் முதலிய;* ***ஊரும் அவை யாவையும்*** - *ஏறிச் செல்கின்ற அவை எல்லாவற்றையும்;* ***நடாயினர் கடாயினார்கள், உந்தினர்கள்*** - *இயக்கி நடத்திச் செலுத்தினார்கள்;* ***காரும்*** - *மேகமும்;* ***உரும் ஏறும்*** - *பேரிடிகளும்;* ***எரி ஏறும்*** - *பெரு நெருப்பும்;* ***நிகர் வெம்படையோடு*** - *ஒத்த கொடிய படைக்கலங்களோடு;* ***அம்பு*** - *அம்புகளை;* ***கடிதின் தூரும் வகை தூவினர்*** - *விரைவாக நிறையும்படி இறைத்தார்கள்;* ***துரந்தனர்கள், எய்தனர்*** - *மேலும் அவற்றை விரைவோடு செலுத்தியவர்களாய் குறிநோக்கிச் செலுத்தியவர்களாய்;* ***தொடர்ந்தனர்கள்*** - *தாம் மேற்கொண்ட தாக்குதலைத் தொடர்ந்தார்கள்.*

***9445. 'வம்மின், அட வம்மின்! எதிர் வந்து, நுமது***
***ஆர் உயிர் வரங்கள் பிறவும்***

***தம்மின்!' என இன்னன மொழிந்து, எதிர்
பொழிந்தன, தடுப்ப அரியவாம்,
வெம் மின் என, வெம் பகழி, வேலை என
ஏயினன், அவ் வெய்ய வினையோர்
தம் இனம் அனைத்தையும் முனைந்து எதிர்
தடுத்தனன், தனித் தனிஅரோ.***

***'வம்மின் அட வம்மின்'*** *- வாருங்கள் அட! வாருங்கள்;* ***எதிர் வந்து*** *- என எதிரே வந்து;* ***நுமது ஆருயிர் வரங்கள் பிறவும்*** *- உங்களுடைய அரிய உயிரையும் வரங்களையும் இன்னும் மற்றவற்றையும்;* ***தம்மின்*** *- என்னிடம் தந்து விடுங்கள்;* ***என இன்னன மொழிந்து*** *- என்று இத்தகைய சொற்களைச் சொல்லி;* ***எதிர் பொழிந்தன*** *- அரக்கர்களை எதிர்த்துப் பெய்தனவும்;* ***தடுப்பு அரியவாம்*** *- தடுத்து நிறுத்துதற்கு அரியவாயினவும் ஆகிய;* ***வெம் பகழி*** *- கொடிய அம்புகளை;* ***வெம் மின் என*** *- வேக்காடு மிக்க மின்னலைப் போலவும்;* ***வேலை என*** *- கடலைப் போலவும்; ஏயினன் - (இராமபிரான்) ஏவினான்;* ***அவ் வெய்ய வினையோர் தம் இனம் அனைத்தையும்*** *- அந்த கொடிய வினைப்பயனை அனுபவிப்போராகிய அரக்கர் கூட்டம் முழுவதையும்;* ***முனைந்து தனித்தனி எதிர் தடுத்தனன்*** *- ஊக்கத்தோடு தனித்தனியே எதிர் தடுத்தனன் இராமன்.*

*அரோ : அசை.*

*கவலையுற்ற தேவர்கள் சிவனை நாடல்*

***9446. அக் கணையை அக் கணம் அறுத்தனர்
செறுத்து, இகல் அரக்கர் அடைய,
புக்கு அணையலுற்றனர், மறைத்தனர்
புயற்கு அதிகம் வாளி பொழிவார்,
திக்கு அணை வகுத்தனர் எனச் செல
நெருக்கினர், செருக்கின் மிகையால்
முக்கணனை உற்று அடி வணங்கி
இமையோர் இவை மொழிந்தனர்களால்:***

***இகல் அரக்கர் அடையப் புக்கு*** *- பகைமையுள்ள அரக்கர்கள் எல்லாரும் சேரவந்து;* ***அணையலுற்றனர்*** *- இராமபிரானை நெருங்கியவர்களாய்;* ***அக்கணம்*** *- அந்தக் கணத்திலேயே;* ***அக்கணையை*** *- இராமபிரான் செலுத்திய அந்த அம்பினை;* ***செறுத்து*** *- சினந்து;* ***அறுத்தனர்*** *- சிதைத்தனர்;* ***மறைத்தனர்*** *- இராமனைச் சூழ்ந்து மறைத்தார்கள்;* ***புயற்கு அதிகம் வாளி பொழிவார்*** *- மேகம் (மழை பொழிவதைவிட) மிகுதியாக அம்பினைப் பொழிவாராகி;* ***திக்கு அணை வகுத்தனர் என*** *- திசைகளுக்கு ஓர் அணை அமைத்து விட்டனர் என்னும்படியாக;* ***செருக்கின் மிகையால்*** *- ஆணவ மிகுதியால்;* ***செல நெருக்கினர்*** *- மிகவும் நெருக்கினார்கள்;*

***இமையோர்*** - *(இதனைக் கண்ட) தேவர்கள்;* ***முக்கணனை உற்று*** - *சிவபெருமானை அடைந்து;* ***அடி வணங்கி*** - *திருவடிகளை வணங்கி;* ***இவை மொழிந்தனர்கள்*** - *(பின்வரும்) இவற்றைச் சொன்னார்கள்.*

*அடைய - முழுமையாக, திருவரங்கத்தில் எல்லா மதில்களையும் உள்ளடக்கிக் கடைசியாகவுள்ள மதிலை அடைய வளைந்தான் என்று சொல்லும் வழக்கினை நினைக.*

***9447. 'படைத் தலைவர் உற்று ஒருவர் மும் மடி***
***இராவணன் எனும் படிமையோர்;***
***கிடைத்தனர் அவர்க்கு ஒரு கணக்கு இலை;***
***வளைத்தனர் கிளைத்து, உலகு எலாம்***
***அடைத்தனர், தெழித்தனர், அழித்தனர்***
***தனித்து உளன் இராமன்; அவரோ,***
***''துடைத்தனர் எம் வெற்றி'' என உற்றனர்;***

***இனிச் செயல் பணித்தி - சுடரோய்!***

***சுடரோய்*** - *ஒளி மேனியனே!* ***படைத்தலைவர் ஒருவர் மும்மடி இராவணன் எனும் படிமையோர் உற்று*** - *படைத்தலைவர், ஒவ்வொருவரும் மும்மடங்கு இராவணர்கள் என்று சொல்லத்தக்க உருவம் உடையவராய் வந்து;* ***கிடைத்தனர்*** - *இராமனை நெருங்கியிருக்கின்றார்கள்;* ***அவர்க்கு ஒரு கணக்கு இலை*** - *அப்படி நெருங்கி விட்ட அரக்கர்களுக்கு ஒரு கணக்கு இல்லை;* ***வளைத்தனர் கிளைத்து*** - *இராமனைச் சூழ்ந்து கொண்டு கிளர்ந்தெழுந்து;* ***உலகு எலாம் அடைத்தனர்*** - *உலகம் முழுவதையும் அடைத்துக்கொண்டு;* ***தெழித்தனர், அழித்தனர்*** - *அதட்டிக் கொண்டு அழிக்கத் தொடங்கி விட்டார்கள்;* ***தனித்துளன் இராமன்*** - *இராமன் தன்னந் தனியாக இருக்கிறான்;* ***அவரோ*** - *அந்த அரக்கர்களோ;* ***துடைத்தனர் எம் வெற்றி என உற்றனர்*** - *(எமக்குக் கிடைத்துவிட்டதென்று நாங்கள் எண்ணிக்கொண்டிருந்த) வெற்றியை அழிக்கின்றனர்;* ***இனிச் செயல் பணித்தி*** - *இனி நடக்கப்போகும் நிகழ்ச்சிகள் இவையெனக் கூறுக என (கலங்கிக்) கூறினர்.*

*எவ்வளவு ஈடுபாடு கொண்ட பக்தர்களும் தளர்வோராகி இறைவன் ஆற்றலை மறந்துவிடுவதுண்டு என்ற மெய்ம்மைகளை உணர்த்துகிறது இமையோர் செயல். அடுத்து வரும் பாடலும் அவ்வகையினதே.*

***9448. 'எய்த கணை எய்துவதன் முன்பு, இடை***
***அறுத்து, இவர்கள் ஏழ் உலகமும்***
***பெய்த கணை மா முகில் எனப் புடை***
***வளைத்தனர், பிடித்தனர்கள் போய்;***
***வைது அகலின் அல்லது மறப் படை,***

***கொடிப் படை, கடக்கும் வலிதான்***
***செய்ய திருமாலொடும் உனக்கும் அரிது'***
***என்றனர், திகைத்து விழுவார்.****

***எய்த கணை*** - இராமனால் எய்யப்பட்ட அம்பு; ***எய்துவதன் முன்பு*** - இலக்கினை அடைவதற்கு முன்பே; ***இடை அறுத்து*** - நடு வழியிலேயே முறித்து; ***இவர்கள்*** - இந்த அரக்கர்கள்; ***பெய்த கணை மா முகில் என*** - இராமனை எதிர்த்துச் செலுத்திய அம்புகள் பெரிய மேகத்திரள் என்று சொல்லும்படியாக; ***புடை வளைத்தனர்*** - பக்கங்களில் சூழ்ந்தவர்களாய்; ***போய்ப் பிடித்தனர் கள்*** - முன்னேறிப் பிடித்துக்கொண்டனர்; ***வைது கொலின் அல்லது*** - இவ் அரக்கர்களைச் சாபம் இட்டுக் கொன்றால் அல்லாமல்; ***மறப்படை கொடிப்படை*** - வீரப் படைக்கலங்களாலோ கொடி ஏந்தி நடக்கும் காலாட்படைகளாலோ; ***கடக்கும் வலி*** - வெல்லும் வல்லமை; ***செய்ய திருமாலொடு உனக்கும் அரிது*** - செம்மை நெறி பேணும் திருமாலுக்கும் உனக்கும் இல்லை; ***என்றனர்*** - என்று கூறி; ***திகைத்து விழுவார்*** - திகைத்துத் தளர்ந்தனர்.

*சிவபிரான் விடையும் விளக்கமும்*

***9449. 'அஞ்சி, அயரன்மின்! அவர் எத்தனையர்***
***ஆயிடினும், அத்தனைவரும்,***
***பஞ்சி எரி உற்றதென, வெந்து அழிவர்***
***இந்த உரை பண்டும் உளதால்,***
***நஞ்சம் அமுதத்தை நனி வென்றிடினும்***
***நல் அறம் நடக்கும் அதனை***
***வஞ்ச வினை பொய்க் கருமம் வெல்லினும்***
***இராமனை இவ் வஞ்சர் கடவார்.***

***அஞ்சி அயரன்மின்*** - நீங்கள் அஞ்சித் தளராதீர்கள்; ***அவர் எத்தனையர் ஆயிடினும்*** - அந்த அரக்கர்கள் எத்தனை பேராக இருந்தாலும்; ***அத்தனைவரும்*** - அத்தனை பேர்களும்; ***பஞ்சி எரி உற்றதென*** - பஞ்சில் நெருப்புப் பற்றியதைப் போல; ***வெந்து அழிவர்*** - எரிந்து சாவார்கள்; ***இந்த உரை பண்டும் உளது*** - இந்தச் செய்தி பழங்காலத்திலிருந்து இருப்பதுதான்; ***நஞ்சம் அமுதத்தை நனி வென்றிடினும்*** - நஞ்சு அமுதத்தை மிகவே வென்றாலும்; ***நடக்கும் நல் அறம் அதனை*** - நடைபெறுகின்ற நல்ல அறத்தை; ***வஞ்ச வினை பொய்க் கருமம் வெல்லினும்*** - வஞ்சகச் செயல்களும் பொய்ம்மைச் செயல்களும் வென்றாலும்; ***இராமனை இவ் வஞ்சகர் கடவார்*** - இராமபிரானை இந்த வஞ்சகர்கள் வெல்ல மாட்டார்கள்.

*வென்றிடினும், வெல்லினும் என்பவற்றில் உள்ள உம்மைகள் அவை வெல்லமாட்டா என்ற எதிர்மறைப் பொருளைத் தந்தன. தீமை வெல்வது போன்ற*

*தோற்றம் ஏற்படினும் இறுதியில் அறமே வெல்லும் என்பது இந்த நாட்டுப் பண்பாட்டு நம்பிக்கை.*

***9450. 'அரக்கர் உளர் ஆர் சிலர், அவ் வீடணன்***
***அலாது, உலகின் ஆவி உடையார்?***
***இரக்கம் உளதுஆகின், அது நல் அறம்***
***எழுந்து வளர்கின்றது; இனி நீர்***
***கரக்க, முழை தேடி உழல்கின்றிலிர்கள்;***
***இன்று ஒரு கடும் பகலிலே***
***குரக்கின் முதல் நாயகனை ஆளுடைய***
***கோள் உழுவை கொல்லும், இவரை.'***

***அவ் வீடணன் அலாது*** *- அந்த வீடணனைத் தவிர;* ***உலகில்*** *- இந்த உலகத்தில்;* ***அரக்கர் சிலர் ஆவி உடையார் உளர் ஆர்*** *- அரக்கருள் சிலராய் உயிருடையவர்களாய் இனி இருக்கப் போகிறவர்கள் யார்? (யாரும் இரார்);* ***இரக்கம் உளது ஆகின்*** *- இரக்கம் என்ற ஒரு தத்துவம் இருப்பது உண்மையாயின்;* ***அது நல் அறம் எழுந்து வளர்கின்றது*** *- அதனால் நல்ல அறம் உயர்ந்து வளர்வதாகிறது;* ***இனி நீர் கரக்க*** *- இனிமேல் நீங்கள் ஒளிந்து கொள்வதற்கு;* ***முழை தேடி*** *- குகைகளைத் தேடி;* ***உழல்கின்றிலிர்கள்*** *- துன்பப்பட வேண்டியதில்லை;* ***இன்று ஒரு கடும் பகலிலே*** *- இன்றைய கடும் பகலிலேயே;* ***குரக்கின் முதல் நாயகனை ஆளுடைய*** *- வானரங்களின் முதல் தலைவனாகிய சுக்கிரீவனை அடிமையாகக் கொண்ட;* ***கோள் உழுவை*** *- குறிதப்பாத புலியாகிய இராமன்;* ***இவரைக் கொல்லும்*** *- இந்த அரக்கர்களைக் கொல்வான்.*

*'கண்ணோட்டம் என்னும் கழிபெருங்காரிகை உண்மையான் உண்டு இவ் உலகு' (குறள் 571) கண்ணோட்டத்து உள்ளது உலகியல் (குறள் 572) என்ற வள்ளுவர் வாய்மொழிகள் இங்கு நினையத் தக்கன.*

***9451. என்று பரமன் பகர, நான்முகனும்***
***அன்ன பொருளே இசைதலும்,***
***நின்று நிலை ஆறினர்கள், வானவரும்,***
***மானவனும் நேமி எனல் ஆம்***
***வென்றி நெடு வாளி மழை, மாரியினும்***
***மேலன துரந்து, விரைவின்***
***கொன்று, குல மால் வரைகள் மானு தலை***

***மா மலை குவித்தனன் அரோ.***

***என்று பரமன் பகர*** *- மேற்கண்டவாறு சிவபெருமான் கூற;* ***நான்முகனும் அன்ன பொருளே இசைதலும்*** *- பிரமனும் அந்தக் கருத்தே சரி என உடன்பட;* ***வானவரும்*** *-*

*தேவர்களும்; நின்று - (மனத்தால் உறுதிபட) நின்று;* ***நிலை ஆறினர்கள்*** *- (கலங்கிய) நிலை மாறி ஆறுதல் அடைந்தனர்;* ***மானவனும்*** *- மனு வமிசத்தவனான இராமனும்;* **நேமி எனல் ஆம்** - சக்கராயுதம் என்று சொல்லத்தக்க; **வென்றி நெடு** ***வாளி மழை*** *- வெற்றி விளைப்பனவும் நெடியனவுமாகிய அம்புகளாகிய மழையினை;* **மாரியினும் மேலன துரந்து** - மேகத்தை விட அதிகமாக விரையச் செலுத்தி; **விரைவின் கொன்று** - விரைவாக அரக்கரைக் கொன்று; **வரைகள்** ***மானு(ம்) தலை*** *- மலைகளை ஒத்த தலைகளை;* ***மா மலை*** *- (மலைகளின் அடுக்காகிய) பெரிய மலையாக;* **குவித்தனன்...**

**சந்தக் கலி விருத்தம்**

***9452. மகர மறி கடலின் வளையும் வய நிருதர்***
***சிகரம் அனைய உடல் சிதறி, இறுவர் உயிர் -***
***பகர அரிய பதம் விரவ, அமரர் பழ***
***நகரம் இடம் அருக, நவையர் நலிவு பட.***

***மகர மறி கடலின்*** *- மகர மீன் நிறைந்த கடலைப்போல;* ***வளையும் வய நவையர் நிருதர்*** *- இராமபிரானைச் சூழ்ந்து கொண்ட வலிமையுடைய குற்றம் நிறைந்த அரக்கர்கள்;* ***சிகரம் அனைய உடல் சிதறி*** *- மலைபோன்ற தங்கள் உடல் சிதறுண்டு;* ***நலிவு பட*** *- சிதறியிட;* ***பகர அரிய பதம் விரவ*** *- உயர்த்திச் சொல்லுதற்கு அரிய வீரசுவர்க்க பதத்தில் சேர்தலால்;* ***அமரர் படி நகரம்*** *- தேவர்கள் வாழும் தேவருலகத்தில்;* ***இடம் அருக*** *- இடமில்லாமல் போகும்படியாக;* ***உயிர் இறுவர்*** *- உயிர் முடிந்தனர் (இறந்தனர்).*

***9453. உகளும், இவுளி தலை துமிய - உறு கழல்கள்***
***தகளி அற, வலிய தலைகள் அறு தலைவர்***
***துகளின் உடல்கள் விழ, உயிர்கள் சுரர் உலகின்***
***மகளிர் வன முலைகள் தழுவி அகம் மகிழ.***

***உறு கழல்கள்*** *- வலிமை மிகு கால்கள்;* ***தகளி அற*** *- அகல் விளக்குப் போல் துண்டாகிட;* ***வலிய தலைகள் அறு தலைவர்*** *- வன்மை மிக்க தலைகள் அறுபட்ட வீரத் தலைவர்களின்;* ***உடல்கள் துகளின் விழ*** *- உடல்கள் (தரைப்) புழுதியிலே விழ;* ***உயிர்கள்*** *- அவர்களின் உயிர்கள்;* ***சுரர் உலகின்*** *- தேவர் உலகத்தில் உள்ள;* ***மகளிர் வன முலைகள் தழுவி*** *- பெண்களின் அழகிய மார்பினைத் தழுவி;* ***அகம் மகிழ*** *- மனம் மகிழ;* ***இவுளி தலை துமிய*** *- அவர்கள் ஏறிவந்த குதிரைகள் தலை துண்டிக்கப்பட்டு;* ***உகளும்*** *- (தரையிலே) புரளும்.*

*வீரர்களின் கால்களும் தலைகளும் அறுபட்டு, உடல்கள் புழுதியிலே புரண்டன. அவர்களின் உயிர்கள் சுவர்க்க மகளிரைத் தழுவி மகிழ்ந்தன. குதிரைகள் தலை அறுபட்டு நிலத்திலே புரண்டன.*

***9454. மலையும், மறி கடலும், வனமும், வறு நிலனும்,***
***உலைவு இல் அமரர் உறை உலகும், உயிர்களொடு***
***தலையும் உடலும் இடை தழுவு தவழ் குருதி***
***அலையும் அரியது ஒரு திசையும் இலது, அணுக.***

***மலையும்*** *- மலைகளும்;* ***மறி கடலும்*** *- (அலைகள்) மடங்கி வரும் கடல்களும்;* ***வனமும் வறு நிலமும்*** *- காடுகளும் வெற்று நிலமும்;* ***உலைவு இல் அமரர் உறை உலகும்*** *- அழிதல் இல்லாத தேவர்கள் வாழும் உலகமும் ஆகிய இத்துணை இடங்களிலும்;* ***உயிர்களொடு*** *- அரக்கரின் உயிர்களுடன்;* ***தலையும் உடலும்*** *- அவர்களுடைய தலைகளும் (தலைகளற்ற) உடல்களும்;* ***இடை தழுவு*** *- இவற்றினிடையே இணைத்து;* ***தவழ் குருதி அலையும்*** *- ஓடுகின்ற இரத்தக் கடலும்;* ***அரியது ஒரு திசையும்*** *- இல்லாத ஒரு பக்கம் கூட;* ***அணுக*** *- ஒதுங்குவதற்கு;* ***இலது*** *- இல்லை.*

*மலை, கடல், வனம், வறு நிலம் ஆகியவை தமிழ் நூல்கள் குறிக்கின்ற குறிஞ்சி, நெய்தல், முல்லை, பாலை ஆகிய நானிலங்களைக் குறித்தன எனக் கூறுவாரும் உளர். அது பொருந்துமாறில்லை. காரணம் பாலையை விடுத்து மருதம் கூறுதல் மரபு. இங்கு மருதம் இல்லை.*

### *அரக்கர் அழிதலும் வானவர் பூமாரி சொரிதலும்*

***9455. இனைய செரு நிகழும் அளவின், எதிர் பொருத***
***வினையமுடை முதல்வர் எவரும் உடன் விளிய,***
***அனைய படை நெளிய, அமரர் சொரி மலர்கள்***
***நனைய விசையின் எழு துவலை மழை நலிய,***

***இனைய செரு நிகழும் அளவின்*** *- இத்தகைய போர் நடக்கும் போது;* ***எதிர் பொருத*** *- இராமனுக்கு எதிராகப் போர் செய்த;* ***வினையமுடை முதல்வர் எவரும்*** *- வஞ்சனை கொண்ட (அரக்கர்) தலைவர்கள் எல்லோரும்;* ***உடல் விளிய*** *- ஒருங்கே அழிந்ததனால்;* ***அனைய படை*** *- அந்த (அரக்கர்) சேனை;* ***நெளிய*** *- தளர்ந்திட;* ***அமரர் சொரி மலர்கள் நனைய*** *- (மகிழ்ச்சி கொண்ட) தேவர்கள் சொரிந்த மலர்களின் அரும்புகளிலிருந்து;*

***விசையின் எழு துவலை மழை நலிய*** - *வேகமாக எழுந்து பொழிகின்ற (தேன்) மழை வருத்துவதால்.. (தொடரும்)*

*வெல்வோர் உவகை தோற்போர்க்கு அவலம்.*

***9456. இரியல் உறு படையை, நிருதர், இடை விலகி***
***எரிகள் சொரியும் நெடு விழியர், 'இழுதையர்கள்!***
***திரிக, திரிக!' என உரறு தெழி குரலர்,***
***கரிகள், அரிகள், பரி, கடிதின் எதிர் கடவ.***

***இரியல் உறு படையை*** - *களத்தை விட்டு ஓடுகின்ற சேனையை;* ***எரிகள் சொரியும் நெடு விழியர்*** - *நெருப்பைக் கக்கும் பெரிய விழிகள் உடையவராய்;* ***நிருதர்*** - *அரக்கர்கள்;* ***இடை விலகி*** - *ஓடுவோர்களுக்கிடையே குறுக்கே தடுத்து நின்று;* ***இழுதையர்கள்*** - *அறிவில்லாதவர்களே!* ***'திரிக திரிக' என*** - *மீண்டும் திரும்புக திரும்புக என்று;* ***உரறு தெழி குரலர்*** - *முழங்கி அதட்டுகின்ற குரல் உடையவர்களாய்;* ***கரிகள், அரிகள், பரி*** - *யானைகளையும் சிங்கங்களையும் குதிரைகளையும்;* ***கடிதின்*** - *விரைவாக;* ***எதிர் கடவ*** - *(மீண்டும்) இராமனுக்கு எதிராகச் செலுத்த... (தொடரும்)*

***9457. உலகு செவிடு பட, மழைகள் உதிர, உயர்***
***அலகு இல் மலை குலைய, அமரர் தலை அதிர,***
***இலகு தொடு படைகள் இடியொடு உரும் அனைய,***
***விலகியது, திமிலம் வளையும்வகை விளைய.***

***உலகு செவிடு பட*** - *உலகங்கள் செவிடாகவும்;* ***மழைகள் உதிர*** - *மேகங்கள் உதிரவும்;* ***அலகு இல் உயர் மலை குலைய*** - *அளவில்லாதனவும், உயரமானவையுமாகிய மலைகள் நிலை குலையவும்;* ***அமரர் தலை அதிர*** - *தேவர்களின் தலைகள் அதிரவும்;* ***இலகு தொடு படைகள்*** - *ஒளியோடு விளங்குபவையும் தொடுக்கப்படுபவையுமாகிய படைக்கலங்கள்;* ***இடியொடு உரும் அனைய*** - *இடியோசையோடு கூடிய மின்னல் போல் அமைந்திட;* ***திமிலம் வளையும் வகை விளைய*** - *பேரொலி வளைந்து நிற்கும் வகை உண்டாகும்படி;* ***விலகியது*** - *இராமபிரானைக் குறுக்கே தடுத்து நின்றது.*

***9458. 'அழகிது, அழகிது!' என அழகன் உவகையொடு***
***பழகும் அதிதியரை எதிர்கொள் பரிசு பட,***
***விழைவின் எதிர அதிர் எரிகொள் விரி பகழி***
***மழைகள் முறை சொரிய, அமரர் மலர் சொரிய.***

***'அழகிது, அழகிது!' என*** - (அரக்கர் படை ஆரவாரத்தோடு தன்னைச் சூழ்ந்ததைக் கண்டு) 'அழகாய் இருக்கிறது அழகாய் இருக்கிறது' என்று சொல்லி; ***அழகன்*** - இராமன்; ***பழகும் அதிதியரை*** - புதிதாகப் பழகுகின்ற விருந்தினரை; ***உவகையொடு எதிர்கொள் பரிசுபட*** - மகிழ்ச்சியோடு எதிர்சென்று வரவேற்கும் தன்மை தோன்ற; ***விழைவின் எதிர*** - ஆசையோடு எதிரேற்குமாறு; ***அதிர்*** - எதிரிகளை அதிரச் செய்கின்றனவும்; ***எரி கொள்*** - நெருப்பினைப் போல் எரிதல் தன்மை கொண்டனவும் ஆகிய; ***விரி பகழி மழைகள்*** - பரந்து செல்லுகின்ற அம்பு மழைகளை; ***முறை சொரிய*** - முறைப்படி சொரியவும்; ***அமரர் மலர் சொரிய*** - தேவர்கள் மலர் மாரி சொரியவும்; (தொடரும்.)

***9459. தினகரனை அணவு கொடிகள் திசை அடைவ,***
***சினவு பொரு பரிகள் செறிவ அணுக, உயர்***
***அனகனொடும் அமரின் முடுகி எதிர, எழு***
***கனக வரை பொருவ, கதிர் கொள் மணி இரதம்.****

***தினகரனை அணவு கொடிகள்*** - கதிரவனையே தீண்டுகின்ற கொடிகள்; ***திசை அடைவ*** - திக்குகளின் எல்லையை அடைந்தனவாக; ***சினவு, பொரு பரிகள்*** - சினம் கொண்டனவும் போர் செய்கின்றனவுமாகிய குதிரைகள்; ***அணுக செறிவ*** - எதிராளிகளை நெருங்கிச் செறிந்தனவாக; ***கதிர்கொள் மணி இரதம்*** - ஒளி கொண்ட மணிகள் பதிக்கப்பட்ட தேர்கள்; ***உயர் அனகனொடும்*** - உயர்ந்தவனும் குற்றமற்றவனுமாகிய இராமபிரானோடு; ***அமரின் முடுகி எதிர*** - போரில் விரைந்து எதிர்ப்பதற்கு; ***எழு*** - எழுகின்ற; ***கனக வரை பொருவ*** - பொன் மலையாகிய மேருவைப் போல் அமைந்தன.

*சினவு, பரி, பொரு பரி எனக் கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது.*

***9460. பாறு, படு சிறகு கழுகு, பகழி பட,***
***நீறு படும் இரத நிரையின் உடல் தழுவி,***
***வேறு படர் படர, இரவி சுடர் வலையம்,***
***மாறு பட, உலகின் மலைகள் அளறு பட.****

***பாறு*** - பருந்துகளும்; ***படு சிறகு கழுகு*** - பெருஞ் சிறகுகளைக் கொண்ட கழுகுகளும்; ***பகழி பட*** - அம்புகள் தாக்குவதால்; ***நீறு படும் இரத நிரையின்*** - சிதைந்து தூளாகின்ற தேர்களின் வரிசையில்; ***உடல் தழுவி*** - உடல்கள் பட்டு; ***வேறு படர் படர*** - வேறு வழிகளில் செல்லவும்; ***இரவி சுடர் வலையம்*** - கதிரவனது ஒளி வட்டம்; ***மாறு பட*** - நிலை குலையவும்; உலகின் மலைகள் - உலகத்து மலைகளெல்லாம்; ***அளறு பட*** - சேறு ஆகிடவும் (தொடரும்)

***9461. அருகு கடல் திரிய, அலகு இல் மலை குலைய,***
***உருகு சுடர்கள் இடை திரிய, - உரனுடைய***
***இரு கை ஒரு களிறு திரிய, விடு குயவர்***
***திரிகை என உலகு முழுதும் முறை திரிய.****

***உரனுடைய*** *- வலிமை கொண்ட;* ***இரு கை ஒரு களிறு*** *- இரண்டு கரங்கள் கொண்ட யானை போன்றவனாகிய இராமன்;* ***திரிய*** *- போர்க்களத்திலே சாரி திரிந்தமையால்;* ***அருகு கடல் திரிய*** *- (தொலைவில் உள்ள ஏழு) கடல்களும் ஒன்றுக்கொன்று அருகு வந்து திரிந்திடவும்;* ***அலகு இல் மலை குலைய*** *- அளவற்ற மலைகள் நிலை குலையவும்;* ***உருகு சுடர்கள் இடை திரிய*** *- உரு(க்)குகின்ற வெப்பச் சுடர்க் கோள்கள் வானிடையே நிலை மாறவும்;* ***உலகு முழுதும்*** *- எல்லா உலகங்களும்;* ***குயவர் விடு திரிகையென*** *- குயவர்கள் இயக்குகின்ற சக்கரம் போல;* ***முறை திரிய*** *- தமக்குரிய முறையான தடங்களிலிருந்து மாறவும்; தொடரும்.*

***9462. சிவனும், அயனும், எழு திகிரி அமரர் பதி***
***அவனும், அமரர் குலம் எவரும், முனிவரொடு***
***கவனம் உறு கரணம் இடுவர் - கழுதுஇனமும்,***
***நமனும், வரி சிலையும், அறனும், நடன் நவில.***

***கழுது இனமும்*** *- பேய்க் கூட்டங்களும்;* ***நமனும்*** *- யமனும்;* ***வரி சிலையும்*** *- கட்டு அமைந்த வில்லும்;* ***அறனும்*** *- அறக் கடவுளும்;* ***நடன் நவில*** *- (மகிழ்ச்சியால்) நடனமாடும் படியாக;* ***சிவனும் அயனும் எழு திகிரி அமரர் பதி அவனும்*** *- சிவபிரான், நான்முகன், பகையை அழிக்க எழும் சக்கரப்படை ஏந்திய தேவர் தலைவனாகிய திருமால் ஆகியோரும்;* ***அமரர் குலம் எவரும்*** *- தேவர் கூட்டத்தைச் சேர்ந்த எல்லோரும்;* ***முனிவரொடு*** *- முனிவர்களோடு சேர்ந்து;* ***கவனம் உறு*** *- வேகம் மிகுந்த;* ***கரணம் இடுவர்*** *- (மகிழ்ச்சியால்) குட்டிக்கரணமிட்டுக் கூத்தாடினர்.*

*நடன் நவில்தல் - நடனம் இடுதல். 'நட்டமே நவில்வாய்' (தேவாரம் 3-1-2) என்ற ஆட்சி காண்க.*

***9463. தேவர் திரிபுவன நிலையர் செரு இதனை***
***ஏவர் அறிவுறுவர் இறுதி? முதல் அறிவின்***
***மூவர் தலைகள் பொதிர் எறிவர், 'அற முதல்வ!***
***பூவை நிறவ!' என வேதம் முறை புகழ.***

***தேவர்*** *- வானவர்கள்;* ***திரிபுவன நிலையர்*** *- மற்றும் மூன்று உலகங்களிலும் வாழ்பவர் ஆகியோரில்;* ***செரு இதனை*** *- இந்தப் போரின்;* ***இறுதி*** *- முடிவு எப்படி*

*இருக்குமென;* ***ஏவர் அறிவுறுவர்*** *- யார்தான் அறிவார்கள்? (அவர்களுள் எவரும் அறியார் என்பதாம்);* ***முதல் அறிவின் மூவர்*** *- எல்லாவற்றுக்கும் காரணமாய் விளங்கிய அறிவு வடிவினராகிய மும்மூர்த்திகள்;* ***தலைகள் பொதிர் எறிவர்*** *- தலை நடுக்கம் கொண்டவராகிட;* ***அற முதல்வ*** *- அறத்தின் நாயகனே;* ***பூவை நிறவ*** *- காயாம் பூவின் (நீல) நிறம் கொண்டவனே!* ***என வேதம்முறை புகழ*** *- என்று வேதம் முறைப்படி புகழ்ந்திட; (தொடரும்).*

***9464. எய்யும் ஒரு பகழி, ஏழு கடலும், இடு***
***வெய்ய களிறு பரியாளொடு இரதம் விழ,***
***ஒய்ய ஒரு கதியின் ஓட உணர் அமரர்***
***கைகள் என, அவுணர் கால்கள் கதி குலைவ.***

***எய்யும் ஒரு பகழி*** *- இராமபிரான் எய்யும் ஓர் அம்பானது;* ***ஏழு கடலும் இடு*** *- ஏழு கடல்களிலும் சேரும்படி குறி வைக்கப்பட்ட;* ***வெய்ய களிறு பரி ஆளொடு இரதம் விழ*** *- கொடிய யானைகள், குதிரைகள், காலாட்களோடு தேர்களும் விழும்படி;* ***ஒய்ய ஒரு கதியின் ஓட*** *- வேகம் கொண்ட போக்கிலே ஓட;* ***உணர் அமரர்*** *- அதனை உணர்ந்த தேவர்களின்;* ***கைகள் என*** *- கைகளைப் போல;* ***அவுணர் கால்கள் கதி குலைவ*** *- அரக்கர்களின் கால்கள் நிலையில் திரிந்தன.*

***9465. அண்ணல் விடு பகழி, யானை, இரதம், அயல்***
***பண்ணு புரவி, படை வீரர், தொகு பகுதி***
***புண்ணின் இடு குறிகள் புள்ளி என விரைவின்***
***எண்ணுவன அனைய எல்லை இல நுழைவ.***

***யானை, இரதம், அயல் பண்ணு புரவி, படை, வீரர்*** *- யானைகள், தேர்கள், இவற்றில் பக்கத்தில் உள்ளதைப் பருமம் முதலியன கொண்டு தயார் நிலையில் உள்ள குதிரைகள் காலாட்கள் ஆகியவை;* ***தொகு பகுதி*** *- கூடியுள்ள அணி வகுப்பிலே;* ***புண்ணின் இடு குறிகள்*** *- புண்களால் இடப்படுகின்ற அடையாளங்கள்;* ***புள்ளி என*** *- புள்ளிகள் ஆகும் என்னும்படியாக;* ***விரைவில் எண்ணுவன அனைய*** *- விரைந்து எண்ணுகின்றவை போல;* ***அண்ணல் விடு பகழி*** *- இராமபிரான் செலுத்துகின்ற அம்புகள்;* ***எல்லை இல நுழைவ*** *- முடிவில்லாதனவாய் படைகளூடே நுழைந்தன.*

**கலி விருத்தம் (வேறு வகை)**

## *இராமன் அம்பு மதில் அமைத்தல்*

***9466. சுருக்கம் உற்றது படை; 'சுருக்கத்தால் இனிக்***
***கரக்கும், உற்று ஒரு புறத்து' என்னும் கண்ணினால்***
***அரக்கருக்கு அன்று செல்வு அரியதாம்வகை***
***சரக் கொடு நெடு மதில் சமைத்திட்டான் அரோ.***

***சுருக்கம் உற்றது படை*** *- அரக்கரின் படை குறைந்து விட்டது;* ***சுருக்கத்தால்*** *- படையின் அளவு குறைந்து விட்டதால்;* ***இனி ஒரு புறத்து உற்றுக் கரக்கும்*** *- இனி ஒரு புறமாகச் சென்று ஒளிந்து கொள்ளும்;* ***என்னும் கண்ணினால்*** *- என்ற கருத்தினால்;* ***அன்று*** *- அப்போதே;* ***அரக்கருக்குச் செல்வு அரிதாம் வகை*** *- அரக்கர்கள் தப்பிப் போக முடியாத வகையாக;* ***சரக் கொடு*** *- அம்புகளைக் கொண்டு;* ***நெடு மதில் சமைத்திட்டான்*** *- பெரிய மதிலை அமைத்துவிட்டான் (இராமன்)*

***9467. மாலியை, மாலியவானை, மால் வரை***
***போல் உயர் கயிடனை, மதுவை, போன்று உளார்.***
***சாலிகை யாக்கையர், தணப்பு இல் வெஞ் சர***
***வேலியைக் கடந்திலர், உலகை வென்றுளார்.***

***உலகை வென்றுளார்*** *- உலகையே வெற்றி கொண்டவர்களும்;* ***மாலியை, மாலியவானை, மால்வரை போல உயர் கயிடனை மதுவைப் போன்று உளார்*** *- மாலி, மாலியவான், பெரிய மலைபோல் உயர்ந்த கயிடபன் மது ஆகியோரைப் போன்று உள்ளவர்களும்;* ***சாலிகை யாக்கையர்*** *- கவசம் அணிந்த உடல் உடையவர்களுமாகிய அரக்கர்கள்;* ***வேலியைக் கடந்திலர்*** *- இராமபிரான் இட்ட அம்பு வேலியைக் கடந்து போகவில்லை (இயலவில்லை)*

***9468. மாண்டவர் மாண்டு அற, மற்றுளோர் எலாம்***
***மீண்டனர், ஒரு திசை - எழு வேலையும்***
***மூண்டு அற முருக்கிய ஊழிக் காலத்தில்***
***தூண்டுறு சுடர் சுட, சுருங்கித் தொக்கபோல்.***

***மாண்டவர் மாண்டு அற*** *- இறந்தவர்கள் இறந்து ஒழிந்தவராக;* ***மற்றுளோர் எலாம்*** *- அதன்மேலும் உள்ளவர்கள் எல்லாரும்;* ***மூண்டு அற முருக்கிய*** *- பொங்கிப் பெருகி எல்லாவற்றையும் அழிக்கின்ற;* ***ஊழிக் காலத்தில்*** *- உலகங்களின் முடிவுக் காலத்தில்;* ***தூண்டுறு சுடர் சுட*** *- மூண்டு பெருகி வரும் (வடவை முகத்) தீ;* ***சுட*** *- சுடுவதால்;* ***ஏழு வேலையும்*** *- ஏழு கடல்களும்;* ***சுருங்கித் தொக்கபோல்*** *- அளவிலே சுருங்கி (ஒரு சிற்றிடத்தில்) கூடியதுபோல;* ***ஒரு திசை மீண்டனர்*** *- ஒரு திசையிலே வந்து சேர்ந்தனர்.*

***9469. 'புரம் சுடு கடவுளும், புள்ளின் பாகனும்***
***அரம் சுடு குலிச வேல் அமரர் வேந்தனும்***
***உரம் சுடுகிற்கிலர்; ஒருவன் நாமுடை***
***வரம் சுடும்; வலி சுடும்; வாழும் நாள் சுடும்.***

***புரம் சுடு கடவுளும்*** - *முப்புரம் எரித்த சிவனும்;* ***புள்ளின் பாகனும்*** - *(கருடப்) பறவையைச் செலுத்தும் திருமாலும்;* ***அரம் சுடு குலிசவேல்*** - *அரத்தினால் அராவிக் கூர்மைப்படுத்தப் படுகின்ற வச்சிராயுதத்தை ஏந்தியுள்ள;* ***அமரர் வேந்தனும்*** - *தேவர் தலைவனாகிய இந்திரனும்;* ***உரம் சுடுகிற்கிலர்*** - *நம் வலிமையை அழிக்க இயலாதவர்களானார்கள்;* ***ஒருவன்*** - *இப்போது இங்கே உள்ள தனி ஒருவன்;* ***நாம் உடை வரம் சுடும்*** - *தெய்வங்களிடமிருந்து நாம் பெற்ற வரங்களின் வலிமையை அழிக்கிறான்;* ***வாழும் நாள் சுடும்*** - *வாழ்நாளையே அழிக்கிறான்.*

*வாழும் நாள் சுடும் என்ற தொடரிலுள்ள உம்மையை இடம் மாற்றி வாழ் நாளும் சுடும் எனவும் பொருள் கொள்ளலாம். கருத்து ஒன்றே.*

***9470. 'ஆயிர வெள்ளம் உண்டு; ஒருவர், ஆழி சூழ்***
***மா இரு ஞாலத்தை மறிக்கும் வன்மையோர்***
***மேயின பெரும் படை இதனை, ஓர் விலால்***
***''ஏ'' எனும் மாத்திரத்து எய்து கொன்றனன்.***

***ஆயிரம் வெள்ளம் உண்டு*** - *அரக்கர் சேனை ஆயிரம் வெள்ளம் அளவில் உண்டு;* ***ஒருவர்*** - *அப்படையில் உள்ள ஒவ்வொருவரும்;* ***ஆழி சூழ் ஞாலத்தை மறிக்கும் வன்மையோர்*** - *கடல் சூழ்ந்த உலகமே எதிர்த்து வந்தாலும் தடுத்து நிறுத்திப் போர் செய்யும் ஆற்றல் உடையவர்கள்;* ***மேயின பெரும்படை இதனை*** - *போர்க்களத்துக்கு வந்த இந்தப் பெரிய படையை;* ***ஓர் வி(ல்)லால்*** - *ஒரே ஒரு வில்லைக் கொண்டு;* ***ஏ எனும் மாத்திரத்து*** - *''ஏ'' என்று சொல்லிமுடிக்கும் கால அளவிலே;* ***எய்து கொன்றனன்*** - *(ஒருவனே) கணை செலுத்திக் கொன்று விட்டான்.*

***9471. 'இடை படும், படாதன இமைப்பிலோர் படை;***
***புடைபட, வலம்கொடு விலங்கிப் போகுமால்;***
***படை படும் கோடி ஓர் பகழியால் பழிக்***
***கடைபடும் அரக்கர்தம் பிறவி கட்டமால்.***

***இமைப்பிலோர் படை*** - *தேவர்களின் படை;* ***இடை*** - *போர்க் களமாகிய இடத்திலே;* ***படாதன படும்*** - *எம் அரக்கர் சேனையில் (வேறெங்கும்) படாத துன்பத்தை*

*அடையும்;* ***புடைபட*** *- அடிபடுவதால்;* ***வலங்கொடு*** *- வலப்புறமாகச் சுற்றிக்கொண்டு;* ***விலங்கிப் போகும்*** *- விலகிப் போய்விடும்;* ***படை படும் கோடி*** *- அரக்கர் சேனை கோடிக்கணக்கில் இருந்தும்;* ***ஓர் பகழியால் கடைபடும்*** *- இராமன் விடுக்கும் ஒரு அம்பினால் (வாழ்வின்) இறுதியை அடைகின்றது;* ***அரக்கர்தம் பழி பிறவி கட்டம்*** *- அரக்கரின் இழி பிறவியை நீக்கிக்கொண்டோம்.*

*ஆல் : அசை*

***9472. 'பண்டு உலகு அளித்தவனோடும், பண் அமை***
***குண்டையின் பாகனும், பிறரும் கூடினார்;***
***அண்டர்கள் விசும்பினின்று ஆர்க்கின்றாருழைக்***
***கண்டிலம்; இவன் நெடு மாயக் கள்வனால்.***

***பண்டு உலகு அளித்தவனோடும்*** *- முன்பு உலகங்களைப் படைத்தவனாகிய பிரமனோடும்;* ***பண் அமை குண்டையின் பாகனும்*** *- ஆசனம் அமைந்த இடபத்தைச் செலுத்தும் சிவபிரானும்;* ***பிறரும் கூடினார்*** *- மற்றவர்களும் கூடியிருக்கின்றனர்;* ***விசும்பினின்று*** *- ஆகாயத்திலிருந்து;* ***ஆர்க்கின்றாருழை*** *- ஆரவாரம் செய்கின்ற தேவர்களிடையே;* ***கண்டிலம்*** *- (மும்மூர்த்திகளில் ஒருவனாகிய திருமாலைக்) காணவில்லை;* ***இவன்*** *- இந்த இராமன்;* ***நெடு மாயக்கள்வன்*** *- பெரு மாயைகள் வல்ல (அந்தத்) திருமாலே போலும்*

***9473. 'கொன்றனன், இனி ஒரு கோடி கோடி மேற்று;***
***அன்று எனின், பதுமம் அன்று; ஆயின் வெள்ளமா***
***நின்றது; நின்று இனி நினைவது என் பிற?***
***ஒன்று என நினைக' என, வன்னி ஓதினான்:***

***இனி*** *- இப்போது;* ***ஒரு கோடி கோடி மேற்று கொன்றனன்*** *- ஒரு கோடி கோடிக்கு மேலான அரக்கரை (இராமன்) கொன்றுவிட்டான்;* ***அன்று எனின் பதுமம்*** *- கோடி கோடி அன்று என்றால் அவனால் கொல்லப்பட்டவரின் எண்ணிக்கை பதுமம் ஆக இருக்கலாம்;* ***அன்று எனின் வெள்ளமா நின்றது*** *- அதுவும் இல்லையென்றால் வெள்ளம் அளவினதாக அமைந்திருக்கலாம்.* ***நின்று இனி நினைவது என் பிற*** *- (அத்துணைப் பேரையும் இழந்தபின்) வாளா நிற்பதால் இனிமேல் நினைத்து செய்யக் கூடியது என்ன இருக்கிறது;* ***ஒன்று என நினைக*** *- செய்யத்தக்கது ஒன்றுதான் என நினையுங்கள்;* ***என வன்னி ஓதினான்*** *- என்று வன்னியாகிய அரக்கர் படைத் தலைவன் அரக்கரிடம் பின்வருமாறு கூறினான்.*

*கோடி - பதுமம் - வெள்ளம் ஒன்றுக்கொன்று ஏற்றம்.*

*ஒருங்கே இணைந்து இராமனை எதிர்க்குமாறு வன்னி அரக்கரைத் தூண்டுதல்*

***9474. 'விழித்துமோ, இராவணன் முகத்து மீண்டு, யாம் -***
***பழித்துமோ, நம்மை. - நாம் படுவது அஞ்சினால்?***
***அழித்தும் ஓர் பிறப்பு உறா நெறி சென்று அண்ம,***
***யாம்***
***கழித்தும் இவ் ஆக்கையை, புகழைக் கண்ணுற.***

***நாம் படுவது அஞ்சினால்*** - *நாம் இறப்பதற்குப் பயப்பட்டால்;* ***மீண்டு இராவணன் முகத்து யாம் விழித்துமோ*** - *திரும்பச் சென்று இராவணன் முகத்திலே நாம் விழிப்போமா?;* ***நம்மைப் பழித்துமோ*** - *(தோல்வியை நினைத்து) நம்மை நாமே பழித்துக்கொண்டிருப்போமா? (இரண்டும் பெரிய பழிக்குரிய செயல்கள்)* ***புகழைக் கண்ணுற*** - *புகழைக் காணுவதற்கு;* ***அழித்தும் ஓர் பிறப்பு உறா நெறி சென்று அண்ம*** - *மீண்டும் ஒரு பிறப்பினை அடையாத வழியைச் சென்று நெருங்குவதற்காக;* ***இவ் ஆக்கையை*** - *இந்த உடம்பினை;* ***யாம் கழித்தும்*** - *நாம் விட்டு விடுவோமாக.*

*'வாழ்ந்தால் பழி; வீழ்ந்தால் புகழ். உடம்பை வீழ்த்துப் பிறவா நெறி அடைந்து புகழினைப் பெறுவோமாக' என்கிறான் வன்னி.*

***9475. 'இடுக்கு, இனிப் பெயர்ந்து உறை எண்ணுவேம்எனின்***
***அடுத்த கூர் வாளியின் அரணம் நீங்கலோம்;***
***எடுத்து ஒரு முகத்தினால் எய்தி, யாம் இனிக்***
***கொடுத்தும் நம் உயிர்' என, ஒருமை கூறினான்.***

***இனி*** - *இதற்குமேல்;* ***இடுக்கு*** - *இந்தச் சங்கடத்திலிருந்து;* ***பெயர்ந்து*** - *நீங்கி;* ***உறை எண்ணுவேம் எனின்*** - *தங்குவதற்குரிய வழிகளை எண்ணிப் பார்த்தோமானால்;* ***அடுத்த*** - *நம்மை (இங்கே இப்போது) அடுத்துள்ளதாகிய;* ***கூர் வாளியின் அரணம்*** - *கூர்மையான அம்பினாலாகிய மதிலுக்கு அப்பால்;* ***நீங்கலோம்*** - *வெளியேற முடியாதவர்களாக இருக்கிறோம்;* ***எடுத்து*** - *ஊக்கம் கொண்டு;* ***ஒரு முகத்தினால் எய்தி*** - *ஒருமுகமாக அடைந்து;* ***யாம் இனிக் கொடுத்தும் நம் உயிர்*** - *இனி நாம் நம் உயிரைக் கொடுப்போமாக;* ***என*** - *என்று;* ***ஒருமை கூறினான்*** - *ஒருதலையாக (உறுதியாக)க் கூறினான்.*

***9476. இளக்க அரு நெடு வரை ஈர்க்கும் ஆறு எலாம்***

***அளக்கரின் பாய்ந்தென, பதங்கம் ஆர் அழல்***
***விளக்கினில் வீழ்ந்தென, விதிகொடு உந்தலால்***
***வளைத்து இரைத்து அடர்த்தனர், மலையின்***
***மேனியார்.***

**இளக்க அரு நெடுவரை** - *அசைத்தலுக்கு அரிய பெரிய மலைகளைக்கூட;* **ஈர்க்கும் ஆறு எலாம்** - *இழுத்துச் செல்லக் கூடிய ஆறுகளெல்லாம்;* **அளக்கரின் பாய்ந்தென** - *கடலிலே சென்று பாய்தல் போலவும்;* **பதங்கம்** - *விட்டிற் பூச்சிகள்;* **ஆர் அழல் விளக்கினில் வீழ்ந்தென** - *நிறைந்த சுடரையுடைய விளக்கிலே வீழ்வது போலவும்;* **விதி கொடு உந்தலால்** - *ஊழ்வினை (பிடரியைப்) பிடித்துக்கொண்டு தள்ளியதால்;* **மலையின் மேனியார்** - *மலைபோலப் பெரிய உடல் கொண்ட அரக்கர்கள்;* **வளைத்து இரைத்து அடர்த்தனர்** - *சூழ்ந்து ஆரவாரம் செய்து எதிர்த்து நெருக்கினர்.*

***9477. மழு, எழுத் தண்டு, கோல், வலயம், நாஞ்சில், வாள்,***
***எழு, அயில், குந்தம், வேல், ஈட்டி, தோமரம்,***
***கழு, இகல் கப்பணம் முதல கைப் படை,***
***தொழுவினில் புலி அனான் உடலில் தூவினார்.***

**மழு... கப்பணம் முதல** - *மழு, எழுந்து மோதுகின்ற கதாயுதம், அம்பு, வலயம், கலப்பை, வாள், கணையம், கூர்மையான குந்தம், வேல், ஈட்டி, தோமரம், கழு, வலிய கப்பணம் முதலாகிய;* **கைப்படை** - *கையில் ஏந்திச் செலுத்தும் படைக்கலங்களை;* **தொழுவினில் புலி அ(ன்)னான் உடலில்** - *தொழுவத்தில் உள்ளே இருக்கும் புலி போன்றவனாகிய இராமன் உடல்மீது;* **தூவினார்** - *(அரக்கர்கள்) வீசினார்கள்.*

*இராமன் காந்தருப்பக் கணை ஏவல்*

***9478. காந்தருப்பம் எனும் கடவுள் மாப் படை,***
***வேந்தருக்கு அரசனும், வில்லின் ஊக்கினான்,***
***பாந்தளுக்கு அரசு என, பறவைக்கு ஏறு என,***
***போந்து உருத்தது, நெருப்பு அனைய போர்க் கணை.***

**வேந்தருக்கு அரசனும்** - *(அரக்கர்கள் படைக்கலங்களை வீச) அரசனுக்கு அரசனான இராமனும்;* **காந்தருப்பம் எனும் கடவுள் மாப் படை** - *காந்தர்ப்பம் என்னும் பெயருடைய தெய்வீகம் பொருந்திய பெருமை மிக்க படைக்கலத்தை;* **ஊக்கினான்** - *விரைந்து செலுத்தினான்;* **நெருப்பு அனைய போர்க் கணை** -

*நெருப்பினைப் போன்ற அந்தப் போர் அம்பு;* ***பாந்தளுக்கு அரசு என*** *- பாம்புகளுக்குத் தலைவனான ஆதிசேடனைப் போலவும்;* ***பறவைக்கு அரசு என*** *- பறவைகளுக்கு அரசனான கருடனைப் போலவும்;* ***போந்து உருத்தது*** *- சென்று அச்சத்தை ஊட்டியது.*

*உரு என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த வினைமுற்று உருத்தது என்னும் சொல். (உரு உட்கு ஆகும். தொல். சொல். உரி. 4)*

***9479. மூன்று கண் அமைந்தன, ஐம் முகத்தன,***
***ஆன்ற மெய் தழலன, புனலும் ஆடின,***
***வான் தொட நிமிர்வன வாளி மா மழை***
***தோன்றின, புரம் சுடும் ஒருவன் தோற்றத்த.***

***புரம் சுடும் ஒருவன் தோற்றத்த*** *- முப்புரங்களை எரித்த சிவபிரானின் தோற்றம் கொண்டனவாய்;* ***மூன்று கண் அமைந்தன*** *- மூன்று கண் (முனை) பொருந்தியனவாகவும்;* ***ஐம் முகத்தன*** *- ஐந்து முகம் (முனை) பொருந்தியனவாகவும்;* ***ஆன்ற மெய் தழலன*** *- நிறைந்த தழல் உருவம் பொருந்தியனவாகவும்;* ***புனலும் ஆடின*** *- நீரில் தோய்ந்தனவாகவும்;* ***வான் தொட நிமிர்வன*** *- வானத்தைத் தொடுமளவுக்கு மேல் நோக்கி எழுவனவுமாக;* ***வாளி மா மழை தோன்றின*** *- அம்பின் பெருமழைகள் தோன்றின. காந்தருப்பக் கணை பல்வகை அம்புகளைப் பொழியும் தன்மை கொண்டது என்பது இப்பாடலால் பெறப்படும் செய்தி. இக்கணைக்கு நாரணன் தொடர்பு உண்டென்ற குறிப்பினை முன் பாடலும், சிவபிரான் தொடர்பு உண்டென்ற குறிப்பினை இப்பாடலும் தருகின்றன. தீயோர் இறந்து உகும் காலத்தில் தெய்வ சக்திகளெல்லாம் இணைந்து எதிர் நிற்கும் என்பது கவிஞர் குறிப்பு என்பது நோக்கத் தக்கது. முக்கண், ஐம்முகம், தழல் மெய் (கங்கை) நீர் ஆடுதல் ஆகியன சிவனுக்கு உரியன. அகோரம், ஈசானம், சத்தியோசாதம், தத்புருஷம், வாமனம் என்பன சிவபிரான் ஐந்து முகங்களின் பெயர்கள்.*

## *அழிந்தது மூலப் படை*

***9480. அய் - இரு கோடியர் அரக்கர் வேந்தர்கள்***
***மொய் வலி வீரர்கள் ஒழிய முற்றுற***
***'எய்' எனும் மாத்திரத்து, அவிந்தது என்பரால் -***
***செய் தவத்து இராவணன் மூலச் சேனையே.***

***அய் இரு கோடியர் அரக்கர் வேந்தர்கள்*** *- பத்துக் கோடி அரக்க அரசர்களும்;* ***வலி மொய் வீரர்கள்*** *- வலிமை செறிந்த (அரக்க) வீரர்களும்;* ***முற்றுற ஒழிய*** *- முழுமையாக*

*அழிந்திட;* ***எய் எனும் மாத்திரத்து*** *- எய் என்று சொல்லும் (நொடி) அளவில்;* ***செய் தவத்து இராவணன்*** *- செய்து சிறந்த தவங்களையுடைய இராவணனது;* ***மூலச்சேனை அவிந்தது என்பர்*** *- மூல பலப் படை அழிந்துவிட்டது என்று சொல்வார்கள்.*

*'செய்தவம்' என்ற வினைத்தொகை மேன்மேல் தொடர்ந்து பயன் விளைக்கும் என்பதைக் குறிக்கும்.*

*மேலும் பல திசைகளிலிருந்து அரக்கர் படைகள்*

***9481. மாப் பெருந் தீவுகள் ஏழும், மாதிரம்***
***பாப்பு அரும் பாதலத்துள்ளும், பல் வகைக்***
***காப்பு அரு மலைகளும் பிறவும் காப்பவர்***
***யாப்புறு காதலர் இராவணற்கு அவர்.***

***மாப் பெரும் தீவுகள் ஏழும்*** *- மிகப் பெரிய ஏழு தீவுகளையும்;* ***மாதிரம்*** *- திசைகளையும்;* ***அரும் பாப்பு பாதலத்துள்ளும்*** *- அரிய பாம்புகள் வாழும் பாதாளத்தையும்;* ***காப்பு அரு பல்வகை மலைகளும்*** *- காவல் தொழிலால் அருமைப்பாடு உடைய பல்வகை மலைகளிலும்;* ***பிறவும்*** *- மற்றும் பிற இடங்களையும்;* ***காப்பவர்*** *- காவல் புரிவோராய்;* ***அவர்*** *- அவ்வாறு காக்கின்றவர்கள்;* ***இராவணற்கு யாப்பறு காதலர்*** *- இராவணனிடம் பிணைப்புற்ற அன்பினராவார்.*

*இலங்கையில் மட்டுமன்றி எல்லா இடங்களிலும் இராவணனிடம் அன்பு காட்டுவோர் இருந்தனர் என்பதை இப்பாடலில் வரும் பட்டியல் தெளிவுறுத்துகிறது. ஆம், அரக்கர் இலாத இடம் இல்லை!*

***9482. மாத் தட மேருவை வளைந்த வான் சுடர்***
***கோத்து அகல் மார்பிடை அணியும் கொள்கையார்,***
***பூத் தவிசு உகந்தவன் புகன்ற பொய் அறு***
***நாத் தழும்பு ஏறிய வரத்தர், நண்ணினார்.***

***மாத் தட மேருவை வளைந்த வான் சுடர்*** *- மிகப் பெரிய மேரு மலையைச் சுற்றி வருகின்ற வானத்துச் சுடர்களாகிய ஞாயிறு, திங்கள், ஆகியவற்றை;* ***கோத்து*** *- சரத்திலே கோத்து;* ***அகல் மார்பிடை*** *- தங்களுடைய அகலமான மார்பிலே;* ***அணியும் கொள்கையர்*** *- அணிந்து கொள்ள வேண்டுமென்ற கொள்கையுடையவர்கள்;* ***பூத் தவிசு உகந்தவன்*** *- மலராசனத்தை விரும்பும் பிரமன்;*

***புகன்ற*** - *சொல்லி அருளிய; பொய் அறு - பொய்ம்மையற்றதும்;* ***நாத்தழும்பு ஏறிய*** - *சொல்லிச் சொல்லி உரம் ஏறியதுமான;* ***வரத்தர்*** - *வரம் பெற்றவர்கள்; (ஆகிய இவர்களெல்லாம்)* ***நண்ணினார்*** - *(இராவணன் விரும்பியபடி) வந்து சேர்ந்தனர்.*

***9483. 'நம்முள் ஈண்டு ஒருவனை வெல்லும் நன்கு எனின்,***
***வெம் முனை, இராவணன்தனையும் வெல்லுமால்;***
***இம்மென உடன் எடுத்து எழுந்து சேறுமோ?***
***செம்மையில் தனித் தனி செய்துமோ செரு?***

***ஈண்டு*** - *இப்போர்க்களத்திலே;* ***நம்முள் ஒருவனை*** - *நமக்குள் ஒருவனை;* ***நன்கு வெல்லும் எனின்*** - *நல்ல முறையிலே இராமன் வெற்றி கொள்வானாயின்;* ***வெம் முனை*** - *கொடிய போர் முனையிலே;* ***இராவணன் தனையும்*** - *இராவணனையும் வென்றிடுவான்;* ***இம்மென*** - *உடனே;* ***எடுத்து எழுந்து உடன் சேறுமோ*** - *கிளர்ந்தெழுந்து ஒன்றாக இணைந்து செல்வோமா?* ***தனித்தனி*** - *(அவ்வாறு இல்லாமல்) தனித்தனியாக;* ***செம்மையில் செருச் செய்துமோ*** - *செம்மையாகப் போர் செய்வோமா? (என வன்னி என்ற தலைவனைக் கேட்டனர்).*

***(சந்தக் கலித்துறை)***

*வன்னி சொன்னதை அனைவரும் ஏற்றல்*

***9484. 'எல்லோம் எல்லோம் ஒன்றி வளைந்து, இந்***
***நெடியோனை***
***வல்லே வல்லே போர் வலி முற்றி மலையோமேல்,***
***வெல்லோம் வெல்லோம்!' என்றனன், வன்னி;***
***மிடலோரும்,***
***'தொல்லோன் சொல்லே நன்று' என, அஃதே***
***துணிவுற்றார்.***

***'எல்லோம் எல்லோம்'*** - *நாம் எல்லோரும் எல்லோரும்;* ***ஒன்றி வளைந்து*** - *ஒன்றாகச் சூழ்ந்து கொண்டு; இந்நெடியோனை - நெடியவனாகிய இவனை;* ***வல்லே*** - *விரைவிலே;* ***வல்ல போர் வலி முற்றி*** - *திறமை கொண்ட போர் வலிமையாலே சூழ்ந்துகொண்டு;* ***மலையோமேல்*** - *போர் செய்யாவிட்டால்;* ***வெல்லோம் வெல்லோம்*** - *வெல்ல மாட்டோம் வெல்ல மாட்டோம்;* ***என்றனன் வன்னி*** - *என்று வன்னி கூறினான்;* ***மிடலோரும்*** - *வலிமை கொண்ட மற்ற வீரர்களும்;* ***தொல்லோன் சொல்லே நன்று என*** - *பழமையான வீரனாகிய வன்னி சொல்லியதே நல்லது என்று;* ***அஃதே து ணிவுற்றார்*** - *அவன் சொன்னபடியே செய்யத் துணிந்தனர்.*

*9485. அன்னார்தாமும், ஆர்கலி ஏழும் என, ஆர்த்தார்,*
*'மின் ஆர் வானம் இற்று உறும்' என்றே, விளி*
*சங்கம்*
*கொன்னே ஊதி, தோள் புடை கொட்டிக்கொடு*
*சார்ந்தார்;*
*எம் ஆம் வையம்? என்படும் வானம்? திசை*
*ஏதாம்?*

***அன்னார் தாமும்*** *- அங்ஙனம் துணிந்த அந்த அரக்கர்களும்;* ***ஆர்கலி ஏழும் என ஆர்த்தார்*** *- கடல்கள் ஏழும் ஒன்றாக முழங்கியது என்னும்படி ஆரவாரித்தனர் ;* ***'மின் ஆர் வானம் இற்று உறும்' என்றே*** *- மின்னல் பொருந்திய வானம் இற்று (நிலத்தை) அடையும் என்று சொல்லுமாறு;* ***விளி சங்கம்*** *- ஒலிக்கின்ற சங்குகளை;* ***கொன்னே ஊதி*** *- அச்சம் தோன்றுமாறு ஊதி;* ***தோள் புடை கொட்டிக்கொடு*** *- தோள்களைப் பக்கமாகக் கொட்டிக்கொண்டு;* ***சார்ந்தார்*** *- போர் செய்ய வந்து சேர்ந்தனர்;* ***வையம் என் ஆம்*** *- நிலவுலகம் என்ன ஆகுமோ;* ***என் படும் வானம்*** *- வானுலகம் என்ன பாடு படப்போகிறதோ;* ***திசை ஏதாம்*** *- (நிலை பெற்றுள்ள) திசைகள்தான் என்ன ஆகுமோ?*

*9486. ஆர்த்தார் அன்னார்; அன்ன கணத்தே, அவர்*
*ஆற்றல்*
*தீர்த்தானும் தன் வெஞ் சிலை நாணைத்*
*தெறிப்புற்றான்;*
*பேர்த்தான் பொன் - தோள்; முற்றும் அளந்தான் பிறழ்*
*சங்கம்*
*ஆர்த்தால் ஒத்தது, அவ் ஒலி, எல்லா உலகுக்கும்.*

***அன்னார்*** *- அந்த அரக்கர்கள்; ஆர்த்தார் - ஆரவாரம் செய்தார்கள்;* ***அன்ன கணத்தே*** *- அந்தக் கணத்திலேயே;* ***அவர் ஆற்றல் தீர்த்தானும்*** *- அவர்களின் ஆற்றலை அழித்தவனாகிய இராமனும்;* ***தன் வெஞ்சிலை நாணைத் தெறிப்புற்றான்*** *- தன்னுடைய கொடிய வில்லின் நாணைத் தெறித்தான்;* ***அவ் ஒலி*** *- அப்போது எழுந்த ஒலியானது;* ***பொன் தாள் பேர்த்தான்*** *- தன் பொற்கால்களைப் பெயர்த்தவனாய்;* ***முற்றும் அளந்தான்*** *- எல்லா உலகங்களையும் அளந்தவனாகிய திருமால் (கரத்தில் ஏந்தும்);* ***பிறழ் சங்கம்*** *- விளங்குகின்ற சங்கு;* ***ஆர்த்தால் ஒத்தது*** *- ஆரவாரித்ததைப் போன்றிருந்தது.*

*கலி விருத்தம் (வேறு)*

***9487. பல் ஆயிர கோடியர்; பல் படை நூல்***
***வல்லார்; அவர் மெய்ம்மை வழங்க வலார்;***
***எல்லா உலகங்களும் ஏறிய போர்***
***வில்லாளர்; அரக்கரின் மேதகையார்.***

***அரக்கரில் மேதகையார்*** *- அரக்கரிலே மேம்பட்டவராகிய அவர்கள்;* ***பல் ஆயிர கோடியர்*** *- பல ஆயிரம் கோடிப் பேர்;* ***பல் படை நூல் வல்லார்*** *- பலவாகிய படைக்கலக் கலையில் வல்லவர்கள்;* ***அவர் மெய்ம்மை வழங்க வ(ல்)லார்*** *- அவர்கள் செம்மையான முறையில் (படைக்கலங்களைச்) செலுத்த வல்லவர்கள்;* ***எல்லா உலகங்களும் ஏறிய போர் வில்லாளர்*** *- அனைத்து உலகங்களிலும் சிறப்பால் ஓங்கிய போரில் வில்லை ஆளும் திறம் உடையவர்கள்.*

***9488. வென்றார், உலகங்களை, விண்ணவரோடு***
***ஒன்றா உயர் தானவர் யூகம் எலாம்;***
***கொன்றார் நிமிர் கூற்று என, எவ் உயிரும்***
***தின்றார்;- எதிர் சென்று, செறிந்தனரால்.***

***உலகங்களை*** *- உலகங்களோடு;* ***விண்ணவரோடு ஒன்றா உயர் தானவர் யூகம் எலாம்*** *- தேவர்களோடு இசைந்து வாழாமல் உயர்ந்த தானவர்களின் சேனை அணிகளையெல்லாம்;* ***வென்றார்*** *- வென்றார்கள்;* ***நிமிர் கூற்று என*** *- (தோல்வி அறியாமல்) ஓங்கி நிற்கும் கூற்றுவனைப் போல;* ***எவ் உயிரும் தின்றார்*** *- எல்லா உயிர்களையும் தின்றவராய்;* ***எதிர் சென்று செறிந்தனர்*** *- எதிராகச் சென்று குழுமினார்கள்.*

*தானவர் - அரக்கரில் ஓர் இனம்.*

***9489. வளைத்தார் மத யானையை, வன் தொழுவில்***
***தளைத்தார் என வந்து, தனித் தனியே***
***உளைத்தார் உரும்ஏறு என; ஒன்று அல போர்***
***விளைத்தார்; இமையோர்கள் வெதும்பினரால்.***

***மத யானையை வளைத்தார்*** *- மதங்கொண்ட யானைகளை வளைத்தவர்களாய்;* ***வன் தொழுவில் தளைத்தார் என வந்து*** *- வலிய தொழுவத்திலே கட்டி வைத்தவர் போல வந்து;* ***தனித்தனியே உறும் ஏறு என உளைத்தார்*** *- தனித்தனியாகப் பேரிடி*

*போல ஆரவாரித்தனர்;* ***ஒன்று அல பல போர் விளைத்தார்*** *- ஒரு வகைப்பட்டதாக அல்லாமல் பல வகையான போர்களைச் செய்தார்கள்;* ***இமையோர்கள் வெதும்பினர்*** *- தேவர்கள் (அதுகண்டு) வெதும்பினார்கள்.*

***9490. விட்டிய வழங்கிய வெம் படையின்***
***சுட்டிய நிமிர்ந்த சுடர்ச் சுடரும்***
***கண் தீயும், ஒருங்கு கலந்து எழலால்,***
***உள் தீ உற வெந்தன, ஏழ் உலகும்.***

***விட்டிய*** *- (பகைவர்கள் களத்தை) விட்டோடுமாறு;* ***வழங்கிய வெம்படையின்*** *- செலுத்தப்பட்ட கொடிய படைக்கலங்கள்;* ***சுட்டிய*** *- சுடும்படியாக;* ***நிமிர்ந்த சுடர்ச் சுடரும்*** *- ஓங்கி வளர்ந்த சுடருடைய நெருப்பும்;* ***கண் தீயும்*** *- (கோபத்தால்) கண்ணிலிருந்து தோன்றும் கோபத்தீயும்;* ***ஒருங்கு கலந்து எழலால்*** *- ஒன்றாகச் சேர்ந்து மேல் எழுவதனால்;* ***ஏழ் உலகும்*** *- ஏழு உலகங்களும்;* ***தீ உள் உற வெந்தன*** *- நெருப்பு உள்புகுந்து மிகுவதால் வெந்தன.*

***9491. தேர் ஆர்ப்பு ஒலி, வீரர் தெழிப்பு ஒலியும்,***
***தார் ஆர்ப்பு ஒலியும், கழல் தாக்கு ஒலியும்,***
***போர் ஆர் சிலை நாணி புடைப்பு ஒலியும்,***
***காரால் பொலியும் களிறு ஆர்ப்பு ஒலியும்.***

***தேர் ஆர்ப்பு ஒலி*** *- (ஓடும்) தேர்களின் ஆரவாரமான ஒலியும்;* ***வீரர் தெழிப்பு ஒலியும்*** *- போர் வீரர்கள் அதட்டுகின்ற ஒலியும்;* ***தார் ஆர்ப்பு ஒலியும்*** *- கிண்கிணி மாலைகளின் ஆரவார ஒலியும்;* ***கழல் தாக்கு ஒலியும்*** *- வீரக் கழல்கள் மோதுதலால் எழுகின்ற ஒலியும்;* ***போர் ஆர் சிலை நாணி புடைப்பு ஒலியும்*** *- போருக்கெனப் பொருந்திய வில்லின் நாணினைத் தெறித்தலால் எழுகின்ற ஒலியும்;* ***காரால் பொலியும்*** *- கருநிறத்தோடு அழகாக விளங்குகின்ற;* ***களிறு ஆர்ப்பு ஒலியும்*** *- யானைகளின் ஆரவார ஒலியும் (போர்க்களத்திலே கலந்து ஒலித்தன;)*

### *இராமபிரான் கணையால் அரக்கர் சேனை அழிதல்*

***9492. 'எல்லாரும் இராவணனே அனையார்;***
***வெல்லா உலகு இல்லவர்; மெய் வலியார்;***
***தொல்லார் படை வந்து தொடர்ந்தது' எனா,***
***நல்லானும் உருத்து, எதிர் நண்ணினனால்.***

***எல்லாரும் இராவணனே அனையார்*** - *எதிரே தோன்றும் எல்லோருமே (தனித்தனியாக) இராவணனை நிகர்த்தவர்கள்;* ***வெல்லா உலகு இல்லவர்*** - *வெற்றி கொள்ளாத உலகம் என எதுவும் இல்லாதவர்கள் (அதாவது எல்லா உலகங்களையும் வென்றவர்கள்);* ***மெய் வலியார்*** - *உடல் வலிமை கொண்டவர்கள்;* ***எனா*** - *என்று எண்ணி;* ***எதிர் நண்ணினன்*** - *அரக்கருக்கு எதிராக (இராமன்) நெருங்கினான்.*

***9493. ஊழிக் கனல் போல்பவர் உந்தின போர்***
***ஆழிப் படை அம்பொடும் அற்று அகல,***
***பாழிக் கடை நாள் விடு பல் மழை போல்***
***வாழிச் சுடர் வாளி வழங்கினனால்.***

***ஊழிக்கனல் போல்பவர்*** - *உலக அழிவுக்குரிய பிரளய காலத்து நெருப்பைப் போன்றவராகிய அரக்கர்கள்;* ***உந்தின*** - *செலுத்திய;* ***ஆழிப்படை அம்பொடும் அற்று அகல*** - *சக்கராயுதமும் அம்பும் சிதைந்து ஒழியும்படி;* ***கடைநாள் விடு பல் மழை போல்*** - *யுகாந்தத்தில் (உலக இறுதிநாளில்) பெய்யும் பெருமழை போல;* ***பாழி*** - *வலிமைமிக்க; சுடர் வாளி - ஒளி பொருந்திய அம்புகளை;* ***வழங்கினன்*** - *இராமபிரான் எய்தான்.*

*வாழி, ஆல் - அசைகள்.*

***9494. சூரோடு தொடர்ந்த சுடர்க் கணைதான்***
***தாரோடு அகலங்கள் தடிந்திடலும்***
***தேரோடு மடிந்தனர், செங் கதிரோன்***
***ஊரோடு மறிந்தனன் ஒத்து, உரவோர்.***

***சூரோடு தொடர்ந்த*** - *கொடுமையைப் பரப்பிக்கொண்டு வந்த;* ***சுடர்க் கணை*** - *ஒளி கொண்ட (இராம) பாணங்கள்;* ***தாரோடு அகலங்கள் தடிந்திடலும்*** - *மலைகளோடு அவற்றை அணிந்த மார்புகளை அறுத்திடலும்;* ***செங்கதிரோன்*** - *சூரியன்;* ***ஊரோடு மறிந்தனன் ஒத்து*** - *தன்னைச் சூழ்ந்த ஊர்கோளோடு விழுந்தவனைப் போல;* ***உரவோர்*** - *வலிய அரக்கர்கள்;* ***தேரோடு மடிந்தனர்*** - *தாங்கள் ஏறி வந்த தேரோடு மடிந்தார்கள்.*

***9495. கொல்லோடு சுடர்க் கணை கூற்றின் நிணப்***
***பல்லோடு தொடர்ந்தன பாய்தலினால்,***

***செல்லோடு எழு மா முகில் சிந்தினபோல்,***
***வில்லோடும் விழுந்த, மிடல் கரமே.***

***கொல்லோடு சுடர்க்கணை*** - *கொல்லுதல் தொழிலோடு கூடிய ஒளிமிக்க அம்புகள்;* ***கூற்றின்*** - *யமனுடைய;* ***நிணப் பல்லோடு*** - *கொழுப்புத் தசை படிந்த பல்லோடு;* ***தொடர்ந்தன பாய்தலினால்*** - *தொடர்ந்து பாய்வதால்;* ***மிடல் கரம்*** - *அரக்கரின் வலிமை வாய்ந்த கைகள்;* ***செல்லோடு எழு*** - *இடி மின்னலோடு எழுகின்ற;* ***மாமுகில்*** - *பெரிய மேகங்கள்;* ***சிந்தின போல்*** - *சிந்தியதைப் போல;* ***வில்லோடும் விழுந்த*** - *பிடித்திருந்த வில்லோடு விழுந்தன.*

*செல் - (இங்கே) மின்னல்.*

***9496. செம்போடு உதிரத் திரை ஆழியின்வாய் -***
***வெம்பு ஓடு அரவக் குலம் மேல் நிமிரும்***
***கொம்போடும் விழுந்தன ஒத்த - குறைந்து,***
***அம்போடும் விழுந்த அடல் கரமே.***

***குறைந்து அம்போடும் விழுந்த*** - *துணிக்கப்பட்டு அம்போடு விழுந்த;* ***அடல் கரம்*** - *வலிய கைகள்;* ***செம்போடு உதிரத் திரை ஆழியின் வாய்*** - *சிவந்த நிறத்தோடு குருதியாகிய அலை கடலிலே;* ***மேல் நிமிரும்*** - *மேல் நோக்கி வளர்கின்ற;* ***கொம்போடும் விழுந்தன*** - *மரக்கிளைகளோடு விழுகின்றனவாகிய;* ***வெம்பு ஓடு அரவக்குலம் ஒத்த*** - *சினங்கொண்டு ஓடும் பாம்புக் கூட்டங்களை ஒத்தன.*

***9497. முன் ஓடு உதிரப் புனல், மூதுலகைப்***
***பின் ஓடி வளைந்த பெருங் கடல்வாய்***
***மின்னோடும் விழுந்தன மேகம் என,***
***பொன் ஓடை நெடுங் கரி புக்கனவால்.***

***மூதுலகைப் பின் ஓடி வளைந்த பெருங் கடல்வாய்*** - *பழமையான உலகத்தைச் சூழ்ந்து வளைத்துக்கொண்ட கடலிலே;* ***மின்னோடும்*** - *மின்னலோடும்;* ***விழுந்தன மேகம் என*** - *விழுந்தனவாகிய மேகம் போல;* ***முன் ஓடும் உதிரப் புனல்*** - *முற்பட்டுப் பாய்கின்ற குருதி வெள்ளத்திலே;* ***பொன் ஓடை நெடுங் கரி புக்கன*** - *பொன்மயமான நெற்றிப்பட்டம் சூட்டப்பெற்ற பெரிய யானைகள் புகுந்தன.*

*ஆல் : அசை.*

***9498. மற வெற்றி அரக்கர் வலக் கையொடும்***
***நறவக் குருதிக் கடல் வீழ் நகை வாள்***

***சுறவு ஒத்தன; மீது துடித்து எழலால்***
***இறவு ஒத்தன, வாவும் இனப் பரியே.***

***மற வெற்றி அரக்கர்*** - வீர வெற்றி (பெற்றுவந்த) அரக்கரின்; ***வலக்கையொடும்*** - வலப்புறக் கையோடு; ***நறவக் குருதிக் கடல்*** - மணம் கொண்ட இரத்தக் கடலிலே; ***வீழ்*** - வீழ்கின்ற; ***நகை வாள்*** - ஒளியுடன் கூடிய வாள்கள்; ***சுறவு ஒத்தன*** - சுறா மீன்களைப் போன்றிருந்தன; ***வாவும் இனப் பரி*** - தாவிச் செல்லும், கூட்டமான குதிரைகள்; ***மீது துடித்து எழலால்*** - மேலே துடித்து எழுவதால்; ***இறவு ஒத்தன*** - இறால் மீன்களைப் போல் இருந்தன.

***9499. தாமச் சுடர் வாளி தடிந்து அகல,***
***பாமக் குருதிப் படிகின்ற படைச்***
***சேமப் படு கேடகம், மால் கடல் சேர்***
***ஆமைக் குலம் ஒத்தன அத்தனையால்!***

***தாமச்சுடர் வாளி*** - பேரொளி வீசும் அம்புகளால்; ***தடிந்து அகல*** - துணிபட்டு விழுவதால்; ***பாமக் குருதி படிகின்ற*** - பரவிய குருதியில் படிகின்ற; ***படைச் சேமப் படர் கேடகம்*** - படையைப் பாதுகாத்திடும் வீரர்கள் அணிந்த கேடயங்கள்; ***மால் கடல் சேர்*** - பெரிய கடலைச் சேர்ந்த; ***ஆமைக்குலம் அத்தனை ஒத்தன*** - ஆமைக் கூட்டம் எத்தனை உண்டோ அத்தனையையும் ஒத்தன.

***9500. காம்போடு பதாகைகள் கார், உதிரப்***
***பாம்போடு கடல் படிவுற்றனவால் -***
***வாம் போர் நெடு வாடை மலைந்து அகல,***
***கூம்போடு உயர் பாய்கள் குறைந்தனபோல்.***

***வாம் போர் நெடு வாடை மலைந்து*** - தாவும் போரிலே நெடிய வாடையால் தாக்கப்பட்ட; ***கலம்*** - மரக்கலம்; ***கூம்போடு உயர் பாய்கள்*** - கூம்பு என்னும் மரத்திலே கட்டப்பட்ட பாய்கள்; ***குறைந்தன போல்*** - சிதைவுற்றனபோல்; ***காம்போடு பதாகைகள் கார்*** - காம்போடு கொடிகள் சுமந்த முகில் போன்ற யானைகள்;
***உதிரப் பாம்போடு கடல்*** - இரத்தமாகிய பரவியோடும் கடலிலே; ***படிவுற்றன*** - படிந்தன.

***9501. மண்டப் படு சோரியின் வாரியின் வீழ்***
***கண்டத் தொகை கவ்விய காலொடு தோள்***

***முண்டத் திரி தண்டின் முரட்டு ஒருவன்***
***துண்டச் சுறவு ஒத்த, துடித்தனவால்.***

***மண்டப்படு சோரியின் வாரியின்*** - *பெருகி வருகின்ற குருதி வெள்ளத்திலே;* ***வீழ்*** - *துண்டிக்கப்பட்டு விழுந்துவிட்ட;* ***கண்டத் தொகை கவ்விய காலொடு தோள்*** - *சதைத்துண்டுகள் மிகுந்தனவாய்க் கவ்வப்பட்ட கால்களும் தோள்களும்;* ***முண்ட(க)த் திரி தண்டின்*** - *தாமரையின் திரிக்கப்பட்ட தண்டினைப் போல;* ***முரட்டு ஒருவன் துண்டச்சுறவு*** - *முரடான ஒரு வலிய சதைப் பிண்டமாகவுள்ள சுறாமீன்களை;* ***ஒத்தன*** - *ஒப்புடையனவாகி; துடித்தன-.*

***9502. தெளிவுற்ற பளிங்கு உறு சில்லிகொள் தேர்***
***விளிவுற்றுக, வேறுற வீழ்வனதாம்,***
***அளி முற்றிய சோரியின் வாரியின் ஆழ்***
***ஒளி முற்றிய திங்களை ஒத்துளவால்.***

***தெளிவுற்ற பளிங்கு உறு சில்லி கொள் தேர்*** - *ஒளித் தெளிவு கொண்ட பளிங்கு போன்ற சக்கரங்களைக் கொண்ட தேர்கள்;* ***விளிவுற்று உக*** - *அழிந்து சிதறுவதால்;* ***வேறு உற வீழ்வனதாம்*** - *தனித்தனியே விழுகின்ற அந்தச் சக்கரங்கள்;* ***அளி முற்றிய*** - *அம்புகள் நிரம்பிக் காணப்படுகின்ற;* ***சோரியின் வாரியின்*** - *குருதிக் கடலிலே;* ***ஆழ்*** - *அமிழ்கின்ற;* ***ஒளி முற்றிய திங்களை ஒத்தன*** - *ஒளி நிறைவுற்ற சந்திரனைப் போல் காணப்பட்டன.*

***9503. நிலை கோடல் இல் வென்றி அரக்கரை நேர்***
***கொலை கோடலின், மன் குறி கோளுறுமேல்***
***சிலை கோடியதோறும் சிரத் திரள் வன்***
***மலை கோடியின் மேலும் மறிந்திடுமால்.****

***நிலை கோடல் இல் வென்றி*** - *நிலைகொள்ளுதல் இல்லாத வெற்றியை உடைய;* ***அரக்கரை*** - *அரக்கர்களை;* ***நேர் கொலை கோடலின்*** - *நேராக எதிர்த்துக் கொலை செய்வதில்;* ***மன்*** - *தலைவனாகிய இராமன்;* ***குறிகோள் உறுமேல்*** - *குறிக்கொள்வானாதலின்;* ***சிலை கோடியதோறும்*** - *இராமனின் வில் வளையும் போதெல்லாம்;* ***சிரத்திரள் வன் மலை*** - *அரக்கர் தலைகளின் கூட்டமாகிய மலைத் திரள்;* ***கோடியின் மேலும் மறிந்திடும்*** - *கோடிக்குமேல் விழும்.*

***9504. திண் மார்பின்மிசைச் செறி சாலிகையின் -***

***கண், வாளி கடைச் சிறை காண நுழைந்து,***
***எண் வாய் உற மொய்த்தன, இன் நறை உற்று***
***உண் வாய் வரி வண்டுஇனம் ஒத்தனவால்.***

***திண் மார்பின் மிசை*** - *திண்ணிய மார்பின்மீது;* *செறி* - *செறிந்துள்ள;* ***சாலிகையின் கண்*** - *கவசத்திலே;* ***வாளி*** - *அம்பினது;* ***கடைச் சிறை*** - *இறுதிப் பகுதியாகிய சிறகுகள்;* ***காண நுழைந்து*** - *(தைத்தபிறகும் வெளியே) காணும்படியாக உட்புகுந்து;* ***எண் வாய் அற மொய்த்தன*** - *(காலி இடம் உண்டா என) எண்ணுதற்கு இடம் அற்றுப் போகும்படியாக மொய்த்தவை;* ***இன் நறை உற்று*** - *இனிய தேனடையினை அடைந்து;* ***உண் வாய்*** - *அதனை உண்ணும் வாயினை உடைய;* ***வரி வண்டினம் ஒத்தன*** - *அழகிய வண்டுகளின் கூட்டத்தைப் போன்று இருந்தன.*

### *திசைப்பூட்டும் வகையில் இராமன் சாரி திரிதல்*

***9505. பாறு ஆடு களத்து, ஒருவன், பகலின்***
***கூறு ஆகிய நாலில் ஓர் கூறிடையே***
***நூறு ஆயின யோசனை, நூழில்களம்***
***மாறாது உழல் சாரிகை வந்தனனால்.***

***பாறு ஆடு களத்து*** - *பருந்துகள் பறக்கின்ற போர்க்களத்தில்;* ***பகலின் கூறு ஆகிய நாலில் ஓர் கூறிடையே*** - *பகற் பொழுதின் நான்கில் ஒரு பங்காகிய காலப் பகுதியிலே;* ***நூறு ஆகிய யோசனை*** - *நூறு யோசனைப் பரப்பினதாக இருந்த;* ***நூழில் களம்*** - *பகைவரைக் கொன்று குவிப்பதற்கு உரிய களத்திடையே;* ***ஒருவன்*** - *தனி ஒருவனாகிய இராமபிரான்;* ***மாறாது*** - *பிறழ்ச்சி இல்லாமல்;* ***உழல் சாரிகை வந்தனன்*** - *சுழலும் சாரிகை திரிந்தான்.*

***9506. நின்றாருடன் நின்று, நிமிர்ந்து அயலே***
***சென்றார் எதிர் சென்று, சிதைத்திடலால்,***
***'தன் தாதையை ஓர்வு உறு தன் மகன் நேர்***
***கொன்றான் அவனே இவன்' என்று கொள்வார்.***

***நின்றாருடன் நின்று*** - *தன்னை எதிர்த்து நின்றவர்களுடன் எதிர்த்து நின்றும்;* ***நிமிர்ந்து*** - *மேலோங்கி;* ***அயலே சென்றார் எதிர் சென்று*** - *பக்கத்தே சென்றார்க்கும் எதிரே சென்றும்;* ***சிதைத்திடலால்*** - *கொல்லுவதால்;* ***ஓர்வு உறு தன் மகன் நேர்*** - *ஞானத்தால் உணர்வுறுகின்ற தன் மகனுக்கு முன்பாகவே;* ***தன் தாதையைக் கொன்றான் அவனே இவன்*** - *தன் தந்தையைக் கொன்றவனாகிய அந்த நரசிங்கனே இவன்;* ***என்று கொள்வார்*** - *என அரக்கர்கள் இராமனைப் பற்றிக் கருதினார்கள்.*

***9507. 'இங்கே உளன்; இங்கு உளன்; இங்கு உளன்' என்று***

***அங்கே உணர்கின்ற அலந்தலைவாய்,***
***வெங் கோப நெடும் படை வெஞ் சரம் விட்டு***
***எங்கேனும் வழங்குவர், ஏகுவரால்.***

***இங்கே உளன் இங்கு உளன் இங்கு உளன் என்று*** - *(இராமபிரான் விரைவாகச் சாரி சுழன்று இலங்குவதால், அவன் எங்கும் இருப்பவனாய்த் தோற்றம் அளித்தான் அதனால் இராமன் இங்கே இருக்கிறான் இதோ இருக்கிறான், இங்குத்தான் இருக்கிறான் என்று);* ***அங்கே உணர்கின்ற அலந்தலைவாய்*** - *அங்கங்கே இருப்பவனாக உணர்கின்ற கலக்கத்தால்;* ***வெங் கோப நெடும்படை*** - *கொடிய கோபத்தால் பயன்படுத்துகின்ற நெடிய வில்லாகிய படைக்கலத்திலிருந்து;* ***வெஞ்சரம் விட்டு*** - *கொடிய அம்புகளை எய்து;* ***எங்கேனும் வழங்குவர்*** - *எந்தத் திசையிலும் வழங்கினராய்;* ***ஏகுவர்*** - *(அத்திசையிலே இராமனைத் தாக்க முடியாமல் வேறு பக்கம்) போவார்கள்.*

***9508. ஒருவன் என உன்னும் உணர்ச்சி இலார்,***
***'இரவு அன்று இது; ஓர் பகல்' என்பர்களால்;***
***'கரவு அன்று இது; இராமர் கணக்கு இலரால்;***
***பரவை மணலின் பலர்' என்பர்களால்.***

***இரவு அன்று இது*** - *(இது நிசாசரராகிய நமக்கு ஏற்ற) இரவு அன்று இது;* ***ஓர் பகல்*** - *பகல் நேரமாகும்;* ***என்பர்கள்*** - *என்று தமக்குள் சொல்லிக்கொள்வார்கள்;* ***ஒருவன் என உன்னும் உணர்ச்சி இலார்*** - *தங்கள் அனைவரையும் எதிர்த்துப் போர் செய்பவன் ஒருவன்தான் என்று கருதும் உணர்ச்சி அற்றவர்களாய்;* ***கரவு அன்று இது*** - *இது வஞ்சனைப் போர் அன்று;* ***இராமர் கணக்கு இலர்*** - *எத்தனை இராமர்கள் என்று அளவிட முடியாத அளவுக்கு இராமர்கள் பலராவர்;* ***பரவை மணலின் பலர் என்பார்கள்*** - *கடல் மணலை விட அதிகமானவர்கள் இராமர்கள் என்று சொல்லிக் கொள்வார்கள்.*

***9509. ஒருவன் ஒருவன் மலைபோல் உயர்வோன்;***
***ஒருவன் படை வெள்ளம் ஓர் ஆயிரமே;***
***ஒருவன் ஒருவன் உயிர் உண்டது அலால்,***
***ஒருவன் உயிர் உண்டதும் உள்ளதுவோ?****

***ஒருவன் ஒருவன் மலைபோல் உயர்வோன்*** - *அரக்கர் சேனையில் உள்ள ஒவ்வொருவனும் மலைபோலப் பெரிய உருவம் உடையவன்;* ***ஒருவன் படை ஒப்பற்ற ஒருவனாகிய இராவணன் கொண்ட படையோ வெள்ளம் ஓர் ஆயிரமே*** - *ஓர் ஆயிர வெள்ளமாகும்;* ***ஒருவன் ஒருவன் உயிர் உண்டது அலால்*** - *ஓர் அரக்கன் மற்றோர் அரக்கனின் உயிரை உண்டான் என்பதல்லாமல்;* ***ஒருவன் உயிர் உண்டதும் உள்ளதுவோ*** *- இராமனாகிய ஒருவன் உயிரை அவர் கொண்டனர் என உண்டா? (இல்லை)*

***9510. தேர்மேல் உளர்; மாவொடு செந் தறுகண்***
***கார்மேல் உளர்; மா கடல்மேல் உளர்; இப்***
***பார்மேல் உளர்; உம்பர் பரந்து உளரால் -***
***போர்மேலும் இராமர் புகுந்து அடர்வார்.***

***இராமர்... தேர்மேல் உளர்*** *- தேரின்மேல் இருக்கிறார்;* ***மாவொடு*** *- குதிரையோடு;* ***செந்தறு கண் கார்மேல் உளர்*** *- செந்நிறங்கொண்டு அழிக்கின்ற கண்ணினையுடைய கரிய மேகமனைய யானைமேல் இருக்கிறார்;* ***மா கடல்மேல் உளர்*** *- பெரிய கடல்மேல் இருக்கிறார்;* ***இப் பார் மேல் உளர்*** *- இந்த நிலத்தின்மேல் இருக்கிறார்;* ***உம்பர் பரந்து உளர்*** *- வானத்தில் பரவி இருக்கிறார்;* ***போர்மேலும் புகுந்து*** *- (இத்தனை இடத்தில் இருப்பதோடு) இந்தப் போரிலும் நுழைந்து தாக்குவார்; (தொடரும்)*

***9511. என்னும்படி, எங்கணும் எங்கணுமாய்த்***
***துன்னும்; சுழலும்; திரியும்; சுடரும்;***
***பின்னும், அருகும், உடலும், பிரியான் -***
***மன்னன் மகன்! வீரர் மயங்கினரால்.***

***என்னும்படி*** *- என்று சொல்லும்படியாக;* ***மன்னன் மகன்*** *- தசரதன் மகனாகிய இராமன்;* ***எங்கணும் எங்கணுமாய்*** *- எங்கெங்குமாகி;* ***துன்னும்*** *- நெருங்குவான்;* ***சுழலும்*** *- சுற்றுவான்;* ***திரியும்*** *- அலைவான்;* ***சுடரும்*** *- ஒளிர்வான்;* ***பின்னும்*** *- பின்புறத்திலும்;* ***அருகும்*** *- பக்கத்திலும்;* ***உடலும்*** *- உடலிலும்;* ***பிரியான்*** *- பொருதலை விட்டுப் பிரியான்;* ***வீரர் மயங்கினார்*** *- (இந்த நிலை கண்டு) அரக்க வீரர் கலங்கினர்.*

**அறுசீர்ச்சந்த விருத்தம்**

*இராமன் வில் திறம்*

***9512. படு மத கரி, பரி, சிந்தின; பனி வரை இரதம்***
***அவிந்தன;***
***விடு படை திசைகள் பிளந்தன; விரி கடல் அளறது***
***எழுந்தன;***
***அடு புலி அவுணர்தம் மங்கையர் அலர் விழி***

***அருவிகள் சிந்தின;-***
***கடுமணி நெடியவன் வெஞ்சிலை, 'கணகண,***
***கணகண' எனும்தொறும்.***

***நெடியவன் வெஞ்சிலை*** *- இராமபிரான் கொடிய வில்லில் உள்ள;* ***கடுமணி*** *- கடுமையான ஓசையை எழுப்பும் மணிகள்;* ***கண கண கண கண எனும்தொறும்*** *- கண கண கணகணவென்று ஓசை செய்யும்போதெல்லாம்;* ***மதம் படு கரி, பரி சிந்தின*** *- மதம் பொழியும் யானைகளும் குதிரைகளும் அழிந்தன;* ***பனி வரை இரதம் அவிந்தன*** *- பனி படியும் மலைபோல் உயர்ந்த தேர்கள் அழிந்தன;* ***விடு படை திசைகள் பிளந்தன*** *- இராமன் விடுக்கின்ற கணைகள் திசைகளைப் பிளந்தன;* ***விரி கடல் அளறு (அது) எழுந்தன*** *- அகன்ற கடலிலே சேறுகள் எழுந்தன;* ***அடுபுலி அவுணர்தம்*** *- கொல்லும் புலிபோல்வராகிய அரக்கர்களின்;* ***மங்கையர் அலர் விழி*** *- பெண்டிரின் மலர்ந்த விழிகளில்;* ***அருவிகள் சிந்தின*** *- கண்ணீர் அருவிகளைச் சிந்தின.*

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

***9513. ஆனை ஆயிரம், தேர் பதினாயிரம், அடல் பரி ஒரு***
***கோடி;***
***சேனை காவலர் ஆயிரம் பேர் படின், கவந்தம் ஒன்று***
***எழுந்தாடும்;***
***கானம் ஆயிரம் கவந்தம் நின்று ஆடிடின், கவின்***
***மணி கணில்என்னும்***
***ஏனை அம் மணி ஏழரை நாழிகை ஆடியது இனிது***
***அன்றே.****

***ஆனை ஆயிரம், தேர் பதினாயிரம், அடல் பரி ஒரு கோடி சேனை காவலர், ஆயிரம் பேர் படின்*** *- ஆயிரம் யானைகளும் பதினாயிரம் தேர்களும், கொலை வல்லனவாகிய ஒரு கோடி குதிரைகளும் ஆயிரம் சேனைத் தலைவர்களும் இறந்து விழுந்தால்;* ***கவந்தம் ஒன்று எழுந்து ஆடும்*** *- ஒரு கவந்தம் எழுந்து கூத்தாடும்;* ***கானம்*** *- சுடலையிலே;* ***ஆயிரம் கவந்தம் நின்று ஆடின்*** *- ஆயிரம் கவந்தங்கள் ஆடினால்;* ***கவின் மணி கணின் என்னும்*** *- (இராமன் வில்லில் கட்டிய) அழகிய மணி ஒரு தடவை கணின் என ஒலிக்கும்;* ***அன்று*** *- போர் நடந்த அந்த நாளில்;* ***ஏனை அம் மணி*** *- அந்த (வில்) மணி;* ***ஏழரை நாழிகை இனிது ஆடியது*** *- ஏழரை நாழிகை நேரம் ஆடியது (ஆடியபோதெல்லாம் மணி ஒலித்தது)*

*போர்க்களத்தில் தன் வில்லாற்றலால் அழித்த திறம் கூறப்பட்டது.*

*(வேறு)*

***9514. ஊன் ஏறு படைக் கை வீரர் எதிர் எதிர்***
***ஊரும்தோறும்***
***கூன் ஏறு சிலையும் தானும் குதிக்கின்ற கடுப்பின்***
***கொட்பால்***
***வான் ஏறினார்கள் தேரும், மலைகின்ற வயவர்***
***தேரும்***
***தான் ஏறி வந்த தேரே ஆக்கினான் - தனி ஏறு***
***அன்னான்.***

***தனி ஏறு அன்னான்*** - *ஒப்பற்ற சிங்க ஏறு போன்றவனாகிய இராமன்;* ***ஊன் ஏறு படைக்கை வீரர் எதிர் எதிர் ஊரும் தோறும்*** - *தசை ஏறியுள்ள போர்க்கருவியைக் கையில் கொண்ட அரக்க வீரர்கள் எதிர்த்து எதிரில் ஊர்ந்து வரும்பொழுதெல்லாம்;* ***கூன் ஏறு சிலையும் தானும்*** - *வளைவு கொண்ட வில்லும் தானுமாக;* ***குதிக்கின்ற கடுப்பின் கொட்பால்*** - *குதிக்கின்ற விரைவான சுழற்சியால்;* ***வான் ஏறினார்கள் தேரும்*** - *போரிலே வீழ்ந்து வீரசொர்க்கம் அடைந்த அரக்கரின் தேர்களையும்;* ***மலைகின்ற வயவர் தேரும்*** - *(இன்னும் சாகாமல்) தன்னோடு போரிடுகின்ற அரக்க வீரர்களின் தேர்களையும்;* ***தான் ஏறி வந்த தேரே ஆக்கினான்*** - *தான் இயங்கும் நிலம் என்ற தேராகவே ஆக்கினான்.*

*இராமனுக்குத் தேர் இல்லை என்பதையும் அவன் தரையிலேயே இயங்கிப் போர் செய்தான் என்பதையும் நினைவிலே கொண்டு இந்தப் பாட்டின் பொருளை உணரவேண்டும்.*

***9515. காய் அருஞ் சிலை ஒன்றேனும், கணைப் புட்டில்***
***ஒன்றதேனும்,***
***தூய் எழு பகழி மாரி மழைத் துளித் தொகையின்***
***மேல;***
***ஆயிரம் கைகள் செய்த செய்தன, அமலன் செங் கை***
***ஆயிரம் கையும் கூடி, இரண்டு கை ஆனது***
***அன்றே!***

***காய் இருஞ்சிலை ஒன்றேனும்*** - *பகைவரைச் சினக்கின்ற பெரிய வில் ஒன்றே எனினும்;* ***கணைப் புட்டில் ஒன்றதேனும்*** - *அம்பறாத் தூணியும் ஒன்றுதான் என்றாலும்;* ***தூய் எழு பகழி மாரி*** - *எங்கெங்கும் தூவிப் பெருகுகின்ற அம்பு மழை;* ***மழைத் துளித் தொகையின் மேல*** - *மழைத் துளிகளின் எண்ணிக்கைக்கு மேலாக;* ***அமலன் செங்கை*** - *குற்றமற்றவனாகிய இராமனின் செம்மைக் கைகள்;* ***ஆயிரம் கைகள் செய்த செய்தன*** - *ஆயிரம் கைகள் கூடிச் செய்த செயல்களைச் செய்தன;* ***ஆயிரம் கைகள் கூடி இரண்டு கை***

***ஆனது அன்றே*** - *(திருமாலின்) ஆயிரம் கைகளும் கூடி (இராமபிரானின்) இரண்டு கைகள் ஆயின அல்லவோ!*

*இராமன் திருமாலே என்பதை மனங்கொண்டது இச்செய்யுளின் கற்பனை. ஆயிரங்கை கொண்ட பரமனே இரண்டு கை இராமனாக வந்தான் என்பது.*

***9516. பொய்; ஒரு முகத்தன் ஆகி மனிதன் ஆம் புணர்ப்பு இது அன்றால்;***
***மெய்யுற உணர்ந்தோம்; வெள்ளம் ஆயிரம் மிடைந்த சேனை***
***செய்யுறு வினையம் எல்லாம் ஒரு முகம் தெரிவது உண்டே?***
***அய் - இருநூறும் அல்ல; அனந்தம் ஆம் முகங்கள் அம்மா!***

***ஒரு முகத்தன் ஆகி*** - *ஒரே முகம் உடையவனாய்;* ***மனிதன் ஆம் புணர்ப்பு இது அன்று*** - *இது மனிதனாகக் காணும் தோற்றம் அன்று;* ***பொய்*** - *(நாம் காணும் இத்தோற்றம்) பொய்யே;* ***மெய்யுற உணர்ந்தோம்*** - *இந்த மெய்யை மிகுதியாக உணர்ந்துவிட்டோம்;* ***வெள்ளம் ஆயிரம் மிடைந்த சேனை*** - *ஆயிர வெள்ளம் அளவுக்குச் செறிந்துள்ள அரக்கர் சேனையானது;* ***செய்யுறு வினையம் எல்லாம்*** - *செய்கின்ற (போர்ச்) செயலையெல்லாம்;* ***ஒரு முகம் தெரிவது உண்டோ*** - *ஒரே முகம் கொண்டவனால் தெரிந்து கொள்ள முடியுமா! (முடிந்திருக்கிறதே!)* ***அய் இரு நூறும் அல்ல*** - *(இவனுக்கு உரிய உண்மையான முகங்கள்) ஆயிரம் என்பதும் உண்மை அன்று;* ***முகங்கள் அனந்தம் ஆம்*** - *(உண்மையில் இவனுக்குரிய முகங்களுக்கு முடிவே இல்லை.)*

*அம்மா - வியப்பு.*

***9517. கண்ணுதல் - பரமன்தானும், நான்முகக் கடவுள்தானும்***
***'எண்ணுதும், தொடர எய்த கோல்' என, எண்ணலுற்றார்,***
***பண்ணையால் பகுக்க மாட்டார், தனித் தனி பார்க்கலுற்றார்***
***'ஒண்ணுமோ, கணிக்க?' என்பார், உவகையின் உயர்ந்த தோளார்.****

***கண்ணுதல் பரமன் தானும்*** - *கண்ணை நெற்றியில் கொண்ட, பரமனாகிய சிவனும்;* ***நான்முகக் கடவுள்தானும்*** - *நான்முகனாகிய கடவுளும்;* ***தொடர எய்த கோல்***

***எண்ணுதும் என*** - *இராமபிரான் தொடர்ந்து எய்கின்ற அம்புகளை எண்ணிக் கணக்கிடுவோம் என்று;* ***எண்ணலுற்றார்*** - *கணக்கிடத் தொடங்கினவர்களாய்;* ***பண்ணையால் பகுக்க மாட்டார்*** - *அம்புகள் தொகுதி தொகுதியாய்ப் பாய்தலால் பிரித்து எண்ண முடியாமல்;* ***உவகையின் உயர்ந்த தோளார்*** - *மகிழ்ச்சியால் ஓங்கிய தோள்களை உடையவர்களாய்;* ***'ஒண்ணுமோ கணிக்க' என்பார்*** - *கணக்கிட முடியுமோ என்று சொல்லினார்கள்.*

*அம்புகளை எண்ணமுடியாமல் தோற்றாலும் இராமனது வில்லாற்றல் சிவனுக்கும் நான்முகனுக்கும் மகிழ்ச்சி தந்தது.*

## *தேவர்கள் வியந்து புகழ்தல்*

***9518. 'வெள்ளம் ஈர் - ஐந்து நூறே; விடு கணை அவற்றின் மெய்யே***
***உள்ளவாறு உளவாம்' என்று ஓர் உரை கணக்கு உரைத்துமேனும்,***
***'கொள்ளை ஓர் உருவை நூறு கொண்டன பலவால், கொற்ற***
***வள்ளலே வழங்கினானோ?' என்றனர், மற்றை வானோர்.***

***மற்றை வானோர்*** - *(மேலே குறிக்கப்பட்ட சிவன், நான்முகன் தவிர உள்ள) மற்றத் தேவர்கள்;* ***வெள்ளம் ஈர் ஐந்து நூறே*** - *அரக்கரின் சேனை ஆயிரம் வெள்ளம் எண்ணிக்கை கொண்டது;* ***விடுகணை*** - *இராமன் ஏவுகின்ற அம்புகள்;* ***அவற்றின் மெய்யே உளவாம் என்று*** - *அந்த எண்ணிக்கையின் அளவாகவே இருக்கும் என்று;* ***ஓர் உரை கணக்கு உரைத்தமேனும்*** - *ஒரு பேச்சுக்கு அப்படி ஒரு கணக்குச் சொல்லுவோம் என்றாலும்;* ***கொள்ளை ஓர் உருவை*** - *கூடிக் கிடக்கும் வீரர் கூட்டத்தில் ஒர் உடம்பினை;* ***நூறு கொண்டன பல*** - *நூறு துண்டுகளாக ஆக்கிய கணைகள் பலவாகும்;* ***கொற்ற வள்ளலே வழங்கினானோ*** - *வெற்றிக்கு உரிய இராமன் தான் அத்துணை அம்புகளையும் ஏவியிருப்பானோ;* ***என்றனர்*** - *என்று (வியந்து புகழ்ந்து) கூறினர்.*

***9519. 'குடைக்கு எலாம், கொடிகட்கு எல்லாம், கொண்டன குவிந்த கொற்றப்***
***படைக்கு எலாம், பகழிக்கு எல்லாம், யானை தேர் பரிமா ஆதி***
***கடைக்கு எலாம், துரந்த வாளி கணித்ததற்கு அளவை காட்டி***
***அடைக்கலாம் அறிஞர் யாரே?' என்றனர் முனிவர்,***

*அப்பால்.*

***அப்பால் முனிவர்*** *- தள்ளி அப்பால் நின்ற முனிவர்கள்;* ***குடைக்கு எலாம்*** *- எல்லாம் குடைகளுக்கும்;* ***கொடிகட்கு எல்லாம்*** *- எல்லாக் கொடிகளுக்கும்;* ***கொண்டன*** *- அவற்றைப் பற்றிக் கொண்டிருந்தனவும்;* ***குவிந்த*** *- குவிந்தனவுமாகிய;* ***கொற்றப் படைக்கு எலாம்*** *- வெற்றி (நாடும்) படைக்கலங்களுக்கெல்லாம்;* ***பகழிக்கு எல்லாம்*** *- தன்னைத் தாக்க வருகின்ற அம்புகளுக்கெல்லாம்;* ***யானை தேர் பரிமா ஆதி*** *- யானைகள், தேர்கள், குதிரைகள் முதலான;* ***கடைக்கு எலாம்*** *- எல்லாவற்றிற்குமாக;* ***துரந்த வாளி*** *- இராமன் செலுத்திய அம்புகளை;* ***கணித்து*** *- அளவிட்டு; அதற்கு* ***அளவை காட்டி*** *- அப்படி அளவிட்டதற்கு அளவு இதுதான் என்று காட்டி;* ***அடைக்கலாம் அறிஞர் யாரே?*** *- முடிக்கக்கூடிய அறிஞர்கள் யார் இருக்கிறார்கள்? (இல்லை) என்றனர்.*

***9520. கண்டத்தும் கீழும் மேலும், கபாலத்தும், கடக்கல் உற்ற,***
***சண்டப் போர் அரக்கர்தம்மைத் தொடர்ந்து, கோல் புணரும் தன்மை -***
***பிண்டத்தில் கரு ஆம் தன் பேர் உருக்களைப் பிரமன் தந்த***
***அண்டத்தை நிறையப் பெய்து குலுக்கியது அனைய ஆன.***

***கடக்கல் உற்ற*** *- கடந்து போகின்ற;* ***சண்டப்போர் அரக்கர் தம்மை*** *- கொடுமையாகப் போர் செய்யும் அரக்கர்களை;* ***தொடர்ந்து*** *- பின் தொடர்ந்து;* ***கண்டத்தும்*** *- அவர்களுடைய கழுத்திலும்;* ***கீழும் மேலும்*** *- அவர்தம் உடம்பின் கீழும் மேலும்;* ***கபாலத்தும்*** *- தலை ஒட்டிலும்;* ***கோல் புணரும் தன்மை*** *- அம்புகள் சென்று சேர்ந்த தன்மை;* ***பிண்டத்தில் கருவாம் தன் பேர் உருக்களை*** *- பிண்டத்திலே கருவாகியுள்ள தன் பெரிய படைப்புகளை;* ***அண்டத்தை நிறையப் பெய்து*** *- அண்டம் நிறையும்படியாக இட்டு;* ***குலுக்கியது அனைய ஆன*** *- குலுக்கப் பட்டவை போல அமைந்தன.*

*பல இடங்களிலும் கடந்து போகின்ற அரக்கர்களை கழுத்து, மேல் கீழ் என்று எல்லா இடங்களிலும் அம்புகள் சென்று கலக்கின்றன. பிண்டத்தில் கருவாகிய உருக்களைப் பிரமன் பேரண்டத்திலே நிறைய இட்டு நிரப்பிய தன்மை போல - அம்புகள் கருக்கள்; அம்புகள் கீழ் மேல் இடை எங்கும் அரக்கர்களோடு கலந்து நிரம்பியுள்ளவை. கருக்களாகிய உருக்களும் அண்டம் நிறையப் பெய்யப் பெற்றுள்ளன போலும் எனப் பொருத்துக.*

*பத்துக் கோடி வீரர் மாள, எஞ்சியவர் தெய்வப் படைக்கலங்கள் கொண்டு தாக்க வருதல்*

***9521. கோடி ஐ - இரண்டு தொக்க படைக்கல மள்ளர் கூவி,***
***ஓடி ஓர் பக்கம் ஆக, உயிர் இழந்து, உலத்தலோடும்***
***'வீடி நின்று அழிவது என்னே! விண்ணவர் படைகள் வீசி,***
***மூடுதும் இவனை' என்று, யாவரும் மூண்டு மொய்த்தார்.***

**ஐ இரண்டு கோடி தொக்க** - *பத்துக் கோடிப் பேராகக் கூடி நின்ற;* **படைக்கல மள்ளர்** - *படைக்கலங்களை ஏந்திய வீரர்கள்;* **கூவி** - *ஆரவாரித்து;* **ஓர் பக்கம் ஆக ஓடி** - *ஒரு பக்கத்தில் ஓடிச் சென்று;* **உயிர் இழந்து உலத்தலோடும்** - *உயிரை இழந்து அழிந்த நிலையில்;* **வீடி நின்று அழிவது என்னே! விண்ணவர் படைகள் வீசி மூடுதும் இவனை என்று** - *வீழ்ச்சி பெற்று அழிவது ஏன்? தேவர்களிடம் பெற்ற படைக்கலங்களை எறிந்து இந்த இராமனை முற்றிலுமாக மறைத்து விடுவோம் (மறைத்து அழித்திடுவோம்) என்று;* **யாவரும் மூண்டு மொய்த்தார்** - *எஞ்சியிருந்த அரக்கர் எல்லாரும் பொங்கிச் செறிந்தனர்.*

*தெய்வப் படைகளைத் தெய்வப் படைகளாலேயே இராமன் தடுத்தல்*

***9522. விண்டுவின் படையே ஆதி வெய்யவன் படை ஈறாக***
***கொண்டு ஒருங்கு உடனே விட்டார்; குலுங்கியது அமரர் கூட்டம்;***
***அண்டமும் கீழ் மேலாக ஆகியது; அதனை அண்ணல்***
***கண்டு, ஒரு முறுவல் காட்டி, அவற்றினை அவற்றால் காத்தான்.***

**விண்டுவின் படையே ஆதி** - *திருமால் அஸ்திரம் முதலாக;* **வெய்யவன் படை ஈறாக** - *நெருப்பிறைவன் அஸ்திரம் ஈறாக;* **கொண்டு** - *(பல தெய்வ அத்திரங்களைக்) கைக்கொண்டு;* **ஒருங்கு உடனே விட்டார்** - *ஒன்றாகச் சேர்ந்து விரைவாக ஏவினார்கள் அமரர் கூட்டம் நடுங்கிற்று;* **அண்டமும் கீழ் மேலாக ஆகியது** - *அண்டமும் கீழே மேலாக நிலை குலைந்தது;* **அதனை** - *அவ்வாறு ஆகிவிட்டதை;* **அண்ணல்** - *இராமபிரான்;* **கண்டு ஒரு முறுவல் காட்டி** - *ஒரு புன்சிரிப்பைக் காட்டி அவற்றினை அவற்றால் காத்தான். அரக்கர் ஏவிய தெய்வப் படைகளை தெய்வப் படைகளால் தடுத்தான்.*

*9523. 'தான் அவை தொடுத்த போது, தடுப்ப அரிது;*
*உலகம்தானே*
*பூ நனி வடவைத் தீயின் புக்கெனப் பொரிந்து*
*போம்' என்று*
*ஆனது தெரிந்த வள்ளல் அளப்ப அருங் கோடி*
*அம்பால்*
*ஏனையர் தலைகள் எல்லாம் இடியுண்ட மலையின்*
*இட்டான்.*

***தான் அவை தொடுத்தபோது*** - *தானே அந்தத் தெய்வப் படைகளைத் தொடுத்தால்;* ***தடுப்ப அரிது*** - *எவராலும் தடுத்து நிறுத்தல் அரிதாகும்;* ***உலகம் தானே வடவைத் தீயின் பூ நனி புக்கெனப் பொரிந்துபோம்*** - *உலகம் வடவை (ஊழிக்கால) நெருப்பிலே மலர் புகுந்தது போலப் பொரிந்து போகும்;* ***என்று ஆனது தெரிந்த வள்ளல்*** - *என்ற அந்த உண்மையைத் தெரிந்த வள்ளலாகிய இராமன்;* ***அளப்ப அருங்கோடி அம்பால்*** - *அளவிட முடியாத கோடிக்கணக்கான அம்புகளால்;* ***ஏனையர் தலைகள் எல்லாம்*** - *முன்னமே அழிந்தார்போக மற்றவர்களின் தலைகளையெல்லாம்;* ***இடியுண்ட மலையின் இட்டான்*** - *இடியால் தாக்கப்பட்ட மலை எப்படிச் சரியுமோ அப்படிக் குவித்தான். அரக்கர் ஏவிய தெய்வப் படைகளைத் தடுப்பதற்காகத் தெய்வப் படைகளைப் பயன்படுத்தினான். அரக்கரை அழிக்கப் பயன்படுத்த வில்லை.*

*9524. ஆயிர வெள்ளத்தோரும் அடு களத்து அவிந்து*
*வீழ்ந்தார்;*
*மா இரு ஞாலத்தாள் தன் வன் பொறைப் பாரம்*
*நீங்கி;*
*மீ உயர்ந்து எழுந்தாள் அன்றே, வீங்கு ஒலி*
*வேலைநின்றும்*
*போய் ஒருங்கு அண்டத்தோடும் கோடி யோசனைகள்*
*பொங்கி!*

***ஆயிர வெள்ளத்தோடும்*** - *ஆயிர வெள்ளம் அளவினதாகிய அரக்கர்கள் யாவரும்;* ***அடு களத்து*** - *கொலைக் களத்திலே;* ***அவிந்து வீழ்ந்தார்*** - *இறந்து வீழ்ந்தார்கள்;* ***மா இரு ஞாலத்தாள்*** - *மிகவும் பெருமைக்குரிய நில மகள்;* ***தன் வன் பொறைப் பாரம் நீங்கி*** - *தன்மீது இதுவரை இருந்துவந்த கொடிய சுமையாகிய பாரம் நீங்கப்பெற்று;* ***வீங்கு ஒலி வேலை நின்றும்*** - *பேரொலி செய்யும் கடலிலிருந்து;* ***ஒருங்கு போய்*** - *ஒன்றாகச் சென்று;* ***அண்டத்தோடும்-; கோடி யோசனைகள் பொங்கி*** - *கோடி யோசனை தூரத்துக்குப் பொங்கி;* ***மீ உயர்ந்து எழுந்தாள்*** - *மேலோங்கி எழுந்தார்.*

*தேவர் முதலியோர் துயரம் தீர்ந்து இராமனை வாழ்த்துதல்*

***9525. 'நினைந்தன முடித்தேம்' என்னா, வானவர் துயரம் நீத்தார்;***
***'புனைந்தனென் வாகை' என்னா, இந்திரன் உவகை பூத்தான்;***
***வனைந்தன அல்லா வேதம் வாழ்வு பெற்று உயர்ந்தமாதோ;***
***அனந்தனும் தலைகள் ஏந்தி, அயாவுயிர்த்து, அவலம் தீர்ந்தான்.***

***நினைந்தன முடித்தோம் என்று*** - *நாம் எண்ணியவை எண்ணியபடியே முடித்துவிட்டோம் என்று;* ***வானவர் துயரம் நீத்தார்*** - *தேவர்கள் கவலையை ஒழித்தார்கள்;* ***புனைந்தனென் வாகை என்னா*** - *(வெற்றி பெற்று) வாகை மாலை அணிந்தேன் என்று;* ***இந்திரன் உவகை பூத்தான்*** - *இந்திரன் மகிழ்ச்சியால் மலர்ந்தான்;* ***வனைந்தன அல்லா வேதம்*** - *எவராலும் செய்யப்படாதனவாகிய வேதங்கள்;* ***வாழ்வு பெற்று உயர்ந்த*** - *உயிர் வாழ்வைப் பெற்று உயர்ந்தன.*

*மானிடர் எவராலும் செய்யப்படாதவை வேதங்கள்; 'எழுதாக் கிளவி' என்பர். அதனை 'வனைந்தன அல்லா வேதம்' என்றார். மாதோ : அசை.*

***9526. தாய், 'படைத்துடைய செல்வம் ஈக!' என, தம்பிக்கு ஈந்து,***
***வேய் படைத்துடைய கானம் விண்ணவர் தவத்தின் மேவி,***
***தோய் படைத் தொழிலால் யார்க்கும் துயர் துடைத்தானை நோக்கி,***
***வாய் படைத்துடையார் எல்லாம் வாழ்த்தினார், வணக்கம் செய்தார்.***

***தாய்*** - *(சிறிய) தாயாகிய கைகேயி;* ***'படைத்துடைய செல்வம் ஈக'*** - *உனக்கு உரியதாக வந்த செல்வத்தைக் கொடுத்துவிடு;* ***என*** - *என்று சொல்ல;* ***தம்பிக்கு ஈந்து*** - *தம்பியாகிய பரதனுக்குத் தந்துவிட்டு;* ***வேய் படைத்துடைய கானம்*** - *மூங்கில்கள் வளர்ந்துள்ள காட்டுக்கு;* ***விண்ணவர் தவத்தின் மேவி*** - *தேவர்கள் செய்த தவத்தால் வந்தடைந்து;* ***தோய் படைத்தொழிலால்*** - *ஈடுபாடு கொண்ட படைக்கலத் தொழிலால்;* ***யார்க்கும் துயர் துடைத்தானை நோக்கி*** - *எல்லாருடைய*

*துயரத்தையும் போக்கியவனைப் பார்த்து;* ***வாய் படைத்துடையார் எல்லாம்*** *- வாய் படைத்தவர்கள் எல்லாரும்;* ***வாழ்த்தினர் வணக்கம் செய்தார்*** *- வாழ்த்தி வணங்கினர்.*

*வாய் பெற்றார் பெரும் பயன் அடைவது துயர் துடைத்த இராமனை வாழ்த்தலே என்ற கருத்தில் 'வாய் படைத்துடையார் எல்லாம் வாழ்த்தினார்' என்றார்.*

***9527. தீ மொய்த்த அனைய செங் கண் அரக்கரை முழுதும் சிந்தி,***
***பூ மொய்த்த கரத்தர் ஆகி விண்ணவர் போற்ற, நின்றான் -***
***பேய் மொய்த்து, நரிகள் ஈண்டி, பெரும் பிணம் பிறங்கித் தோன்றும்,***
***ஈமத்துள் தமியன் நின்ற கறை மிடற்று இறைவன் ஒத்தான்.***

***தீ மொய்த்த அனைய செங்கண் அரக்கரை*** *- தீச் செறிந்தது போன்ற சிவந்த கண்கள் கொண்ட அரக்கர்களை;* ***முழுதும் சிந்தி*** *- முற்றாக அழித்து;* ***பூ மொய்த்த கரத்தர் ஆகி*** *- பூ நிறைந்த கைகள் உடையவராய்;* ***விண்ணவர் போற்ற நின்றான்*** *- தேவர்கள் போற்றும் படியாக நின்ற இராமபிரான்;* ***பேய் மொய்த்து*** *- பேய்கள் நிரம்பக் கூடியும்;* ***நரிகள் ஈண்டி*** *- நரிகள் நிறையக் கூடியும்;* ***பெரும் பிணம் பிறங்கித் தோன்றும்*** *- ஏராளமான பிணங்கள் விளங்கத் தோன்றுகின்ற;* ***ஈமத்துள்*** *- சுடுகாட்டில்;* ***தமியன் நின்ற*** *- தனியனாக நின்ற;* ***கறைமிடற்று இறைவன் ஒத்தான்*** *- கறையைக் கழுத்திலே கொண்ட சிவபிரானைப் போல் இருந்தான்.*

***9528. அண்டம் மாக் களமும், வீந்த அரக்கரே உயிரும் ஆக,***
***கொண்டது ஓர் உருவம்தன்னால், இறுதிநாள் வந்து கூட,***
***மண்டு நாள், மறித்தும் காட்ட, மன்னுயிர் அனைத்தும் வாரி***
***உண்டவன் தானே ஆன தன் ஒரு மூர்த்தி ஒத்தான்.***

***அண்டம் மாக் களமும்*** *- இந்த அண்டமே பெரிய களமாகவும்;* ***வீந்த அரக்கரே உயிரும் ஆக*** *- வீழ்ந்து விட்ட அரக்கர்களை உயிர்க் கூட்டங்களாகவும் ஆக;* ***கொண்டது ஓர் உருவம் தன்னால்*** *- மேற்கொண்ட ஒப்பற்ற உருவத்தால்;* ***இறுதி நாள் வந்து கூட மண்டும் நாள்*** *- அழிவுக்காலம் வந்து சேர வரும் கடைநாளிலே;* ***மறித்தும் காட்ட*** *- திரும்பவும் படைத்துக் காட்டுவதற்காகவே;* ***மன்னுயிர் அனைத்தும் வாரி உண்டவன்*** *- நிலைபெற்ற உயிர்கள் எல்லாவற்றையும் ஒன்றாக எடுத்து உண்டவன்;* ***தானே ஆன*** *-*

*தானேயாகிய;* ***தன் ஒரு மூர்த்தி ஒத்தான்*** *- தன் ஒப்பற்ற வடிவத்தை நிகர்த்து விளங்கினான்.*

*மண்டுதல் - நெருங்குதல். விழுங்கப்பட்ட உயிர்கள் மீண்டும் வரும் என்பதைப் புலப்படுத்தவே மன் (நிலைபெற்ற) உயிர் என்றார். விழுங்குவது அழிப்பதற்கு அன்று, மீண்டும் படைப்பதற்கு என்பதை 'மறித்தும் காட்ட உண்டவன்' என்ற தொடரால் புலப்படுத்தினார்.*

## *இராவணனோடு போர் செய்யும் இலக்குவனிடம் இராமன் செல்லுதல்*

***9529. ஆகுலம் துறந்த தேவர் அள்ளினர் சொரிந்த வெள்ளச்***
***சேகு அறு மலரும் சாந்தும் செருத் தொழில் வருத்தம் தீர்க்க,***
***மா கொலை செய்த வள்ளல், வாள் அமர்க் களத்தைக் கைவிட்டு***
***ஏகினன், இளவலோடும் இராவணன் ஏற்ற கைம்மேல்.***

**ஆகுலம் துறந்த தேவர்** - துன்பம் நீங்கிய தேவர்கள்; **அள்ளினர் சொரிந்த** - வாரிச் சொரிந்த; **வெள்ளச் சேகு அறு மலரும்** - வெள்ளம் போல் நிறைந்த குற்றமற்ற மலர்களும்; **சாந்தும்** - சந்தனமும்; **செருத்தொழில் வருத்தம் தீர்க்க** - போர்ச் செயலினால் ஏற்பட்ட துன்பத்தைப் போக்க; **மா கொலை செய்த வள்ளல்** - பெருங் கொலைகளைச் செய்த வள்ளலாகிய இராமன்; **வாள் அமர்க் களத்தைக் கைவிட்டு** - வாள் (விளையாடும்) போர்க் களத்தை நீங்கிச் சென்று; **இளவலோடும் இராவணன் ஏற்ற கைம்மேல்** - தம்பியாகிய இலக்குவனோடு இராவணன் எதிர்த்து நின்ற இடத்துக்கு; **ஏகினன்** - போனான்.

*'மா கொலை செய்த வள்ளல்' என்ற தொடர் சிந்தனைக்கு உரியது. அரக்கரை அழித்ததைக் 'கொலை' என்ற சொல்லால் குறித்தார். அது தீயோரை அழிக்கும் அரசர் கடமை என்பதால். 'கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ் களை கட்டதனோடு நேர்' (குறள் 550) என்ற குறட்பாவையும் இப் பெற்றியாரைக் கண்ணோடிக் கொல்லாவழிப் புறக்களைக்கு அஞ்சாநின்ற பைங்கூழ் போன்று நலிவு பல எய்தி உலகு இடர்ப்படுதலின், கோறலும் அரசற்குச் சாதி தருமம் என்பதாயிற்று' என்ற பரிமேலழகர் விளக்கத்தையும் மனத்தில் நினைந்து தெளிவு காணல்வேண்டும். மேலும் கொலை செய்தவனை 'வள்ளல்' என்ற வளச் சொல்லால் குறித்தமையும் கருதத் தக்கது. 'சாத்திரக் கருத்துப்படி இறைவனுடைய பஞ்ச கிருத்தியங்களில் ஒன்றான சம்ஹாரமும் அருட்செயல் என்றே அழைத்தல் உணர்க' என்பது ஐயரவர்கள் நூலகப் பதிப்பு விளக்கம்.*

*இனி, மேல் சொல்ல இருப்பவை*

***9530,* இவ் வழி இயன்ற எல்லாம் இயம்பினாம்; இரிந்து போன**
**தெவ் ஆழி ஆற்றல் வெற்றிச் சேனையின் செயலும், சென்ற**
**வெவ் வழி அரக்கர் கோமான் செய்கையும், இளைய வீரன்**
**எவ்வம் இல் ஆற்றல் போரும், முற்றும் நாம் இயம்பலுற்றாம்.**

**இவ் வழி** - *இராமன் மூலபலச் சேனையை எதிர்த்த இடத்தில்;* **இயன்ற எல்லாம் இயம்பினாம்** - *நிகழ்ந்தவற்றையெல்லாம் சொன்னோம்;* **இரிந்து போன** - *முதலில் அரக்கர் படையைக் கண்டு அஞ்சி ஓடிப் போன;* **தெவ் அழி ஆற்றல்** - *பகைவரை அழிக்கும் ஆற்றல் மிக்க;* **வெற்றிச் சேனையின் செயலும்** - *வெற்றி பெறுவதற்கு உரிய (குரங்குச்) சேனையின் செயலையும்;* **வெவ் வழி அரக்கர் கோமான் செய்கையும்** - *கொடிய வழிகளில் செயல்படுகின்ற அரக்கர் மன்னனாகிய இராவணன் செயலையும்;* **இளைய வீரன்** - *இளையவனாகிய இலக்குவ வீரனின்;* **எவ்வம் இல் ஆற்றல் போரும்** - *குற்றம் இல்லாத ஆற்றல் மிக்க போர்ச் செயலையும்;* **நாம் முற்றும் இயம்பலுற்றாம்** - *நாங்கள் முழுமையாகச் சொல்லத் தொடங்கினோம்.*

## வேல் ஏற்ற படலம்

*வீடணன் மேல் இராவணன் எறிந்த வேலை இலக்குவன் தன் மார்பில் ஏற்றுக் கொண்டதைக் கூறும் பகுதி. இது, 'வேலேற்றுப் படலம்' 'வேலேற்றும் படலம்' 'வேலேற்றப் படலம்' எனவும் காணப்படும்.*

*இராவணனின் வலிமையோடு போர் செய்வது அரிது. அவனோடு போரிட்டு மடிவதே நல்லது என்ற துணிவோடு வானரப் படைகள் போரிட்டன. தன் அரக்கர் சேனை வலி குன்றக் கண்டு கடுமையான கணைகளை ஏவ வானரசேனை நிலைகுலைகிறது. அது கண்டு 'அஞ்சற்க' என இலக்குவன் வருகிறான். அவன் பேராற்றலைக் கண்ட இராவணன் 'இவனை அம்பு எய்து வெல்லுதல் அரிது என மோகன மந்திரமிட்டு ஏவுகிறான். வடிவற்ற அதனை இலக்குவன், வீடணன் உரை கேட்டு நாரணன் கணையை விட்டுத் தவிர்க்கிறான். தன் செயலுக்கு வீடணன் தடை எனக் கண்டு அவன் மீது தன்னிடம் மயன் தந்த வேலை எய்கிறான். அதை எதிர்த்து இலக்குவன் விட்ட கணைகள், பயனற்றுப் போயின. அதை ஏற்கத்தானே முன்வர வீடணன் முந்த அவர்களை அங்கதன், சுக்ரீவன், அனுமன் முந்துகின்றனர். எனினும் அடைக்கலம் தந்தவனைக் காத்தல் தன் கடன் என இலக்குவன் தன் மார்பிலேற்று வீழ்கிறான்.*

*வீடணன் அது கண்டு இராவணன் தேர்க்குதிரைகளையும் தேரோட்டியையும் வீழ்த்துகிறான். வீடணன் மீது அம்பு பாய்ச்சிய இராவணன் இலங்கை செல்கிறான். வீடணன் தடுத்தும் அவனைப் பொருட்படுத்தாமல் இராவணன் செல்கிறான்.*

*இலக்குவன் வீழத் தான் இருப்பதில் பயனில்லை என வீடணன் சாவ எண்ணும் போது சாம்பவன் வந்து அனுமன் உளன் என ஆறுதல் கூறி அனுமனை ஏவ வட திசை சென்று மருந்துமலை கொணர அதன் மணம் பட்டவுடன் இலக்குவன் வாழ்வதறிந்து மகிழ்கிறான்.*

*பின்னர் யாவரும் இராமனைக் காணச் செல்கின்றனர். என்ன நிகழ்ந்தது? என இராமன் கேட்கச் சாம்பவன் யாவும் கூற இராமன் இலக்குவன் செயலைப் பாராட்டினான். இவை இப்படலத்துக் கூறப்படும் செய்திகளாகும்.*

*குரக்குச் சேனை களத்திற்கு மீண்டு வருதல்*

***9531. 'பெரும் படைத் தலைவர் யாரும் பெயர்ந்திலர்;***
***பெயர்ந்து போய், நாம்***
***விரும்பினம் வாழ்க்கை என்றால், யார் இடை***
***விலக்கற்பாலார்;***
***வரும் பழி துடைத்தும்; வானின் வைகுதும், யாமும்'***
***என்னா,***
***இருங் கடல் பெயர்ந்தது என்ன, தானையும் மீண்டது***

**இப்பால்.**

**பெரும்படைத் தலைவர் யாரும்** - பெருமையுடைய படையின் தலைவர்கள் எல்லாரும்; **பெயர்ந்திலர்** - நீங்கினர் அல்லர்; **பெயர்ந்து போய்** - படை வீரர் போர்க்களத்தை விட்டு நீங்கி; **நாம் விரும்பினம் வாழ்க்கை என்றால்** - நாம் மட்டும் உயிர் வாழ விரும்பினாம் என்றால்; **இடை விலக்கற்பாலார் யார்** - இடையில் நின்று நம்மைத் தடுப்பதற்குரியவர் யார்?; **வரும் பழி துடைத்தும்** - (அதனால்) வருகின்ற பழியைத் துடைப்போம்; **யாமும் வானில் வைகுதும் என்னா** - நாங்களும் துறக்கவுலகில் வாழ்வோம் என்று உறுதி கொண்டு; **இருங்கடல் பெயர்ந்தது என்ன** - பெரிய கடல் நிலை பெயர்ந்து வந்தது போன்று; **இப்பால் தானையும் மீண்டது** - இப்பக்கம் வானரப்படையும் மீண்டு வந்தது.

## *இராவணன் போர்க்களம் செல்லுதல்*

**கலித்துறை**

***9532. சில்லி ஆயிரம், சில் உளைப் பரியொடும் சேர்ந்த,***
***எல்லவன் கதிர் மண்டிலம் மாறு கொண்டு இமைக்கும்,***
***செல்லும் தேர்மிசைச் சென்றனன் - தேவரைத் தொலைத்த***
***வில்லும், வெங் கணைப் புட்டிலும், கொற்றமும், விளங்க.***

**சில்லி ஆயிரம்** - ஆயிரம் சக்கரங்களோடும்; **சில் உளைப் பரியொடும் சேர்ந்த** - சிலவாகிய பிடரி மயிருடைய ஆயிரம் குதிரைகளோடும் சேர்ந்ததும்; **எல்லவன் கதிர் மண்டலம்** - கதிரவன் செங்கதிர் மண்டலத்தோடு; **மாறுகொண்டு இமைக்கும்** - ஒப்புமை பூண்டு ஒளி வீசுவதும்; **செல்லும் தேர்மிசை** - விரைந்து போகும் செலவினையும் உடைய தேர் மீது ஏறி; **தேவரைத் தொலைத்த** - வானவர்களையும் அழித்த; **வில்லும் வெங்கணைப் புட்டிலும்** - கொடிய வில்லும் அம்பு நிறைந்த அம்பறாத்தூணியும்; **கொற்றமும் விளங்கச் சென்றனன்** - வீரமும் விளங்க (இராவணன் போர்க்களத்திற்குச்) சென்றான்.

***9533. நூறு கோடி தேர், நொறில் பரி நூற்று இரு கோடி,***
***ஆறுபோல் மத மாகரி ஐ - இரு கோடி***
***ஏறு கோள் உறு பதாதியும் இவற்று இரட்டி***
***சீறு கொள் அரிஏறு அனானுடன் அன்று சென்ற.***

***அன்று சீறுகொள் அரிஏறு அனானுடன்*** - *அப்போது சீறுகின்ற வலிய ஆண் சிங்கம் போன்ற இராவணனுடன்;* ***நூறு கோடி தேர்*** - *நூறு கோடி தேர்களும்;* ***இருநூற்றுக் கோடி நொறில் பரி*** - *இருநூறு கோடி விரைந்து செல்லும் குதிரைகளும்;* ***ஐயிரு கோடி*** - *பத்துக்கோடி;* ***ஆறுபோல் மதமாகரி*** - *ஆற்றுநீர் போல் ஒழுகும் மத நீரையுடைய பெரிய யானைகளும்;* ***இவற்று இரட்டி ஏறுகோள் உறு பதாதியும்*** - *இருபத்தாறு கோடி சிங்க ஏற்றைப் போன்ற காலாட்படையும்;* ***சென்றன*** - *உடன் போயின.*

***9534. 'மூன்று வைப்பினும், அப் புறத்து உலகினும், முனையின்***
***ஏன்று கோளுறும் வீரர்கள் வம்மின்!' என்று இசைக்கும்***
***ஆன்ற பேரியும், அதிர் குரல் சங்கமும், அசனி***
***ஈன்ற காளமும், ஏழொடு ஏழ் உலகினும் இசைப்ப.***

***மூன்று வைப்பினும்*** - *விண்ணுலகு, மண்ணுலகு, பாதலம் எனும் மூன்றுலகத்திலும்;* ***அப்புறத்து உலகினும்*** - *அவற்றிற்கு அப்பாற்பட்ட உலகத்திலும் உள்ளவர்களாய்;* ***முனையின் ஏன்று கோளுறும் வீரர்கள்*** - *போர்முனையில் எதிர்த்துப் போர் புரியும் அரக்கவீரர்கள் யாவரும்;* ***வம்மின் என்று இசைக்கும்*** - *வாருங்கள் என அழைப்பது போன்று ஒலிக்கும்;* ***ஆன்ற பேரியும்*** - *பெரிய முரசுகளும்;* ***அதிர் குரல் சங்கமும்*** - *கேட்டாரை அதிரச் செய்யும் குரலை உடைய சங்குகளும்;* ***அசனி ஈன்ற காளமும்*** - *இடி ஒலி உண்டாக்கும் எக்காளமும் ஆகிய இசைக்கருவிகளின் ஒலி;* ***ஏழொடு ஏழ் உலகினும் இசைப்ப*** - *பதினான்கு உலகங்களிலும் சென்று ஒலிப்பன ஆயின.*

***9535. அனைய ஆகிய அரக்கர்க்கும் அரக்கனை, அவுணர்***
***வினைய வானவர் வெவ் வினைப் பயத்தினை, வீரர்***
***நினையும் நெஞ்சையும் சுடுவது ஓர் நெருப்பினை, நிமிர்ந்து***
***கனையும் எண்ணையும் கடப்பது ஓர் கடலினைக் கண்டார்.***

***அனைய ஆகிய அரக்கர்க்கும்*** - *அத்தன்மை கொண்டு வரும் அரக்கர்களுக்கும்;* ***அரக்கனை*** - *அரக்கனாக இருப்பவனை;* ***அவுணர் வினைய*** - *அவுணர்களின் தீவினையுடைய;* ***வானவர் வெவ்வினைப் பயத்தினை*** - *தேவர்களின் கொடிய தீவினைப் பயனாகத் துன்பம் செய்கின்றவனை;* ***வீரர் நினையும் நெஞ்சையும்*** - *தன்னை நினைக்கும் போர் வீரர்களின் உள்ளத்தையும்;* ***சுடுவது ஓர் நெருப்பினை*** - *சுடுகின்ற*

*ஒப்பற்ற தீப்போன்றவனை;* ***நிமிர்ந்து கனையும் எண்ணையும்*** *- எல்லையைக் கடந்து நிற்கும் அளவினையும்;* ***கடப்பது ஓர் கடலினைக் கண்டார்*** *- கடந்து நிற்கின்ற ஒப்பற்ற கடல் போன்ற நிறமும் ஆற்றலும் உடைய இராவணனைக் கண்டனர்.*

***9536. கண்டு, கைகளோடு அணி வகுத்து, உரும் உறழ கற்கள்***
***கொண்டு, கூற்றமும் நடுக்குறத் தோள் புடை கொட்டி,***
***அண்ட கோடிகள் அடுக்கு அழிந்து உலைவுற, ஆர்த்தார்-***
***'மண்டு போரிடை மடிவதே நலம்' என மதித்தார்.***

***கண்டு*** *- இராவணனைப் பார்த்து;* ***மண்டு போரிடை*** *- நெருங்கிச் செய்யும் போரிலே;* ***மடிவதே நலம் என மதித்தார்*** *- சாவதே நல்லது என மதித்தவராய்;* ***கைகளோடு அணி வகுத்து*** *- போர்க்களத்தில் பக்கங்களோடு முன்பின் வரிசையாக நின்று;* ***உரும் உறழ் கற்கள் கொண்டு*** *- இடிபோல் பகைவர்க்குத் துன்பம் செய்யும் கற்களைக் கொண்டு;* ***கூற்றமும் நடுக்குற*** *- எமனும் நடுங்குமாறு;* ***தோள்புடை கொட்டி*** *- தோள்களைத் தட்டிக் கொண்டு;* ***அண்ட கோடிகள்*** *- பல உலகின் பல்வேறு மூலை முடுக்குகளும்;* ***அடுக்கு அழிந்து*** *- அடுக்குமுறை குலைந்து;* ***உலைவுற*** *- வருந்துமாறு;* ***ஆர்த்தார்*** *- ஆரவாரம் செய்தார்.*

### *இருபடையும் கைகலத்தல்*

***9537. அரக்கன் சேனையும், ஆர் உயிர் வழங்குவான் அமைந்த***
***குரக்கு வேலையும், ஒன்றொடு ஒன்று, எதிர் எதிர் கோத்து,***
***நெருக்கி நேர்ந்தன, நெருப்பு, இடை பொடித்தன; நெருப்பின்***
***உருக்கு செம்பு என, அம்பரத்து, ஓடினது, உதிரம்.***

***அரக்கன் சேனையும்*** *- இராவணன் படையும்;* ***ஆருயிர் வழங்குவான் அமைந்த*** *- தம் அரிய உயிரைப் போரில் அழிக்குமாறு நின்ற;* ***குரக்கு வேலையும்*** *- குரங்கின் கடல் போன்ற படையும்;* ***ஒன்றோடு ஒன்று எதிர் எதிர் கோத்து*** *- ஒன்றுடன் ஒன்று எதிர் எதிராகக் கைகலந்து;* ***நெருக்கி நேர்ந்தன*** *- நெருக்கியவாறு போர் புரிந்தன;* ***நெருப்பு இடை பொடித்தன*** *- தாக்குவதால் இரு படைக்கும் இடையில் நெருப்புத்*

*தோன்றின;* ***நெருப்பின் உருக்கு செம்பு என*** *- தீயிலே காய்ச்சி உருக்கிய செம்பு போல;* ***உதிரம் அம்பரத்து ஓடினது*** *- இரத்தம் கடலை நோக்கி ஓடியது.*

***9538. அற்ற வன் தலை அறு குறை எழுந்து எழுந்து,***
***அண்டத்து***
***ஒற்ற, வானகம் உதய மண்டிலம் என ஒளிர,***
***சுற்றும் மேகத்தைத் தொத்திய குருதி நீர் துளிப்ப,***
***முற்றும் வையகம் போர்க் களம் ஆம் என முயன்ற.***

***அற்ற வன்தலை*** *- அறுபட்ட வலிய தலை;* ***அறுகுறை எழுந்து எழுந்து*** *- தலை அற்ற உடல் குறையிலிருந்து எழுந்தெழுந்து;* ***அண்டத்து ஒற்ற*** *- மேலே போய் ஒற்றுதலால்;* ***வானகம் உதய மண்டிலம் என ஒளிர*** *- விண்ணில் எழுகின்ற கதிரவன் போல ஒளி வீச;* ***சுற்றும் மேகத்தைத் தொத்திய*** *- வானத்தில் மிதந்து வரும் மேகத்தில் பதிந்துள்ள;* ***குருதிநீர் துளிப்ப*** *- இரத்தநீர் மழையாகத் துளிர்க்க;* ***வையகம் முற்றும் போர்க்களம் ஆம் என முயன்ற*** *- உலகம் முழுவதும் போர்க்களம் போன்று தோன்றுமாறு காட்சி அளித்தன.*

***9539. தூவி அம் பெடை அரிஇனம் மறிதர, சூழி***
***தூவி, அம்பு எடை சோர்ந்தன, சொரி உடல் சுரிப்ப,***
***மே வியம் படை படப் படர் குருதியின் வீழ்ந்த,***
***மேவி அம் படைக் கடலிடை, குடரொடு மிதந்த.***

***அம்படைக் கடலிடை மேவி*** *- (யானைகள்) சேனைக் கடலிடைச் சேர்ந்து (இலக்குவன் அம்பு தொடுக்க எடுத்தலால்);* ***தூவி அம்பெடை அரியினம் மறிதர*** *- சிறகுகளை உடைய அழகிய பெண் வண்டோடு கூடிய அழகிய ஆண் வண்டுக் கூட்டம் மீண்டு போகுமாறு;* ***சூழி தூவி*** *- முகபடாத்தை வீசி எறிந்து;* ***சோர்ந்தன*** *- சோர்வடைந்தனவாய்;* ***வியம்மே படைபடப் படர் குருதியின் சொரியுடல் சுரிப்ப வீழ்ந்த*** *- வியத்தற்குரிய அம்புப் படை மேலே படப்பட பரந்து செல்லும் இரத்தத்தில் சுழன்று அமிழ்ந்து உடல் வீழ;* ***அம்பு எடை குடரொடு மிதந்த*** *- அம்பின் மிகுதியால் பொருந்தி வெளிப்பட்ட குடரொடு மிதப்பவாயின.*

*சூழி தூவி என்பதால் யானையின் செயல் வெளிப்படும். இச்செய்யுள் யமகம் என்னும் சொல்லணி. இது முன்னிரண்டு அடிகளில் ஒருவகையாகவும் பின்னிரண்டு அடிகளில் மற்றொரு வகையாகவும் அமைந்துள்ளது.*

***9540. கண் திறந்தன கணவர்தம் முகத்து அவர் முறுவல்***

***கண் இறந்த அன மடந்தையர், உயிரொடும் கலந்தார் -***
***பண்டு இறந்தன பழம் புணர்வு அகம் புக, பன்னி,***
***பண் திறந்தன புலம்பு ஒலி, சிலம்பு ஒலி பனிப்ப.***

***பண்டு இறந்தன பழம் புணர்வு அகம்புக*** - *முன்பு தம் கணவருடன் கழித்த பழைய புணர்ச்சி நிகழ்ச்சிகளை நினைத்து;* ***பன்னி பண் திறந்தன புலம்பு ஒலி சிலம்பு ஒலி பனிப்ப*** - *பலவாறு வாய்விட்டுப் பாடினாற் போன்று புலம்புகின்ற ஒலியும் சிலம்பின் ஒலியும் கலந்து நடுங்கியவாறு ஒலிக்க;* ***கணவர் கண் திறந்தன தம் முகத்து*** - *கணவர் தம் கண்கள் விழித்துள்ளனவாகிய முகங்களில்;* ***அவர் முறுவல் கண்டு இறந்த அன மடந்தையர்*** - *அவர்களுடைய சிரிப்பைப் பார்த்து மகிழ்ந்து தம் உடலை விட்டுப் பிரிந்தவர் போன்ற கற்புடை மகளிர்;* ***உயிரொடும் கலந்தார்*** - *தம் இறந்த கணவருடைய உயிரொடு ஒன்றாய்க் கலந்தனர்.*

***9541. ஏழும் ஏழும் என்று உரைக்கின்ற உலகங்கள் யாவும்***
***ஊழி பேர்வதே ஒப்பது ஓர் உலைவுற, உடற்றும்***
***நூழில் வெஞ் சமம் நோக்கி, அவ் இராவணன் நுவன்றான்-***
***'தாழ் இல் என் படை தருக்கு அறும்' என்பது ஓர் தன்மை.***

***ஏழும் ஏழும் என்று உரைக்கின்ற உலகங்கள் யாவும்*** - *கீழ் ஏழு உலகம் மேல் ஏழு உலகம் எனச் சொல்லும் உலகங்கள் பதினான்கும்;* ***ஊழி பேர்வது ஒப்பது*** - *ஊழிக்கால முடிவில் நிலை பெயர்வது போன்ற;* ***ஓர் உலைவுற உடற்றும்*** - *ஒரு அழிவு உண்டாகப் போரிடுகின்ற;* ***நூழில் வெஞ்சமம் நோக்கி*** - *பகைவரைக் கொல்லும் கொடிய போர்க்களத்தைப் பார்த்து;* ***அவ்இராவணன்*** - *அந்த இராவணன்;* ***தாழி இல் என்படை தருக்கு அறும் என்பது ஓர் தன்மை நுவன்றான்*** - *தாழ்வு இல்லாத என் சேனை இனிச் செருக்கு அழியும் என்ற ஒரு தன்மையைக் கூறினான்.*

***9542. மரமும் கல்லுமே, வில்லொடு வாள், மழு, சூலம்***
***அரமும், கல்லும், வேல் முதலிய அயில் படை அடக்கி,***
***சிரமும் கல் எனச் சிந்தலின், சிதைந்தது, என் சேனை***
***உரமும் கல்வியும் உடையவன் செரு நின்றது ஒருபால்.***

***உரமும் கல்வியும் உடையவன் செரு நின்றது ஒருபால்*** - *வலிமையும் கல்வியறிவும் உள்ள அனுமான் போர் செய்யும் ஒரு பக்கத்தில்;* ***மரமும் கல்லுமே வில்லொடு வாள் மழு சூலம் அரமும் கல்லும் வேல் முதலிய அயில் படை அடக்கி*** - *வானரர்கள் வீசும் மரங்களும் கற்களுமே கொண்டு வில்லும் வாளும் மழுவும் சூலமும் அரத்தையும் அழிக்கத்தக்க உறுதி மிக்க வேல் முதலிய கூரிய படைகளையும் அடக்கிவிட்டு;* ***சிரமும் கல் எனச் சிந்தலின்*** - *அரக்கர்களின் தலைகளையும் கற்கள் போல உருளுமாறு சிந்துவதால்;* ***என் சேனை சிதைந்தது*** - *என்படை அழிந்தது.*

***9543. அழலும் கண் களிறு அணியொடும் துணி படும்;***
***ஆவி***
***சுழலும் பல் படைத் தொகுதியும்; அன்னதே சுடர்த்***
***தேர்;***
***சுழலும் சோரி நீர் ஆற்றொடும் கடலிடைக்***
***கலக்கும் -***
***குழலும் நூலும்போல் அனுமனும் தானும் அக் குமரன்.***

***குழலும் நூலும் போல்*** - *நெய்கின்ற குழலும் அதைத் தொடர்ந்து செல்லும் நூலும் போல;* ***அனுமனும் தானும் அக்குமரன்*** - *ஒருவர் பின் ஒருவராகத் தொடர்ந்து அநுமனும் இலக்குமணனும் போர் செய்தனர்;* ***அழலும் கண் களிறு*** - *சினம் மிக்க கண்ணுடைய யானைகள்;* ***அணியொடும் துணிபடும்*** - *அணிந்த அணிகலன்களோடு துண்டுபடும்;* ***பல்படைத் தொகுதியும் ஆவி சுழலும்*** - *பலவகைப் படை வீரரின் கூட்டமும் உயிர் சுழன்று நிற்கும்;* ***சுடர்த்தேர் அன்னதே*** - *ஒளிமிக்க தேர்களும் சுழலும்;* ***கழலும் சோரிநீர் ஆற்றொடும் கடலிடைக் கலக்கும்*** - *இறந்து பட்ட உடம்பிலிருந்து இரத்தம் ஆற்று நீரோடு கலந்து கடலிடையே சேரும்.*

***9544. 'வில்லும் கூற்றுவற்கு உண்டு' என, திரிகின்ற வீரன்***
***கொல்லும் கூற்று எனக் குறைக்கும், இந் நிறை***
***பெருங் குழுவை;***
***ஒல்லும் கோள் அரி, உரும், அன்ன குரங்கினது***
***உகிரும்***
***பல்லும் கூர்க்கின்ற; கூர்க்கில அரக்கர்தம் படைகள்.***

***வில்லும் கூற்றுவற்கு உண்டு என திரிகின்ற வீரன்*** - *இயமனுக்குத் தண்டேயன்றி வில்லும் படையாக உண்டு எனக் கூறும்படி போர்க்களத்தில் திரிகின்ற இலக்குவன்;* ***கொல்லும் கூற்று எனக் குறைக்கும்*** - *கொல்லுவதைத் தொழிலாக கொண்ட யமன் போல் அரக்கர் எண்ணிக்கையைக் கொன்று குறைக் கின்றான்;* ***இந்நிறை பெருங்குழுவை*** - *இந்நிலையில் வானரர் பெருங் கூட்டத்தை;* ***ஒல்லும் கோள் அரி*** - *வெல்லுதற்குரிய வலிமையுடைய சிங்கமும்;* ***உரும் அன்ன*** - *இடியும் போன்ற;*

***குரங்கினது உகிரும் பல்லும் கூர்க்கின்ற*** - *அனுமனாம் குரங்கின் நகமும் பல்லும் அரக்கர் படையை அழிக்கக் கூர்மையுடையன;* ***அரக்கர் தம் படைகள் கூர்க்கில*** - *அரக்கரின் படைகள் வானரங்களை அழிக்கக் கூர்மை பெறவில்லை.*

*இராவணன் கொதித்தல்*

***9545. 'கண்டு நின்று, இறைப் பொழுது, இனிக் காலத்தைக்***
***கழிப்பின்,***
***உண்டு கைவிடும் கூற்றுவன், நிருதர் பேர் உயிரை;***
***மண்டு வெஞ் செரு நான் ஒரு கணத்திடை மடித்தே***
***கொண்டு மீள்குவென், கொற்றம்' என்று இராவணன்***
***கொதித்தான்.***

***இறைப்பொழுது*** - *சிறிது போழ்து இங்ஙனம்;* ***கண்டு நின்று இனிக் காலத்தைக் கழிப்பின்*** - *இலக்குவன் அனுமன் புரியும் போரைக் கண்டு காலத்தைக் கழிப்பேன் ஆனால்;* ***நிருதர் பேர் உயிரை உண்டு கை விடும் கூற்றுவன்*** - *அரக்கரின் பெருமை மிக்க உயிர்களை உண்டு போர்க்களத்தை விட்டுக் கூற்றுவன் போய் விடுவான்;* ***மண்டு வெஞ்செரு*** - *வீரர்கள் நெருங்கிப் புரியும் போரில்;* ***நான் ஒரு களத்திடை மடித்தே கொற்றம் கொண்டு மீள்குவென்*** - *நான் ஒரு நொடிப்பொழுதில் குரங்குகளைக் கொன்று வெற்றி பெற்று மீள்வேன்;* ***என்று இராவணன் கொதித்தான்*** - *எனச் சொல்லி இராவணன் வெதும்பினான்.*

***9546. ஊதை போல்வன, உரும் உறழ் திறலன, உருவிப்***
***பூதலங்களைப் பிளப்பன, அண்டத்தைப் பொதுப்ப,***
***மாதிரங்களை அளப்பன, மாற்ற அருங் கூற்றின்***
***தூது போல்வன, சுடு கணை முறை முறை துரந்தான்.***

***ஊதை போல்வன*** - *காற்றைப் போல் வேகமாகச் செல்வனவும்;* ***உரும் உறழ் திறலன*** - *இடிபோல் அழிக்கும் வலிமை பெற்றனவும்;* ***உருவிப் பூதலங்களைப் பிளப்பன*** - *உலகின் ஊடுருவிப் பிளப்பனவும்;* ***அண்டத்தைப் பொதுப்ப*** - *வானத்தைத் துளைப்பன வும்;* ***மாதிரங்களை அளப்பன*** - *திசைகளை அளப்பனவும்;* ***மாற்றருங் கூற்றின் தூது போல்வன*** - *மாற்றுதற்கு முடியாத யமனின் தூதுவர்களைப் போல்வனவும்;* ***சுடுகணை முறை முறை துரந்தான்*** - *தீய்க்கின்ற அம்புகளை முறை முறையாகப் பகைவர் மீது (இராவணன்) செலுத்தினான்.*

*9547. **ஆளி போன்று உளன் எதிர்ந்த போது, அமர்க்
களத்து அடைந்த
ஞாளி போன்று உள என்பது என்? நள் இருள்
அடைந்த
காளி போன்றனன் இராவணன்; வெள்ளிடைக் கரந்த
பூளை போன்றது, அப் பொரு சினத்து அரிகள்தம்
புணரி.***

***எதிர்ந்த போது ஆளி போன்று உளன்*** - *(இராவணன்) எதிரிட்டபோது சிங்கம் போல் விளங்கினான்;* ***அமர்க்களத்து*** - *போர்க்களத்தில்;* ***அடைந்த ஞாளி போன்று*** - *(வானரப்படை) அடைந்தபோது நாயைப்போல இருந்தது என்பதால் பயன் என்ன?;* ***இராவணன் நள்ளிருள் அடைந்த காளி போன்றனன்*** - *இராவணன் செறிந்த இருட்டிலே வந்த காளி தெய்வத்தைப் போன்றான்;* ***அப்பொரு சினத்து அரிகள் தம் புணரி*** - *அந்தப் போரிடும் கோபம் உடைய வானரர் படைக்கடல்;* ***வெள்ளிடைக் கரந்த பூளை போன்றது*** - *வெற்றிடத்தில் பொருந்திய பூளைப் பூக்கள் போன்றது.*

## *இலக்குவன் - இராவணன் போர்*

*9548. **இரியல் போகின்ற சேனையை இலக்குவன் விலக்கி
'அரிகள்! அஞ்சன்மின், அஞ்சன்மின்' என்று அருள்
வழங்கி,
திரியும் மாருதி தோள் எனும் தேர்மிசைச் சென்றான்;
எரியும் வெஞ் சினத்து இராவணன் எதிர் புகுந்து
ஏற்றான்.***

***இரியல் போகின்ற சேனையை இலக்குவன் விலக்கி*** - *தோற்று ஓடுகின்ற வானர சேனையை இலக்குவன் தடுத்து;* ***'அரிகள்! அஞ்சன்மின், அஞ்சன்மின்' என்று அருள் வழங்கி*** - *'வானரர்களே! பயப்படாதீர்கள், பயப்படாதீர்கள்' என்று அருள் மொழி கூறி;* ***திரியும் மாருதி தோள் எனும் தேர்மிசைச் சென்றான்*** - *திரிகின்ற அனுமானின் தோள் என்னும் தேர் மேல் ஏறிச் சென்றான்;* ***எரியும் வெஞ்சினத்து இராவணன் எதிர் புகுந்து ஏற்றான்*** - *எரிகின்ற கொடிய கோபத்தை உடைய இராவணன் எதிரே சென்று எதிர்த்தான்.*

*9549. **ஏற்றுக் கோடலும், இராவணன் எரி முகப் பகழி
நூற்றுக் கோடியின்மேல் செலச் சிலைகொடு நூக்க,
காற்றுக்கு ஓடிய பஞ்சு எனத் திசைதொறும் கரக்க,***

***வேற்றுக் கோல்கொடு விலக்கினன், இலக்குவன் விசையால்.***

***ஏற்றுக் கோடலும்*** - (அவ்வாறு இலக்குவன் எதிர் நின்று) எதிர்த்த அளவில்; ***இராவணன் எரிமுகப் பகழி*** - இராவணன் நெருப்பை முனையிலே கொண்ட அம்புகளை; ***நூற்றுக் கோடியின் மேல்*** - நூறு கோடிக்கு மேலாக; ***செலச் சிலை கொடு நூக்க*** - செல்லுமாறு வில்லால் எய்ய; ***காற்றுக்கு ஓடிய பஞ்சு என*** - காற்றுக்கு எதிர் நிற்கமுடியாமல் ஓடிப் பறந்த பஞ்சுபோல்; ***திசைதொறும் கரக்க*** - திசைகள் தோறும் சென்று மறையுமாறு; ***இலக்குவன் வேற்றுக்கோல் கொடு விசையால் விலக்கினன்*** - இலக்குவன் அவற்றிற்கு எதிரான அம்புகள் கொண்டு விசையால் எதிர் விலக்கினான்.

***9550. விலக்கினான் தடந் தோளினும் மார்பினும், விசிகம்***
***உலக்க உய்த்தனன், இராவணன்; ஐந்தொடு ஐந்து உருவக்***
***கலக்கம் உற்றிலன் இளவலும், உள்ளத்தில் கனன்றான்***
***அலக்கண் எய்துவித்தான், அடல் அரக்கனை, அம்பால்.***

***விலக்கினான் தடந்தோளினும் மார்பினும்*** - அவ்வாறு விலக்கியவனாம் இலக்குவனின் பெரிய தோளிலும் மார்பிலும்; ***இராவணன் ஐந்தொடு ஐந்து விசிகம் உலக்க உய்த்தனன்*** - இராவணன் பத்து அம்புகளை இலக்குவனின் வலிமை குறையுமாறு விடுத்தான்; ***உருவக் கலக்கம் உற்றிலன் இளவலும்*** - உடம்பின் அவ்வம்புகள் ஊடுருவக் கலக்கம் கொள்ளாத இலக்குவனும்; ***உள்ளத்தில் கனன்றான்*** - மனத்தில் கோபம் கொண்டு; ***அடல் அரக்கனை*** - வலிமை மிக்க இராவணனை; ***அம்பால் அலக்கண் எய்துவித்தான்*** - தன் அம்புகளால் துன்பமுறச் செய்தான்.

***9551. காக்கல் ஆகலாக் கடுப்பினில் தொடுப்பன கணைகள்***
***நூக்கினான்; கணை நுறுக்கினான், அரக்கனும், 'நூழில்***
***ஆக்கும் வெஞ் சமத்து அரிது இவன்தனை வெல்வது அம்பால்***
***நீக்கி, என் இனிச் செய்வது?' என்று இராவணன் நினைந்தான்.***

***காக்கல் ஆகலாக் கடுப்பினில் கணைகள் தொடுப்பன*** - *தடுத்தற்கு முடியாத விரைவொடு அம்புகளை (இலக்குவன்);* ***நூக்கினான்*** *-செலுத்தினான்;* ***கணை நுறுக்கினான் அரக்கனும்*** *- செலுத்திய அம்புகளை நுறுங்கச் செய்த இராவணனும்;* ***நூழில் ஆக்கும் வெஞ்சமத்து*** *- கொன்று குவிக்கும் கொடிய போரில்;* ***இவன்தனை வெல்வது அரிது*** *- இவனை வெற்றி காண்பது முடியாது;* ***அம்பால் நீக்கி*** *- அம்பினால் போரிடுவதை விலக்கி;* ***இனி என் செய்வது*** *- இனிமேல் என்ன செய்வது;* ***என்று இராவணன் நினைந்தான்*** *- என இராவணன் ஆழமாகச் சிந்தித்தான்.*

## *இராவணன் மோகப்படையும் இலக்குவன் ஆழிப்படையும்*

***9552. 'கடவுள் மாப் படை தொடுக்கின், மற்று அவை***
***முற்றும் கடக்க***
***விடவும் ஆற்றவும் வல்லனேல், யாரையும் வெல்லும்;***
***தடவும் ஆற்றலைக் கூற்றையும்; தமையனைப் போலச்***
***சுடவும் ஆற்றும் எவ் உலகையும்; எவனுக்கும்***
***தோலான்.***

***கடவுள் மாப்படை தொடுக்கின்*** *- பெரிய தெய்வ அம்புகளைத் தொடுத்தால்;* ***மற்று அவை முற்றும் கடக்கவிடவும் ஆற்றவும் வல்லனேல்*** *- அவ்வம்புகள் எல்லாவற்றையும் வெல்லவும் தாங்கவும் வலிமை யுடையவன் ஆனால்;* ***யாரையும் வெல்லும்*** *- எல்லாரையும் வெல்லுவான்;* ***கூற்றையும் ஆற்றலைத் தடவும்*** *- கூற்றுவனையும், வலிமையை ஆராய்ந்து பார்க்கும்;* ***தமையனைப் போல*** *- இராமனைப் போல்;* ***எவ்வுலகையும் சுடவும் ஆற்றும்*** *- எல்லா உலகங்களையும் சுட்டெரிக்கவும் முடியும்;* ***எவனுக்கும் தோலான்*** *- யார்க்கும் தோற்கமாட்டான்.*

***9553. 'மோகம் ஒன்று உண்டு, முதலவன் வகுத்தது***
***முன்னாள்;***
***ஆகம் அற்றது, கொற்றமும் சிவன்தனை அழிப்பது;***
***ஏகம் முதலிய விஞ்சையை இவன்வயின் ஏவி,***
***காகம் உற்று உழல் களத்தினில் கிடத்துவென்***
***கடிதின்'-***

***மோகம் ஒன்று உண்டு*** *- மோகம் என்பது ஒன்று உள்ளது;* ***முன்னாள் முதலவன் வகுத்தது*** *- தொடக்க காலத்தில் முதற் கடவுள் இயற்றியது;* ***ஆகம் அற்றது*** *- கண்ணால் காணும் வடிவம் இல்லாதது;* ***கொற்றமும் சிவன்தனை அழிப்பது*** *- வெற்றியையும் சிவனின் ஆற்றலையும் அழிக்கும் ஆற்றலுடையது;* ***ஏகம் முற்றிய விஞ்சையை*** *- தனித்தன்மை பொருந்திய இந்த விஞ்சையை;* ***இவன் வயின் ஏவி*** *- இலக்குவன் மீது*

*செலுத்தி;* **காகம் உற்று உழல் களத்தினில்** *- பிணந்தின்ன வரும் காகங்கள் திரியும் போர்க்களத்தில்;* **கடிதின் கிடத்துவென்** *- விரைந்து கிடக்கச் செய்வேன்.*

***9554. என்பது உன்னி, அவ் விஞ்சையை மனத்திடை எண்ணி,***
***முன்பன்மேல் வரத் துரந்தனன்; அது கண்டு முடுகி,***
***அன்பின் வீடணன் 'ஆழியான் படையினின் அறுத்தி'***
***என்பது ஓதினன்; இலக்குவன் அது தொடுத்து எய்தான்.***

**என்பது உன்னி** *- என்பது எண்ணி;* **அவ்விஞ்சையை மனத்திடை எண்ணி** *- அந்த மோகன விஞ்சையை மனத்தில் நினைத்து;* **முன்பன் மேல் வரத்துரந்தனன்** *- வலியவனாம் இலக்குவன் மேல் செல்ல விடுத்தான்;* **அன்பின் வீடணன்** *- அன்புடைய வீடணன்;* **அது கண்டு முடுகி, ஆழியான் படையினின் அறுத்தி** *- அதனைக் கண்டு விரைந்து சக்கரப் படையுடைய நாராயணனது கணையால் இதனை அறுப்பாயாக;* **என்பது ஓதினன்** *- என்பதைக் கூறினான்;* **இலக்குவன் அது தொடுத்து எய்தான்** *- இலக்குவன் அந்த நாராயணன் அம்பைப் பூட்டி விடுத்தான்.*

### *வீடணனால் படைவலி அழிய, இராவணன் அவன் மேல் வேல் எறிதல்*

***9555. வீடணன் சொல, விண்டுவின் படைக்கலம் விட்டான்,***
***மூடு வெஞ் சின மோகத்தை நீக்கலும், முனிந்தான்***
***'மாடு நின்றவன் உபாயங்கள் மதித்திட, வந்த***
***கேடு தம்நமக்கு' என்பது மனம்கொண்டு கிளர்ந்தான்.***

**வீடணன் சொல** *- வீடணன் சொல்ல;* **விண்டுவின் படைக்கலம் விட்டான்** *- அவன் சொல்லியபடி நாராயணனது அம்பை விட்டான்;* **மூடு வெஞ்சின மோகத்தை நீக்கலும்** *- தன்னை மூடி மயக்கவந்த கொடிய சினத்தையுடைய மோகத்தை இலக்குவன் விலக்கலும்;* **முனிந்தான்** *- இராவணன் வெகுண்டான்;* **மாடு நின்றவன் உபாயங்கள் மதித்திட** *- பக்கத்திலிருந்த வீடணன் உபாயங்களைச் சொல்லிட அதை இலக்குவன் மதித்து ஏற்றிட;* **கேடு நம் தமக்கு வந்த** *- நமக்குக் கேடு வந்தன;* **என்பது மனங்கொண்டு கிளர்ந்தான்** *- என்பதை உளத்தில் எண்ணிக் கிளர்ச்சியுற்றான்.*

***9556. மயன் கொடுத்தது, மகளொடு; வயங்கு அனல் வேள்வி,***
***அயன் படைத்துளது; ஆழியும் குலிசமும் அனையது;***
***உயர்ந்த கொற்றமும் ஊழியும் கடந்துளது; உருமின்,***
***சயம்தனைப் பொரும் தம்பியை, உயிர் கொளச் சமைந்தான்.***

***மகளொடு மயன் கொடுத்தது*** - *(முன்னர், திருமணத்தின் போது இராவணனுக்கு) மண்டோதரியாம் மகளொடு மயன் அளித்தது;* ***வயங்கு அனல் வேள்வி அயன் படைத்துளது*** - *பிரமனால் யாகத் தீயில் படைக்கப்பட்ட படையாம்;* ***ஆழியும் குலிசமும் அனையது*** - *திருமாலின் சக்கரப்படையும் இந்திரனின் வச்சிரப்படையும் போன்றது;* ***உயர்ந்த கொற்றமும் ஊழியும் கடந்துளது*** - *உயர்ந்த வெற்றி அளிப்பதிலும் ஊழிக் காலத்தையும் கடந்துளதாகிய;* ***உருமின்*** - *இடி போன்ற வேற்படையாலே;* ***சயம் தனைப் பொரும் தம்பியை*** - *வெற்றியையே உவமை கூறத்தக்க வீடணனது;* ***உயிர்கொளச் சமைந்தான்*** - *உயிரைக் கொள்வதற்குத் துணிந்தான்.*

***9557. விட்ட போதினின் ஒருவனை வீட்டியே மீளும்,***
***பட்ட போது அவன் நான்முகன் ஆயினும் படுக்கும்.***
***வட்ட வேல்அது வலம்கொடு வாங்கினன், வணங்கி,***
***எட்ட நிற்கலாத் தம்பிமேல் வல் விசைத்து எறிந்தான்.***

***விட்ட போதினின் ஒருவனை வீட்டியே மீளும்*** - *வேலை எறிந்த போது அந்த ஒரு பகைவனை வீழ்த்தி விட்டே திரும்பும்;* ***பட்டபோது அவன் நான்முகன் ஆயினும் படுக்கும்*** - *மேலே பட்ட போது தன்னைப் படைத்த பிரமனே ஆனாலும் கொல்லும் தன்மையது;* ***வட்டவேல் அது வலங்கொடு வாங்கினான் வாங்கி*** - *திருத்தமான வேலை வலந்திரிந்து எடுத்து வணங்கி;* ***எட்ட நிற்கலாத் தம்பிமேல்*** - *தொலைவில் நிற்காத அருகில் உள்ள தம்பி வீடணன் மேல்;* ***வல் விசைத்து எறிந்தான்*** - *மிகுந்த வேகத்துடன் எறிந்தான்.*

*வட்டம் - திருத்தம்.*

*வீடணன், ஈது என் உயிர் அழிக்கும்' என இலக்குவன்*
*'போக்குவேன் அஞ்சல் நீ' எனல்*

***9558. எறிந்த காலையில், வீடணன் அதன் நிலை எல்லாம்***

***அறிந்த சிந்தையன், 'ஐய! ஈது என் உயிர் அழிக்கும்;
பிறிந்து செய்யல் ஆம் பொருள் இலை' என்றலும்,
பெரியோன்,
'அறிந்து போக்குவல்; அஞ்சல், நீ!' என்று இடை
அணைந்தான்.***

***எறிந்த காலையில்*** - இராவணன் வேலினை எறிந்த போது; ***அதன் நிலை எல்லாம் அறிந்த சிந்தையன் வீடணன்*** - அவ்வேலின் திறம் முழுதும் அறிந்த அறிவுடையோனாகிய வீடணன்; ***ஐய! ஈது என் உயிர் அழிக்கும்*** - ஐயனே! இவ்வேல் என் உயிரை வாங்கும்; ***பிறிந்து செய்யல் ஆம் பொருள் இலை என்றலும்*** - தடுத்துச் செய்தற்குரிய உபாயம் வேறு இல்லை என்று கூறியதும்; ***பெரியோன் அறிந்து போக்குவல்*** - இதைப் போக்கும் திறம் அறிந்து போக்குகின்றேன்; ***நீ அஞ்சல்*** - நீ பயப்படாதே; ***என்று இடை அணைந்தான்*** - எனக் கூறி வீடணன் நின்ற இடத்தில் வந்து நின்றான்.

***9559. எய்தவாளியும், ஏவின படைக்கலம் யாவும்,
செய்த மா தவத்து ஒருவனைச் சிறு தொழில்
தீயோன்
வைத வைவினில் ஒழிந்தன; 'வீடணன் மாண்டான்,
உய்தல் இல்லை' என்று, உம்பரும் பெரு மனம்
உலைந்தார்..***

***எய்த வாவியும்*** - இலக்குவன் எய்த அம்புகளும்; ***ஏவின படைக்கலம் யாவும்*** - ஏவிய படைக்கருவிகள் எல்லாம்; ***செய்த மாதவத்து ஒருவனை*** - சிறந்த தவத்தால் பெரியோனை; ***சிறு தொழில் தீயோன் வைத வைவினில் ஒழிந்தன*** - கீழான ஏவல் புரியும் தீயோன் சபித்த சாபம் பலிக்காது போயின போலப் பயனின்றிப் போயின; ***வீடணன் மாண்டான்*** - வீடணன் செத்தான்; ***உய்தல் இல்லை என்று*** - பிழைப்பது இனி இல்லை என்று; ***உம்பரும் பெருமனம் உலைந்தோர்*** - தேவர்களும் தம்முடைய பெருமை மிக்க மனம் அழிந்தனர்.

*இலக்குவன் வேலைத் தன் மார்பில் ஏற்க எதிர்தல்*

***9560. 'தோற்பென் என்னினும், புகழ் நிற்கும், தருமமும்
தொடரும்
ஆர்ப்பர் நல்லவர்; அடைக்கலம் புகுந்தவன்
அழியப்***

***பார்ப்பது என்? நெடும் பழி வந்து தொடர்வதன் முன்னம்***
***ஏற்பென், என் தனி மார்பின்' என்று, இலக்குவன் எதிர்ந்தான்.***

**தோற்பென் என்னினும்** - *(வீடணனைக் காக்க வேலை ஏற்று) என் உயிரை இழந்தேன் என்றாலும்;* **புகழ் நிற்கும்** - *(அடைக்கலம் காத்த) புகழ் நிலைத்து நிற்கும்;* **தருமமும் தொடரும்** - *அறமும் என்னைத் தொடர்ந்து வரும்;* **நல்லவர் ஆர்ப்பர்** - *நல்ல மனிதர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்வர்;* **அடைக்கலம் புகுந்தவன் அழியப் பார்ப்பது என்** - *அடைக்கலமாக அடைந்த வீடணன் இறக்கப் பார்த்துக் கொண்டிருப்பது எதற்கு?* **நெடும் பழி வந்து தொடர்வதன் முன்னம்** - *(அடைக்கலப் பொருளைக் காவாமல் விட்டான் என்று) நெடுங்காலம் நிற்கும் பழி வந்து தொடர்வதற்கு முன்னரே;* **என் தனி மார்பின் ஏற்பென்** - *எனது ஒப்பற்ற மார்பில் அவ்வேலை ஏற்பேன்;* **என்று இலக்குவன் எதிர்ந்தான்** - *என்று இலக்குவன் எதிர் நின்றான்;*

*வேலை ஏற்க பலரும் முந்த இறுதியில் இலக்குவன் ஏற்றல்*

***9561. இலக்குவற்கு முன் வீடணன் புகும்; இருவரையும்***
***விலக்கி, அங்கதன் மேற்செலும்; அவனையும் விலக்கி,***
***கலக்கும் வானரக் காவலன்; அனுமன் முன் கடுகும்;***
***அலக்கண் அன்னதை இன்னது என்று உரை செயல் ஆமோ?***

**இலக்குவற்கு முன் வீடணன் புகும்** - *இலக்குவனுக்கு முன்னர் வீடணன் செல்வான்;* **இருவரையும் விலக்கி அங்கதன் மேற்செலும்** - *அவ்விருவரையும் விலக்கி விட்டு வாலி மகன் அங்கதன் முன் புகுவான்;* **அவனையும் விலக்கி வானரக் காவலன் கலக்கும்** - *அங்கதனை விலக்கிவிட்டு வானரர் அரசாம் சுக்கிரீவன் முந்துவான்;* **அனுமன் முன் கடுகும்** - *அனுமன் விரைந்து செல்வான்;* **அலக்கண் அன்னதை** - *அப்படிப்பட்ட துன்பத்தை;* **இன்னது என்று உரை செயல் ஆமோ** - *இத்தகையது என்று கூற முடியுமா?*

***9562. முன் நின்றார் எலாம் பின் உற, காலினும் முடுகி,***
***'நின்மின்; யான் இது விலக்குவென்' என்று உரை நேரா,***
***மின்னும் வேலினை, விண்ணவர் கண் புடைத்து***

***இரங்க,***
***பொன்னின் மார்பிடை ஏற்றனன், முதுகிடைப் போக.***

***முன் நின்றார் எலாம் பின் உற*** - *முன்னே சென்றவர்கள் எல்லாம் பின்னே நிற்க;* ***காலினும் முடுகி*** - *காற்றினும் விரைந்து சென்று;* ***நின்மின் யான் இது விலக்குவென்*** - *எல்லாரும் நில்லுங்கள் நான் இதை விலக்குவேன்;* ***என்று உரை நேரா மின்னும் வேலினை*** - *என்று சொல்லிக்கொண்டே ஒளி வீசும் வேலை;* ***விண்ணவர் கண் புடைத்து இரங்க*** - *தேவர்கள் கண்மேல் மோதிக் கொண்டு வருந்த;* ***பொன்னின் மார்பிடை*** - *பொன்னிறமுள்ள மார்பில் பட்டு;* ***முதுகிடைப்போக ஏற்றனன்*** - *முதுகுக்குள்ளே ஊடுருவிப் போக (அவ்வேலை) ஏற்றான் இலக்குவன்.*

*வீடணன், இராவணன் தேர்க் குதிரையையும் சாரதியையும் அழித்தல்*

***9563. 'எங்கு நீங்குதி நீ?' என, வீடணன் எழுந்தான்,***
***சிங்கஏறு அன்ன சீற்றத்தான், இராவணன் தேரில்***
***பொங்கு பாய் பரி சாரதியொடும் படப் புடைத்தான்***
***சங்க வானவர் தலை எடுத்திட, நெடுந் தண்டால்.***

***எங்கு நீங்குதி நீ என `வீடணன் எழுந்தான்*** - *(போர்க்களத்தை விட்டுப் புறப்படும் இராவணனைப் பார்த்து) வீடணன், 'நீ எங்கே செல்கிறாய் என்று எழுந்து;* ***சிங்கஏறு அன்ன சீற்றத்தான்*** - *ஆண் சிங்கம் போன்ற கோபம் உடையவனாய்;* ***இராவணன் தேரில்*** - *இராவணனுடைய தேரிலே;* ***பொங்குபாய் பரி சாரதியொடும் பட*** - *கிளர்ந்து பாயும் குதிரையொடு தேரோட்டியும் இறந்திட;* ***சங்க வானவர் தலை எடுத்திட நெடுந்தண்டால் புடைத்தான்*** - *திரளாயுள்ள தேவர்கள் மீண்டும் கிளர்ச்சி பெற்றுயரத் தன் நீண்ட தண்டாயுதத்தால் அடித்தான்.*

***9564. சேய் விசும்பினில் நிமிர்ந்து நின்று, இராவணன் சீறி,***
***பாய் கடுங் கணை பத்து அவன் உடல் புகப் பாய்ச்சி,***
***ஆயிரம் சரம் அனுமன்தன் உடலினில் அழுத்தி,***
***போயினன், 'செரு முடிந்தது' என்று, இலங்கை ஊர்***
***புகுவான்.***

***சேய் விசும்பினில் நிமிர்ந்து நின்று இராவணன் சீறி*** - *தூரத்தே உள்ள வானில் உயரச் சென்று இராவணன் சீற்றம் கொண்டு;* ***அவன் உடல் புகப் பாய் கடுங்கணை பத்து பாய்ச்சி*** - *அவ்வீடணன் உடம்பிலே பாய்கின்ற கொடிய அம்புகள் பத்தை*

*அழுத்திவிட்டு;* ***ஆயிரம் சரம் அனுமன் தன் உடலினில் அழுத்த*** *- ஆயிரம் அம்புகளை அனுமனின் உடம்பில் பாய்ச்சிவிட்டு;* ***செரு முடிந்தது என்று*** *- போர் முற்றுப் பெற்றது என்று;* ***இலங்கை ஊர் புகுவான் போயினன்*** *- இலங்கை நகரில் புக, (இராவணன்) சென்றான்.*

***9565. 'தேடிச் சேர்ந்த என் பொருட்டினால், உலகுடைச் செல்வன்***
***வாடிப் போயினன்; நீ இனி வஞ்சனை மதியால்***
***ஓடிப் போகுவது எங்கு? அடா! உன்னொடும் உடனே***
***வீடிப் போவென்' என்று அரக்கன்மேல் வீடணன் வெகுண்டான்.***

***தேடிச் சேர்ந்த என் பொருட்டினால்*** *- அடைக்கலமாகப் புகுந்த என்னைக் காப்பதற்காக;* ***உலகுடைச் செல்வன் வாடிப் போயினன்*** *- உலகம் எல்லாம் தன்னதாக உடைய இலக்குவன் வாடிப் போனான்;* ***இனி வஞ்சனை மதியால் ஓடிப் போகுவது எங்கு?*** *- இனிமேல் உன்னுடைய வஞ்சனை புத்தியால் நீ ஓடிப் போவது எங்கு?* ***அடா! உன்னொடும் உடனே வீடிப் போவென் என்று*** *- அடா உன்னோடு இப்போதே போர் செய்து உன்னைக் கொன்று நானும் இறப்பேன் என்று;* ***அரக்கன் மேல் வீடணன் வெகுண்டான்*** *- இராவணன் மீது வீடணன் கோபித்தான்.*

*வீடணனைக் கொல்லாது விடுத்து இராவணன் மீளுதல்*

***9566. 'வென்றி என் வயம் ஆனது; வீடணப் பசுவைக்***
***கொன்று இனிப் பயன் இல்லை' என்று, இராவணன் கொண்டான்;***
***நின்றிலன், ஒன்றும் நோக்கிலன், முனிவு எலாம் நீத்தான்;***
***பொன் திணிந்தன மதிலுடை இலங்கை ஊர் புக்கான்.***

***வென்றி என் வயம் ஆனது*** *- வெற்றி என் வசம் ஆயிற்று;* ***வீடணப் பசுவைக் கொன்று இனிப் பயன் இல்லை என்று*** *- பசுப் போன்ற வீடணனைக் கொன்று இனிமேல் அடையும் நன்மை ஒன்றும் இல்லை என்று;* ***இராவணன் கொண்டான்*** *- இராவணன் மனத்தில் நினைத்தான்;* ***நின்றிலன்*** *- நிற்கவும் இல்லை;* ***ஒன்றும் நோக்கலன்*** *- போர்க்களத்து எதையும் பார்க்கவில்லை;* ***முனிவு எலாம் நீத்தான்*** *- கோபம் எல்லாம் விட்டவனாய்;* ***பொன் திணிந்தன மதிலுடை இலங்கை ஊர் புக்கான்*** *- அழகிய மதிலை உடைய இலங்கை நகர்க்குள் சென்றான்.*

*வீடணன் ஆற்றாது அரற்றுதல்*

***9567. அரக்கன் ஏகினன்; வீடணன் வாய் திறந்து அரற்றி,***
***இரக்கம்தான் என இலக்குவன் இணை அடித்***
***தலத்தில்,***
***கரக்கல் ஆகலாக் காதலின் வீழ்ந்தனன் கலுழ்ந்தான்;***
***குரக்கு வெள்ளமும் தலைவரும் துயரிடைக்***
***குளித்தார்.***

***அரக்கன் ஏகினன்*** - *இராவணன் இலங்கைக்குள் சென்றான்;* ***வீடணன் வாய் திறந்து அரற்றி*** - *வீடணன் வாய் திறந்து புலம்பி;* ***இரக்கம் தான் என இலக்குவன் இணை அடித்தலத்தில்*** - *இரக்கப் பண்பே உருவான இலக்குவனின் இரண்டு காலடியில்;* ***கரக்கல் ஆகலாக் காதலின்*** - *அடக்க முடியாத அன்பினால்;* ***கலுழ்ந்தான் வீழ்ந்தனன்*** - *கண்ணீர் சிந்தி விழுந்தான்;* ***குரக்கு வெள்ளமும் தலைவரும் துயரிடைக் குளித்தார்*** - *குரங்குச் சேனையும் அதன் தலைவர்களும் துன்பத்தில் ஆழ்ந்தார்கள்.*

***9568. பொன் அரும்பு உறு தார்ப் புயப் பொருப்பினான்***
***பொன்ற***
***என் இருந்து நான்? இறப்பென், இக் கணத்து;***
***எனை ஆளும்***
***மன் இருந்து இனி வாழ்கிலன்' என்றனன் மறுக,***
***'நில், நில்' என்றனன், சாம்பவன் உரை ஒன்று***
***நிகழ்த்தும்.***

***பொன் அரும்பு உறுதார்ப் புயப் பொருப்பினான் பொன்ற*** - *அழகு மிக்க அரும்பால் கட்டிய மாலையணிந்த தோள்களாம் மலையை உடைய இலக்குவன் இறக்க;* ***நான் இருந்து என்?*** - *நான் உயிரோடு இருந்து என்ன பயன்?* ***இக்கணத்து இறப்பென்*** - *இந்த நொடியே இறப்பேன்;* ***எனை ஆளும் மன் இருந்து இனி வாழ்கிலன் என்றனன் மறுக*** - *என்னை அடைக்கலமாய்க் கொண்ட இராமன் இனி உயிரோடு வாழான் என்று மனங்கலங்கி நிற்க;* ***சாம்பவான் 'நில் நில்' என்றனன்*** - *சாம்பவான் அவனைத் தடுத்து 'நில் நில்' என்று கூறி,;* ***உரை ஒன்று நிகழ்த்தும்*** - *சொல் ஒன்று சொல்வான்.*

***9569. 'அனுமன் நிற்க, நாம் ஆர் உயிர்க்கு இரங்குவது***

***அறிவோ?***
***நினையும் அத்துணை மாத்திரத்து, உலகு எலாம்***
***நிமிர்வான்,***
***வினையின் நல் மருந்து அளிக்கின்றான்;***
***உயிர்க்கின்றான், வீரன்***
***தினையும் அல்லல் உற்று அழுங்கன்மின்' என்று இடர்***
***தீர்த்தான்.***

***அனுமன் நிற்க நாம் ஆர் உயிர்க்கு இரங்குவது அறிவோ*** - *அனுமன் நம் பக்கம் இருக்கும் போது நாம் அரிய உயிர் நீங்கியதற்கு வருந்துதல் அறிவுடைமை ஆகுமோ;* ***நினையும் அத்துணை மாத்திரத்து உலகு எலாம் நிமிர்வான்*** - *அனுமன் எண்ணிய அளவில் உலகெலாம் நிமிர்கின்ற பேருருவுடையவனாய்;* ***வினையின் நல் மருந்து அளிக்கின்றான்*** - *நம் புண்ணிய வினையால் நல்ல மருந்தைக்கொண்டு அளிக்கின்றான்;* ***வீரன் உயிர்க்கின்றான்*** - *அளித்தவுடன் இலக்குவன் உயிர் பெற்றெழுகின்றான்;* ***தினையும் அல்லல் உற்று அழுங்கன்மின் என்று இடர் தீர்த்தான்*** - *மிகச்சிறிய அளவும் துன்பமுற்று வருந்தாதீர்கள் என்று சாம்பவான் கூறி வீடணன் முதலியோர் துன்பம் தீர்த்தான்.*

*அனுமன் மருந்து கொண்டு வந்து இலக்குவனை உயிர்ப்பித்தல்*

***9570. மருத்தின் காதலன் மார்பிடை அம்பு எலாம்வாங்கி,***
***'இருத்தியோ, கடிது ஏகலை? இளவலை இங்ஙன்***
***வருத்தம் காணுமோ மன்னவன்?' என்னலும்,***
***அன்னான்***
***கருத்தை உன்னி, அம் மாருதி உலகு எலாம்***
***கடந்தான்.***

***மருத்தின் காதலன்*** - *வாயுமகனாகிய அனுமனின்;* ***மார்பிடை அம்பு எலாம் வாங்கி*** - *மார்பில் தைத்த அம்பு எலாம் வாங்கிவிட்டு;* ***இருத்தியோ கடிது ஏகலை*** - *நீ மருந்து கொண்டு வராமல் இருப்பாயோ விரைந்து செல்ல மாட்டாயா;* ***மன்னவன் இளவலை இங்ஙனன் வருத்தம் காணுமோ*** - *இராமன் தன் தம்பியாம் இலக்குவனை இவ்வருத்த நிலையில் காண்பானா?* ***என்னலும்*** - *என்று சாம்பவன் கூற;* ***அன்னான் கருத்தை உன்னி*** - *அத்தகையோன் எண்ணத்தை நினைத்துப் பார்த்து;* ***அம்மாருதி உலகு எலாம் கடந்தான்*** - *அவ்வனுமான் உலகங்களை எல்லாம் கடந்து சென்றான்.*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***9571. உய்த்து ஒரு திசைமேல் ஓடி உலகு எலாம் கடக்கப் பாய்ந்து,***
***மெய்த் தகு மருந்துதன்னை, வெற்பொடும் கொணர்ந்த வீரன்,***
***பொய்த்தல் இல் குறி கெடாமே பொது அற நோக்கி, பொன்போல்***
***வைத்தது வாங்கிக் கொண்டு வருதலில், வருத்தம் உண்டோ?***

***உய்த்து ஒரு திசை மேல் ஓடி*** - *(தன் கருத்தை மருந்தின் மீது) செலுத்தி வட திசையில் ஓடி;* ***உலகு எலாம் கடக்கப் பாய்ந்து*** - *உலகங்கள் எல்லாம் கடந்திடுமாறு பாய்ந்து சென்று;* ***மெய்த்தகு மருந்து தன்னை*** - *மெய்ம்மையுடன் பொருந்திய மருந்தை;* ***வெற்பொடும் கொணர்ந்த வீரன்*** - *மருத்து மலையுடன் முன்னர் கொண்டு வந்த வீரனாம் அனுமான்;* ***பொய்த்தல் இல்குறி கெடாமே பொது அறநோக்கி*** - *பொய்யில்லாத அடையாளங்களை நன்கு பார்த்து;* ***பொன் போல் வைத்தது வாங்கிக் கொண்டு வருதலில் வருத்தம் உண்டோ?*** - *பாதுகாப்பாக வைத்த பெருஞ்செல்வம் போல் போற்றி வைத்ததை மீண்டும் கொண்டு வருவதில் துன்பம் உண்டோ? (இல்லை)*

***9572. தந்தனன், மருந்துதன்னை; தாக்குதல் முன்னே யோகம்***
***வந்தது, மாண்டார்க்கு எல்லாம், உயிர் தரும் வலத்தது என்றால், நொந்தவர் நோவு தீர்க்கச் சிறிது அன்றோ? நொடிதல் முன்னே***
***இந்திரன் உலகம் ஆர்க்க, எழுந்தனன் இளைய வீரன்.***

***தந்தனன் மருந்து தன்னை*** - *அனுமன் தந்த நல்ல மருந்தை;* ***தாக்குதல் முன்னே யோகம் வந்தது*** - *மருந்தின் வாசனை வருமுன்னே நல்வினை கூடிற்று;* ***மாண்டார்க்கு எல்லாம் உயிர் தரும் வலத்தது என்றால்*** - *செத்தவர் எல்லார்க்கும் உயிர் அளிக்கும் வலிமையுடையது என்றால்;* ***நொந்தவர் நோவு தீர்க்கச் சிறிது அன்றோ*** - *வேலால் துன்புற்றவரின் துன்பம் தீர்ப்பது சிறிய சொல் அல்லவா?* ***இந்திரன் உலகம் ஆர்க்க*** - *தேவர் உலகம் ஆரவாரம் செய்ய;* ***நொடிதல் முன்னே இளைய வீரன் எழுந்தனன்*** - *நொடிப் பொழுதில் இலக்குவன் உயிர் பெற்று எழுந்தான்.*

*சில சுவடிகளில் இச்செய்யுளோடு இப்படலம் முடிவுறும்.*

*இலக்குவன் அனுமனைத் தழுவி, வீடணன் நலம் உசாவல்*

***9573.*** ***எழுந்து நின்று, அனுமன்தன்னை இரு கையால்***
***தழுவி, 'எந்தாய்!***
***விழுந்திலன் அன்றோ, மற்று அவ் வீடணன்!' என்ன,***
***விம்மித்***
***தொழும் துணையவனை நோக்கி, துணுக்கமும்***
***துயரும், நீக்கி***
***'கொழுந்தியும் மீண்டாள்; பட்டான் அரக்கன்' என்று***

***உவகை கொண்டான்***

***எழுந்து நின்று*** - இலக்குவன் எழுந்து நின்று; ***அனுமன் தன்னை இரு கையால் தழுவி*** - அனுமனைத் தன் இரு கைகளாலும் தழுவிக்கொண்டு; ***எந்தாய் விழுந்திலன் அன்றோ மற்று அவ்வீடணன் என்ன*** - எம் தந்தை போன்றவனே! அந்த வீடணன் இறந்து பட வில்லை அல்லவா என்று கேட்க; ***விம்மித் தொழும் துணையவனை நோக்கி*** - (அது கேட்டுத்) தேம்பித் தன்னை வணங்கும் துணைவனைப் பார்த்து; ***துணுக்கமும் துயரும் நீக்கி*** - மன நடுக்கமும் துன்பமும் தீர்ந்து; ***அரக்கன் பட்டான்*** - இராவணன் இனி மாண்டான்; ***கொழுந்தியும் மீண்டாள்*** - சீதையும் சிறை மீண்டாள்; ***என்று உவகை கொண்டான்*** - என மகிழ்ச்சி கொண்டான்.

*வானரத் தலைவர் இராமன்பால் செல்ல, அவன்*
*'விளைந்தது என்?' எனல்*

***9574.*** ***''தருமம்'' என்று அறிஞர் சொல்லும் தனிப்***
***பொருள்தன்னை இன்னே,***
***கருமம் என்று அனுமன் ஆக்கிக் காட்டிய தன்மை***
***கண்டால்,***
***அருமை என் இராமற்கு? அம்மா! அறம் வெல்லும்,***
***பாவம் தோற்கும்***
***இருமையும் நோக்கின்' என்னா, இராமன்பால் எழுந்து***
***சென்றார்.***

***தருமம் என்று அறிஞர் சொல்லும் தனிப்பொருள் தன்னை*** - அறம் என அறிஞர் கூறும் ஒப்பற்ற பொருளை; ***இன்னே கருமம் என்று*** - இப்போதே செய்யத் தக்கது என்று; ***அனுமன் காட்டிய தன்மை*** - அனுமன் நிரூபித்துக் காட்டிய தன்மை; ***கண்டால் இராமற்கு அருமை என்*** - நோக்கினால் இராமனுக்கு செய்தற்கு அரிய பொருள் எது? (ஒன்றுமில்லை); ***இருமையும் நோக்கின்*** - இம்மை மறுமையை ஆராயின்; ***அறம்***

**வெல்லும் பாவம் தோற்கும்** - அறம் வெல்லும் மறம் தோற்கும்; **என்னா இராமன் பால் எழுந்து சென்றார்** - என்று கூறி இராமனிடத்து எழுந்து போனார்.

*9575. ஒன்று அல பல என்று ஓங்கும் உயர் பிணத்து உம்பரோடும்*
*குன்றுகள் பலவும், சோரிக் குரை கடல் அனைத்தும் தாவிச்*
*சென்று அடைந்து, இராமன் தன்னைத் திருவடி வணக்கம் செய்தார்,*
*வென்றியின் தலைவர், கண்ட இராமன், 'என் விளைந்தது?' என்றான்.*

**ஒன்று அல பல என்று** - ஒன்று அல்லாதன பல என்று கூறுமாறு; **உயர்பிணத்து குன்றுகள் பலவும்** - உயர்ந்த பிணக் குன்றுகள் பலவற்றையும்; **சோரிக் குரைகடல் அனைத்தும்** - ஒலிக்கும் இரத்தக் கடல் அனைத்தும்; **உம்பரோடும் தாவிச் சென்று, அடைந்து** - தேவர்களோடும் கடந்து சென்று சேர்ந்து; **இராமன் தன்னை திருவடி வணக்கம் செய்தார்** - இராமனின் திருவடிகளை வணங்கினார்கள்; **வென்றியின் தலைவர்** - வெற்றி கண்ட தலைவர்கள்; **கண்ட இராமன்** - அவ்வாறு வணங்கக் கண்ட இராமன்; **விளைந்தது என் என்றான்** - நடந்தது என்ன என்று கேட்டான்.

*இராமன் அனுமனை வாழ்த்துதல்*

*9576. உற்றது முழுதும் நோக்கி, ஒழிவு அற, உணர்வு உள் ஊற,*
*சொற்றனன் சாம்பன்; வீரன் அனுமனைத் தொடரப் புல்லி,*
*'பெற்றனன் உன்னை; என்னை பெறாதன? பெரியோய்! என்றும்*
*அற்று இடையூறு செல்லா ஆயுளை ஆக!' என்றான்.*

**சாம்பன் உற்றது முழுதும் நோக்கி** - (அது கேட்ட) சாம்பன் நிகழ்ந்ததை முழுவதும் சிந்தித்து; **ஒழிவு அற உணர்வுள் ஊறச் சொற்றனன்** - ஒன்று விடாமல் இராமனின் உணர்வில் பதியும் வண்ணம் கூறினான்; **வீரன் அனுமனைத் தொடரப்புல்லி** - வீரனாம் அனுமானை இராமன் நெருங்கத் தழுவி; **பெரியோய்! உன்னைப் பெற்றனன்** - பெரியோனை! உன்னைப் பெற்று விட்டேன்; **என்னை பெறாதன்** - இனிப் பெறாத பேறு என்ன உளது? **என்றும் அற்று இடையூறு செல்லா ஆயுளை ஆக**

***என்றான்*** - எக்காலத்தும் இடையறவு பட்டு முடியாத நீண்ட ஆயுளை உடையவன் ஆகுக என வாழ்த்தினான்.

## *இலக்குவன் இராமன் பாராட்டல்*

***9577. புயல் பொழி அருவிக் கண்ணன், பொருமலன் பொங்குகின்றான்,***
***உயிர் புறத்து ஒழிய நின்ற உடல் அன்ன உருவத் தம்பி,***
***துயர் தமக்கு உதவி, மீளாத் துறக்கம் பெற்று, உயர்ந்த தொல்லைத்,***
***தயரதற் கண்டால் ஒத்த தம்முனைத் தொழுது சார்ந்தான்.***

***புயல் பொழி அருவிக் கண்ணன்*** - மேகம் போல் பொழியும் கண்ணீர் அருவியை உடைய கண்களுடையவனும்; ***பொருமலன் பொங்குகின்றான்*** - அழுது விம்முபவனும் மகிழ்ச்சி பொங்கும் மனமுடையவனும்; ***உயிர் புறத்து ஒழிய நின்ற உடல் அன்ன உருவத்தம்பி*** - உயிர் பிரிந்து வெளியே நிற்க அதைப் பிரிந்த உடம்பு போல வாடிய உருவமுடையவனும் ஆகிய தம்பி இலக்குவன்; ***துயர் தமக்கு உதவி*** - தமக்குப் பிரிவாற்றாத் துன்பம் கொடுத்து விட்டு; ***மீளாத் துறக்கம் பெற்று உயர்ந்த தொல்லைத் தயரதற் கண்டால் ஒத்த*** - இறந்து மீண்டும் வராத துறக்க உலகைப் பெற்றுயர்வுற்ற பழைய தயரதனை வரக்கண்டு மகிழ்ந்தது போன்று; ***தம்முனைத் தொழுது சார்ந்தான்*** - தன் அண்ணன் இராமனை வணங்கி வந்தடைந்தான்.

***9578. இளவலை நோக்கி, 'ஐய! இரவிதன் குலத்துக்கு ஏற்ற***
***அளவினம்; அடைந்தோர்க்கு ஆகி, மன் உயிர் கொடுத்த வன்மைத்***
***துளவு இயல் தொங்கலாய்! நீ அன்னது துணிந்தாய் என்றால்***
***அளவு இயல் அன்று; செய்தற்கு அடுப்பதே ஆகும் அன்றே?***

***இளவலை நோக்கி*** - தன்னைத் தொழுது வந்த தம்பியைப் பார்த்து; ***ஐய! துளவு இயல் தொங்கலாய்!*** - ஐயனே! துளவத்தால் கட்டிய மாலை அணிந்தவனே; ***இரவி தன் குலத்துக்கு ஏற்ற அளவினம்*** - சூரிய குல இயல்புக்குத் தக்கபடி; ***அடைந்தோர்க்கு***

***ஆகி*** *- தம்மை அடைக்கலமாக வந்தவர்க்கு உதவுவோர் ஆகி;* ***மன் உயிர் கொடுத்த வன்மை*** *- நிலை பெற்ற உயிர் கொடுக்கும் வலிய செயல்;* ***அன்னது துணிந்தாய் என்றால்*** *- நீ அச்செயல் செய்யத் துணிந்தாய் என்றால்;* ***அளவியல் அன்று*** *- அது நின் தகுதிக்கு மிகுதியான அளவினை உடையதன்று;* ***அடுப்பதே ஆகும் அன்றே*** *- செய்தற்கு ஏற்ற செயலே ஆகும் அல்லவா?*

***9579. புறவு ஒன்றின் பொருட்டின் யாக்கை புண் உற அரிந்த புத்தேள்***
***அறவனும், ஐய! நின்னை நிகர்க்கிலன்; அப்பால் நின்ற***
***பிற வினை உரைப்பது என்னே? பேர் அருளாளர் என்பார்***
***கறவையும் கன்றும் ஒப்பார், தமர்க்கு இடர் காண்கில்' என்றான்.***

***ஐய! புறவு ஒன்றின் பொருட்டு*** *- ஐயனே! தன்னிடம் அடைக்கலம் புகுந்த புறாவிற்காக;* ***இன்யாக்கை புண் உற அரிந்த புத்தேள் அறவனும்*** *- தன் இனிய உடம்பை புண் உண்டாகத் தசை அரிந்தளித்த தெய்வத்தன்மையுள்ள அறவானாம் சிபியும்;* ***நின்னை நிகர்க்கிலன்*** *- உனக்கு ஒப்பாக மாட்டான்;* ***அப்பால் நின்ற பிறவினை உரைப்பது என்னே*** *- அதற்குப் பிறகு ஒழிந்த பிற செயல்களைக் கூறுவது என்ன பயன்?* ***பேர் அருளாளர் என்பார்*** *- பெரிய அருளாளர் எனப்படுவோர்;* ***தமர்க்கு இடர் காணில்*** *- தம்மைச் சார்ந்தவர்க்குத் துன்பம் வரக் கண்டால்;* ***கறவையும் கன்றும் ஒப்பார் என்றான்*** *- பசுவையும் கன்றையும் போல் விரைந்து சென்று காப்பர் என்று கூறினான்.*

***9580. சாலிகை முதல ஆன போர்ப் பரம் தாங்கிற்று எல்லாம்***
***நீல் நிற ஞாயிறு அன்ன நெடியவன் முறையின் நீக்கி,***
***கோல் சொரி தனுவும் கொற்ற அனுமன் கைக் கொடுத்து, கொண்டல்***
***மேல் நிறை குன்றம் ஒன்றில் மெய்ம் மெலிவு ஆற்றலுற்றான்.***

***சாலிகை முதல ஆன போர்ப்பரம் தாங்கிற்று எல்லாம்*** *- கவசம் முதலிய போர்க்கெனத் தாங்கிய பாரத்தை எல்லாம்;* ***நீல் நிற ஞாயிறு அன்ன நெடியவன் முறையின் நீக்கி*** *- நீல நிறமுள்ள சூரியனைப் போல இராமன், இலக்குவன்*

*உடம்பிலிருந்து முறையாக நீக்கி;* **கோல் சொரி தனுவும்** - *அம்புகளை எய்யும் வில்லையும்;* **கொற்ற அனுமன் கை கொடுத்து** - *வெற்றிக்குரிய அனுமனின் கையில் கொடுத்துவிட்டு;* **கொண்டல் மேல் நிறை குன்றம் ஒன்றில்** - *மேகங்கள் நிறைந்த குன்றம் ஒன்றின்மேல்;* **மெய்ம்மெலிவு ஆற்றலுற்றான்** - *இலக்குவன் உடல் மெலிவை ஆற்றச் செய்தான்.*

## *வானரர் களம் காண் படலம்*

*இராமன் கொன்று குவித்த அரக்கர்களின் மூலப்படையை வானரங்கள் கண்டதைக் கூறும் படலம். இது 'வானரர் களங்காட்சிப் படலம்', 'வானரச் சேனை களங்காண் படலம்', 'வானரத் தலைவர்கள் களங்காட்சிப்படலம்', 'வானர வீரர்கள் களங்காண்படலம்' எனவும் காணப்பெறும். வேறுசில சுவடிகளில் இப்படலத்தை 'இராவணன் களங்காண் படல'த்துடன் சேர்த்துக் 'களங்காண் படலம்' எனக் குறிப்பர்.*

*மூலபலப்படை அழிந்தது. சுக்கிரீவன் தன்படையுடன் சென்று இராமனை வணங்கி 'அரக்கர் படையை வென்றது எவ்வாறு?' எனக் கேட்டான். 'வீடணனோடு களத்திற்சென்று கண்டால் புலப்படும்' என இராமன் கூறினான். வானர வீரர்கள் வீடணனோடு சென்று அவன் களத்தைக் காட்டி நிற்க அதுகண்டு அஞ்சினர். பின்னர் அதனை வகைப்படுத்திக் கூறுமாறு வீடணனைக் கேட்டனர். வீடணனும் ஒவ்வொன்றையும் சிறப்பித்துக் கூறக் கண்டு சலிப்படைந்த வானர வீரர் 'இவ்வாறே காலம் கடத்துவதை விட இதனை முடித்த இராமனை வணங்குவோம்' என்றனர். பின்னர் வீடணனோடு இராமனிடம் சென்று வணங்கி அவன் திறனை வியந்து நின்றனர்.*

### *மூலபலப் படையின் அழிவு காணச் சுக்கிரீவனை இராமன் ஏவல்*

***9581. ஆய பின், கவியின் வேந்தும், அளப்ப அருந் தானையோடும்,***
***மேயினன், இராமன் பாதம் விதி முறை வணங்கி; வீந்த***
***தீயவர் பெருமை நோக்கி, நடுக்கமும் திகைப்பும் உற்றார்,***
***ஓய்வுறு மனத்தார் ஒன்றும் உணர்ந்திலர், நாணம் உற்றார்.***

**ஆய பின்** - *அதன் பிறகு;* **கவியின் வேந்தும் அளப்ப அருந்தானையோடும் மேயினன்** - *சுக்கிரீவனும் அளக்க முடியாத தன் வானரப் படையோடு வந்து சேர்ந்தால்;* **இராமன் பாதம் விதிமுறை வணங்கி** - *இராமனின் திருவடியைத் துதித்து;* **வீந்த தீயவர் பெருமை நோக்கி** - *இறந்துபட்ட அரக்கரின் பெருக்கைக் கண்டு;* **நடுக்கமும் திகைப்பும் உற்றார்** - *நடுக்கமும் திகைப்பும் கொண்டார்;* **ஓய்வுறு மனத்தார் ஒன்றும் உணர்ந்திலர்** - *ஓய்ந்த உள்ளத்தினராய் எதுவும் உணரவில்லை;* **நாணம் உற்றார்** - *வெட்கப்பட்டார்.*

*இளைப்பாறிய செய்தி முன் படலத்திலுளது. அரக்கர் பெருக்கைக் கண்டதும் நடுக்கமும் அவர்கள் அனைவரையும் இராமன் ஒருவனே கொன்றான் என எண்ணி வியப்பும் கொண்டார், 'இத்தகைய வலிமை படைத்த இராமனுக்கு நாம்*

*உதவுகின்றோம்' என எண்ணிய சுக்கிரீவன் முதலானார்க்கு நாணம் உண்டாயிற்று. எனவே பேச்சடங்கி நின்றனர்.*

***9582. 'மூண்டு எழு சேனை வெள்ளம் உலகு ஒரு மூன்றின்***
***மேலும்***
***நீண்டு உள அதனை, ஐய! எங்ஙனம் நிமிர்ந்தது?'***
***என்னத்***
***தூண் திரண்டனைய திண் தோள் சூரியன் சிறுவன்***
***சொல்ல,***
***'காண்டி நீ, அரக்கர் வேந்தன்தன்னொடும் களத்தை'***
***என்றான்.***

***ஐய !*** *- இராமனே;* ***மூண்டு எழு சேனை வெள்ளம்*** *- போரில் பகைமிகுந்து எழும் சேனைப் பெருக்கம்;* ***உலகு ஒரு மூன்றின் மேலும் நீண்டுஉள*** *- மூன்றுலகங்களை விட நீண்டுள்ளன;* ***அதனை எங்ஙனம் நிமிர்ந்தது? என்ன*** *- அப்படிப்பட்டதை எவ்வாறு வென்றது என்று;* ***தூண்திரண்டனைய திரள் தோள் சூரியன் சிறுவன் சொல்ல*** *- தூண் பருத்துள்ளது போல் திண்ணிய தோளையுடைய சூரியன்மகனாம் சுக்கிரீவன் கேட்க;* ***'நீ அரக்கர் வேந்தன் தன்னொடும் களத்தைக் காண்டி' என்றான்*** *- 'நீ வீடணனொடு சென்று போர்க்களத்தை நேரில் பார்' என்று இராமன் சொன்னான்.*

***9583. தொழுதனர் தலைவர் எல்லாம்; தோன்றிய காதல்***
***தூண்ட,***
***'எழுக' என விரைவின் சென்றார், இராவணற்கு***
***இளவலோடும்; கழுகொடு பருந்தும், பாறும்,***
***பேய்களும், கணங்கள்***
***மற்றும்,***
***குழுவிய களத்தைக் கண்ணின் நோக்கினர்,***
***துணுக்கம் கொண்டார்.***

***தலைவர் எல்லாம் தொழுதனர்*** *- வானரத் தலைவர்கள் எல்லாம் (இராமனைத்) தொழுதனர்;* ***தோன்றிய காதல் தூண்ட*** *- உண்டான ஆசை தூண்டுவதால்;* ***இராவணற்கு இளவலோடும்*** *- இராவணன் தம்பியாம் வீடணனோடும்;* ***'எழுக' என விரைவின் சென்றார்*** *- 'எழுக' என்று கூறி விரைவாகச் சென்றனர்;* ***கழுகொடு, பருந்தும் பாறும் பேய்களும் கணங்கள் மற்றும் குழுவிய களத்தை*** *- கழுகும், பருந்தும், பாறும் பேய்களும் மற்றுமுள்ள காகம் முதலிய கூட்டமும் கூடியுள்ள போர்க்களத்தை;* ***கண்ணின் நோக்கினர்*** *- கண்ணில் கண்டனர்;* ***துணுக்கம் கொண்டார்*** *- மனநடுக்கம் கொண்டனர்.*

***9584. ஏங்கினார்; நடுக்கமுற்றார்; இரைத்து இரைத்து,***
***உள்ளம் ஏற,***
***வீங்கினார்; வெருவலுற்றார்; விம்மினார்; உள்ளம்***
***வெம்ப,***
***ஓங்கினார்; மெள்ள மெள்ள உயிர் நிலைத்து,***
***உவகை ஊற,***
***ஆங்கு அவர் உற்ற தன்மை யார் அறிந்து***
***அறையகிற்பார்?***

***ஏங்கினார்*** - *அழுதார்கள்;* ***நடுக்கமுற்றார்*** - *நடுக்கம் அடைந்தார்கள்;* ***இரைத்து இரைத்து உள்ளம் ஏற வீங்கினார்*** - *பெருமூச்சு வாங்கி மனம் துன்புற உடம்பு வீங்கினார்கள்;* ***வெருவலுற்றார்*** - *அஞ்சினார்கள்;* ***உள்ளம் வெம்ப விம்மினார்*** - *மனம் வெதும்பத் தேம்பினார்கள்;* ***மெள்ள மெள்ள உயிர் நிலைத்து*** - *மெதுவாக உயிர்ப்பு நிலைபெற்று;* ***உவளக ஊற*** - *மகிழ்ச்சி பொங்க;* ***ஓங்கினார்*** - *உணர்வு மிகுந்தார்கள்;* ***ஆங்கு அவர் உற்ற தன்மை*** - *அப்போது அவர்கள் அடைந்த மெய்ப்பாட்டுத் தன்மையை;* ***அறிந்து அறைய கிற்பார் யார்*** - *தெரிந்து சொல்ல வல்லவர்கள் யார்? (ஒருவருமில்லை);*

*போர்க்களக் காட்சியை வீடணன் காட்டிக் கூறுதல்*

***9585. ஆயிரம் பருவம் கண்டால், காட்சிக்கு ஓர் கரையிற்று***
***அன்றால்;***
***மேயின துறைகள்தோறும் விம்மினார் நிற்பது***
***அல்லால்,***
***பாய் திரைப் பரவை ஏழும் காண்குறும் பதகர் என்ன,***
***'நீ இருந்து உரைத்தி' என்றார்; வீடணன் நெறியின்***
***சொல்வான்;***

***பாய் திரைப்பரவை ஏழும்*** - *அலைகள் பாய்ந்து வரும் கடல்கள் ஏழையும்;* ***காண்குறும் பதகர் என்ன*** - *காண விரும்பும் பாவிகளைப் போல;* ***மேயின துறைகள் தோறும்*** - *விரும்பிய துறைகள் தோறும்;* ***விம்மினார்*** - *மகிழ்ந்து;* ***நிற்பது அல்லால்*** - *நிற்பதன்றி;* ***ஆயிரம் பருவம் கண்டால் காட்சிக்கு ஓர் கரையிற்று அன்றால்*** - *ஆயிரம் ஆண்டுகள் ஆனாலும் சாட்சிக்கு ஒரு கரை காணல் இயலாது;* ***நீ இருந்தி உரைத்தி என்றார்*** - *அமைதியாக இருந்து நீ சொல்க என்றனர்;* ***வீடணன் நெறியின் சொல்வான்*** - *வீடணன் முறையாகக் கூறுவான்.*

*சந்தக் கலித்துறை*

***9586. 'காகப் பந்தர்ச் செங் களம் எங்கும், செறி கால***
***ஓகத்து அம்பின் பொன்றினவேனும், உடல் ஒன்றி,***
***மேகச் சங்கம் தொக்கன, வீழும் வெளி இன்றி,***
***நாகக் குன்றின் நின்றன காண்மின் - நமரங்காள்!***

***நமரங்காள்*** - *நம்மவர்களே!;* ***ஓகத்து அம்பின் பொன்றினவேனும்*** - *(இராமனின்) அம்புக் கூட்டத்தால் இறந்தன ஆயினும்;* ***உடல் ஒன்றி*** - *உடல்கள் ஒன்றுடன் ஒன்று ஒட்டி;* ***செறி கால*** - *இரத்தச் சேற்றில் சிக்கிய கால்களுடன்;* ***மேகச் சங்கம் தொக்கன*** - *மேகக் கூட்டம் கூடியது போல்;* ***வீழும் வெளி இன்றி*** - *தரையில் வீழ இடமின்றி;* ***காகப் பந்தர் செங்களம் எங்கும்*** - *காகங்களிட்ட பந்தரை உடைய சிவந்த போர்க்களம் எங்கும்;* ***நாகக் குன்றின் நின்றன காண்மின்*** - *யானை மலைகள் நின்றுள்ள நிலையைப் பாரீர்.*

*ஓகம் - பெருங்கூட்டம்; சங்கம் - கூட்டம்; நாகம் - யானை*

***9587. 'வென்றிச் செங் கண் வெம்மை அரக்கர் விசை ஊர்வ,***
***ஒன்றிற்கு ஒன்று உற்று அம்பு தலைப்பட்டு உயிர் நுங்க,***
***பொன்றி, சிங்கம் நாக அடுக்கல் பொலிகின்ற***
***குன்றில் துஞ்சும் தன்மை நிகர்க்கும் குறி காணீர்.***

***வென்றிச் செங்கண் வெம்மை அரக்கர்*** - *வெற்றி கொண்டு முன்னர் விளங்கிய சிவந்த கண்ணும் கொடுமையுமுடைய அரக்கர்;* ***விசை ஊர்வ*** - *(இராமனின் அம்புகள்) வேகமாக வந்துதைக்க;* ***அம்பு ஒன்றிற்கு ஒன்று உற்று தலைப்பட்டு*** - *அம்புகள் ஒன்றின் மேல் ஒன்று முற்பட வந்து பாய்ந்து;* ***உயிர் நுங்க*** - *தம் உயிரைப் பருகியதால்;* ***பொன்றி*** - *இறந்து;* ***சிங்கம் நாக அடுக்கல் பொலிகின்ற குன்றில் துஞ்சும் தன்மை*** - *சிங்கங்கள் யானைகளாம் குன்றின் மேல் உறங்கும் தன்மையை;* ***நிகர்க்கும் குறி காணீர்*** - *ஒத்து நிற்கும் குறிப்பைப் பாரீர்.*

***9588. 'அளியின் பொங்கும் அங்கணன் ஏவும் அயில் வாளிக்***
***களியில் பட்டார் வாள் முகம், மின்னும் கரை இல்லாப்***
***புளினத் திட்டின் கண் அகன் வாரிக் கடல் பூத்த***
***நளினக் காடே ஒப்பன காண்மின் - நமரங்காள்!***

***அளியின் பொங்கும் அங்கணன்*** - *அருள் ததும்பும் அழகிய கண்களையுடைய இராமன்;* ***ஏவும் அயில்வாளிக் களியின் பட்டார்*** - *ஏவிய கூரிய அம்புகளால் (இறக்க வாய்ப்புப் பெற்ற) களிப்போடு மடிந்த அரக்கரின்;* ***மின்னும் கரையில்லா வாள்முகம்*** - *மின்னுகின்ற அளவில்லா ஒளி படைத்த முகங்கள்;* ***புளினத் திட்டின் கண் அகன் வாரிக் கடல் பூத்த*** - *மணல் திட்டுக்களின் அகன்ற நீர் மிகுந்த கடலில் மலர்ந்த;* ***நளினக்காடே ஒப்பன*** - *தாமரைக் காடே போல் வன;* ***நமரங்காள்! காண்மின்*** - *நம்மவர்களே! பாருங்கள்.*

***9589. 'ஒழுகிப் பாயும் மும் மத வேழம் உயிரோடும்***
***எழுகிற்கில்லாச் செம்புனல் வெள்ளத்திடை இற்ற;***
***பழகிற்கில்லாப் பல் திரை தூங்கும் படர் வேலை***
***முழுகித் தோன்றும் மீன் அரசு ஒக்கும் முறை நோக்கீர்!***

***ஒழுகிப் பாயும் மும்மதவேழம்*** - *தரையில் ஒழுகிப் பாயும் கன்னம், கபோலம், பீசம் என்னும் உறுப்புகளில் மதநீர் கொண்ட யானைகள்;* ***உயிரோடும் எழுகிற்கில்லா*** - *உயிரோடிருந்தும் எழமுடியாத;* ***செம்புனல் வெள்ளத்திடை இற்ற*** - *இரத்த வெள்ளத்தில் தனித்தனி ஆயின;* ***பழகிற்கில்லா*** - *பழகுதல் இல்லாத;* ***பல்திரை தூங்கும்*** - *பல அலைகள் மடங்கி;* ***படர்வேலை*** - *பரவுகின்ற கடலில்;* ***முழுகித் தோன்றும்*** - *மூழ்கி வெளிப்படும்;* ***மீன் அரசு ஒக்கும்*** - *மீன் அரசு போலிருக்கும்;* ***முறை நோக்கீர்*** - *முறையைப் பாருங்கள்.*

***9590. 'பூ வாய் வாளிச் செல் எறி காலைப் பரி பொன்ற,***
***கோ ஆர் விண்வாய் வெண் கொடி திண் பாயொடு கூட,***
***மா வாய் திண் தேர் மண்டுதலால், நீர் மறி வேலை***
***நாவாய் மானச் செல்வன காண்மின் - நமரங்காள்!***

***நமரங்காள் !*** - *நம்மவர்களே!;* ***பூவாய் வாளிச் செல் எறிகாலை*** - *கூரிய முனையை உடைய அம்புகளாம் இடிகள் வீழ்ந்து எறிந்த காலத்து;* ***பரிபொன்ற*** - *குதிரைகள் இறக்க;* ***கோ ஆர் விண்வாய்*** - *சிறப்புமிக்க வானத்திடையே;* ***வெண்கொடி திண்பாயொடு கூட*** - *வெள்ளைக் கொடி திண்ணிய பாயொடு பொருந்த;* ***மாவாய் திண்தேர் மண்டுதலால்*** - *குதிரைகள் பூட்டிய வலிய தேர்கள் இரத்த வெள்ளத்தில் நிற்பதால்;* ***நீர்மறி வேலை நாவாய்மானச் செல்வன*** - *நீர் நிறைந்த கடலிலே மரக்கலங்கள் போலச் செல்வனவற்றை;* ***காண்மின்*** - *பாருங்கள்.*

*9591. **'கடக் கார் என்னப் பொங்கு கவந்தத்தொடு கைகள்***
***தொடக்காநிற்கும் பேய், இலயத்தின் தொழில் பண்ணி,***
***மடக்கோ இல்லா வார் படிமக் கூத்து அமைவிப்பான்,***
***நடக் கால் காட்டும் கண்ணுளர் ஒக்கும் - நமரங்காள்!***

***நமரங்காள் !*** *- நம்மவர்களே!;* ***கடக் கார் என்ன*** *- உடல் மேகங்களொடு ஒத்திருக்க;* ***பொங்கு கவந்தத் தொடுகைகள்*** *- எழுச்சியுற்ற கவந்தத்திற்கு ஏற்பக் கைகளை;* ***தொடக்கா நிற்கும் பேய்*** *- சேர்க்கா நிற்கின்ற பேய்கள்;* ***இலயத்தின் தொழில் பண்ணி*** *- தாளஒற்றுக்கு ஏற்ப செயலைச் செய்து;* ***மடக்கோ இல்லா வார் படிமக் கூத்து*** *- சோம்பலில்லாத நீண்ட அபிநயக் கூத்தை;* ***அமைவிப்பான்*** *- பொருந்தச் செய்யுமாறு;* ***நடக்கால் காட்டும்*** *- நடனக் காலைக் காட்டுகின்ற;* ***கண்ணுளர் ஒக்கும்*** *- பரத ஆசிரியனைப் போலும்.*

*கண்ணுளர் - கூத்தர்*

***'கவந்த மாடமுன்பு தங் களிப்பொ டாடு பேயினம்***

***நிவந்த ஆடலாட்டுவிக்கும் நிமித்த காரர் போலுமே'***

*என்ற கலிங்கத்துப் பரணிப்பாடலை (4.32) ஒப்பிட்டுக் காணலாம். பேய் கூத்தாசிரியனுக்கும் கவந்தம் கூத்துப் பயில்வோனுக்கும் உவமை.*

*9592. **'மழுவின் கூர் வாய் வன் பல் இடுக்கின் வய வீரர்***
***குழுவின் கொண்டந் நாடி தொடக்கப் பொறி கூட்டித்***
***தழுவிக் கொள்ள, கள்ள மனப் பேய் அவைதம்மை***
***நழுவிச் செல்லும் இயல்பின காண்மின் - நமரங்காள்!***

***நமரங்காள்*** *- நம்மவர்களே!;* ***மழுவின் கூர்வாய் வன்பல் இடுக்கின்*** *- மழுவினுடைய கூரிய வாய் போன்ற வலிய பல்லின் இடுக்கிலே நடனமிடும் பேயின் கால்கள்;* ***வயவீரர் குழுவின் கொண்டு*** *- வெற்றிவீரர் கூட்டமாகக் கொண்ட;* ***அந்நாடி தொடக்கப் பொறி கூட்டி*** *- அந்த நரம்புகள் தொடக்குதலை உடைய யந்திரம் போல;* ***தழுவிக் கொள்ள*** *- கட்டிக் கொள்ள;* ***கள்ளமனப் பேய்*** *- வஞ்சக உள்ளமுடைய பேய்கள்;* ***அவை தம்மை நழுவிச் செல்லும் இயல்பின*** *- அவற்றைத் தள்ளி நழுவிப் போகின்ற தன்மையுடையதை;* ***காண்மின்*** *- பாருங்கள்.*

*9593. **'பொன்னின் ஓடை மின் பிறழ் நெற்றிப் புகர் வேழம்,***

***பின்னும் முன்னும் மாறின வீழ்வின் பிணையுற்ற,***
***தன்னின் நேரா மெய் இரு பாலும் தலை பெற்ற***
***என்னும் தன்மைக்கு ஏய்வன பல் வேறு இவை காணீர்.***

***பொன்னின் ஓடை*** - *பொன்னாலாகிய நெற்றிப் பட்டத்தால்;* ***மின்பிறழ் நெற்றிப்புகர் வேழம்*** - *ஒளிவிளங்கும் நெற்றியில் செம்புள்ளிகள் கொண்ட யானைகள்;* ***பின்னும் முன்னும் மாறின வீழ்வின் பிணையுற்ற*** - *அம்புகளால் வீழும் போது பின்புறமும் முன்புறமுமாக மாறினவாகச் சேர்ந்துள்ளவை;* ***தன்னின் நேரா*** - *தன்னில்தான் ஒப்பாக;* ***மெய் இருபாலும் தலைபெற்ற*** - *உடம்பின் இருபக்கமும் தலையைப் பெற்ற புதியவிலங்கு;* ***என்னும் தன்மைக்கு ஏய்வன*** - *என்று கூறும் பண்பிற்குப் பொருந்துவன;* ***பல்வேறு இவை காணீர்*** - *பலவேறான இவற்றைப் பாரீர்.*

***9594. 'நாமத் திண் போர் முற்றிய கோப நகை நாறும்,***
***பாமத் தொல் நீர் அன்ன நிறத்தோர் பகு வாய்கள்,***
***தூமத்தோடும் வெங் கனல் இன்னும் சுடர்கின்ற***
***ஓமக் குண்டம் ஒப்பன பல் வேறு இவை காணீர்.***

***நாமத்திண்போர் முற்றிய*** - *அச்சமூட்டும் வலிய போரில் முதிர்ந்த;* ***கோப நகை நாறும்*** - *சினக் கடும் சிரிப்பில் தோன்றியவும்;* ***பாமத் தொல் நீர் அன்ன*** - *பரவுகின்ற பழமையான நீரையுடைய கடல்போல்;* ***நிறத்தோர் பகுவாய்கள்*** - *நிறத்தையுடையவுமான ஒப்பில்லாத பிளவுபட்ட வாய்கள்;* ***தூமத்தொடு வெங்கனல் இன்னும் சுடர்கின்ற*** - *புகையுடன் கொடிய நெருப்பு இன்னும் எரிகின்ற;* ***ஓமக்குண்டம் ஒப்பன*** - *ஓமகுண்டங்களைப் போன்றன;* ***பல்வேறு இவை காணீர்*** - *பலவேறுபட்ட இவற்றைப் பாருங்கள்.*

***9595. 'மின்னும் ஓடை ஆடல் வயப் போர் மிடல் வேழக்***
***கன்னம் மூலத்து உற்றன வெண் சாமரை காணீர்;***
***மன்னும் மா நீர்த் தாமரை மானும் வதனத்த***
***அன்னம் மெல்லத் துஞ்சுவ ஒக்கின்றவை காணீர்.***

***மின்னும் ஓடை ஆடல்*** - *மின்னுகின்ற நெற்றிப்பட்டத்தையும் ஆடலையும் உடைய;* ***வயப்போர் மிடல் வேழக்கன்னம் மூலத்துற்றன*** - *வெற்றி பொருந்திய போரிலே வலிமை மிக்க யானைகளின் காதின் அடிப்பக்கத்திலே அமைந்துள்ள;* ***வெண்சாமரை காணீர்*** - *வெண்சாமரைகளைப் பாரீர்;* ***மன்னும் மாநீர்த் தாமரைமானும்*** - *நிலைபெற்ற மிகுந்த நீரில் உள்ள தாமரை மலரை ஒத்த;* ***வதனத்த*** - *(வீரரின்) முகத்தின்மீது படிந்த அவைகள்;* ***அன்னம் மெல்லத் துஞ்சுவ ஒக்கின்றவை காணீர்*** -

*அன்னப்பறவைகள் அம்மலர்களில் மெல்லத் தூங்குகின்றவை ஒக்கும். அவற்றைப் பாரீர்.*

***9596. 'ஒளிம் முற்றாது உற்று உயர் வேழத்து ஒளிர் வெண் கோடு,***
***ஆளின் முற்றாச் செம் புனல் வெள்ளத்தவை காணீர்;***
***கோளின் முற்றாச் செக்கருள் மேகக் குழுவின்கண்***
***நாளின் முற்றா வெண் பிறை போலும் - நமரங்காள்!***

***நமரங்காள்*** *- நம்மவர்களே!;* ***ஆளின் முற்றாச் செம்புனல் வெள்ளத்து*** *- வீரர்களால் நிரம்பப் பெறாத இரத்த வெள்ளத்தில்;* ***ஒளிம் முற்றாது உற்று உயர் வேழத்து*** *- ஒழுங்காக முற்றுகை செய்யாது போர்க்களத்தை அடைந்த உயர்ந்த யானைகளின்;* ***ஒளிர் வெண் கோடு காணீர்*** *- ஒளிவீசுகின்ற வெண்மையான கொம்புகளைக் காணுங்கள்!;* ***கோளின் முற்றாச் செக்கருள்*** *- ஒளியில் நிரம்பாச் செக்கர் வானத்துள் கிடக்கும்;* ***மேகக்குழுவின் கண்*** *- மேகக் கூட்டங்களினிடத்தே;* ***நாளின் முற்றாவெண்பிறை போலும்*** *- நாளால் நிரம்பாத வெள்ளிய பிறைமதி போல விளங்கும்;*

***9597. 'கொடியும் வில்லும், கோலொடு வேலும், குவி தேரும்,***
***துடியின் பாதக் குன்றின்மிசைத் தோல் விசியின் கட்டு***
***ஒடியும் வெய்யோர் கண் எரி செல்ல, உடன் வெந்த***
***தடி உண்டு ஆடிக் கூளி தடிக்கின்றன காணீர்.***

***ஒடியும் வெய்யோர் கண் எரிசெல்ல*** *- இறக்கும் வீரர்களின் கண்களில் தோன்றும் கோபத் தீ செல்ல;* ***கொடியும் வில்லும் கோலொடு வேலும் குவி தேரும்*** *- கொடிகளையும் விற்களையும் அம்புகளோடு வேல்களையும் குவிந்த தேர்களையும்;* ***துடியின் பாதக் குன்றின்மிசை*** *- உடுக்கைபோன்ற அடிகளையுடைய மலைபோன்ற யானைகளின் மேல்;* ***விசியின் கட்டு*** *- வாரினால் விரிந்து கட்டிய அம்பாரிகளையும் சுட்டிக்காட்ட;* ***உடன்வெந்த தடியுண்டு*** *- அவற்றுடன் வெந்த தசையைத் தின்று;* ***ஆடிக்கூளி தடிக்கின்றன*** *- ஆடிக் கொண்டு பேய்கள் பருக்கின்றன;* ***காணீர்*** *- பாருங்கள்.*

***9598. 'சகரம் முந்நீர்ச் செம்புனல் வெள்ளம் தடுமாறா,***
***மகரம் தம்மின் வந்தன காணா, மனம் உட்கி,***
***''சிகரம் அன்ன! யானைகொல்?'' என்னச் சில நாணி,***
***நகரம் நோக்கிச் செல்வன காண்மின் - நமரங்காள்!***

***நமரங்காள்*** - *நம்மவர்களே!;* ***சகரம் முந்நீர்ச் செம்புனல் வெள்ளம் தடுமாறா*** - *சகரரால் தோண்டப் பெற்ற கடல்நீர், போர்க்கள இரத்த வெள்ளம் தம்முன் கலந்து விட்டமையால்;* ***மகரம் தம்மின் வந்தன காணா*** - *மகரமீன்கள் தம்மோடு வந்து நிற்பவற்றைக் கண்டு யானைகள்;* ***மனம் உட்கி*** - *உள்ளம் அஞ்சி;* ***சிகரம் அன்ன யானைகொல் என்ன*** - *மலைபோன்ற யானைகள் என்றெண்ணி;* ***சிலநாணி*** - *சில மகரமீன்கள் நாணத்தோடு,* ***நகரம் நோக்கிச் செல்வன காண்மீன்*** - *தம் வாழுமிடமான கடலை நோக்கிப் போவனவற்றைப் பாருங்கள்.*

***9599. 'விண்ணில் பட்டார் வெற்பு உறழ் காயம் பல, மேன் மேல்,***
***மண்ணில் செல்வார் மேனியின் வீழ, மடிவுற்றார்,***
***எண்ணின் தீரா அன்னவை தீரும் மிடல் இல்லாக்***
***கண்ணில் தோன்றார், விம்மி உளைக்கும் படி காணீர்.***

***விண்ணில் பட்டார்*** - *வானத்தில் (செல்லும் போது இராமனின் அம்புபட்டு) இறந்தவர்களின்;* ***வெற்புஉறழ் காயம் பல*** - *மலைபோன்ற உடம்புகள் பல;* ***மண்ணில் செல்வார் மேனியின் மேன்மேல் வீழ*** - *மண்ணுலகில் நடப்போர் உடம்பின் மேல் மேலும் வீழ்தலால்;* ***மடிவுற்றார்*** - *மடியப்பட்டவர்கள்;* ***எண்ணில் தீரா அன்னவை தீரும்*** - *அளவிடமுடியாத அப்பிணங்களை நீக்கும்;* ***மிடல் இல்லார் கண்ணில் தோன்றார்*** - *வலிமை இல்லாராய் நம் கண்களுக்கு வெளிப்படாதவராய்;* ***விம்மி உளைக்கும்படி காணீர்*** - *தேம்பி வருந்தும் நிலையைப் பாருங்கள்.*

***9600. 'அச்சின் திண் தேர், ஆனையின், மாமேல், காலாளின்***
***மொய்ச்சுச் சென்றார் மொய் குருதித் தாரைகள் முட்ட,***
***உச்சிச் சென்றான்ஆயினும், வெய்யோன், உதயத்தின்***
***குச்சிச் சென்றான் ஒத்துளன் ஆகும் குறி காணீர்.***

***அச்சின் திண்தேர் ஆனையின், மாமேல்*** - *அச்சுடைய வலிய தேரின் மேலும் யானைகள் மேலும் குதிரைகள் மேலும்;* ***காலாளின் மொய்ச்சுச் சென்றார்*** - *காலாட் படையோடு நெருங்கிப் போர்க்குச் சென்ற அரக்கர்களின்;* ***மொய் குருதித் தாரைகள் முட்ட*** - *(உடம்பிலிருந்து) வெளிவந்த இரத்த வெள்ளங்கள் பாய்ந்ததால்;* ***வெய்யோன் உச்சிச் சென்றான் ஆயினும்*** - *கதிரவன் வானின் நடு உச்சியை அடைந்தான் ஆனாலும்;* ***உதயத்தின் முச்சிச் சென்றான்*** - *உதயமலையில்*

*தோன்றும் செங்கதிரவன்;* ***ஒத்துளன் ஆகும் குறி காணீர்*** *- ஒத்திருக்கும் நிலையைப் பாருங்கள்.*

***9601. 'கால் தோய் மேனிக் கண்டகர் கண்டப்படு காலை,***
***"ஆறோ!" என்ன, விண் படர் செஞ் சோரியது ஆகி,***
***வேறாய் நின்ற வெண் மதி செங் கேழ் நிறம் விம்மி,***
***மாறு ஓர் வெய்யோன் மண்டிலம் ஒக்கின்றது காணீர்.***

***கால்தோய் மேனிக் கண்டகர்*** *- கருநிற உடல் கொண்ட அரக்கர்;* ***கண்ட படுகாலை*** *- துண்டு படும் போது;* ***ஆறோ என்ன*** *- இது ஆறோ எனக் கண்டோர் கருத;* ***விண்படர் செஞ்சோரியது ஆகி*** *- வானில் பாயும் சிவந்த இரத்தமாகி;* ***வேறாய் நின்ற வெண்மதி*** *- வேறாக நின்ற வெண்ணிறச் சந்திரன்;* ***செங்கேழ் நிறம் விம்மி*** *- செந்நிறம் மிகுந்து;* ***மாறுஓர் வெய்யோன் மண்டிலம்*** *- மாறுபட்ட ஒரு கதிரவனின் மண்டிலம்;* ***ஒக்கின்றது காணீர்*** *- போன்றுள்ளதைப் பாரீர்.*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***9602. 'வான் நனைய, மண் நனைய, வளர்ந்து எழுந்த***
***கொழுங் குருதி மகர வேலை -***
***தான் நனைவுற்று எழும் பறவைச் சிறை தெளித்து,***
***புது மழையின் துள்ளி தாங்கி,***
***மீன் அனைய நறும் போதும், விரை அரும்பும்,***
***சிறை வண்டும், நிறம் வேறு எய்தி,***
***கானகமும் கடி பொழிலும் முறி ஈன்ற***
***போன்று ஒளிர்வ காண்மின்! காண்மின்!***

***வான் நனைய*** *- வானம் நனையவும்;* ***மண் நனைய வளர்ந்து எழுந்த*** *- மண்நனையவும் மிக எழுந்த;* ***கொழுங் குருதி மகர வேலை தான் நனைவுற்று*** *- செழுமையான இரத்தத்தில் மகர மீன்களுடைய கடலும் நனைய;* ***எழும் பறவைச் சிறை தெளித்து*** *- வானில் எழும் பறவைகளின் சிறகுகளில் தெளித்த;* ***புது மழையின் துள்ளி தாங்கி*** *- புதிய மழைத் துளிகளைத் தாங்கியிருப்பதால்;* ***மீன் அனைய நறும் போதும்*** *- விண்மீன் போன்ற வெள்ளிய நறுமலர்களும்;* ***விரை அரும்பும் சிறைவண்டும்*** *- மணமிக்க அரும்பும் கருஞ்சிறகு வண்டுகளும்;* ***வேறு நிறம் எய்தி*** *- வேற்று நிறம் பெற்று;* ***கானகமும் கடிபொழிலும் முறிஈன்ற போன்று*** *- காடும் மணமிக்க சோலையும் செந்தளிர்களைத் தளிர்த்தது போன்று;* ***ஒளிர்வ காண்மின் காண்மின்*** *- விளங்குவதைப் பாருங்கள்! பாருங்கள்!*

*9603. 'வரை பொருத மத யானைத் துணை மருப்பும்,*
*கிளர் முத்தும், மணியும், வாரி,*
*திரை பொருது புறம் குவிப்பத் திறம் கொள் பணை*
*மரம் உருட்டி, சிறைப் புள் ஆர்ப்ப,*
*நுரை கொடியும் வெண் குடையும் சாமரையும்*
*எனச் சுமந்து, பிணத்தின் நோன்மைக்*
*கரை பொருது கடல் மடுக்கும் கடுங் குருதிப்*
*பேர் ஆறு காண்மின்! காண்மின்!*

***வரைபொருத மதயானைத் துணைமருப்பும்*** *- மலையொடு போரிட்ட மதமிக்க யானையின் இரட்டைக் கொம்புகளையும்;* ***கிளர் முத்தும் மணியும் வாரி*** *- (அவற்றில் தோன்றிய ஒளிமிக்க முத்துக்களையும், மணிகளையும் வாரிக்கொண்டு;* ***திரை பொருது புறம் குவிப்ப*** *- அலைகள் மோதி இருபுறமும் குவிக்க;* ***திறம் கொன் பணைமரம் உருட்டி*** *- வலிமை மிக்க பருத்த மரங்களை உருட்டி;* ***சிறைப்புள் ஆர்ப்ப*** *- சிறகோடு கூடிய பறவைகள் ஆரவாரிக்க;* ***கொடியும் வெண்குடையும்*** *- கொடியும் வெண்குடையும்;* ***சாமரையும் நுரை எனச் சுமந்து*** *- சாமரையும் ஆகியவற்றை நுரை எனும் படி சுமந்து கொண்டு;* ***பிணத்தின் நோன்மைக் கரை பொருது*** *- பிணங்களாலாகிய வலிய கரைகளை மோதி;* ***கடல் மடுக்கும் கருங் குருதிப் பேர்ஆறு*** *- கடலில் கலக்கும் வேகமுள்ள இரத்தப் பேராற்றை;* ***காண்மின் காண்மின்*** *- பாருங்கள்! பாருங்கள்!*

*9604. 'கய்க் குன்றப் பெருங் கரைய, நிருதர் புயக்*
*கல் செறிந்த, கதலிக் கானம்*
*மொய்க்கின்ற பரித் திரைய, முரண் கரிக் கைக்*
*கோள் மாவ, முளரிக் கானின்*
*நெய்க்கின்ற வாள் முகத்த, விழும் குடரின்*
*பாசடைய, நிணமேல் சேற்ற,*
*உய்க்கின்ற உதிர நிறக் களம் குளங்கள்,*
*உலப்பு இறந்த, உவையும் காண்மின்!*

***கய்க்குன்றப் பெருங்கரைய*** *- தும்பிக்கைகளை உடைய மலை போன்ற யானைப் பிணங்களால் ஆகிய கரையையுடையனவும்;* ***நிருதர் புயக் கல் செறிந்த*** *- அரக்கரின் தோள்களால் ஆகிய படிக்கற்கள் நெருங்கியுள்ளனவும்;* ***கதலிக் கானம் மொய்க்கின்ற பரித் திரைய*** *- கொடித்திரளாகிய காடுகள் உடைய குதிரைகளாகிய அலைகளை உடையனவும்;* ***முரண்கரிக்கைக் கோள் மாவ*** *- பகையுடன் மாறுபட்ட யானையின் தும்பிக்கை ஆகிய முதலைகளை உடையனவும்;* ***முளரிக்கானின் நெய்க்கின்ற வாள் முகத்த*** *- தாமரைக் காடுபோல ஒளியில் பொலிவு பெற்ற முகங்களை உடையனவும்;* ***விழும் குடரின் பாசடைய*** *- வீழ்கின்ற குடல்களாய பாசிகளையுடையனவும்;* ***நிணமேல் சேற்ற*** *- கொழுப்பாகிய சேற்றை உடையனவும்;* ***உய்க்கின்ற உதிர நிறக் களம் குளங்கள்*** *- (அரக்கர் உடம்பிலிருந்து) சொரிகின்ற இரத்தமாம் நீரையுடைய அகன்ற*

*குளங்கள்;* ***உலப்பு இறந்த*** *- எண்ணிக்கையைக் கடந்து நிற்பன;* ***உவையும் காண்மின்*** *- இவற்றையும் பாருங்கள்;*

*கரை, படிக்கல் வரிசை, அலைகள், முதலைகள், தாமரைக் காடு, பச்சையிலை, சேறு, நீர் ஆகியவை உள்ள குளம் போலப் போர்க்களம் உருவகப்படுத்தப் பட்டுள்ளது. கய்க்குன்றம் - யானை, கோள்மா - முதலை. இறந்த வீரர்களின் முகம் தாமரை போல் மலர்ந்த நிலை 'வெஞ்சோரி நீராக, வீழ்தொங்கல் பாசடை யொக்க அடு செங்களம் பங்கயப் பொய்கை ஆமாறு காண்மின்களே' (கலிங்கத்துப் பரணி 487) என்ற பாடலுடன் ஒப்பிடலாம்.*

***9605. 'நெடும் படை வாள் நாஞ்சில் உழு நிணச் சேற்றின்,***
***உதிர நீர் நிறைந்த காப்பின்,***
***கடும் பகடு படி கிடந்த கரும் பரம்பின்,***
***இன மள்ளர் பரந்த கையில்,***
***படுங் கமல மலர் நாறும் முடி பரந்த***
***பெருங் கிடக்கைப் பரந்த பண்ணை,***
***தடம் பணையின் நறும் பழனம் தழுவியதே***
***எனப் பொலியும் தகையும் காண்மின்!***

***நெடும் படை வாள் நாஞ்சில் உழுநிணச் சேற்றின்*** *- நீண்டவாளாம் கலப்பையாக உழுத கொழுப்பாகிய சேறுள்ளதாலும்;* ***உதிரநீர் நிறைந்த காப்பின்*** *- இரத்தமாம் நீர்நிறைந்த தேக்கமுள்ளதாலும்;* ***கடும்பகடு படி கிடந்த கரும்பரப்பின்*** *- (விரைந்து செல்லும் எருமைகளோடு தரையில் கிடந்த பரம்பு அடிக்கும் பலகை கொண்டுள்ளது போல) விரைந்து செல்லும் யானைப்பகடு படிந்த கரிய பெரும்பரப்பையுள்ளதாலும்;* ***இனமள்ளர் பரந்த கையில்*** *- (இரைமாத்த உழவர் பரவியுள்ள மக்கள் போல்) இனமொத்த வீரர் பரவிய பக்கங்கள் உள்ளதாலும்;* ***படுங்கமல மலந் நாறும் முடிபரந்த பெருங்கிடக்கைப் பரந்த*** *-(களையுள்ள தாமரை மலரோடு நாற்று முடிகள் கிடந்த பெரிய களங்கள் போல) தலைமாலையாகத் தாமரை சூடியதால் மணம் வீசும் முடிமகுடங்கள் கிடக்கும் பெரிய கிடக்கைகள் உள்ளமையாலும்;* ***பண்ணை*** *- (வயல்) வீரரின் பரந்த கூட்டம் உள்ள;* ***தடம்பணையின் நறும்பழனம் தழுவியதே*** *- எனப் பொலிவும் தகையும் காணீர். பெரிய மருதநிலம் பரப்பினை உடைய (போர்க்களம்) நறுமணம் வீசும் வயல்;* ***எனப் பொலியும் தகையும் காண்மின்*** *- எனத்தோன்றும் தன்மையையும் பாருங்கள்.*

***9606. 'வெளில் தீர்த்த வரை புரையும் மிடல் அரக்கர்***
***உடல் விழவும், வீரன் வில்லின்***
***ஒளிறு ஈர்த்த முழு நெடு நாண் உரும்ஏறு***
***பல படவும், உலகம் கீண்டு***
***நளில் தீர்த்த நாகபுரம் புக்கு, இழிந்த***

***பகழி வழி நதியின் ஓடி,***
***களிறு ஈர்த்துப் புக மண்டும் கடுங் குருதித்***
***தடஞ் சுழிகள் காண்மின்! காண்மின்!***

**வெளில் தீர்த்த வரைபுரையும்** - வெற்றிடமில்லாத மலையை ஒத்த; **மிடல் அரக்கர் உடல் விழவும்** - வலிமை மிக்க அரக்கரின் உடல்கள் கீழே விழவும்; **வீரன் வில்லின் ஒளிறு ஈர்த்த** - இராமன் வில்லின் ஒளிவீசும் காதளவு இழுக்கப்பெற்ற; **முழுநெடு நாண் உரும் ஏறு பலபடவும்** - முழுமையும் நீட்சியுமுடைய நாண் ஒலி இடிகள் பல வலியற்று வீழவும்; **உலகம் கீண்டு நளில் தீர்த்த நாகபுரம் புக்கு** - உலகைக் கிழித்துச் செறிவில்லாத தூய நாகருலகில் புகுந்து; **இழிந்த பகழிவழி நதியின் ஓடி** - இறங்கிய அம்பு சென்ற வழியில் ஆறுபோல் ஓடி; **களிறு ஈர்த்துப் புகமண்டும்** - யானைகளை இழுத்துக் கொண்டு நாக உலகிற்கு புக நெருங்கும்; **சுடுங் குருதித் தடஞ்சுழிகள்** - வேகத்துடன் வரும் இரத்தத்தின் பெரிய சுழிகளை; **காண்மின் காண்மின்** - பாருங்கள் பாருங்கள்.

***9607. 'கய்த்தலமும், காத்திரமும், கருங் கழுத்தும்,***
***நெடும் புயமும், உரமும், கண்டித்து***
***எய்த்தில போய், திசைகள்தொறும் இரு நிலத்தைக்***
***கிழித்து இழிந்தது என்னின் அல்லால்,***
***மத்த கரி வய மாவின், வாள் நிருதர்***
***பெருங் கடலின், மற்று இவ் வாளி***
***தய்த்து உளவாய் நின்றது என ஒன்றேயும்***
***காண்பு அரிய தகையும் காண்மின்!***

**கய்த்தலமும்** - யானையின் தும்பிக்கையும்; **காத்திரமும்** - முன்னங் கால்களையும்; **கருங்கழுத்தும்** - பெரிய வலிய கழுத்தும்; **நெடும் புயமும்** - நீண்ட தோள்களையும்; **உரமும் கண்டித்து** - மார்பையும் துண்டித்து; **எய்த்தில போய்** - சளைக்காமல் சென்று; **திசைகள் தொறும்** - திக்குகள் தோறும்; **இருநிலத்தைக் கிழித்து** - பெரிய நிலத்தைக் கிழித்துக் கொண்டு; **இழிந்தது என்னின் அல்லால்** - பாதலத்தில் இறங்கின என்று சொல்வது தவிர; **மத்த கரிவய மாவின் வாள் நிருதர்** - மதமிக்க யானை வெற்றி தரும் குதிரை, படைவீரர்கள் ஆகிய; **பெருங்கடலின்** - பெரிய கடலின் மீது; **இவ்வாளி தய்த்து உளவாய் நின்றது என** - இராமனின் இவ் அம்பு தைத்துக் கிடப்பதாயிற்று என்று; **ஒன்றேயும் காண்பு அரிய தகையும்** - சிறிதும் காணற்கரிய தன்மையும்; **காண்மின்** - பாருங்கள்.

கலிவிருத்தம்

***9608. குமுதம் நாறும் மதத்தன, கூற்றன,***

***சமுதரோடு மடிந்தன, சார்தரும்***
***திமிர மா அன்ன செய்கைய, இத் திறம்***

***அமிர்தின் வந்தன, ஐ-இரு கோடியால்.***

***குமுதம் நானும் மதத்தன*** - *குமுத மலர்களின் மணம் வீசுகின்ற மத நீரை உடையனவும்;* ***கூற்றன*** - *எமன் போலக் கொடுமையுடையனவும்;* ***சமுதரோடு மடிந்தன*** - *பாகரோடு மடிந்து கிடப்பனவும்;* ***சார் தரும் திமிரமா அன்ன செய்கைய*** - *முன் சார்கின்ற கரும்பன்றி போலும் செய்கை கொண்டனவும் ஆகிய யானைகள்;* ***இத்திறம் அமிர்தின் வந்தன*** - *முன்னர் பாறகடலில் அமுதத்தோடு பிறந்தன;* ***ஐயிரு கோடி*** - *பத்துக்கோடி எனும் அளவுடையன.*

***9609. 'ஏறு நான்முகன் வேள்வி எழுந்தன;***
***ஊறும் மாரியும், ஓங்கு அலை ஓதமும்,***
***மாறும் ஆயினும், மா மதமாய் வரும்***
***ஆறு மாறில, ஆறு-இரு கோடியால்.***

***ஊறும் மாரியும்*** - *பெய்யும் மழையும்;* ***ஓங்கு அலை ஓதமும்*** - *உயர்ந்த அலைவீசும் கடலும்;* ***மாறும் ஆயினும்*** - *நீர் வற்றி வறண்டு போனாலும்;* ***மாமதமாய் வரும்*** - *கரிய மத நீராய் ஒழுகின்ற;* ***ஆறு மாறில*** - *ஆறுகள் மாற்றமுறாதனவான யானைகள்;* ***ஆறு இரு கோடி*** - *பன்னிரண்டு கோடி;* ***ஏறுநான்முகன் வேள்வி எழுந்தன*** - *பெருமையில் உயர்ந்த பிரமனின் யாகத்தின் தோன்றினவாம்.*

***9610. 'உயிர் வறந்தும், உதிரம் வறந்து தம்***
***மயர் வறந்தும், மதம் மறவாதன,***
***புயலவன் திசைப் போர் மத யானையின்***
***இயல் பரம்பரை ஏழ் - இரு கோடியால்.***

***உயிர் வறந்தும்*** - *உயிர் நீங்கியும்;* ***உதிரம் வறந்தும்*** - *இரத்தம் வற்றியும்;* ***தம்மயர் வறந்தும்*** - *தம்முடைய மதமயக்கம் நீங்கினும்;* ***மதம் மறவாதன*** - *மதம் மட்டும் நீங்காதன யானைகள்;* ***புயல்வன்*** - *மேகங்களின் தலைவனாம் இந்திரன்;* ***திசைப் போர் மதயானையின்*** - *கிழக்குத் திக்கில் போர்த்திறமிக்க ஐராவத யானையின்;* ***இயல் பரம்பரை*** - *இயல்புள்ள மரபில் தோன்றியவை;* ***ஏழ் இருகோடி*** - *பதினான்கு கோடி அளவுடையன.*

***9611. 'கொடாது நிற்றலின், கொற்ற நெடுந் திசை***
***எடாது நிற்பன, நாட்டம் இமைப்பு இல,***
***வடாது திக்கின் மதவரையின் வழிக்***

***கடாம் முகத்த, முளரிக் கணக்கவால்.*** **வடாது திக்கின்** - *வடதிசைக்குரிய;* ***மதவரையின் வழி*** - *மதம் பொழியும் குன்றம் போன்ற சாருவ பௌமம் என்ற யானை மரபில் தோன்றி;* ***கடாம் முகத்த*** - *மதநீர் பொழியும் முகமுள்ள இந்த யானைகள்;* **கொடாது நிற்றலின்** - *(பிரமன் இப்பூமியைத் தாங்குக என) அருளாது இருத்தலால்;* **கொற்ற நெடுந்திசை** - *வெற்றியுடைய நீண்ட திக்கினை;* ***எடாது நிற்பன*** - *தாங்காமல் நிற்பன;* **நாட்டம் இமைப்பு இல** - *தேவர்போல் கண் இமையாதன;* ***முளரிக் கணக்க*** - *பதுமம் எனும் பெருந்தொகையன.*

***9612. 'வானவர்க்கு இறைவன் திறை தந்தன***
***ஆன வர்க்கம் ஓர் ஆயிர கோடியும்,***
***தானவர்க்கு இறைவன் திறை தந்தன***
***ஏனை வர்க்கம் கணக்கு இல, இவ் எலாம்.***

**வானவர்க்கு இறைவன் திறைதந்தன** - *இந்திரனால் (இராவணனுக்கு) கப்பப்பொருள்களாகத் தந்தன;* **ஆன வர்க்கம் ஓர் ஆயிரகோடி** - *ஆகிய கூட்டம் ஓர் ஆயிரகோடியாகும்;* **தானவர்க்கு இறைவன்** - *தானவர்க்குத் தலைவன்;* **திறை தந்தன** - *கப்பமாக அளித்தவை;* **ஏனை வர்க்கம்** - *மற்றோர் இனமாம்;* **இவ்எலாம் கணக்கு இல** - *இவற்றிற்குக் கணக்கு இல்லை.*

***9613. 'பாற்கடல் பண்டு அமிழ்தம் பயந்த நாள்,***
***ஆர்த்து எழுந்தன, ஆயிரம் ஆயிரம்***
***மால் கணப் பரி இங்கு இவை; மாறு இவை;***
***மேற்கின் வேலை வருணனை வென்றவால்.***

**இங்கு இவை** - *இங்கே காணப்படும் இக்குதிரைகள்;* **பண்டு பாற்கடல் அமிழ்தம் பயந்த நாள்** - *முன்னர்ப் பாற்கடல் அமுதத்தை அளித்த நாள்;* **ஆர்த்து எழுந்தன** - *ஆரவாரம் செய்து எழுந்தன;* **ஆயிரம் ஆயிரம்** - *ஆயிரம் ஆயிரம் கணக்குடையன;* ***மால்கணம் பரி*** - *பெருமைமிக்க போர்க்களக் குதிரைகள்;* **மாறு இவை** - *இவற்றிற்கு மாறாகத் தோன்றும் இவை;* **மேற்கின் வேலை வருணனை வென்றன** - *மேற்கேயுள்ள கடலில் தெய்வமாக உள்ள வருணனைவென்றவை.*

***9614. 'இரு நிதிக் கிழவன் இழந்து ஏகின***
***அரிய அப் பரி ஆயிரம் ஆயிரம்;***
***விரி சினத்து இகல் விஞ்சையர் வேந்தனைப்***
***பொருது பற்றிய, தாமரை போலுமால்.'***

***அரிய அப்பரி*** - எய்துதற்கு அரிய அந்தக் குதிரைகள்; ***இருநிதிக் கிழவன் இழந்து ஏகின*** - குபேரன் (இராவணனுடன் செய்த போரில்) தோற்று விட்டு ஓடினவாம்; ***ஆயிரம் ஆயிரம்*** - ஆயிரம் ஆயிரம் என்னும் அளவின; ***விரிசினத்து இகல்*** - விரிந்த கோபமுள்ள பகை பூண்ட; ***விஞ்சையர் வேந்தனை*** - வித்தியாதரர் அரசனை; ***பொருது பற்றிய தாமரை போலும்*** - போரில் வென்று கைப்பற்றிய எண்ணிக்கை தாமரை எனும் பேரளவின ஆம்.

***9615. என்று, 'காணினும், காட்டினும், ஈது இறைக்***
***குன்று காணினும் கோள் இலது; ஆதலால்,***
***நின்று காணுதும்; நேமியினானுழைச்***
***சென்று காண்டும்' என்று ஏகினர், செவ்வியோர்.***

***என்று காணினும் காட்டினும்*** - இக்களக் காட்சியை என்றும் நாங்கள் கண்டு கொண்டேயிருந்தாலும் நீ காட்டிக் கொண்டே யிருந்தாலும்; ***ஈது இறைக்குன்று நாணினும் கோளிலது*** - இது இமயமலை போன்ற பெருமலையைக் காணமுடியும் கொள்கை யுடையதன்று; ***ஆதலால்*** - எனவே; ***நின்று காணுதும்*** - சிறிது கழித்துக் காண்போம்; ***நேமியினான் உழைச்சென்று காண்டும்*** - இராமனிடத்துச் சென்று பார்க்கலாம்; ***என்று செவ்வியோர் ஏகினர்*** - என்று கூறிச் சிறந்தவராம் வானரத் தலைவர்கள் சென்றனர்.

***9616. ஆரியன் - தொழுது, ஆங்கு அவன் பாங்கரும்,***
***போர் இயற்கை நினைந்து எழு பொம்மலார்,***
***பேர் உயிர்ப்பொடு இருந்தனர்; பின்பு உறும்***
***காரியத்தின் நிலைமை கழறுவாம்.***

***ஆரியன் தொழுது*** - உயர்ந்தோனாம் இராமனை வணங்கி; ***ஆங்கு அவன் பாங்கு*** - அங்கு அவன் பக்கத்தில்; ***அரும்போர் இயற்கை நினைந்து*** - அரிய போரின் இயல்பை எண்ணி; ***எழு பொம்மலார்*** - எழுகின்ற பெருமகிழ்ச்சியுடையோராய்; ***பேர் உயிர்ப்பொடு இருந்தனர்*** - பெருமூச்சு விட்டிருந்தனர்; ***பின்பு உறும்*** - இனிப் பின்பு நிகழும்; ***காரியத்தின் நிலைமை கழறுவாம்*** - செயல்களின் நிலைமையைக் கூறுவோம்.

# இராவணன் களம் காண் படலம்

*'மூலபலப்படை அழிந்தது உண்மை தானா?' என அறிய இராவணன் கோபுரத்தின் மீது ஏறி அரக்கர்படை அழிந்த அவலக்காட்சியைக் காணுகின்ற பகுதி.*

*இலக்குவனை வீழ்த்திய மகிழ்ச்சியில் வீரர்களுக்கு விருந்தளிக்க வானநாட்டாரை இராவணன் அழைக்கிறான். வந்தவர்களிடம் விண்ணுலக இன்பத்தை மண்ணுலகில் வீரர்க்கு அளிக்குமாறு ஏவுகிறான். அவன் ஏவலுக்கேற்ப விண்ணுலக உணவை அரக்கர்க்கு தயாரிக்கின்றனர். அப்போது தூதுவர் வந்து மூலபலப்படை அழிந்ததை இராவணனுக்கு மறைபொருளாக ஓதுகின்றனர். அதுகேட்டுத் திகைத்தான். பின்தேறி 'வலியவரும் கடல் மணலினும் பலராகியவரும் ஆன அரக்கர் இறந்தது பொய்' என்றான், அருகிலிருந்த மாலியவான் 'மெய்' என்றான். 'இனியாகிலும் நற்செய்கை புரிக' என அறிவுரையும் புகன்றான். இராவணனோ தான் இலக்குவனைக் கொன்றதால் இராமனும் இறப்பான். வெற்றி தன்னுடையதென்றான். அது கேட்ட தூதுவர், அனுமன் கொணர்ந்த மருத்து மலையால் இலக்குவன் உயிர்பெற்றதைக் கூறினர். அவர்கள் சொல்லின் உண்மை தேடிக் கோபுரத்தின் மீது ஏறிப் போர்க்களத்தைப் பார்க்கிறான். கணவரை இழந்த அரக்கியர் அழுகை ஒலி செவியில் புகுகிறது. அது கேட்டுக் கலங்கிய இராவணன் கீழே இறங்கினான். இச்செய்திகளை இப்படலம் கூறுகிறது.*

### *போர் வீரர்க்கு விருந்து அளிக்க இராவணன் முனைதல்*

***9617.* பொருந்து பொன் பெருங் கோயிலுள், போர்த் தொழில்**
**வருந்தினர்க்கு, தம் அன்பினின் வந்தவர்க்கு,**
**அருந்துதற்கு அமைவு ஆயின ஆக்குவான்,**
**விருந்து அமைக்க மிகுகின்ற வேட்கையான்,**

**பொருந்து பொன் பெருங்கோயிலுள்** - *இராவணன் தான் வாழ்கின்ற பொன்னால் கட்டப்பெற்ற பெரிய அரண்மனையில்* **போர்த்தொழில் வருந்தினர்க்கு** - *போர் வினையில் தன் பொருட்டுப் போர் புரிந்து வருந்தியவர்க்கும்;* **தம் அன்பின் வந்தவர்க்கு** - *அவ்வீரர் தம் மேல் வைத்த அன்பினால் வந்தவர்க்கும்;* **அருந்துதற்கு அமைவு ஆயின** - *உண்பதற்குப் பொருந்தியவற்றை;* **ஆக்குவான் விருந்து அமைக்க** - *அமைத்திட்டு விருந்து செய்ய;* **மிகுகின்ற வேட்கையான** - *மிகுந்த விருப்பம் உடையவனாய்.*

***9618.* வான நாட்டை 'வருக!' என, வல் விரைந்து,**
**ஏனை நாட்டவரோடும் வந்து எய்தினார்;**

***'மான நாட்டு அந்த போகம் அமைத்திர்; மற்று***
***ஊனம் நாட்டின், இழத்திர் உயிர்' என்றான்.***

***வானநாட்டை*** *- விண்ணவரை;* ***வருக என*** *- வாருங்கள் என்று ஆணையிட்டவுடன்;* ***வல்விரைந்து ஏனை நாட்டவரோடும்*** *- மிக விரைந்த மற்றையதானவர் நாட்டோடும்;* ***வந்து எய்தினார்*** *- வந்து சேர்ந்தனர்;* ***'மான நாட்டு அந்த போகம் அமைத்திர்*** *- உயர்ந்த விண்ணவர் நாட்டு அரிய உணவைப் படைப்பீராக;* ***மற்று ஊனம் நாட்டின்*** *- மாறாகக் குறைகள் செய்தால்;* ***உயிர் இழத்திர் என்றான்*** *- உம் உயிரை இழப்பீர் என்றான்.*

***9619. நறவும் ஊனும், நவை அற நல்லன***
***பிறவும், ஆடையும், சாந்தமும், பெய்ம் மலர்த்***
***திறமும், நானப் புனலொடு சேக்கையும்***
***புறமும் உள்ளும் நிறையப் புகுந்தவால்.***

***நவை அற நல்லன நறவும் ஊனும்*** *- குற்றமில்லாமல் நல்லனவாகிய கள்ளும் ஊனும்;* ***பிறவும் ஆடையும் சாந்தமும்*** *- பிற உணவுப் பொருள்களும் ஆடைகளும் பூசும் சந்தனமும்;* ***பெய்ம்மலர்த் திறமும்*** *- அணிதற்குரிய மலர்வகையும்;* ***நானப் புனலொடு*** *- கத்தூரி போன்ற மணப்பொருள் கலந்த குளித்தற்குரிய நறு மண நீரொடு;* ***சேக்கையும்*** *- படுத்தற்குரிய படுக்கைகளும் ஆகியவைகள்;* ***புறமும் உள்ளும்*** *- அரண்மனைக்கு உள்ளேயும் வெளியேயும்;* ***நிறையப் புகுந்தன*** *- நிறைய வந்து சேர்ந்தன.*

***9620. நானம் நெய் நன்கு உரைத்து, நறும் புனல்***
***ஆன கோது அற ஆட்டி, அமுதொடும்***
***பானம் ஊட்டி, சயனம் பரப்புவான்,***
***வான நாடியர் யாவரும் வந்தனர்.***

***நானம் நெய் நன்கு உரைத்து*** *- புழுகு நெய்யை நன்கு தேய்த்து;* ***நறும்புனல் ஆன கோது அற ஆட்டி*** *- நறுமண நீரால் அழுக்குப் போக நீராட்டி;* ***அமுதொடும் பானம் ஊட்டி*** *- அமுதாகிய சோறொடு பருகும் நீரையும் அளித்து;* ***சயனம் பரப்புவான்*** *- படுக்கைகளைப் பரப்புவதற்காக;* ***வானநாடியர் யாவரும் வந்தனர்*** *- வானுலகப் பெண்கள் அனைவரும் வந்து சேர்ந்தனர்.*

***9621. பாடுவார்கள்; பயில் நடம் பாவகத்து***
***ஆடுவார்கள்; அமளியில் இன்புறக்***

***கூடுவார்கள்; முதலும் குறைவு அறத்***
***தேடினான் என, பண்ணையின் சேர்ந்ததால்.***

***பாடுவார்கள்*** - இன்னிசை பாடுவார்களும்; ***பயில் நடம் பாவகத்து ஆடுவார்கள்*** - பயின்ற நாட்டியத்தை பாவனையோடு ஆடுவார்களும்; ***அமளியில் இன்புறக் கூடுவார்கள்*** - படுக்கையில் இன்பம் பொருந்த அணைவார்கள்; ***முதலும் குறைவு அற*** - முதற்பொருள் முதல் எவையும் குறைவின்றி; ***தேடினான் என*** - தேடிக் கொண்டவன் போன்று; ***பண்ணையின் சேர்ந்தது*** - மகளிர் கூட்டத்தால் சேர்ந்தது ஆம்.

*தாம் புனைந்த நாடக மாந்தவராகவே ஆதி நடிப்பது பாவகம் ஆகும். பாடல், ஆடல், கூடல் என்பவற்றைத் தாமாக முயற்சி செய்யாமல் அரக்க வீரர்கள் இராவணன் ஆணையில் எளிதாகப் பெற்றனர் என்பதாம். பண்ணை - மகளிர் கூட்டம்.*

***9622. அரைசர் ஆதி, அடியவர் அந்தமா,***
***வரை செய் மேனி இராக்கதர் வந்துளார்,***
***விரைவின் இந்திர போகம் விழைதர,***
***கரை இலாத பெரு வளம் கண்ணினார்.***

***அரைசர் ஆதி*** - அரசர் முதல்; ***அடியவர் அந்தமா*** - அடியவர்கள் ஈறாக; ***வரைசெய் மேனி இராக்கதர் வந்துளார்*** - மலை போன்ற வலிய உடம்புள்ள அரக்கர் வீரர் வந்துள்ளனர்; ***விரைவின் இந்திரபோகம் விழைதர*** - விரைவாக இந்திர போகத்தை விரும்பிட; ***கரையிலாத பெருவளம் கண்ணினார்*** - அளவில்லாத இன்பப் பெருவளத்தைத் துய்த்தனர்.

***9623. இன்ன தன்மை அமைந்த இராக்கதர்***
***மன்னன் மாடு வந்து எய்தி வணங்கினார்,***
***அன்ன சேனை களப் பட்ட ஆறு எலாம்***
***துன்னு தூதர் செவியிடைச் சொல்லுவார்:***

***இன்ன தன்மை அமைந்த இராக்கதர் மன்னன் மாடுவந்து*** - இத்தகைய போகத்தைத் துய்க்கும் இராக்கதர்களின் அரசனாம் இராவணனிடத்து வந்து; ***எய்தி வணங்கினார்*** - அடைந்து தொழுதனர்; ***அன்ன சேனை*** - அத்தன்மையான மூலப்படை முழுதும்; ***களப்பட்ட ஆறு எலாம்*** - போர்க்களத்தில் இறந்துபட்டதெல்லாம்; ***துன்னு தூதர்*** - இராவணனை அடைந்த தூதுவர்; ***செவியிடைச் சொல்லுவார்*** - செவியில் மறை பொருளாகக் கூறுவார்.

***9624. நடுங்குகின்ற உடலினர், நா உலர்ந்து***
***ஒடுங்குகின்ற உயிர்ப்பினர், உள் அழிந்து***
***இடுங்குகின்ற விழியினர், ஏங்கினார்,***
***பிடுங்குகின்ற உரையினர், பேசுவார்:***

**நடுங்குகின்ற உடலினர்** - நடுங்கும் உடல் உடையவராய்; **நாஉலர்ந்து** - நாக்கு வறந்து; **ஒடுங்குகின்ற உயிர்ப்பினர்** - சோர்கின்ற மூச்சுடையவராய்; **உள் அழிந்து** - உள்ளம் அழிந்து; **இடுங்குகின்ற விழியினர்** - சுருங்கிய கண்ணினராய்; **ஏங்கினார்** - ஏங்கி நின்றவராய்; **பிடுங்குகின்ற மொழியினர் பேசுவார்** - சொல் தடுமாறு சொற்களை வலிதிற் பிடுங்குபவர் போல் கூறினர்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

***9625. 'இன்று யார் விருந்து இங்கு உண்பார்? - இகல் முகத்து இமையோர் தந்த***
***வென்றியாய்!- ஏவச் சென்ற ஆயிர வெள்ளச் சேனை***
***நின்றுளார் புறத்தது ஆக, இராமன் கை நிமிர்ந்த சாபம்***
***ஒன்றினால், இரண்டு மூன்று கடிகையின் உலந்தது'***
***என்றார்.***

**இகல்முகத்து இமையோர் தந்த வென்றியாய்** - போரில் விண்ணவர் அளித்த வெற்றி பெற்ற அரசே!; **ஏவச் சென்ற ஆயிர வெள்ளச் சேனை** - நீ ஆணையிடப் போர் புரியச் சென்ற ஆயிர வெள்ளம் ஆகிய படை; **புறத்தது ஆக நின்றுளார்** - போர்க்களத்தில் ஓர்புறமாக நிற்க; **இராமன் கைநிமிர்ந்த சாபம் ஒன்றினால்** - இராமன் திருக்கரத்திலே விளங்கும் வில் ஒன்றினால்; **இரண்டு மூன்று கடிகையின் உலர்ந்தது** - ஆறு நாழிகைப் பொழுதில் சேனை முழுதும் அழிந்தது; **இன்று யார் விருந்து இங்கு உண்பார் என்றார்** - இப்போது யாரிங்கு விருந்துண்பார்கள் என்று கேட்டனர்.

***9626. 'வலிக் கடன் வான் உளோரைக் கொண்டு நீ வகுத்த போகம்,***
***''கலிக் கடன் அளிப்பல்'' என்று நிருதர்க்குக் கருதினாயேல்,***
***பலிக் கடன் அளிக்கற்பாலை அல்லது, உன் குலத்தின்பாலோர்***
***ஒலிக் கடல் உலகத்து இல்லை; ஊர் உளார் உளரே உள்ளார்.****

**வலிக்கடன் வான் உளோரைக் கொண்டு** - *கட்டளையாக கடமையை செய்யும் விண்ணுளோரைக் கொண்டு;* **நீ வகுத்த போகம்** - *நீ உண்டாக்கிய போகத்தை;* **கலிக்கடன் அளிப்பல் என்று** - *மகிழ்ச்சியின் முறைமையால் அளிப்பேன் என;* **நிருதர்க்குக் கருதினாயேல்** - *அரக்கர்க்கு அளிக்க எண்ணினால்;* **பலிக்கடன் அளிக்கற்பாலை அல்லது** - *இறந்தவர்க்குச் செய்யும் பலிக்கடனளிக்கத் தக்காய் என்பதல்லது;* **உன் குலத்தின் பாலோர்** - *உன் குலத்தினைச் சேர்ந்தவர்கள்;* **ஒலிக்கடல் உலகத்து இல்லை** - *ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த உலகத்தில் யாரும் இல்லை;* **ஊர் உளார் உளரே உள்ளார்** - *ஊரில் உள்ளவர்கள்தாம் உயிருள்ளவராக இருக்கின்றனர் (எனத் தூதுவர் கூறினர்.)*

## *இராவணன் தூதர் பேச்சை ஐயுற்றுக் கூறுதல்*

***9627. ஈட்ட அரும் உவகை ஈட்டி இருந்தவன், இசைத்த மாற்றம்***
***கேட்டலும், வெகுளியோடு துணுக்கமும் இழவும் கிட்டி,***
***ஊட்டு அரக்கு அனைய செங் கண் நெருப்பு உக, உயிர்ப்பு வீங்க,***
***தீட்டிய படிவம் என்னத் தோன்றினன், திகைத்த நெஞ்சன்.***

**ஈட்ட அரும் உவகை ஈட்டி இருந்தவன்** - *(இலக்குவனை மாய்த்தோம் எனப் பிறரால் பெறற்கரும் மகிழ்ச்சியைப் பெற்று இருந்த இராவணன்;* **இசைத்த மாற்றம் கேட்டலும்** - *(தூதுவர்) கூறிய சொல்லைக் கேட்டதும்;* **வெகுளியோடு துணுக்கமும் இழவும் கிட்டி** - *கோபத்துடன் நடுக்கமும் இழப்பும் சேர;* **ஊட்டு அரக்கு அனைய செங்கண்** - *செல்வரக்குப் போன்ற தன் சிவந்த கண்கள்;* **நெருப்பு உக** - *(கோபத்தால்) தீப்பொறி சிந்த;* **உயிர்ப்பு வீங்க** - *பெருமூச்சு உண்டாக;* **திகைத்த நெஞ்சன்** - *திகைப்படைந்த மனம் கொண்டவனாய்;* **தீட்டியபடிவம் என்னத் தோன்றினன்** - *எழுதிய சித்திரப் பாவை போல் அசையாமல் இருந்தான்.*

***9628. 'என்னினும் வலியர் ஆன இராக்கதர் யாண்டும் வீயார்;***
***உன்னினும், உலப்பு இலாதார்; உவரியின் மணலின் நீள்வார்;***
***"பின் ஒரு பெயரும் இன்றி மாண்டனர்" என்று பேசும்***
***இந் நிலை இதுவோ? பொய்ம்மை விளிம்பினிர்***

*போலும்' என்றான்.*

**என்னினும் வலியர் ஆன இராக்கதர்** - *என்னைவிட வலிமை கொண்டவரான மூலப்படை வீரர்;* **யாண்டும் வீயார்** - *எப்போதும் எங்கும் அழியாதவர்கள்;* **உன்னினும் உவப்பு இலாதார்** - *நினைப்பினால் கொல்வதானாலும் கொல்ல முடியாதவர்கள்;* **உவரியின் மணலின் நீள்வார்** - *கடல் மணலைக் காட்டிலும் எண்ணிக்கை மிக்கவர்;* **பின் ஒரு பெயரும் இன்றி மாண்டனர்** - *பின்பு காண ஒருவருமின்றி இறந்தனர்;* **என்று பேசும் இந்நிலை இதுவோ** - *என நீர் கூறும் இந்நிலை இதுவோ;* **பொய்ம்மை விளிம்பினிர் போலும் என்றான்** - *பொய் சொன்னீர் என்று கூறினான் இராவணன்; "உண்மை பேசியதாக உங்கள் நினைப்போ" என்றான் இராவணன்.*

*9629. கேட்டு அயல் இருந்த மாலி, 'ஈது ஒரு கிழமைத்து ஆமோ?*
*ஒட்டு உறு தூதர் பொய்யே உரைப்பரோ? உலகம் யாவும்*
*வீட்டுவது இமைப்பின் அன்றே, வீங்கு எரி? விரித்த எல்லாம்*
*மாட்டுவன் ஒருவன் அன்றே, இறுதியில் மனத்தால்?"*
*என்றான்.*

**கேட்டு அயல் இருந்தமாலி** - *(தூதுவரை ஐயுற்று இராவணன் கூறியதைக்) கேட்டுப் பக்கத்திலிருந்த மாலியவான்;* **ஈது ஒரு கிழமைத்து ஆமோ** - *(இராவணனை நோக்கி) இவ்வாறு கேட்பது ஒரு முறைமையுடையது ஆகுமோ?;* **ஒட்டு உறு தூதர் பொய்யே உரைப்பரோ** - *நாம் விடுத்த தூதர் பொய் சொல்லுவார்களோ;* **உலகம் யாவும்** - *எல்லா உலகங்களும்;* **வீங்குஎரி வீட்டுவது இமைப்பின் அன்றே** - *ஊழித்தீ இமைப் பொழுதில் அழிந்து விடும் அல்லவா;* **விரித்த எல்லாம்** - *விரிந்து கிடக்கும் உலகங்கள் எல்லாம்;* **இறுதியில் மனத்தால்** - *ஊழியின் முடிவில் மனத்தால் நினைத்தவுடன்;* **ஒருவன் மாட்டுவன் அன்றே** - *உருத்திரன் அழிப்பான் அல்லவா.*

*9630. ' "அளப்ப அரும் உலகம் யாவும் அமைத்துக் காத்து அழிக்கின்றான் தன்*
*உளப் பெருந் தகைமைதன்னால் ஒருவன்" என்று உண்மை வேதம்*
*கிளப்பது கேட்டும் அன்றே? "அரவின்மேல் கிடந்து, மேல் நாள்,*
*முளைத்த பேர் இராமன்" என்ற வீடணன் மொழி பொய்த்து ஆமோ?*

***அளப்ப அரும் உலகம் யாவும்*** - *அளந்து கூற முடியாத எல்லா உலகமும்;* ***அமைத்துக் காத்து அழிக்கின்றான்*** - *படைத்து அளித்து அழிப்பதும்;* ***தன்உளப் பெருந்தகைமை தன்னால் ஒருவன்*** - *தன் உள்ளத்தின் பெருமையால் தான் ஒருவனே செய்வன;* ***என்று உண்மை வேதம்*** - *என உண்மை கூறும் வேதம்;* ***கிளப்பது கேட்டும் அன்றே*** - *சொல்வதைக் கேட்டுள்ளோம் அல்லவா;* ***அரவின் மேல் கிடந்து*** - *ஆதிசேடன் மேல் படுத்து;* ***மேல் நாள் முளைத்த போர் இராமன்*** - *பின்பு அயோத்தியில் பிறந்த போராற்றல் மிக்க இராமன்;* ***என்று வீடணன் மொழி*** - *என்று கூறிய வீடணன் சொற்கள்;* ***பொய்த்து ஆமோ*** - *பொய்ம்மை உடையது ஆகுமோ (ஆகாது.)*

***9631. 'ஒன்று இடின் அதனை உண்ணும் உலகத்தின்***
***உயிர்க்கு ஒன்றாத***
***நின்றன எல்லாம் பெய்தால், உடன் நுங்கு நெருப்பும்***
***காண்டும்;***
***குன்றொடு மரனும், புல்லும், பல் உயிர்க் குழுவும்,***
***கொல்லும்***
***வன் திறல் காற்றும் காண்டும்; வலிக்கு ஒரு வரம்பும்***
***உண்டோ?***

***ஒன்று இடின் அதனை உண்ணும்*** - *ஏற்ற ஒருணவை இட்டால் அதனை உண்கின்ற;* ***உலகத்தின் உயிர்க்கு ஒன்றாத*** - *உலக உயிர்களுக்குப் பொருந்தாத;* ***நின்றன எல்லாம் பெய்தால்*** - *எல்லாவற்றையும் இட்டால்;* ***உடன் நுங்கு நெருப்பும் காண்டும்*** - *ஒருங்கே உண்ணும் தீயைக் காண்கின்றோம்;* ***குன்றொடு மரனும் புல்லும்*** - *மலையொடு மரமும் புல்லும் முதலிய;* ***பல்லுயிர் கொல்லும்*** - *பல உயிர்களைக் கொல்லும் ஆற்றல் உள்ள;* ***வன்திறல் காற்றும் காண்டும்*** - *வலிமை கொண்ட காற்றையும் காண்கின்றோம்;* ***வலிக்கு ஒரு வரம்பும் உண்டோ*** - *(ஆதலால்) வலிமைக்கு ஒரு கட்டுப்பாடு உண்டா? (இல்லை).*

***9632. 'பட்டதும் உண்டே உன்னை, இந்திரச் செல்வம்;பற்று***
***விட்டதும் மெய்ம்மை; ஐய! மீட்டு ஒரு வினையும்***
***இல்லை;***
***கெட்டது, உன் பொருட்டினாலே, நின்னுடைக் கேளிர்***
***எல்லாம்;***
***சிட்டது செய்தி' என்றான்; அதற்கு அவன் சீற்றம்***

***செய்தான்.*** ***ஐய*** - *ஐயனே!;* ***பட்டதும் உண்டே*** - *மூலப்படை அழிந்தது உண்மையே;* ***உன்னை இந்திரச் செல்வம் பற்று விட்டதும் மெய்ம்மை*** -

*உன்னை விட்டு இந்திரச் செல்வமானது பற்று விட்டு விட்டதும் உண்மையே;* ***மீட்டு ஒரு வினையும் இல்லை*** - *இனிச் செய்வதற்குரிய வேறு ஒரு செயலும் இல்லை;* ***நின்னுடைக் கேளிர் எல்லாம்*** - *உன்னுடைய உறவினர் யாவரும்;* ***கெட்டது உன் பொருட்டினாலே*** - *இறந்தது உன் காரணமாகவே;* ***சிட்டது செய்தி*** - *எனவே சிறந்ததைச் செய்வாயாக;* ***என்றான்*** - *என்று மாலிய வான் கூறினான்;* ***அதற்கு அவன் சீற்றம் செய்தான்*** - *அதைக் கேட்டு இராவணன் கோபம் கொண்டான்.*

***9633. 'இலக்குவன்தன்னை வேலால் எறிந்து, உயிர்***
***கூற்றுக்கு ஈந்தேன்;***
***அலக்கணில் தலைவர் எல்லாம் அழுந்தினர்;***
***அதனைக்கண்டால்,***
***உலக்குமால் இராமன்; பின்னர் உயிர்ப் பொறை***
***உகவான்; உற்ற***
***மலக்கம் உண்டாகின் ஆக; வானை என் வயத்தது'***
***என்றான்.***

***இலக்குவன் தன்னை வேலால் எறிந்து*** - *இலக்குவனை வேல் கொண்டு எறிந்து;* ***உயிர் கூற்றுக்கு ஈந்தேன்*** - *அவனுயிரை யமனுக்குக் கொடுத்தேன்;* ***அலக்கணில் தலைவர் எல்லாம் அழுந்தினர்*** - *வானரத் தலைவர் யாவரும் அவனிறந்த துன்பத்தில் அழுந்தி விட்டனர்;* ***அதனைக் கண்டால்*** - *இலக்குவன் இறந்த நிலையைப் பார்த்தால்;* ***இராமன் உலக்கும்*** - *இராமன் வற்றுவான்;* ***பின்னர் உயிர்ப் பொறை உகவான்*** - *பின்பு உயிருடன் இருப்பதை விரும்ப மாட்டாது இறப்பான்;* ***உற்றமலக்கம் உண்டாகின் ஆக*** - *எனக்கு நேர்ந்த துன்பம் உண்மையாயின் ஆகுக;* ***வாகை என் வயத்தது என்றான்*** - *வெற்றி என் பக்கமே என்று இராவணன் கூறினான்.*

***9634. ஆண்டு அது கண்டு நின்ற தூதுவர், ஐய! மெய்யே***
***மீண்டது, அவ் அளவின் ஆவி, மாருதி மருந்து***
***மெய்யில்***
***தீண்டவும்; தாழ்த்தது இல்லை; யாரும் அச்***
***செங்கணானைப்***
***பூண்டனர் தழுவிப் புக்கார்; காணுதி போதி' என்றார்.***

***ஆண்டு அது கண்டு நின்ற தூதுவர்*** - *அங்கு அதைப் பார்த்த நின்ற தூதுவர்;* ***ஐயா அந்த இளவல் ஆவி*** - *ஐயனே! இராமனின் தம்பியாம் இலக்குவனின் உயிர்;* ***மாருதி மருந்து மெய்யில் தீண்டவும்*** - *அனுமன் கொணர்ந்த மருந்து உடம்பில் பட்டவுடன்;* ***தாழ்ந்தது இல்லை மீண்டது*** - *சிறிதும் தாழ்க்காமல் மீண்டது;* ***அச்செங்கணானை யாரும் பூண்டனர் தழுவிப் புக்கார்*** - *சிவந்த கண்ணுடைய இலக்குவனை எல்லோரும்*

*சூழ்ந்து தழுவிக் கொண்டு சென்றனர்;* ***காணுதி போதி என்றார்*** *- சென்று பார்ப்பாயாக என்று கூறினர்.*

***9635. தேறிலன் ஆதலானே, மறுகுறு சிந்தை தேற,***
***ஏறினன், கனகத்து ஆரைக் கோபுரத்து உம்பர் எய்தி,***
***ஊறின சேனை வெள்ளம் உலந்த பேர் உண்மை எல்லாம்,***
***காறின உள்ளம் நோவ, கண்களால் தெரியக் கண்டான்.***

**தேறிலன்** *- தூதர் சொன்னதை உண்மையென இராவணன் தெளிவு பெறவில்லை;* **ஆதலானே மறுகுறு சிந்தை தேற** *- ஆதலால் கலக்கமுற்ற எண்ணம் தெளிய;* **கனகத்து ஆரைக் கோபுரத்து உம்பர் ஏறினன்** *- பொன்னால் செய்யப் பெற்ற உயர் கோபுரத்தின் மீது ஏறினான்;* **எய்தி ஊறின சேனை வெள்ளம் உலந்த பேர் உண்மை எல்லாம்** *- அடைந்து பெருகிய சேனை வெள்ளம் அழிந்த பெரிய உண்மை முழுதும்;* **காறின உள்ளம் நோவ** *- செருக்குற்ற தன் மனம் வருந்த;* **கண்களால் தெரியக் கண்டான்** *- கண்களால் தெளிவாகப் பார்த்தான்.*

***9636. கொய் தலைப் பூசல் பட்டோர் குலத்தியர் குவளை தோற்று***
***நெய்தலை வென்ற வாள் - கண் குமுதத்தின் நீர்மை காட்ட,***
***கய் தலை உற்ற பூசல் கடலொடு நிமிரும்காலை,***
***செய்தலை உற்ற ஓசைச் செயலதும் செவியின் கேட்டான்.***

**கொய்தலைப் பூசல் பட்டோர் குலத்தியர்** *- பகைவரால் கொய்யப்பட்ட (தம் கணவரின் தலையைக் கண்டு துன்புறும் அரக்க மகளிர்;* **குவளை தோற்று நெய்தலை வென்ற வாள்கண்** *- கரிய குவளை மலரையும் கரு நெய்தல் மலரையும் வென்ற வாள் போன்ற கண்கள்;* **குமுதத்தின் நீர்மை காட்ட** *- அழுது சிவந்ததால் செங்குமுத மலரின் தன்மையைக் காட்ட;* **கய் தலை உற்ற பூசல்** *- தம் கையால் தம் தலையில் அடித்துக் கொண்டிருக்கும் அழுகை ஒலி;* **கடலொடு நிமிருங்காலை செய்தலை உற்ற ஓசைச் செயலதும்** *- கடல்கள் எல்லாம் பொங்கிய காலத்து எழும் ஓசை செய்யும் தன்மையை;* **செவியின் கேட்டான்** *- இராவணன் தன் காதாற் கேட்டான்.*

***9637. எண்ணும் நீர் கடந்த யானைப் பெரும் பிணம் ஏந்தி,***

***யாணர்***
***மண்ணின் நீர் அளவும் கல்லி, நெடு மலை பறித்து,***
***மண்டும்***
***புண்ணின் நீர் ஆறும், பல் பேய்ப் புதுப் புனல் ஆடும்***
***பொம்மல்,***
***கண்ணின் நீர் ஆறும், மாறாக் கருங் கடல் மடுப்பக்***
***கண்டான்.***

***எண்ணும் நீர் கடந்த யானைப் பெரும் பிணம் ஏந்தி*** *- எண்ணும் தன்மையைக் கடந்த யானையின் பெரும் பிணங்களை ஏந்திக் கொண்டு;* ***யாணர் மண்ணின் நீர் அளவும் கல்லி*** *- புதிய ஊற்று நீர் உள்ள அளவும் தோண்டி;* **நெடுமலை பறித்து** *- நீண்ட மலைகளைப் புரட்டி;* **மண்டும் புண்ணின் நீர் அறும்** *- விரைந்து ஓடும் இரத்த ஆறும்;* **பல்பேய்ப் புதுப்புனல் ஆடும் பொம்மல்** *- பலபேய்கள் புதிய நீர் எனக்குளிக்கும் பொலிவுடைய;* **கண்ணின் நீர் ஆறும்** *- கண்ணில் வடியும் ஆறும்;* **மாறாக் கருங்கடல் மடுப்பக் கண்டான்** *- தம் தன்மை மாறாது கரிய கடலில் புகுந்து கலப்பதை இராவணன் பார்த்தான். எண்ணிப் பார்த்துப் பின் அவற்றின் எண்ணிக்கையைக் கண்டு அறிய முடியாத அளவு பெருக்கமுள்ள யானைகள் என்றார். யானைப் பிணம் ஏந்தி, ஊற்று நீர் உள்ளளவும் தோண்டிச் சென்று மலைகளைப் புரட்டிய இரத்த ஆறும் கரைகளை இழந்த கண்ணீர் ஆறும் கருங்கடலுள் சேர்ந்தன.*

*கல்லுதல் - தோண்டுதல், மறித்தல் - புரட்டுதல், பொம்மல் - பொலிவு, மாறா - எதிர் மறைப் பெயரெச்சம்.*

***9638. குமிழி நீரோடும், சோரிக் கனலொடும், கொழிக்கும்***
***கண்ணான்***
***தமிழ் நெறி வழக்கம் அன்ன தனிச் சிலை வழக்கில்***
***சாய்ந்தார்***
***அமிழ் பெருங் குருதி வெள்ளம் ஆற்று வாய்முகத்தின்***
***தேக்கி,***
***உமிழ்வதே ஒக்கும் வேலை ஓதம் வந்து உடற்றக்***
***கண்டான்.***

***குமிழி நீரோடும்*** *- குமிழி இட்டுப் பெருகும் கண்ணீரோடும்;* **சோரிக்கனலொடும்** *- சின நெருப்புக் கக்கும் இரத்தத்தோடும்;* **கொழிக்கும் கண்ணான்** *- பெருகும் கண்களையுடைய இராவணன்;* ***தமிழ்நெறி வழக்கம் அன்ன*** *- தமிழ்க்குரிய அகப்பொருள் கூறும் பெருகிய வழக்கம் போன்று;* ***தனிச்சிலை வழக்கில் சாய்ந்தார்*** *- ஒப்பற்ற வில் விடுத்த அம்பினால் இறந்தவர்களின்;* ***அமிழ் பெருங்குருதி வெள்ளம் ஆற்றுவாய்*** *- அமிழும் மிகுந்த இரத்த வெள்ளத்தை கடலில் ஆறு கலக்கும் சங்கமுமாகிய வாயினால்;* **முகத்தின் தேக்கி** *- முகத்திலே தேக்கி வைத்து;*

***உமிழ்வதை ஒக்கும்*** - *துப்புவதைப் போன்றிருக்கும்;* ***வேலை ஓதம் வந்து உடற்றக் கண்டான்*** - *(இரத்தம் கலந்த) கடலின் அலைகள் வந்து போர்க்களத்தில் மோதிடப் பார்த்தான்.*

*தமிழ் நெறி வழக்கம் என்பது தமிழின் பொருளிலக் கணத்தில் காணப் பெறும் அகப் பொருள் நெறியாகும். அது களவு, கற்பு என இருவகைப்படும். இதில் களவு நெறி பலவகையாக விரிந்து பரந்து நிற்றல் போல் இராமனின் அம்பும், அரக்கர் மீது ஒன்று பத்தாக நூறாகப் பரந்து பாய்ந்து செல்லும் எனப் புதிய உவமையைப் படைத்துள்ளார். தமிழ் நெறி வழக்கம் உலகம் அளாவியது; இராமன் வில்லிடும் அம்பும் உலகளாவியது எனினும் ஆம்.*

***9639. விண்களில் சென்ற வன் தோள் கணவரை, அலகை வெய்ய***
***புண்களில் கைகள் நீட்டி, புது நிணம் கவர்வ நோக்கி,***
***மண்களில் தொடர்ந்து, வானில் பிடித்து, வள் உகிரின் மானக்***
***கண்களைச் சூன்று நீக்கும் அரக்கியர் குழாமும் கண்டான்.****

***விண்களில் சென்ற*** - *(போரில் இராமன் விடுத்த அம்பால் இறந்து) வானுலகில் புகுந்த;* ***வன்தோள் கணவரை*** - *வலிய தோளுடைய கணவர் உடலிலுள்ள;* ***அலகை வெய்ய புண்களில் கைகள் நீட்டி*** - *பேய்கள் இறந்தவர் உடலில் விரும்பத் தக்க புண்களில் தம் கைகளை நீட்டி;* ***புதுநிணம் கவர்வ நோக்கி*** - *புதிய கொழுப்பைக் கவர்வதைக் கண்டு;* ***மண்களில் தொடர்ந்து*** - *அப்பேய்களைத் தரையில் துரத்திச் சென்று; வானில் பிடித்து - (பேய்கள் பறக்க) வானத்தில் தொடர்ந்து சென்று பிடித்து; வள் உகிரின் - பெரிய நகங்களால்; மானக் கண்களை - பெரிய கண்களை; சூன்று நீக்கும் - தோண்டி எடுத்து நீக்குகின்ற; அரக்கியர் குழாமும் கண்டான் - அரக்கியர் கூட்டத்தையும் பார்த்தான் இராவணன்.*

***9640. விண் பிளந்து ஒல்க ஆர்க்கும் வானரர் வீக்கம் கண்டான்;***
***மண் பிளந்து அழுந்த ஆடும் கவந்தத்தின் வருக்கம் கண்டான்;***
***கண் பிளந்து அகல நோக்கும் வானவர் களிப்பும் கண்டான்;***
***புண் பிளந்தனைய நெஞ்சன் கோபுரத்து இழிந்து போந்தான்.***

***விண்பிளந்து ஒல்க ஆர்க்கும்*** - *வானுலகம் பிளந்து அசையுமாறு ஆரவாரிக்கும்;* ***வானரர் வீக்கம் கண்டான்*** - *வானர வீரர்களின் பெருக்கத்தைப் பார்த்தான்;* ***மண்பிளந்து அழுந்த*** - *மண்உலகம் பிளவுற்று அழுந்துமாறு;* ***ஆடும் கவந்தத்தின் வருக்கம் கண்டான்*** - *ஆடுகின்ற தலையற்ற உடல்களின் கூட்டத்தைப் பார்த்தான்;* ***கண் பிளந்து அகல நோக்கும்*** - *கண்களை அகலமாகத் திறந்து போர்க்களத்தைப் பார்க்கும்;* ***வானவர் களிப்பும் கண்டான்*** - *தேவர்களின் மகிழ்ச்சியையும் பார்த்தான்;* ***புண் பிளந்தனைய நெஞ்சன்*** - *உடலிலுள்ள புண் பிளந்தது போன்ற துன்பமிக்க உள்ளமுடைய இராவணன்;* ***கோபுரத்து இழிந்து போனான்*** - *கோபுரத்திலிருந்து இறங்கி வந்தான்.*

***9641. நகை பிறக்கின்ற வாயன், நாக்கொடு கடை வாய் நக்கப்***
***புகை பிறக்கின்ற மூக்கன், பொறி பிறக்கின்ற கண்ணன்,***
***மிகை பிறக்கின்ற நெஞ்சன், வெஞ் சினத் தீமேல் வீங்கி,***
***சிகை பிறக்கின்ற சொல்லன், அரசியல் இருக்கை சேர்ந்தான்.***

***நகை பிறக்கின்ற வாயன்*** - *கோபச் சிறப்புத் தோன்றும் வாயுடையவனாய்;* ***நாக்கொடு கடைவாய் நக்க*** - *நாக்குடன் கடைவாய் கோபச் சிரிப்பு கொள்ளுவதால்;* ***புகை பிறக்கின்ற கண்ணன்*** - *தீப்பொறி பறக்கின்ற கண்ணுடையவனாய்;* ***மிகைபிறக்கின்ற நெஞ்சன்*** - *செருக்குத் தோன்றும் நெஞ்சு உடையவனாய்;* ***வெஞ்சினத்தீ மேல் வீங்கி*** - *தீயானது கொடிய கோபத்தில் மிகுதியாக ஓங்கி;* ***சிகைபிறக்கின்ற சொல்லன்*** - *கோபத்தெழுந்து தோன்றுகின்ற சொற்களை உடையவனாய்;* ***அரசியல் இருக்கை சேர்ந்தான்*** - *ஆட்சி நடத்தும் அரண்மனையை அடைந்தான்.*

## இராவணன் தேர் ஏறு படலம்

இராவணன் இராமனோடு போர் புரியத் தேர்மீது ஏறியதைக் கூறும் பகுதி ஆகும்.

அரசவையில் அரியணை மீது சினத்துடன் வீற்றிருந்த இராவணன், மகோதரனை நோக்கி 'எஞ்சிய சேனை யாவற்றையும் போர்க்கு வருமாறு முரசறைக' என ஆணையிட்டான். அது கேட்ட அரக்கர்படை திரண்டது. இராவணன் கொடை மேற்கொண்டு போர்க்கோலம் பூண்டு தெய்வத் தேரை வரச் செய்து அதனைத் தொழுதான். மறையவர்க்குத் தானமளித்து ரதமேறிப் பகையை ஒழிக்க வேண்டும்; அல்லது நான் மடியவேண்டும் என்று வஞ்சினம் கூறினான். வில் நாண் எறிந்து மிகுந்த ஆரவாரத்துடன் போர்க்குப் புறப்பட்டான். அதனால் உலகமெலாம் நடுங்கின. வானரத் தலைவர் அஞ்சிக் குலைந்தனர்.

அப்போது வீடணன் இராமனிடம் இராவணன் போர்புரிய வந்தனன் என்பதைக் கூறினான். இச்செய்திகள் இப்படலத்துள் கூறப்பட்டுள்ளன.

### *இராவணன் எஞ்சிய படையைத் திரட்டுதல்*

***9642. பூதரம் அனைய மேனி, புகை நிறப் புருவச் செந் தீ,***
***மோதரன் என்னும் நாமத்து ஒருவனை முறையின் நோக்கி,***
***' ''ஏது உளது இறந்திலாதது இலங்கையுள் இருந்த சேனை***
***யாதையும் எழுக!'' என்று ஆனை மணி முரசு***

***எற்றுக!' என்றான்.*** **பூதரம் அனைய மேனி** - *மலை போன்ற உடலையும்;* **புகைநிறப் புருவச் செந்தீ** - *புகைபோல் கரிய புருவங்களையுடைய செந்தீ போன்ற;* **மோதரன் என்னும் நாமத்து ஒருவனை** - *மகோதரன் எனும் பெயருள்ள ஒருவனை;* **முறையின் நோக்கி** - *முறைக்கு ஏற்பப் பார்த்து;* **இறந்திலாதது ஏதுஉளது** - *சாவாத சேனை எது உள்ளது?;* **இலங்கையுள் இருந்த சேனை** - *இலங்கைக்குள் இருந்த படை;* **யாதையும் எழுக என்று** - *எல்லாவற்றையும் எழுக என;* **ஆனை மணி முரசு எற்றுக என்றான்** - *அழகிய முரசத்தை யானைமீது ஏற்றி அடிப்பிடிக்க என்றான்.*

***9643. எற்றின முரசினோடும் ஏழ் - இரு நூறு கோடி***
***கொற்றவாள் நிருதர்சேனை குழீஇயது; கொடித் திண் தேரும்,***
***சுற்றுறு துளைக் கைம் மாவும், துரகமும், பிறவும் தொக்க,***
***வற்றிய வேலை என்ன, இலங்கை ஊர் வறளிற்று***

**ஆக. ஏற்றின முரசினோடும்** - முழக்கிய முரசத்துடன்; **ஏழ்இரு நூறுகோடி** - பதினான்கு நூறுகோடி; **கொற்றவாள் நிருதர் சேனை** - வெற்றி பொருந்திய அரக்கர் படை; **குழீஇயது** - திரண்டது; **வற்றிய வேலை என்ன** - நீர்வறண்டு போன கடல் போல; **இலங்கையூர் வறளிற்றாக** - இலங்கை நகர் வறுமையுடையதாக ஆயிற்று; **கொடித்திண் தேரும்** - கொடிகள் கட்டிய தேரும்; **சுற்றுறு துளைக்கைம்மாவும்** - சுற்றிச் சுழலும் துளைக் கையையுடைய யானையும்; **துரகமும் பிறவும் தொக்க** - குதிரையும் பிற படை யாவையும் சேர்ந்த;

*9644.* **ஈசனை, இமையா முக் கண் ஒருவனை, இருமைக்கு**
**ஏற்ற**
**பூசனை முறையின் செய்து, திரு மறை புகன்ற**
**தானம்**
**வீசினன் இயற்றி, மற்றும் வேட்டன வேட்டோர்க்கு**
**எல்லாம்**
**ஆசு அற நல்கி, ஒல்காப் போர்த் தொழிற்கு**

**அமைவது ஆனான். ஈசனை** - எல்லாச் செல்வங்களும் உடையவனும்; **இமையா முக்கண் ஒருவனை** - இமைக்காத மூன்று கண்களை உடையவனும் ஆன சிவபெருமானை; **இருமைக்கு ஏற்ற** - இம்மை மறுமைக்குகந்த; **பூசனை முறையின் செய்து** - பூசைகளை முறைப்படி செய்து; **திருமறை புகன்ற தானம்** - சிறந்த வேதங்கள் கூறும் தானங்களை; **வீசினன் இயற்றி** - வீசிக் கொடுத்து; **மற்றும்** - மேலும்; **வேட்டன வேட்டோக்கு எல்லாம்** - விரும்பியவற்றை விரும்பியவர்க்கெல்லாம்; **ஆசு அற நல்கி** - குற்றமின்றிக் கொடுத்து; **ஒல்காப் போர்த்தொழிற்கு** - தளராத போர்வினைக்கு **அமைவது ஆனான்** - பொருந்தியவன் ஆனான்.

**கலித்துறை**

*9645.* **அருவி அஞ்சனக் குன்றிடை ஆயிரம் அருக்கர்**
**உருவினோடும் வந்து உதித்தனர் ஆம் என ஒளிர,**
**கருவி நான்முகன் வேள்வியில் படைத்ததும், சுட்டிச்**
**செருவில் இந்திரன் தந்த பொன் கவசமும்,**
**சேர்த்தான்.**

**அருவி அஞ்சனக் குன்றிடை** - நீரருவி கொண்ட கரிய மலையிலே; **ஆயிரம் அருக்கர் உருவினோடும்** - ஆயிரம் சூரியர் வேற்று உருவத்தோடு; **வந்து உதித்தனர் ஆம் என ஒளிர** - வந்து தோன்றினர் ஆம் என்று ஒளி வீச; **கருவிநான் முகன் வேள்வியில்** - (உலகங்களைப் படைக்கக்) கருவியான பிரமன் வேள்வியிலே; **படைத்ததும்** -

*தோற்றுவித்ததும்;* ***சுட்டிச் செருவில்*** *- போரில் சுட்டிய;* ***இந்திரன் தந்த*** *- தேவேந்திரன் அளித்த;* ***பொன்கவசமும் சேர்த்தான்*** *- பொற்கவசமும் அணிந்தான்.*

***9646. வாள் வலம் பட, மந்தரம் சூழ்ந்த மாசுணத்தின்***
***தாள் வலந்து ஒளிர் தமனியக் கச்சொடும் சார்த்தி;***
***கோள் வலந்தன குவிந்தன ஆம் எனும் கொள்கை***
***மீள்வு இல் கில்புரி மணிக் கடி சூத்திரம் வீக்கி;***

***வாள் வலம்பட*** *- உடைவாளை வலமாகப் பொருந்தச் சேர்த்தி;* ***மந்தரம் சூழ்ந்த மாசுணத்தின்*** *- மந்தரமலையைச் சூழ்ந்த (வாசுகி எனும்) பாம்பு போல;* ***தாள் வலந்து ஒளிர்*** *- முயற்சியால் சுற்றப்பட்டு ஒளி வீசும்;* ***தமனியக் கச்சொடும் சார்த்தி*** *- பொன்னாலான கச்சிலே சேர்த்தி;* ***வலந்தன கோள் குவிந்தன*** *- வலம் வரும் கிரகங்கள் குவிந்தன;* ***ஆம் எனும் கொள்கை*** *- ஆகுமென்ற கொள்கை; மீள்வு இல் - மீளுதல் இல்லாத; கிம்புரி - கிம்புரி போன்ற வட்டவடிவமைந்த;* ***மணிக் கடி சூத்திரம் வீக்கி*** *- இரத்தினத்தாலமைந்த கடி சூத்திரத்தைக் கட்டி.*

***9647. மறை விரித்தன்ன மாடுறு மான மாக் கலுழன்***
***சிறை விரித்தன்ன கொய்சகம் மருங்கு உறச்***
***சேர்த்தி;***
***முறை விரித்தன்ன முறுக்கிய கோசிக மருங்கில்***
***பிறை விரித்தன்ன வெள் எயிற்று அரவமும்***
***பிணித்து;***

***மறை விரித்துள்ள*** *- வேதங்களை விரித்தாற்போல;* ***மாடுறு மானமாக் கலுழன்*** *- அருகிலிருந்த பெருமை மிகுந்த பெரிய கருடன்;* ***சிறை விரித்தன்ன கொய்சகம்*** *- சிறகை விரித்தாற் போன்ற கோசிகத்தின்;* ***மருங்குறச் சேர்த்தி*** *- இடத்திலே சேர்த்து;* ***முறுக்கிய கோசிக மருங்கில்*** *- முறுக்கமைந்த வெண்பட்டாடையை இடையிலே;* ***முறை விரித்தன்ன*** *- முறையாக விரித்தாற் போல;* ***பிறை விரித்தன்ன*** *- பிறையை வெளியிட்டாற் போல;* ***வெள்எயிற்று அரவமும் பிணித்து*** *- வெண்மையான பற்களையுடைய பாம்பைக் கட்டி.*

***9648. மழைக் குலத்தொடு வான் உரும்ஏறு எலாம் வாரி***
***இழைத் தொடுத்தன அனைய வாள் உடை மணி***
***ஆர்த்து;***
***முழைக் கிடந்த வல் அரிஇனம் முழங்குவ போல்வ***

***தழைக்கும் மின் ஒளிப் பொன் மலர்ச் சதங்கையும்
சாத்தி;***

***மழைக் குலத்தொடு*** *- மேகக் கூட்டத்தின் உறையும்;* ***வான்உரும் ஏறு எல்லாம் வாரி*** *- மேலான இடிகள் எல்லாவற்றையும் வாரி;* ***இழைத் தொடுத்தன அனைய*** *- செவ்விய முறையில் தொகுத்தமைத்தது போன்ற;* ***வாள் உடை மணி ஆர்த்து*** *- வாளையும் உடையையும், மணியையும் கட்டி;* ***முழைக்கிடந்த வல் அரிஇனம்*** *- குகையில் உறங்கும் வலிய சிங்கக் கூட்டம்;* ***முழங்குவ போல்வ*** *- முழங்குவதைப் போன்றன;* ***தழைக்கும் மின்ஒளிப் பொன்மலர்ச் சதங்கையும் சாத்தி*** *- மிகுகின்ற மின்னல் போன்ற ஒளியுடைய பொன்மலர் போன்ற சதங்கைகளையும் அணிந்து.*

***9649. உரும் இடித்த போது அரவு உறு மறுக்கம், வான்
உலகின்
இரு நிலத்திடை, எவ் உலகத்திடை, யாரும்
புரிதரப் படும் பொலங் கழல் இலங்குறப் பூட்டி;
சரியுடைச் சுடர் சாய் நலம் சார்வுறச் சாத்தி;***

***உரும் இடித்த போது*** *- இடி இடித்த பொழுது;* ***அரவுஉறு மயக்கம்*** *- பாம்பு அடைந்த கலக்கம்;* ***வான்உலகின் இருநிலத்தடை*** *- விண் உலகிலும் பெரிய பூமியிலும்;* ***எவ்வுலகத்திடை*** *- எந்த உலகத்திலும்;* ***யாரும் புரிதரப்படும்*** *- யாவரும் அடையுமாறு ஒலிக்கும்;* ***பொலங்கழல் இலங்குறப் பூட்டி*** *- பொற்கழல்களை விளங்கும் வகையில் அணிந்து;* ***சரியுடைச் சுடர் சாய்நலம்*** *- சரிந்த உடையில் சுடர் வீழ்வதால் உண்டாகும் அழகு;* ***சார்வுறச் சாத்தி*** *- மேலும் விளங்க அணிந்து.*

***9650. நால் - அஞ்சு ஆகிய கரங்களில் நனந் தலை
அனந்தன்
ஆலம் சார் மிடற்று அருங் கறை கிடந்தென,
இலங்கும்
கோலம் சார் நெடுங் கோதையும் புட்டிலும் கட்டி;
தாலம் சார்ந்த மாசுணம் எனக் கங்கணம் தழுவ;***

***நால் அஞ்சு ஆகிய கரங்களில்*** *- இருபது கைகளில்;* ***நனந்தலை அனந்தன்*** *- பெரிய தலையையுடைய அனந்தனின்;* ***ஆலம்சார் மிடற்று அருங்கறை கிடந்தென*** *- நஞ்சு தங்கிய கழுத்தில் அரிய கறை கிடந்தது போல;* ***இலங்கும்*** *- விளங்குகின்ற;* ***கோலம்சார் நெடுங்கோதையும்*** *- அழகுமிக்க நீண்ட தோற்கட்டும்;* ***புட்டிலும் கட்டி*** *- விரற்புட்டிலும் கட்டி;* ***தாலம் சார்ந்த மாசுணம் என*** *- நீண்ட நாவுடைய பாம்பு போல;* ***கங்கணம் தழுவ*** *- கங்கணத்தை அணிந்து;*

***9651. கடல் கடைந்த மால் வரையினைச் சுற்றிய கயிற்றின்***
***அடல் கடந்த தோள் அலங்கு போர் வலயங்கள் இலங்க;***
***உடல் கடைந்த நாள் ஒளியவன் உதிர்த்த பொன் கதிரின்***

***சுடர் தயங்குற, குண்டலம் செவியிடைத் தூக்கி;***

***கடல் கடைந்த மால் வரையினை*** *- பாற்கடலைக் கடைந்த மந்தரமலையை;* ***சுற்றிய கயிற்றின்*** *- சுற்றிய (வாசுகி என்ற பாம்பாம் கயிறு போல);* ***அடல் கடந்த தோள்*** *- வலிமையைக் கடந்த தோளில்;* ***அலங்குபோர் வலயங்கள் இலங்க*** *- அசைகின்ற போர் வலயங்கள் விளங்கிட;* ***உடல் கடைந்த நாள் ஒளியவன்*** *- உடலைச் சாணையிட்டுக் கடைசல் பிடித்த காலத்தில் சூரியன்;* ***உதிர்த்த பொற்கதிரின்*** *- உதிர்த்த பொன்மயமான கதிரின்;* ***சுடர் தயங்குற*** *- சுடர் விளங்க;* ***குண்டலம் செவியிடைத் தூக்கி*** *- குண்டலங்களைக் காதிலே அணிந்து.*

***9652. உதயக் குன்றத்தோடு அத்தத்தின் உலாவுறு கதிரின்***
***துதையும் குங்குமத் தோளொடு தோளிடைத் தொடர;***
***புதை இருள் பகைக் குண்டலம் அனையவை பொலிய;***
***சிதைவு இல் திங்களும் மீனும்போல், முத்துஇனம் திகழ;***

***உதயக் குன்றத்தோடு*** *- உதய பருவதத்தின்;* ***அத்தத்தின் உலாவுறு கதிரின்*** *- மாலை மலை முடிவிலே வெளிப்படும் சூரிய கதிர் போல;* ***துதையும் குங்குமத் தோளொடு*** *- நெருங்கிய குங்குமம் பூசிய தோளொடு;* ***தோளிடைத் தொடர*** *- தோள்களிடத்து நெருங்கிய;* ***புதை இருள் பகைக் குண்டலம்*** *- நெருங்கிய இருளைப் பகைக்கும் குண்டலங்கள்;* ***அனையவை பொலிய*** *- சூரியனைப் போல ஒளிவீச;* ***சிதைவு இல் திங்களும் மீனும் போல்*** *- குறைவு படாத சந்திரனும் விண்மீனும் போல;* ***முத்து இனம் திகழ*** *- முத்துக்களின் கூட்டம் திகழவும்.*

***9653. வேலைவாய் வந்து, வெய்யவர் அனைவரும் விடியும்***
***காலை உற்றனர் ஆம் எனக் கதிர்க் குலம் காலும்***
***மாலை பத்தின்மேல், மதியம் முன் நாளிடைப் பலவாய்***
***ஏல முற்றிய அனைய முத்தக் குடை இமைப்ப:***

***வேலைவாய் வந்து*** - *கடலிடத்து;* ***வெய்யவர் அனைவரும்*** - *கதிரவர் அனைவரும்;* ***விடியும் காலை உற்றனராம் என*** - *விடியும் காலத்தில் ஒன்றாக வந்து சேர்ந்தனர் எனும்படி;* ***கதிர்க்குலம் காலும்*** - *ஒளிக்கற்றைகளை உமிழ்கின்ற;* ***மாலைபத்தின்மேல்*** - *முடிவரிசை பத்தின்மேல்;* ***மதியம் முன்னாளிடை*** - *சந்திரன் முன் நாளினில்;* ***பலவாய் ஏல முற்றிய அனைய*** - *பலவடிவம் பொருந்த முற்றியதற்கு ஒப்ப;* ***முத்தக் குடை இமைப்ப*** - *முத்துக்கள் தொங்கும் வெண்கொற்றக் குடை விளங்கவும்.*

***9654. பகுத்த பல் வளக் குன்றினில் முழை அன்ன பகு வாய்***
***வகுத்த வான் கடைக் கடைதொறும் வளை எயிற்று ஈட்டம்,***
***மிகுத்த நீல வான் மேகம் சூழ் விசும்பிடை, தசும்பூடு***
***உகுத்த செக்கரின் பிறைக் குலம் முளைத்தன ஒக்க;***

***பகுத்த பல்வளக் குன்றினில்*** - *வகை செய்யப்பட்ட பலவளங்களுடைய குன்றில்;* ***முழை அன்ன பகுவாய்*** - *குகை போன்ற பிளந்தவாயிலே;* ***வகுத்த வான்கடைக் கடைதொறும்*** - *வகுக்கப் பெற்ற பெரிய கடைவாய் தோறும் கடை வாய்தோறும்* ***வளைஎயிற்று ஈட்டம்*** - *வளைந்த பற்களின் கூட்டம்;* ***மிகுத்த நீலவான் மேகம் சூழ்*** - *மிகுதியாகவுள்ள நீல நிறமுள்ள பெரிய மேகங்கள் சூழ்ந்த;* ***விசும்பிடை*** - *வானத்தில்;* ***தசும்பூடு உகுத்த*** - *பாலிகைக் கலன்களில் தூவிய;* ***செக்கரின் பிறைக்குலம்*** - *சிவந்த வானில் பிறைக் கூட்டம்;* ***முளைத்தன ஒக்க*** - *முளைத்தவற்றை ஏத்திருக்க.*

***9655. ஒத்த தன்மையின் ஒளிர்வன, தரளத்தின் ஓதம்***
***தத்துகின்றன, வீர பட்டத் தொகை தயங்க;***
***முத்த ஓடைய முரண் திசை முழு மத யானை***
***பத்து நெற்றியும் சுற்றிய பேர் எழில் படைக்க;***

***ஒத்த தன்மையின் ஒளிர்வன*** - *இயைந்த தன்மையோடு ஒளிவீசுவன;* ***தரளத்தின் ஓதம் தத்துகின்றன*** - *முத்துக்களின் ஒளி அலை வீசுகின்றன;* ***வீரபட்டத் தொகை தயங்க*** - *வீரபட்டத் தொகை விளங்குவதால்;* ***ஒத்த ஓடைய முரண் திசை முழுமத யானை*** - *சிறப்பால் ஒத்த முகபடாம்களை முரண்பட்ட எட்டுத் திக்குகளிலும் உள்ள நிரம்பிய மதம் பொழியும் யானைகளின்;* ***பத்து நெற்றியும்*** - *பத்து நுதல்களும்;* ***சுற்றிய பேர்எழில் படைக்க*** - *சூழ்ந்த பெருமைமிக்க அழகை உண்டாக்கவும்.*

***9656. புலவி மங்கையர் பூஞ் சிலம்பு அரற்று அடி போக்கி,***

***தலைமை கண்ணினர்த் தாழ்கிலா மணி முடித்***
***தலங்கள்***
***உலகம் ஒன்றினை விளக்குறும் கதிரினை ஓட்டி,***
***அலகுஇல் எவ் உலகத்தினும் வயங்கு இருள் அகற்ற;***

***புலவிமங்கையர்*** - *புலக்கும் பெண்டிர்;* ***பூஞ்சிலம்பு அரற்று அடி நோக்கி*** - *அழகிய சிலம்புகள் ஒலிக்கும் அடியை நீக்கி;* ***தலைமை கண்ணினர்*** - *தலைமையைக் கருதுகின்றவர்களை;* ***தாழ்கிலா மணிமுடித்தலங்கள்*** - *வணங்காத இரத்தினம் பதித்த திருமுடி சூட்டிய இடங்கள்;* ***உலகம் ஒன்றினை விளக்குறும்*** - *உலகம் ஒன்றை விளங்கச் செய்யும்;* ***கதிரினை ஓட்டி*** - *சூரியனைத் தனக்கீடாகாதென ஓடச் செய்து;* ***அலகு இல் எவ் உலகத்தினும்*** - *அளவற்ற எந்த உலகத்திலும்;* ***வயங்கு இருள் அகற்ற*** - *விளங்கும் இருளை நீக்கவும்.*

*9657.* ***நாகம் நானிலம் நான்முகன் நாடு என நயந்த***
***பாகம் மூன்றையும் வென்று கொண்டு, அமரர் முன்பு***
***அணிந்த***
***வாகை மாலையும் மருங்கு உற, வரி வண்டொடு***
***அளவி;***
***தோகை அன்னவர் விழி தொடர் தும்பையும் சூட்டி;***

***நாகம்*** - *சுவர்க்க லோகமும்;* ***நானிலம்*** - *மண்ணுலகமும்;* ***நான்முகன் நாடு என நயந்த*** - *பிரமலோகம் என விரும்பிய;* ***பாகம் மூன்றையும்*** - *மூன்று பகுதிகளையும்;* ***வென்று கொண்டு*** - *வெற்றி பெற்றுக் கைக்கொண்டு;* ***அமரர் முன்பு அணிந்த*** - *தேவர் முன்னர் புனைந்திருந்த;* ***வாகைமாலையும்*** - *வெற்றி மாலையும்;* ***மருங்குற*** - *அம்மாலையின் பக்கத்தே;* ***வரிவண்டொடு அளவி*** - *கோடுகளை உடைய வண்டுகளொடு சேர்த்து;* ***தோகை அன்னவர் விழிதொடர்*** - *மயில் போன்ற இள மகளிர் கண்கள் பின்தொடரப் பெற்ற;* ***தும்பையும் சூட்டி*** - *தும்பை மலர் மாலையும் அணிந்து.*

*9658.* ***அகழும் வேலையை, காலத்தை, அளக்கர் நுண்***
***மணலை,***
***நிகழும் மீன்களை, விஞ்சையை, நினைப்பது என்?***
***நின்ற***
***இகழ்வு இல் பூதங்கள் இறப்பினும், இறுதிசெல்லாத***

***புகழ் என, சரம் தொலைவு இலாத் தூணி பின் பூட்டி;***

***அகழும் வேலையை*** - *கடலை;* ***காலத்தை*** - *காலப் பொழுதை;* ***அளக்கர் நுண்மணலை*** -

*கடலின் நுண்ணிய மணலை;* ***நிகழும் மீன்களை*** *- கடலில் வாழும் மீன்களை;* ***விஞ்சையை*** *- கல்வியை ஒப்பாக;* ***நினைப்பது என்*** *- நினைப்பது எதற்காக;* ***நின்ற இகழ்வு இல் பூதங்கள் இறப்பினும்*** *- நிலைத்து நின்ற இகழ்ச்சி இல்லாத பூதங்கள் ஒழிந்தாலும்;* ***இறுதி செல்லாத புகழ் என*** *- அழிவற்ற புகழைப் போல;* ***சரம் தொலைவு இலாத் தூணியின்பூட்டி*** *- அம்புகள் என்றும் அமைந்த அம்பு அறாத் துணியைத் தன் முதுகுப் புறத்தே கட்டி.*

***9659. 'வருக, தேர்!' என, வந்தது - வையமும் வானும்***
***உரக தேயமும் ஒருங்கு உடன் இவரினும், உச்சிச்***
***சொருகு பூ அன்ன சுமையது; துரகம் இன்று எனினும்,***
***நிருதர் கோமகன் நினைந்துழிச் செல்வது, ஓர் இமைப்பில்.***

***வையமும் வானும் உரகதேயமும்*** *- மண்ணுளோரும் விண்ணுளோரும் நாகலோகத்தோரும்;* ***ஒருங்கு உடன் இவரினும்*** *- ஒருசேர ஏறினாலும்;* ***உச்சிச் சொருகுபூ அன்னசுமையது*** *- உச்சிப் பூப்போன்ற எளிய சுமையை உடையது;* ***துரகம் இன்று எனினும்*** *- குதிரைகள் இல்லாவிடிலும்;* ***நிருதர் கோமகன் நினைத்துழி ஓர் இமைப்பில்*** *- இராவணன் நினைத்த போது இமை நொடிக்கும் நேரத்தில்;* ***செல்வது*** *- செல்லும் ஆற்றலுடைய தேர்;* ***'வருக தேர்' என வந்தது*** *- வருக தேர் என்று சொல்லியவுடன் வந்தது.*

***9660. ஆயிரம் பரி அமுதொடு வந்தவும், அருக்கன்***
***பாய் வயப் பசுங் குதிரையின் வழியவும், படர் நீர்***
***வாய் மடுக்கும் மா வடவையின் வயிற்றின், வன் காற்றின்***
***நாயகற்கு, வந்து உதித்தவும், பூண்டது நலத்தின்.***

***அமுதொடு வந்தவும்*** *- பாற்கடலில் அமுதத்தோடு பிறந்தனவும்;* ***அருக்கன் பாய்வயப் பசுங் குதிரையின் வழியவும்*** *- சூரியன் குதிரைகளின் மரபில் தோன்றியவும்;* ***படர்நீர் வாய் மடுக்கும் மாவடவையின் வயிற்றின்*** *- பரவிய நீர் எங்கும் பரவியுள்ள வடவாமுகாக்னி வயிற்றிலே;* ***வன்காற்றின் நாயகற்கு வந்துதித்தவும்*** *- கொடிய காற்றுக் கடவுளாம் வாயு தேவனுக்குத் தோன்றியனவுமாகிய;* ***ஆயிரம்பரி நலத்தின் பூண்டது*** *- ஆயிரம் குதிரைகள் அழகாக கட்டடப்பட்டது.*

***9661. பாரில் செல்வது, விசும்பிடைப் படர்வது; பரந்த***

***நீரில் செல்வது; நெருப்பினும் செல்வது; நிமிர்ந்த***
***போரில் செல்வது; பொன் நெடு முகட்டிடை விரிஞ்சன்***
***ஊரில் செல்வது; எவ் உலகத்தும் செல்வது, ஓர்***
***இமைப்பின்.***

***பாரில் செல்வது*** - *நிலத்தில் செல்வது போலவே;* ***விசும்பிடைப் படர்வது*** - *வானிலே செல்வது;* ***பரந்த நீரில் செல்வது*** - *பரப்பமைந்த நீரிலே செல்வது;* ***நெருப்பினும் செல்வது*** - *தீயிலும் செல்வது;* ***நிமிர்ந்து போரில் செல்வது*** - *தன்னிகரின்றி போரிலே செல்வது;* ***பொன்முகட்டிடை*** - *பொன்னால் அமைந்த வானில்;* ***விரிஞ்சன் ஊரில் செல்வது*** - *பிரமன் ஊரிலும் செல்வது;* ***ஓர் இமைப்பின் எவ்வுலகத்தும் செல்வது*** - *ஓரிமை நொடிக்குள் எந்த உலகத்திலும் செல்வது.*

***9662. எண் திசைப் பெருங் களிற்றிடை மணி என***
***இசைக்கும்***
***கண்டை ஆயிர கோடியின் தொகையது; கதிரோன்***
***மண்டிலங்களை மேருவில் குவித்தென வயங்கும்***
***அண்டம் விற்கும் நான் காசுஇனம் குயிற்றியது***
***அடங்க.***

***எண்திசைப் பெருங்களிற்றிடை*** - *எட்டுத் திசையிலுள்ள பெரிய யானைகளின் கழுத்தில் கட்டிய;* ***மணியென இசைக்கும்*** - *மணிகள் போல ஒலிக்கின்ற;* ***கண்டை ஆயிர கோடியின் தொகையது*** - *கண்டை எனும் வாச்சியம் ஆயிரம் கோடித் தொகையை உடையது;* ***கதிரோன் மண்டிலங்களை*** - *சூரிய மண்டிலங்களை;* ***மேருவில் குவித்தென*** - *மேருமலையில் குவித்தாற் போன்று;* ***வயங்கும் அண்டம்*** - *விளங்கும் அண்டத்தை;* ***விற்கும் நன்காக இனம்*** - *விலையாகக்` கொளும் உயர்ந்த இரத்தினங்களின் கூட்டம்;* ***அடங்க, குயிற்றியது*** - *முழுவதும் இழைக்கப் பெற்றது.*

***9663. முனைவர் வானவர் முதலினர், அண்டத்து முதல்வர்***
***எனைவர் ஈந்தவும், இகலினில் இட்டவும், இயம்பா***
***வினையின் வெய்யன படைக்கலம், வேலை என்று***
***இசைக்கும்***
***சுனையின் நுண் மணல் தொகையன சுமந்தது,***
***தொக்க.***

***முனைவர் வானவர் முதலினர்*** - *முனிவரும், தேவரும் முதலானவரும்;* ***அண்டத்து முதல்வர்*** - *உலகில் முதன்மை நிலை பெற்றவரும்;* ***எனைவர் ஈந்தவர்*** - *எப்படிப் பட்டவரும் கொடுத்திட்டனவும்;* ***இகலினில் இட்டவும்*** - *போரில் தோற்றுக் கொடுத்திட்டனவும்;* ***இயம்பா வினையின்*** - *சொல்ல முடியாத கொடிய*

*போர்ச்செயலின்;* ***வெய்யன படைக்கலம்*** *- கொடியனவாம் படைக்கருவிகள்;* ***வேலை என்று இசைக்கும்*** *- வேலை எனக் கூறப்பெறும்;* ***சுனையின் நுண்மணல் தொகையன*** *- நீர்ச் சுனையிலுள்ள மணலின் தொகையை உடையவாகி;* ***தொக்க சுமந்தது*** *- திரண்டவற்றைச் சுமந்தது.*

***9664. கண்ணன் நேமியும், கண்ணுதல் கணிச்சியும், கமலத்து***
***அண்ணல் குண்டிகைக் கலசமும், அழியினும், அழியாத்***
***திண்மை சான்றது; தேவரும் உணர்வு அருஞ் செய்கை***
***உண்மை ஆம் எனப் பெரியது, வென்றியின் உறையுள்.***

***கண்ணன் நேமியும்*** *- (அத்தேர்) திருமாலின் சக்கரமும்;* ***கண்ணுதல் கணிச்சியும்*** *- சிவபெருமானின் மழுப்படையும்;* ***கமலத்து அண்ணல்*** *- தாமரையில் வாழும் பிரமனின்;* ***குண்டிகைக் கலசமும்*** *- குண்டிகையாம் பாத்திரமும்;* ***அழியினும் அழியாத் திண்மை சான்றது*** *- அழிந்தாலும் தான் அழியாத வலிமை நிறைந்தது;* ***தேவரும்*** *- வானவரும்;* ***உணர்வரும் செய்கை உண்மை எனப் பெரியது*** *- அறிய முடியாத தன்மை உடைய உண்மையைப் போலப் பெரியது;* ***வென்றியின் உறையுள்*** *- வெற்றிக்கு உறைவிடம்.*

***9665. அனைய தேரினை அருச்சனை வரன்முறை ஆற்றி,***
***இனையர் என்பது ஓர் கணக்கு இலா மறையவர் எவர்க்கும்***
***வினையின் நல் நிதி முதலிய அளப்ப அரும் வெறுக்கை***
***நினையின் நீண்டதுஓர் பெருங் கொடை அருங் கடன் நேர்ந்தான்***

***அனைய தேரினை*** *- அப்படிப்பட்ட தேரை;* ***அருச்சனை வரன் முறை ஆற்றி*** *- போற்றித் துதிப்பதை முறையாகச் செய்து;* ***இனையர் என்பது ஓர் கணக்கு இலா*** *- இவ்வளவு பேர் என்ற ஒரு கணக்கு இல்லாத;* ***மறையவர் எவர்க்கும்*** *- வேதியவர் எவர்க்கும்;* ***வினையின் நல் நிதி முதலிய அளப்பரும்*** *- அளிக்க வேண்டியவாறு நல்ல பொருள் முதலியவற்றை அளப்பதற்கு முடியாத;* ***வெறுக்கை*** *- செல்வங்களை;* ***நினையின்*** *- நினைக்க முடியாதவாறு;* ***நீண்டதுஓர் பெருங்கொடை*** *- மிக்க ஒப்பற்ற பெரிய செல்வத்தை அளிப்பதாக;* ***அருங்கடன் நேர்ந்தான்*** *- அரிய கடமையைச் செய்து நிறைவேற்றினான்.*

***9666. ஏறினான் தொழுது; இந்திரன் முதலிய இமையோர்***
***தேறினார்களும் தியங்கினார், மயங்கினார், திகைத்தார்;***
***வேறு நாம் செயும் வினை இலை, மெய்யின் ஐம் புலனும்***
***ஆறினார்களும் அஞ்சினார், உலகு எலாம் அனுங்க.***

**தொழுது ஏறினான்** - *(அந்தத் தேரை இராவணன்) வணங்கி ஏறினான்;* **இந்திரன் முதலிய இமையோர் தேறினார்களும் தியங்கினார்** - *இந்திரன் முதலான தேவர்களும் அறிவு சோர்ந்து;* **மயங்கினார் திகைத்தார்** - *மயங்கினராய் திகைப்படைந்தனர்;* **வேறு நாம் செயும் வினை இலை** - *வேறாகச் செய்கின்ற செயல் இல்லாமையால்;* **மெய்யின் ஐம்புலனும்** - *உடலிலுள்ள ஐந்து புலன்களும்;* **ஆறினார்களும்** - *அடங்கப் பெற்ற முனிவர்களும்;* **உலகு எலாம் அனுங்க அஞ்சினர்** - *உலகங்கள் எல்லாம் வருந்த பயப்பட்டனர்.*

***9667. 'மன்றல் அம் குழல் சனகி தன் மலர்க் கையான் வயிறு***
***கொன்று, அலந்தலைக் கொடு, நெடுந் துயரிடைக் குளித்தல்;***
***அன்று இது என்றிடின், மயன் மகள் அத் தொழில் உறுதல்;***
***இன்று, இரண்டின் ஒன்று ஆக்குவென், தலைப்படின்' என்றான்.***

**மன்றல் அம்குழல் சனகி** - *நறுமணம் மிக்க அழகிய கூந்தலையுடைய சீதை;* **தன் மலர்க்கையால் வயிறு கொன்று** - *தனது மலர் போன்ற கைகளால் வயிற்றை அலைத்து;* **அலந்தலைக் கொண்டு** - *அலைச்சலைக் கொண்டு;* **நெடுந்துயரிடைக் குளித்தல்** - *ஆழ்ந்த துன்பத்தில் மூழ்குதல்;* **அன்று இது என்றிடின்** - *அல்லது இது நடக்காது என்று கூறினால்;* **மயன்மகள் அத்தொழில் உறுதல்** - *மண்டோதரி அச்செயல்களை அடைதல் ஆம்;* **தலைப்படின்** - *நான் போர் செய்யப் புகுந்தால்;* **இன்று இரண்டின் ஒன்று** - *இன்றைக்கு இந்த இரண்டு செயல்களில் ஒன்றை;* **ஆக்குவென் என்றான்** - *நடைபெறச் செய்வேன் என இராவணன் கூறினான்.*

***9668. பல களம் தலை மௌலியோடு இலங்கலின், பல் தோள்***
***அலகு அளந்து அறியா நெடும் படைகளோடு அலங்க,***

***விலகு அளம் தரு கடல் தரை விசும்பொடு வியப்ப,***
***உலகு அளந்தவன் வளர்ந்தவன் ஆம் என***
***உயர்ந்தான்.***

***பலகளம் தலை மௌலியோடு இலங்கலின்*** - *பலகழுத்துக்களின் மீது தலைகள் அரசு முடிகளோடு விளங்கலின்;* ***பல்தோள் அலகு அளந்து அறியா*** - *பல தோள்கள் அளவால் அளந்தறிய முடியாமல்;* ***நெடும் படைகளோடு அலங்க*** - *நெடிய படைக்கலன்களோடு ஒளிர்ந்து நிற்க;* ***விலகு அளம் தருகடல்*** - *விலகியுள்ள உப்பளத்தை அளிக்கும் கடலால் சூழப்பட்ட;* ***தரை விசும்பொடு வியப்ப*** - *உலகத்தோர் வானோர் ஆச்சரியப்பட;* ***உலகு அளந்தவன் வளர்ந்தவன் ஆம்*** - *மூன்றுலகைத் தன் அடிகளால் அளந்த திருமால் வளர்ந்தது போல;* ***என உயர்ந்தான்*** - *என்று கூறும்படி வளர்ந்தான்.*

***9669. விசும்பு விண்டு இரு கூறுற, கல் குலம் வெடிப்ப,***
***பசும் புண் விண்டெனப் புவி பட, பகலவன் பசும்***
***பொன்***
***தசும்பு நின்று இடைந்து இரிந்திட, மதி தகை***
***அமிழ்தின்***
***அசும்பு சிந்தி நொந்து உலைவுற, தோள் புடைத்து***
***ஆர்த்தான்.***

***விசும்புவிண்டு இருகூறுற*** - *வானம் பிளந்து இருபங்காக;* ***கல்குலம் வெடிப்ப*** - *மலைகள் வெடித்திட;* ***பசும்புண் விண்டென*** - *பசிய புண்கள் மேலும் பிளந்தது போல;* ***பகலவன் பசும்பொன் தசும்பு நின்று இடைந்து இரிந்திட*** - *கதிரவன், பசிய பொற்குடம் போல இருந்து தன் இடத்திலிருந்து திரிந்திட;* ***மதி தகை அமிழ்தின் அசும்பு*** - *சந்திரனின் பண்பாகிய அமுதத் துளிகளை;* ***சிந்திநொந்து உலைவுற*** - *சிந்தி வருந்தித் துன்பமடைய;* ***தோள்புடைத்து ஆர்த்தான்*** - *தோளைத் தட்டி இராவணன் ஆரவாரம் செய்தான்.*

***9670. 'நணித்து வெஞ் சமம்' என்பது ஓர் உவகையின்***
***நலத்தால்,***
***திணித் தடங் கிரி வெடித்து உக, சிலையை நாண்***
***செறித்தான்;***
***மணிக் கொடுங் குழை வானவர், தானவர், மகளிர்***
***துணுக்கம் எய்தினர், மங்கல நாண்களைத் தொட்டார்.***

***வெஞ்சமம் நணித்து*** - கொடிய போர் அண்மை நிலையில் வந்து விட்டது; ***என்பது ஓர் உவகையின் நலத்தால்*** - எனும் ஒப்பற்ற மகிழ்ச்சியின் நன்மையால்; ***திணித்தடங்கிரி வெடித்து உக*** - வலிய பெரிய மலை வெடித்துப் பொடியாகி விழ; ***சிலையை நாண் தெறித்தான்*** - வில்நாணைத் தெறித்தான்; ***மணிக் கொடுங்குழை வானவர்*** - அழகிய வளைந்த குழைகளை அணிந்த தேவர்கள்; ***தானவர்*** - தானவ குலத்தினரது; ***மகளிர்*** - பெண்டிர்; ***துணுக்கம் எய்தினர்*** - அச்சமுற்றனர்; ***மங்கல நாண்களைத் தொட்டார்*** - (அதனால்) எங்கே தங்கள் தாலி மங்கலக் கயிறு அறுபட்டுப் போகுமோ எனத் தொட்டுப் பார்த்துக் கொண்டனர்.

***9671. சுரிக்கும் மண்டலம் தூங்கு நீர்ச் சுரிப்பு உற, வீங்க,***
***இரைக்கும் பல் உயிர் யாவையும் நடுக்கமுற்று இரிய,***
***'பரித்திலன் புவி, படர் சுடர் மணித் தலை பலவும்***
***விரித்து எழுந்தனன், அனந்தன்மீது' என்பது ஓர்***
***மெய்யான்.***

***சுரிக்கும் மண்டலம்*** - வானில் சுழலும் சூரிய, சந்திர மண்டலம்; ***தூங்கு நீர்ச் சுரிப்பு உற வீங்க*** - மிகுந்த நீருள்ள கடலிலே சுழற்சி உண்டாகிப் பொங்கவும்; ***இரைக்கும் பல்லுயிர் யாவையும்*** - ஆரவாரிக்கும் எல்லா உயிர்களும்; ***நடுக்கமுற்று இரிய*** - நடுங்கி நிலை கெடவும்; ***அனந்தன்*** - ஆயிரந் தலைகள் கொண்ட அனந்தன் எனும் பாம்பு; ***புரி பரித்திலன்*** - உலகைத் தாங்க முடியவில்லை; ***படர் சுடர் மணித்தலை பலவும்*** - விரிகின்ற ஒளியுடைய மணிகள் பூண்ட பல தலைகளும்; ***மீது விரித்து எழுந்தனன்*** - மேலே படம் விரித்து எழுந்தனன்; ***என்பது ஓர் மெய்யான்*** - என்று தோன்றும் வகையில் ஒப்பற்ற உடலை உடையவன் ஆனான் (இராவணன்).

***9672. தோன்றினான் வந்து - சுரர்களோடு அசுரரே***
***தொடங்கி***
***மூன்று நாட்டினும் உள்ளவர் யாவரும் முடிய,***
***'ஊன்றினான் செரு' என்று உயிர் உமிழ்தர, உதிரம்***
***கான்று, நாட்டங்கள் வடஅனற்கு இரு மடி கனல.***

***சுரர்களோடு அசுரரே தொடங்கி*** - தேவர்களுடனே அசுரர் தொடங்கி; ***மூன்று நாட்டினும் உள்ளவர் யாவரும் முடிய*** - மூவுலகிலும் உள்ளவர் யாவரும் அழிய; ***செரு ஊன்றினான்*** - போரில் மனம் வைத்தான்; ***என்று உயிர் உமிழ்தர உதிரம் கான்று*** - என உயிர்கள் அழியவும் இரத்தம் கக்கவும்; ***நாட்டங்கள்*** - கண்கள்; ***வடஅனற்கு இருமடி கனல*** - வடவைத் தீக்கு இருமடங்கு கொடுமையாய்த் தீ வீச.

*தானவர் - அசுரர் வேறு அரக்கர் வேறு, இராவணன் அரக்கன் ஆதலின் அவனுக்கு அசுரர் தேவர் இருவரும் எதிரிகளே.*

*உலகில் தோன்றிய கலக்கம் கண்டு, சுக்கிரீவன் முதலியோர் துணுக்கமுறுதல்*

***9673. உலகில் தோன்றிய மறுக்கமும், இமைப்பிலர் உலைவும்,***
***மலையும் வானமும் வையமும் மறுகுறு மறுக்கும்,***
***அலை கொள் வேலைகள் அஞ்சின சலிக்கின்ற அயர்வும்,***
***தலைவனே முதல் தண்டல் இலோர் எலாம் கண்டார்.***

**உலகில் தோன்றிய மறுக்கமும்** - இவ்வுலகில் தோன்றிய கலக்கமும்; **இமைப்பிலர் உலைவும்** - தேவர்களின் வருத்தமும்; **மலையும் வானமும் வையமும்** - மலைகளும் விண்ணும் பூமியும்; **மறுகுறு மறுக்கும்** - சுழலும் சுழற்சியும்; **அலைகொள் வேலைகள் அஞ்சின** - அலைகள் மிகுந்த கடல்கள் பயந்தனவாய்; **சலிக்கின்ற அயர்வும்** - சலிப்புறுகின்ற தளர்ச்சியும்; **தலைவனே முதல் தண்டல் இலோர் எலாம் கண்டார்** - சுக்கிரீவன் முதலிய தடுக்கப்படாத வலிமையை உடையவர் எல்லோரும் பார்த்தனர்.

***9674. 'பீறிற்றாம் அண்டம்!' என்பது ஓர் ஆகுலம் பிறக்க,***
***வேறிட்டு ஓர் பெருங் கம்பலை பம்பி மேல் வீங்க,***
***'மாறிப் பல் பொருள் வகுக்குறும் காலத்து மறுக்கம்***
***ஏறிற்று; உற்றுளது என்னைகொலோ?' என எழுந்தார்***

**அண்டம் பீறிற்றாம்** - இவ்வுலகம் கிழிந்தது; **என்பது ஓர் ஆகுலம் பிறக்க** - என்று எண்ணுமாறு ஒரு தடுமாற்றம் எழ; **வேறிட்டு ஓர் பெருங்கம்பலை** - வேறுபட்ட ஒரு பேரொலி; **பம்பி மேல் வீங்க** - நெருங்கி மேலும் மிக; **மாறிப் பல்பொருள் வகுக்குறும் காலத்து** - அழிந்திடப் பல பொருள்களைப் படைக்கப் பெறும் பொழுதில்; **மறுக்கம் ஏறிற்று** - கலக்கம் மிகுதியாயிற்று; **என்னை கோலோ** - என்ன காரணமோ; **என எழுந்தார்** - என்று இராமன் படையில் எழலானார்.

***9675. கடல்கள் யாவையும், கல் மலைக் குலங்களும், காரும்,***
***திடல் கொள் மேருவும், விசும்பிடைச் செல்வன சிவண,***
***அடல் கொள் சேனையும், அரக்கனும், தேரும் வந்து ஆர்க்கும்***
***கடல் கொள் பேர் ஒலிக் கம்பலை என்பதும் கண்டார்.***

***கடல்கள் யாவையும்*** - *கடல்கள் எல்லாம்;* ***கல்மலைக் குலங்களும்*** - *கல்வடிவான மலைக் கூட்டங்களும்;* ***காரும்*** - *மேகமும்;* ***திடல்கொள் மேருவும்*** - *வலிமை மிகுந்த மேருமலையும்;* ***விசும்பிடைச் செல்வன சிவண*** - *வானத்தில் செல்வனவற்றை ஒத்திருக்க;* ***அடல் கொள் சேனையும்*** - *வலிமை கொண்ட அரக்கர் படையும்;* ***அரக்கனும்*** - *இராவணனும்;* ***தேரும் வந்து ஆர்க்கும்*** - *தேரும் வந்து ஒலிக்கும்;* ***கடல்கொள் பேர் ஒலிக்கம்பலை என்பதும் கண்டார்*** - *கடல் போல ஒலிக்கின்ற பேரொலி அது என்பதையும் அறிந்தார்.*

***9676. 'எழுந்து வந்தனன் இராவணன்; இராக்கதத் தானைக்***
***கொழுந்து முந்தி வந்து உற்றது; கொற்றவ!***
***குலுங்குற்று***
***அழுந்துகின்றது, நம் பலம்; அமரரும் அஞ்சி,***
***விழுந்து சிந்தினர்' என்றனன், வீடணன், விரைவான்.***

***கொற்றவ !*** - *வெற்றிகொண்ட இராமனே!;* ***இராவணன் எழுந்து வந்தனன்*** - *இராவணன் (தன் படையுடன்) புறப்பட்டு வந்தான்;* ***வீடணன் விரைவான்*** - *விரைந்து வந்த வீடணன்;* ***இராக்கதர் தானைக் கொழுந்து முந்தி வந்து உற்றது*** - *அரக்கர் படையின் முன்னணிப்படை முன்னர் வந்தடைந்தது;* ***நம்பலம் குலுங்குற்று அழுந்துகின்றது*** - *நம்படை நடுங்கி மூழ்குகின்றது;* ***அமரரும் அஞ்சி விழுந்து சிந்தினர்*** - *தேவர்களும் பயப்பட்டுக் கீழே விழுந்து சிதறிப் போனார்கள்;* ***என்றனன்*** - *எனக் கூறினான்.*

# இராமன் தேர் ஏறு படலம்

*சிவபெருமான் ஏவ, இந்திரன் தேர் அனுப்பினான்; அவனுடைய தேரோட்டியாகிய மாதலி தேர் கொண்டு வந்தான். தேரின் சிறப்பைக் கவிக்கூற்றால் உணர்கிறோம். அரக்கர் மாயையால் வந்த தேரோ என முதலில் இராமன் ஐயப்பட்டான். பின்னர் உண்மை தெரிந்து, தேவர் அனுப்பிய தேரில் ஏறினான் பெருமான். இவை இப்படலம் கூறும் செய்திகள்.*

## *இராமன் போர்க்கோலம் பூண்டு எழுதல்*

***சந்தக் கலிவிருத்தம்***

***9677. தொழும் கையொடு, வாய் குழறி, மெய்ம் முறை துளங்கி,***
***விழுந்து கவி சேனை இடு பூசல் மிக, விண்ணோர்***
***அழுந்து படு பால் அமளி, 'அஞ்சல்' என, அந் நாள்,***
***எழுந்தபடியே கடிது எழுந்தனன், இராமன்.***

***முறை*** *- முறையே;* ***தொழும் கையொடு*** *- (இராவணன் வருவதைக் கண்டு அஞ்சிய வானரர்கள் இராமனை நோக்கி) வணங்கிய கைகளோடு;* ***வாய் குழறி*** *- அச்சத்தால் பேச்சுக் குழறி;* ***மெய் துளங்கி*** *- உடம்பு நடுங்க;* ***கவிசேனை*** *- வானர சேனை;* ***விழுந்து இடு பூசல் மிக*** *- நிலத்திலே தடுமாறி விழுந்து எழுப்புகின்ற பேரொலி பெருகிட;* ***இராமன்*** *- அந்த ஆரவாரத்தைக் கேட்ட இராமன்;* ***விண்ணோர் அழுந்து படு பால் அமளி அந்நாள்*** *- (முன்பொரு காலத்திலே) தேவர்கள் துன்பத்தில் அழுந்திய போது எழுப்பிய ஆரவாரத்தைக் கேட்ட திருப்பாற்கடலில் இருந்த அந்தக் காலத்தில்;* ***'அஞ்சல்' என எழுந்தபடியே*** *- (தேவர்களைப் பார்த்து) 'அஞ்சாதீர்கள்' என அபயம் கூறி எழுந்தருளியது போலவே;* ***கடிது*** *- விரைவாக;* ***எழுந்தனன்*** *- (வானர சேனை அச்சம் தவிருமாறு) இராமபிரான் எழுந்தான்.*

***9678. கடக் களிறு எனத் தகைய கண்ணன், ஒரு காலன்***
***விடக் கயிறு எனப் பிறழும் வாள் வலன் விசித்தான்,***
***'மடக்கொடி துயர்க்கும், நெடு வானின் உறைவோர்தம்***
***இடர்க் கடலினுக்கும், முடிவு இன்று' என இசைத்தான்.***

***கடக்களிறு எனத் தகைய கண்ணன்*** *- மதம் கொண்ட ஆண்யானை எனத் தக்க கண்ணன் (இராமன்);* ***ஒரு காலன்*** *- ஒப்பற்ற இயமனுடைய;* ***விடக் கயிறு எனப் பிறழும் வாள்*** *- நஞ்சு போன்ற பாசக் கயிறு போல விளங்குகின்ற உடைவாளை;* ***வலன் விசித்தான்*** *- வலப் புறத்திலே கட்டிக் கொண்டான்;* ***'மடக் கொடிதுயர்க்கும்*** *-*

*(உடைவாளைக் கட்டிக் கொண்ட இராமபிரான்) இளங்கொடி போன்றவளாகிய சீதையின் துயரத்திற்கும்;* ***நெடுவானின் உறைவோர் தம்*** *- நீண்ட வானுலகில் வாழ்கின்ற தேவர்களுடைய;* ***இடர்க்கலினுக்கும்*** *- துன்பமாகிய கடலுக்கும்;* ***'இன்று முடிவு' என இசைத்தான்*** *- 'இன்றோடு முடிவு வந்தது' என்று கூறினான்.*

*உயிர் போக்கும் ஒற்றுமை பற்றிக் கூற்றுவனின் பாசக் கயிற்றை விடக் கயிறு என்றார். 'சீதை துன்புற்று மலர்க் கரத்தால் வயிறு பிசைந்து வேதனைப்படுதல் அல்லது மயன் மகள் (மண்டோதரி) அதே துயரடைதல் இரண்டில் ஒன்று இன்று செய்து முடிப்பேன்' என்று இராவணன் கூறிய பாடலோடு (கம்ப. 9667) இப்பாடற் கருத்து ஒப்பிட்டுணரத் தக்கது.*

***9679. தன் அக வசத்து உலகு தங்க, ஒரு தன்னின்***
***பின்னக அசத்த பொருள் இல்லை; பெரியோனை***
***மன்ன கவ சத்து உற வரிந்தது என என்கோ?***
***இன்ன கவசத்தையும் ஒர் ஈசன் எனலாமால்.***

***தன் அக வசத்து*** *- தன்னுள்ளே;* ***உலகு தங்க*** *- உலகங்களெல்லாம் தங்கியிருக்க;* ***ஒரு தன்னின்*** *- ஒப்பற்ற தன்னினும்;* ***பின்னக அசத்த பொருள் இல்லை*** *- வேறுபட்டதும் சக்தியற்றதுமான வேறு எப்பொருளும் இல்லை;* ***என*** *- என்பது போல;* ***பெரியோனை*** *- இராமபிரானை;* ***மன்ன, க(வ்)வ*** *- நிலைபெற்றுக் கவ்வுமாறு;* ***சத்து உற வரிந்தது என என்கோ?*** *- உண்மை பொருந்த கட்டப்பட்டது என்று சொல்வதா?;* ***இன்ன கவசத்தையும்*** *- பிணித்து இராமன் மேனியைப் பற்றிய கவசத்தையும்;* ***ஓர் ஈசன் எனலாம்*** *- ஒரு பரம்பொருளே எனலாம்.*

*"கடவுள் எல்லாப் பொருளிலும் தங்கி அவ்வப் பொருட்குச் சக்தியைத் தருகிறான் என்பதும், அவனிலும் வேறாகி அவனால் வலிவு பெறாத ஒரு பொருளும் இல்லை என்பதும் நூற்கொள்கை யாதலால். அப்படிப்பட்ட கடவுளுக்குக் கவசம் என்று ஒன்று உடலில் பதிந்து ரட்சையாக நிற்கக் கட்டப்பட்டது என்று சொல்வது பொருந்துவதாகாது; இக் காலத்து ஸ்ரீராமபிரானைத் தன்னுட் கொண்டமையால் அந்தக் கவசத்தையும் ஒரு கடவுள் போலப் பாராட்டுதலாகிய இவ்வளவே நாம் செய்யத்தக்கது" - வை. மு. கோ.*

***9680. புட்டிலொடு கோதைகள், புழுங்கி எரி கூற்றின்***
***அட்டில் எனலாய மலர் அங்கையின் அடக்கிக்***
***கட்டி, உலகின் பொருள் எனக் கரை இல் வாளி***
***வட்டில் புறம் வைத்து, அயல் வயங்குற வரிந்தான்.***

***கூற்றின்*** - *இயமதருமனின்;* ***புழுங்கி எரி அட்டில் எனலாய*** - *நன்றாக எரிகின்ற அடுப்பு என்று சொல்லத்தக்க;* ***அங்கையின்*** - *அழகிய கரங்களிலே;* ***புட்டிலொடு கோதைகள்*** - *விரல் உறைகளையும் கை உறைகளையும்;* ***அடக்கிக் கட்டி*** - *முற்றிலும் (கை) மறையும்படி கட்டிக் கொண்டு;* ***உலகின் பொருள் என*** - *உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் அடங்குமாறு போல;* ***கரை இல் வாளி*** - *அளவற்ற அம்புகளைக் கொண்டுள்ள;* ***வட்டில்*** - *அம்பறாத் தூணியை;* ***புறம் அயல் வைத்து*** - *முதுகுப் பக்கத்திலே;* ***வயங்குற வரிந்தான்*** - *விளங்கும்படி வைத்துக் கட்டினான்;*

*புட்டில் - விரலுக்கு இடும் உறை; விரற்சரடு என்றும் பெயர் உண்டு. கோதை - வில்வீரர்கள் கைக்குப் பூணும் உறை. அடு + இல் - அட்டில்; சமையறை இங்கே அடுப்பைக் குறித்தது.*

***9681. 'மூண்ட செரு இன்று அளவில் முற்றும்; இனி, வெற்றி***
***ஆண்தகையது; உண்மை; இனி அச்சம் அகல்வுற்றீர்,***
***பூண்ட மணி ஆழி வய மா நிமிர் பொலந் தேர்***
***ஈண்ட விடுவீர், அமரில்' என்று, அரன் இசைத்தான்.***

***அமரர்*** - *தேவர்களே!;* ***மூண்ட செரு*** - *மூண்டுள்ள இந்தப் போர்;* ***இன்றளவில் முற்றும்*** - *இன்றோடு முடிந்துவிடும்;* ***இனி வெற்றி ஆண்தகையது*** - *இனிமேல் வெற்றி ஆண்மையாளனான இராமனுக்கே உரியது;* ***உண்மை*** - *இதுவே உண்மை;* ***இனி அச்சம் அகல்வுற்றீர்*** - *இனிமேல் அச்சம் உங்களை விட்டு நீங்கப் பெற்றீர்கள்;* ***மணி பூண்ட*** - *மணிகள் கட்டியதும்;* ***வய மா*** - *வலிமை கொண்ட குதிரைகள் பூட்டப்பட்டதும்;* ***ஆழி*** - *சக்கரங்கள் உடையதுமான;* ***நிமிர்*** - *உயர்ந்த;* ***பொலந்தேர்*** - *பொன்தேரினை;* ***ஈண்ட விடுவீர்*** - *(இராமபிரானுக்கு) விரைவில் அனுப்புவீர்களாக;* ***என்று அரன் இசைத்தான்*** - *என்று சிவபெருமான் கூறினான்.*

*சிவன் கூற இந்திரன் கட்டளைப்படி தேர் வருதல்*

***9682. தேவர் அது கேட்டு, 'இது செயற்கு உரியது' என்றார்;***
***ஏவல் புரி இந்திரனும், அத் தொழில் இசைந்தான்;***
***'மூஉலகும் முந்தும் ஒர் கணத்தின்மிசை முற்றிக்***
***கோவில் புரிகேன்; பொரு இல் தேர் கொணர்தி' என்றான்.***

**தேவர் அது கேட்டு** - தேவர்கள் சிவபிரான் சொன்னதைக் கேட்டு; **'இது செயற்கு உரியது' என்றார்** - 'இச் செயல் செய்வதற்கு உரியது என்று (இந்திரனிடம்) சொன்னார்கள்; **ஏவல் புரி இந்திரனும்** - சிவபிரான் ஏவியதைச் செய்யும் இந்திரனும்; **அத்தொழில் இசைந்தான்** - அந்தச் செயலைச் செய்ய ஏற்றுக்கொண்டான்; **மூ உலகும் முந்தும்** - மூன்று உலகங்களிலும் ஏற்பட்டுச் சிறப்பதாயும்; **ஓர் கணத்தில் முற்றி** - ஒரு கணத்தில் (அந்த மூவுலகங்களையும்) முழுவதாகச் சுற்றிவருவதாயும்; **கோவில் புரிவேன்** - சிறப்புள்ள தேரை இராமனுக்கு ஏற்ற கோவிலாகச் செய்வேன்; **பொரு இல் தேர் கொணர்தி** - ஒப்பற்ற தேரினைக் கொண்டு வருக; **என்றான்** - என (மாதவியாகிய தன் சாரதியிடம்) கூறினான்.

வெறும் போர்த் தேராக அன்றி இராமபிரான் எழுந்தருளுவதாலும் அவதார நோக்கம் நிறைவேற்றுவதற்கு உரியதாகலானும் 'தேரைக் கோவிலாக்குவேன் என்றான்.

*மாதலி கொணர்ந்த தேரின் சிறப்பு*

**9683. மாதலி கொணர்ந்தனன், மகோததி வளாவும்**
**பூதலம் எழுந்து படல் தன்மைய பொலந் தேர்;**
**சீத மதி மண்டலமும் ஏனை உளவும் திண்**
**பாதம் என நின்றது, படர்ந்தது விசும்பில்.**

**மகோததி வளாவும்** - பெருங்கடல் சூழ்ந்துள்ள; **பூதலம் எழுந்து படல் தன்மைய** - பூவுலகமே எழுந்து இயங்குவது போன்ற தன்மை கொண்ட; **பொலம் தேர்** - பொன்மயமான தேரை; **மாதலி கொணர்ந்தனன்** - மாதலி கொண்டு வந்தான்; **சீத மதி மண்டலமும்** - குளிர்ச்சி கொண்ட சந்திர மண்டலமும்; **ஏனை உளவும்** - மற்றும் (மேல் மண்டலத்தில்) உள்ளனவும்; **திண் பாதம் என** - தன்னுடைய வலிமையான பாதம் என்று சொல்லும் படியாக; **நின்றது** - (தேவர்கள் அனுப்பிய தேர் நின்றது; **விசும்பில் படர்ந்தது** - (தன் உயரத்தால் ஆகாயத்தின் மேல் பரவியது.

மகா + உததி = வளாவுதல் - சூழ்தல்

**9684. குலக் கிரிகள் ஏழின் வலி கொண்டு உயர்**
**கொடிஞ்சும்,**
**அலைக்கும் உயர் பாரின் வலி ஆழியினின் அச்சும்,**
**கலக்கு அற வகுத்தது; கதத்து அரவம் எட்டின்**
**வலக் கயிறு கட்டியது; முட்டியது வானை.**

***குலக்கிரிகள் ஏழின் வலி கொண்டு*** - ஏழு குல மலைகளின் வலிமையைத் தன்னிடம் கொண்டதாய்; ***உயர் கொடிஞ்சும்*** - உயர்ந்த கொடிஞ்சு என்னும் உறுப்பையும்; ***அலைக்கும் உயர் பாரின் வலி*** - (அலைகளால் இடையறாமல்) அலைக்கப்படுகின்ற நிலவுலகத்தின் வலிமை (கொண்டதுபோன்ற); ***ஆழியினின் அச்சும்*** - சக்கரத்தில் பொருந்திய அச்சினையும்; ***கலக்கு அற வகுத்தது*** - இடைவெளி இல்லாமல் நெருக்கமாகக் கோக்கப் பட்டது அந்த தேர்; ***கதத்து அரவம் எட்டின்*** - சினம் கொண்ட எட்டுப் பெருநாகங்களையும்; ***வலக் கயிறு கட்டியது*** - வலிமை கொண்ட கயிறாகக் கொண்டு கட்டப்பட்டது, அந்த தேர்; ***வானை முட்டியது*** - (அத்தேர்) வானத்தையே முட்டிக்கொண்டு நின்றது.

*குலக் கிரி - உயர்வுக்கும் உயர்வான மலைகள். நல்ல பொருள்களின் மேன்மையைக் குறிக்கச் 'சாதி' என்ற அடைமொழிகொடுத்துப் பேசுவது மரபு. குலக்கிரிகள் ஏழு; கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம் என்பனவாம். கச்சியப்பரின் கந்தபுராணம் இவ்வேழோடு கந்தமாதனத்தையும் சேர்த்துக் குலக் கிரிகள் எட்டு எனப் பேசும் (கந்த, ஆற்றுப்-16). தேர் விரைந்து செல்லும்போது அதில் இருப்போர் விழுந்துவிடாமல் நிற்பதற்குப் பற்றிக் கொள்ளும் உறுப்பினைக் கொடிஞ்சு என்பர். அரவம் எட்டு, வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன்.*

***9685. ஆண்டினொடு நாள், இருது, திங்கள், இவை என்னா,***
***மீண்டனவும் மேலனவும் விட்டு, விரி தட்டில்***
***பூண்டு உளது; தாரகை மணிப் பொரு இல் கோவை***
***நீண்ட புனை தாரினது; நின்றுளது குன்றின்.***

***மீண்டனவும் மேலனவும்*** - கடந்தவையும் வரப்போவனவுமாகிய; ***ஆண்டினொடு*** - ஆண்டையும்; ***நாள், இருது, திங்கள் இவை என்னா*** - கிழமை, பருவம், மாதம் என்ற இவற்றின் காலப் பகுதிகளையும்; ***விரி தட்டில் பூண்டுளது*** - விரிந்த தேர்த்தட்டிலே குறிக்கப்பட்டுள்ளது; ***தாரகை மணி*** - நட்சத்திர மணிகள் கொண்டு கோத்த; ***பொரு இல் கோவை*** - ஒப்பற்ற மாலைகளையும்; ***புனை தாரினது*** - அழகு செய்யப்பட்ட மாலைகளையும் உடையது; ***குன்றின் நின்றுளது*** - மலைபோலப் பெருமிதமாகப் போர்க்களத்திலே வந்து நின்றது.

*தேர்த் தட்டிலே காலக் குறிப்புகள் அமைப்பது தொன்மையான ஒரு வழக்கமெனத் தெரிகிறது. இக்காலங்களுக்கு உரிய தெய்வங்கள் தேர்த்தட்டில் இடம் பெறும் என்ற குறிப்பினை வை.மு.கோ. தருகிறார். "ஆண்டு முதலியன அவற்றிற்குரிய தேவதைகளையாம். தேவ மயம் அந்தேரென்க" என்பது அவர் குறிப்பு.*

***9686. மாதிரம் அனைத்தையும் மணிச் சுவர்கள் ஆகக்***

***கோது அற வகுத்தது; மழைக் குழுவை எல்லாம்***
***மீது உறு பதாகை என வீசியது; மெய்ம்மைப்***
***பூதம் அவை ஐந்தின் வலியின் பொலிவது அம்மா!***

***மாதிரம் அனைத்தையும்*** - *எல்லாத் திசைகளையும்;* ***மணிச் சுவர்களாக*** - *அழகிய சுவர்களாகக்கொண்டு;* ***கோது அற வகுத்தது*** - *(அந்தத் தேர்) குற்றமற உருவாக்கப்பட்டது;* ***மழைக் குழுவை எல்லாம்*** - *மேகக் கூட்டம் அனைத்தையும்;* ***மீது உறு பதாகை என*** - *(தேர்) மேல் கட்டப்பட்ட பெரிய கொடிகளாகக் கொண்டு;* ***வீசியது*** - *ஆடச் செய்தது; மெய்ம்மைப் பூதம் அவை* ***ஐந்தின்*** - *அழியா நிலை கொண்ட ஐந்து பூதங்களினுடைய;* ***வலியின் பொலிவது*** - *வலிமையோடு அழகாக அமைவது.*

*(அம்மா - வியப்பைக் குறிக்கும் இடைச்சொல்)*

***9687. மரத்தொடு மருந்து உலகில் யாவும் உள வாரித்***
***தரத்தொடு தொடுத்த கொடி தங்கியது; சங்கக்***
***கரத்தொடு தொடுத்த கடல் மீது நிமிர் காலத்து,***
***உரத்தொடு கடுத்த கதழ் ஓதை அதன் ஓதை.***

***மரத்தொடு மருந்து*** - *மரங்கள் மற்றும் பூண்டுகள் என;* ***உலகில் உள யாவும் வாரி*** - *உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் வாரி எடுத்து;* ***தரத்தொடு தொடுத்த*** - *உயர்தரம் கொண்டு தொடுக்கப்பட்ட;* ***கொடி தாங்கியது*** - *கொடியைத் தாங்கியிருப்பது;* ***சங்கக்கரத்தொடு தொடுத்த கடல்*** - *கூட்டமாயுள்ள அலைகளோடு பொருந்திய கடலானது;* ***மீது நிமிர் காலத்து*** - *மேலே பொங்கி வருகின்ற (ஊழிக்) காலத்து;* ***உரத்தொடு கடுத்த கதழ் ஓசை*** - *வலிமையொடு விரைவுகொண்டு உக்கிரமாக எழுப்பும் ஓசையே;* ***அதன் ஓதை*** - *அந்தத் தேரின் ஓசையாகும்.*

***9688. பண்டு அரிதன் உந்தி அயன் வந்த பழ முந்தைப்***
***புண்டரிக மொட்டு அனைய மொட்டினது; பூதம்***
***உண்டவை வயிற்றிடை ஒடுக்கி உமிழ்கிற்போன்,***
***அண்டச மணிச் சயனம் ஒப்பது, அகலத்தின்.****

***பண்டு*** - *முன்னம் ஆதியிலே;* ***அரிதன் உந்தி அயன் வந்த*** - *திருமாலின் உந்தியில் நான்முகன் தோன்றுதற்கு இடமாகிய;* ***பழ முந்தைப் புண்டரிக மொட்டு அனைய*** - *பழமையான தாமரை மொட்டைப் போன்ற;* ***மொட்டினது*** - *மொட்டு என்னும் உறுப்பினை உடையது (அந்தத் தேர்);* ***பூதம் உண்டவை வயிற்றிடை ஒடுக்கி*** - *பூத விகாரங்களாகிய உயிரிகளையெல்லாம் தன் வயிற்றுள் ஒடுக்கி;* ***உமிழ்கிற்போன்*** - *(மீண்டும் படைப்புக் காலத்தில்) உமிழ வல்லவனாகிய திருமாலின்;* ***அண்டச மணிச்***

***சயனம் ஒப்பது அகலத்தில்*** - *ஆதி சேடனாகிய அழகிய படுக்கையை அகலத்தில் ஒத்திருப்பது.*

***9689. வேதம் ஒரு நாலும், நிறை வேள்விகளும், வெவ் வேறு***
***ஓதம் அவை ஏழும், மலை ஏழும், உலகு ஏழும்,***
***பூதம் அவை ஐந்தும், எரி மூன்றும், நனி பொய் தீர்***
***மா தவமும், ஆவுதியும், ஐம் புலனும், மற்றும்.***

*(அந்தத் தேரானது)* ***வேதம் ஒரு நாலும்*** *- நான்கு வேதங்களும்;* ***நிறை வேள்விகளும்*** *- நிறைவுடைய வேள்விகளும்;* ***வெவ்வேறு ஓதம் அவை ஏழும்*** *- தனித்தனியாக உள்ள கடல்கள் ஏழும்;* ***மலை ஏழும்*** *- ஏழு (குல) மலைகளும்;* ***உலகு ஏழும்*** *- ஏழு உலகங்களும்;* ***பூதம் அவை ஐந்தும்*** *- ஐந்து பூதங்களும்;* ***எரி மூன்றும்*** *- மூவகை அக்கினிகளும்;* ***நனி பொய் தீர் மா தவமும்*** *- மிகவும் பொய்ம்மையினின்று நீங்கிய பெருந்தவமும்;* ***ஆவுதியும்*** *- (தேவர்க்கு வழங்கப்படும்) ஆகுதிகளும்;* ***மற்றும்*** *- மேலும்...*

***9690. அருங் கரணம் ஐந்து, சுடர் ஐந்து, திசை நாலும்,***
***ஒருங்கு அரணம் மூன்றும், உழல் வாயு ஒரு பத்தும்,***
***பெரும் பகலும், நீள் இரவும் என்று இவை பிணிக்கும்***
***பொரும் பரிகள் ஆகி நனி பூண்டது, பொலந் தேர்.***

***பொலந்தேர்*** *- பொன்மயமான அந்தத் தேர்;* ***அருங் கரணம் ஐந்து*** *- இந்திரியங்கள் ஐந்து;* ***சுடர் ஐந்து*** *- ஐந்து நெருப்புகள்;* ***திசை நாலும்*** *- மேலவற்றோடு நான்கு திசைகள்;* ***ஒருங்கு அரணம் மூன்றும்*** *- ஒருங்கே இணைந்து செயல்பட்ட மூன்று மதில்கள்;* ***உழல் வாயு ஒரு பத்தும்*** *- திரிகின்ற பத்து வகைக் காற்றும்;* ***பெரும்பகலும்*** *- பெரிய பகற்காலம்;* ***என்று இவை*** *- எனக் குறிக்கப்பட்ட இவை;* ***பொரும் பரிகள் ஆகி*** *- போர்க்குணம் உடைய குதிரைகளாகி;* ***நனி பூண்டது*** *- நன்கு பூணப்பட்டது.*

*வேதம் நான்கு, பூதம் ஐந்து, கரணம் ஐந்து, புலன் ஐந்து, திசை நாலு இவை தெளிவு எஞ்சியவற்றின் விரிவு வருமாறு; வேள்விகள் ஐந்து: கடவுள் வேள்வி, பிரம வேள்வி, பூத வேள்வி, மானிட வேள்வி, தென்புலத்தார் வேள்வி. கடல் ஏழு: உவர்நீர்க் கடல், நெய்க்கடல், கருப்பஞ் சாற்றுக்கடல், தேன் கடல், மலை ஏழு: கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம் இவற்றோடு கந்த மாதனத்தைச் சேர்த்து மலை எட்டு எனவும் உண்டு. உலகு ஏழு: பூலோகம், தவலோகம், சத்தியலோகம், மகாலோகம், சன லோகம், தவ லோகம், சத்திய லோகம். எரி மூன்று (வேள்வித்தீ): காருகபத்தியம், ஆகவனீயம், தட்சிணாக்கினி சுடர் (நெருப்பு) ஐந்து நான்கு திசையில் நான்குடன் மேலே உள்ள கதிரவனைச் சேர்த்து பஞ்சாக்கினிகள் என்பர்; இராகம், கோபம், காமம், சடம், தீபனம் ஆகியவை பஞ்சாக்கினிகள் எனலும் ஒன்று. அரணம் மூன்று: பொன், வெள்ளி, இரும்பு*

*ஆகியவற்றால் ஆகிய திரிபுர மதில்கள். தச வாயுக்கள்: பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பன.*

## *மாதலி இராமனிடம் தேர் கொணர்ந்து அதன் சிறப்பைச் செப்புதல்*

***9691. வந்த்தனை வானவர் வணங்கி, 'வலியோய்! நீ***
***எந்தை தர வந்தனை; எமக்கு உதவுகிற்பாய்;***
***தந்தருள்வை வென்றி' என நின்று, தகை மென் பூச்***
***சிந்தினர்கள்; மாதலி கடாவி, நனி சென்றான்.***

***வந்ததனை*** *- அவ்வாறு வந்த தேரை;* ***வானவர் வணங்கி*** *- தேவர்கள் வணங்கி; (மாதலியை நோக்கி)* ***'வலியோய்!*** *- வல்லமை உடையவனே!;* ***நீ எந்தை தர வந்தனை*** *- நீ எம் தலைவனாகிய இந்திரன் அனுப்பியதால் வந்திருக்கிறாய்;* ***எமக்கு உதவுகிற்பாய்*** *- எங்களுக்கு உதவும் ஆற்றல் உடையவன் நீ;* ***வென்றி தந்தருள்வை*** *- வெற்றி தந்தருள்வாயாக';* ***என நின்று*** *- என்று சொல்லி நின்று;* ***தண்மென் பூச் சிந்தினர்கள்*** *- குளிர்ந்த மெல்லிய மலர்களைச் சொரிந்தனர்;* ***மாதலி....; கடாவி*** *- தேரைச் செலுத்திக் கொண்டு;* ***நனி சென்றான்*** *- விரைந்து சென்றான்.*

***9692. 'வினைப் பகை விசைக் கொடு விசும்பு உருவி,***
***மான***
***மனத்தின் விசை பெற்றுளது வந்தது' என***
***வானோடு***
***அனைத்து உலகமும் தொழ, அடைந்தது,***
***அமலன்பால்;***
***நினைப்பும் இடை பிற்பட, நிமிர்ந்தது நெடுந் தேர்.***

***நெடுந்தேர்*** *- அந்தப் பெரிய தேர்;* ***வினைப்பகை விசைக் கொடு*** *- ஆன்மாவின் பகையாகிய வினையின் வேகத்தைக் கொண்டு;* ***விசும்பு உருவி*** *- ஆகாயத்தை ஊடுருவிக்கொண்டு;* ***மான மனத்தின் விசை பெற்றுளது*** *- பெருமைக்குரிய மன வேகத்தைப் பெற்றதாய்;* ***வந்தது*** *- வந்து சேர்ந்தது;* ***என*** *- என்று பெருமைப்படுத்தி;* ***வானோடு அனைத்து உலகமும் தொழ*** *- வானுலகத்தோடு எல்லா உலகங்களும் வணங்கும்படியாக;* ***அமலன்பால் அடைந்தது*** *- குற்றமற்றவனாகிய இராமனிடம் வந்துசேர்ந்தது;* ***நினைப்பும் இடை பிற்பட*** *- எண்ணம்கூடப் பின்னடையும்படியாக;* ***நெடுந்தேர்*** *- அந்தப் பெரிய தேர்;* ***நிமிர்ந்தது*** *- உயரமாக வந்து நின்றனது.*

*தேர் கண்ட இராமன் நினைப்பும் வினாவும்*

***9693. 'அலரி தனி ஆழி புனை தேர் இது எனில், அன்றால்;***
***உலகின் முடிவில் பெரிய ஊழ் ஒளி இது அன்றால்;***
***நிலைகொள் நெடு மேரு கிரி அன்று; நெடிதுஅம்மா;***
***தலைவர் ஒரு மூவர் தனி மானம் இதுதானோ?***

***அலரி*** *- சூரியனுடைய;* ***தனி ஆழி புனை தேர் இது எனில், அன்று*** *- ஒற்றைச் சக்கரம் பூண்ட தேர்தான் இது எனின் அப்படி இல்லை;* ***உலகின் முடிவில்*** *- உலகங்களின் அழிவுக் காலத்தில் எழுகின்ற;* ***பெரிய ஊழ் ஒளி இது அன்று*** *- பெரிய ஊழிக் காலத்தில் தோன்றும் தீயின் ஒளிகொண்டது இது அன்று;* ***நிலைகொள் நெடு மேரு கிரி அன்று*** *- நிலைபேறுடைய பெரிய மேரு மலையும் அன்று;* ***நெடிது*** *- மிகவும் உயரமானது இது; (அம்மா என்ற சொல் வியப்புக் குறிப்பானது);* ***தலைவர் ஒரு மூவர்*** *- தலைவர்களாகிய ஒப்பற்ற மும்மூர்த்திகளின்;* ***தனிமானம் இதுதானோ*** *- சிறந்த விமானம் இதுதானோ?*

***9694. 'என்னை இது நம்மை இடை எய்தல்?' என***
***எண்ணா,***
***மன்னவர்தம் மன்னன் மகன், மாதலியை, 'வந்தாய்,***
***பொன்னின் ஒளிர் தேர் இது கொடு, ஆர் புகல?'***
***என்றான்***
***அன்னவனும் அன்னதனை ஆக உரை செய்தான்:***

***'என்னை இது நம்மை இடை எய்தல்'*** *- இந்தத் தேர் நம்மிடம் எய்தியது ஏன் எப்படி?';* ***என எண்ணா*** *- என்று எண்ணி;* ***மன்னவர்தம் மன்னன் மகன்*** *- மன்னர் மன்னனாகிய இராமன்;* ***மாதலியை*** *- மாதலியை நோக்கி;* ***பொன்னின் ஒளிர் தேர் இது கொடு*** *- பொன்போல் ஒளிவீசுகின்ற இந்தத் தேரைக் கொணர்ந்தது;* ***யார் புகல*** *- எவர் கட்டளைப்படி?';* ***என்றான்*** *- என்று வினவினான்;* ***அன்னவனும்*** *- அந்த மாதலியும்;* ***அன்னதனை ஆக உரை செய்தான்*** *- இராமனை கேட்ட செய்தியைப் பொருந்துமாறு சொன்னான்.*

*மாதலி விடை*

***9695. 'முப் புரம் எரித்தவனும், நான்முகனும், முன்நாள்,***
***அப் பகல் இயற்றி உளது; ஆயிரம் அருக்கர்க்கு***

***ஒப்பு உடையது; ஊழி திரிகாறும் உலைவு இல்லா***
***இப் பொரு இல் தேர் வருவது இந்திரனது; - எந்தாய்!***

***'எந்தாய்*** - *என் தந்தையே!;* ***முப்புரம் எரித்தவனும்*** - *திரிபுரம் எரித்த சிவபெருமானும்;* ***நான்முகனும்*** - *பிரமனும்;* ***முன் நாள் அப் பகல்*** - *முதல் நாளாகிய படைப்புக் காலத்தில்;* ***இயற்றி உளது*** - *செய்தது (இத்தேர்);* ***ஆயிரம் அருக்கர்க்கு ஒப்பு உடையது*** - *தன் ஒளிச் சிறப்பால் ஆயிரம் சூரியர்களுக்கு நிகரானது;* ***ஊழி திரிகாறும் உலைவு இல்லா*** - *ஊழிக்காலம் மாறும்போதும் அழிவிலாததாகி;* ***இத்தேர் வருவது*** - *வந்துள்ள இந்தத் தேர்;* ***இந்திரனது*** - *இந்திரனுக்கு உரியது.*

***9696. 'அண்டம் இது போல்வன அளப்பு இல அடுக்கிக்***
***கொண்டு பெயரும்; குறுகும்; நீளும்; அவை***
***கோளுற்று***
***உண்டவன் வயிற்றினையும் ஒக்கும், உவமிக்கின்;***
***புண்டரிக! நின் சரம் எனக் கடிது போமால்.***

***புண்டரிக*** - *(கண், கரம், கால் போன்ற உறுப்புகளால்) தாமரையானே!;* ***இதுபோல்வன அண்டம் அளப்பு இல*** - *இந்த அண்டம் போல அளவற்ற அண்டங்களை;* ***அடுக்கிக் கொண்டு பெயரும்*** - *தன்னிலே அடுக்கிக்கொண்டு இயங்கவல்லது;* ***குறுகும், நீளும்*** - *தேவைப்படும்போது அளவிலே குறுகும் அல்லது நீளும்;* ***உவமிக்கின் அவை கோளுற்று உண்டவன் வயிற்றினையும் ஒக்கும்*** - *உவமை சொல்ல வேண்டுமாயின் அந்த அண்டங்களை அனைத்தையும் பற்றி உண்டவனாகிய திருமாலின் வயிற்றையும் ஒக்கும்;* ***நின் சரம் எனக் கடிது போம்*** - *உன்னுடைய அம்பு போல் வேகமாகப் போகும்.*

***9697. 'கண்ணும் மனமும் கடிய காலும் இவை கண்டால்***
***உண்ணும் விசையால்; உணர்வு பின் படர ஓடும்;***
***விண்ணும் நிலனும் என விசேடம் இலது; அஃதே,***
***எண்ணும் நெடு நீரினும், நெருப்பிடையும் - எந்தாய்!***

***'எந்தாய்...; கண்ணும் மனமும் கடிய காலும் இவை கண்டால்*** - *கண், மனம், விரைவாக இயங்குகின்ற காற்று ஆகிய இவற்றைக் கண்டால்;* ***விசையால்*** - *அவற்றினும் விரைவாக;* ***உண்ணும்*** - *(இந்தத் தேர்) உண்டுவிடும் (அதாவது அவற்றை வேகத்தால் தோற்கடிக்கும்);* ***உணர்வு பின் படர ஓடும்*** - *அறிவுகூட தன் பின்வருமாறு இது முன்னேறி ஓடும்;* ***விண்ணும் நிலனும் என விசேடம் இலது*** - *(இயங்குவதற்கு) ஆகாயம் நிலம் என வேறுபாடு இல்லாதது;* ***எண்ணும் நெடு நீரினும் நெருப்பிடையும் அஃதே*** - *எண்ணப்படுகின்ற பெரிய நீரிலும் நெருப்பிடையிலும் அதுவே (அதாவது, இத்தேரின் இயக்கத்துக்கு நீர் நெருப்பு என்ற வேறுபாடு இல்லை).*

*விண், மண், நீர், நெருப்பு ஆகிய எவற்றிலும் எவற்றிடையிலும் இயங்குவது இந்தத்தேர்.*

***9698. 'நீரும் உளவே, அவை ஒர் ஏழு? நிமிர்கிற்கும்***
***பாரும் உளவே, அதின் இரட்டி? அவை பண்பின்***
***பேரும் ஒரு காலை, ஒரு காலும் இடை பேராத்***
***தேரும் உளதே, இது அலால்? - உலகு செய்தோம்!***

***உலகு செய்தோய்*** *- உலகங்களைப் படைத்தவனே!;* ***நீரும் உளவே அவை ஓர் ஏழு*** *- ஏழு கடல்களும் உள்ளன அன்றோ?;* ***நிமிர்கிற்கும் பாரும் உளவே அதின் இரட்டி*** *- கடல்மேல் நிமிர்கின்ற உலகங்களும் ஏழு கடல்கள் போல இரண்டு மடங்காக பதினான்கு உள்ளன அன்றோ?;* ***அவை*** *- அந்தக் கடல்களும் உலகங்களும்;* ***பண்பின் பேரும் ஒரு காலை*** *- தம் இயல்பிலிருந்து ஒரு காலத்திலே மாறுபடும்;* ***இது அலால்*** *- இந்தத் தேரைத் தவிர;* ***ஒரு காலும் இடை பேராத் தேரும் உளதே*** *- ஒரு காலத்திலும் தன் இயல்பிலிருந்து நிலை பெயராத தேரும் இருக்கிறதோ?' (இல்லை).*

***9699. 'தேவரும், முனித் தலைவரும், சிவனும், மேல்நாள்,***
***மூஉலகு அளித்த அவனும், முதல்வ! முன் நின்று***
***ஏவினர்; சுரர்க்கு இறைவன் ஈந்துள இது' என்றான்,***
***மாவின் மனம் ஒப்ப உணர் மாதலி, வலித்தான்.***

***முதல்வ!*** *- தலைவனே!;* ***தேவரும் முனித்தலைவரும் சிவனும்மேல்நாள் மூ உலகு அளித்த அவனும்*** *- தேவர்கள், முனிவர்களின் தலைவர்கள், சிவபிரான், பண்டொரு காலத்தில் மூன்று உலகங்களையும் படைத்த நான்முகன் ஆகியோர்;* ***முன் நின்று ஏவினர்*** *- முன் வந்து ஏவினார்கள்; (அவர்களின் கட்டளையை ஏற்றுச்)* ***சுரர்க்கு இறைவன்*** *- தேவர்களின் அரசனான இந்திரன்;* ***ஈந்துள (து) இது*** *- கொடுத்ததாகும் இந்தத்தேர்';* ***என்றான்*** *- என்று சொல்லியவனாய்;* ***மாவின் மனம் ஒப்ப உணர் மாதலி*** *- குதிரையின் மனப்போக்கினைப் பொருத்தமாக உணர்ந்து (தேர் செலுத்த வல்ல) மாதலி; வலித்தான் - சொலக்கருதி உறுதிபடச் சென்னான்.*

## *இராமன் ஐயமும் தெளிவும்*

***9700. ஐயன் இது கேட்டு, 'இகல் அரக்கர் அகல் மாயச்***
***செய்கைகொல்?' எனச் சிறிது சிந்தையில்***
***நினைந்தான்;***

***மெய் அவன் உரைத்தது என வேண்டி, இடை பூண்ட***
***மொய் உளை வயப் பரி மொழிந்த, முது வேதம்.***

***ஐயன்*** *- இராமபிரான்;* ***இது கேட்டு*** *- மாதலி உரைத்த இதனைக் கேட்டு;* ***'இகல் அரக்கர் அகல் மாயச் செய்கை கொல்' என*** *- ஒருகால் இது பகைவராகிய அரக்கர்களின் பெரிய மாயையால் விளைந்த செயலோ என்று;* ***சிந்தையில் சிறிது நினைந்தான்*** *- மனத்திலே ஓரளவு எண்ணினான்;* ***'அவன் உரைத்தது மெய்' என வேண்டி*** *- அந்த மாதலி உரைத்தது உண்மையே எனப் புலப்பட வேண்டி* ***இடை பூண்ட*** *- தேரிலே கட்டப்பட்ட;* ***மொய் உளை வயப் பரி*** *- செறிந்த பிடரி மயிர் கொண்ட வலிய குதிரைகள்;* ***முது வேதம் மொழிந்த*** *- பழமையான வேதங்களை ஓதின.*

***9701. 'இல்லை இனி ஐயம்' என எண்ணிய இராமன்,***
***நல்லவனை, 'நீ உனது நாமம் நவில்க!' என்ன,***
***'வல் இதனை ஊர்வது ஒரு மாதலி எனப் பேர்***
***சொல்லுவர்' எனத் தொழுது, நெஞ்சினொடு***
***சொன்னான்.***

***'இனி ஐயம் இல்லை*** *- இனிமேல் ஐயம் ஏதும் இல்லை;* ***என எண்ணிய இராமன்*** *- என்று தெளிவுற்று எண்ணிய இராமன்;* ***நல்லவனை*** *- நற்பண்புடைய மாதலியை நோக்கி;* ***'நீ உனது நாமம் நவில்க' என்ன*** *- நீ உனது பெயரைச் சொல்லுக என்று கூற;* ***வல் இதனை ஊர்வது ஒரு மாதலி எனப் பேர் சொல்லுவர் என*** *- வலிய இத் தேரினை ஏறிச் செலுத்துவதற்குரிய மாதலி என்று என் பெயரைச் சொல்லுவார்கள் என்று;* ***தொழுது*** *- வணங்கி;* ***நெஞ்சினொடு சொன்னான்*** *- மனமாரக் கூறினான்.*

***9702. மாருதியை நோக்கி, இள வாள் அரியை நோக்கி,***
***'நீர் கருதுகின்றதை நிகழ்த்தும்' என, நின்றான்***
***ஆரியன்; வணங்கி, அவர், 'ஐயம் இலை, ஐயா!***
***தேர் இது புரந்தரனது' என்றனர், தெளிந்தார்.***

***மாருதியை நோக்கி*** *- அனுமனைப் பார்த்து;* ***இள வாள் அரியை நோக்கி*** *- பின்னர் இளைய ஒளி வீசும் சிங்கம் போன்ற இலக்குவனைப் பார்த்து;* ***'நீர் கருதுகின்றதை நிகழ்த்தும் என*** *- 'நீங்கள் உங்கள் கருத்தைச் சொல்லுங்கள் என்று கேட்டு;* ***நின்றான் ஆரியன்*** *- தலைவனாகிய இராமன் (தேரில் ஏறிவிடாமல்); தாமதித்து நின்றான்;* ***தெளிந்தார்*** *- ஐயம் தெளிந்தவராகிய அவர்கள்;* ***'ஐயா, ஐயம் இலை*** *- தலைவனே!; ஐயமே இல்லை;* ***இது புரந்தரனது தேர்*** *- இது தேவேந்திரனுடைய தேர்தான்; என்றனர்...*

*ஆரியன் என்ற சொல் பண்பின் நாயகன் என்ற கருத்துடையது என்பதையும் கருதுக.*

***9703. விழுந்து புரள் தீவினை நிலத்தொடு வெதும்ப,***
***தொழும் தகைய நல்வினை களிப்பினொடு துள்ள,***
***அழுந்து துயரத்து அமரர் அந்தணர் கை முந்துற்று***
***எழுந்து தலை ஏற, இனிது ஏறினன் - இராமன்.***

***நிலத்து விழுந்து புரள் தீவினை** - தரையிலே விழுந்து புரளத் தொடங்கிவிட்ட தீவினை; **வெதும்ப** - வாடவும்; **தொழுந்தகைய நல்வினை களிப்பினொடு துள்ள** - வணங்கத் தக்க நல்வினை மகிழ்ச்சியால் துள்ளவும்; **துயரத்து அழுந்து அமரர் அந்தணர்** - துயரத்தில் அழுந்திக்கிடந்த தேவர்கள் அந்தணர் ஆகியோரின்; **கை முந்துற்று எழுந்து தலை ஏற** - கைகள் முந்திக்கொண்டு அவர்கள் தலைமேல் ஏறவும்; **இராமன் இனிது ஏறினன்** - இராமபிரான் இந்திரன் அனுப்பிய தேரின்மீது இனிதே ஏறினான்.*

*தீவினை வாடுதல், நல்வினை துள்ளுதல், அமரர் அந்தணர் கை தலைமேல் வைத்து வணங்குதல் ஆகியவை அவதார நோக்கமாகிய தீயோர் அழிவுக்கும் நல்லோர் துயர் நீக்கத்துக்கும் காரணமான வெற்றிமுகம் தெரிந்ததே யாகும்.*

## *இராவணன் வதைப் படலம்*

*இராமபிரான் இராவணனைப் போரில் கொன்ற படலம் என்பது பொருள்.*

*தேவர் வாழ்த்துரைக்க இராமன் தேரேறிச் செல்லுதலும், இராவணன் இராமனை நோக்கி வருதலும், மகோதரன் இராமனால் மடிதலும், தீ நிமித்தங்களைப் பொருட் படுத்தாது இராவணன் துணிதலும், இராவணனின் போர்த் திறங்களும், வர வலிமையும் சிறிது சிறிதாய் அழிய இராமன் கடவுள் அவதாரமோ என எண்ணி யாரேயாயினும் போரிடுவது என முடிவு செய்தலும், அம்பு பட்டு இராவணன் மயங்கிய காலை அவனைக் கொல்லுமாறு மாதலி கூறியதை இராமன் ஏற்க மறுத்தலும், தேறிய இராவணன் கடும் போர் புரியப் பிரம்மாத்திரத்தால் அவனை இராமன் மாய்த்தலும், அவன் முதுகுத் தழும்பு கண்டு இராமன் நாணியபோது வீடணன் உண்மை கூறித் தெருட்டலும், பின்னர் பகை விடுத்து இறுதிக் கடன் செய்யுமாறு வீடணனை இராமன் தூண்டுதலும், வீடணன் துயரும், இராவணன் மனைவியர் புலம்பலும், மண்டோதரி பிரிவாற்றாது புலம்பி மாய்தலும், இராவணனுக்கும் பிற அரக்கர்க்கும் இறுதிக்கடன் செய்து வருந்திய வீடணனை இராமன் தேற்றுதலும் இப்படலத்துப் பொருளாக அமைந்துள்ளன.*

### *தேரின் மீது ஏறிய இராமனுக்குத் தேவர் வாழ்த்து*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

***9704. ஆழி அம் தடந் தேர், வீரன் ஏறலும், அலங்கல் சில்லி***
***பூழியில் சுரித்த தன்மை நோக்கிய புலவர் போத,***
***ஊழி வெங் காற்றின் வெய்ய கலுழனை ஒன்றும் சொல்லார்,***
***வாழிய அனுமன் தோளை ஏத்தினார், மலர்கள் தூவி.***

**ஆழி அம் தடம் தேர்** - *சக்கரங்கள் அமைந்த, அழகிய பெரிய தேரின் மீது;* **வீரன் ஏறலும்** - *வீரனாகிய இராமபிரான் ஏறியதும்;* **அலங்கல் சில்லி** - *ஒளி வீசும் தேருருளை;* **பூமியில் சுரித்த தன்மை** - *புழுதியில் புதைந்த தன்மையை;* **நோக்கிய புலவர்போத** - *பார்த்துக் கொண்டிருந்த தேவர்கள் வந்து; (இராமபிரான் உடற்பாரத்தை வியந்தவர்களாய்);* **ஊழி வெங் காற்றின்** - *யுக முடிவுக் காலத்தில் பொங்கும் வெப்பம் நிறைந்த சூறாவளியைக் காட்டிலும்;* **வெய்ய கலுழனை** - *கொடிய கருடாழ்வானை,;* **ஒன்றும் சொல்லார்** - *(நினைந்து) புகழ்ச்சியாக யாதும் கூறாமல்;* **அநுமன் தோளை** - *(ஆற்றல் மிக்க) அநுமனின் தோள்களை;* **மலர்கள் தூவி** - *பூக்கள் சொரிந்து;* **வாழிய** - *வாழ்க வாழ்க என்று;* **ஏத்தினார்** - *போற்றி செய்தார்கள்.*

***9705. 'எழுக, தேர்; சுமக்க, எல்லோம் வலியும்; புக்கு***
***இன்றே பொன்றி***
***விழுக, போர் அரக்கன்; வெல்க, வேந்தர்க்கு***
***வேந்தன்; விம்மி***
***அழுக, பேர் அரக்கிமார்' என்று ஆர்த்தனர், அமரர்;***
***ஆழி***
***முழுகி மீது எழுந்தது என்னச் சென்றது, மூரித்***

***திண் தேர்.*** *(தேவர்கள் மேலும்),* ***அமரர்*** *- தேவர்;* ***தேர் எழுக*** *- இத்தேர் மேலெழுக;* ***எல்லோம் வலியும் சுமக்க*** *- நம் யாவருடைய வலிமையையும் இத்தேர் ஏந்துவதாக;* ***புக்கு இன்றே போர் அரக்கன் பொன்றி விழுக*** *- (இத்தேர்) புகுவதால் இன்றைய தினமே போர் வெறி கொண்ட அரக்கனாகிய இராவணன் அழிந்து வீழ்வானாக;* ***வேந்தர்க்கு வேந்தன் வெல்க*** *- வேந்தருக்கெல்லாம் சக்கரவர்த்தியான இராமன் வாகை சூடுவானாக;* ***பேர் அரக்கிமார் விம்மி அழுக*** *- அரக்கர்களின் மனைவிமார்களான எண்ணற்ற அரக்கியர் (தம் கணவர் மாய) விம்மி அழுவார்களாக';* ***என்று அமரர் ஆர்த்தனர்*** *- என்று கூறி தேவர்கள் ஆரவாரம் புரிந்தனர்;* ***மூரித்திண்தேர்*** *- வலிமையும் திண்மையும் மிக்க இராமனின் தேர்;* ***ஆழி முழுகி மீதெழுந்தது என்ன*** *- கடலில் முழுகி மேலெழுந்தாற் போன்று (புழுதியினின்றும் பொங்கியெழுந்து);* ***சென்றது*** *- (போர்க்களம் நோக்கிச்) சென்றது.*

*இராமன் எதிரே தேரைவிடுமாறு இராவணன்*
*சாரதிக்குக் கூறுதல்*

***9706. அன்னது கண்ணின் கண்ட அரக்கனும், 'அமரர்***
***ஈந்தார்***
***மன் நெடுந் தேர்' என்று உன்னி, வாய் மடித்து***
***எயிறு தின்றான்;***
***பின், 'அது கிடக்க' என்னா, தன்னுடைப் பெருந்***
***திண் தேரை,***
***மின் நகு வரி வில் செங் கை இராமன்மேல் விடுதி'***
***என்றான்.***

***அன்னது*** *- அந்தத் தேரை;* ***கண்ணின் கண்ட அரக்கனும்*** *- தன் கண்களால் பார்த்த இராவணனும்;* ***'மன் நெடுந் தேர் அமரர் ஈந்தார்'*** *- 'நிலை பெற்ற பெரிய தேரைத் தேவர் கொடுத்தார்';* ***என்று உன்னி*** *- எனக் கருதி;* ***வாய் மடித்து எயிறு தின்றான்*** *- உதடுகளைக் கடித்துப் பற்களை மென்றான்;* ***பின்*** *- அதன்பிறகு;* ***'அது கிடக்க'*** *- 'அது கிடக்கட்டும்';* ***என்னா*** *- என்று (அலட்சியமாய்) கருதியவனாய்;* ***தன்னுடைப் பெருந்திண் தேரை*** *- தன்னுடைய பெரிய வலிமையான தேரினை;* ***மின் நகு வரிவில் செங்கை இராமன் மேல்*** *- ஒளியைச் சிந்தும் கட்டமைந்த வில்லைச் செவ்விய கைகளில் ஏந்திய இராமபிரான் மீது;* ***விடுதி'*** *- விடுவாயாக';* ***என்றான்*** *- என்று (தன் பாகனுக்குக்) கட்டளையிட்டான்.*

*வானவர் போருக்கு ஆயத்தமாதல்*

***9707. இரிந்த வான் கவிகள் எல்லாம், 'இமையவர் இரதம் ஈந்தார்;***
***அரிந்தமன் வெல்லும் என்றற்கு ஐயுறவுஇல்' என்று, அஞ்சார்,***
***திரிந்தனர்; மரமும் கல்லும் சிந்தினர்; 'திசையோ அண்டம்***
***பிரிந்தனகொல்!' என்று எண்ணப் பிறந்தது, முழக்கின் பெற்றி.***

***இரிந்த*** *- முன்பு சிதறியோடின;* ***வான்கவிகள் எல்லாம்*** *- வானரர்கள் எல்லோரும்;* ***'இமையவர் இரதம் ஈந்தார்*** *- தேவர்கள் (இராமனுக்குத்) தேரை நல்கினர்;* ***அரிந்தமன் வெல்லும்*** *- பகைவரை அடக்கும் (ஆற்றல் மிக்க) மன்னவனாகிய இராமபிரான் வெல்லுவான்,;* ***என்றற்கு*** *- என்று கருதுவதற்கு;* ***ஐயுறவு இல்*** *- எவ்வித ஐயமும் இல்லை';* ***என்று அஞ்சார்*** *- என்று கூறி அச்சம் நீங்கியவர்களாய்;* ***திரிந்தனர்*** *- (மீண்டும் போர்க்களம் எங்கும்) சுற்றி வந்தனர்;* ***மரமும் கல்லும் சிந்தினர்*** *- மரங்களையும் கற்களையும் (அரக்கர் மேல்) எறிந்தனர்;* ***முழக்கின் பெற்றி*** *- (அப்போது) வானரர்கள் செய்த ஆரவாரத்தின் தன்மையானது;* ***'திசையொடு அண்டம் பிரிந்தன கொல்'*** *- 'திசைகளும் அண்டங்களும் பிளந்தன போலும்';* ***என்று எண்ணப் பிறந்தது*** *- என்று கருதும்படி எழுந்தது.*

*பலவகை ஒலிகள்*

***9708. வார்ப் பொலி முரசின் ஓதை, வாய்ப்புடை வயவர் ஓதை,***
***போர்த் தொழில் களத்து மற்றும் முற்றிய பொம்மல் ஓதை,***
***ஆர்த்தலின், யாரும் பார் வீழ்ந்து அடங்கினர், இருவர் ஆடல்***
***தேர்க் குரல் ஓதை பொங்க, செவி முற்றும் செவிடு செய்த.***

***வார்ப்பொலி முரசின் ஓதை*** *- வார்க்கட்டமைந்த முரசுகளிலிருந்து எழும் ஓசையும்;* ***வாய்ப்புடை வயவர் ஓதை*** *- போரியற்றும் வாய்ப்புபெற்ற வீரர்கள் எழுப்பும் ஓசையும்;* ***போர்த் தொழில்களத்து*** *- போர் நிகழுகின்ற களத்தில்;* ***மற்றும்***

***முற்றிய பொம்மல் ஓதை*** - பிற போர்ப்படைகள் நிரம்பி நின்று எழுப்பிய மகிழ்ச்சி ஆரவார ஓசையும்; ***ஆர்த்தலின்*** - கூடியொலித்தலால்; ***யாரும்*** - (இரு திறத்திலுமுள்ள) அனைவரும்; ***பார்வீழ்ந்து அடங்கினர்*** - தரையில் விழுந்து அடங்கிப் போயினர்; ***இருவர்*** - இராமபிரான் இராவணன் என்னும் இருவருடைய; ***ஆடல் தேர்க்குரல்*** - அசைகின்ற தேர்களின் ஒலி; ***ஓதை பொங்க*** - முழக்கம் மேலெழுந்து; செவி முற்றும் செவிடு செய்த - அனைவர்தம் செவிகளையும் செவிடாக்கின.

*மாதலியிடம் இராமன் கருத்து உரைத்தல்*

***9709. மாதலி வதனம் நோக்கி, மன்னர்தம் மன்னன் மைந்தன்,***
***'காதலால் கருமம் ஒன்று கேட்டியால்; களித்த சிந்தை***
***ஏதலன் மிகுதி எல்லாம் இயற்றிய பின்றை, என்தன்***
***சோதனை நோக்கிச் செய்தி; துடிப்பு இலை' என்னச் சொன்னான்.***

***மன்னர்தம் மன்னன் மைந்தன்*** - (தசரதச்) சக்கரவர்த்தி திருக் குமாரனாகிய இராமன்; ***மாதலி வதனம் நோக்கி*** - தன் தேர்ச்சாரதியாகிய மாதலியின் முகத்தைப் பார்த்து; ***'காதலால் கருமம் ஒன்று கேட்டியால்*** - அன்போடு நான் கூறும் செயல் ஒன்றினைக் கேட்பாயாக; ***களித்த சிந்தை எதலன்*** - மிதப்பு மிக்க சிந்தனை கொண்டவனாகிய (நம்) பகைவன்; ***மிகுதி எல்லாம் இயற்றிய பின்றை*** - தன்னுடைய மீறிய செயல்களையெல்லாம் செய்த பிறகு; ***என்தன் சோதனை நோக்கி*** - என் தூண்டுதலைக் கவனித்து; ***செய்தி*** - (உன் தேரோட்டும்) தொழிலைச் செய்வாயாக; ***துடிப்பு இலை*** - (இப்போது) விரைதல் வேண்டுவதில்லை; ***என்னச் சொன்னான்*** - என்று கூறினான்.

இராவணனைக் கண்டதும் மாதலி பால் ஏற்பட்ட பரபரப்பையும் விரைவையும் கவனித்தமையால் இராமன் இவ்வாறு கூறினான். 'பகைவனின் ஆர்ப்பாட்ட மெல்லாம் முடியட்டும். நமக்கு அவசரமில்லை' எனப் பணியாளிடம் உணர்த்திய பாங்கும், அவனிடம் 'காதலால்' கருத்துரைக்கும் பாங்கும் இராமபிரானின் தலைமைப் பண்பை உணர்த்துகின்றன.

*மாதலி மறுமொழி*

***9710. 'வள்ளல்! நின் கருத்தும், மாவின் சிந்தையும், மாற்றலார்தம்***
***உள்ளமும், மிகையும், உற்ற குற்றமும், உறுதிதானும்,***
***கள்ளம் இல் காலப் பாடும், கருமமும்,***

***கருதேன்ஆகில்,***
***தெள்ளிது என் விஞ்சை!' என்றான்; அமலனும்,***

***'செவ்விது!' என்றான்.***

***'வள்ளல்!*** - *வரையாது அருளும் இயல்புடையாய்!;* ***நின் கருத்தும்*** - *உன் திருக்கருத்தையும்;* ***மாவின் சிந்தையும்*** - *புரவிகளின் மனப்போக்கையும்;* ***மாற்றலார் தம் உள்ளமும்*** - *பகைவரது உட்கருத்தையும்;* ***மிகையும்*** - *பகைவர் தம் மிகுதியையும்;* ***உற்ற குற்றமும்*** - *(அதனால்) நேரும் தீமைகளையும்;* ***உறுதிதானும்*** - *மேற்கொள்ளத் தக்க உறுதியையும்;* ***கள்ளமில் காலப்பாடும்*** - *வஞ்சனையின்றி (இயல்பாகச்) செயல்படும் கால நிலையையும்* ***கருமமும்*** - *எடுத்துக்கொண்ட செயலின் திறத்தையும்;* ***கருதேன் ஆகில்*** - *(ஆராய்ந்து) என் தொழிலைச் செய்யேனாகில்;* ***என் விஞ்சை*** - *என் தேரோட்டும் கலைத்தொழில்;* ***தெள்ளிது*** - *மிக மிகத் திறம்பட்டது அன்றோ?' (ஆகாது என்றபடி!);* ***என்றான்*** - *என்று கூறினான்;* ***அமலனும்*** - *(யாதுமோர்) குற்றமற்ற இராமபிரானும்;* ***செவ்விது என்றான்*** - *(அவன் செப்பிய பாங்குணர்ந்து) 'நன்று' என மொழிந்தான்.*

## *இராவணனிடம் மகோதரன் வேண்டுதல்*

***9711. 'தோன்றினன் இராமன், ஈதால், புரந்தரன் துரகத்***
***தேர்மேல்;***
***ஏன்று இருவருக்கும் வெம் போர் எய்தியது;***
***இடையே, யான் ஓர்***
***சான்று என நிற்றல் குற்றம்; தருதியால் விடை***
***ஈண்டு' என்றான் -***
***வான் தொடர் குன்றம் அன்ன மகோதரன் இலங்கை***
***மன்னை.***

***வான் தொடர் குன்றம் அன்ன*** - *வானத்தை அளாவிய மலை போன்ற (தோற்றத்தை உடைய);* ***மகோதரன்*** - *மகோதரனாகிய வீரன்;* ***எந்தாய்*** - *எம் தலைவனே;* ***புரந்தரன்*** - *இந்திரனுக்குரிய;* ***துரகத் தேர்மேல்*** - *குதிரைகள் பூட்டிய தேரின் மீது;* ***இராமன் தோன்றினன்*** - *இராமன் (இதோ) காட்சி தருகின்றான்;* ***ஏன்று*** - *(ஒருவரை ஒருவர்) எதிர்த்து நிற்கும்;* ***இருவருக்கும்*** - *உங்கள் இருவரிடையேயும்;* ***வெம்போர் எய்தியது*** - *கொடிய போர் (நடக்கும் நேரம்) நெருங்கி விட்டது;* ***இடையே*** - *உங்கள் இருவருக்கும் இடையே;* ***யான் ஓர் சான்று என*** - *நான் ஒரு சாட்சியாக;* ***நிற்றல்*** - *(வறிதே) நிற்பது;* ***குற்றம்*** - *பிழையாகும்;* ***ஈண்டு*** - *இப்போது;* ***விடை தருதியால்*** - *(வேறிடத்தில் போர் புரிய) விடை தருவாயாக';* ***என்றான்*** - *என வேண்டினான்;* ***இலங்கை மன்னை*** - *(என) இலங்கை வேந்தனாகிய இராவணனிடம்.*

## *இராவணன் கட்டளை*

***9712. 'அம்புயம் அனைய கண்ணன்தன்னை யான் அரியின் ஏறு***
***தும்பியைத் தொலைத்தது என்னத் தொலைக்குவென்; தொடர்ந்து நின்ற***
***தம்பியைத் தடுத்தியாயின், தந்தனை கொற்றம்' என்றான்;***
***வெம்புஇகல் அரக்கன், 'அஃதே செய்வென்' என்று, அவனின் மீண்டான்.***

*(இவ் வேண்டு கோளைக் கேட்ட இராவணன்),* ***அம்புயம் அனைய கண்ணன் தன்னை*** *- செந்தாமரை போன்ற கண்களை உடைய இராமனை;* ***அரியின் ஏறு*** *- ஆண் சிங்கம் (ஒன்று);* ***தும்பியைத் தொலைத்தது என்ன*** *- யானையை அழித்தது என்னும் படியாக;* ***யான் தொலைக்குவன்*** *- நான் அழித்தொழிப்பேன்;* ***தொடர்ந்து நின்ற தம்பியை*** *- இணை பிரியாது நிற்கும் தம்பியாகிய இலக்குவனை;* ***தடுத்தியாயின்*** *- (நீ) போரிட்டுத் தடுப்பாயானால்;* ***கொற்றம் தந்தனை*** *- (எனக்கு) வெற்றித் தேடித் தந்தவனாவாய்;* ***என்றான்*** *- என்று கூறினான்;* ***வெம்பு இயல் அரக்கன்*** *- (சினத்தால்) வெம்பும் தன்மையுடைய மகோதரன்;* ***'அஃதே செய்வென் என்று*** *- 'அவ்வாறே செய்வேன்' என்று;* ***அவனின் மீண்டான்*** *- இராவணனிடத்தினின்றும் திரும்பிச் சென்றான்.*

## *இடையே இராமன் தேர் அணுக சாரதிக்கு மகோதரன் இட்ட கட்டளை*

***9713. மீண்டவன் இளவல் நின்ற பாணியின் விலங்கா முன்னம்,***
***ஆண்தகை தெய்வத் திண் தேர் அணுகியது; அணுகும்காலை,***
***மூண்டு எழு வெகுளியோடும், மகோதரன் முனிந்து, 'முட்டத்***
***தூண்டுதி தேரை' என்றான்; சாரதி தொழுது சொன்னான்:***

***மீண்டவன்*** *- இராவணன் பக்கமிருந்து திரும்பி வந்த மகோதரன்;* ***இளவல் நின்ற பாணியின்*** *- தம்பி இலக்குவன் இருந்த பக்கத்திற்கு;* ***விலங்கா முன்னம்*** *- நீங்குவதற்கு முன்னர்;* ***ஆண்டகை*** *- ஆண்மை மிக்க இராமனுடைய;* ***தெய்வத்திண்தேர்*** *- தெய்வத் தன்மை மிக்க வலிமையான தேர்;* ***அணுகியது*** *-*

*நெருங்கி வந்தது;* ***அணுகும் காலை*** *- அவ்வாறு நெருங்கிய போது;* ***மகோதரன்*** *- மகோதரன்;* ***மூண்டெழு வெகுளியோடும்*** *- பொங்கி எழுகின்ற சினத்தோடு;* ***முனிந்து*** *- கோபித்து;* ***'முட்டத்தூண்டுதி தேரை'*** *- தேரை முட்டும்படி செலுத்துவாயாக;* ***என்றான்*** *- என்று கட்டளையிட்டான்;* ***சாரதி*** *- தேர்ப்பாகன்;* ***தொழுது சொல்லும்*** *- வணங்கி உரைக்கத் தொடங்கினான்.*

***9714. 'எண் அருங் கோடி வெங் கண் இராவணரேயும், இன்று***
***நண்ணிய பொழுது மீண்டு நடப்பரோ, கிடப்பது அல்லால்?***
***அண்ணல்தன் தோற்றம் கண்டால், ஐய! நீ கமலம் அன்ன***
***கண்ணனை ஒழிய, அப் பால் செல்வதே கருமம்' என்றான்.***

***ஐய*** *- ஐயனே;* ***அண்ணல் தன் தோற்றம் கண்டால்*** *- பெருமை மிக்க இராமபிரானின் உருவினைக் கண்டால்;* ***எண்ணரும் கோடி வெங்கண் இராவணரேயும்*** *- (இந்த ஓர் இராவணன் மட்டுமன்று) எண்ணுதற்கரிய கோடிக்கணக்கான கொடுங்கண்கள் படைத்த இராவணர்களாயினும்;* ***இன்று நண்ணிய பொழுது*** *- இன்று (இராமனை) நெருங்கி வந்தாலும்;* ***கிடப்பதல்லால்*** *- (களத்தில்) இறந்து கிடப்பார்களே யல்லாமல்;* ***மீண்டும் நடப்பரோ?*** *- (உயிருடன்) மீண்டும் செல்ல வல்லவர்களோ? (செல்லார்) ஆதலால்;* ***நீ*** *- நீ;* ***கமலம் அன்ன கண்ணனை*** *- தாமரை போலும் கண்களையுடைய இராமபிரானை;* ***அப்பால் ஒழிய*** *- (விட்டு நீங்கி) வேறிடம்;* ***செல்வதே*** *- போவதே;* ***கருமம்*** *- (பொருத்தமான) செயல்;* ***என்றான்*** *- என்று (சாரதி மகோதரனிடம்) கூறினான்.*

***9715. என்றலும், எயிற்றுப் பேழ் வாய் மடித்து, 'அடா! எடுத்து நின்னைத்***
***தின்றனென்எனினும் உண்டாம் பழி' என, சீற்றம் சிந்தும்***
***குன்று அன தோற்றத்தான்தன் கொடி நெடுந் தேரின் நேரே***
***சென்றது, அவ் இராமன் திண் தேர்; விளைந்தது, திமிலத் திண் போர்.***

***என்றலும்*** *- என்று (சாரதி) கூறுதலும்;* ***(மகோதரன்) எயிற்றுப் பேழ்வாய் மடித்து*** *- (கோரைப்) பற்கள் தோன்றும் பிளந்த தன் வாயை மடித்து;* ***'அடா -***

***ஏடா!; நின்னை எடுத்து*** - *என்னை மறுத்துப் பேசிய) உன்னை வாரியெடுத்து;* ***தின்றனன் எனினும்*** - *உண்டேனாயினும்;* ***பழிஉண்டாம்'*** - *அதனால் எனக்குப் பழி நேர்ந்துவிடும்' (ஆதலால் அது தவிர்ந்தேன்);* ***என*** - *என்றுரைக்க;* ***சீற்றம் சிந்தும்*** - *சினத்தை வெளியிடும்;* ***குன்றன தோற்றத்தான் தன்*** - *மலை போன்ற உருவத்தையுடைய (மகோதரனின்);* ***கொடி நெடுந்தேரின் நேரே*** - *கொடிகள் கட்டிய இரதத்திற்கு நேராக;* ***அவ்விராமன் திண்தேர் சென்றது*** - *அந்த இராமபிரானுடைய வலிய தேர் சென்றது;* ***திமிலத் திண்போர்*** - *முழக்கத்தையுடைய பெரும் போர்;* ***விளைந்தது*** - *உண்டாயிற்று.*

*இராமன் - மகோதரன் போர்*

***9716. பொன் தடந்தேரும், மாவும், பூட்கையும், புலவு உண் வாட்கைக்***
***கல் தடந் திண் தோள் ஆளும், நெருங்கிய கடல்கள் எல்லாம்***
***வற்றின, இராமன் வாளி வடஅனல் பருக; வன் தாள்***
***ஒற்றை வன் தடந் தேரோடும் மகோதரன் ஒருவன் சென்றான்.***

*(அப்போரில் மகோதரனிடமிருந்த)* ***பொன் தடந்தேரும்*** - *பொன் மயமான பெரிய தேர்களும்;* ***மாவும்*** - *குதிரைகளும்;* ***பூட்கையும்*** - *யானைகளும்;* ***புலவு வாட்கை*** - *புலால் நாறும் வாளேந்திய கரங்களையும்;* ***கல் தடந் திண் தோள் ஆளும்*** - *கல்போல் வலிய அகன்று திரண்ட தோள்களையும் உடைய காலாட் படைகளும்;* ***நெருங்கிய*** - *(கொண்டு) நெருக்கமுற்ற;* ***கடல்கள் எல்லாம்*** - *படைக் கடல்கள் யாவும்;* ***இராமன் வாளி வடவனல் பருக*** - *இராமபிரானின் அம்புகள் என்னும் வடவைக் கனல் குடிக்க;* ***வற்றின*** - *வறண்டு (ஏதுமில்லாமல்) போயின (எனவே);* ***ஒற்றை வன் தடந் தேரோடும்*** - *(மிஞ்சிய) தன் ஒரே பெரிய வலிய தேருடன்;* ***வன்தாள் மகோதரன்*** - *வலிய (கால்களை உடைய) வனாகிய மகோதரன்;* ***ஒருவன் சென்றான்*** - *தன்னந்தனியாக இராமபிரான் பக்கம் சென்றான்.*

***9717. அசனிஏறு இருந்த கொற்றக் கொடியின்மேல், அரவத் தேர்மேல்,***
***குசை உறு பாகன்தன்மேல், கொற்றவன் குவவுத் தோள்மேல்,***
***விசை உறு பகழி மாரி வித்தினான்; விண்ணினோடும்***
***திசைகளும் கிழிய ஆர்த்தான்; தீர்த்தனும், முறுவல்***

***செய்தான்.***

*(மகோதரன்),* ***அசனி ஏறு இருந்த கொற்றக் கொடியின் மேல்*** *- (இராமபிரானுக்கு இந்திரன் அளித்த தெய்வத் தேர் மீது பறந்த) பேரிடி எழுதப் பெற்றிருந்த வெற்றிக் கொடியின் மீதும்;* ***அரவத் தேர் மேல்*** *- ஒலிமிக்க அத்தேரின் மீதும்;* ***குசை உறு பாகன் தன் மேல்*** *- கடிவாளம் பற்றிய தேர்ப்பாகன் மாதலி மீதும்;* ***கொற்றவன் குவவுத் தோள் மேல்*** *- வெற்றியாளனாகிய இராமபிரானின் மலைத் தோள்கள் மீதும்;* ***விசை உறு பகழி மாரி*** *- வேகம் கொண்ட அம்பு மழையை;* ***வித்தினான்*** *- விதை தூவுவது போல் பாய்ச்சினான்; (மேலும்)* ***விண்ணினோடும் திசைகளும் கிழிய*** *- வானும் திசைகளும் கிழிந்து போயிற்றென்னுமாறு;* ***ஆர்த்தான்*** *- முழக்கமிட்டான்;* ***தீர்த்தனும்*** *- தூயவனாகிய இராமபிரானும்;* ***முறுவல் செய்தான்*** *- புன்னகை பூத்தான்.*

***9718. வில் ஒன்றால், கவசம் ஒன்றால், விறலுடைக் கரம்***
***ஓர் ஒன்றால்,***
***கல் ஒன்று தோளும்ஒன்றால், கழுத்து ஒன்றால்,***
***கடிதின் வாங்கி,***
***செல் ஒன்று கணைகள், ஐயன் சிந்தினான்; செப்பி***
***வந்த***
***சொல் ஒன்றாய்ச் செய்கை ஒன்றாய்த் துணிந்தனன்,***
***அரக்கன் துஞ்சி.***

***ஐயன்*** *- இராமபிரான்;* ***வில் ஒன்றால்*** *- (மகோதரனின்) வில்லை ஒரு கணையாலும்;* ***கவசம் ஒன்றால்*** *- அவன் கவசத்தை ஒரு கணையாலும்;* ***விறலுடைக்கரம்*** *- வலிமைமிக்க அவன் கைகளை;* ***ஓர் ஒன்றால்*** *- ஒவ்வொரு கணையாலும்;* ***கல்லொன்று தோளும் ஒன்றால்*** *- கற்பாறை போன்ற தோள்களை ஒரு கணையாலும்;* ***கழுத்து ஒன்றால்*** *- கழுத்தினை ஒரு கணையாலும்;* ***செல் ஒன்று கணைகள் கடிதின் வாங்கி*** *- விரைவு பொருந்திய அம்புகளை வேகமாய்;* ***சிந்தினான்*** *- செலுத்தினான்;* ***அரக்கன்*** *- இராட்சதனான மகோதரன்;* ***செப்பி வந்த சொல் ஒன்றாய்*** *- (இராவணனிடம்) செப்பி வந்த மொழி ஒன்றாகவும்;* ***செய்கை ஒன்றாய்*** *- செயல் மற்றொன்றாகவும் ஆகும் வண்ணம்;* ***துஞ்சி துணிந்தனன்*** *- இறந்து உடல் துண்டாகி வீழ்ந்தான்.*

## *இராவணனோடு இராமன் போரிடுதல்*

***9719. மோதரன் முடிந்த வண்ணம், மூவகை உலகத்தோடும்***
***மாதிரம் எவையும் வென்ற வன் தொழில் அரக்கன்***
***கண்டான்,***
***சேதனை உண்ணக் கண்டான்; 'செல விடு, செல***

***விடு!' என்றான்;***
***சூதனும் முடுகித் தூண்ட, சென்றது, துரகத் திண்***
***தேர்.***

**மோதரன் முடிந்த வண்ணம்** - *மகோதரன் இறந்த நிலையை;* **மூவகை உலகத்தோடு** - *மூன்று உலகங்களோடு;* **மாதிரம் எவையும் வென்ற** - *திசைகள் அனைத்தையும் வெற்றி கொண்ட;* **வன்தொழில் அரக்கன்** - *கொடுமையே தன்மையாகக் கொண்ட இராவணன்;* **கண்டான்** - *பார்த்தான்;* **சேதனை உண்ண** - *(இந்நிகழ்ச்சி) தன் அறிவை உண்ணவே;* **செலவிடு, செலவிடு என்றான்** - *(தன் பாகனை நோக்கி) தேரைச் செலுத்து, செலுத்து என்றான்;* **துரகத் திண்தேர்** - *குதிரை பூட்டிய வலிய தேர்;* **சூதனும் முடுகித் தூண்ட** - *தேர்ப்பாகனும் விரைந்து தூண்ட;* **சென்றது** - *வேகமாக முன்னே சென்றது.*

***9720. 'பனிப் படாநின்றது என்னப் பரக்கின்ற சேனை***
***பாறித்***
***தனிப்படான்ஆகின் இன்னம் தாழ்கிலன்' என்னும்***
***தன்மை***
***நுனிப் படாநின்ற வீரன், அவன் ஒன்றும்***
***நோக்காவண்ணம்***
***குனிப் படாநின்ற வில்லால், ஒல்லையின் நூறிக்***
***கொன்றான்.***

**பனிப்படா நின்றது என்ன** - *பனி எங்கும் பொழிந்து நின்றாற்போல;* **பரக்கின்ற சேனை** - *விரிந்திருக்கிற (இராவணன்) படை;* **பாறி** - *சிதறி;* **தனிப்படான் ஆகின்** - *தான் தன்னந் தனியனாகாதவரை;* **இன்னம் தாழ்கிலன்** - *(இவ்விராவணன்) இன்னும் கீழடங்கமாட்டான்;* **என்னும் தன்மை** - *என்னும் நிலையை;* **நுனிப்படா நின்ற வீரன்** - *நன்கு சிந்தித்து அறிந்த வீரனான இராமபிரான்;* **அவன் ஒன்றும் நோக்கா வண்ணம்** - *தன் செயல் ஒன்றையும் அவன் காணாதபடி;* **குனிப்படா நின்ற வில்லால்** - *வளைந்த வில்லால்;* **ஒல்லையில்** - *விரைவாக;* **நூறிக் கொன்றான்** - *சின்னா பின்னமாக்கி அழித்தான்.*

***9721. அடல் வலி அரக்கற்கு அப் போழ்து, அண்டங்கள்***
***அழுந்த, மண்டும்***
***கடல்களும் வற்ற, வெற்றிக் கால் கிளர்ந்து***
***உடற்றும்காலை,***
***வடவரை முதல ஆன மலைக் குலம் சலிப்ப மானச்,***
***சுடர் மணி வலயம் சிந்தத் துடித்தன, இடத்த***

**பொன்-தோள்.**

***அப்போழ்து*** *- அவ்வேளையில்;* ***அடல்வலி அரக்கற்கு*** *- மிகுந்த ஆற்றலையுடைய இராவணனுக்கு;* ***அண்டங்கள் அழுந்த*** *- அண்டங்கள் அனைத்தும் தாழவும்;* ***மண்டும் கடல்களும் வற்ற*** *- நிறைந்த கடல்கள் எல்லாம் வற்றவும்;* ***வெற்றிக்கால்*** *- (எல்லாவற்றையும்) வென்று தீர்க்கும் (ஊழிக்) காற்று;* ***கிளர்ந்து*** *- பொங்கி யெழுந்து;* ***உடற்றும் காலை*** *- துன்புறுத்தும் பொழுது;* ***வடவரை முதல ஆன*** *- மேரு மலை முதலாக உள்ள;* ***மலைக்குலம் சலிப்ப மான*** *- பெருமலை வரிசைகள் அசைவன போன்று;* ***சுடர்மணி வலயம் சிந்த*** *- ஒளிவீசும் மாணிக்கங்கள் பதித்த வாகுவலயங்கள் சிதறுமாறு;* ***இடத்த பொன்தோள் துடித்தன*** *- இடதுபுறத்துப் பொன்மயமான தோள்கள் துடித்தன.*

**கலி விருத்தம்**

***9722. உதிர மாரி சொரிந்தது, உலகு எலாம்;***
***அதிர வானம் இடித்தது; அரு வரை***
***பிதிர வீழ்ந்தது, அசனி; ஒளி பெறாக்***
***கதிரவன்தனை ஊரும் கலந்ததால்.***

***உலகெலாம்*** *- உலகு முழுவதிலும்;* ***உதிரமாரி*** *- இரத்த மழை;* ***சொரிந்தது*** *- பொழிந்தது;* ***வானம்*** *- முகில்கள்;* ***அதிர இடித்தது*** *- உலகம் அதிரும்படி இடியொலி எழுப்பின;* ***அருவரை பிதிர*** *- பெருமலைகள் சிதறும்படி;* ***அசனி*** *- இடி;* ***வீழ்ந்தது*** *- (மலைகள் மேல்) விழுந்தது;* ***ஒளிபெறாக் கதிரவன் தனை*** *- ஒளி இழந்த ஞாயிற்றை;* ***ஊர்*** *- ஊர்கோளும்;* ***கலந்தது*** *- சூழ்ந்து கொண்டது; (ஆல் - அசை)*

*ஊர்கோள் - பரி வேடம்; பரிவேடம் கால அருக்கன் உதயத்துச் சாரில் வட்டந் தலமழிவாம் என்பர் முன்னோர்.*

***9723. வாவும் வாசிகள் தூங்கின; வாங்கல் இல்***
***ஏவும் வெஞ் சிலை நாண் இடை இற்றன;***
***நாவும் வாயும் உலர்ந்தன; நாள்மலர்ப்***
***பூவின் மாலை புலால் வெறி பூத்ததால்.****

***வாவும் வாசிகள்*** *- (இராவணன் தேரில் கட்டிய) பாயும் குதிரைகள்;* ***தூங்கின*** *- தேரில் கட்டியவாறே உறங்கின;* ***வெஞ்சிலை*** *- கொடிய விற்கள்;* ***வாங்கலில்*** *- வளைக்கப்பட்ட போது;* ***ஏவும்*** *- அம்புகளும்;* ***நாண் இடை இற்றன*** *- நாண்கயிற்றில் வைக்கும்போதே முறிந்து போயின;* ***நாவும் வாயும் உலர்ந்தன*** *- (இராவணன்) வாய்களும் நாக்குகளும் காய்ந்து போயின;* ***நாள் மலர்ப் பூவின் மாலை***

*- புத்தம் புதிதாக அன்று மலர்ந்த பூக்களால் கட்டப்பட்ட மாலை;* ***புலால் வெறி*** *- மாமிச நாற்றத்தை; பூத்த - தோற்றுவித்தது.*

*(ஆல் - அசை, வாசி - குதிரை, ஏ - அம்பு.*

***9724. எழுது வீணை கொடு ஏந்து பதாகைமேல்***
***கழுகும் காகமும் மொய்த்தன; கண்கள் நீர்***
***ஒழுகுகின்றன, ஓடு இகல் ஆடல் மா;***

***தொழுவில் நின்றன போன்றன, சூழி மா.***

***எழுது வீணை கொடு*** *- வரையப் பெற்ற வீணையைச் (சின்னமாகக்) கொண்டு,;* ***ஏந்து பதாகை மேல்*** *- உயர்ந்து நிற்கும் (இராவணன்) கொடியின் மீது;* ***கழுகும் காகமும் மொய்த்தன*** *- கழுகுகளும் காகங்களும் சூழ்ந்து பறந்தன;* ***ஓடு இகல் ஆடல் மா*** *- பாயும் இயல்புடைய போர் வல்ல குதிரைகளின்;* ***கண்கள் நீர் ஒழுகுகின்றன*** *- கண்களில் கண்ணீர் வார்ந்து கொண்டிருந்தன;* ***சூழி மா*** *- முகபடாமணிந்த யானைகள்;* ***தொழுவில் நின்றன போன்றன*** *- பந்திகளில் கட்டப்பட்டாற்போல் செயலற்று நின்றன.*

***9725. இன்ன ஆகி, இமையவர்க்கு இன்பம் செய்***
***துன்னிமித்தங்கள் தோன்றின; தோன்றவும்,***
***அன்னது ஒன்றும் நினைந்திலன், 'ஆற்றுமோ,***
***என்னை வெல்ல, மனித்தன்?' என்று எண்ணுவான்.****

***இமையவர்க்கு இன்பம் செய்*** *- தேவர்களுக்கு மகிழ்ச்சியூட்டுகிற;* ***துன்னிமித்தங்கள்*** *- (இராவணனுக்கு) கெட்ட சகுனங்களானவை;* ***இன்னவாகி*** *- இப்படிப்பட்டனவாகி;* ***தோன்றின*** *- புலப்படலாயின;* ***தோன்றவும்*** *- அவ்வாறு புலப்படவும்;* ***அன்னது ஒன்றும் நினைந்திலன்*** *- அவை குறித்தும் ஏதும் சிந்திக்காதவனாய்;* ***'என்னை வெல்ல மனித்தன் ஆற்றுமோ?'*** *- என்னை வெல்வதற்கு (எளிய) மனிதனால் முடியுமோ?';* ***என்று எண்ணுவான்*** *- என்று இராவணன் கருதலானான்*

***9726. வீங்கு தேர் செலும் வேகத்து, வேலை நீர்***
***ஓங்கு நாளின் ஒதுங்கும் உலகுபோல்,***
***தாங்கல் ஆற்றகிலார், தடுமாறித் தாம்***
***நீங்கினார், இரு பாலும் நெருங்கினார்.***

**வேலை நீர் ஓங்கு நாளின்** - *கடல் நீர் பொங்கியெழும் (ஊழிக்) காலத்தில்;* **ஒதுங்கும் உலகுபோய்** - *இரு புறமாய் ஒதுங்கி நிற்கும் நிலம் போல;* **இருபாலும் நெருங்கினார்** - *இருபக்கங்களிலும் நெருக்கமாகக் கூடியவர்கள்;* **வீங்கு தேர் செலும் வேகத்து** - *(இராவணனின்) வேகம் மிக்க தேர் ஓடும் விரைவினால்;* **தாங்கல் ஆற்றகிலார்** - *(அவ்விரைவைத்) தாங்குதற்கு ஆற்றாதவர்களாய்;* **தடுமாறி** - *நிலை குலைந்து;* **நீங்கினார்** - *ஒதுங்கிக் கொண்டனர்.*

### *எதிர் எதிரே நிற்கும் இராம இராவணர் தோற்றம்*

***9727. கருமமும் கடைக்கண் உறு ஞானமும்,***
***அருமை சேரும் அவிஞ்சையும் விஞ்சையும்,***
***பெருமை சால் கொடும் பாவமும் பேர்கலாத்***
***தருமமும் எனச் சென்று, எதிர் தாக்கினார்.***

*(இராவணனும் இராமபிரானும் அங்கு);* **கருமமும்** - *வினையும்;* **கடைக்கண் உறு ஞானமும்** - *(நன்னெறியின்) கடைசியில் எய்தும் ஞானமும் (போலவும்);* **அருமை சேரும் அவிஞ்சையும்** - *(பொருள்களின் நிலையை) அறியாது தடுக்கும் அவிச்சையும்;* **விஞ்சையும்** - *(அதற்கு மாறான) வித்தையும் (போலவும்);* **பெருமை சால்** - *அளவிற் பெரிய;* **கொடும் பாவமும்** - *கொடிய பாவமும்;* **பேர்கலா** - *(எந்நிலையிலும்) பயன்தருதலில் தவிராத;* **தருமமும் என** - *அறமும் (போலவும்);* **எதிர் சென்று தாக்கினார்** - *ஒருவர் மற்றொருவரை எதிர்த்துத் தாக்கினார்கள்.*

*கருமம், அவிஞ்சை, பாவம் என்பன இராவணனுக்கும் ஞானம், விஞ்சை, தருமம் என்பன இராமனுக்கும் உவமையாயின. இவை ஒன்றற்கொன்று எதிர்நிலையினவாயின. விஞ்சை - வித்தை அவிஞ்சை - அஞ்ஞானம்.*

***9728. சிரம் ஓர் ஆயிரம் தாங்கிய சேடனும்,***
***உரவு கொற்றத்து உவணத்து அரசனும்,***
***பொர உடன்றனர் போலப் பொருந்தினர்,***
***இரவும் நண்பகலும் என ஏற்றனர்.***

**சிரம் ஓர் ஆயிரம் தாங்கிய சேடனும்** - *தலைகள் ஆயிரம் படைத்த ஆதி சேடனும்;* **உரவு கொற்றத்து** - *வலிமையும் வெற்றியும் படைத்த;* **உவணத்து அரசனும்** - *கருட வேந்தனும்;* **பொர உடன்றனர்** - *போரிட எதிர்த்து நின்றனர்;* **போலப் பொருந்தினர்** - *என்பது போலப் பொருந்தி நின்றனர்;* **இரவும் நண்பகலும் என** - *நள்ளிரவும் நண்பகலும் போல;* **ஏற்றனர்** - *(அவ்விருவரும்) இசைந்து தோன்றினர்.*

***9729. வென்றி அம் திசை யானை வெகுண்டன***
***ஒன்றை ஒன்று முனிந்தவும் ஒத்தனர்;***
***அன்றியும், நரசிங்கமும் ஆடகக்***
***குன்றம் அன்னவனும் பொரும் கொள்கையார்.***

***வென்றி அம் திசை யானை*** - *வெற்றி மிக்க அழகிய திக்கு யானைகள்;* ***வெகுண்டன*** - *சினம் கொண்டனவாய்;* ***ஒன்றை ஒன்று*** - *ஒன்றோடொன்று;* ***முனிந்தவும்*** - *வெறுத்து நின்றன;* ***ஒத்தனர்*** - *போன்றிருந்தனர்;* ***அன்றியும்*** - *அதுவல்லாமலும்;* ***நரசிங்கமும்*** - *நரசிங்க மூர்த்தியும்;* ***ஆடகக் குன்றம் அன்னவனும்*** - *பொன்மலை போன்ற இரணியனும்;* ***பொரும் கொள்கையார்*** - *ஒப்பென்று சொல்லுமாறும் விளங்கினார்கள்.*

*இராமபிரான் நரசிங்கமாகவும், இராவணன் இரணியனாகவும் கூறப்பட்டனர்.*

***9730. துவனி வில்லின்பொருட்டு ஒரு தொல்லைநாள்,***
***'எவன் அவ் ஈசன்?' என்பார் பொர, ஏற்று, எதிர்***
***புவனம் மூன்றும் பொலங் கழலால் தொடும்***
***அவனும் அச் சிவனும் எனல் ஆயினார்.***

***தொல்லை ஒரு நாள்*** - *பண்டொரு காலத்தில்;* ***துவனி வில்லின் பொருட்டு*** - *முழக்கம் நிறைந்த (இரண்டு) விற்கள் காரணமாக;* ***'எவன் அவ் ஈசன்?' என்பார்*** - *எவன் உண்மையில் தலைமை சான்ற கடவுள் என அறிய விரும்பியவரான இமையவருக்காய்;* ***பொர*** - *போரிட முற்பட்டு;* ***ஏற்று*** - *அவ்விற்களை எடுத்து;* ***எதிர்*** - *ஒருவரை யொருவர் எதிர்த்து நின்ற;* ***புவனம் மூன்றும் பொலங்கழலால் தொடும்*** - *மூன்று உலகங்களையும் தன் பொற் பாதங்களால் தொட்ட;* ***அவனும்*** - *அந்தத் திருமாலும்;* ***அச்சிவனும்*** - *அந்தச் சிவபிரானும்;* ***எனல் ஆயினார்*** - *என்னும் நிலையினராகக் (இராமனும் இராவணனும்) காட்சி தந்தார்கள்.*

***9731, கண்ட சங்கரன் நான்முகன் கைத் தலம்***
***விண்டு அசங்க, தொல் அண்டம் வெடித்திட,***
***அண்ட சங்கத்து அமரர்தம் ஆர்ப்பு எலாம்***
***உண்ட சங்கம் இராவணன் ஊதினான்.***

***கண்ட*** - *(இராம இராவணர் போர் நிகழ்ச்சிகளை வானத்திலிருந்து) பார்த்த;* ***சங்கரன் நான் முகன்*** - *சிவனும் பிரமனும்;* ***கைத்தலம்*** - *தங்கள் கரங்கள்;* ***விண்டு அசங்க*** - *நிலைதிரிந்து நடுங்கவும்;* ***தொல் அண்டம் வெடித்திட*** - *பழமையான பிரமாண்டப் பகுதி வெடித்துப் போகவும்;* ***அண்டம்*** - *விண்வெளியில்;* ***சங்கத்து***

***அமரர் தம்*** - திரண்ட தேவர்களின்; ***ஆர்ப்பெலாம்*** - பெரு முழக்கங்களையெல்லாம்; ***உண்ட*** - (முன்பு தேவரை வெற்றி கொண்ட காலத்தில்) உண்டு முடித்த; ***சங்கம்*** - தன் சங்கினை; ***இராவணன் ஊதினான்*** - இராவணன் முழக்கம் செய்தான்.

### *9732. சொன்ன சங்கினது ஓசை துளக்குற,*
### *'என்ன சங்கு?' என்று இமையவர் ஏங்குற,*
### *அன்ன சங்கைப் பொறாமையினால், அரி -*
### *தன்ன வெண் சங்கு தானும் முழங்கிற்றால்.*

***அன்ன*** - அந்த (இராவணனின்); ***சங்கை*** - சங்கின் (ஓசையைப்); ***பொறாமையினால்*** - (தான்) பொறுத்துக் கொள்ளாமையினால்; ***சொன்ன*** - மேற்குறித்த; ***சங்கினது ஓசை*** - (இராவணனது) சங்கின் ஒலி; ***துளக்குற*** - நிலைகுலையும்படியாகவும்; ***இமையவர்*** - தேவர்கள்; ***'என்ன சங்கு?' என்று*** - இது யாருடைய சங்கு?' என்று; ***ஏங்குற*** - (ஐயுற்று) ஏக்கமுறவும்; ***அரிதன்ன*** - திருமாலினுடைய; ***வெண் சங்கு தானும்*** - பாஞ்ச சன்னியம் என்னும் வெண்ணிற வலம் புரிச்சங்கும்; ***முழங்கிற்று*** - (தானே) முழக்கம் செய்தது. (ஆல் - அசை).

*திருமாலின் சங்கம் தானே முழங்கும் இயல்பினது என அறியலாகிறது.*

### *9733. ஐயன் ஐம் படைதாமும் அடித் தொழில்*
### *செய்ய வந்து அயல் நின்றன; தேவரில்*
### *மெய்யன் அன்னவை கண்டிலன், வேதங்கள்*
### *பொய் இல் தன்னைப் புலன் தெரியாமைபோல்.*

***ஐயன்*** - திருமாலின்; ***ஐம்படை தாமும்*** - சங்கு, சக்கரம், கதை, வாள், வில் என்ற ஐந்து படைகளும்; ***அடித் தொழில் செய்ய*** - (தம் தலைவனுக்குத்) தொண்டு செய்யும் பொருட்டு; ***அயல் நின்றன*** - பக்கத்தில் காத்து நின்றன; (ஆனால்), ***வேதங்கள்*** - மறைகள்; ***பொய்யில் தன்னை*** - பொய்யற்ற மெய்யான தன்னை; ***புலன் தெரியாமை போல்*** - (மானிட வடிவெடுத்த அவனை) அறிந்து கொள்ளாதவாறு போல; ***அன்னவை*** - அவ்வைம்படைகளை; ***தேவரில் மெய்யன்*** - தேவர்களுள் மெய்ப்பொருளாயுள்ள திருமால்; ***கண்டிலன்*** - காணவில்லை.

*தானெடுத்த வேடத்தை வேதங்கள் எப்படி அறியவில்லையோ அது போன்ற மனித அவதாரமெடுத்த தான் ஐம்படைகளையும் அறியவில்லை.*

*ஐம்படைகளாவன: சுதரிசனம் (சக்கரம்), பாஞ்சன்னிபம் (சங்கு), கௌமோதகி (கதை), நாந்தகம் (வாள்), சார்ங்கம் (வில்)*

*புலன் தெரிதல் - உண்மை அறிதல்.*

***9734. ஆசையும் விசும்பும் அலை ஆழியும்***
***தேசமும் மலையும் நெடுந் தேவரும்***
***கூச, அண்டம் குலுங்க, குலம் கொள் தார்***
***வாசவன் சங்கை மாதலி வாய்வைத்தான்.***

*(அப்போது), **ஆசையும்** - திசைகளும்; **விசும்பும்** - வானமும்; **அலை ஆழியும்** - அலைகள் சூழ் கடலும்; **தேசமும்** - பூமிப் பரப்பும்; **மலையும்** - மலைகளும்; **நெடுந் தேவரும்** - பெருமையால் உயர்ந்த தேவர்களும்; **கூச** - நடுங்கவும்; **அண்டம் குலுங்க** - அண்டம் அசைந்தாடவும்; **குலம் கொள்தார்** - பலவகை மலர்க்குலமும் அமைந்த மாலையை அணிந்த; **வாசவன்** - இந்திரனுடைய; **சங்கை** - சங்கினை; **மாதலி வாய் வைத்தான்** - (தேர்ப்பாகனாகிய) மாதலி தன் வாயில் வைத்து ஊதினான்.*

## *இராம இராவணப்போர் தொடக்கம்*

***9735. துமில வாளி அரக்கன் துரப்பன***
***விமலன் மேனியின் வீழ்வதன் முன்னமே,***
***கமல வான் முக நாடியர் கண் கணை***
***அமலன் மேனியில் தைத்த அனந்தமால்.***

***அரக்கன் துரப்பன** - இராவணன் செலுத்துகின்றனவாகிய; **துமில வாளி** - ஆரவாரத்தோடு வரும் அம்புகள்; **விமலன்** - மாசு மறுவற்ற இராமபிரான்; **மேனியின் வீழ்வதன் முன்னமே** - திருமேனியில் வந்து பாய்வதற்கு முன்பாகவே; **கமல முக** - தாமரை போன்ற முகமுடைய; **வான் நாடியர்** - வானத்துத் தேவ கன்னிகையர்; **கண்கணை** - கண்களாகிய அம்புகள்; **அமலன்***

***மேனியில்** - குற்றமற்ற இராமபிரான் மேனியில்; **தைத்த** - தைத்தவை; **அனந்தம்** - கணக்கற்றவையாகும் (ஆல் - அசை).*

***9736. சென்ற தேர் ஒர் இரண்டினும் சேர்த்திய***
***குன்றி வெங் கண் குதிரை குதிப்பன,***
***ஒன்றை ஒன்று உற்று, எரி உக நோக்கின;***
***தின்று தீர்வன போலும் சினத்தன.***

***சென்ற*** - *போர்க்களத்துக்கு வந்த;* ***தேர் ஓர் இரண்டினும்*** - *இராமபிரான்; இராவணன் ஆகிய இருவரின் ஒப்பற்ற தேர்களிலும்;* ***சேர்த்திய*** - *கட்டப்பட்டிருந்த;* ***குன்றி வெங்கண்*** - *குன்றிமணி போல் சிவந்த கண்களையுடைய;* ***குதிரை*** - *குதிரைகள்;* ***குதிப்பன*** - *எதிரெதிர் பாய்வனவாயும்;* ***ஒன்றை ஒன்று*** - *ஒன்றோடொன்று;* ***உற்று*** - *நெருங்கி;* ***எரி உக நோக்கின*** - *நெருப்புச் சிந்தும்படி பார்ப்பனவாயும்;* ***தின்று தீர்வன போலும்*** - *ஒன்றை யொன்று கடித்து விழுங்கி விடுவன போல;* ***சினத்தன*** - *கோபம் கொண்டனவாயும் (காட்சி தந்தன).*

***9737. கொடியின்மேல் உறை வீணையும், கொற்ற மா***
***இடியின் ஏறும், முறையின் இடித்தன -***
***படியும் விண்ணும் பரவையும் பண்பு அற***
***முடியும் என்பது ஓர் மூரி முழக்கினால்.***

***கொடியின் மேல் உறை*** - *(இராவணன்) கொடி மீதிலிருந்த;* ***வீணையும்*** *-;* ***கொற்றம்*** - *வெற்றியையுடைய;* ***மா இடியின் ஏறும்*** - *(இராமபிரான்) கொடி மீதிருந்த இடியேறும்;* ***படியும்*** - *பூமியும்;* ***விண்ணும்*** - *வானமும்;* ***பரவையும்*** - *கடலும்;* ***பண்பு அற*** - *தம் இயல்பிற் குன்றி;* ***முடியும்*** - *அழிந்து விடும்;* ***என்பது ஓர் மூரி முழக்கினால்*** - *என்று கூறத்தக்க ஆற்றல் மிக்க ஓசையோடு;* ***முறையின் இடித்தன*** - *மாறி மாறி பேரொலி எழுப்பின.*

*மானுடத் தலையைக் கொடியில் இராவணன் கொண்டிருந்தானென்று முதல் நூல் கூறும் (வை.மு.கோ.உரை)*

***9738. ஏழு வேலையும் ஆர்ப்பு எடுத்து என்னலாம்,***
***வீழி வெங் கண் இராவணன் வில் ஒலி;***
***ஆழி நாதன் சிலை ஒலி, அண்டம் விண்டு***
***ஊழி பேர்வுழி, மா மழை ஒத்ததால்.***

***வீழி*** - *வீழிப்பழம் போன்ற;* ***வெங்கண் இராவணன்*** - *கொடிய கண்களையுடைய இராவணன்;* ***வில்ஒலி*** - *வில்லின் ஓசை;* ***ஏழு வேலையும்*** - *ஏழு கடல்களும்;* ***ஆர்ப்பு எடுத்து என்னலாம்*** - *பேரொலி எழுப்பின என்று கூறுதற்குரியதாய் இருந்தது;* ***ஆழி நாதன்*** - *சக்கராயுதம் படைத்த இராமபிரானுடைய;* ***சிலை ஒலி*** - *வில்லின் ஒலியோ;* ***அண்டம் விண்டு*** - *விண்வெளி பிளக்கும்படி;* ***ஊழி பேர்வுழி*** - *ஊழிக்காலம் வரும் போது (உண்டாகும்);* ***மாமழை ஒத்தது*** - *பெரு முகில்களில் எழும் இடியோசையை நிகர்த்திருந்தது.*

*ஆழி நாதன் - திருப்பாற்கடலின் தலைவன் என்றுமாம். மழை இடியைக் குறித்ததால் ஆகுபெயர்.*

*வீழி - விழுதி என்னும் செடி.*

***9739. ஆங்கு நின்ற அனுமனை ஆதியாம்***
***வீங்கு வெஞ் சின வீரர் விழுந்தனர் -***
***ஏங்கி நின்றது அலால், ஒன்று இழைத்திலர்,***
***வாங்கு சிந்தையர், செய்கை மறந்துளார்.***

***ஆங்கு நின்ற*** *- (இவ்வொலிகளைச் செவியுற்று) அவ்விடத்திலே நின்ற;* ***அநுமனை ஆதியாம்*** *- அநுமன் முதலாவதாக அமைந்த;* ***வீங்கு வெஞ்சின வீரர*** *- பொங்கும் கொடுங்கோபமுள்ள சிறந்த வீரர்களும்;* ***வீழ்ந்தனர்*** *- தரையில் விழுந்தனர்;* ***ஏங்கி நின்றது அலால்*** *- என்ன செய்வோம் என்று ஏக்குற்று நின்றதன்றி;* ***ஒன்று இழைத்திலர்*** *- வேறு எதுவும் செய்யலாற்றாதவராயினர்;* ***வாங்கு சிந்தையர்*** *- ஓய்ந்த உள்ளத்தினராய்;* ***செய்கை மறந்துளார்*** *- செயலற்றுப் போயினர்.*

*வாங்குதல் - தாழ்தல் (ஓய்தல்)*

***9740. 'ஆவது என்னை கொலாம்?' என்று அறிகிலார்,***
***'ஏவர் வெல்வர்?' என்று எண்ணலர் ஏங்குவார்,***
***போவர், மீள்வர், பதைப்பர், பொருமலால்,***
***தேவரும் தங்கள் செய்கை மறந்தனர்.***

***தேவரும்*** *- தேவர்களும்;* ***'ஆவது என்னை கொலாம்*** *- 'என்ன நிகழுமோ';* ***என்று அறிகிலார்*** *- என்று அறியாதவர்களாய்;* ***'ஏவர் வெல்வர்?'*** *- 'எவர் தாம் போரில் வெல்வர்?';* ***என்று எண்ணலர்*** *- என்று சிந்திக்க முடியாதவர்களாய்;* ***ஏங்குவார்*** *- ஏக்கமுறுவார்;* ***போவர்*** *- (இலக்கறியாது) செல்வர்;* ***மீள்வர்*** *- திரும்பி வருவர்;* ***பதைப்பர்*** *- உள்ளம் அஞ்சுவர்;* ***பொருமலால்*** *- மனம் விம்மி;* ***தங்கள் செய்கை மறந்தனர்*** *- தாம் யாதும் செய்யும் திறனற்றுப் போயினர்.*

***9741. சேண அந்தரம் நோக்கலும் திண் சரம்,***
***பூண முந்தின, சிந்தின பூ மழை,***
***காண வந்த கடவுளர் கை எலாம் -***
***ஆணவம் துணை யார் உளர் ஆவரோ?***

***திண்சரம்*** - *(இராமபிரானுடைய) வலிமைமிக்க அம்புகள்;* ***சேண அந்தரம் நோக்கலும்*** - *தொலைவிலுள்ள வானத்தைக் குறிபார்க்கத் தொடங்கியதும்;* ***காண வந்த கடவுளர் கையெலாம்*** - *காண்பதற்கு வந்த தேவர்கள் கரங்கள் எல்லாம்;* ***சிந்தின பூ மழை*** - *தூவிய மலர்மாரி;* ***பூண முந்தின*** - *(வானை) அழகு செய்யும்படி முன்தோன்றின;* ***ஆணவம் துணை*** - *செருக்குக்குத் துணையாக;* ***யார் உளர் ஆவரோ?*** - *யார் தான் இருக்க முடியும்?*

*ஆணவம் இல்லாத இராமனைத் தேவர் கொண்டாடினர் என்பதாம்.*

***9742. நீண்ட மின்னொடு வான் நெடு நீல வில்***
***பூண்டு இரண்டு எதிர் நின்றன போன்றன -***
***ஆண்ட வில்லிதன் வில்லும், அரக்கன்தன்***
***தீண்ட வல்லர் இலாத சிலையுமே.***

***ஆண்ட வில்லி தன் வில்லும்*** - *அனைத்துலகையும் (அறநெறியில்) ஆளும் வில்லாற்றல் மிக்க இராமபிரான் வில்லும்;* ***தீண்ட வல்லர் இலாத*** - *பிறரால் தொட்டெடுக்க முடியாத;* ***அரக்கன் தன் சிலையுமே*** - *இராவணனின் வில்லும்;* ***நீல வான்*** - *நீல வானத்தில்;* ***நெடுவில்*** - *நெடிய இந்திர விற்கள்;* ***இரண்டு*** - *இரண்டு;* ***நீண்ட மின்னொடு பூண்டு*** - *நீண்ட மின்னலாகிய (கயிறு) பூண்டு;* ***எதிர் நின்றன போன்றன*** - *எதிரெதிர் நின்றாற் போல் விளங்கின.*

*இரண்டு வான விற்கள் மின்னலாகிய கயிற்றுடன் விளங்குவது போல் இருவர் வில்லும் தோன்றின.*

***9743. அரக்கன் அன்று எடுத்து ஆர்க்கின்ற ஆர்ப்பும், போர்ப்***
***பொருப்பு மெய் வில் தெழிப்பும் உண்டேகொலாம் -***
***குரைக்கும் வேலையும் மேகக் குழாங்களும்***
***இரைத்து இடிக்கின்ற, இன்றும் ஓர் ஈறு இல!***

***அன்று*** - *(இராம இராவணப்போர் நடந்த) அன்று;* ***அரக்கன்*** - *இராவணன்;* ***எடுத்து ஆர்க்கின்ற ஆர்ப்பும்*** - *குரலெடுத்து முழங்கிய முழக்கமும்;* ***பொருப்பு மெய்*** - *மலை போன்ற வடிவுடைய;* ***போர் வில் தெழிப்பும்*** - *போர் வில்லினின்று எழுப்பிய பேரொலியும்;* ***உண்டே கொலாம்*** - *(இன்றும்) இருக்கின்றன போலும்!* ***குரைக்கும் வேலையும்*** - *ஒலிக்கின்ற கடலும்;* ***மேகக் குழாங்களும்*** - *முகில் கூட்டங்களும்;* ***இன்றும்*** - *இக்காலத்தும்;* ***இரைத்து*** - *பேரொலி செய்து;* ***இடிக்கின்ற*** - *இடிமுழக்கம் செய்கின்றன;* ***ஓர் ஈறு இல*** - *அப்பேரொலிகட்கு ஒரு முடிவே இல்லை.*

*இன்றும் கடல் முழங்குவதும் இடி இடிப்பதும் இராவணன் முழக்கத்தின் தொடர்ச்சியோ என்னும்படி அமைந்துள்ளது. தற்குறிப்பேற்ற அணி.*

***9744. மண்ணில் செல்வன செல், இனும் மாசு அற***
***எண்ணின் சூல் மழை அல்ல; இராவணன்***
***கண்ணின் சிந்திய தீக் கடு வேகத்த***
***விண்ணில் செல்வன, மீண்டு இன்று வீழ்வன.***

***இனும் மாசு அற எண்ணின்*** - *மேலும் குற்றமின்றிச் சிந்தித்துப் பார்ப்போமாயின்;* ***மண்ணில் செல்வன செல்*** - *மண்ணின் மீது வீழும் இடியேறுகள்;* ***சூல் மழை அல்ல*** - *கருக்கொண்ட முகில்களில் பிறப்பன அல்ல;* ***இராவணன்*** - *அரக்கனாகிய இராவணன்;* ***கண்ணில் சிந்திய தீ*** - *(இராமனுடன் போரியற்றுங்கால்) கண்களில் கக்கிய நெருப்பு;* ***கடுவேகத்த*** - *விரைந்த வேகத்தோடு;* ***விண்ணில் செல்வன*** - *வானில் செல்லுவதே ஆகும்;* ***மீண்டும் இன்று வீழ்வன*** - *அந்நெருப்பே இன்றும் வானிலிருந்து (இடியாக) வீழ்கிறது.*

*இப்பாடலில் தற்குறிப்பேற்ற அணி அமைந்துள்ளது.*

***9745. மால் கலங்கல் இல் சிந்தையன் மாதிரம்***
***நால் கலங்க நகும்தொறும், நாவொடு***
***கால் கலங்குவர், தேவர்; கண மழைச்***
***சூல் கலங்கும்; இலங்கை துளங்குமால்.***

***மால் கலங்கலில் சிந்தையன்*** - *திருமாலைக் கண்டு கலக்கமற்ற மனம் படைத்தவனான இராவணன்;* ***நால் மாதிரம் கலங்க*** - *நான்கு திசைகளும் நிலைகுலையும்படி;* ***நகும் தொறும்*** - *பெருஞ்சிரிப்புச் செய்யும் போது;* ***தேவர்*** - *தேவர்கள்;* ***நாவொடு கால் கலங்குவர்*** - *நாக்கும், பாதமும் நடுங்குவர்;* ***சூல்*** - *கருக்கொண்ட;* ***கணமழை கலங்கும்*** - *முகில் கூட்டங்கள் கலங்கும்;* ***இலங்கை*** - *இலங்கை மா நகரமும்;* ***துளங்கும்*** - *நடுக்கம் கொள்ளும்.*

***9746. இக் கணத்தும் எறிப்ப தடித்து என,***
***நெக்க மேகத்து உதிக்கும் நெருப்பு என,***
***பக்கம் வீசும் படைச் சுடர், பல் திசை***
***புக்குப் போக, பொடிப்பன போக்கு இல.***

***பக்கம்*** - *(இராவணனது இரு) பக்கங்களிலும்;* ***வீசும் படைச்சுடர்*** - *ஒளி வீசுவனவாகிய ஆயுதங்களின் ஒளி;* ***பல் திசை புக்குப் போக*** - *பல்வேறு திசைகளிலும் புகுந்து செல்பவை;* ***பொடிப்பன*** - *(அனைத்தையும்) சாம்பலாக்கின;* ***போக்கு இல*** - *தாம் அழியாதிருந்தன; (அவைதாம்)* ***இக்கணத்தும்*** - *இந்த நேரத்திலே கூட;* ***நெக்க***

**மேகத்து** - சிதைந்த மேகத்தினிடத்து; **உதிக்கும்** - தோன்றும்; **நெருப்பு என** - மின்னலாகவும்; **தடித்து என** - இடியாகவும்; **எறிப்ப** - ஒளி வீசுகின்றன.

## *இராவணன் சின மொழி*

***9747. 'கொற்ற அம்பிற் கொடு கொல்லுதல் கோள் இலாச்***
***சிற்றையாளனைத் தேவர்தம் தேரொடும்***
***பற்றி வானில் சுழற்றி, படியின்மேல்***
***எற்றுவேன்' என்று உரைக்கும், இரைக்குமால்.***

**'கொற்ற அம்பிற் கொடு** - வெற்றி தரும் அம்பு கொண்டு; **கொல்லுதல்** - கொல்லுதலாகிய; **கோள் இலா** - நோக்கு இன்றி;

**சிற்றையாளனை** - இச்சிறுவனை; **தேவர் தம் தேரொடும்** - இந்திரன் தேரினோடும்; **பற்றி** - கையால் எடுத்து; **வானில் சுழற்றி** - வானில் தூக்கிச் சுழற்றி; **எற்று வேன்** - நிலத்தின் மேல் மோதுவேன்'; **என்று உரைக்கும்** - என்று (சினத்தால் இராவணன்) கூறுவான்; **இரைக்கும்** - கூக்குரலிடுவான்.

*(ஆல் - அசை)*

***9748. 'தடித்து வைத்தன்ன வெங் கணை தாக்கு அற,***
***வடித்து வைத்தது மானிடற்கே? வலி***
***ஒடித்து, தேரை உதிர்த்து, ஒரு வில்லொடும்***
***பிடித்துக் கொள்வென், சிறை' எனப் பேசுமால்.***

**'தடித்து** - மின்னலை; **வைத்தன்ன** - (திரட்டி) வைத்தாற போன்ற; **வெங்கணை** - கொடிய அம்பு; **தாக்கு அற** - தாக்கும் வலிமை அற்றுப் போகும்படி; **மானிடற்கே** - இம்மனிதனுக்கு; **வலி வடித்து வைத்தது?** - (ஆற்றல்) வடித்து வைக்கப் பட்டுள்ளதோ? (இல்லை) **ஒடித்து** - வலிமையை அழித்து; **தேரை உதிர்த்து** - தெய்வத்தேரைப் பொடியாக்கி; **ஒரு வில்லொடும்** - ஒப்பற்ற அவன் வில்லோடும்; **சிறைபிடித்துக் கொள்வென்** - நான் அவனைச் சிறைபிடிப்பேன்'; **எனப் பேசும்** - என்று இராவணன் சினமொழி கூறுவான்.

*ஆல் - அசை.*

## *இராவணன் அம்பு எய்தலும் தடுத்தலும்*

*சந்தக் கலிவிருத்தம்*

***9749. பதைக்கின்றது ஓர் மனமும், இடை படர்கின்றது ஓர் சினமும்,***
***விதைக்கின்றன பொறி பொங்கின விழியும், உடை வெய்யோன்,***
***குதைக்கின்றன நிமிர் வெஞ் சிலை குழையக் கொடுங் கடுங் கால்***
***உதைக்கின்றன சுடர் வெங் கணை, உரும்ஏறு என, எய்தான்.***

***பதைக்கின்றது ஓர் மனமும்*** - *நடுக்கமுறுகின்ற ஓர் உள்ளப் பாங்கும்;* ***இடை படர்கின்றது ஓர் சினமும்*** - *இடையிலே பொங்கிப் படர்கின்ற கோபமும்;* ***விதைக்கின்றன*** - *எல்லாப் பக்கங்களிலும் தூவப்படுவதாகிய;* ***பொறி பொங்கின விழியும்*** - *நெருப்புத் துளிகள் எழும் கண்களும்;* ***உடை*** - *பொருந்திய;* ***வெய்யோன்*** - *கொடியவனாகிய இராவணன்;* ***குதைக்கின்றன*** - *குதை (என்னும் வில்) உறுப்பினின்றும் வெளி வரும் அம்புகள்;* ***நிமிர் வெஞ்சிலை குழைய*** - *சொரிய நிமிரும் கொடிய வில் வளைத்து;* ***கொடும் கடும் கால்*** - *துன்புறுத்தும் புயல் காற்றை;* ***உதைக்கின்றன*** - *உற்பத்தி செய்து விடும்;* ***சுடர் வெங்கணை*** - *ஒளிமிக்க தீய அம்புகளை;* ***உரும் ஏறு என*** - *இடியேறுகள் போல;* ***எய்தான்*** - *(சிலையினின்றும்) செலுத்தினான்.*

*குதை - கழுந்து, திரண்ட நுனி (வில் உறுப்பு).*

***9750. உரும் ஒப்பன, கனல் ஒப்பன, ஊற்றம் தரு கூற்றின்***
***மருமத்தினும் நுழைகிற்பன, மழை ஒப்பன, வானோர்***
***நிருமித்தன, படை பற்று அற நிமிர்வுற்றன, அமிழ்தப்***
***பெரு மத்தினை முறை சுற்றிய பெரும் பாம்பினும் பெரிய.***

*(இராவணன் ஏவிய அம்புகள்),* ***உரும் ஒப்பன*** - *பேரிடி போன்றன;* ***கனல் ஒப்பன*** - *நெருப்பை நிகர்த்தன;* ***ஊற்றம் தரு கூற்றின்*** - *வலிமை மிக்க இயமனுடைய;* ***மருமத்தினும் நுழைகிற்பன*** - *மார்பிலும் ஊடுருவ வல்லன;* ***மழை ஒப்பன*** - *மழை போலப் பெருக வல்லன;* ***வானோர் நிருமித்தன*** - *தேவர்களால் உருவாக்கப் பெற்றன;* ***படை*** - *எதிரிகள் ஆயுதங்கள்;* ***பற்று அற*** - *செறிவு அற்றுப் போக;* ***நிமிர்வுற்றன*** - *மேலேற வல்லன;* ***அமிழ்தப் பெரு மத்தினை*** - *அமுதம் (கடைவதற்காகத் திருப்பாற்கடலில் இட்ட) பெருமத்தாகிய மந்தர மலையினை;* ***முறை சுற்றிய*** - *முறையே (கடைகயிறாகச்) சுற்றிய;* ***பெரும்பாம்பினும்*** - *பெரிய பம்பாகிய வாசுகியைக் காட்டிலும்;* ***பெரிய*** - *உருவத்தில் பெரியன.*

*ஓசையால் இடியையும், அழிவால் நெருப்பையும் பெருக்கத்தால் மழையையும், உருவத்தால் வாசுகியையும் நிகர்த்தனவாகிய அம்புகள் தெய்வத்தன்மை உடையனவாகவும், சாவையும் கொல்லும் திறனுடையனவாகவும் கூறப்பட்டன.*

***9751. 'துண்டப்பட நெடுமேருவைத் தொளைத்து, உள்***
***உறை தங்காது***
***அண்டத்தையும் பொதுத்து ஏகும்' என்று***
***இமையோர்களும் அயிர்த்தார்;***
***கண்டத் தெறு கணைக் காற்றினை, கருணைக்***
***கடல், கனகச்***
***சண்டச் சர மழை கொண்டு, அவை இடையே***
***அறத் தடுத்தான்.***

*(இராவணன் எய்த அம்புகள்)* **நெடு மேருவை** *- உயர்ந்த மேரு மலையை;* **துண்டப்பட** *- பிளவுபடுத்தி;* **தொளைத்து** *- ஊடுருவி;* ***உள் உறை தங்காது*** *- உள்ளை உறைந்து நில்லாது;* ***அண்டத்தையும்*** *- விண்வெளியையும்;* **பொதுத்து** *- துளைத்து;* ***ஏகும் என்று*** *- செல்லும் என்று;* ***இமையோர்களும்*** *- தேவர்களும்;* ***அயிர்த்தார்*** *- ஐயமுற்றார்கள்;* ***கணைக் காற்றினை*** *- (எழும்) அம்புப் புயலை;* ***கருணைக் கடல்*** *- அருட் கடலாகிய இராமன்;* ***கனகச் சண்டச் சரமழை கொண்டு*** *- பொன்மயமானதும் கொடியதுமான (தன் அம்பு) மாரியினால்;* ***அவை இடையே அற*** *- அவ்வரக்கன் அம்புகள் நடுவழியில் அழிய;* ***தடுத்தான்*** *- தடுத்துவிட்டான்.*

***9752. உடையான் முயன்றுறு காரியம் உறு தீவினை உடற்ற,***
***இடையூறு உறச் சிதைந்தாங்கெனச் சரம் சிந்தின,***
***விறலும்;***
***தொடை ஊறிய கணை மாரிகள் தொகை தீர்த்தன***
***துரந்தான் -***
***கடை ஊறு உறு கண மா மழை கால் வீழ்த்தென,***
***கடியான்.***

***உடையான்*** *- ஒரு தலைவன்;* ***முயன்று உறுகாரியம்*** *- முயற்சியினால் செய்யும் செயலை;* ***உறுதீவினை*** *- அவனுக்குற்ற தீய வினைகள்;* ***உடற்ற*** *- அழிக்க;* ***இடையூறு உற*** *- தடைகள் ஏற்பட்டு;* ***சிதைந்தாங்கு என*** *- (அச்செயல்) அழிந்தாற் போல;* ***சரம்*** *- இராவணன் அம்புகள்;* ***விறலும் சிந்தின*** *- ஆற்றல் இழந்தன (ஆனால்);* ***கடியான்*** *- கொடியவனான இராவணன்;* ***தொடைஊறிய*** *- தொடுத்தலில் சிறந்தனவும்;* ***தொகை தீர்ந்தன*** *- அளவில் மிகுதியாயினவுமான;* ***கணைமாரிகள்*** *- அம்பு மழையை;* ***கடை ஊறு உறு*** *- யுக முடிவின் பொழுது மிக்கு வருகின்ற;* ***கணமா மழை*** *- அடர்ந்த கருமுகில்கள்;* ***கால்வீழ்த்தென*** *- கீழிறங்கின என்னுமாறு;* ***துரந்தான்*** *- பொழிந்தான்.*

*ஒருவன் எடுத்த செயல் அவன் பாவத்தால் வீழ்ந்தாற்போல என்னும் உவமை நீதி சான்றதாய்த் திகழ்கிறது.*

***9753. விண் போர்த்தன; திசை போர்த்தன; மலை***
***போர்த்தன; இமையோர்***
***கண் போர்த்தன; கடல் போர்த்தன; படி போர்த்தன;***
***கலையோர்***
***எண் போர்த்தன; எரி போர்த்தன; இருள் போர்த்தன;***
***'என்னே,***
***திண் போர்த் தொழில்!' என்று, ஆனையின் உரி***
***போர்த்தவன் திகைத்தான்.***

*(இராவணன் எய்த அம்புகள்)* ***விண் போர்த்தன*** *- வானை மூடின; திசை போர்த்தன - திசைகளை மறைத்தன;* ***மலை போர்த்தன*** *- மலைகளை மூடின;* ***இமையோர் கண் போர்த்தன*** *- தேவர்கள் விழிகளையும் மறைத்தன;* ***கடல் போர்த்தன*** *- நெடுங்கடல்களையும் தெரியாது தடுத்தன;* ***படி போர்த்தன*** *- நிலத்தையும் மறைத்தன;* ***கலையோர் எண் போர்த்தன*** *- கலை ஞானம் மிக்கவர் எண்ணும் கணக்கையும் பொய்ப்பித்தன;* ***எரி போர்த்தன*** *- நெருப்பைப் போர்த்து வந்தன;* ***இருள் போர்த்தன*** *- இருளை அணைத்து வந்தன; (இதனைக் கண்டு),* ***ஆனையின் உரி போர்த்தவன்*** *- யானைத் தோலை அணிந்த சிவபெருமான்;* ***'என்னே திண் போர்த் தொழில்!'*** *- எத்துணை பெரிய போர்க்கலை இது';* ***என்று திகைத்தான்*** *- என்று மனம் மயங்கினான்.*

***9754. அல்லா நெடும் பெருந் தேவரும் மறைவாணரும்***
***அஞ்சி,***
***எல்லார்களும் கரம் கொண்டு இரு விழி பொத்தினர்,***
***இருந்தார்;***
***செல் ஆயிரம் விழுங்கால் உகும் விலங்கு ஒத்தது***
***சேனை;***
***வில்லாளனும் அது கண்டு, அவை விலக்கும்***
***தொழில் வேட்டான்.***

*(முன் குறித்த சிவபெருமான்)* ***அல்லா*** *- அல்லாத;* ***நெடும்பெருந் தேவரும்*** *- உயர்ந்த பெரிய தெய்வங்களும்;* ***மறைவாணரும்*** *- முனிவர்களும்;* ***எல்லார்களும்*** *- மற்றுள யாவரும்;* ***கரம் கொண்டு*** *- தம் கரத்தால்;* ***இருவிழி பொத்தினர்*** *- இரு கண்களையும் மூடிக்கொண்டனர்;* ***இருந்தார்*** *- செயலற்றிருந்தனர்;* ***செல் ஆயிரம் விழுங்கால்*** *- ஓராயிரம் இடி ஒன்றாக விழுந்தால்;* ***உகும்*** *- சிதறிப் போகும்;* ***விலங்கு*** *- மலைக்கு;* ***சேனை ஒத்தது*** *- (வானர) சேனை நிகராயிற்று;* ***அது கண்டு*** *-*

*இந்நிகழ்ச்சியைக் கண்டு;* **வில்லாளனும்** *- விற்கலை வல்ல இராமனும்;* **அவை** *- இராவணன் அம்புகளை;* **விலக்கும் தொழில்** *- தடுக்கும் செயலை;* **வேட்டான்** *- விரும்பி மேற்கொண்டான்.*

***9755. செந் தீ வினை மறைவாணனுக்கு ஒருவன், சிறுவிலை நாள்,***
***முந்து ஈந்தது ஒர் உணவின் பயன் எனல் ஆயின, முதல்வன்***
***வந்து ஈந்தன வடி வெங் கணை; அனையான் வகுத்து அமைத்த***
***வெந் தீவினைப் பயன் ஒத்தன, அரக்கன் சொரி விசிகம்.***

**முதல்வன்** *- அனைத்துக்கும் முதலாகிய இராமபிரான்;* **வந்து ஈந்தன** *- போர்க்களம் புகுந்து எய்தனவாகிய;* **வடிவெங்கணை** *- கூரிதாய் வடித்த கொடிய அம்புகள்;* **செந்தீவினை** *- அழல் ஓம்பும் அறவினை செய்யும்;* **மறைவாணனுக்கு** *- வேதியனுக்கு;* **சிறு விலை நாள்** *- பஞ்ச காலத்தில்;* **முந்து ஈந்தது** *- முந்திக் கொடுத்த;* **ஓர் உணவின் பயன்** *- உயர்ந்த அன்னதானப் பயன்;* **எனல் ஆயின** *- என்று சொல்லுமாறு வளர்ந்தன; (ஆனால்)* **அரக்கன் சொரி விசிகம்** *- இராவணன் எய்த அம்புகள்;* **அனையான்** *- அன்னவன்;* **வகுத்து அமைத்த** *- தேடித் தொகுத்துக் கொண்ட;* **வெந்தீ வினைப் பயன்** *- பாவங்களின் பயனை;* **ஒத்தன** *- ஒப்பனவாய் அழிந்தன.*

*தக்கவர்க்கு அளித்த தானத்தின் பயன் பெருகும் என்ற தத்துவம் கூறுகின்றார். சிறு விலை நாள் - பஞ்ச காலம்.*

*'அல்லவை தேய அறம் பெருகும்' - திருக்குறள் 96.*

*இராம இராவணப் பெரும்போர்*

***9756. நூறாயிரம் வடி வெங் கணை நொடி ஒன்றினின் விடுவான்,***
***ஆறா விறல் மறவோன்; அவை தனி நாயகன் அறுப்பான்;***
***கூறு ஆயின, கனல் சிந்துவ, குடிக்கப் புனல் குறுகி,***
***சேறு ஆயின, பொடி ஆயின, திடர் ஆயின, கடலும்.***

**ஆறா விறல் மறவோன்** - *வற்றாத வீரத்தைப் பெற்றிருக்கும் வீரனாகிய இராவணன்;* **நொடி ஒன்றினின்** - *ஒரு நொடிப் பொழுதில்;* **நூறாயிரம் வடிவெங்கணை** - *நூறாயிரம் கூரிய கொடிய அம்புகளை;* **விடுவான்** - *ஏவுவான்;* **அவை** - *அவ்வம்புகளை;* **தனி நாயகன்** - *ஒப்பற்ற தலைவனாகிய இராமன்;* **அறுப்பான்** - *துண்டு படுத்துவான்;* **கூறு ஆயின** - *(அவ்வாறு) துண்டு படுத்தப்பட்டவை;* **கனல் சிந்துவ** - *நெருப்புப் பொழிவனவாய்;* **குறுகிப் புனல் குடிக்க** - *நெருங்கி நீரை அருந்தியமையால்;* **கடலும்** - *சமுத்திரங்களும்;* **சேறு ஆயின** - *வற்றிச் சேறாயின;* **பொடி ஆயின** - *புழுதி ஆயின;* **திடர் ஆயின** - *மண்மேடாகிப் போயின.*

***9757. வில்லால் சரம் துரக்கின்றவற்கு, உடனே, மிடல் வெம் போர்***
***வல்லான், எழு, மழு, தோமரம், மணித் தண்டு, இருப்பு உலக்கை,***
***தொல் ஆர் மிடல் வளை, சக்கரம், சூலம் இவை தொடக்கத்து***
***எல்லாம் நெடுங் கரத்தால் எடுத்து எறிந்தான், செரு அறிந்தான்.***

**வில்லால்** - *தன் கை வில்லால்;* **சரம் துரக்கின்றவற்கு** - *அம்புகள் எய்கின்ற இராமனுக்கு (எதிராக);* **செரு அறிந்தான்** - *போர்க்கலை அறிந்தவனும்;* **மிடல் வெம்போர் வல்லான்** - *வலிமையும் கொடுமையும் மிக்க யுத்தத்தில் வல்லவனுமாகிய இராவணன்;* **உடனே** - *மறுகணத்திலேயே;* **எழு, மழு, தோமரம், மணித்தண்டு, இரும்பு உலக்கை** - *எழு முதல் உலக்கை ஈறான ஆயுதங்களையும்;* **தொல் ஆர் மிடல்** - *பழமை மிக்க வலிமையுள்ள;* **வளை, சக்கரம், சூலம்** - *வளை முதலாகிய படைகளையும்;* **இவை தொடக்கத்து எல்லாம்** - *இவை தொடங்கிப் பிற படைக் கருவிகள் அனைத்தையும்;* **நெடுங்கரத்தால்** - *நீண்ட கரங்களால்;* **எடுத்து எறிந்தான்** - *எடுத்து வீசினான்.*

***9758. வேல் ஆயிரம், மழு ஆயிரம், எழு ஆயிரம், விசிகக்***
***கோல் ஆயிரம், பிற ஆயிரம், ஒரு கோல் படக் குறைவ -***
***கால் ஆயின, கனல் ஆயின, உரும் ஆயின, கதிய***
***சூல் ஆயின, மழை அன்னவன் தொடை பல் வகை தொடுக்க.***

**மழை அன்னவன்** - *முகில் வண்ண மேனியனான இராமன்;* **தொடைபல் வகை தொடுக்க** - *பல்வகைப்பட்ட அம்புகளைத் (தன் வில்லில்) தொடுத்து எய்ய; (அவை),* **கால் ஆயின** - *காற்றாய் விரைந்தன;* **கனல் ஆயின** - *நெருப்பாய் மாறின;* **உரும்**

***ஆயின*** - இடியாய் ஒலித்தன; ***கதிய*** - விரைவு கொண்டன; ***சூல் ஆயின*** - புதிய அம்புகளைக் கருவீன்றன; ***ஒருகோல் பட*** - (அவ்வம்புகளில்) ஒன்று பட்ட மாத்திரத்தில்; ***வேல் ஆயிரம்*** - (இராவணன் வீசிய ஆயிரம் வேல்களும்; ***மழு ஆயிரம்*** - ஆயிரம் மழுவாயுதங்களும்; ***எழு ஆயிரம்*** - ஆயிரம் எழு என்னும் படைக்கலங்களும்; ***விசிகக் கோல் ஆயிரம்*** - ஆயிரம் அம்புகளும்; ***பிற ஆயிரம்*** - வேறு ஆயிரக்கணக்கான ஆயுதங்களும்; ***குறைவ*** - அழிந்து போயின.

***9759. ஒத்துச் செரு விளைக்கின்றது ஒர் அளவின்தலை, - உடனே***
***பத்துச் சிலை எடுத்தான், கணை தொடுத்தான், பல முகிலா***
***தொத்துப் படு நெடுந் தாரைகள் சொரிந்தாலெனத் துரந்தான் -***
***குத்துக் கொடு நெடுங் கோல் படு களிறு ஆம் எனக் கொதித்தான்.***

***ஒத்து*** (இராமபிரான்) தனக்குச் சமமாக; ***செருவிளைக்கின்றது ஓர் அளவின் தலை*** - போர் நிகழ்த்தும் ஒரு கால அளவில்; ***நெடுங்குத்துக் கோல் கொடு*** - நெடிய அங்குசம் கொண்டு; ***படு களிறு ஆம்*** - துன்பப்படும் யானையாம்; ***எனக் கொதித்தான்*** - என்று சொல்லும்படி மனக்கொதிப்பு உற்ற இராவணன்; ***உடனே*** - அப்பொழுதே; ***பத்துச் சிலை எடுத்தான்*** - பத்துக் கரங்களால் பத்து விற்களை எடுத்தவனாய்; ***கணை தொடுத்தான்*** - அம்புகளைத் தொடுத்து; ***பல முகிலா*** - எண்ணற்ற மேகங்கள்; ***தொத்துப்படு நெடுந் தாரைகள்*** - தொகுதி தொகுதியாய்ப் பொழியும் நீண்ட தாரைகள்; ***சொரிந்தாலெனத் துரந்தான்*** - சொரிவது போல் (அம்புகளை) எய்தான்.

*தொத்து - தொகுதி, கூட்டம்.*

***9760. ஈசன் விடு சர மாரியும், எரி சிந்துறு தறுகண்***
***நீசன் விடு சர மாரியும், இடை எங்கணும் நெருங்க,***
***தேசம் முதல் ஐம் பூதமும் செருக் கண்டனர் செருக்கி,***
***கூசிம் மயிர் பொடிப்பு அற்றன; அனல் ஆயின கொடிய.***

***ஈசன் விடு சரமாரியும்*** - எல்லாச் செல்வங்களுக்கும் தலைவனாகிய இராமன் எய்யும் அம்பு மழையும்; ***எரிசிந்துறு*** - நெருப்பைச் சொரிகிற; ***தறுகண்*** - கொடுமை மிக்க; ***நீசன் விடு சரமாரியும்*** - இழிந்த இராவணன் எய்யும் அம்பு மழையும்; ***இடை***

***எங்கணும் நெருங்க*** - *எல்லா இடங்களிலும் நெருக்கமாய் விழ;* ***தேசம் முதல் ஐம் பூதமும்*** - *நிலம் முதலாக அமைந்த ஐந்து பூதங்களும்;* ***செருக் கண்டனர் செருக்கி*** - *போர் கண்டு உற்சாகம் மேற்கொண்டு;* ***கூசிம் மயிர்ப் பொடிப்பு அற்றன*** - *புல்லரிப்பு உற்ற நிலை (மெல்ல) வாங்கின;* ***கொடிய அனல் ஆயின*** - *(ஏனெனில் அம்புகளின் நெருப்பால்) அவையும் கொடிய வெப்பம் பூண்டன.*

*முதலில் களித்த ஐம்பூதங்கள் போரில் வெப்பத்தால் பின்னர் தத்தளித்தன.*

*தேசம் - தேஜஸ் என்று கொண்டு நெருப்பென்பதும் உண்டு.*

***கலி விருத்தம் (வேறு)***

***9761. மந்தரக் கிரி என, மருந்து மாருதி***
***தந்த அப் பொருப்பு என, புரங்கள்தாம் என,***
***கந்தருப்பந் நகர் விசும்பில் கண்டென***
***அந்தரத்து எழுந்தது, அவ் அரக்கன் தேர்அரோ.***

*(அப்பொழுது)* ***அவ் அரக்கன் தேர்*** - *அந்த அரக்கனான இராவணனின் தேரானது;* ***மந்தரக்கிரி என*** - *மந்தர மலை என்னுமாறும்;* ***மாருதி தந்த அ மருந்துப் பொருப்பு என*** - *அனுமன் எடுத்து வந்த அந்தச் சஞ்சீவி மலை என்னுமாறும்;* ***புரங்கள் தாம் என*** - *முப்புரங்கள் தாமோ என்னுமாறும்;* ***கந்தருப்பந் நகர்*** - *கந்தர்வ நகரம்;* ***விசும்பில் கண்டென*** - *விண்ணில் காட்சி தருகிறது என்னுமாறும்;* ***அந்தரத்து எழுந்தது*** - *வானில் மேலெழுந்தது.*

*(அரோ - அசை)*

***9762. எழுந்து உயர் தேர்மிசை இலங்கை காவலன்***
***பொழிந்தன சர மழை உருவிப் போதலால்,***
***ஒழிந்ததும் ஒழிகிலது என்ன, ஒல்லெனக்***
***கழிந்தது, கவிக் குலம், இராமன் காணவே.***

***இலங்கை காவலன்*** - *இலங்கையர் கோனான இராவணன்;* ***உயர் தேர்மிசை எழுந்து*** - *உயர்ந்த தேரின் மீது வான்வழி எழுந்து;* ***பொழிந்தன சர மழை*** - *கொட்டிய அம்பு மழையானது;* ***உருவிப் போதலால்*** - *(உடலில்) பட்டு உருவிச் செல்லுதலால்;* ***ஒழிந்ததும் ஒழிகிலது என்ன*** - *அழியாததும் அழிந்தது என்னும்படியாக;* ***இராமன் காணவே*** - *இராமன் கண்டு கொண்டிருக்கும் போதே;* ***கவிக்குலம்*** - *வானரக் குலம்;* ***ஒல்லெனக் கழிந்தது*** - *விரைவாக இறந்தொழிந்தது.*

***9763. 'முழவு இடு தோளொடு முடியும் பல் தலை***
***விழ விடுவேன், இனி; விசும்பு சேமமோ?***
***மழ விடை அனைய நம் படைஞர் மாண்டனர்;***
***எழ விடு, தேரை' என்று இராமன் கூறினான்.***

*(இதனைக் கண்ட)* ***இராமன்*** *- இராமபிரான் (மாதலியிடம்);* ***'மழவிடை அனைய*** *- இளங்காளைகள் போன்ற;* ***நம்படைஞர் மாண்டனர்*** *- நம் படைவீரர் இறந்தனர்;* ***முழவு இடு தோளொடு*** *- மத்தளம் ஒத்த (இராவணன்) தோள்களோடு;* ***முடியும்*** *- மகுடமும்;* ***பல்தலை*** *- பலவாகிய தலைகளும்;* ***விழ*** *- தரையில் விழுமாறு;* ***இனி விடுவேன்*** *- இனி என் அம்புகளை ஏவுவேன்;* ***தேரை எழவிடு*** *- தேரினை வானில் எழுமாறு செய்;* ***விசும்பு சேமமோ?*** *- (அவனுக்கு) வானம் பாதுகாப்பாகுமோ? (இல்லை);* ***என்று கூறினான்*** *- என மொழிந்தான்.*

***9764. 'அந்து செய்குவென்' என அறிந்த மாதலி***
***உந்தினன், தேர் எனும் ஊழிக் காற்றினை;***
***இந்து மண்டிலத்தின்மேல் இரவி மண்டிலம்***
***வந்தென, வந்தது, அம் மானத் தேர்அரோ.***

***அறிந்த மாதலி*** *- இராமபிரான் பெருமையை அறிந்துள்ள மாதலி;* ***'அந்து செய்குவென்*** *- 'யான் அவ்வாறே செய்வேன்';* ***என*** *- என்று;* ***தேர் எனும் ஊழிக்காற்றினை*** *- தேர் என்னும் பிரளய காலக் காற்றை;* ***உந்தினன்*** *- (மேலே) இயக்கினான்;* ***அம் மானத் தேர்*** *- அந்தப் பெரிய தேரும்;* ***இந்து மண்டிலத்தின் மேல்*** *- சந்திர மண்டலத்தின் மீது;* ***இரவி மண்டிலம் வந்தென*** *- சூரிய மண்டலம் வருவது போல்;* ***வந்தது*** *- (இராவணன் தேர் இருக்கும் இடத்துக்கு) வந்து சேர்ந்தது.*

*(அரோ - அசை) அந்து - அப்படி (தெலுங்குச் சொல்)*

***9765. இரிந்தன மழைக் குலம், இழுகித் திக்கு எலாம்;***
***உரிந்தன உடுக் குலம், உதிர்ந்து சிந்தின;***
***நெரிந்தன நெடு வரைக் குடுமி; நேர் முறை***
***திரிந்தன சாரிகை, தேரும் தேருமே.***

***தேரும் தேரும்*** *- இராம இராவணாதியர் தேர்கள் இரண்டும்;* ***சாரிகை நேர்முறை திரிந்தன*** *- (வானில்) நேரான முறைகளில் சாரி திரிந்தன; (அதனால்)* ***மழைக்குலம்*** *- மேகக் கூட்டங்கள்;* ***திக்கு எலாம்*** *- திசைகளில் எல்லாம்;* ***இழுகி*** *- தளர்ந்து;* ***இரிந்தன*** *-*

*கலைந்தன;* ***உடுக்குலம்*** *- விண்மீன் கூட்டங்கள்; உரிந்தன - இடம் பெயர்ந்து;* ***உதிர்ந்து சிந்தின*** *- பொடிப்பொடியாய்ச் சிதைந்தன;* ***நெடுவரைக் குடுமி*** *- உயர்மலைச் சிகரங்கள்;* ***நெரிந்தன*** *- நொறுங்கிப் போயின.*

***9766. வலம் வரும்; இடம் வரும்; மறுகி வானொடு***
***நிலம் வரும்; இடம் வலம் நிமிரும்; வேலையும்,***
***அலம்வரு குல வரை அனைத்தும், அண்டமும்,***
***சலம் வரும், குயவன திகிரித் தன்மைபோல்.***

*(அத்தேர்கள் இரண்டும்)* ***வலம் வரும்*** *- ஒன்றையொன்று வலமாகச் சுற்றும்;* ***இடம் வரும்*** *- இடமாகச் சுற்றி வரும்;* ***மறுகி*** *- பல முறையும் திரிந்து;* ***வானொடு நிலம் வரும்*** *- வானத்தையும் நிலத்தையும் தொட்டு வரும்;* ***இடம் வலம் நிமிரும்*** *- (மற்றொரு சமயம்) இடப்புறம் வலப்புறமாய் ஓங்கி வரும்;* ***வேலையும்*** *- கடல்களும்;* ***குலவரை அனைத்தும்*** *- மலைக் குலங்களும்;* ***அண்டமும்*** *- இந்த அண்டவெளியும்;* ***குயவன திகிரி தன்மை போல்*** *- சுழலும் இயல்பினதாகிய குயவனது சக்கரத் தன்மை போல;* ***அலம் வரும்*** *- சுழன்று நொந்து;* ***சலம் வரும்*** *- நடுக்கமுறும்.*

***9767. 'எழும் புகழ் இராமன் தேர்; அரக்கன் தேர் இது' என்று***
***உழுந்து உருள் பொழுதின் எவ் உலகும் சேர்வன,***
***தழும்பிய தேவரும் தெரிவு தந்திலர்,***
***பிழம்பின திரிவன என்னும் பெற்றியார்.***

***உழுந்து உருள் பொழுதின்*** *- உழுந்து உருளும் அச்சிறு பொழுதுக்குள்;* ***எவ் உலகும் சேர்வன*** *- (அவ்விரு தேரும்) எல்லா உலகையும் சுற்றி வரும் தன்மையன; (ஆதலால்),* ***இது எழும்புகழ் இராமன் தேர்; அரக்கன் தேர்*** *- இதுதான் புகழ் மிக்க இராமனின் தேர்இதுதான் அரக்கனின் தேர்;* ***என்று*** *- என்று;* ***தழும்பிய தேவரும்*** *- பழக்கமுள்ள தேவர்களும்;* ***தெரிவு தந்திலர்*** *- கண்டறிந்து சொல்ல இயலாதவராயினர்;* ***பிழம்பின*** *- ஒளிவடிவங்கள்;* ***திரிவன*** *- சுழல்கின்றன;* ***என்னும் பெற்றியார்*** *- என்று கூறும் தன்மையினராகவே இருந்தனர்.*

*தழும்புதல் - பழகியிருத்தல்*

***9768. உக்கிலா உடுக்களும், உருள்கள் தாக்கலின்,***
***நெக்கிலா மலைகளும், நெருப்புச் சிந்தலின்,***

***வக்கிலாத் திசைகளும், உதிரம் வாய் வழி***

***சுக்கிலா உயிர்களும், இல்லை, காண்பன.*** ***உருள்கள் தாக்கலின்*** - *சக்கரங்கள் தாக்குதலால்;* ***உக்கிலா உடுக்களும்*** - *உதிராத விண்மீன்களும்;* ***நெருப்புச் சிந்தலின்*** - *(ஒன்றோடொன்று உராய்ந்து தேர்கள்) நெருப்புச் சிதறுதலால்;* ***நெக்கிலாமலைகளும்*** - *உருகாத மலைகளும்;* ***வக்கு இலாத் திசைகளும்*** - *பிளந்து போகாத திசைகளும்;* ***உதிரம் வாய்வழி*** - *இரத்தம் வாயின் வழியே;* ***சுக்கிலா உயிர்களும்*** - *கக்காத உயிரினங்களும்;* ***காண்பன இல்லை*** - *காணக் கூடாதன ஆயின.*

*வக்கு - பிளக்கை*

***9769. 'இந்திரன் உலகத்தார்' என்பர்; 'ஏன்றவர்,***
***சந்திரன் உலகத்தார்' என்பர்; 'தாமரை***
***அந்தணன் உலகத்தார்' என்பர்; 'அல்லரால்,***
***மந்தர மலையினார்' என்பர் - வானவர்.***

***வானவர்*** - *தேவர்கள் (அத் தேரிலிருந்து போரிடுவாரை);* ***'இந்திரன் உலகத்தார் என்பர்*** - *இந்திர லோகத்தில் உள்ளார் என்பார்கள்; (மற்றொரு சமயம்),* ***ஏன்றவர்*** - *போரிடுவார்;* ***சந்திரன் உலகத்தார் என்பர்*** - *சந்திரமண்டலத்தில் உள்ளார் என்பார்கள்; (இன்னொரு சமயம்),* ***'தாமரை அந்தணன் உலகத்தார் என்பர்*** - *தாமரையில் வசிக்கும் பிரமதேவன் உலகில் உள்ளார் என்பார்கள்;* ***அல்லரால்*** - *இல்லையில்லை;* ***மந்தர மலையினார் என்பர்*** - *மந்தர மலையில் உள்ளார் என்பார்கள்.*

***9770. 'பாற்கடல் நடுவணார்' என்பர்; 'பல் வகை***
***மாக் கடலினுக்கும் அவ் வரம்பினார்' என்பர்;***
***'மேல் கடலார்' என்பர்; 'கிழக்கு உளார்' என்பர்;***
***'ஆர்க்கடை உரும்' என்பர் - அறியும் வானவர்.***

***அறியும் வானவர்*** - *தொலைவில் நடப்பனவும் அறியவல்லரான தேவர்கள் (இராமனும் இராவணனும் இப்போது);* ***பாற் கடல் நடுவணார் என்பர்*** - *திருப்பாற்கடலின் நடுவிலுள்ளார் என்பார்கள்;* ***'பல்வகை மாக்கடலினுக்கும் அவ்வரம்பினார்' என்பர்*** - *மேற்குக் கடலில் இருப்பதாகக் கூறுவர்;* ***'கிழக்கு உளார்' என்பர்*** - *பலவகையான பெருங்கடலுக்கும் அப்பாற்பட்ட எல்லையில் உள்ளார் என்பர்;* ***மேல்கடலார் என்பர்*** - *இல்லையில்லை கீழைக்கடலில் உள்ளார் என்பர்;* ***'ஆர்க்கடை உரும்' என்பர்*** - *தேர்ச்சக்கரத்தின் ஆரக்கால்களில் இடி குடி இருக்கிறது என்றும் கூறுவர்.*

***9771. 'மீண்டனவோ?' என்பர்; 'விசும்பு விண்டு உகக்***
***கீண்டனவோ?' என்பர்; 'கீழவோ?' என்பர்;***
***'பூண்டன புரவியோ? புதிய காற்று!' என்பர்;-***
***'மாண்டன உலகம்' என்று, உரைக்கும் வாயினார்.***

***'மீண்டனவோ' என்பர்*** - *(அத்தேர்கள் இரண்டும்) மீண்டும் பூமிக்கு வந்தனவோ என்பார்கள்;* ***'விசும்பு விண்டு உக*** - *வானம் பிளந்து விழுமாறு;* ***கீண்டனவோ என்பர்*** - *(இவை) கிழித்து விட்டனவோ என்பார்கள்;* ***'கீழவோ' என்பர்*** - *பாதாளம் புக்கனவோ என்பார்கள்;* ***'பூண்டன புரவியோ*** - *தேரில் பூட்டியவை குதிரைகள் தானா? (அல்லது);* ***புதிய காற்று என்பர்*** - *புதுமை வாய்ந்த காற்றேயாகும் என்பார்கள்;* ***'உலகம் மாண்டன' என்று*** - *இனி உலகம் அழிந்தது என்று;* ***உரைக்கும் வாயினார்*** - *(இவ்வாறெல்லாம்) பேசுகின்ற வாயினை உடையார்களானார் தேவர்கள்.*

***9772. ஏழுடைக் கடலினும், தீவு ஓர் ஏழினும்,***
***ஏழுடை மலையினும், உலகு ஓர் ஏழினும்***
***சூழுடை அண்டத்தின் சுவர்கள் எல்லையா,***
***ஊழியில் காற்று எனத் திரிந்த, ஓவில.***

*(அக் குதிரைகள்)* ***ஏழுடைக் கடலினும்*** - *ஏழு கடல்களிலும்;* ***தீவு ஓர் ஏழினும்*** - *ஏழு தீவுகளிலும்;* ***ஏழுடை மலையினும்*** - *ஏழு மலைகளிலும்;* ***உலகு ஓர் ஏழினும்*** - *ஏழு உலகங்களிலும்;* ***சூழுடை அண்டத்தின் சுவர்கள்*** - *சூழ்ந்திருக்கும் அண்டத்தின் சுவர்களை;* ***எல்லையா*** - *எல்லையாகக் கொண்டு;* ***ஊழியில் காற்றெனத் திரிந்த*** - *பிரளய காலத்துப் புயலாய்ச் சுற்றித் திரிந்தன;* ***ஓவில*** - *ஓய்வற்றவை ஆயின.*

*இராமன் தடுத்தலன்றிப் போர் செய்யாமை*

***9773. உடைக் கடல் ஏழினும், உலகம் ஏழினும்,***
***இடைப் படு தீவினும், மலை ஓர் ஏழினும்,***
***அடைக்கலப் பொருள் என அரக்கன் வீசிய***
***படைக்கலம், மழை படு துளியின் பான்மைய.***

***உடைக்கடம் ஏழினும்*** - *ஆடையாக பூமியைச் சுற்றிய ஏழு கடல்கள் மீதும்;* ***உலகம் ஏழினும்*** - *ஏழு உலகங்கள் மீதும்;* ***இடைப்படு தீவினும்*** - *அவற்றிடையே உள்ள தீவுகள் மீதும்;* ***மலை ஓர் ஏழினும்*** - *ஏழு மலைகள் மீதிலும்;* ***அடைக்கலப் பொருள் என*** - *பாதுகாப்புப் பொருளாக (இராவணன்) வைத்திருந்தவை என்னும்படி;* ***அரக்கன் வீசிய படைக்கலம்*** - *அரக்கனாகிய அவன் வீசிய ஆயுதங்கள்;* ***மழைபடு துளியின் பான்மைய*** - *மழைத்துளிகளென (விழுந்தன).*

***9774. ஒறுத்து உலகு அனைத்தையும் உழலும், ஓட்டிடை***
***இறுத்தில; இராவணன் எறிந்த எய்தன***
***அறுத்ததும் தடுத்ததும் அன்றி, ஆரியன்***
***செறுத்து ஒரு தொழிலிடைச் செய்தது இல்லையால்.***

***இராவணன் எறிந்த எய்தன*** *- இராவணன் வீசியனவும் ஏவியனவுமான ஆயுதங்கள்;* ***இறுத்தில*** *- எங்கும் தங்காதனவாய்;* ***ஓட்டிடை*** *- ஓடும் இடங்களில் எல்லாம்;* ***உலகு அனைத்தையும்*** *- அனைத்து உலகங்களையும்;* ***ஒறுத்து உழலும்*** *- அழித்துத் திரியும்;* ***ஆரியன்*** *- மேலோனாகிய இராமன்;* ***அறுத்ததும் தடுத்ததும் அன்றி*** *- அவ்வாயுதங்களை முறித்ததும் தடைசெய்ததும் அல்லாது;* ***செறுத்து*** *- சினமுற்று;* ***ஒருதொழில்*** *- எச்செயலையும்;* ***இடைச் செய்தது இல்லை*** *- போர் நடுவில் செய்யவே இல்லை (ஆல் - ஆசை).*

*இராமன் தன் படைக்கலங்களை இராவணன் மீது எய்யாதிருந்தான். (ஆல் - அசை).*

***9775. விலங்கலும் வேலையும், மேலும் கீழரும்,***
***அலங்கு ஒளி திரிதரும் உலகு அனைத்தையும்,***
***கலங்குறத் திரிந்தது ஓர் ஊழிக் காலக் காற்று,***
***இலங்கையை எய்தின, இமைப்பின் வந்துஅரோ.***

***விலங்கலும்*** *- மலைகளையும்;* ***வேலையும்*** *- கடல்களையும்;* ***மேலும் கீழரும்*** *- மேல், கீழ் உலகங்களையும்;* ***அலங்கு ஒளி*** *- சூரிய ஒளி;* ***திரிதரும் உலகு அனைத்தையும்*** *- பாயும் எல்லா உலகங்களையும்;* ***கலங்குறத் திரிந்தது*** *- கலங்கும்படி செய்து திரிந்த;* ***ஓர் ஊழிக்காலக் காற்று*** *- பிரளய காலப் புயல்;* ***இமைப்பின் வந்து*** *- நொடிப்போதில் வந்து;* ***இலங்கையை எய்தின*** *- இலங்கையை அடைந்தது. (அரோ - அசை)*

*காற்று குதிரைகளைக் குறித்தது*

***9776. உய்த்து உலகு அனைத்தினும் உழன்ற சாரிகை***
***மொய்த்தது, கடலிடை மணலின் மும்மையால்;***
***வித்தகர் கடவிய விசயத் தேர்ப் பரி,***
***எய்த்தில வியர்த்தில, இரண்டு பாலவும்.***

***வித்தகர்*** *- திறன் மிக்கவராகிய பாகர்கள்;* ***கடவிய*** *- செலுத்திய;* ***விசயத் தேர்ப்பரி*** *- வெற்றி (பலகண்ட) இராம இராவணர் தேரின் குதிரைகள்;* ***உய்த்து*** *- செலுத்தப்பட்டு;* ***கடலிடை மணலின் மும்மையால்*** *- கடற்கரைகளிலுள்ள மணல் துகள்களின்*

மும்மடங்காக உள்ள; **உலகு அனைத்திலும்** - எல்லா உலகங்களிலும்; **உழன்ற சாரிகை மொய்த்தது** - திரிந்து சாரிகைகள் செய்து சேர்ந்தன (எனினும்); **இரண்டு பாலவும்** - இரண்டு பக்கத்துக் குதிரைகளும்; **எய்த்தில** - இளைப்படையவில்லை; **வியர்த்தில** - வியர்வை சிந்தவுமில்லை.

### இராமன் தேர்க்கொடியை இராவணன் அறுத்தல்

**9777. இந்திரன் தேரின்மேல் உயர்ந்த, ஏந்து எழில்**
**உந்த அரும் பெரு வலி உருமின் ஏற்றினை,**
**சந்திரன் அனையது ஓர் சரத்தினால், தரைச்**
**சிந்தினன், இராவணன், எரியும் சிந்தையான்.**

**எரியும் சிந்தையான்** - வெந்து போன நெஞ்சினனாகிய; **இராவணன்** - இராவணன்; **இந்திரன் தேரின் மேல் உயர்ந்த** - (இராமன் ஏறி வந்த) இந்திரனது தேரின் மீது உயரே பறந்த; **ஏந்து எழில்** - அழகு மிக்கதும்; **உந்து அரும் பெருவலி** - தள்ளுதற்கரிய பேராற்றலுடையதுமான; **உருமின் ஏற்றினை** - இடியேறாகிய (கொடியை); **சந்திரன் அனையது ஓர் சரத்தினால்** - பிறைவடிவமுடைய ஒப்பற்ற அம்பினால்; **தரைச் சிந்தினன்** - தரையில் விழும்படி செய்தான்.

**9778. சாய்ந்த வல் உருமு போய், அரவத் தாழ் கடல்**
**பாய்ந்த வெங் கனல் என முழங்கிப் பாய்தலும்,**
**காய்ந்த பேர் இரும்பின் வன் கட்டி காலுறத்**
**தோய்ந்த நீர் ஆம் எனச் சுருங்கிற்று, ஆழியே.**

**சாய்ந்த வல் உருமு போய்** - கீழே வீழ்ந்த வன்மை வாய்ந்த இடியேறு சென்று; **அரவத் தாழ் கடல்** - ஓசை பெற்றுயர் ஆழ்கடலில்; **பாய்ந்த வெங்கனல் என** - விழுந்த கொடு நெருப்பாக; **முழங்கிப் பாய்தலும்** - பேரொலியுடன் பாய்ந்ததும்; **காய்ந்த** - பழுக்கக் காய்ந்த; **பேர் இரும்பின் வன் கட்டி** - பெரிய வலிய இரும்புக் கட்டியானது; **காலுற** - பொருந்த; **தோய்ந்த நீர் ஆம் என** - தோய்க்கப்பட்ட தண்ணீர் போல; **ஆழி சுருங்கிற்று** - கடல் நீர் வற்றிப் போயிற்று.

### இராவணன் இராமன் தேர் புரவி மாதலிமீது அம்பு எய்தல்

**9779. எழுத்து எனச் சிதைவு இலா இராமன் தேர்ப் பரிக்**

*குழுக்களைக் கூர்ங் கணைக் குப்பை ஆக்கி, நேர்*
*வழுத்த அரு மாதலி வயிர மார்பிடை*
*அழுத்தினன் கொடுஞ் சரம், ஆறொடு ஆறுஅரோ.*

*(அப்போது இராவணன்)* ***எழுத்து எனச் சிதைவிலா*** *- (சான்றோர் கவி) எழுத்துப் போல் அழிவில்லாததாகிய;* ***இராமன் தேர்*** *- இராமனது தேரின்;* ***பரிக்குழுக்களை*** *- குதிரைகளை;* ***கூர்ங்கணை*** *- கூரிய கணைகளால்;* ***குப்பை ஆக்கி*** *- நிரம்பும் படி செய்து;* ***நேர்*** *- நேராக;* ***வழுத்த அரு மாதலி*** *- வணங்குதற்கு அரிய பெருமைமிக்க மாதலியின்;* ***வயிர மார்பிடை*** *- வைரம் பாய்ந்த (உறுதியான) மார்பின் மீது ,* ***ஆறொடு ஆறு*** *- பன்னிரண்டு;* ***கொடுஞ்சரம்*** *- கொடிய அம்புகளை;* ***அழுத்தினன்*** *- பாய்ச்சினான்.* ***அரோ*** *- அசை.*

*இராமன் வருத்தம்*

*9780. நீல் நிற நிருதர்கோன் எய்த, நீதியின்*
*சால்புடை மாதலி மார்பில் தைத்தன*
*கோலுனும் இலக்குவன் கோல மார்பின் வீழ்*
*வேலினும் வெம்மையே விளைத்த, வீரற்கு.**

***நீல் நிற நிருதர் கோன்*** *- கருநிறம் கொண்ட அரக்கர் வேந்தன்;* ***எய்த*** *- விடுத்ததும்;* ***இலக்குவன் கோல மார்பின்*** *- இலக்குவனின் அழகிய மார்பில்;* ***வீழ் வேலினும்*** *- பாய்ந்ததுமான வேலைக் காட்டிலும்;* ***நீதியின் சால்புடை*** *- நீதியின் நிறைவுடைய;* ***மாதலி மார்பில் தைத்தன*** *- மாதலியின் மார்பில் பட்டனவாகிய;* ***கோல் இனும்*** *- அம்பு இன்னும்;* ***வீரற்கு*** *- இராமனுக்கு;* ***வெம்மையே விளைத்த*** *- வருத்தத்தையே விளைவித்தது.*

*இராமனை மறைத்த இராவணன் அம்புகள்*

*9781. மண்டில வரி சிலை வானவில்லொடும்*
*துண்ட வெண் பிறை எனத் தோன்ற, தூவிய*
*உண்டை வெங் கடுங் கணை ஒருங்கு மூடலால்,*
*கண்டிலர் இராமனை, இமைப்பு இல் கண்ணினார்.*

***இமைப்பு இல் கண்ணினார்*** *- இமையா நாட்டம் பெற்ற தேவர்கள்;* ***மண்டில வரிசிலை*** *- மண்டிலமாக வளைத்துக் கட்டப்பட்ட (இராவணன்) வில்லிலிருந்து;* ***வான***

***வில்லொடு*** - *இந்திர வில்போல அமையுமாறும்;* ***துண்ட வெண்பிறை எனத் தோன்ற*** *- பிளவுபட்ட பிறைக்கீற்றாகத் தோன்றுமாறும் செய்து;* ***தூவிய*** *- ஏவி விடப்பட்ட;* ***உண்டை வெங்கடுங்கணை*** *- தொகுதி தொகுதியான கொடிய கடிய அம்புகள்;* ***ஒருங்கு மூடலால்*** *- முழுமையான (இராமனை) மறைத்தமையால்;* ***இராமனைக் கண்டிலர்*** *- இராமனைக் காண இயலாதவரானார்.*

***9782. 'தோற்றனனே இனி' என்னும் தோற்றத்தால்***
***ஆற்றல் சால் அமரரும் அச்சம் எய்தினார்;***
***வேற்றவர் ஆர்த்தனர்; மேலும் கீழரும்***
***காற்று இயக்கு அற்றது; கலங்கிற்று அண்டமே.***

***(இராமனைக் காணாத) ஆற்றல் சால் அமரரும்*** *- வலிமை சான்ற தேவர்களும்;* ***'இனி*** *- இப்பொழுது;* ***தோற்றனனே'*** *- தோல்வியுற்று விட்டானே;* ***என்னும் தோற்றத்தால்*** *- என்னும் பிரமையால்;* ***அச்சம் எய்தினார்*** *- பயம் கொண்டனர்;* ***வேற்றவர்*** *- பகைவர்;* ***ஆர்த்தனர்*** *- (மகிழ்ச்சி) ஆரவாரம் செய்தனர்;* ***மேலும் கீழரும்*** *- மேலுலகிலும் கீழுலகிலும்;* ***காற்று இயக்கு அற்றது*** *- காற்றின் இயக்கமும் இல்லாதாயிற்று;* ***அண்டம் கலங்கிற்று*** *- அண்டம் முழுமையும் துணுக்குற்றது.*

***9783. அங்கியும் தன் ஒளி அடங்கிற்று; ஆர்கலி***
***பொங்கில திமிர்ந்தன; விசும்பில் போக்கு இல,***
***வெங் கதிர் தண்கதிர், விலங்கி மீண்டன;***
***மங்குலின் நெடும் புனல் மழை வறந்ததால்.***

***அங்கியும்*** *- நெருப்பும்;* ***தன்ஒளி அடங்கிற்று*** *- தன் இயல்பான ஒளி குன்றிற்று;* ***ஆர்கலி*** *- கடலும்;* ***பொங்கில*** *- பொங்கி எழவில்லை;* ***திமிர்ந்தன*** *- அசைவற்றுக் கிடந்தன;* ***விசும்பில்*** *- வானில்;* ***வெங்கதிர் தண்கதிர்*** *- ஞாயிறும் திங்களும்;* ***போக்குஇல*** *- இயங்கா தொழிந்தன;* ***விலங்கி மீண்டன*** *- வழி விலகித் திரும்பின;* ***மங்குலின்*** *- மேகங்களின்;* ***நெடும் புனல் மழை*** *- நெடிதாய்ப் பெய்யும் மழை நீர்;* ***வறந்தது*** *- வறண்டு போயிற்று. (ஆல் - அசை)*

***9784. திசை நிலைக் கட கரி செருக்குச் சிந்தின;***
***அசைவு இல வேலைகள், ஆர்க்க அஞ்சின;***
***விசை கொடு விசாகத்தை நெருக்கி ஏறினன்***
***குசன்; நெடு மேருவும் குலுக்கம் உற்றதே.***

**குசன்** - அங்காரகன்; **விசைகொடு** - வேகமாய்; **விசாகத்தை நெருக்கி ஏறினன்** - விசாக நட்சத்திரத்தில் நெருக்கிப் புகுந்தான்; (என்று), **திசை நிலை கடகரி** - திசைகளில் நிற்கும் மதம் பொழி திக்கு யானைகள் (எட்டும்) **செருக்குச் சிந்தின** - தம் மதச் செருக்கு அற்றுப் போயின; **வேலைகள்அசைவு இல** - கடல்கள் இயக்கமற்றன; **ஆர்க்க அஞ்சின** - ஒலிக்கப் பயந்தன; **நெடு மேருவும்** - உயர்ந்த மேரு மலையும்; **குலுக்கம் உற்றது** - நடுக்கம் கொண்டது.

போர்க்கோளாகிய அங்காரகன் இட்சுவாகு வமிசத்தாரின் பிறப்பு நட்சத்திரமான விசாகத்தை நெருங்கினன் என்பது கெட்ட அறிகுறியாகும்.

**9785. வானரத் தலைவனும், இளைய மைந்தனும்,**
**ஏனை, 'அத் தலைவனைக் காண்கிலேம்' எனக்**
**கானகக் கரி எனக் கலங்கினார்; கடல்**
**மீன் எனக் கலங்கினார், வீரர் வேறு உளார்.**

**வானரத் தலைவனும்** - குரக்கரசனான சுக்கிரீவனும்; **இளைய மைந்தனும்** - தம்பி இலக்குவனும்; **ஏனை** - பிறரும்; **'அத் தலைவனைக் காண்கிலேம்' என** - அந்தத் தலைவனாம் இராமனைக் காணப் பெற்றிலேம் என்று; **கானகக் கரி என** - (தலைமையானையைக் காணாத) காட்டு யானைகள் போல; **கலங்கினார்** - வருந்தினார்கள்; **வீரர் வேறு உளார்** - பிற வீரர்கள் எல்லாம்; **கடல் மீனெனக் கலங்கினார்** - (சேதுபந்தன காலத்து) கடல் மீன்கள் போல் நொந்தனர்.

## இராவணன் தேர்க்கொடியை இராமன் வீழ்த்தல்

**9786. எய்தன சரம் எலாம் இமைப்பின் முந்துறக்**
**கொய்தனன் அகற்றி, வெங் கோலின் கோவையால்**
**நொய்து என அரக்கனை நெருங்க நொந்தன**
**செய்தனன், இராகவன்; அமரர் தேறினார்.**

**இராகவன்** -; **எய்தன சரம் எலாம்** - (இராவணனால்) எய்யப்பட்ட அம்புகளையெல்லாம்; **இமைப்பின் முந்துற** - இமைப்பொழுதின் முன்; **அகற்றிக் கொய்தனன்** - அழித்து ஒழித்தனன்; **நொய்தென** - (பின்னர்) விரைவாக; **அரக்கனை நெருங்க** - இராவணனை நெருங்குமாறு சென்று; **வெங்கோலின் கோவையால்** - கொடிய அம்புத் தொகுதியால்; **நொந்தன செய்தனன்** - அவன் வருந்தும்படி செய்தான்; **அமரர் தேறினார்** - தேவர்கள் ஆறுதல் கொண்டனர்.

*கலிவிருத்தம் (வேறு)*

***9787. தூணுடை நிரை புரை கரம் அவைதொறும் அக்***
***கோணுடை மலை நிகர் சிலை இடை குறைய,***
***சேணுடை நிகர் கணை சிதறினன் - உணர்வொடு***
***ஊணுடை உயிர்தொறும் உறைவுறும் ஒருவன்.***

***உணர்வொடு*** *- நல்லுணர்வோடு;* ***ஊணுடை*** *- தன்னை உணவாகக் கொள்ளும்;* ***உயிர் தொறும் உறைவுறும் ஒருவன்*** *- உயிர்களிடம் விரும்பி வசிக்கும் இறைவனாகிய இராமன்;* ***தூணுடை நிரை புரை*** *- தூண்களின் வரிசையை ஒத்த;* ***கரம் அவை தொறும்*** *- பத்துக் கைகளிலும் உள்ள;* ***அ*** *- அந்த;* ***கோணுடை மலை நிகர்*** *- வளைந்த மலைகள் போன்ற;* ***சிலை இடை குறைய*** *- விற்கள் துண்டு படும்படி;* ***சேணுடை*** *- தொலை தூரம் செல்வனாகிய;* ***நிகர் கணை*** *- தமக்குத் தாமே நிகராகிய அம்புகளை;* ***சிதறினன்*** *- தூவினான்.*

*'உண்ணும் சோறு' என்று எம்பெருமானை நம்மாழ்வார் உரைத்தாற்போல இறைவன் ஞானிகள் அனுபவித்துண்ணும் அன்னமாகிறான். 'நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்' (தேவாரம் 1204:9) என்ற வரிகள் ஒப்பு நோக்கற்குரியன.*

*நிகர் கணை - ஒளி கொண்ட அம்பு என்பாரும் உளர்.*

***9788. கயில் விரிவு அற வரு கவசமும் உருவிப்***
***பயில் விரி குருதிகள் பருகிட, வெயிலொடு***
***அயில் விரி சுடு கணை கடவினன் - அறிவின்***
***துயில்வுழி உணர்தரு சுடர் ஒளி ஒருவன்.***

***துயில்வுழி*** *- யோக நித்திரையின் கண்;* ***அறிவின் உணர் தரு*** *- தன் மூதுணர் இயல்பால் அனைத்தையும் உணரவல்ல;* ***சுடர் ஒளி ஒருவன்*** *- பேரொளிப் பிழம்பான ஒப்பற்ற இறைவன்; (இராமபிரான்),* ***கயில் விரிவு அற வரு*** *- மூட்டுவாய் விரிதலில்லாத;* ***கவசமும் உருவி*** *- (இராவணன்) கவசத்தையும் ஊடுருவிக் கொண்டு;* ***பயில் விரி குருதிகள் பருகிட*** *- (உடலில்) விரவியுள்ள இரத்தத்தைப் பருகுமாறு;* ***வெயிலொடு*** *- ஒளியோடு; அயில் - கூர்மையும்;* ***விரி சுடு கணை*** *- பரவிய வெப்பம் மிக்க அம்பினை;* ***கடவினன்*** *- (இராவணன் மீது) ஏவினான்.*

*கயில் - மூட்டுவாய்; அறிவின் துயில் - திருமாலின் அறிதுயில் இங்குக் கூறப்பட்டது.*

***9789. திசை உறு துகிலது, செறி மழை சிதறும்***
***விசை உறு முகிழது, விரிதரு சிரனோடு***
***இசை உறு கருவியின் இனிது உறு கொடியைத்***
***தசை உறு கணைகொடு தரை உற விடலும்,***

***திசை உறு*** - *திக்குகளில் பொருந்திய;* ***துகிலது*** - *ஆடையுடையதும்;* ***செறி மழை சிதறும்*** - *அடை மழை பொழிவதும்;* ***விசை உறு முகிழது*** - *வேகம் மிக்க அரும்பு போன்ற உறுப்பினை உடையதும்;* ***விரிதரு சிரனோடு*** - *விரிந்த தலையுடன் கூடிய;* ***இசை உறு கருவியின்*** - *இசைக் கருவியான வீணையினை;* ***இனிது உறு கொடியை*** - *அழகுறக் கொண்டிருப்பதுமான (இராவணன்) கொடியை;* ***தசை உறு கணை கொடு*** - *புலால் பொருந்திய தன் அம்பினால்;* ***தரை உற விடலும்*** - *(இராமன்) தரையில் அறுத்து வீழ்த்தியதும்.*

***9790. படை உக, இமையவர் பருவரல் கெட, வந்து***
***இடை உறு திசை திசை இழுகுற, இறைவன்***
***அடையுறு கொடிமிசை அணுகினன் - அளவு இல்***
***கடை உக முடிவு எழு கடல் புரை கலுழன்.***

***கடையுக*** - *கடையுகத்தின்;* ***முடிவு எழு*** - *முடிவில் பொங்கியெழும்;* ***அளவில் கடல்புரை கலுழன்*** - *மிகப்பெரிய கடல் போலும் பெருந்தோற்றமுள்ள கருடன்;* ***படை உக*** - *(இராவணனுடைய) விற்படை குறைபட்டபோது;* ***இமையவர் பருவரல் கெட*** - *தேவர் துயர் நீங்கும்படி;* ***வந்து*** - *பூமிக்கு வந்து; இடை உறு - இடம் பொருந்திய;* ***திசை திசை இழுகுற*** - *பல திசைகளிலும் (சிறகு) வீசி;* ***இறைவன்*** - *இராமபிரானுடைய;* ***அடையுறு*** - *(தேரில்) அமைந்துள்ள;* ***கொடிமிசை*** - *கொடிமீது; அணுகினன் - சார்ந்தனன்.*

***9791. பண்ணவன் உயர் கொடி என ஒரு பரவைக்***
***கண் அகன் உலகினை வலம் வரு கலுழன்***
***நண்ணலும், இமையவர், 'நமது உறு கருமம்***
***எண்ணலம், முனிவினின் இவறினன்' எனவே.***

***ஒரு பரவைக் கண்ணகன் உலகினை*** - *ஒப்பற்ற கடல் சூழ்ந்த இடமகன்ற உலகினை;* ***வலம் வரு கலுழன்*** - *வலமாகச் சுற்றி வரும் கருடன்;* ***பண்ணவன் உயர் கொடி என*** - *இராமபிரானுடைய சிறந்த கொடியாகும் என்று;* ***நண்ணலும்*** - *வந்து பொருந்துதலும்;* ***இமையவர்*** - *தேவர்கள்;* ***'நமது உறு கருமம் எண்ணலம்'*** - *இனி நம் செயல்களை மட்டுமே கருதமாட்டோம்;* ***முனிவினன்*** - *சினம் மிக்க கருடன்;* ***இவறினன்*** - *(பெருமான் தேர் மீது) ஏறினன்;* ***என*** - *என்று கூறுதலும்.*

*பரவை - காரணப் பெயர், பரந்திருப்பது.*

***9792. ஆயது ஓர் அமைதியின், அறிவினின் அறிவான்***
***நாயகன் ஒருவனை நலிகிலது உணர்வான்,***
***ஏயினன், இருள் உறு தாமதம் எனும் அத்***
***தீவினை தரு படை - தெறு தொழில் மறவோன்.***

**ஆயது ஓர் அமைதியின்** - *அப்படிப்பட்ட சூழலில்;* **தெறுதொழில் மறவோன்** - *அழிவுச் செயல் வல்ல கொடியவனாகிய இராவணன்;* **அறிவினின் அறிவான்நாயகன் ஒருவனை** - *உணரத்தக்கது உணரும் தலைவனான ஒப்பற்ற இராமனை;* **நலிகிலது உணர்வான்** - *(தன் அம்புகள்) துன்பம் செய்யாதென அறிந்தவனாகி;* **இருள் உறு** - *இருட்டை விளைவிக்கின்ற;* **தாமதம் எனும்** - *தாமதாத்திரம் எனப்பெயர் பெற்ற;* **அத்தீவினை தருபடை** - *கெடுதலைச் செய்யும் கணையை;* **ஏயினன்** - *ஏவினான்.*

*தமஸ் - இருள், இருள் உறு (படை) - தாமதாத்திரம்*

***9793. தீ முகம் உடையன சில; முகம் உதிரம்***
***தோய் முகம் உடையன; சுரர் முகம் உடைய;***
***பேய் முகம் உடையன; பிலமுகம் நுழையும்***
***வாய்முகம் வரி அரவு அனையன வருவ.***

*(மேற்குறித்த தாமதாத்திரத்திலிருந்து புறப்பட்ட அம்புகளில்)* **சில தீமுகம் உடையன** - *சில நெருப்புமிழ் முகம் படைத்திருந்தன (சில);* **முகம் உதிரம் தோய் முகம் உடையன** - *சில அம்புகள் குருதி தோய்ந்த முகம் கொண்டிருந்தன;* **சுரர் முகம் உடைய** - *(சில) தேவர் முகம் படைத்திருந்தன;* **பேய் முகம் உடையன** - *(சில) பேய்களின் முகத்தோடு இருந்தன;* **பில முகம்** - *குகைக்குள்;* **நுழையும்** - *செல்கின்ற;* **வாய்முகம்** - *வாயும் முகமும் கொண்டன (சில);* **வரி அரவு அனையன வருவ** - *கோடுகளுடன் கூடிய பாம்புகளைப் போல் வந்தன.*

***9794. ஒரு திசை முதல் கடை ஒரு திசை அளவும்,***
***இரு திசை எயிறு உற வருவன; பெரிய;***
***கருதிய கருதிய புரிவன; கனலும்***
***பருதியை மதியொடு பருகுவ - பகழி.***

*(மேலும்)* ***பகழி*** *- இந்த அம்புகள்;* ***ஒரு திசை முதல்*** *- ஒரு திக்கின் தொடக்க முதலாக;* ***கடை ஒரு திசை அளவும்*** *- (அதற்கு) மறுதலையான) ஒரு திக்கின் முடிவு வரையிலும்;* ***இருதிசை*** *- இரு திசைகளிலும்;* ***எயிறு உற*** *- பற்களைக் காட்டிக் கொண்டு;* ***வருவன*** *- வருவன;* ***பெரிய*** *- மிகப் பெரிய அளவின;* ***கருதிய கருதிய புரிவன*** *- நினைத்து நினைத்துச் செயல்பட வல்லன;* ***கனலும்*** *- சுடுகின்ற;* ***பருதியை மதியொடு*** *- சூரியனைச் சந்திரனோடு;* ***பருகுவ*** *- குடித்து விடும் தன்மையின.*

***9795. இருள் ஒரு திசை, ஒரு திசை வெயில் விரியும்;***
***சுருள் ஒரு திசை, ஒரு திசை மழை தொடரும்;***
***உருள் ஒரு திசை, ஒரு திசை உரும் முரலும்;***
***மருள் ஒரு திசை, ஒரு திசை சிலை வருடம்.***

*(தாமத அம்பினால்),* ***ஒரு திசை இருள்*** *- ஒரு திசையில் இருளும்;* ***ஒருதிசை வெயில்*** *- அடுத்த திசையில் வெயிலும்;* ***விரியும்*** *- பரவும்;* ***ஒருதிசை சுருள்*** *- ஒரு திசையில் சுழல்காற்றும்;* ***ஒரு திசை மழை*** *- மற்றொரு திசையில் மழையும்;* ***தொடரும்*** *- தொடரும்;* ***ஒரு திசை உருள்*** *- ஒரு திசையில் சக்கரமும்;* ***ஒரு திசை உரும் முரலும்*** *- இன்னொரு திசையில் இடியும் ஒலிக்கும்;* ***ஒரு திசை மருள்*** *- ஒரு திசையில் மயக்கமும்;* ***ஒரு திசை சிலை வருடம்*** *- வேறொரு திசையில் கல்மாரியும் உண்டாகும்.*

*தாமதப் படையை இராமன் அழித்தல்*

***9796. இனையன நிகழ்வுற, எழு வகை உலகும்***
***கனை இருள் கதுவிட, உயிர் இடை கதற,***
***வினை உறு தொழிலிடை விரவலும், விமலன்***
***நினைவுறு தகையினன் நெறியுறு முறையின்,***

***இனையன நிகழ்வுற*** *- இவ்வாறு நிகழ்ந்து கொண்டிருக்கும் வேளையில்;* ***கனை இருள்*** *- செறிந்த இருட்டானது;* ***எழுவகை உலகும்*** *- ஏழு உலகங்களையும்;* ***கதுவிட*** *- கவ்விக்கொள்ள;* ***உயிர் இடை கதற*** *- அனைத்துயிர்களும் இதனிடையே வாய்விட்டலற;* ***வினை உறு தொழிலிடை*** *- தீவினை நெருங்கிச் செயல்படுதலென;* ***விரவலும்*** *- (துன்பம்) எங்கும் பரவுதலுற்ற போது;* ***விமலன்*** *- மாசறு பண்புடைய இராமன்;* ***நெறியுறு முறையின்*** *- முறைப்படியான வழியில்;* ***நினைவுறு நகையினன்*** *- சிந்திக்க லுற்றவனாகி;*

***9797. கண்ணுதல் ஒருவனது அடு படை கருதிப்***

***பண்ணவன் விடுதலும், அது நனி பருக;***
***எண்ணுறு கனவினொடு உணர்வு என, இமையில்,***
***துண்ணெனும் நிலையினின் எறி படை தொலைய.***

***கண்ணுதல் ஒருவனது*** *- நெற்றிக் கண்ணனாகிய ஒப்பற்ற சிவபிரானது;* ***அடுபடை*** *- வெல்லும் அம்பினை;* ***கருதி*** *- எண்ணியெடுத்து;* ***பண்ணவன் விடுதலும்*** *- இராமபிரான் ஏவுதலும்;* ***அது*** *- அவ்வம்பு;* ***நனி பருக*** *- தாமத அம்பினைப் பருகியதினால்;* ***இமையில்*** *- இமைப்பொழுதில்;* ***கனவினோடு*** *- கனவுப் பொழுதில்;* ***எண்ணுறும் உணர்வு என*** *- சிந்தனையாகிய உணர்வு (இல்லாமற் போவது) போல;* ***துண்ணெனும் நிலையினில்*** *- அச்சம் கொள்ளும் நிலையில்;* ***எறிபடை*** *- (இராவணனால்) ஏவப்பட்ட தாமதாத்திரம்;* ***தொலைய*** *- அழிந்து போக.*

## *இராவணன் ஆசுரப்படையும் இராமன் அக்கினிப்படையும்*

**கலித்துறை**

***9798. விரிந்த தன் படை மெய் கண்ட பொய் என வீய,***
***எரிந்த கண்ணினன், எயிற்றிடை மடித்த வாயினன்,***
***தன்***
***தெரிந்த வெங் கணை, கங்க வெஞ் சிறை அன்ன,***
***திறத்த***
***அரிந்தமன் திரு மேனிமேல் அழுத்தி, நின்று***
***ஆர்த்தான்.***

***விரிந்த*** *- பரந்து சென்று;* ***தன்படை*** *- தன் தாமதாத்திரம்;* ***மெய்கண்ட பொய் என*** *- உண்மையைக் கண்ட பொய்யினைப் போல;* ***வீய*** *- அழிந்து போக;* ***எரிந்த கண்ணினன்*** *- நெருப்பை உமிழ்கின்ற கண்களை உடையவனும்;* ***எயிற்றிடை மடித்த வாயினன்*** *- பற்களிடையே மடித்த வாயை உடையவனுமான இராவணன்;* ***கங்க வெம் சிறை அன்ன*** *- பருந்தின் கொடுஞ் சிறகு போன்று;* ***திறத்த*** *- வன்மை மிக்கனவாய்;* ***தெரிந்த வெங்கணை*** *- தேர்ந்தெடுத்த கொடிய அம்புகளை;* ***அரிந்தமன்*** *- பகைவரை அடக்கும் இராமபிரான்;* ***திருமேனி மேல் அழுத்தி*** *- திருவுடல் மீது பாய்ச்சி;* ***நின்று ஆர்த்தான்*** *- நின்று ஆரவாரம் செய்தான்.*

***9799. ஆர்த்து, வெஞ் சினத்து ஆசுரப் படைக்கலம், அமரர்***
***வார்த்தை உண்டது, இன் உயிர்களால் மறலிதன்***
***வயிற்றைத்***
***தூர்த்தது, இந்திரன் துணுக்குறு தொழிலது,***

***தொடுத்து,***
***தீர்த்தன்மேல் செலத் துரந்தனன், உலகு எலாம்***
***தெரிய.***

*(இராவணன்)* ***ஆர்த்து*** *- ஆரவாரம் செய்து;* ***அமரர் வார்த்தை உண்டது*** *- வானவர் புகழுரை பெற்றதும்;* ***இன்உயிர்களால்*** *- இனிய உயிர்களால்;* ***மறலி தன் வயிற்றைத் தூர்த்தது*** *- எமன் வயிற்றை நிறைத்ததும்;* ***இந்திரன் துணுக்குறு தொழிலது*** *- தேவர் தலைவனைத் திடுக்கிட வைத்ததுமான;* ***வெஞ்சினத்து ஆசுரப் படைக்கலம்*** *- கொடுந்தன்மையுடைய ஆசுரம் என்னும் அம்பினை* ***உலகு எலாம் தெரிய*** *- அனைவரும் காண;* ***தீர்த்தன் மேல் வரத் துரந்தனன்*** *- புனிதன் மீது பாயும்படி ஏவினன்.*

***9800. 'நுங்குகின்றது, இவ் உலகை ஓர் நொடி வரை' என்ன***
***எங்கும் நின்று நின்று அலமரும் அமரர் கண்டு***
***இரைப்ப,***
***மங்குல் வல் உருமேற்றின்மேல் எரி மடுத்தென்ன***
***அங்கி தன் நெடும் படை தொடுத்து, இராகவன்***
***அறுத்தான்.***

***இவ்வுலகை*** *- இந்த உலகினை;* ***ஓர் நொடி வரை*** *- ஒரு நொடிப் பொழுதில்;* ***நுங்குகின்றது*** *- விழுங்குகின்றது;* ***என்ன*** *- என்று கூறும்படி;* ***எங்கும் நின்று நின்று*** *- எல்லா இடங்களிலும் குவியலாய் நின்று;* ***அலமரும் அமரர்*** *- மனம் கலங்கிய அமரர்கள்;* ***கண்டுஇரைப்ப*** *- இவ்வம்பினைக் கண்டு அஞ்சிக் குரலெழுப்பும் போது;* ***மங்குல் வல் உருமேற்றின் மேல்*** *- மேகங்களில் உள்ள ஆற்றல் மிக்க இடியேற்றின் மீது;* ***எரி மடுத்தென்ன*** *- நெருப்புப் பற்றிக் கொண்டாற்போல;* ***அங்கி தன் நெடும்படை எடுத்து*** *- அக்கினியாஸ்திரத்தை எடுத்து;* ***இராகவன் அறுத்தான்*** *- இராமபிரான் (ஆசுரத்தை) அழித்தான்.*

*நுங்குதல் - விழுங்குதல்.*

***9801. கூற்றுக் கோடினும் கோடல, கடல் எலாம் குடிப்ப,***
***நீற்றுக் குப்பையின் மேருவை நூறுவ, நெடிய***
***காற்றுப் பின் செலச் செல்வன, உலகு எலாம் கடப்ப,***
***நூற்றுக் கோடி அம்பு எய்தனன், இராவணன்,***
***நொடியில்.***

***கூற்றுக் கோடினும்*** *- எமன் தவற விட்டாலும்;* ***கோடல*** *- தாம் குறி தப்பாதவையும்;* ***கடல் எலாம் குடிப்ப*** *- கடல் நீர் முழுவதும் குடிக்க வல்லவையும்;* ***மேருவை*** *- மகா மேரு மலையை;* ***நீற்றுக் குப்பையின் நூறுவ*** *- பொடிப்பொடியாக்கி அழிக்க*

வல்லவையும்; ***நெடிய காற்று*** - பெரும் புயல் காற்றும்; ***பின் செலச் செல்வன*** - தம்பின் வரும்படி முன் செல்பவையும்; ***உலகு எலாம் கடப்ப*** - உலகனைத்தும் கடக்க முற்படுபவையுமான; ***நூற்றுக்கோடி அம்பு*** - பல கோடி அம்புகளை; ***நொடியில்*** - நொடிப்போதில்; ***இராவணன் எய்தனன்*** - இராவணன் ஏவினான்.

***9802. 'என்ன கைக் கடுப்போ!' என்பர் சிலர்; சிலர், 'இவையும்***
***அன்ன மாயமே; அம்பு அல' என்பர்; 'அவ் அம்புக்கு***
***இன்னம் உண்டுகொல் இடம்!' என்பர் சிலர்; சிலர்; 'இகல் போர்***
***முன்னம் இத்தனை முயன்றிலனாம்' என்பர் - முனைவர்.***

***முனைவர்*** - வீரர்களில்; ***சிலர்*** - சிலர்; ***என்ன கைக்கடுப்போ*** - இது என்ன கை வேகம்; ***என்பர்*** - என வியப்பர்; ***சிலர்*** - வேறு சிலர்; ***'இவையும் அன்ன மாயமே*** - இவ்வம்புகளும் அந்த மாயமே; ***அம்பல*** - அம்புகள் அல்ல; ***என்பர்*** - என்பார்கள்; ***சிலர்*** - மற்றும் சிலர்; ***அவ்வம்புக்கு*** - இவ்வம்புகளுக்கு; ***இன்னம் உண்டுகொல் இடம்*** - இன்னும் வேண்டிய இடமுண்டோ?'; ***என்பர்*** - என அதிசயிப்பர்; ***சிலர்*** - இன்னும் சிலர்; ***'முன்னம்*** - முன் எப்போதும்; ***இத்தனை இகல் போர்*** - இந்த அளவு மாறுபாடுற்ற போரை; ***முயன்றிலனாம்*** - முயன்று இயற்றியதில்லை; ***என்பர்*** - என எண்ணுவார்கள்.

***9803. மறைமுதல் தனி நாயகன், வானினை மறைத்த***
***சிறையுடைக் கொடுஞ் சரம் எலாம் இமைப்பு ஒன்றில் திரிய,***
***பொறை சிகைப் பெருந் தலைநின்றும் புங்கத்தின் அளவும்***
***பிறை முகத் தடங் கடுங் கொடுஞ்சரம் கொண்டு பிளந்தான்.***

***மறை முதல் தனி நாயகன்*** - வேத முதல்வனாகிய சிறப்புடையோன்; ***வானினை மறைத்த*** - ஆகாய வீதியை மூடிய; ***சிறை உடைக் கொடுஞ்சரம்*** - இறகுடன் கூடிய தீய அம்புகள்; ***எலாம்*** - அனைத்தையும்; ***இமைப்பொன்றில்*** - நொடிப்பொழுதில்; ***திரிய*** - உலுக்குலையுமாறு; ***பிறைமுகக் கடு வெம்சரம்*** - பிறைச் சந்திரன் போன்ற உருவினவாகிய கொடிய வெவ்விய அம்புகளால்; ***பொறை சிகை*** - பாரமான உச்சியையுடைய; ***பெருந்தலைநின்றும்*** - பெரிய தலை முதலாக; ***புங்கத்தின் அளவும்*** - நுனிவரை; ***பிளந்தான்*** - பிளவுபடும்படி செய்தான்.

*மயன்படையும் கந்தருவக் கணையும்*

***9804. அயன் படைத்த பேர் அண்டத்தின் அருந் தவம்
ஆற்றி,
பயன் படைத்தவர் யாரினும் படைத்தவன், 'பல் போர்
வியன் படைக்கலம் தொடுப்பென் நான், இனி' என
விரைந்தான்;
மயன் படைக்கலம் துரந்தனன், தயரதன் மகன்மேல்.***

***அயன் படைத்த*** *- பிரமனால் படைக்கப்பட்ட;* ***பேர் அண்டத்தின்*** *- பேருலகங்கள் அனைத்திலும்;* ***அருந்தவம் ஆற்றி*** *- கடுந்தவம் புரிந்து;* ***பயன் படைத்தவர் யாரினும்*** *- நன்மையுற்றவர் எவரையும் விட;* ***படைத்தான்*** *- சிறப்புப் பெற்றவனாகிய இராவணன்;* ***'நான் இனி*** *- இனி நான்;* ***பல்போர் வியன் படைக்கலம்*** *- பல்வகைப் போர் விந்தைகளும் செய்யும் புதிய அம்பினை;* ***தொடுப்பென்'*** *- தொடுக்கப் போகிறேன்;* ***என*** *- என எண்ணியவனாய்;* ***தயரதன் மகன் மேல்*** *- தசரத புத்திரனாகிய இராமன் மேல்;* ***மயன் படைக்கலம் துரந்தனன்*** *- மயன் அம்பை ஏவினான்.*

***9805. 'விட்டனன் விடு படைக்கலம் வேரொடும் உலகைச்
சுட்டனன்' எனத் துணுக்கமுற்று, அமரரும்
சுருண்டார்;
'கெட்டனம்' என வானரத் தலைவரும் கிழிந்தார்;
சிட்டர்தம் தனித் தேவனும், அதன் நிலை தெரிந்தான்.***

***விட்டனன்*** *- (இராவணன் மயன்படை) ஏவி விட்டான்;* ***விடுபடைக்கலம்*** *- அவன் ஏவிய அம்பு காரணமாக;* ***வேரொடும் உலகைச் சுட்டனன்*** *- உலகத்தை வேரொடும் சுட்டழித்தான்;* ***என*** *- என்று;* ***அமரரும்*** *- தேவரும்;* ***துணுக்கமுற்று*** *- அச்சம்கொண்டு;* ***சுருண்டார்*** *- உள்ளொடுங்கினார்;* ***வானரத் தலைவரும்*** *- குரங்குப்படைத்தலைவர்களும்;* ***'கெட்டனம்'*** *- இனி அழிந்தோம்;* ***எனக் கிழிந்தார்*** *- எனச் சிதறிக் கலைந்தனர்;* ***சிட்டர் தம்*** *- நல்லோர்தம்;* ***தனித்தேவனும்*** *- ஒப்பற்ற தலைவனாகிய இராமனும்;* ***அதன் நிலை தெரிந்தான்*** *- அவ் அம்பின் தன்மையை உணர்ந்து கொண்டான்.*

***9806. 'பாந்தள் பல் தலைப் பரப்பு அகன் புவியிடைப்
பயிலும்
மாந்தர்க்கு இல்லையால் வாழ்வு' என வருகின்ற
அதனைக்
காந்தர்ப்பம் எனும் கடுங் கொடுங் கணையினால்***

***கடந்தான் -***
***ஏந்தல் பல் மணி எறுழ் வலித் திரள் புயத்து இராமன்.***

*'**பாந்தள் பல்தலைப் பரப்பு** - ஆதிசேடனுடைய எண்ணற்ற தலைகளின் மேல் பரந்துள்ள; **அகன் புவியிடைப் பயிலும்** - விரிந்த பூமியின்மீது வாழும்; **மாந்தர்க்கு வாழ்வு இல்லை** - மனிதர்களுக்கு உயிர் வாழ்வு இல்லை; **என** - என்னுமாறு; **வருகின்ற அதனை** - வரும் அவ்வம்பினை; **ஏந்தல்** - உயர்ந்தனவும்; **பல்மணி** - பல்வகை மணிகள் பூண்டனவும்; **ஏறுழ்வலி** - மிக்க வலிமையுடையனவும் ஆகிய; **திரள்** - திரண்ட; **புயத்து** - தோள்களை உடைய; **இராமன்** - இராமபிரான்; **காந்தர்ப்பம் எனும்** - கந்தர்வம் எனும் பெயருடைய; **கடுங் கொடுங் கணையினால்** - வலிய கொடிய அம்பினால்; **கடந்தான்** - வெற்றி கொண்டான். (ஆல் - அசை)*

*தண்டும் அம்பும்*

***9807. 'பண்டு நான்முகன் படைத்தது, கனகன் இப் பாரைத்***
***தொண்டு கொண்டது, மது எனும் அவுணன் முன்***
***தொட்டது,***
***உண்டு இங்கு என்வயின்; அது துரந்து உயிர்***
***உண்பென்' என்னா,***
***தண்டு கொண்டு எறிந்தான், ஐந்தொடு ஐந்துடைத்***
***தலையான்.***

*'**பண்டு நான்முகன் படைத்தது'** - முன்னம் பிரமனால் படைக்கப்பட்டதும்,; **கனகன்** - இரணியன்; **இப்பாரைத் தொண்டு கொண்டது** - இவ்வுலகை அடிமைப்படுத்தக் காரணமானதும்; **மது எனும் அவுணன்** - மது எனும் அசுரன்; **முன் தொட்டது** - முன்பு ஏந்தியிருந்ததும் ஆன (ஒரு தண்டு); **இங்கு என் வயின் உண்டு** - இங்கு என்னிடம் இருக்கிறது; **அது துரந்து உயிர் உண்பென்** - அதனை ஏவிப் (பகைவனின்) உயிரை உண்பேன்'; **என்னா** - என்று கருதி; **ஐந்தொடு ஐந்துடைத் தலையான்** - பத்துத் தலைகளுடைய இராவணன்; **தண்டு கொண்டு எறிந்தான்** - கதாயுதத்தால் தாக்கினான்.*

***9808. தாருகன் பண்டு தேவரைத் தகர்த்தது, தனி மா***
***மேரு மந்தரம் புரைவது, வெயில் அன்ன ஒளியது,***
***ஓர் உகம்தனின் உலகம் நின்று உருட்டினும் உருளாச்***
***சீர் உகந்தது, நெரித்தது, தானவர் சிரங்கள்.***

***தாருகன் பண்டு** - தாருகாசுரன் முன்னொரு காலத்தில்; **தேவரைத் தகர்த்தது** - தேவரை ஒழிக்க உதவியாய் இருந்ததும்; **தனிமா** - ஒப்பற்ற பெரிய; **மேருமந்தரம்***

***புரைவது*** - மேரு மலையையும் மந்திர கிரியையும் நிகர்ப்பதும்; ***வெயிலன்ன ஒளியது*** - சூரிய வெளிச்சம் போல் ஒளியுடையதும்; ***ஓர் உகம்தனில்*** - ஒரு யுகக் காலமளவும்; ***உலகம் நின்றுருட்டினும்*** - உலகம் முழுவதும் சேர்ந்து உருட்டினாலும்; ***உருளாத*** - உருட்ட முடியாத; ***சீர் உகந்தது*** - சிறப்புக்கு உரியதும்; ***தானவர் சிரங்கள் நெரித்தது*** - அசுரர் தலைகளை நசுக்கியதும்;

***9809. பசும் புனல் பெரும் பரவை பண்டு உண்டது, பனிப்புற்று***
***அசும்பு பாய்கின்றது, அருக்கனின் ஒளிர்கின்றது, அண்டம்***
***தசும்புபோல் உடைந்து ஒழியும் என்று அனைவரும் தளர,***
***விசும்பு பாழ்பட, வந்தது மந்தரம் வெருவ.***

***பசும்புனல்*** - பச்சை நிற நீரால் நிரம்பிய; ***பெரும் பரவை*** - பெரிய கடலை; ***பண்டு உண்டது*** - முன் காலத்தில் பருகியதும்; ***பனிப்புற்று*** - குளிர்ச்சி பொருந்தி; ***அசும்பு பாய்கின்றது*** - நீர் கசிவதும்; ***அருக்கனின் ஒளிர்கின்றது*** - சூரியனைக் காட்டிலும் ஒளி வீசுவதுமான அத்தண்டாயுதம்; ***அண்டம்*** - இவ்வண்டம்; ***தசும்புபோல்*** - குடல் போல்; ***உடைந்து ஒழியும்*** - உடைந்து தகரும்; ***என்று அனைவரும் தளர*** - என எல்லாரும் மனம் தளரவும்; ***விசும்பு பாழ்பட*** - வானம் பாழடையவும்; ***மந்தரம் வெருவவும்*** - மந்தர மலை அஞ்சுமாறும்; ***வந்தது*** - வரலாயிற்று.

*தசும்பு - குடம்; அசும்பு - நீர்க்கசிவு.*

***9810. கண்டு, 'தாமரைக் கண்ணன் அக் கடவுள் மாக் கதையை***
***அண்டர் நாயகன் ஆயிரம் கண்ணினும் அடங்காப்***
***புண்டரீகத்தின் முகை அன்ன புகர் முகம் விட்டான்,***
***உண்டை நூறுடை நூறுபட்டுளது என உதிர்த்தான்.***

***கண்டு*** - இக்காட்சியைக் கண்டு; ***தாமரைக் கண்ணன்*** - செந்தாமரைக் கண்ணனான இராமன்; ***அக் கடவுள் மாக்கதையை*** - அத் தெய்வத்தன்மை வாய்ந்த பெருந்தண்டத்தை; ***ஆயிரம் கண்ணினும்*** - ஆயிரம் கண்களால்; ***அண்டர் நாயகன்*** - தேவர் தலைவனாகிய இந்திரனுக்கும்; ***அடங்காத*** - பார்க்க முடியாத; ***நூறு உண்டை உடை*** - நூறு உண்டைகளை உடையதும்; ***புண்டரீகத்தின் புகர்முகம்*** - தாமரையின் ஒளி பொருந்திய முகமுள்ளதுமான அம்பினை; ***விட்டான்*** - செலுத்தி; ***நூறு பட்டுளது*** - நூறு கூறாயிற்று எனும்படி; ***உதிர்த்தான்*** - சிதற வைத்தான்.

*இராவணன் மாயையின் படை விடுதல்*

***9811. 'தேய நின்றவன், சிலை வலம் காட்டினான்; தீராப்
பேயை என் பல துரப்பது? இங்கு இவன் பிழையாமல்
ஆய தன் பெரும் படையொடும் அடு களத்து அவிய
மாயையின் படை தொடுப்பென்' என்று, இராவணன்
மதித்தான்.***

***தேய நின்றவன்*** *- அழியப் போகின்றவனாகிய;* ***சிலைவலம் காட்டினான்*** *- நம் பகைவன் வில்லாண்மை காட்டுகின்றான்;* ***தீராப் பேயை*** *- தீர்க்க முடியாத பேய்களைப் போன்ற (பயனற்ற);* ***பல*** *- அம்புகளை;* ***துரப்பது என்?*** *- விடுவதனால் பயனில்லை;* ***இங்கு இவன் பிழையாமல்*** *- இங்கு இப்பகைவன் (இராமன்) தப்ப முடியாதபடி);* ***ஆய தன் பெரும் படையொடும்*** *- தனக்கமைந்த படைக்கலங்களோடு;* ***அடுகளத்து அவிய*** *- போர்க்களத்தில் பட்டழிய;* ***மாயையின் படை தொடுப்பென்*** *- மாயாத்திரத்தைத் தொடுத்து விடுவேன்';* ***என்று இராவணன் மதித்தான்*** *- என்று இராவணன் சிந்தித்தான்.*

***9812. பூசனைத் தொழில் புரிந்து, தான் முறைமையின்
போற்றும்
ஈசனைத் தொழுது, இருடியும் சந்தமும் எண்ணி,
ஆசை பத்தினும் அந்தரப் பரப்பினும் அடங்கா
வீசினன் செல, வில் இடைத் தொடை கொடு
விட்டான்.***

***பூசனைத் தொழில் புரிந்து*** *- மாயாத்திரத்தைப் பூசிக்கும் தொழிலைச் செய்து;* ***தான் முறைமையிற் போற்றும்*** *- தான் ஒழுங்காக வணங்கும்;* ***ஈசனை*** *- சிவபிரானை;* ***தொழுது*** *- வழிபாடு செய்து;* ***இருடியும் சந்தமும் எண்ணி*** *- ரிஷியையும் சந்தஸ்ஸையும் நினைந்து;* ***ஆசை பத்தினும்*** *- பத்துத் திசைகளிலும்;* ***அந்தரப் பரப்பினும்*** *- வான வெளியிலும்;* ***அடங்கா*** *- அடங்காது;* ***செல*** *- எங்கும் செல்லுமாறு;* ***வில் இடை தொடை*** *- வில்லில் (மாயாத்திரமாகிய) அம்பினை;* ***கொடு விட்டான்*** *- வைத்து வீசி விட்டான்.*

*ஒவ்வொரு அம்புக்கும் மந்திரத்திற்கும் ரிஷியும் சந்தஸ்ஸும் உண்டு. சந்தஸ் - சந்தம்.*

***9813. மாயம் பொத்திய வயப் படை விடுதலும், வரம்பு இல்
காயம் எத்தனை உள, நெடுங் காயங்கள் கதுவ,
ஆயம் உற்று எழுந்தார் என ஆர்த்தனர் - அமரில்***

***தூய கொற்றவர் சுடு சரத்தால் முன்பு துணிந்தார்.***

***மாயம் பொத்திய*** *- மாயை நிறைந்துள்ள;* ***வயப்படை விடுதலும்*** *- வெற்றிப்படையை இராவணன் ஏவுதலும்;* ***அமரில்*** *- முன்பு நடந்த போரில்;* ***தூய கொற்றவர்*** *- உயர் பண்பினரான இராம இலக்குவர்;* ***சுடுசரத்தான்*** *- சுடுகின்ற அம்பினால்;* ***முன்பு*** *- முன்னர்;* ***துணிந்தார்*** *- துண்டாகி விழுந்த அரக்கர்களின்;* ***வரம்பில் காயம் எத்தனை உள*** *- எண்ணில்லாத காயம்பட்டு வீழ்ந்த உடல்கள் எத்தனையுண்டோ அவை அனைத்தும்;* ***நெடுங்காயங்கள் கதுவ*** *- உயர்ந்த ஆகாயம் வரை தழுவி;* ***ஆயம் உற்று எழுந்தார் என*** *- உயிர் பெற்று எழுந்தாற்போல (மாயம் காட்டி);* ***ஆர்த்தனர்*** *- ஆரவாரம் செய்தனர்.*

*மாயாத்திரம் இறந்த அரக்கர் உயிர் பெற்றெழுந்தது போலக் காட்டிற்று.*

***9814. இந்திரற்கு ஒரு பகைஞனும், அவற்கு இளையோரும்,***
***தந்திரப் பெருந் தலைவரும், தலைத் தலையோரும்,***
***மந்திரச் சுற்றத்தவர்களும், வரம்பு இலர் பிறரும்,***
***அந்தரத்தினை மறைத்தனர், மழை உக ஆர்ப்பார்.***

***இந்திரற்கு ஒரு பகைஞனும்*** *- இந்திரசித்தும்;* ***அவற்கு இளையோரும்*** *- அவனுக்குத் தம்பியரான அதிகாயன் முதலியவர்களும்;* ***பெரும் தந்திரத் தலைவரும்*** *- பெரி சேனைத்தலைவர்களும்;* ***தலைத்தலையோரும்*** *- மேலும் பல தலைமையுடையோரும்;* ***மந்திரச் சுற்றத்தவர்களும்*** *- (மகோதரன்) முதலிய அமைச்சர்களும்;* ***வரம்பு இலர் பிறரும்*** *- எண்ணற்ற பிறரும்;* ***அந்தரத்தினை மறைத்தனர்*** *- ஆகாயம் முழுமையும் மறைத்துக் கொண்டவர்களாய்;* ***மழை உக ஆர்ப்பார்*** *- மழை சிதறும்படி ஆரவாரம் புரியலானார்.*

***9815. குடப் பெருஞ் செவிக் குன்றமும், மற்றுள குழுவும்,***
***படைத்த மூல மாத் தானையும், முதலிய பட்ட,***
***விடைத்து எழுந்தன - யானை, தேர், பரி, முதல்***
***வெவ்வேறு***
***அடைத்த ஊர்திகள் அனைத்தும் வந்து, அவ் வழி***
***அடைத்த.***

***குடப் பெருஞ் செவிக் குன்றமும்*** *- குடம் போன்ற பெரிய செவிகளை உடைய மலை போன்ற கும்பகருணனும்;* ***மற்றுள குழுவும்*** *- மற்றுள்ள வீரர்களும்;* ***படைத்த மூலமாத் தானையும்*** *- இராவணன் முன்பு பெற்றிருந்த மூலபலப்படையும்;* ***முதலிய பட்ட*** *- முதலிய மன்னர் இறந்து போன;* ***யானை தேர் பரி முதல்*** *- யானை*

*தேர் குதிரை முதலாக;* ***வெவ்வேறு அடைத்த ஊர்திகள்*** *- வேறு வேறாக நிரம்பிய வாகனங்களும்;* ***அனைத்தும் வந்து*** *- எல்லாம் ஒருங்கு வந்து; அவ்வழி அடைத்த - அங்கு திரண்டு வந்தன.*

***9816. ஆயிரம் பெரு வெள்ளம் என்று அறிஞரே அறைந்த***
***காய் சினப் பெருங் கடற்படை களப் பட்ட எல்லாம்,***
***ஈசனின் பெற்ற வரத்தினால் எய்திய என்ன,***
***தேசம் முற்றவும் செறிந்தன, திசைகளும் திகைப்ப.***

***திசைகளும் திகைப்ப*** *- நாற்றிசையிலும் உள்ளார் கண்டு திகைக்கும் படி;* ***ஆயிரம் பெரு வெள்ளம் என்று*** *- ஓராயிரம் வெள்ளம் என்று;* ***அறிஞரே அறைந்த*** *- அறிஞரால் கூறப்பட்டனவும்;* ***களப்பட்ட*** *- களத்தில் முன்பு இறந்தனவுமான;* ***காய்சினப் பெருங் கடற் படை எல்லாம்*** *- கடுஞ்சினம் மிக்க விரிந்த கடல் போன்ற படைகள் அனைத்தும்;* ***ஈசனில் பெற்ற வரத்தினால்*** *- சிவபிரானிடம் பெற்ற வரம் காரணமாக;* ***எய்திய என்ன*** *- உயிர் பெற்று வந்தன என்னும் படி;* ***தேசமுற்றவும் செறிந்தன*** *- எல்லா இடத்திலும் நிறைந்தன.*

***9817. சென்ற எங்கணும், தேவரும் முனிவரும் சிந்த -***
***'வென்றது எங்களைப்போலும்; யாம் விளிவதும்***
***உளதே?***
***இன்று காட்டுதும்; எய்துமின், எய்துமின்' என்னா,***
***கொன்ற கொற்றவர்தம் பெயர் குறித்து அறைகூவி.***

***வென்றது எங்களைப் போலும்*** *- 'எங்களைத் தானோ வெற்றி கொண்டது!* ***யாம் விளிவதும் உளதே*** *- யாம் இறப்பதும் உண்டோ?* ***இன்று காட்டுதும்*** *- என் வலிமையை இன்று காட்டுவோம்;* ***எய்துமின் எய்துமின்*** *- வாருங்கள் வாருங்கள்';* ***என்னா*** *- என்று;* ***கொன்ற கொற்றவர் தம் பெயர்*** *- தம்மைக் கொன்ற வீரர்களின் பெயரை;* ***குறித்து அறை கூவி*** *- குறிப்பாகச் சொல்லி அறை கூவல் விட்டு;* ***தேவரும் முனிவரும் சிந்த*** *- தேவர்களும் முனிவர்களும் சிதறியோட;* ***எங்கணும் சென்ற*** *- (அப்படைகள்) எங்கும் செல்லலாயின.*

***9818. பார் இடந்து கொண்டு எழுந்தன பாம்பு எனும் படிய,***
***பாரிடம் துனைந்து எழுந்தன மலை அன்ன படிய,***
***'பேர் இடம் கதுவ அரிது, இனி விசும்பு' என, பிறந்த,***
***பேர் இடங்கரின் கொடுங் குழை அணிந்தன பேய்கள்.***

*(மாயத்தினால்)* ***பார் இடந்து கொண்டு*** *- நிலத்தைத் துளைத்துக் கொண்டு;* ***பாம்பு எழுந்தன எனும் படிய*** *- ஆதிசேடன் முதலிய பாம்புகள் எழுந்து வந்தன எனும்படியாகவும்;* ***பாரிடம்*** *- நிலத்தினுக்கு;* ***மேலே துனைந்தெழுந்தன*** *- விரைந்து மேலெழுந்து கிளம்பின;* ***மலையன்ன படிய*** *- பெரிய மலைகளென்று கூறும்படியாகவும்;* ***இனி பேரிடம் கதுவரிது*** *- இனி இப்பெரிய உலகில் உறைதலாற்றாது;* ***விசும்பென*** *- விண்ணகமே பொருத்தமான இடமென;* ***பேரிடங்கரின்*** *- தண்ணீரில் பெயர்ந்து திரியும் முதலைகள் போன்ற;* ***கொடுங்குழை*** *- வளைந்த குண்டலங்களை;* ***பிறந்த பேய்கள்*** *- (மாயத்தில்) பிறந்த பேய்கள்;* ***அணிந்தன*** *- அணிந்து காட்சி தந்தன.*

***9819. தாமசத்தினில் பிறந்தவர், அறம் தெறும் தகையர்,***
***தாம் அசத்தினில் செல்கிலாச் சதுமுகத்தவற்குத்***
***தாமசத்திரம் செய்பவர், பரிந்தனர் தளரத்***
***தாம சத்திரம் சித்திரம் பொருந்தினர், தயங்க.***

***தாமசத்தினில் பிறந்தவர்*** *- மாயாத்திரத்தால் பிறந்தவரும்;* ***அறந்தெறும் தகையர்*** *- தருமத்தை அழிக்க வல்ல ஆற்றல் உள்ளவருமான மாயப்படைகள்;* ***தாம்*** *- தாம்;* ***அசத்தினில்*** *- போலி நெறியில்;* ***செல்கிலா*** *- செல்லாதவராய்;* ***சதுமுகத்தவற்கு*** *- நான் முகனுக்கு;* ***உத்தாமம்*** *- சிறந்த;* ***த்திரம்*** *- யாகத்தை;* ***செய்பவர்*** *- புரிபவரான முனிவர்;* ***பரிந்தனர் தளர*** *- மனம் நொந்து தளர;* ***தாமம்*** *- ஒளி சிறந்த;* ***சத்திரம்*** *- படைக்கலம்;* ***தயங்க*** *- மின்னிட;* ***சித்திரம் பொருந்தினர்*** *- விசித்திரமாக விளங்கினர்.*

***9820. தாம் அவிந்து மீது எழுந்தவர்க்கு இரட்டியின்***
***தகையர்,***
***தாம இந்துவின் பிளவு எனத் தயங்கு வாள் எயிற்றர்,***
***தாம் அவிஞ்சையர், கடல் பெருந் தகையினர், தரளத்***
***தாம விஞ்சையர் துவன்றினர், திசைதொறும் தருக்கி.***

***தாம் அவிந்து*** *- தாம் முன்னர் இறந்து;* ***மீது எழுந்தவர்க்கு இரட்டியின் தகையர்*** *- மீண்டும் எழுந்தவர்களாகி இரண்டாம் முறை வந்த தன்மையுடையவரும்;* ***தாம இந்துவின்*** *- ஒளி மிக்க திங்களின்;* ***பிளவென*** *- பிறையென;* ***தயங்குவாள் எயிற்றர்*** *- மின்னும் ஒளிமிக்க பற்களை உடையவரும்;* ***தாம் அவிஞ்சையர்*** *- தாம் மாயத்தன்மை மிக்கவரும்;* ***கடல் பெரும் தகையினர்*** *- பெருங்கடல் போல் பரந்தவராய்;* ***தரளத் தாம விஞ்சையர்*** *- முத்துமாலை அணிந்த விந்தை மிக்கோராய்;* ***திசைதொறும்*** *- எல்லாப் பக்கங்களிலும்;* ***தருக்கித் துவன்றினர்*** *- நெருங்கினர்.*

*9821.* ***தாம் மடங்கலும், முடங்கு உளை யாளியும் தகுவார்,***
***தாம் அடங்கலும் நெடுந் திசை உலகொடும் தகைவார்,***
***தா மடங்கலும் கடலும் ஒத்து ஆர்தரும் தகையார்,***
***தாம் மடங்கலும் கொடுஞ் சுடர்ப் படைகளும் தரித்தார்.***

***தாம் மடங்கலும்*** *- தாவும் இயல்பினவான சிங்கத்தையும்;* ***முடங்கு உளை யாளியும்*** *- வளைந்த பிடரிமயிரை உடைய யாளியையும்;* ***தகுவார்*** *- நிகர்த்தவர்களும்;* ***தாம் அடங்கலும்*** *- தாம் அனைவரும்;* ***நெடுந்திசை*** *- நெடிய திசைகளை;* ***உலகொடும் தகைவார்*** *- உலகினோடும் (போரில்) தடுக்க வல்லவர்களும்;* ***தா மடங்கலும் கடலும் ஒத்து ஆர் தரும் தகையார்*** *- தாவுகின்ற ஊழித்தீயும் கடலும் போல ஆரவாரிக்கும் தன்மையர்;* ***தாம்*** *- ஒளிமிக்க;* ***மடங்கலும்*** *- இடியேறுகளையும்;* ***கொடுஞ்சுடர்ப் படைகளும்*** *- கொடியதும் ஒளிமிக்கதுமான படைக்கலன்களையும்;* ***தரித்தார்*** *- தாங்கி நின்றனர்.*

*முதலடியில் தாவும் என்ற சொல்தாம் எனத் தொக்கது. மடங்கல் - சிங்கம், ஊழித்தீ, இடியேறு என வெவ்வேறு பொருள் தர வந்தது. இச்செய்யுள் யமகம்.*

*9822.* ***இனைய தன்மையை நோக்கிய இந்திரை கொழுநன்,***
***'வினையம் மற்று இது மாயமோ? விதியது விளைவோ?***
***வனையும் வன் கழல் அரக்கர்தம் வரத்தினோ? மற்றோ?***
***நினைதியாமெனின், பகர்' என, மாதலி நிகழ்த்தும்:***

***இனைய தன்மையை நோக்கிய*** *- இப்படிப்பட்ட நிலையைக் கண்ட;* ***இந்திரை கொழுநன்*** *- திருமகள் நாயகனாகிய (இராமபிரான்);* ***'இது வினயம் மாயமோ?*** *- இந்தச் செயல் மாயம் தானோ?;* ***விதியது விளைவோ?*** *- (இல்லையெனில்) விதியில் நேர்ந்ததுதானோ?;* ***வனையும்*** *- அணிந்த;* ***வன்கழல் அரக்கர்*** *- பெரிய கழலினை உடைய அரக்கர்களின்;* ***வரத்தினோ?*** *- வர வலம் தானோ;* ***மற்றோ?*** *- வேறு காரணங்களால் நேர்ந்ததோ?;* ***நினைதியாம் எனில்*** *- எண்ணி அறிந்திருந்தால்;* ***பகர்*** *- கூறுவாயாக;* ***என*** *- என்று கேட்க;* ***மாதலி நிகழ்த்தும்*** *- மாதலி உரைக்கலானான்.*

## *இராமன் ஞானக்கைணை விடுதல்*

*9823.* ***'இருப்புக் கம்மியற்கு இழை நுழை ஊசி என்று***

***இயற்றி,***
***விருப்பின், ''கோடியால் விலைக்கு'' எனும் பதடியின்,***
***விட்டான் -***
***கருப்புக் கார் மழை வண்ண!- அக் கடுந் திசைக்***
***களிற்றின்***
***மருப்புக் கல்லிய தோளவன் மீள அரு மாயம்.***

***கருப்பு*** - *கடும் பஞ்ச காலத்தில் (பெய்தற்கு முற்பட்ட);* ***கார் மழை வண்ண*** - *கரிய முகில் நிற முடையாய்!;* ***இருப்புக் கம்மியற்கு*** - *இரும்பினால் பணிசெய்கின்ற கொல்லனுக்கு;* ***இழை***

***நுழை*** - *நூலிழை நுழைகின்ற;* ***ஊசி ஒன்று இயற்றி*** - *ஓர் ஊசி செய்து;* ***விருப்பின்*** - *ஆசையோடு;* ***விலைக்குக் கோடியால்*** - *விலைக்குப் பெற்றுக்கொள்;* ***எனும்*** - *என்றுரைக்கும்;* ***பதடியின்*** - *அறிவிலான் போன்று;* ***அக்கடுந் திசைக் களிற்றின்*** - *அந்தக் கடுமைவாய்ந்த திசையானையின்;* ***மருப்பு*** - *கொம்பினால்;* ***கல்லிய*** - *துளைக்கப்பட்ட;* ***தோளவன்*** - *தோள்களையுடைய இராவணன்;* ***மீள அரும் மாயம்*** - *தப்புதற்கு அரிதான மாயாஸ்திரத்தை;* ***விட்டான்*** - *எய்தான்?*

*மாயனாகிய உன் மீது மாயாஸ்திரத்தை விடுவது கொல்லனிடமே ஊசி விற்பது போன்றது என்றான். பதடி - உள்ளீடில்லாத பதர் போன்றவன்.*

*'கொற்சேரித் துன்னூசி விற்பவரில்' (பழமொழி நானூறு 73) ஒப்பு நோக்குக.*

***9824, 'வீக்கு வாயிலில் வெள் எயிற்று அரவின் வெவ்***
***விடத்தை***
***மாய்க்குமா நெடு மந்திரம் தந்தது ஓர் வலியின், -***
***நோய்க்கும், நோய் தரு வினைக்கும், நின் பெரும்***
***பெயர் நொடியின்,***
***நீக்குவாய்! - நினை நினைக்குவார் பிறப்பு என,***
***நீங்கும்.***

***'நோய்க்கும்*** - *பிறவியாகிய நோயினுக்கும்;* ***நோய்தரு வினைக்கும்*** - *அப்பிணியினை விளைவிக்கும் வினைகளுக்கும் (எதிராக);* ***நின் பெரும் பெயர்*** - *உன் பெருமை மிக்க திருநாமம்;* ***நொடியின்*** - *மொழிந்தால்;* ***நீக்குவாய்!*** - *(அவற்றை) நீக்கி அருள்பவனே!;* ***வீக்கு*** - *அழிக்கும் தன்மையுடையதாய்;* ***வாயிலில்*** - *வாயில் வைத்திருக்கின்ற;* ***வெள் எயிற்று அரவின்*** - *வெண் பற்கள் கொண்ட பாம்பின்;* ***வெவ்விடத்தை*** - *கொடிய நஞ்சினை;* ***மாய்க்கும்*** - *அழிக்கின்றவாறு;* ***நெடுமந்திரம் தந்தது ஓர் வலியின்*** - *உயர்ந்த மந்திரம் அளிக்கும் ஒப்பற்ற ஆற்றலைப் போன்று (உன் அம்பின் வலிமையால் இம்மாயாஸ்திரம்);* ***நினை நினைக்குவார்*** - *உன்னைத்*

*தியானிப்பவர்;* ***பிறப்பு என நீங்கும்*** *- பிறவி நீங்குவது போன்று தொலையும் (என்று மாதலி கூறினான்)*

*இராமநாமத்தின் பெருமை கூறப்பட்டது.*

*'கடிக்கும் வல் அரவும் கேட்கும் மந்திரம்' (கம்ப. 5204)*

***9825. 'வரத்தின் ஆயினும், மாயையின் ஆயினும், வலியோர்***
***உரத்தின் ஆயினும், உண்மையின் ஆயினும், ஓடத்***
***துரத்தியால்' என, ஞான மாக் கடுங் கணை***
***துரந்தான் -***
***சிரத்தின் நான்மறை இறைஞ்சவும் தொடரவும்***
***சேயோன்.***

***நான்மறை*** *- நான்கு வேதங்களும்;* ***சிரத்தின்*** *- தன் சிரசுக்கு நிகரான உபநிடதங்களால்;* **இறைஞ்சவும் தொடரவும்** *- வணங்கவும் தேடவும் (இயலாதவாறு);* **சேயோன்** *- அப்பாற்பட்டு நிற்பவனாகிய இராமன்;* **வரத்தின் ஆயினும்** *- வர பலத்தினாலாவது;* **மாயையின் ஆயினும்** *- மாயையினாலாவது;* **வலியோர் உரத்தின் ஆயினும்** *- வல்லமை மிக்க ஆற்றலினாலாவது;* **உண்மையின் ஆயினும்** *- சத்தியத்தினாலாவது (எந்த வகையிலாவது இருந்தாலும்);* **ஓடத் துரத்தியால்** *- மாயாஸ்திரம் ஓடும்படித் துரத்துவாய்;* **என** *- என்று;* **ஞானமாக் கடுங்கணை** *- ஞானமாகிய பெருமையும் கடுமையும் நிறைந்த அம்பினை;* **துரந்தான்** *- எய்தான்.*

*உபநிடதங்களை வேதத்தின் சிரம் என்பர்.*

***9826. துறத்தல் ஆற்று உறு ஞான மாக் கடுங் கணை***
***தொடர,***
***அறத்து அலாது செல்லாது, நல் அறிவு வந்து***
***அணுக,***
***பிறத்தல் ஆற்றுறும் பேதைமை பிணிப்புறத் தம்மை***
***மறத்தலால் தந்த மாயையின் மாய்ந்தது, அம் மாயை.***

***துறத்தல் ஆற்று*** *- (இராமபிரான்) ஏவியவழியில்;* ***உறு*** *- உற்ற;* ***மாக்கடும்*** *- பெருமை மிக்கதும் கடுமை கொண்டதுமான;* **ஞானக்கணை** *- ஞானாத்திரம்;* **தொடர** *- பின்தொடர;* ***அறத்து அலாது செல்லாத*** *- அறத்துக்கு மாறான வழியில் செல்லும் இயல்பு நீங்கி;* ***நல்லறிவு வந்து அணுக*** *- நல்லுணர்வு நெருங்கிச் சேர்தலால்;* ***பிறத்தல் ஆற்றுறும்*** *- பிறப்பின் (காரணமாக) வழிப்படும்;* **பேதைமை பிணிப்புற** *- அறியாமையின் கட்டுற்று;* **தம்மை மறத்தலால்** *- தம் நிலை மறந்ததனால்;* **தந்த** *- ஏற்பட்ட;* **மாயையின்** *- மாயை அழிவது போன்று;* **மாயம் மாய்ந்தது** *- அம்*

*மாயாத்திரம் தொலைந்தது. மெய்யுணர்வால் பிறப்பிற்குக் காரணமான மாயை நீங்குவது போன்று ஞானாத்திரத்தால் மாயாத்திரம் அழிந்தது.*

## *இராவணன் சூலம் வீசுதல்*

**சந்தக் கலித்துறை**

***9827. நீலம் கொண்டு ஆர் கண்டனும், நேமிப்***
***படையோனும்,***
***மூலம் கொண்டார், கண்டகர் ஆவி முடிவிப்பான்,***
***காலம் கொண்டார்; கண்டன முன்னே கழிவிப்பான்,***
***சூலம் கொண்டான், அண்டரை எல்லாம் தொழில்***
***கொண்டான்.***

***நீலம் கொண்டு ஆர்*** *- நீல நிறம் வந்து பொருந்திய;* ***கண்டனும்*** *- கழுத்தை உடைய சிவபெருமானும்;* ***நேமிப் படையோனும்*** *- சக்கரப் படை படைத்த திருமாலும்;* ***மூலம் கொண்டார்*** *- (திருமாலின் நாபிக் கமலத்தை) மூலமாகக் கொண்ட பிரமனும்;* ***கண்டகர்*** *- கொடிய அரக்கரின்;* ***ஆவி முடிவிப்பான்*** *- உயிரை அழிப்பதற்கு;* ***காலம் கொண்டார்*** *- உரிய காலத்தை அமைத்துக் கொண்டார்;* ***அண்டரை எல்லாம்*** *- தேவாதி தேவர்களை எல்லாம்;* ***தொழில் கொண்டான்*** *- ஏவல் கொண்டவனாகிய இராவணன்;* ***முன்னே கண்டன கழிவிப்பான்*** *- கண்ணுக்கு முன்னே காண்பனவெல்லாம் அழித்தல் கருதியவனாய்;* ***சூலம் கொண்டான்*** *- ஒரு சூலாயுதத்தை ஏந்தினான்.*

*மூலம் - கொப்பூழ்த் தாமரையாகிய மூலம்; கண்டகர் - முள் போன்ற கொடியவர்.*

***9828. கண்டா குலம் முற்று ஆயிரம் ஆர்க்கின்றது,***
***கண்ணில்***
***கண்டு ஆகுலம் உற்று உம்பர் அயிர்க்கின்றது, 'வீரர் -***
***கண் தா, குலம், முற்றும்' சுடும் என்று அக் கழல்***
***வெய்யோன்,***
***கண் தாகுதல் முன், செல்ல விசைத்துள்ளது***
***கண்டான்.****

***'செல்வாய்' என்ன*** *- 'சென்று வா' என்று;* ***செல்ல விடுத்தான்*** *- (இராவணன்) சூலத்தைச் செல்லுமாறு ஏவினான்;* ***வானோர்*** *- தேவர்கள்;* ***மெலிகின்றார்*** *- (உடலும் மனமும்) வாட்டமுற்றவராய்;* ***'வள்ளால் இது தீர்த்தற்கு நீயே ஒல்வாய்*** *- வள்ளலே! இதனை அழித்தற்கு உன்னால்தான் முடியும்;* ***வேறு ஒருவர்க்கும் உடையாது***

*- பிறர் எவராலும் (இதனை) அழிக்கவொண்ணாது;* ***வல்வாய் வெங்கண் சூலம்*** *- வலிய வாயுடன் கொடிதாய் வரும் சூலம்;* ***எனும் காலனை*** *- எனப் (பெயர் தரித்த) கூற்றுவனை;* ***வெல்வாய் வெல்வாய்*** *- 'வெற்றி கொள்க, வெற்றி கொள்க';* ***என்றனர்*** *- என்று வேண்டினர்.*

*ஆல் - அசை. ஒல்லுதல் - முடிதல்; அச்சம் காரணமாக விரைவுற்று இருமுறை 'வெல்வாய் வெல்வாய்' என அடுக்கினர்.*

## *இராமன் அம்புகள் சூலத்தை வெல்லாது போக அவன் உங்காரத்தால் அழித்தல்*

***9831. துனையும் வேகத்தால் உரும்ஏறும் துண்ணென்ன***
***வனையும் காலின் செல்வன, - தன்னை மறவாதே***
***நினையும் ஞானக் கண் உடையார்மேல் நினையாதார்***
***வினையம் போலச் சிந்தின - வீரன் சரம் வெய்ய.***

***துனையும் வேகத்தால்*** *- விரையும் வேகத்தால்;* ***உரும் ஏறும் துண்ணென்ன*** *- இடியேறும் திடுக்கிடுமாறு;* ***வனையும் காலின் செல்வன*** *- சூழும் காற்றெனச் செல்லுகின்ற;* ***வீரன் வெய்ய சரம்*** *- இராமபிரான் ஏவிய கொடிய அம்புகள்;* ***தன்னை மறவாதே நினையும்*** *- தன்னை என்றும் மறக்காது சிந்திக்கும்;* ***ஞானக்கண் உடையார் மேல்*** *- ஞானக்கண் படைத்த பேரன்பாளர் மீது;* ***நினையாதார் வினையம்*** *- இறைவனை நினையாத கீழ் மக்கள் செய்யும் தீமைகள்;* ***போலச் சிந்தின*** *- பயன் தராது அழிவது போன்று சிதறி விழுந்தன.*

***9832. எய்யும், எய்யும் தேவருடைத் திண் படை எல்லாம்;***
***பொய்யும் துய்யும் ஒத்து, அவை சிந்தும்; புவி தந்தான்***
***வய்யும் சாபம் ஒப்பு என வெப்பின் வலி கண்டான்***
***அய்யன் நின்றான், செய் வகை ஒன்றும்***
***அறிகில்லான்.***

***புவி தந்தான்*** *- பூமி காக்கும் இராமபிரான்;* ***தேவர் உடைத் திண்படை எல்லாம்*** *- வானோரின் வலிமை மிக்க படைக் கருவி-களெல்லாம்;* ***எய்யும் எய்யும்*** *- இடைவிடாது தொடுத்தான்;* ***அவை*** *- அவ்வாயுதங்கள்;* ***பொய்யும் துய்யும் ஒத்து*** *- பொய்ம்மையும் (மெல்லிய) பஞ்சினையும் போன்று;* ***சிந்தும்*** *- (சூலத்தை வெல்லாது) சிதறின;* ***அய்யன்*** *- இராமபிரான்;* ***வய்யும் சாபம் ஒப்பு என*** *- வைகின்ற சாபம் போன்று;* ***வெப்பின்*** *- வெம்மை சான்ற சூலத்தின்;* ***வலி கண்டான்*** *- வலிமையை உணர்ந்தான்;* ***செய்வகை ஒன்றும் அறிகில்லான் நின்றான்*** *- யாதும் செய்தற்கறியாதவன் போன்று (செயலற்று) நின்றான்.*

*பொய்யும் துய்யும் என்றது உண்மையின் முன் பொய் போலவும், நெருப்பின் முன் பஞ்சு போலவும் பயனற்றுப் போனதை உணர்த்தும் பொருட்டு, பரம்பொருளை, ஒன்றும் அறிகில்லான் என்றது அவன் எடுத்த பாத்திரத்தை முன்னிட்டு.*

***9833. 'மறந்தான் செய்கை; மற்று எதிர் செய்யும் வகை எல்லாம்***
***துறந்தான்' என்னா, உம்பர் துணுக்கம் தொடர்வுற்றார்;***
***அறம்தான் அஞ்சிக் கால் குலைய, தான் அறியாதே,***
***பிறந்தான் நின்றான்; வந்தது சூலம், பிறர் அஞ்ச.***

***செய்கை மறந்தான்*** *- (இராமபிரான்) செயலாற்றும் முறையை மறந்து போனான்* ***மற்று எதிர் செய்யும் வகை எல்லாம்*** *- மேலும் எதிரிகளை எதிர்த்துச் செய்ய வேண்டுவன அனைத்தையும்;* ***துறந்தான்*** *- நீத்து விட்டான்;* ***என்னா*** *- என்று கருதி;* ***உம்பர்*** *- தேவர்கள்;* ***துணுக்கம் தொடர்வுற்றார்*** *- அச்சம் தொடர நின்றனர்;* ***அறம் தான் அஞ்சிக் கால் குலைய*** *- அறம் நடுநடுங்கி நிலை குலைந்து போக;* ***பிறந்தான்*** *- மனிதனாகப் பிறந்த இராமபிரான்;* ***தான் அறியாதே நின்றான்*** *- தன் தெய்வீகத்தை உணராது நின்றான்;* ***பிறர் அஞ்ச*** *- (அது சமயம்) கண்டவர் அஞ்சுமாறு;* ***சூலம் வந்தது*** *- சூலப்படை நெருங்கி வந்தது.*

***9834. சங்காரத்தான் கண்டை ஒலிப்ப, தழல் சிந்த,***
***பொங்கு ஆரத்தான் மார்பு எதிர் ஓடிப் புகலோடும்,***
***வெங் காரத்தான் முற்றும் முனிந்தான்; வெகுளிப் பேர்***
***உங்காரத்தால் உக்கது, பல் நூறு உதிர் ஆகி.***

*(அச்சூலம்)* ***சங்காரத்தான்*** *- அழிவைச் செய்வதற்காக;* ***கண்டை ஒலிப்ப*** *- மணிகள் ஒலிக்க;* ***தழல் சிந்த*** *- நெருப்புச் சிதற;* ***பொங்கு ஆரத்தான் மார்பு எதிர்*** *- நிரம்பிய முத்து மாலைகளை அணிந்த இராமனது மார்பின் எதிராக;* ***ஓடிப் புகலோடும்*** *- விரைந்து வந்த அளவில் (இராமன்);* ***வெங்காரத்தான்*** *- கொடிய வெறுப்போடு;* ***முற்றும் முனிந்தான்*** *- மிகவும் கோபித்தான்;* ***வகுளிப் பேர் உங்காரத்தால்*** *- பெரிய சினத்தால் உண்டாகிய உங்கார சப்தத்தாலேயே;* ***பல்நூறு உதிர் ஆகி உக்கது*** *- (அச்சூலம்) பல நூறு பொடிகளாகிச் சிந்தியது.*

***9835. ஆர்ப்பார் ஆனார்; அச்சமும் அற்றார்; அலர் மாரி***
***தூர்ப்பார் ஆனார்; துள்ளல் புரிந்தார்; தொழுகின்றார்***
***'தீர்ப்பாய் நீயே தீ என வேறாய் வரு தீமை***
***பேர்ப்பாய் போலாம்!' என்றனர் - வானோர், உயிர்***

*பெற்றார்.*

**வானோர்** - தேவர்கள்; **உயிர் பெற்றார்** - இழந்த உயிரை மீண்டும் பெற்றவர்களாகி; **ஆர்ப்பார் ஆனார்** - ஆரவாரித்தார்கள்; **அச்சமும் அற்றார்** - பயம் நீங்கினார்கள்; **அலர் மாரி தூர்ப்பார் ஆனார்** - மலர் மழையை எங்கும் சொரிந்து தூர்த்தார்கள்; **துள்ளல் புரிந்தார்** - துள்ளுதலையும் செய்தார்கள்; **''தீர்ப்பாய் நீயே தீ என வேறாய் வரு தீமை பேர்ப்பாய்'' என்றனர் தொழுகின்றார்** - இந்தச் சூலத்தைத் தீர்ப்பவனாகிய நீயே எனக்கு நெருப்பென வேறாக வருகின்ற தீமைகளையும் நீக்குவாய் ஆவாய் என்று கூறியவர்களாய் வணங்குகின்றார்கள்.

போலாம் - உரையசை.

## *இராமனை வேத முதல்வனோ என இராவணன் ஐயுறல்*

***9836. 'வென்றான்' என்றே உள்ளம் வியந்தான், 'விடு சூலம்***
***பொன்றான்என்னின் போகலது' என்னும் பொருள்***
***கொண்டான்,***
***ஒன்று ஆம் உங்காரத்திடை உக்கு, ஓடுதல் காணா***
***நின்றான், அந் நாள் வீடணனார் சொல்***

***நினைவுற்றான்.*** **விடுசூலம்** - நாம் விட்ட சூலம்; **பொன்றான் என்னின் போகலது என்னும் பொருள் கொண்டான்** - (இராமன்) இறந்தால் அல்லாமல் அவனை விட்டுப் போகாது என்னும் கொள்கையைக் கொண்டவனாகிய இராவணன்; **ஒன்று ஆம் உங்காரத்திடை** - (இராமனது) தனித்தன்மை வாய்ந்த உங்கார சப்தத்தால்; **உக்கு ஓடுதல் காணா நின்றான்** - பொடிப் பொடியாகிப் போதலைக் கண்ணால் கண்டு நின்றவனாகி; **வென்றான் என்றே உள்ளம் வியந்தான்** - இவன் நம்மை வெற்றி கொண்டான் என்று மனத்தில் அவனை நன்கு மதித்து; **அந்நாள் வீடணனார் சொல் நினைவுற்றான்** - (அனுமன் தூது வந்த பொழுதும், மந்திர அவையிலும்) தன் தம்பியாகிய வீடணனது அறிவுரைகளை மனத்தில் நினைத்தான்.

***9837. 'சிவனோ? அல்லன்; நான்முகன் அல்லன்;***
***திருமாலாம்***
***அவனோ? அல்லன்; மெய் வரம் எல்லாம்***
***அடுகின்றான்;***
***தவனோ என்னின், செய்து முடிக்கும் தரன் அல்லன்;***
***இவனோதான் அவ் வேத முதல் காரணன்?'***
***என்றான்.***

***என் மெய் வரம் எல்லாம் அடுகின்றான்*** - என்னுடைய உண்மையான மிகச்சிறந்த வரபலங்களை எல்லாம் அழிக்கின்றான்; ***சிவனோ?*** - இவ்இராமன் சிவபெருமானாய் இருப்பானோ? ***அல்லன்*** - அப்படி இரான்; ***திருமாலாம் அவனோ?*** - திருமாலாகிய அவனாக இருப்பானோ?; ***அல்லன்*** - அப்படியும் இரான்; ***தவனோ என்னின்*** - தவம் செய்து ஆற்றல் பெற்றவனாய் இருப்பானோ என்றால்; ***செய்து முடிக்கும் தரன் அல்லன்*** - இத்தகைய பேராற்றலைத் தவத்தால் செய்து முடிக்கு தகுதியுடையவன் ஒருவனும் இல்லை; (ஆதலின்) ***அவ் வேத முதல் காரணன் இவனோதான்*** - அந்தத் தொன்மையான வேதங்களுக்கெல்லாம் மூல காரணமான ஆதிப் பரம் பொருள் இவன் தானோ?; ***என்றான்*** - என்று கூறி வியந்து பிரமித்து நின்றான்.

*மும்மூர்த்திகளும் திக்குவிசயம் செய்த போது இவன்பால் தோற்று ஓடியவர் ஆதலின் அவரை விலக்கினான். தானே மிகப் பெரும் தவங்களைச் செய்து வரங்களைப் பெற்றவன் ஆதலின் தன் வரங்களை அழிப்பவன் தன்னினும் மிகப் பெரிய தவம் செய்யவேண்டும். அப்படி ஒருவன் இருக்க இயலாது என்பது இவனது தற்செருக்கால் வந்த நினைவு, இவ்வாறு அனைத்தும் பொருந்தாமையின் வீடணன் கூறியபடி 'ஆதிப் பரம் பொருள்' இவன் என்பதை நினைந்து தெளிந்தான்.*

## *நிருதிப் படையும் கருடக் கணையும்*

***9838. 'யாரேனும் தான் ஆகுக! யான் என் தனி ஆண்மை***
***பேரேன்; நின்றே வென்றி முடிப்பென்; புகழ்பெற்றேன்;***
***நேரே செல்லும் கொல்லும் எனில் தான் நிமிர்வென்றி***
***வேரே நிற்கும்; மீள்கிலென்' என்னா, விடலுற்றான்.***

***யாரேனும் தான் ஆகுக*** - எதிர் நிற்பவன் (மேல் நாம் நினைத்தவருள்) எவனாக இருப்பினும் இருந்து விட்டுப் போகட்டும்; ***யான் என் தனி ஆண்மை பேரேன்*** - நான் எனக்கேயுரிய தனியாற்றலிலிருந்தும் பெயர மாட்டேன்; ***நின்றே வென்றி முடிப்பென்*** - (எதிர்) நின்றே என் வெற்றியை முடிப்பேன்; ***புகழ் பெற்றேன்*** - மூவுலகிலும் நான் வீரத்தால் புகழ் பெற்றவன்; ***நேரே செல்லும்*** - (ஒரு வீரன்) நேருக்கு நேர் செல்வான்; ***'கொல்லும்*** - கொல்வான்; ***எனில் தான்*** - என்றால்தான்; ***நிமிர் வென்றி வேரே நிற்கும்*** - மடங்காத வெற்றியின் (புகழ்) வேர் நிலைத்து நிற்கும்; ***மீள்கிலென்*** - (எது நேரினும்) திரும்பேன்; ***என்னா விடல் உற்றான்*** - என்று கூறியவாறு (இராவணன்) அம்புகளை விடுவதற்கு ஒருப் பட்டான்.

*முன் பாடலில் சிறிதே தலையெடுத்த சத்துவகுணம், இராவணனின் ராசதக் குணத்தால் மீண்டும் அடங்கி ஒடுங்கிப் போனமையை இப்பாடல் அறிவிக்கின்றது.*

***9839. நிருதித் திக்கில் நின்றனன் வென்றிப் படை நெஞ்சில்***
***கருதி, தன்பால் வந்தது அவன் கைக்கொடு, காலன்***
***விருதைச் சிந்தும் வில்லின் வலித்து, செலவிட்டான் -***
***குருதிச் செங் கண் தீ உக, ஞாலம் குலைவு எய்த.***

***நிருதித் திக்கில் நின்றவன்*** *- நிருதியின் திசையில் நிற்கும் திக்குப் பாலகனுடைய;* ***வென்றிப் படை நெஞ்சில் கருதி*** *- வெற்றி தரும் படைக்கலத்தை நெஞ்சத்தில் தியானிக்க;* ***தன்பால் வந்தது*** *- அப்படை (உடனே) அவனிடம் வந்தது;* ***அவன் கைக்கொடு*** *- அந்த இராவணன் அதனைக் கையால் ஏற்று;* ***காலன் விருதைச் சிந்தும்*** *- யமனுடைய வீர விருதுகளையெல்லாம் அழித்தொழிக்க வல்ல;* ***வில்லில் வலித்து*** *- (தன்) வில்லில் ஏற்றி;* ***குருதிச் செங்கண் தீ உக*** *- உதிரம் போல் சிவந்த (தன்) கண்கள் தீயுமிழுமாறும்;* ***ஞாலம் குலைவு எய்த*** *- உலகம் நிலை குலையவும்;* ***செலவிட்டான்*** *- அந்த (நிருதிக்கணையை) விடுத்தான்.*

*நிருதித் திசை - தென்மேற்குத் திசை.*

***9840. வய்யம் துஞ்சும் வன் பிடர் நாகம் மனம் அஞ்ச,***
***பய்யும் கோடிப் பல் தலையோடும் அளவு இல்லா,***
***மெய்யும் வாயும் பெற்றன, மேருக் கிரி சால***
***நொய்து என்று ஓதும் தன்மைய ஆக நுழைகின்ற.***

***வய்யம் துஞ்சும்*** *- (இந்த) உலகம் தங்குதற்கிடமான;* ***வன் பிடர் நாகம்*** *- வலிய பிடரியையுடைய ஆதிசேடன்;* ***மனம் அஞ்ச*** *- மனம் பயம் கொள்ளுமாறு;* ***கோடிப் பல் தலையோடும்*** *- வரிசையாக அமைந்த தலைகளோடும்;* ***பய்யும்*** *- படங்களும்;* ***அளவு இல்லா மெய்யும்*** *- எண்ணிக்கை கடந்த உடல்களும்;* ***வாயும் பெற்றன*** *- வாய்களும் பெற்றனவும்;* ***மேரு கிரி சால நொய்து*** *- மேரு மலை இவற்றோடு ஒப்பிட மிகவும் கனமற்றது;* ***என்று ஓதும் தன்மைய*** *- என்று கூறத்தக்கனவாய்;* ***நுழைகின்ற*** *- நுழைகின்றனவும்;*

***9841. வாய் வாய்தோறும் மா கடல் போலும் விட வாரி***
***போய் வார்கின்ற, பொங்கு அனல் கண்ணின்***
***பொழிகின்ற,***
***மீவாய் எங்கும் வெள்ளிடை இன்றி மிடைகின்ற,***
***பேய் வாய் என்ன வெள் எயிறு எங்கும் பிறழ்கின்ற.***

***வாய் வாய் தோறும்*** *- ஒவ்வொரு வாயிலிருந்தும்;* ***மாகடல் போலும்*** *- பெருங்கடல் நீர் போலும்;* ***விடநீர் போய் வார்கின்ற*** *- நச்சுநீர் மிகுதியாக ஒழுகப் பெற்றனவும்;* ***பொங்கு அனல் கண்ணில் பொழிகின்ற*** *- மிக நெருப்பைக் கண்களில்*

*கொட்டுகின்றனவும்;* ***மீவாய் எங்கும்*** *- மேலிடம் எங்கும்;* ***வெள் இடை இன்றி*** *- வெற்றிடம் இல்லாமல்;* ***மிடைகின்ற*** *- நெருங்குகின்றனவும்;* ***பேய் வாய் அன்ன*** *- பேய்களின் வாய்களைப் போல;* ***வெள் எயிறு*** *- வெண்மையான பற்கள்;* ***பிறழ்கின்ற*** *- விளங்குகின்றனவும்.*

***9842. 'கடித்தே தீரும்; கண் அகன் ஞாலம் கடலோடும்***
***குடித்தே தீரும்' என்று உயிர் எல்லாம் குலைகின்ற***
***'முடித்தான் அன்றோ, வெங் கண் அரக்கன்? முழு முற்றும்***
***பொடித்தான் ஆகும், இப்பொழுது' என்னப் புகைகின்ற.***

***கடித்தே தீரும்*** *- (இந்த நிருதிக்கணை) (இராமனைத்) தீண்டிக் கடித்தே தீரும்;* ***கண் அகல் ஞாலம் கடலோடும் குடித்தே தீரும்*** *- (கடித்துவிட்டு) இடமகன்ற இந்த உலகத்தைக் கடலோடும் சேர்த்துக் குடித்தே தீரும்;* ***என்று உலகெல்லாம் குலைகின்ற*** *- எனக் கூறி உலகோர் நிலைகுலைவதற்கு ஏதுவாய்;* ***வெங்கண் அரக்கன்*** *- அருளற்ற இந்த இராவணன்;* ***முழுமுற்றும் முடித்தான்*** *- உலகம் அடங்கலும் அழித்துக் கட்டிவிடுவான்;* ***இப்பொழுது பொடித்தான் ஆகும்*** *- இப்பொழுதே பொடி செய்து விடுவான்;* ***என்னப் புகைகின்ற*** *- என்னுமாறு புகை கக்கி வந்தன (அந்த நிருதிக்கணையுமிழ்ந்த நாகங்கள்)*

***9843. அவ்வாறு உற்ற ஆடு அரவம் தன் அகல் வாயால்***
***கவ்வா நின்ற மால் வரை முற்றும் அவை கண்டான்,***
***'எவ் வாய்தோறும் எய்தின' என்னா, எதிர் எய்தான்,***
***தவ்வா மெய்ம்மைக் காருடம் என்னும் படைதன்னால்.***

***அவ்வாறு உற்ற ஆடு அரவம்*** *- அங்ஙனம் படமெடுத்தாடும் இயல்பான நாகங்கள்;* ***தன் அகல்வாயில்*** *- தம் அகன்ற வாயினால்;* ***மால் வரை முற்றும்*** *- பெரிய மலைகள் முழுவதையும்;* ***கவ்வா நின்ற அவை கண்டான்*** *- கவ்வத்தக்கனவாய் அவை வருவதை (இராமன்) கண்டான்;* ***எவ்வாய் தோறும் எய்தின*** *- இந்த நாகங்கள் எல்லா இடங்களிலும் வந்து அடைந்தன;* ***என்னா*** *- என்றெண்ணி;* ***தவ்வா*** *- தவறாத;* ***மெய்ம்மைக் காருடம் என்னும் படை தன்னால்*** *- உண்மையுடைய கருடாத்திரம் என்னும் படைக்கலத்தால்;* ***எதிர் எய்தான்*** *- (அந்நாகக் கணைகளை அழிக்க) எதிர்க்கணையாக விட்டான்.*

*காருடம் - கருடன் தொடர்புடையது கருடாத்திரம். பாம்புக்குப் பகை கருடன்.*

***9844. எவண் எத்தன்மைத்து ஏகின நாகத்துஇனம் என்ன,***
***பவணத்து அன்ன வெஞ் சிறை வேகத் தொழில் பம்ப,***
***சுவணக் கோலத் துண்டம் நகம் தொல் சிறை வெல்***

**போர்**
**உவணப் புள்ளே ஆயின, வானோர் உலகு எல்லாம்.**

***நாகத்து இனம்*** - *(இராவணன் நிருதிக்கணையால் விடுத்த) நாகக் கூட்டங்கள்;* ***எவண் எத்தன்மைத்து ஏகின என்ன*** - *எங்கே எவ்வாறு ஏகி மறைந்தன என்று வியக்குமாறு;* ***பவணத்து அன்ன வெஞ்சிறை*** - *காற்றைப் போன்ற கொடிய சிறகுகளில்;* ***வேகத் தொழில் பம்ப*** - *விசையுடன் கூடிய பறக்கும் செயல் நிறைதலால்;* ***சுவணக்கோலம்*** - *பொன்மயமான நிறத்தையும்;* ***துண்டம், நகம், தொல் சிறை*** - *மூக்கையும், நகத்தையும், முதிர்ந்த சிறகையும் கொண்ட;* ***போர்வெல் உவணப் புள்ளே*** - *போரில் வெற்றியையே பெறும் கருடப் பறவையின் மயமாகவே;* ***வானோர் உலகு எல்லாம் ஆயின*** - *தேவர் உலகு முழுவதும் மாறின.*

*பவணம் - காற்று. பவனம் என்ற வடசொல் எதுகை நோக்கிப் பவணம் என வந்தது.*

### *கலி விருத்தம் (வேறு)*

***9845. அளக்க அரும் புள்இனம் அடைய ஆர் அழல்***
***துளக்க அரும் வாய்தொறும் எரியத் தொட்டன,***
***'இளக்க அரும் இலங்கை தீ இடுதும், ஈண்டு' என***
***விளக்குஇனம் எடுத்தன போன்ற, விண் எலாம்.***

***அளக்க அரும் புள்ளினம் அடைய*** - *எண்ண முடியாத கருடப் பறவைத் தொகுதி எல்லாம்;* ***துளக்க அரும் வாய் தொறும்*** - *அசைத்தற்கு இயலாத வாய்கள் தோறும்;* ***ஆர் அழல் எரியைத் தொட்டன*** - *பெருந் தீயையுமிழ்ந்தன;* ***அவை இளக்க அரும் இலங்கை தீ இடுதும்*** - *நெகிழாத இலங்கையை நெகிழ்விக்க நெருப்பையிடுவோம்;* ***ஈண்டு என*** - *விரைவில் என்று;* ***விண் எலாம்*** - *விண்ணுலகத் தேவர் எல்லோரும்;* ***விளக்கு இனம் எடுத்தன போன்ற*** - *விளக்குகளின் தொகுதியை எடுத்தாற் போன்றிருந்தன. இளகாத இலங்கையைத் தீயால் இளக்கிப் பயன் கொள்ள நினைத்தது போன்று, கோபத்தால் வாயில் தீக்கக்கினவாம் கருடப் பறவைகள். அவை இலங்கை நகரைச் சுட்டுப் பொசுக்கத் தேவர்கள் கைப்பந்தம் கொண்டது போன்றிருந்தது எனச் சுவைபடக் கூறினார். விளக்கு - இங்கு தீப்பந்தம் குறித்தது.*

***9846. குயின்றன சுடர் மணி, கனலின் குப்பையின்***
***பயின்றன, சுடர் தரப் பதும நாளங்கள்***
***வயின்தொறும் கவர்ந்தென்ன, துண்ட வாள்களால்***
***அயின்றன, புள்இனம் உகிரின் அள்ளின.***

***குயின்ற(ன்)ன*** - *நாகங்களின் தலையில் பதித்து வைத்தாற் போன்ற;* ***சுடர்மணி கனலின் குப்பையின் பயின்றன*** - *ஒளியுள்ள மாணிக்கங்கள் தீயின் தொகுதியைப் போன்றனவாய்;* ***சுடர் தர*** - *ஒளிவீச;* ***புள் இனம்*** - *அந்தக் கருடப் பறவைகள்;* ***பதும நாளங்கள்*** - *தாமரைத் தண்டுகளை;* ***வயின் தொறும்*** - *இடந்தோறும்;* ***கவர்ந்தென*** - *கவர்ந்து சென்றாற் போல;* ***உகிரின் அள்ளின*** - *அப்பாம்புகளைக் கால் நகங்களால் அள்ளி;* ***துண்ட வாள்களால்*** - *மூக்குகளாகிய வாள்களைக் கொண்டு;* ***அயின்றன*** - *கொத்தித் தின்றன.*

*கருடப் பறவைகள் தலையில் மாணிக்கம் பதித்த பாம்புகளை, தாமரைத் தண்டுகளைப் பற்றிச் செல்வது போற்சென்று கொத்தித் தின்றன. பதும நாளம் - தாமரைத் தண்டு.*

***9847. ஆயிடை அரக்கனும், அழன்ற நெஞ்சினன்,***
***தீயிடைப் பொடிந்து எழும் உயிர்ப்பன், சீற்றத்தன்,***
***மா இரு ஞாலமும் விசும்பும் வைப்பு அறத்***
***தூயினன், சுடு சரம் உருமின் தோற்றத்த.***

***ஆயிடை*** - *அப்போது;* ***அரக்கனும் அழன்ற நெஞ்சினன்*** - *இராவணனும் கொதிக்கும் நெஞ்சினன் ஆகி;* ***தீயிடைப் பொடிந்து எழும் உயிர்ப்பன்*** - *நெருப்புப் பொடியாகச் சிந்துகின்ற பெரு மூச்சுடையவனாய்;* ***சீற்றத்தன்*** - *வெகுளி மிக்கவனாய்;* ***மா இரு ஞாலமும் விசும்பும்*** - *மிக விரிந்த இந்த உலகமும் ஆகாயமும்;* ***வைப்பு அற*** - *இடமில்லையென்னும்படி;* ***உருமின் தோற்றத்த*** - *இடியைப் போன்று காட்சி தரும்;* ***சுடுசரம் தூயினன்*** - *சுடுகின்ற அம்புகளை வாரி வீசினான். இராவணன் அம்புகள் இடிபோன்று நிறைந்தன என்பதால், அவற்றின் விரைவும், ஒளியும், அழிக்கும் திறனும் உவமையால் பெற வைத்தார்.*

***9848. அங்கு அவ் வெங் கடுங் கணை அயிலின்***
***வாய்தொறும்***
***வெங் கணை படப் பட, விசையின் வீழ்ந்தன;***
***புங்கமே தலை எனப் புக்க போலுமால்;***
***துங்க வாள் அரக்கனது உரத்தில் தோற்றல!***

***அங்கு அவ் வெம்கடும் கணை*** - *அப்போது இராவணன் விட்ட கொடிய வேகங்கொண்ட அம்புகள்;* ***அயிலின் வாய் தொறும்*** - *(தம்முடைய) கூரிய வாய்கள் தோறும்;* ***வெம்கணை படப்பட*** - *(இராமனுடைய) கொடிய அம்புகள் படப்பட;* ***விசையின் வீழ்ந்தன*** - *வேகமாகச் சில வீழ்ந்தன;* ***துங்கவாள் அரக்கனது உரத்தில்*** -

*(வீரத்தில்) உயர்ந்தவனான இராவணனது மார்பில்;* ***புங்கமே தலையெனப் புக்க*** *- அம்பின் முனையே தலையாகப் புகுந்து கொண்டன;* ***தோற்றல*** *- (அதனால் அவை) கண்களுக்குப் புலப்படவில்லை.*

*அம்பின் அடிப்பகுதிகள் இராவணன் மார்பில் பதிந்து, அம்பின் முனைப் பகுதியே வெளியே சிறிது தெரிந்தமையால் "புங்கமே தலையெனப் புக்க" என்றார். புங்கம் - அம்பின் முனைப்பகுதி.*

## *இராவணன் விஞ்சைகள் தளர்தலும் இராமன் வீரமும் வலியும் மிகுதலும்*

***9849. ஒக்க நின்று எதிர் அமர் உடற்றும் காலையில்,***
***முக்கணான் தட வரை எடுத்த மொய்ம்பற்கு***
***நெக்கன, விஞ்சைகள், நிலையின் தீர்ந்தன;***
***மிக்கன, இராமற்கு வலியும் வீரமும்.***

***ஒக்க நின்று*** *- சரிசமமாக நின்று;* ***எதிர்*** *- எதிர்த்து;* ***அமர் உடற்றும் காலையில்*** *- போர்புரியும் போது;* ***முக்கணான் தடவரை எடுத்த மொய்ம்பற்கு*** *- சிவபெருமானது பெரிய கயிலை மலையைத் தூக்கிய தோள்களையுடைய வலிமை வாய்ந்த இராவணனுக்கு;* ***விஞ்சைகள்*** *- அவன் கற்று வைத்திருந்த மாய வித்தைகள்;* ***நெக்கன*** *- (நினைவுக்கு வரும் தன்மைகள்) நெகிழ்ந்தனவாயின;* ***நிலையில் தீர்ந்தன*** *- (ஆதலால்) அவற்றின் தெய்வத்தன்மைகள் அகன்று*

*போயின;* ***இராமற்கு வலியும் வீரமும் மிக்கன*** *- இராம பிரானுக்கோ வல்லமையும் வீரத் தன்மையும் மிகத் தொடங்கின.*

## *இராமன் இராவணன் தலையை அறுத்தல்*

***9850. வேதியர் வேதத்து மெய்யன், வெய்யவர்க்கு***
***ஆதியன் அணுகிய அற்றம் நோக்கினான்,***
***சாதியின் நிமிர்ந்தது ஓர் தலையைத் தள்ளினான்,***
***பாதியின் மதி முகப் பகழி ஒன்றினால்.***

***வேதியர் வேதத்து மெய்யன்*** *- வேதம் வல்லோர் ஓதுகின்ற வேதத்தின் உண்மைப் பொருளாயிருக்கும் இராமபிரான்;* ***வெய்யவர்க்கு ஆதியன்*** *- கொடியவர்கட்கெல்லாம் முதல்வனாயிருக்கும் இராவணனுக்கு;* ***அணுகிய அற்றம் நோக்கினான்*** *- (இராவணன் தலையைக் கொய்ய இதுவே) ஏற்ற சமயம் என்று*

*உணர்ந்து;* ***சாதியின் நிமிர்ந்த ஓர் தலையை*** *- அவன் தலைக் கூட்டத்தில் சிறந்த ஒரு தலையை;* ***பாதியின் மதி முகப்பகழி ஒன்றினால்*** *- அர்த்தசந்திரக்கணை ஒன்றால்;* ***தள்ளினான்*** *- (அறுத்து நிலத்தில்) வீழ்த்தினான்.*

*அரக்க சாதியின் ஆணவம் மிக்க தலைவன் ஆதலின் 'சாதியின் நிமிர்ந்தோன் தலை' என்றார் எனினுமாம். இராவணனுக்குச் சாதியால் வந்த செருக்கு உண்டு என்பதனை "சாதியால் வந்த சிறு நெறியறியான் என் தம்பி" (கம்ப. 7625) என வீடணனைக் கூறுமாற்றலால் கும்பகர்ணன் கூறியுள்ளமையைக் கொண்டு உணர்க.*

***9851. மேருவின் கொடுமுடி, வீசு கால் எறி***
***போரிடை, ஒடிந்து போய், புணரி புக்கென***
***ஆரியன் சரம் பட அரக்கன் வன் தலை***
***நீரிடை விழுந்தது, நெருப்பொடு அன்று போய்.***

***வீசு கால் எறி போரிடை*** *- வீசுகின்ற தன்மையனான காற்றுக் கடவுளோடு நிகழ்ந்த (ஆதிசேடனின்) போரில்;* ***மேருவின் கொடுமுடி*** *- மேரு மலையின் சிகரம்;* ***ஒடிந்து போய்*** *- முறிந்து போய்;* ***புணரி புக்கென*** *- கடலில் புகுந்தது போல்;* ***ஆரியன் சரம் பட*** *- இராமபிரானுடைய அம்பு தாக்கியதன் விளைவாக;* ***அரக்கன் வன் தலை*** *- இராவணனது வலிய தலை;* ***அன்று*** *- அந்நாளில்;* ***நெருப்பொடு போய் நீரிடை வீழ்ந்தது*** *- தீயோடு சென்று கடல் நீரில் போய் விழுந்தது.*

***9852. குதித்தனர் பாரிடை, குன்று கூறுற,***
***மிதித்தனர்; வடகமும் தூசும் வீசினார்;***
***துதித்தனர்; பாடினர்; ஆடித் துள்ளினார்;***
***மதித்தனர், இராமனை - வானுளோர் எலாம்.***

***வான் உளோர் எலாம்*** *- விண்ணுலக வாசிகளான தேவர்கள் யாவரும்;* ***பாரிடை குதித்தனர்*** *- மண்மீது குதித்தார்கள்;* ***குன்று கூறுஉற மிதித்தனர்*** *- திரிகூட மலை மூட்டு நெகிழும்படி துகைத்தார்கள்;* ***வடகமும் தூசும் வீசினர்*** *- (மகிழ்வின் மிகுதியால்) மேலாடைகளையும் இடையாடைகளையும் வீசியெறிந்தனர்;* ***இராமனைத் துதித்தனர் பாடினர் ஆடித்துள்ளினர்*** *- இராமபிரானை துதித்து, பாடி, ஆடித்துள்ளி மகிழ்ந்தனர்;* ***மதித்தனர்*** *- (இராமபிரானின்) பேராற்றலை உயர்த்திப் போற்றினர்.*

***9853. இறந்தது ஓர் உயிருடன் தருமத்து ஈட்டினால்***
***பிறந்துளதாம் எனப் பெயர்த்தும், ஓர் தலை***

***மறந்திலது எழுந்தது, மடித்த வாயது;-***
***சிறந்தது தவம் அலால், செயல் உண்டாகுமே!***

***இறந்தது ஓர் உயிர்*** *- இறந்துபோன ஓர் உயிர்;* ***கருமத்து ஈட்டினால்*** *- (ஈட்டிய) கருமங்களின் தொகுதியால்;* ***உடன்*** *- உடனே;* ***பிறந்து உளதாம் என*** *- (மீண்டும்) பிறந்திருப்பது போல;* ***பெயர்த்தும்*** *- திரும்பவும்;* ***மறந்திலது*** *- (முன் இருந்த நிலைமையை) மறவாமல்;* ***மடித்த வாயது*** *- (சினத்தால்) மடித்த வாயோடு கூடியதாய்;* ***அத்தலை எழுந்தது*** *- அந்த இராவணன் தலை மீண்டும் முளைத்தது;* ***சிறந்தது தவம் அலால்*** *- (உலகில்) சிறந்ததான தவம் இல்லையானால்;* ***செயல் உண்டாகுமோ*** *- (இவ்வாறான) அரிய செயல்கள் நிகழக் கூடுமோ? (கூடாது).*

***9854. கொய்தது, 'கொய்திலது' என்னும் கொள்கையின்***
***எய்த வந்து, அக் கணத்து எழுந்தது ஓர் சிரம்,***
***செய்த வெஞ் சினத்துடன் சிறக்கும் செல்வனை***
***வைதது, தெழித்தது, மழையின் ஆர்ப்பது.***

***கொய்தது*** *- கொய்யப் பெற்றதாகி;* ***கொய்திலது*** *- கொய்யப் படவில்லை;* ***என்னும் கொள்கையின்*** *- என்னும் எண்ணம் உண்டாகுமாறு;* ***எய்த அக்கணத்து*** *- எய்த அந்தக் கணத்திலேயே;* ***வந்து எழுந்தது ஓர் சிரம்*** *- (உடனே) வந்து ஒரு தலை முளைத்தது;* ***செய்த வெஞ்சினத்துடன்*** *- வெளிப்படும்படியான கொடுங் கோபக் குறியுடன்;* ***சிறக்கும் செல்வனை*** *- பெருமைக்குரிய இராமபிரானை;* ***மழையின் ஆர்ப்பது*** *- மழை போன்ற ஆரவாரத்துடன்;* ***வைதது தெழித்தது*** *- வைது திட்டியது.*

*செய்த வெஞ்சினத்துடன் - தலை அறுபடுவதற்கு முன்பிருந்த கோபக் குறியுடன். தெழித்தல் - அதட்டுதல்.*

***9855. இடர்ந்தது கிரிக் குவடு என்ன எங்கணும்***
***படர்ந்தது, குரை கடல் பருகும் பண்பது,***
***விடம் தரு விழியது, முடுகி, வேலையில்***
***கிடந்ததும், ஆர்த்தது, மழையின் கேழது.***

***விடம் தரு விழியது*** *- நஞ்சைக் கக்குகின்ற கண்களையுடையதாகி;* ***முடுகி*** *- விரைந்து;* ***வேலையில் கிடந்ததும்*** *- கடலிற் கிடந்ததான தலையும்;* ***கிரிகுவடு கிடந்தது என்ன*** *- மலைச்சிகரம் குத்தி எடுக்கப்பட்டது என்னுமாறு;* ***எங்கணும் படர்ந்தது*** *- எங்கும் சென்றதாகி;* ***மழையின் கேழது*** *- மேகத்தின் நிறத்தைக் கொண்டு;* ***குரை கடல்*** *- ஒலிக்கின்ற கடலின் நீரை;* ***பருகும் பண்பது*** *- பருகுகின்ற தன்மையதாய்;* ***ஆர்த்தது*** *- ஆரவாரித்தது.*

*மேகம் கடல்நீரை உண்ணும் தன்மையது எனும் புராண மரபு பற்றி, இராவணன் தலைமை மேகமாக்கி, கடல் நீரினை அது உண்டு ஆர்ப்பரித்தது என்றார்.*

## *இராவணனது கையை இராமன் அறுக்க, அது மீண்டும் முளைத்தல்*

***9856. 'விழுத்தினன் சிரம்' எனும் வெகுளி மீக்கொள,***
***வழுத்தின, உயிர்களின் முதலின் வைத்த ஓர்***
***எழுத்தினன், தோள்களின் ஏழொடு ஏழு கோல்***
***அழுத்தினன் - அசனிஏறு அயிர்க்கும் ஆர்ப்பினான்.***

***அசனு ஏறு அயிர்க்கும் ஆர்ப்பினான்*** - *பேரிடியும் அஞ்சக் கூடியவாறு ஆர்ப்பரிக்கின்ற இராவணன்;* ***சிரம் விழுத்தினன் எனும் வெகுளி மீக்கொள*** - *தன் தலையை (இராமன்) வீழ்த்திவிட்டான்*

*என்கின்ற வெகுளி மேல் ஓங்கி;* ***வழுத்தினன்*** - *(யாவரும்) போற்றுமாறு;* ***உயிர்களின் முதலில்*** - *உயிர் எழுத்துக்களின் முதலிலே;* ***வைத்த ஓர் எழுத்தினன் தோள்களில்*** - *வைக்கப் பட்டுள்ள ஒப்பற்ற எழுத்தாகிய அகர வடிவினனான இராமபிரானுடைய தோள்களில்;* ***ஏழொடு ஏழு கோல் அழுத்தினான்*** - *பதினான்கு சரங்களைப் பதித்தான்.*

*"எழுத்துகளில் நான் அகரமாக இருக்கிறேன்" என்பது "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு" என்று வள்ளுவனார் வாக்கும் நோக்குக. (குறள்: 1) "அகரத்திற்குத் தலைமை விகாரத்தான் அன்றி, நாத மாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை, செயற்கையுணர்வானன்றி, இயற்கையுணர்வான் முற்றும் உணர்தலானும் கொள்க என்ற இக்குறளுக்குப் பரிமேலழகர் உரைத்த நயவுரையும் இங்கு நினைத்தற் குரியது. இராமன் அகார வாச்சியனான மூல முதற் பொருளே என மீண்டும் நினைப்பித்தவாறு.*

***9857. 'தலை அறின், தருவது ஓர் தவமும் உண்டு' என***
***நிலை உறு நேமியான் அறிந்து, நீசனைக்***
***கலை உறு திங்களின் வடிவு காட்டிய***
***சிலை உறு கையையும் தலத்தில் சேர்த்தினான்.***

***தலை அறின் தருவது ஓர் தவமும் உண்டு என*** - *(இராவணனுடைய) தலையை அரிந்தால் (அது மீண்டும்) பெறுவதாகிய ஒரு வரத்தை இவன் பெற்றிருக்கிறான் என்று;* ***நிலையுறு நேமியான் அறிந்து*** - *நிலை பேறுடைய சக்கரப் படையையுடைய இராமபிரான் அறிந்து;* ***நீசனை*** - *இழிந்தவனாகிய இராவணனை;* ***கலையுறு***

***திங்களின் வடிவு காட்டிய*** - *(பாதிக்) கலைகள் அமைந்த சந்திரனின் (அரை வட்ட) வடிவைக் காட்டுகின்ற;* ***சிலை உறு கையையும்*** - *வில் ஏந்திய கையினையும்;* ***தலத்தில் சேர்த்தினான்*** - *(துண்டித்து) நிலத்தில் வீழச் செய்தான்.*

***9858. கொற்ற வெஞ் சரம் பட, குறைந்து போன கை***
***பற்றிய கிடந்தது சிலையைப் பாங்குற***
***மற்று ஓர் கை பிடித்தது போல வவ்வியது;***
***அற்ற கை, பிறந்த கை, யார் அது ஓர்குவார்?***

***கொற்ற வெம் சரம் பட*** - *(இராமபிரானுடைய) வெற்றி மிகுந்த கொடிய அம்பு பட்டதனால்;* ***குறைந்து போன கை*** - *வெட்டப்பட்டு விட்ட கை;* ***பற்றிய கிடந்தது சிலையை*** - *பற்றிக் கிடந்த வில்லை;* ***பாங்குற மற்று ஓர் கை பிடித்தது போல*** - *(கீழே விழுமுன்) மற்றொரு கை அழகாகப் பற்றிக் கொண்டது போல;* ***வவ்வியது*** - *(புதிதாக முளைத்த உடனே) பிடித்துக் கொண்டது;* ***அற்ற கை பிறந்த கை*** - *அறுக்கப்பட்ட கை மீண்டும் முளைத்து விட்டதை;* ***யார் அது ஓர்குவார்?*** - *(முளைத்த விரைவினால்) யாரும் அறிய இயலவில்லை?*

*பிறந்த கை எனும் பாடம் கொள்ளப்பெற்றது.*

*இராவணன் மாதலியைத் தாக்குதல்*

***9859. பொன் கையிற்று ஊர்தியான் வலியைப் போக்குவான்***
***முன்கையில் துறு மயிர் முள்ளின் துள்ளுற***
***மின் கையில் கொண்டென வில்லை விட்டிலா***
***வன் கையைத் தன் கையின் வலியின் வாங்கினான்.***

***ஊர்தியான்*** - *(இராமபிரானுடைய தேர்ச்சாரதியான) மாதலியின்;* ***பொன் கை இற்று வலியைப் போக்குவான்*** - *அழகிய கையை ஒடித்து அவன் வலிமையைப் போக்கக் கருதிய இராவணன்;* ***முன் கையில் துறும் மயிர்*** - *முன்னங் கையிலே அடர்ந்துள்ள மயிர்;* ***முள்ளில் துள்ளுற*** - *முள்ளைப் போல் கூச்செறிய;* ***மின்கையில் கொண்டென*** - *மின்னலைக் கையிற் கொண்டாற் போன்ற;* ***வில்லை விட்டிலா*** - *வில்லை விடாத;* ***வன் கையை*** - *(இராமனால் முன்பு) வெட்டப்பட்ட வலிய கையினை;* ***தன் கையின்*** - *(இராவணன்) தனது கையால்;* ***வலியின் வாங்கினான்*** - *வலிமையுடன் எடுத்து வீசினான்.*

*மாதலி - இந்திரன் ஆணையால் தேரோடு வந்து இராமபிரானுக்குத் தேர் ஓட்டும் சாரதி.*

***9860. விளங்கு ஒளி வயிர வாள் அரக்கன் வீசிய***
***தளம் கிளர் தடக் கை தன் மார்பில் தாக்கலும்,***
***உளம் கிளர் பெரு வலி உலைவு இல் மாதலி***

***துளங்கினன், வாய் வழி உதிரம் தூவுவான்.***

***விளங்கு ஒளி வயிர வாள் அரக்கன்*** - *ஒளி விளங்குகின்ற வயிர வாளையுடைய இராவணன்;* ***வீசிய தளம் கிளர் தடக்கை*** - *வீசியெறிந்த பருத்துக் கிளர்ந்த பெரிய கரம்;* ***தன் மார்பில் தாக்கலும்*** - *தனது மார்பில் தாக்கியவுடனே;* ***உளம் கிளர் பெருவலி*** - *மனத்தில் எழுகின்ற பெரு வலிமை வாய்ந்த;* ***உலைவில் மாதலி*** - *தளர்வில்லாத மாதலி;* ***வாய் வழி உதிரம் தூவினான் துளங்கினான்*** - *தன் வாயின் வழியாகக் குருதியினைச் சிந்தியவனாய் நிலை குலைந்தான்.*

***9861. மா மரத்து ஆர் கையால் வருந்துவானை ஓர்***
***தோமரத்தால் உயிர் தொலைப்பத் தூண்டினன் -***
***தாம் அரத்தால் பொராத் தகை கொள் வாட் படை,***
***காமரத்தான், சிவன் கரத்து வாங்கினான்.***

***அரத்தால் பொராத் தகை கொள் வாள்படை*** - *அரத்தினால் அராவப் படாத (இயல்பாகக்) கூர்மை கொண்ட வாட்படையை;* ***காமரத்தால் சிவன் கரத்து வாங்கினான்*** - *சீகாமரப்பண் பாடி, சிவபெருமானது கரங்களிலிருந்து பெற்றவனாகிய இராவணன்;* ***மாமரத்து ஆர் கையால் வருந்துவானை*** - *பெரிய மரம் போன்ற தன் கையின் தாக்குதலால் வருந்துகின்ற மாதலியை;* ***ஓர் தோமரத்தால்*** - *ஒரு தோமரம் என்ற ஆயுதத்தால்;* ***உயிர் தொலைப்பத் தூண்டினான்*** - *உயிரை நீக்குமாறு செலுத்தினான்.*

*"சங்கரன் கொடுத்த வாள்" (கம்ப. 7272) ஆதலின் இயற்கையாகக் கூர்மையுள்ளது. காமரம் - சீகா மரம் எனும் பண். சாமகானத்தைச் சார்ந்தது.*

**சந்தக் கலிவிருத்தம்**

***9862. 'மாண்டது இன்றோடு மாதலி வாழ்வு' என***
***மூண்ட வெந் தழல் சிந்த முடுக்கலும்,***
***ஆண்ட வில்லி ஓர் ஐம் முக வெங் கணை***
***தூண்டினான்; துகளானது, தோமரம்.***

***மாதலி வாழ்வு இன்றோடு மாண்டது*** - *மாதலியின் வாழ்க்கை இன்றோடு முடிந்தது;* ***என*** - *என்னும்படி;* ***மூண்ட வெந்தழல் சிந்த முடுக்கலும்*** - *மூட்டிய கொடுந்தழலைச் சிந்திக்கொண்டு (தோமரப் படையை) விரைந்து இராவணன் விடுத்தபோது;* ***ஆண்ட வில்லி*** - *யாவரையும் ஆட்கொள்பவனும் கோதண்டம் எனும் பெயருடைய வில்லையுடையவனுமாகிய இராமபிரான்;* ***ஓர் ஐம்முக வெங்கணை தூண்டினான்*** - *ஒப்பற்ற ஐந்து முகங்களையுடைய கொடிய அம்பினைச் செலுத்தினான்;* ***துகள் ஆனது தோமரம்*** - *பொடிப் பொடியாய்ப்போனது அந்தத் தோமரப்படை.*

*ஆண்ட வில்லி - தம்மை ஆட்கொண்ட வில்லி எனக் கவிஞர் பிரான் அன்பின் மிகுதியால் கூறினதுமாம். "என்னை யாளுடைய ஐயன்" (கம்ப 204) என்பார் முன்னும். ஐம்முக வெங்கணை பாசுபதாத்திரம். சிவனுக்கு ஐம்முகன் எனும் பெயருண்டாதலின்.*

## *இராவணன் தலை அறுபட்டுச் சிதறி வீழ்தல்*

***9863. ஒய்வு அகன்றது, ஒரு தலை நூறு உற,***
***போய் அகன்று புரள, பொரு கணை***
***ஆயிரம் தொடுத்தான் - அறிவின் தனி***
***நாயகன் கைக் கடுமை நடத்தியே.***

***அறிவின் தனி நாயகன்*** - *ஞானத்தின் ஒப்பற்ற தலைவன் ஆகிய இராமபிரான்;* ***கை கடுமை நடத்தி*** - *(தனது) கையில் வேகத்தைச் செலுத்தி;* ***ஒய்வு அகன்று*** - *ஒழிவில்லாமல்;* ***ஒருதலை நூறு உற*** - *ஒரு தலை நூறு தலைகளாக முளைக்கவும்;* ***அகன்று போய்*** - *(அவையனைத்தும்) வெகு தொலையிற்போய்;* ***புரளப் பொருகணை ஆயிரம் தொடுத்தான்*** - *புரளுமாறு போர் அம்புகள் ஆயிரம் விடுத்தான்.*

*உயிர்கட்கும் அறிவு உண்டாயினும், உயிரின் அறிவு மாசடையும் குறையறிவாதலாலும், இறைவனின் அறிவே வாலறிவும் நிறையறிவும் ஆதலாலும் "அறிவின் தனி நாயகன்" என இராமபிரான் குறிக்கப் பெற்றான்.*

***9864. நீர்த் தரங்கங்கள்தோறும், நிலம்தொறும்,***
***சீர்த்த மால் வரைதோறும், திசைதொறும்,***
***பார்த்த பார்த்த இடம்தொறும், பல் தலை***
***ஆர்த்து வீழ்ந்த - அசனிகள் வீழ்ந்தென.***

***பல்தலை*** - *(துண்டுபட்ட) இராவணனின் பல தலைகளும்;* ***நீர்த் தரங்கங்கள் தொறும்*** - *கடலின் அலைகளிலும்;* ***நிலம் தொறும்*** - *பல்வகை நிலங்கள் தோறும்;* ***சீர்த்த மால்வரை தொறும்*** - *சிறப்பான பெரிய மலைகள் தோறும்;* ***திசை தொறும்*** -

*திசைகள் தொறும்;* ***பார்த்த பார்த்த இடம் தொறும்*** *- கண்ணிற் பட்ட இடங்கள் தோறும்;* ***அசனிகள் வீழ்ந்தென*** *- இடிகள் வீழ்ந்தாற் போன்று;* ***ஆர்த்து வீழ்ந்த*** *- ஆர்ப்பரிப்போடு வீழ்ந்தன.*

***9865. தகர்ந்து மால் வரை சாய்வுறத் தாக்கின;***
***மிகுந்த வான்மிசை மீனம் மலைந்தன;***
***புகுந்த மா மகரக் குலம் போக்கு அற***
***முகந்த வாயின், புணரியை முற்றுற.***

***தகர்ந்து*** *- (இவ்வாறு இராம பாணத்தால் துண்டுபட்ட இராவணனின் தலைகள்) பிளவுண்டு;* ***மால் வரை சாய்வுறத் தாக்கின*** *- பெரிய மலைகள் சாயுமாறு (அவற்றின் மேல்) மோதின;* ***மிகுந்த வான்மிசை*** *- விரிந்த ஆகாயத்தில் உள்ள;* ***மீனம் மலைந்தன*** *- நட்சத்திரங்களைத் தாக்கின;* ***புகுந்த*** *- (கடலிலும்) புகுந்து;* ***மா மகரக்குலம் போக்குஅற*** *- பெரிய சுறாமீன் கூட்டங்கள் போகுமிடம் இன்றி;* ***புணரியை முற்றுற வாயின் முகந்த*** *- கடல் நீர் முழுவதையும் வாயில் அடக்கின.*

***9866. பொழுது நீட்டிய புண்ணியம் போன பின்,***
***பழுது செல்லும் அன்றே, மற்றைப் பண்பு எலாம்? -***
***தொழுது சூழ்வன முன், இன்று தோன்றவே,***
***கழுது சூன்ற, இராவணன் கண் எலாம்.***

***பொழுது நீட்டிய புண்ணியம் போனபின்*** *- பலகாலமாய் நீளத் துய்த்துவந்த புண்ணியப் பயன் தீர்ந்து போன பின்னால்;* ***மற்றைப் பண்பு எல்லாம்*** *- (புகழ் முதலிய) பிற பண்புகள் யாவும்;* ***பழுது செல்லும் அன்றே?*** *- பழுது பட்டுப் போகும் அல்லவா?* ***தொழுது சூழ்வன*** *- (முன்பெல்லாம்) வணங்கி வலம் வரக்கூடிய;* ***கழுது*** *- பேய்கள்;* ***முன் நின்று தோன்ற*** *- நேராக நின்று, வெளிப்படையாக;* ***இராவணன் கண் எலாம் சூன்ற*** *- இராவணனுடைய (அறு பட்ட தலைகளில் உள்ள) கண்களையெல்லாம் (அஞ்சாமல்) தோண்டித் தின்றன.*

***9867. வாளும், வேலும், உலக்கையும், வச்சிரக்***
***கோளும், தண்டும், மழு எனும் கூற்றமும்***
***தோளின் பத்திகள்தோறும் சுமந்தன,***
***மீளி மொய்ம்பன் உரும் என வீசினான்.***

***மீளி மொய்ம்பன்*** - மிகுவலி படைத்தவனான இராவணன்; ***தோளின் பத்திகள் தோறும்*** - (அவன்) தோள்களின் வரிசைகள் தோறும்; ***சுமந்தன*** - தாங்கி நின்ற; ***வாளும் வேலும் உலக்கையும்*** - வாள், வேல், உலக்கை; ***வச்சிரக்கோளும்*** - வச்சிராயுதம்; ***தண்டும்*** - கதாயுதமும்; ***மழு எனும் கூற்றமும்*** - யமனைப் போன்று வருத்தும் மழுவாயுதமும் ஆகிய படைகளை; ***உரும் என வீசினான்*** - இடிகளைப் போல எறிந்தான்.

*மொய்ம்பு - வலிமை, தோளுமாம்.*

***9868. அனைய சிந்திட, ஆண்தகை வீரனும்***
***'வினையம் என் இனி? யாதுகொல் வெல்லுமா?***
***நினைவென்' என்ன, 'நிசாசரன் மேனியைப்***
***புனைவென், வாளியினால்' எனப் பொங்கினான்.***

***அனைய சிந்திட*** - அத்தகைய போர்ப் படைகளை (இராவணன்) வீசவும்; ***ஆண்தகை வீரனும்*** - ஆண்மைப் பண்புகட்கு உறைவிடமான இராமபிரானும்; ***இனி வினையம் என்?*** - இனிப்புரிய வேண்டிய நுட்பமான செயல் எது?; ***வெல்லுமா யாது*** - இராவணனை வெல்லும் வழி யாது; ***நினைவென்*** - ஆராய்வேன்; ***என்ன*** - என்று; ***நிசாசரன் மேனியை*** - அரக்கனின் உடலை; ***வாளியினால் புனைவென்*** - கணைகளால் அலங்கரிப்பேன்; ***என்று பொங்கினான்*** - என்று வெகுண்டெழுந்தான்.

*இராவணன் மேனியை இராமன் முற்றிலும் அம்பினால் மூடுதல்*

***9869. மஞ்சு அரங்கிய மார்பினும், தோளினும்,***
***நஞ்சு அரங்கிய கண்ணினும், நாவினும்,***
***வஞ்சன் மேனியை, வார் கணை அட்டிய***
***பஞ்சரம் எனல் ஆம் படி பண்ணினான்.***

***மஞ்சு அரங்கிய மார்பினும் தோளினும்*** - (நிறத்தால்) மேகத்தைத் தோல்வியுறச் செய்த மார்பிலும் தோளிலும்; ***நஞ்சு அரங்கிய கண்ணினும் நாவினும்*** - நஞ்சினைத் தோல்வியுறச் செய்த கண்களிலும் நாவிலும்; ***வஞ்சன் மேனியை*** - (வேறு பிற உறுப்புக்களிலுமாக) வஞ்சகனான இராவணன் உடம்பினை; ***வார்கணை அட்டிய*** - (அம்புகளை விடுத்து) நீண்ட அம்புகள் வைத்திருப்பதற்கேற்ற; ***பஞ்சரம் எனலாம் வகை பண்ணினான்*** - கூடு (தூணி) என்று கூறலாம்படி செய்தான்.

*பஞ்சரம் - கூடு. இங்கு அம்பறாத் தூணி. இராமனின் அம்புகள் ஆயிரக்கணக்காகப் புறப்பட்டமையால், அவன் முதுகிலிருந்த சிறிய அம்பறாத்தூணி போதாமையால்*

*அவ்வம்புகளை வைக்க இராவணனின் உடம்பை, பெரிய அம்பறாத் தூணியாக்கினான் எனும் நயந்தோன்றக் கூறினார்.*

***9870. வாய் நிறைந்தன, கண்கள் மறைந்தன,***
***மீ நிறங்களின் எங்கும் மிடைந்தன,***
***தோய்வுறும் கணை, செம்புனல் தோய்ந்தில,***
***போய் நிறைந்தன, அண்டப் புறம் எலாம்.***

***வாய் நிறைந்தன*** - *(இராவணன்) வாய்கள் தோறும் இராமனின் அம்புகள் நிறைந்தன;* ***கண்கள் மறைந்தன*** - *கண்கள் யாவும் அம்புகளால் மறைந்தன;* ***மீ நிறங்களின் எங்கும் மிடைந்தன*** - *மார்புக்கு மேற்பட்ட இடங்கள் யாவும் அம்புகளால் நிறைந்தன;* ***தோய்வுறும் கணை செம்புனல் தோய்ந்தில*** - *உடலிற் பதிந்த வாளிகள் குருதி படு முன்னே வெளியேறிப் போய் விட்டன;* ***அண்டப்புறம் எலாம் போய் நிறைந்தன*** - *அண்டவெளியெல்லாம் (இராமனின்) அம்புகளால் நிறைந்து கிடந்தன.*

***9871. மயிரின் கால்தொறும் வார் கணை மாரி புக்கு,***
***உயிரும் தீர உருவின ஓடலும்,***
***செயிரும் சீற்றமும் நிற்க, திறல் திரிந்து,***
***அயர்வு தோன்ற, துளங்கி அழுங்கினான்.***

***மயிரின் கால் தொறும்*** - *மயிர்க்கால்கள் தோறும்;* ***வார்கணை மாரி புக்கு*** - *நீண்ட சரமாரி நுழைந்து;* ***உயிரும் தீர*** - *உயிர்த்தல் செய்யவும் இயலாதபடி;* ***உருவின ஓடலும்*** - *ஊடுருவிப் போவதனால்;* ***செயிரும் சீற்றமும் நிற்க*** - *வன்மமும், வெகுளியும் (மனத்துள்) நின்றாலும்;* ***திறல்திரிந்து அயர்வு தோன்ற*** - *(உடம்பின்) ஆற்றல் கெட்டு சோர்வுண்டாகி;* ***துளங்கி அழுங்கினான்*** - *நிலை குலைந்து வருந்தினான் (இராவணன்).*

### *இராவணன் தேரில் உணர்வு இழந்து கிடக்க, சாரதி தேரினை விலக்கி நிறுத்தல்*

***9872. வாரி நீர்நின்று எதிர் மகரம் படச்***
***சோரி சோர, உணர்வு துளங்கினான்;***
***தேரின்மேல் இருந்தான் - பண்டு தேவர்தம்***
***ஊரின்மேலும் பவனி உலாவுவான்.***

***பண்டு தேவர் தம் ஊரின் மேலும்*** - முன்பு தேவர்களின் ஊரின் மேல் எல்லாம்; ***பவனி உலாவுவான்*** - பவனி போய் உலா வந்தவனான இராவணன்; ***வாரி நீர் நின்று*** - கடல் நீரிலிருந்து; ***எதிர்*** - எதிர்த்து மோதி; ***மகரம் பட*** - மகர மீன்கள் இறந்து போகுமாறு; ***சோரி சோர*** - (தன் உடலிலிருந்து) குருதி வடிய; ***உணர்வு துளங்கினான்*** - அறிவு கலங்கினவனாய்; ***தேரின் மேல் இருந்தான்*** - தேரின் மீது கிடந்தான்.

*பவனி - மன்னர்கள் பிறந்தநாள் (நாள் மங்கலம்) முதலிய நாட்களில் வீதி வலம் வருதல்.*

***9873. ஆர்த்துக்கொண்டு எழுந்து உம்பர்கள் ஆடினார்;***
***வேர்த்துத் தீவினை வெம்பி விழுந்தது;***
***'போர்த்துப் போய்தனன்' என்று, பொலம் கொள் தேர்***
***போர்த்துச் சாரதி போயினன், பின்றுவான்.***

***உம்பர்கள் ஆர்த்துக் கொண்டு எழுந்து ஆடினர்*** - (இராவணன் தேரின் மேல் உணர்வற்றுக் கிடப்பது கண்டு எழுந்த மகிழ்ச்சியினால்); தேவர்கள் ஆர்ப்பரித்துக் கொண்டு (உவகை) மேலெழுந்து கூத்தாடினர்; ***தீவினை வெம்பி வேர்த்து விழுந்தது*** - தீவினையானது (மனம்) புழுங்கி (அச்சத்தால்) வேர்த்து விழுந்தது; ***சாரதி*** - (இராவணனுடைய) தேர்ச்சாரதி; ***போர் துப்பு ஓய்ந்தனன்*** - போர் புரியும் ஆற்றலில் தளர்ந்தான்; ***என்று*** - எனக் கருதி; ***பின்றுவான்*** - (அங்கு நிற்கப்) பின்வாங்கி; ***பொலம் கொள் தேர்*** - பொன்மயமான (இராவணன்) தேரை; ***பேர்த்துப் போயினன்*** - (அங்கிருந்து) திருப்பிக்கொண்டு போய் நிறுத்தினான்.

***9874. கை துறந்த படையினன், கண் அகல்***
***மெய் துறந்த உணர்வினன், வீழ்தலும்,***
***எய் திறம் தவிர்ந்தான் - இமையோர்களை***
***உய் திறம் துணிந்தான், அறம் உன்னுவான்.***

***இமையோர்களை உய்திறம் துணிந்தான்*** - தேவர்களைக் காக்கத் துணிவு கொண்டவனாய் அவதரித்த இராமபிரான்; ***கை துறந்த படையினன்*** - கையிலிருந்து நழுவிய படைக்கலத்தை யுடையவனாய்; ***கண் அகல் மெய் துறந்த உணர்வினன்*** - இடம் விரிந்த உடம்பில் உணர்ச்சியற்றவனாய் உள்ள இராவணன்; ***வீழ்தலும்*** - (தேரின் மேல் மயங்கி) வீழ்ந்தவுடன்; ***அறம் உன்னுவான்*** - போர் அறத்தை நினைவு கொண்டவனான இராமபிரான்; ***எய்திறம் தவிர்ந்தான்*** - அம்பு விடுக்கும் செயலை நிறுத்தி விட்டான்.

*மாதலி இராவணனைக் கொல்லத் தூண்டலும் இராமன் நீதியன்று எனலும்*

***9875. 'தேறினால், பின்னை யாதும் செயற்கு அரிது;***
***ஊறுதான் உற்றபோதே உயிர்தனை***
***நூறுவாய்' என, மாதலி நூக்கினான்;***
***ஏறு சேவகனும், இது இயம்பினான்:***

***மாதலி*** *- மாதலியாகிய இராமனின் சாரதி (அப்போது);* ***தேறினால் பின்னை யாதும் செயற்கு அரிது*** *- இராவணன் (மூர்ச்சை) தெளிந்தால், பிறகு அவனை ஒன்றும் செய்தல் கூடாது;* ***ஊறு தான் உற்ற போதே*** *- (ஆதலால்) அவன் இடையூறு அடைந்துள்ள போதே;* ***உயிர்தனை நூறுவாய்*** *- அவன் உயிரை அழித்திடுவாயாக;* ***என நூக்கினான்*** *- என்று (இராமனை) தூண்டினான்;* ***ஏறு சேவகனும் இது இயம்பினான்*** *- சிங்க ஏறு போன்ற இராமபிரானும் பின்வருமாறு கூறினான்.*

*அரிது - இன்மை மேற்று. மனக்கவலை மாற்றல் அரிது. (குறள்.7) என்புழிப்போல.*

***9876. 'படை துறந்து, மயங்கிய பண்பினான்***
***இடை பெறும் துயர் பார்த்து, இகல் நீதியின்***
***நடை துறந்து, உயிர் கோடலும் நன்மையோ?***
***கடை துறந்தது போர், என் கருத்து' என்றான்.***

***படை துறந்து மயங்கிய பண்பினான் இடை*** *- போர்க் கருவிகளைக் கைவிட்டு, நினைவிழந்து கிடக்கின்ற தன்மை உள்ளவனிடத்தில்;* ***பெறும்துயர் பார்த்து*** *- அழிக்கக்கூடிய துன்பம் உண்டாயிருப்பதைப் பார்த்து;* ***இகல் நீதியின் நடைதுறந்து*** *- போர் நீதியின் ஒழுக்கத்திலிருந்து விலகி;* ***உயிர் கோடலும் நன்மையோ?*** *- உயிரைக் கொள்வதும் அறம் ஆகுமோ?* ***என் கருத்து*** *- என்னுடைய கருத்தின்படி;* ***கடை துறந்தது போர்*** *- கடைப்பட்ட பண்புகளிலிருந்து விலகுவதுதான் (தூய) போர் நெறியாகும்; என்றான்-...*

*உணர்வு பெற்ற இராவணன், சாரதியைச் சினத்தல்*

***9877. கூவிரம் செறி பொன் கொடித் தேரொடும்***
***போவர் அஞ்சினர், அன்னது ஓர் போழ்தினின்,***
***ஏவர் அஞ்சலியாதவர்? எண்ணுடைத்***
***தேவர் அஞ்ச, இராவணன் தேறினான்.***

***கூவிரம் செறி பொற் கொடித் தேரொடும்*** - *கொடிஞ்சியெனும் கைப்பிடியோடு கூடிய பொன்னாலான கொடியுடன் கூடிய தேர்களோடு;* ***போவர் அஞ்சினர்*** - *போகின்ற அச்சம் கொண்ட அரக்கருள்;* ***அன்னதோர் போழ்தினின்*** - *அப்போது;* ***ஏவர் அஞ்சலியாதவர்?*** *- (இராமபிரானுடைய அற நெஞ்சத்தை எண்ணி) யார்தாம் கை கூப்பி வணங்காதவர்?;* ***எண்ணுடை*** - *மதிப்புக்குரிய;* ***தேவர் அஞ்ச*** - *வானவர்கள் அஞ்சுமாறு (அப்போது);* ***இராவணன் தேறினான்*** - *இராவணன் (மயக்க நிலையிலிருந்து) தெளிவுபெற்றான்.*

*கூவிரம் - கொடிஞ்சி. தேரில் இருக்கைக்கு எதிராக, கையாற் பற்றிக் கொள்ளுவதற்கு உதவும் தாமரை மொட்டின் வடிவில் அமைந்த ஓர் உறுப்பு. இராமபிரானின் போர் அறச்சிந்தை கண்டு, இரக்கம் என்றொரு பொருள் இல்லாத அரக்கர்களும் அஞ்சலி செய்தனர். "இரங்காத அரக்கிமாரும் தளர்ந்தழுதார்" (கம்ப. 8675) என்பதும் நினைக.*

***9878. உறக்கம் நீங்கி உணர்ச்சியுற்றான் என,***
***மறக் கண் வஞ்சன், இராமனை வான் திசைச்***
***சிறக்கும் தேரொடும் கண்டிலன்; சீற்றம் தீப்***
***பிறக்க நோக்கினன்; பின்னுற நோக்கினான்.***

***மறக்கண் வஞ்சன்*** - *கொடுமை மிகும் கண்களையுடைய வஞ்சக இராவணன்;* ***உறக்கம் நீங்கி*** - *மயக்கம் நீங்கி;* ***உணர்ச்சியுற்றான் என*** - *மூர்ச்சை தெளிந்த அளவிலே;* ***வான்திசை*** - *சிறந்த திக்குகளில்;* ***சிறக்கும் தேரொடும் இராமனைக் கண்டிலன்*** - *புகழுடைய தேரோடு நிற்கும் இராமனை கண்டான் இல்லை;* ***பின் உற நோக்கினான்*** - *தன் தேர்ப் பாகனைப் பின்புறமாகப் பார்த்த அவன்;* ***சீற்றத் தீப்பிறக்க நோக்கினான்*** - *சினத்தீ கொப்புளிக்க (அவனைப்) பார்த்தான்.*

***9879. 'தேர் திரித்தனை, தேவரும் காணவே,***
***வீர விற்கை இராமற்கு வெண் நகை***
***பேர உய்த்தனையே; பிழைத்தாய்' எனா,***
***சாரதிப் பெயரோனைச் சலிப்புறா.***

***தேவரும் காண*** - *தேவர்கள் யாவரும் காணுமாறு;* ***தேர் திரித்தனை*** - *தேரைத் திருப்பி ஓட்டி வந்துவிட்டாய்;* ***வீர விற்கை இராமற்கு*** - *(அதனால்) வீரம் செறிந்த கோதண்டம் ஆகிய வில்லினை ஏந்திய இராமனுக்கு;* ***வெள் நகை பேர உய்த்தனை*** - *வெள்ளிய (ஏளனப்) புன்னகை எழுமாறு செய்து விட்டாய்;* ***எனா*** - *என்று;* ***சாரதிப் பெயரானைச் சலிப்புறா*** - *சாரதியாகப் பெயர் தாங்கியவனை வெறுத்தவனாய்;*

***9880. 'தஞ்சம் நான் உனைத் தேற்ற, தரிக்கிலா***
***வஞ்ச! நீ பெருஞ் செல்வத்து வைகினை;***
***''அஞ்சினேன்'' எனச் செய்தனை; ஆதலால்,***
***உஞ்சு போதிகொலாம்!' என்று உருத்து எழா.***

***தரிக்கிலா வஞ்ச !*** - *பொறுத்துக் கொள்ள இயலாத வஞ்சம் கொண்டவனே!* ***தஞ்சம் நான் உனைத் தேற்ற*** - *(என்னைக்) காப்பவன் நீ என்று நான் உன்னைத் தெளிந்திருக்க;* ***நீ பெரும் செல்வத்து வைகினை*** - *(அதனால் நான் தரும் செல்வங்கொண்டு) நீ பெரிய வளவாழ்வு வாழ்கின்றாய்;* ***அஞ்சினேன் எனச் செய்தனை*** - *இவ்வளவிற்கும் கைம்மாறாக எதிரிக்குப் பயந்தேன் என்று (மாற்றார்) (என்னைக்) கருதுமாறு செய்துவிட்டாய்;* ***ஆதலால்*** - *ஆகையால்;* ***உஞ்சு போதி கொல்*** - *உய்ந்து போவாயோ நீ;* ***என்று உருத்து எழா*** - *என்று கூறி (இராவணன்) வெகுண்டு எழுந்து*

*சாரதி தந்த விளக்கம்*

***9881. வாள் கடைக்கணித்து ஓச்சலும், வந்து, அவன்***
***தாள் கடைக்கு அணியாத் தலை தாழ்வுறா,***
***'மூள் கடைக் கடுந் தீயின் முனிவு ஒழி,***
***கோள் கடைக்கணித்து' என்று அவன் கூறுவான்.***

***வாள் கடைக் கணித்து*** - *(இராவணன் தன்) வாளைக் கடைக் கண்ணால் நோக்கி;* ***ஓச்சலும்*** - *(சாரதி மீது செலுத்த) ஓங்கலும்;* ***அவன் வந்து*** - *சாரதி (நெருங்கி) வந்து;* ***தாள் கடைக்கு அணியா*** - *(இராவணனின்) பாதங்களாகிய கடை உறுப்பிற்கு அண்மையாக;* ***தலை தாழ்வுறா*** - *தன் தலையினைத் தாழ்த்தி வணங்கி;* ***கடைக்கணித்துக் கோள்*** - *என்னுடைய சொற்களைக் கடைக்கணித்து (ஏற்றுக்) கொள்வாயாக;* ***மூள் கடைத்தீயின் முனிவு ஒழி*** - *யுகாந்த காலத்து எழும் ஊழித்தீ போன்ற உன் சினத்தீயை அவிப்பாயாக;* ***என்று அவன் கூறுவான்*** - *என்று வேண்டியவனாய் (மேலும்) கூறுகின்றான்.*

***9882. 'ஆண்தொழில் துணிவு ஓய்ந்தனை; ஆண்டு இறை***
***ஈண்ட நின்றிடின், ஐயனே! நின் உயிர்***
***மாண்டது இக் கணம் என்று, இடர் மாற்றுவான்,***
***மீண்டது, இத் தொழில்; எம் வினை மெய்ம்மையால்.***

***ஐயனே !*** - *தலைவனே!* ***ஆண் தொழில் துணிவு ஓய்ந்தனை*** - *வீரச் செறிவு புரியும் துணிவு உன்னிடம் தளர்ந்தது;* ***ஆண்டு இறை ஈண்ட நின்றிடின்*** - *அந்த இடத்தில் அருகிருந்திருந்தால்;* ***நின்னுயிர் அக்கணம் மாண்டது என்று*** - *உன்னுயிர் அந்தக் கணம் மடிந்தொழிந்து விடும் என்று கருதி;* ***இடர் மாற்றுவான்*** - *(உனக்கு வரவிருந்த)*

*துன்பத்தை மாற்றவேண்டி;* ***மீண்டது இத் தொழில்*** *- தேரை மீட்டுக்கொண்டு வரும் இச்செயலை நான் செய்தது;* ***எம்வினை மெய்ம்மை*** *- எம் செயல் (என்றும்) உண்மையாவதேயாகும்.*

***9883. 'ஓய்வும் ஊற்றமும் நோக்கி, உயிர் பொறைச்***
***சாய்வு நீக்குதல் சாரதி தன்மைத்தால்,***
***மாய்வு நிச்சயம் வந்துழி; வாளினால்***
***காய்வு தக்கது அன்றால்; கடை காண்டியால்.'***

***மாய்வு நிச்சயம் வந்துழி*** *- மடிவது உறுதி என்று சாரதி முடிவுக்கு வரும்போது;* ***ஓய்வும் ஊற்றமும் நோக்கி*** *- தேர் மீது இருக்கும் தலைவனின் தளர்ச்சியும் வலிமையும் அறிந்து;* ***உயிர்ப் பொறைச் சாய்வு நீக்குதல்*** *- உடலின் தளர்ச்சியை நீக்கும் செயல்களைச் செய்தல்;* ***சாரதி தன்மைத்து*** *- தேர் ஓட்டியின் கடமைப் பண்பேயாகும்;* ***வாளின் மேல் காய்வு தக்கது அன்று*** *- வாள் கொண்டு தண்டிக்க நினைத்தல் தக்க செயல் ஆகாது;* ***கடைகாண்டி*** *- இறுதியில் நான் செய்த செயலின் உண்மை நோக்கத்தை உணர்வாயாக.*

***9884. என்று இறைஞ்சலும், எண்ணி இரங்கினான்,***
***'வென்றி அம் தடந் தேரினை மீட்க!' என,***
***சென்று எதிர்ந்தது, தேரும்; அத் தேர்மிசை***
***நின்ற வஞ்சன் இராமனை நேர்வுறா.***

***என்று இறைஞ்சலும்*** *- (தேரோட்டி) இவ்வாறு கூறி இராவணனை வணங்கிய போது;* ***எண்ணி இரங்கினான்*** *- (அவன் செய்தது சரியென்று) கருதி (தான் அவன் மேல் வெகுண்டதற்கு வருந்தி அவன் மேல்) இரக்கம் கொண்டவனாய்;* ***வெற்றி அம் தேரினை மீட்க*** *- வெற்றித் தேரினை மீண்டும் செலுத்துவாயாக;* ***என*** *- என்று இராவணன் கூறியவுடன்;* ***தேரும் சென்று எதிர்ந்தது*** *- அவன் தேரும் சென்று இராமனுக்கு எதிர் நின்றது;* ***அத்தேர் நின்ற வஞ்சன்*** *- அத்தேர்மீது நின்ற வஞ்சகனாகிய இராவணன்;* ***இராமனை நேர்வுறா*** *- இராமபிரானை நோக்கி எதிர்ப்பட்டு;*

*குளகம். தூற்றினான் என்று அடுத்த பாடலில் வினை முடிவு கொள்ளும்.*

***9885. கூற்றின் வெங் கணை கோடியின் கோடிகள்***
***தூற்றினான், வலி மும் மடி தோற்றினான்;***
***வேற்று ஓர் வாள் அரக்கன் என, வெம்மையால்***
***ஆற்றினான் செரு; கண்டவர் அஞ்சினார்.***

***கூற்றின் வெங்கணை*** - *(கொல்லும் தொழிலில்) யமனைக் காட்டிலும் கொடிய கணைகள்;* ***கோடியின் கோடிகள்*** - *கோடி கோடியானவற்றை;* ***தூற்றினான்*** - *இராகவன் மீது செலுத்தினான்* ***வேறு ஓர் வாள் அரக்கன் என்று*** - *(இவன் முந்தைய இராவணன் அல்லன்) வேறொரு புதிய வாள் அரக்கன் என்னுமாறு;* ***வெம்மையால் செரு ஆற்றினான்*** - *கொடும் போர் புரிந்தான்;* ***கண்டவர் அஞ்சினார*** - *(அப்போரைப்) பார்த்தவர்கள் (எல்லோரும்) அச்சம் கொண்டனர்.*

## *இராமன், இராவணன் வில்லைத் துண்டித்தல்*

***9886. 'எல் உண்டாகின் நெருப்பு உண்டு' எனும் இது ஓர்***
***சொல் உண்டாயதுபோல், இவன் தோளிடை***
***வில் உண்டாகின் வெலற்கு அரிது ஆம்' எனா,***
***செல் உண்டால் அன்னது ஓர் கணை சிந்தினான்.***

***எல் உண்டாகின் நெருப்பு உண்டு*** - *ஒளியுண்டானால் தீயுண்டு;* ***எனும் இது ஓர் சொல் உண்டாயது போல்*** - *என்கின்ற ஒவ்வொரு சொல்தொடர் உண்டாகியிருப்பது போல;* ***இவன்*** - *இந்த இராவணனுடைய;* ***தோளிடை வில் உண்டாகின்*** - *தோள்களிடையே வில் கிடக்கும் வரை;* ***வெலற்கு அரிது ஆம் எனா*** - *வெல்ல முடியாதாகும் என்று கருதி;* ***செல் உண்டால் அன்னது ஓர்கணை சிந்தினான்*** - *இடியை விழுங்கியது போன்ற தோர் ஒப்பற்ற கணையைச் செலுத்தினான் (இராமன்)*

*எல் - ஒளி. எல்லே இலக்கம் என்பது தொல்காப்பியம்*

***9887. நாரணன் படை நாயகன் உய்ப்புறா,***
***பார் அணங்கினைத் தாங்குறும் பல் வகை***
***வாரணங்களை வென்றவன் வார் சிலை***
***ஆர் அணங்கை இரு துணி ஆக்கினான்.***

***நாரணன் படை*** - *நாராயணன் அத்திரத்தை;* ***நாயகன்*** - *இராமபிரான்;* ***உய்ப்புறா*** - *செலுத்தி;* ***பார் அணங்கினைத் தாங்கும்*** - *பூமகளைத் தாங்கி நிற்கும்;* ***பல்வகை வாரணங்களை*** - *எட்டுத் திக்கு யானைகளையும்;* ***வென்றவன் வார்சிலை*** - *வென்றவனான இராவணனின் நீண்ட வில்லை;* ***ஆர் அணங்கை*** - *மிக்க அச்சம் தருவதான அவ்வில்லை;* ***இரு துணி ஆக்கினான்*** - *இருதுண்டாகச் செய்தான்.*

*ஆர் அணங்கு - மிகு துன்பம் தருவது. இங்கு இராவணன் வில்லைக் குறித்தது.*

***9888. அயன் படைத்த வில், ஆயிரம் பேரினான்***

***வியன் படைக்கலத்தால் அற்று வீழ்தலும்***
***உயர்ந்து உயர்ந்து குதித்தனர் உம்பரார்,***
***'பயன் படைத்தனம், பல் தவத்தால்' என்றார்.***

***அயன் படைத்த வில்*** - *பிரமதேவனால் உருவாக்கப் பெற்ற வில்;* ***ஆயிரம் பேரினான் வியன் படைக்கலத்தால்*** - *ஆயிரம் திருநாமங்களையுடையவனான நாராயணனின் அத்திரத்தால்;* ***அற்று வீழ்தலும்*** - *அறுக்கப்பட்டு வீழ்ந்தவுடன்;* ***உம்பர் உயர்ந்து உயர்ந்து குதித்தனர்*** - *தேவர்கள் (மகிழ்வின் மிகுதியால்) எம்பி எம்பிக் குதித்தார்கள்;* ***பல் தவத்தால் பயன் படைத்தனம் என்றார்*** - *(நாம் இதுவரை செய்த) பற்பல தவங்கட்கான பயனை இன்றடைந்தோம் என்று கூறி மகிழ்ந்தார்கள்.*

***9889. மாறி மாறி, வரி சிலை வாங்கினான்***
***நூறு நூறினோடு ஐ - இருநூறு அவை***
***வேறு வேறு திசை உற, வெங் கணை***
***நூறி நூறி, இராமன் நுறுக்கினான்.***

***மாறி மாறி*** - *(இராவணன்) ஒன்றன்பின் ஒன்றாக;* ***வரிசிலை வாங்கினான்*** - *கட்டமைந்த விற்களை வாங்கிக் கொண்டேயிருந்தான்;* ***இராமன்*** - *இராமபிரான்;* ***நூறு நூறினோடு ஐஇரு நூறு அவை*** - *கோடி விற்களை;* ***வேறு வேறு திசை உற*** - *வேறு வேறு திசைகளிற் போய் விழுமாறு;* ***வெம்கணை நூறி நூறி*** - *கொடிய அம்புகளால் துகள் துகளாக்கி;* ***நுறுக்கினான்*** - *பொடி செய்தான்.*

*நூறு நூறு - பத்தாயிரம். பத்து ஆயிரத்துடன் இருநூறான ஆயிரத்தைப் பெருக்கினால் கோடியாவது உணர்க, அளவிறந்த எண் தொகையினைக் கோடியெனக் கூறிவிடுதல் கவி மரபு. நுறுக்குதல் - இன்று நொறுக்குதல் என வழங்கும்.*

***9890. இருப்புலக்கை, வேல், தண்டு, கோல், ஈட்டி, வாள்,***
***நெருப்பு உலக்க வரும் நெடுங் கப்பணம்,***
***திருப் புலக்க உய்த்தான் - திசை யானையின்***
***மருப்பு உலக்க வழங்கிய மார்பினான்.***

***திசையானையின் மருப்பு உலக்க வழங்கிய மார்பினான்*** - *எட்டுத் திக்கு யானைகளின் தந்தங்களும் ஒடியுமாறு, தன்*

*மார்பினைக் காட்டிய இராவணன்;* ***திரு புலக்க*** - *(இராமன் மார்பில் அகலாது வாழும்) திருமகளும் புலந்து சிறிது அப்பால் (மார்பை) விட்டு ஒதுங்குமாறு;* ***இரும்பு உலக்கை, வேல், தண்டு, கோல், ஈட்டி, வாள்*** - *இரும்பால் ஆன உலக்கை, வேல் கதை, குத்துக்கோல், ஈட்டி, வாள்;* ***நெருப்பு உலக்க வரும் கப்பணம்*** - *தீயைச் சிந்தி*

*வரும் கப்பணம் ஆகிய படைக்கருவிகளையும்;* ***உய்த்தான்*** *- (இராமன் மேல்) செலுத்தினான்.*

*திரிபணி என்னும் சொல்லணி.*

***9891. அவை அனைத்தும் அறுத்து, அகன் வேலையில்***
***குவை அனைத்தும் எனக் குவித்தான், குறித்து,***
***'இவை அனைத்தும் இவனை வெல்லா' எனா,***
***நவை அனைத்தும் துறந்தவன் நாடினான்.***

***அவை அனைத்தும்*** *- (இராவணன் எடுத்த) ஆயுதங்கள் அனைத்தையும்;* ***அறுத்து*** *- (தன் அம்புகளால்) துண்டித்து;* ***அனைத்தும்*** *- (அவ்வாறு துண்டித்த) அனைத்தையும்;* ***அகல் வேலையில்*** *- அகன்ற கடலில்;* ***குவை எனக் குவித்தான்*** *- குவியலாகக் குவித்தான்;* ***நவை அனைத்தும் துறந்தவன்*** *- குற்றங்கள் அனைத்தையும் நீக்கியவனான இராமபிரான்;* ***இவையனைத்தும் இவனை வெல்லா எனா*** *- இப்படைக் கருவிகள் எல்லாம் இவனை வெல்ல இயலாதவையென்று;* ***குறித்து நாடினான்*** *- வேறு செய்யும் குறிப்பில் ஆராய முற்பட்டான்.*

*நவையனைத்தும் துறந்தவன் - இராமன். "சகல கல்யாண குணங்களுக்கும் உறைவிடமானவன்." "குற்றங்களுக்கு எதிர்த் தட்டானவன்" என்பார் திருவாய் ஈடு மகாப்பிரவேசம் நம்பிள்ளை. "குற்றம் வீய்ந்த குணத்தின் எம்கோமகன்" (கம்ப. 3322) எனவும் "நவையறு குணங்கள் என்னும் பூண் எலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி" (கம்ப; 7653) எனவும் கூறும் பிராட்டி வாக்குகளை இங்கு நினைவு கூர்க.*

***9892. 'கண்ணினுள் மணியூறு கழிந்தன,***
***எண்ணின் நுண் மணலின் பல வெங்கணை;***
***புண்ணினுள் நுழைந்து ஓடிய, புந்தியோர்,***
***எண்ணின் நுண்ணிய, என் செயற்பாற்று' எனா.***

***எண்ணின்*** *- ஆராய்ந்தால்;* ***நுண்மணலின் பல*** *- நுண்ணிய மணலினும் பலவாகி;* ***புந்தியோர் எண்ணின் நுண்ணிய வெங்கணை*** *- அறிஞர்களின் (நுண்ணிய) கருத்துக்களிலும் நுண்ணியவான பல கொடுங்கணைகள்;* ***கண்ணின் உள் மணியூடு கழிந்தன*** *- கண்ணின் உள் உள்ள கரு மணியின் உள்ளே ஊடுருவிச் சென்றன;* ***புண்ணின் உள் நுழைந்து ஓடிய*** *- (முன்பே பட்டிருந்த) புண்களையே (இலக்காக) நுழைந்து ஓடின;* ***என் செயற்பாற்று*** *- (இவையெல்லாம் இராவணனை ஒன்றும் செய்யவில்லையாதலின்) இனி என்ன செய்ய வேண்டும்;* ***எனா*** *- என்று ஆய்ந்து.*

***9893. 'நாரணன் திரு உந்தியில் நான்முகன்***
***பார வெம் படை வாங்கி, இப் பாதகன்***
***மாரின் எய்வென்' என்று எண்ணி, வலித்தனன்,***
***ஆரியன், அவன் ஆவி அகற்றுவான்.***

***ஆரியன்*** - *இராமபிரான்;* ***அவன் ஆவி அகற்றுவான்*** - *இராவணனுடைய உயிரைப் போக்கக் கருதி;* ***நாரணன்*** - *நாராயணனுடைய;* ***திருஉந்தியில் நான்முகன்*** - *நாபிக் கமலத்தே தோன்றிய நான்முகமுடைய பிரம்மாவின்;* ***பார வெம்படை வாங்கி*** - *பெருமை மிக்க கொடிய அம்பை எடுத்து;* ***இப்பாதகன் மாரின் எய்வென்*** - *இந்தப் பாவியினுடைய மார்பில் பாய்ச்சுவேன்;* ***என்று எண்ணி வலித்தான்*** - *என்று கருதி, அக்கருத்திலே உறுதி கொண்டான்.*

***9894. முந்தி வந்து உலகு ஈன்ற முதற் பெயர்***
***அந்தணன் படை வாங்கி அருச்சியா,***
***சுந்தரன் சிலை நாணில் தொடுப்புறா,***
***மந்தரம் புரை தோள் உற வாங்கினான்.***

***முந்தி வந்து உலகு ஈன்ற முதற்பெயர் அந்தணன்*** - *உயிர் வருக்கத்தின் முதல்வனாகத் தோற்றம் எடுத்து, உலகினைப் படைத்த முதல்வன் எனப் புகழ் பெற்ற அந்தணாளன் ஆகிய பிரமதேவனுடைய;* ***படை வாங்கி*** - *அத்திரத்தை எடுத்து;* ***அருச்சியா*** - *(அதனை) அருச்சித்து;* ***சிலை நாணில் தொடுப்பு உறா*** - *வில்லின் நாணில் தொடுத்து;* ***சுந்தரன்*** - *பேரழகனான பெருமான் இராமன்;* ***மந்தரம் புரை தோள் உற வாங்கினான்*** - *மேரு மலை போன்ற (தன்) தோளில் பொருந்துமாறு இழுத்தான்.*

***9895. புரம் சுடப் பண்டு அமைத்தது, பொன் பணை***
***மரம் துளைத்தது, வாலியை மாய்த்துளது,***
***அரம் சுடச் சுடர் நெஞ்சின் அரக்கர் கோன்***
***உரம் சுட, சுடரோன் மகன் உந்தினான்.***

***புரம் சுடப் பண்டு அமைந்தது*** - *சிவபெருமான் முப்புரத்தை எரிக்க அமைக்கப் பெற்றதும்;* ***பொன் பணைமரம் துளைத்தது*** - *அழகிய கிளைகள் கொண்ட மராமரத்தைத் துளைக்க இராமபிரான் பயன்படுத்தியதும்;* ***வாலியை மாய்த்துளது*** - *இராமபிரான் வாலியை மடிக்க எடுத்ததும் ஆகிய அந்தப் பிரம்மாத்திரத்தை;* ***அரம் சுட*** - *அரமானது தாக்க;* ***சுடர் நெஞ்சின் அரக்கர்கோன்*** - *மேலும் சுடர் விடும் தீச்சுடர் போன்று (துன்பம் தாக்கவும் துவளாத) நெஞ்சினையுடைய அரக்கர்களின் தலைவனான இராவணனது;* ***உரம் சுட*** - *மார்பினைத் தாக்கும் வண்ணம்;* ***சுடரோன் மகன் உந்தினான்*** - *சூரிய குலத்து மகனான இராமபிரான் செலுத்தினான்.*

## *அயன் படையால் இராவணன் உயிர் இழத்தல்*

***9896. காலும் வெங் கனலும் கடை காண்கிலா,***
***மாலும் கொண்ட வடிக் கணை, மா முகம்***
***நாலும் கொண்டு நடந்தது, நான்முகன்***
***மூல மந்திரம்தன்னொடு மூட்டலால்.***

***மாலும்*** *- திருமாலின் அவதாரமான இராமபிரானின்;* ***கொண்ட வடிக்கணை*** *- கையிலிருந்து விடப்பட்ட அந்தப் பிரம்மாத்திரம்;* ***காலும் வெங்கனலும் கடை காண்கிலா*** *- காற்றும் கொடிய தீயும் காண முடியாத (விரைவும் கொடுமையும் கொண்டு);* ***தன்னொடு நான்முகன் மாமுகம் நாலும் கொண்டு*** *- (நான்முகன்போல்) நான்கு திசைக்கும் உரிய நாலு முகங்களையும் மேற்கொண்டு;* ***மூல மந்திரம் மூட்டலால் நடந்தது*** *- பிரம்ம தேவனுக்குரிய மூல மந்திரத்தின் ஆற்றலால் இராவணனை நோக்கிச் சென்றது.*

***9897. ஆழி மால் வரைக்கு அப்புறத்து அப்புறம்,***
***பாழி மா கடலும் வெளி பாய்ந்ததால் -***
***ஊழி ஞாயிறு மின்மினி ஒப்புற,***
***வாழி வெஞ் சுடர் பேர் இருள் வாரவே.***

***வெம்சுடர்*** *- அந்தப் பிரம்மாத்திரத்தின் கொடிய ஒளி;* ***பேர் இருள் வார*** *- பேரிருளை அகற்றி;* ***ஊழி ஞாயிறும்*** *- ஊழிக் காலத்து சூரியனும்;* ***மின்மினி ஒப்புற*** *- மின்மினி என்னுமாறு;* ***மால் ஆழி வரை*** *- பெரிய சக்கரவாள கிரிக்கு;* ***அப்புறத்து*** *- அப்புறத்தே உள்ள;* ***அப்புறம் பாழிமாக் கடலும்*** *- நீர் நிறைந்த வலிய பெருங் கடலுக்கும்;* ***வெளிப்பாய்ந்தது*** *- வெளியே பாய்ந்தது.*

***9898. அக் கணத்தின் அயன் படை ஆண்தகை***
***சக்கரப் படையோடும் தழீஇச் சென்று,***
***புக்கது, அக் கொடியோன், உரம்; பூமியும்,***
***திக்கு அனைத்தும், விசும்பும், திரிந்தவே.***

***அக்கணத்தின்*** *- அந்தக் கணத்தில்;* ***அயன் படை*** *- அந்தப் பிரம்மாத்திரம்;* ***ஆண்தகை சக்கரப் படையோடும்*** *- ஆண்களிற் சிறந்த குணங் கொண்டவனான இராமபிரானின் ஆழிப்படையுடனே;* ***தழீஇச் சென்று*** *- தழுவிப் போய்;* ***அக்கொடியோன்*** *- அந்தக் கொடியவன் இராவணனுடைய;* ***உரம் புக்கது*** *- மார்பில்*

*நுழைந்தது;* ***பூமியும் திக்கு அனைத்தும்*** *- (அப்போது) பூமியும் திக்குகள் அனைத்தும்;* ***விசும்பும் திரிந்த*** *- விண்ணுலகும் நிலை கலங்கின.*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***9899. முக்கோடி வாழ்நாளும், முயன்றுடைய***
***பெருந் தவமும், முதல்வன், முன்நாள்,***
***என் கோடியாராலும் வெலப்படாய்'***
***எனக் கொடுத்த வரமும், ஏனைத்***
***திக்கோடும் உலகு அனைத்தும் செருக் கடந்த***
***புய வலியும், தின்று, மார்பில்***
***புக்கு ஓடி உயிர் பருகி, புறம் போயிற்று***
***இராகவன்தன் புனித வாளி.***

***இராகவன் தன் புனித வாளி*** *- இராமபிரான் செலுத்திய தூய்மை நிறைந்த பிரம்மாத்திரம்;* ***முக்கோடி வாணாளும்*** *- (இராவணனுடைய) மூன்று கோடி ஆயுளையும்;* ***முயன்றுடைய பெருந்தவமும்*** *- முயன்று பெற்றிருந்த பெருந்தவப் பயனையும்;* ***முதல்வன்*** *- தேவர்களில் ஒருவனான நான்முகன்;* ***முன் நாள்*** *- முன் காலத்தில்;* ***எக்கோடி யாராலும்*** *- (முப்பத்து முக்கோடி தேவர்களில்) எந்த வரிசையைச் சேர்ந்தோர் ஆனாலும் அவர்களால்;* ***வெலப்படாய்*** *- நீ வெல்லப்பட மாட்டாய்;* ***எனக் கொடுத்த வரமும்*** *- என்று தந்த வரத்தையும்;* ***ஏனைத் திக்கோடும் உலகு அனைத்தும்*** *- மற்றும் திசைகளையும், உலகங்கள் எவற்றையும்;* ***செருக்கடந்த புயவலியும்*** *- போரால் வென்ற தோள் ஆற்றலையும்;* ***தின்று*** *- உண்டு விட்டு;* ***மார்பில் புக்கு*** *- (இராவணனுடைய) மார்பில் நுழைந்து;* ***ஓடி*** *- உடல் எங்கும் சுழன்று;* ***உயிர் பருகி*** *- உயிரைப் பருகிவிட்டு;* ***புறம் போயிற்று*** *- வெளியே சென்றது.*

*இராவணன் பல்லாண்டுகள் கடுந்தவம் இயற்றி, ஒவ்வொரு தலையாக அறுத்து ஒன்பது தலைகளை ஆகுதியில் இட்டுப் பெற்ற தவப்பயன்கள் அவையாதலின் "முயன்றுடைய பெருந்தவம்" என்றார். பார்க்க (உத்தர. இராவணன் பிறப்பு. 209)*

*சிவபிரானிடம் மூன்றரைக் கோடி ஆயுள் பெற்றான் இராவணன் என்றறிந்த திருமால் முனிவன் வடிவெடுத்து, மூன்றரைக் கோடியாகாது அரைகுறையென்பார்கள். முன்பு பெற்ற மூன்றரைக் கோடி ஒழிய, அரைக்கோடி கேள் என்றான். அப்படியே நான்முகன் பெற்ற மூன்றரைக்கோடி ஆயுள் ஒழிய இப்போது அரைக்கோடி கொடு என இராவணன் கேட்க அப்படியே ஆகுக என்றான் சிவபிரான். "முன்னம் மூன்றரைக் கோடியு மொழிய நீ முதல்வ, இன்னம் ஓரரைக் கோடி நாள் ஈந்தருள் என்ன மன்னும் மாசுணப் பாயலான் மாயம் ஈது என்னா, உன்னும் மாமலை மகளுடன் உமாபதி நகைத்தே அன்னவாறு அரைக்- கோடியே யளித்தனம்" என்பது உத்தரகாண்டம். (வரையெடுத்த 79-82) இராவணன் பெற்ற ஆயுளில் அரைக்கோடியே வாழ்ந்தான். மூன்று கோடியாயுளும் ஒழிந்தது. மீண்டும் பெற்ற வரத்தால் ஆதலின் "முக்கோடி வாழ்நாளும்" என்றார். இதனாலேயே, "அரைகடையிட்டு அமைவுற்ற முக்கோடி*

*ஆயுளும்" (கம்ப. 9944) என்று பின்னும் கூறுவார். அரைகடையிட்டு அமைவுற்ற முக்கோடி யாயுளும் எனற்கு, கடைசியில் அரைக்கோடியே இராவணனுக்கு அமைவுற்றது. 3 கோடியாயுளும் இராவணன் மீண்டும் கேட்ட வரத்தால் இப்போது அழிந்தது என்னும் பொருள் தரல் காண்க.*

***9900. ஆர்க்கின்ற வானவரும், அந்தணரும்,***
***முனிவர்களும், ஆசி கூறித்***
***தூர்க்கின்ற மலர் மாரி தொடரப் போய்,***
***பாற்கடலில் தூய் நீர் ஆடி,***
***தேர்க் குன்ற இராவணன்தன் செழுங் குருதிப்***
***பெரும் பரவைத் திரைமேல் சென்று,***
***கார்க் குன்றம் அனையான்தன் கடுங் கணைப்***
***புட்டிலின் நடுவண் கரந்தது அம்மா.***

**ஆர்க்கின்ற வானவரும், அந்தணரும், முனிவர்களும்** - *இராவண வதத்தால் எழுந்த உவகை மிகுதியால் ஆரவாரம் செய்கின்ற தேவர்களும் அந்தணாளர்களும் முனிவர்களும்;* **ஆசி கூறி** - *ஆசிகள் கூறி;* **தூர்க்கின்ற மலர் மாரி தொடரப் போய்** - *கொட்டுகின்ற பூ மழை (தன்னைப்) பின் தொடர்ந்து வரச் சென்று;* **பாற்கடலில் தூநீர் ஆடி** - *திருப்பாற்கடலில் புனித நீர் ஆடி;* **தேர்க்குன்ற இராவணன் தன்** - *(திரும்பி) குன்றனையை தேருடைய இராவணனின்;* **செழுங்குருதிப் பெரும் பரவைத் திரைமேல் சென்று** - *செழித்த இரத்தம் என்னும் பெருங்கடலின் அலை மேலே சென்று;* **கார்க்குன்றம் அனையான்தன் கடுங்கணை** - *கரிய மலை போன்ற இராமபிரானின் கடிய சரம்;* **புட்டிலின் நடுவண்** - *அம்பறாத் தூணியினிடையே;* **கரந்தது** - *(இராகவனின் அந்தப் புனிதக்கணை) ஒளிந்தது.*

*இறந்த இராவணன் முகப்பொலிவு*

***9901. கார் நின்ற மழைநின்றும் உரும் உதிர்வ***
***என, திணி தோட் காட்டின்நின்றும்,***
***தார் நின்ற மலைநின்றும், பணிக் குலமும்***
***மணிக் குலமும் தகர்ந்து சிந்த,***
***போர் நின்ற விழிநின்றும் பொறிநின்று***
***புகையோடும் குருதி பொங்க,***
***தேர்நின்று நெடு நிலத்துச் சிரமுகம் கீழ்ப்***
***படி விழுந்தான், சிகரம் போல்வான்.***

***சிகரம் போல்வான்*** - *(அரக்கர் இனம் என்னும் மலைக்குச்) சிகரம் போன்றிருந்த இராவணன்;* ***கார் நின்ற மழை நின்றும் உரும் உதிர்வ என*** - *கருமை நிறைந்த மழை மேகத்திலிருந்து இடிகள் உதிர்ந்து வீழ்வதே போல்;* ***திணி தோட்காட்டின் நின்றும்*** - *திண்ணிய இருபது தோள்களிலிருந்தும்;* ***தார் நின்ற மலை நின்றும்*** - *மாலையணிந்த மலை போன்ற மார்பிலிருந்தும்;* ***பணிக்குலமும் மணிக்குலமும் தகர்ந்து சிந்த*** - *ஆபரணத் தொகுதிகளும் மாணிக்கத் தொகுதிகளும் உடைந்து சிதறவும்;* ***போர் நின்ற விழி நின்றும்*** - *போர்க் குணத்தோடு நின்ற விழிகளிலிருந்து;* ***பொறிநின்று*** - *தீப்பொறி தோன்றி;* ***புகையோடும் குருதி பொங்க*** - *புகையுடனே உதிரம் பொங்கவும்;* ***தேர் நின்று*** - *தேரிலிருந்து;* ***நெடு நிலத்து*** - *அகன்ற பூமியின் மேல்;* ***சிரம் முகம் கீழ்பட விழுந்தான்*** - *தலையுடன் கூடிய முகம் கீழ்ப்பட (குப்புற) விழுந்தான்.*

***9902. வெம் மடங்கல் வெகுண்டனைய சினம் அடங்க,***
***மனம் அடங்க, வினையம் வீய,***
***தெவ் மடங்க, பொரு தடக் கைச் செயல் அடங்க,***
***மயல் அடங்க, ஆற்றல் தேய,***
***தம் அடங்கு முனிவரையும் தலை அடங்கா,***
***நிலை அடங்கச் சாய்த்த நாளின்,***
***மும் மடங்கு பொலிந்தன, அம் முறை துறந்தான்***
***உயிர் துறந்த முகங்கள் அம்மா!***

***வெம்மடங்கல் வெகுண்டனைய*** - *கொடிய சிங்கம் ஒன்று சினந்தாற் போன்று;* ***சினம் அடங்க*** - *வெகுளியடங்கவும்;* ***மனம் அடங்க*** - *(அடங்காத) மனம் அடங்கவும்;* ***வினையம் வீய*** - *(மனத்தே நிறைந்த) சூழ்ச்சிகள் அழியவும்;* ***தெவ் மடங்க*** - *பகைமை அழியவும்;* ***பொரு தடக்கைச் செயல் ஒடுங்க*** - *போரிட்டுக் கொண்டேயிருந்த இருபது கரங்களும் போர்ச்செயல் ஒழியவும்;* ***மயல் அடங்க*** - *(சானகி மீது கொண்ட) மையல் மடியவும்;* ***ஆற்றல் தேய*** - *வலிமை தேயவும்;* ***உயிர் துறந்த அம் முறை துறந்தான்*** - *உயிர் நீங்கிய அந்த அறமுறை நீங்கிய இராவணனின் பத்து முகங்களும்;* ***தம் அடங்கு முனிவரையும்*** - *தம்மைத்தாமே அடக்கிய முனிவரை யெல்லாம்;* ***தலை அடங்கா நிலை அடங்க*** - *தலை தாழவும் நிலை தளரவும்;* ***சாய்த்த*** - *முறியடித்த;* ***நாளின்*** - *நாளைவிட;* ***மும் மடங்கு பொலிந்தன*** - *மூன்று மடங்கு பொலிவுற்றுத் திகழ்ந்தன.*

*இராவணனிடத்தில் அடங்க வேண்டியவை எத்தனையிருந்தன என்பதனை, அடங்க, அடங்க என்னும் வினையெச்ச அடுக்குகளாற் காட்டியுள்ள கவிஞர் பிரானின் திறமை நினைந்து நினைந்து போற்றற்குரியது. "அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை ஆரிருள் உய்த்து விடும்" (குறள் 121) அடங்காமையால் ஆரிருளில் வாழ்வினைச் செலுத்திக் கொண்ட இராவணனின் நெஞ்சத்துள் இராமபிரானின் புனித வாளி புகுந்து ஒளியேற்றியமையால் இராவணன் வாழ்வில் பெரு வெற்றிக் காலத்தில் அடைந்த பொலிவை விட, இப்பொழுது அவன் முகம் மும்மடங்கு பொலிந்தன என்று பொருத்தமுற கூறினார். "தம் மடங்கு முனிவரையும் தலையடங்கா நிலையடங்கச் சாய்த்த நாளில் அவன் பெற்ற முகப் பொலிவு புறப் பொலிவு இப்பொழுது இராம பாணத்தால் அடைந்தது அகப்பொலிவு ஆதலின் பொலிவின்*

*மடங்கு அதிகரித்தது என்றார். தம் அடங்கு முனிவரையும் இராவணன் வென்றான் ஆதலின் உம்மை உயர்வு சிறப்பின் வந்தது.*

*இராமன், இராவணன் உடம்பைப் பார்த்தல்.*

***9903. 'பூதலத்தது ஆக்குவாயாக, இனிப்***
***பொலந் தேரை' என்ற போதில்,***
***மாதலிப் பேரவன் கடவ, மண் தலத்தின்***
***அப் பொழுதே வருதலோடும்,***
***மீது அலைத்த பெருந் தாரை விசும்பு அளப்பக்***
***கிடந்தான்தன் மேனி முற்றும்***
***காதலித்த உரு ஆகி, அறம் வளர்க்கும்***
***கண்ணாளன் தெரியக் கண்டான்.***

***பொலந்தேரை இனிப் பூதலத்தது ஆக்குவாயாக*** *- பொன் மயமான தேரை இனி மண் மீது இறக்குவாயாக;* ***என்ற போதின்*** *- என்று (இராமபிரான் மாதலிக்கு) ஆணையிட்ட போதில்;* ***மாதலிப் பேரவன்*** *- மாதலி என்னும் பேருடைய அத்தேர்ச் சாரதி;* ***கடவ*** *- செலுத்த;* ***மண் தலத்தின் அப்பொழுதே வருதலோடும்*** *- மண்ணின் மீது (அத்தேர் படிந்து) அக்கணத்திலேயே வருகின்ற போது;* ***காதலித்த உருவாகி*** *- (கண்டார்) விரும்பும் எல்லா இலக்கணங்களும் பொருந்தப் பெற்ற உருவம் உடையவனாகி;* ***அறம் வளர்க்கும் கண்ணாளன்*** *- தருமத்தை (உலகில்) வளர்க்கப் பிறந்த கருணை யாளனாகிய இராமபிரான்;* ***மீது அலைத்த பெருந்தாரை*** *- மேலே அலையெறிந்து கொண்டுள்ள பெரிய உதிரப் பெருக்கு;* ***விசும்பு அளப்பக் கிடந்தான் தன் மேனி முற்றும்*** *- விண்ணளவும் தெறிக்கக் கிடந்தவனாகிய இராவணனது உடம்பு முழுதும்;* ***தெரியக் கண்டான்*** *- விளங்க நன்றாகப் பார்த்தான்.*

*இராமன் பெயரே ரமிக்கச் செய்பவன் எனும் பொருளது ஆதலின் "காதலித்த உரு" என்றார். ஒவ்வோர் உறுப்பே, ஒவ்வொருவர்க்கு விருப்பம் தருமாறு அமைந்திருப்பது இயல்பாயிருக்க, இராமன் அங்கங்கள் அனைத்தாலும் கவரும் அழகன் ஆதலின் "காதலித்த உரு" என்றார். அழகு உடையான் (கம்ப, 1926) என்பதும் காண்க.*

***9904. 'தேரினை நீ கொடு விசும்பில் செல்க' என்ன***
***மாதலியைச் செலுத்தி, பின்னர்,***
***பாரிடம்மீதினின் அணுகி, தம்பியொடும்***
***படைத்தலைவர் பலரும் சுற்ற,***
***போரிடை மீண்டு ஒருவருக்கும் புறங்கொடாப்***
***போர் வீரன் பொருது வீழ்ந்த***

***சீரினையே மனம் உவப்ப, உரு முற்றும்***
***திருவாளன் தெரியக் கண்டான்.***

***நீ தேரினை கொண்டு விசும்பில் செல்க*** - *நீ தேரைக் கொண்டு வானுலகிற்குச் செல்வாயாக;* ***என்ன*** - *என்று;* ***மாதலியைச் செலுத்தி*** - *மாதலிக்கு விடை தந்து;* ***பின்பு பாரிடம் மீதினின் அணு கி*** - *பிறகு மண்ணின் மேல் வந்து;* ***திருவாளன்*** - *திருமகள் நாதனாகிய இராமபிரான்;* ***தம்பியொடும் படைத்தலைவர் பலரும் சுற்ற*** - *தம்பியாகிய இலக்குவனும் படைத் தலைவர்கள் பலரும் தன்னைச் சுற்றி வர;* ***போரிடை மீண்டு*** - *(இதுவரை) போர்க்களத்திலிருந்து பின்வாங்கி;* ***ஒருவர்க்கும் புறங்கொடா*** - *யார்க்கும் புறமுதுகு காட்டியறியாத;* ***போர் வீரன்*** - *போரிற் சிறந்த வீரனாகிய இராவணன்;* ***பொருது வீழ்ந்த சீரினையே*** - *போரிட்டு வீழ்ந்து கிடக்கும் சிறப்பினை;* ***மனம் உவப்ப*** - *தன் மனம் உவகையுற;* ***உரு முற்றும் தெரியக் கண்டான்*** - *அவனுடைய உடல் முழுவதனையும் நன்றாகப் பார்த்தான்.*

***9905. புலைமேலும் செலற்கு ஒத்துப் பொது நின்ற***
***செல்வத்தின் பன்மைத் தன்மை***
***நிலைமேலும் இனி உண்டே? 'நீர் மேலைக்***
***கோலம்' எனும் நீர்மைத்து அன்றே***
***தலைமேலும் தோற்மேலும் தடமுதுகின்***
***படர்புறத்தும் தாவி ஏறி,***
***மலைமேல் நின்று ஆடுவபோல் ஆடினவால்***

***வானரங்கள், வரம்பு இலாத.*** ***வரம்பிலாத வானரங்கள்*** - *அளவற்ற குரங்குகள்;* ***மலை மேல் நின்று ஆடுவபோல்*** - *மலை ஒன்றின் மேல் நின்று (மகிழ்ச்சிக்) கூத்து ஆடுவதுபோல;* ***தலை மேலும் தோள் மேலும் தட முதுகின் படர் புறத்தும்*** - *இராவணேசுவரனுடைய தலைகள் மேலும் தோள்கள் மேலும், அகன்ற முதுகின் விசாலப் பரப்பின் மீதும்;* ***தாவி ஏறி*** - *தாவிக் குதித்து ஏறி;* ***ஆடின*** - *நடனம் ஆடின;* ***புலை மேலும் செலற்கு ஒத்து*** - *இழிந்த புலைத்தன்மை யுடையாரிடத்தும் (கூசாது) செல்வதற்கு ஒருப்படும்;* ***பொது நின்ற செல்வத்தின்*** - *(உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்றில்லாது எல்லோரிடத்தும்) பொதுவாகச் செல்லும் தன்மையுடைய செல்வத்தினுடைய;* ***புன்மைத் தன்மை*** - *இழிந்த தன்மையை விளக்க;* ***நிலை மேலும் இனி உண்டோ?*** - *இராவணன் வீழ்ச்சிக்குப் பிறகும் வேறு உவமை தேடும் நிலை இனி உலகில் உண்டாகுமோ?* ***நீர் மேலைக் கோலம் எனும் நீர்மைத்து அன்றே*** - *(இழிந்தோர் செல்வ வாழ்வு) நீர் மேற் குமிழியின் (நிலையிலாக்) கோலம் என்னும் இயல்பினது அன்றோ?*

***9906. தோடு உழுத நறுந் தொடையல் தொகை உழுத***
***கிளை வண்டின் சுழியத் தொங்கல்***
***பாடு உழுத படர் வெரிநின் பணி உழுத***

***அணி நிகர்ப்ப, பணைக் கை யானைக்***
***கோடு உழுத நெடுந் தழும்பின் குவை தழுவி,***
***எழு மேகக் குழுவின் கோவைக்***
***காடு உழுத கொழும் பிறையின் கறை கழன்று***
***கிடந்தனபோல் கிடக்கக் கண்டான்;***

***தோடுழுத நறுந்தொடையல்*** - *இதழ்களால் ஆன மணமாலைகளின்;* ***தொகை உழுத கிளை வண்டின்*** - *தொகுதிகளை உழுது கொண்டிருக்கின்ற வண்டுகளையுடைய;* ***சுழியத் தொங்கல்*** - *தலை மாலைகளோடு கூடிய மாலைகளின்;* ***பாடு உழுத படர் வெரிநின்*** - *பக்கங்களில் படர்ந்து கிடக்கிற (இராவணன்) முதுகில்;* ***பணி உழுத அணி நிகர்ப்ப*** - *அழகிய வேலைப்பாடு நிறைந்த அணிகலத்தைப் போன்று;* ***பணைக்கை யானைக்கோடு உழுத நெடுந் தழும்பின் குவை*** - *பருத்த கையையுடைய திசை யானைகளின் கொம்புகள் உழுததனால் தோன்றிய நீண்ட தழும்புகளின் கூட்டத்தை;* ***தழுவி*** - *பொருந்தி;* ***எழு மேகக் குழுவின் கோவைக் காடுஉழுத*** - *எழுகின்ற மேகக் கூட்டத்தின் வரிசையாகிய காட்டில் உலாவுகின்ற;* ***கொழும் பிறையில்*** - *செழித்த பிறை நிலாவின்;* ***கறை கழன்று*** - *களங்கம் நீங்கி;* ***கிடந்தன போல் கிடக்கக் கண்டான்*** - *கிடந்தன போலக் கிடக்கக் கண்டான் (இராமபிரான்)*

*"இராவணன் தார் கிடந்த முதுகில் அணி செய்யும் துணி போல, எட்டுத்திக்கு யானைகளும் பாய்ந்ததால் எழுந்த தழும்பின் குவைகள், வட்டம் வட்டமாக உதிரத்துடன் சிவந்திருப்பது ஒரு மேகத்தில் களங்கமற்ற முழு மதி, கோவைப் பழத்திலே முழுகிச் சிவப்பேறியிருப்பதை ஒத்திருந்தது" என்று உரை கூறினுமாம்.*

***அறுசீர் விருத்தம் (வேறு)***

*இராவணன் புறப்புண் கண்ட இராமன் முறுவலித்தல்*

***9907. தளிர்இயல் பொருட்டின் வந்த சீற்றமும்,***
***தருக்கினோன்தன்***
***கிளர் இயல் உருவினோடும் கிழிப்புறக் கிளர்ந்து***
***தோன்றும்***
***வளர் இயல் வடுவின் செம்மைத் தன்மையும், மருவ***
***நின்ற,***
***முளரி அம் கண்ணன், மூரல் முறுவலன்,***
***மொழிவதானான்;***

***முளரி அம் கண்ணன்*** - *இராவணன் உடலருகே சென்று நின்று தாமரை போன்ற அழகிய கண்களையுடைய இராமபிரான்;* ***தளிர் இயல் பொருட்டின் வந்த சீற்றமும்*** - *தளிர் போன்ற மென்மைத் தன்மை வாய்ந்த சீதையின் காரணத்தால் (இராவணன்*

*மேல் எழுந்த) சினமும்;* ***தருக்கினோன் தன்*** *- செருக்கு மிக்க இராவணனுடைய;* ***கிளர் இயல் உருவினோடும்*** *- கிளர்ச்சி தரும் அவன் வடிவத்தில்;* ***கிழிப்புறக் கிளர்ந்து தோன்றும்*** *- முதுகுப் பக்கம் கிழிபட்டுத் தெளிவாகத் தோன்றும்;* ***வளர் இயல் வடுவின்*** *- நீண்ட தழும்பின்;* ***செம்மைத் தன்மையும்*** *- சிவந்த தன்மையும்;* ***மருவ நின்ற*** *- கூடிக் கலக்க (எழுந்த);* ***மூரல் முறுவலன்*** *- (இகழ்ச்சியால் எழுந்த) புன்சிரிப்புக் கொண்டவனாய்;* ***மொழிவதானான்*** *- கூறத் தொடங்கினான்.*

***9908. 'வென்றியான் உலகம் மூன்றும் மெய்ம்மையால்***
***மேவினாலும்***
***பொன்றினான் என்று தோளைப் பொது அற***
***நோக்கும் பொற்பும்***
***குன்றி ஆசுற்றதுஅன்றே - இவன் எதிர் குறித்த***
***போரில்***
***பின்றியான் முதுகில் பட்ட பிழம்பு உள தழும்பின்***
***அம்மா.***

***உலகம் மூன்றும் மெய்ம்மையால்*** *- மூன்று உலகங்களையும் உண்மையாக;* ***வென்றியான் மேவினாலும்*** *- வெற்றி கொண்டவனாக ஏற்றுக்கொள்ளப்பட்டாலும்;* ***பொன்றினான்*** *- (இன்று என் பாணத்தால்) அழிந்தான்;* ***என்று*** *- என்ற காரணம் பற்றி;* ***தோளைப் பொதுவற நோக்கும் பொற்பும்*** *- (என்னுடைய) தோள்களை (வெற்றிச் சிறப்பால்) சிறந்த பெருமிதத்தோடு நோக்கிக் கொள்ள வல்ல பொலிவும்;* ***இவன்*** *- இந்த இராவணன்;* ***எதிர் குறித்த போரில்*** *- எதிர் நின்று (இடும்) போரில்;* ***பின்றியான்*** *- பின்னடைந்தவனாய்;* ***முதுகிற் பட்ட*** *- முதுகுப் பக்கத்தில் பதிந்துள்ள;* ***பிழம்பு உள தழும்பின்*** *- (சிவந்த) பிழம்பாக உள்ள தழும்புகளால்;* ***குன்றி ஆசுற்றது*** *- குறைந்து போய், குற்றமும் அடைந்தது.*

*'அம்மா' என்பதைக் கேட்பிக்கும் என்னும் பொருளில் உரையசை எனலாம்.*

***9909. ''கார்த்தவீரியன் என்பானால் கட்டுண்டான்'' என்னக்***
***கற்கும்***
***வார்த்தை உண்டு; அதனைக் கேட்டு, நாணுறு***
***மனத்தினேற்குப்***
***போர்த்தலை புறகிட்டு ஏற்ற புண்ணுடைத் தழும்பும்***
***போலாம்***
***நேர்த்ததும் காணலுற்ற; ஈசனார் இருக்கை நிற்க!***

***ஈசனார் இருக்கை நிற்க*** *- சிவபிரான் மலையை எடுத்து (இராவணன் பரிபவப்பட்டது ஒருபக்கம்) நிற்பினும்;* ***கார்த்தவீரியன் என்பானால் கட்டுண்டான்*** *- கார்த்த வீரியன் என்னும் மானுட மன்னனால் இவன் பிணிக்கப்பட்டான்;* ***என்னக் கற்கும் வார்த்தை***

***உண்டு*** - *என்று கூறப்படும் வார்த்தை உலகில் (இவனைப் பற்றி) உண்டு;* ***அதனைக் கேட்டு நாணுறும் மனத்தினேற்கு*** - *(அந்த அவமானச்) சொல்லைக் கேட்டே வெட்கமுற்ற உள்ளமுடைய எனக்கு;* ***போர்த்தலை*** - *போரிலே;* ***புறகிட்டு ஏற்ற புண்ணுடைத் தழும்பும்*** - *புறமுதுகிட்டு அதனால் வந்த புண்களால் ஏற்பட்ட தழும்புகளும்;* ***நேர்த்ததும் காணல் உற்ற*** - *நேரிடையாகக் காணல் உற்றன.*

*"நான் வீரர்களுள் இராமனாக இருக்கிறேன்" என்றான் கீதையில் கண்ணன்.*

***9910. "மாண்டு ஒழிந்து உலகில் நிற்கும் வயங்கு இசை***
***முயங்க மாட்டாது,***
***ஊண்தொழில் உகந்து, தெவ்வர் முறுவல் என் புகழை***
***உண்ண,***
***பூண்தொழில் உடைய மார்பா! போர்ப்***
***புறங்கொடுத்தோர்ப் போன்ற***
***ஆண்தொழிலோரின் பெற்ற வெற்றியும் அவத்தம்'***
***என்றான்.***

***பூண் தொழில் உடைய மார்பா !*** - *அணிகளைத் தரிக்கும் மார்பினையுடைய வீடணனே;* ***ஊண் தொழில் உகந்து*** - *உண்ணும் செயலையே விரும்பி;* ***தெவ்வர் முறுவல் என்புகழை உண்ண*** - *பகைவர்கள் (இகழ்ச்சிப்) புன்னகை என் புகழைத் தின்று தீர்க்க;* ***போர்ப்புறம் கொடுத்தோர்ப் போன்ற*** - *போரில் புற முதுகிட்டவர்களைப் போன்ற;* ***ஆண் தொழிலோரின்*** - *ஆண்மைச் செயலையுடைய இவ்விராவணனால்;* ***பெற்ற வெற்றியும்*** - *அடைந்த வெற்றியும்;* ***அவத்தம்*** - *வீணானதே;* ***மாண்டு ஒழிந்து*** - *இராவணன் இறந்து ஒழிந்ததனால்;* ***உலகில் நிற்கும் வயங்கும் இசை*** - *(எனக்கு) உலகில் அழியாமல் நிற்கவல்ல விளங்குகின்ற புகழும்;* ***முயங்க மாட்டாது*** - *(இனி) என்பால் அடைய மாட்டாது.*

*உலகில் நிற்கும் வயங்கு இசை - உலகில் நிலைத்து நிற்க வல்லது புகழ் ஒன்றே "ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ் அல்லால், பொன்றாது நிற்பது ஒன்று இல்" (குறள் 233)*

***9911. 'அவ் உரைக்கு இறுதி நோக்கி, வீடணன், அருவிக்***
***கண்ணன்,***
***வெவ் உயிர்ப்போடு நீண்ட விம்மலன், வெதும்பும்***
***நெஞ்சன்,***
***'செவ்வியின் தொடர்ந்த அல்ல செப்பலை, செல்வ!'***
***என்னா,***
***எவ் உயிர்ப் பொறையும் நீங்க இரங்கி நின்று,***
***இனைய சொன்னான்:***

***அவ்வுரை உரைப்பக் கேட்ட வீடணன்*** - *(இராமபிரானின்) அந்த உரைகளைக் கேட்ட வீடணன்;* ***அருவிக் கண்ணன்*** - *அருவி நீர் போன்ற கண்ணீரையுடையவனாய்;* ***வெவ்வுயிர்ப் போடு நீண்ட விம்மலன்*** - *பெருமூச்சோடும் கூடிய விம்மலையும் உடையவனாய்;* ***வெதும்பும் நெஞ்சன்*** - *வெதும்புகின்ற நெஞ்சோடும் கூடியவனாய்;* ***செல்வ*** - *செல்வனாகிய இராமபிரானே;* ***செவ்வியில் தொடர்ந்த அல்ல*** - *செம்மையில் கூடாத வார்த்தைகளை;* ***செப்பலை*** - *செப்ப வேண்டா;* ***என்னா*** - *என்று கூறி;* ***எவ்வுயிர்ப் பொறையும் நீங்க*** - *எந்த உயிரும் தரிக்க இயலாவாறு;* ***இரங்கி நின்று இனைய சொன்னான்*** - *இரக்கத்தோடு தோன்ற நின்று இத்தகைய மொழிகளை மொழியலானான்.*

***9912. 'ஆயிரம் தோளினாலும், வாலியும், அரிதின், ஐய!***
***மேயின வென்றி விண்ணோர் சாபத்தின் விளைந்த; மெய்ம்மை;***
***தாயினும் தொழத் தக்காள்மேல் தங்கிய காதல்-தன்மை***
***நோயும் நின் முனிவும் அல்லால், வெல்வரோ நுவலற்பாலார்?***

***ஐய*** - *ஐயனே!* ***ஆயிரம் தோளினானும்*** - *ஆயிரம் தோள்களையுடைய கார்த்தவீரியனும்;* ***வாலியும்*** - *வாலியாகிய வானர அரசனும்;* ***அரிதின் மேயின வென்றி*** - *அரிதில் பெற்ற வெற்றிகள்;* ***விண்ணோர் சாபத்தின் விளைந்த*** - *(இராவணனுக்கு) தேவர்கள் இட்ட சாபங்களால் விளைந்தவை;* ***மெய்ம்மை*** - *இஃது உண்மை;* ***தாயினும் தொழத்தக்காள் மேல்*** - *(இப்போது) உலகம் தாயினும் போற்றற்குரியவளாய் வணங்கத்தக்க சீதையின் மேல்;* ***தங்கிய காதல் தன்மை நோயும்*** - *கொண்ட ஆசையும்;* ***நின் முனிவும் அல்லால்*** - *உன் சீற்றமும் அல்லால்;* ***நுவலற் பாலார்*** - *வீரர் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவார் யாரேனும்;* ***வெல்வரோ*** - *(இவனை) வெல்ல வல்லார் ஆவாரோ?*

***9913. 'நாடு உளதனையும் ஓடி நண்ணலார்க் காண்கிலாமல்,***
***பீடு உள குன்றம் போலும் பெருந் திசை எல்லை யானைக்,***
***கோடு உளதனையும் புக்குக் கொடும் புறத்து அழுந்து புண்ணின்***
***பாடு உளது அன்றி, தெவ்வர் படைக்கலம் பட்டு என் செய்யும்?***

***நாடு உளதனையும் ஓடி*** - *உலகமுள்ள எல்லை வரையிலும் விரைந்து;* ***நண்ணலார்க் காண்கிலாமல்*** - *(எல்லோரையும் வென்று முடித்து விட்டபடியால்) பகைவரைக் காண*

*இயலாமையால்;* ***பீடு உள குன்றம் போலும்*** *- (இவைகளையாகிலும் வெல்வேன் என்று) பெருமிதம் வாய்ந்த குன்றுகள் போன்றிருந்த;* ***பெருந்திசை எல்லை யானைக் கோடு*** *- எட்டுப் பெரிய திக்குகளில் காவலாக உள்ள யானைகளின் கொம்புகளை;* ***உளதனையும் புக்கு*** *- அவற்றின் நீளம் உள்ளளவும் மார்பில் அழுத்தி;* ***கொடும்புறத்து அழுந்து புண்ணின்*** *- கொடிய முதுகின் வெளிப்புறம் அழுந்தியதனால் ஆகிய புண்களின்;* ***பாடு உளது அன்றி*** *- தழும்புகள் உள்ளனவேயல்லாமல்;* ***தெவ்வர் படைக்கலம் பட்டு*** *- பகைவர் ஆயுதங்கள் இவன் உடம்பில் பட்டு;* ***என்ன செய்யும்?*** *- என்ன செய்யவல்லவையாம்?*

*புண்ணின் பாடு - தழும்பு*

***9914. 'அப் பணை அனைத்தும் மார்புக்கு அணி எனக் கிடந்த; வீரக***
***கைப் பணை முழங்க, மேல்நாள், அமரிடைக் கிடைத்த காலன்***
***துப்பு அணை வயிர வாளி விசையினும், காலின் தோன்றல்***
***வெப்பு அணை குத்தினாலும், வெரிநிடைப் போய அன்றே.****

***அப்பணை அனைத்தும்*** *- அந்தத் தந்தங்கள் அனைத்தும்;* ***மார்புக்கு அணி எனக் கிடந்த*** *- (இராவணனுடைய) மார்புக்கு ஆபரணம் ஆக அமைந்து கிடந்தன;* ***அவை மேனாள்*** *- முன் நாளில்;* ***வீரக் கைப்பணை முழங்க*** *- வீரசங்கம் கையில் ஒலிக்க;* ***அமர் இடை நிலைத்த காலன்*** *- போரில் எதிர்த்து வந்த யமனுடைய;* ***துப்பு இணை வயிர வாளி விசையினும்*** *- வலிமை வாய்ந்த திண்ணிய அம்புகளின் வேகத்தாலும்;* ***காலின் தோன்றல்*** *- வாயு புத்திரனின் மகனான அனுமானின்;* ***வெப்பணை குத்தினாலும்*** *- கொடுமை மிக்க குத்தினாலும்;* ***வெரிந் இடைப் போய*** *- முதுகில் ஊடுருவிச் சென்றன.*

*அனுமன் குத்தியமை (கம்ப; 7192) முதற்போர் புரி படலத்துட் காண்க.*

***9915. 'அவ் வடு அன்றி, இந்த அண்டத்தும் புறத்தும் ஆன்ற***
***தெவ் அடு படைகள் அஞ்சாது இவன்வயின் செல்லின், தேவ!***
***வெவ் விடம் ஈசன்தன்னை விழுங்கினும், பறவை வேந்தை***
***அவ் விட நாகம் எல்லாம் அணுகினும், அணுகல் ஆற்றா.***

***தேவ !*** - பெருமானே; ***அவ்வடு அன்றி*** - அந்தத் தந்தத் தழும்புகளேயன்றி; ***இவன் வயின் செல்லின்*** - இவனிடத்துச் செல்வதென்றால்; ***வெவ்விடம் ஈசன் தன்னை விழுங்கினும்*** - ஈசன் உண்ட விடம் அவனையே விழுங்குவதானாலும்; ***பறவை வேந்தை அவ்விட நாகம் எல்லாம் அணுகினும்*** - பறவைகட்கு அரசனான கருடனை விட நாகங்கள் எல்லாம் (கொல்ல) நெருங்கினாலும்; ***இந்த அண்டத்தும் புறத்தும் ஆன்ற*** - இந்த உலகிலும் புற உலகிலும் (உள்ள) உயர்ந்த; ***தெவ் அடு படைகள் அஞ்சாது*** - பகையழிக்கும் படைக்கருவிகள் யாவும் அஞ்சாமல்; ***இவன் வயின் அணுகல் ஆற்றா*** - இவனிடம் துன்புறுத்த அணுக வல்லமையுள்ளவை ஆகா.

***9216. 'வென்றியாய்! பிறிதும் உண்டே வேலை சூழ் ஞாலம் ஆண்டு, ஓர்***
***பன்றியாய் எயிற்றுக் கொண்ட பரம்பரன் முதல் பல்லோர்,***
***'என்றுயாம் இடுக்கண் தீர்வது?'' என்கின்றார்; ''இவன் இன்று உன்னால்***
***பொன்றினான்'' என்றபோதும், புலப்படார், ''பொய்கொல்'' என்பார்.'***

***வென்றியாய் !*** - வெற்றி வீரனே; ***வேலை சூழ் ஞாலம்*** - கடல் சூழ் உலகை; ***ஆண்டு ஓர் பன்றியாய்*** - அக்காலத்தில் ஒரு வராக வடிவாகி; ***எயிற்றுக் கொண்ட பரம்பரன்*** - கொம்பில் ஏந்தி வந்த திருமால்; ***முதல் பல்லோர்*** - முதலான பலரும்; ***யாம் இடுக்கண் தீர்வது என்று என்கின்றார்*** - நாம் (இராவணனுடைய) துன்பங்களிலிருந்து விடுதலை பெறுவது என்று என்று ஏங்கியிருக்கின்றனர்; ***உன்னால் இன்று இவன் பொன்றினான் என்றபோதும்*** - உன்னால் இந்த இராவணன் இன்று அழிந்தான் என்று சொன்னாலும்; ***பொய் கொல்*** - இச்செய்தி பொய்யோ; ***என்பர்*** - என்று ஐயங் கொள்வார்; ***புலப்படார்*** - (இறந்தான் என நம்பி) வெளித் தோன்ற மாட்டார்கள்.

*இராவணனுக்கு இறுதிக்கடன் செய்ய வீடணனை ஏவுதல்*

***9917. 'அன்னதோ?' என்னா, வீரன் ஐயமும் நாணும் நீங்கி,***
***தன்ன தோள் இணையை நோக்கி, 'வீடணா! தக்கது அன்றால்,***
***என்னதோ, இறந்துளான்மேல் வயிர்த்தல்? நீ இவனுக்கு, ஈண்டு***
***சொன்னது ஓர் விதியினாலே கடன் செயத் துணிதி' என்றான்.***

***அன்னதோ என்னா*** - *அப்படியோ என்று சொல்லி;* ***ஈசன்*** - *இராமபிரான்;* ***ஐயமும் நாணும் நீங்கி*** - *சந்தேகமும் வெட்கமும் நீங்கப் பெற்றவனாய்;* ***தன்ன தோள் இணையை நோக்கி*** - *தன் இரு தோள்களையும் (பெருமிதத்தால்) நோக்கி (பிறகு வீடணனை நோக்கி);* ***வீடணா*** - *வீடணனே;* ***இறந்துளான் மேல் வயிர்த்தல்*** - *மாண்டு போனவன் மேல் வைராக்கியம் கொண்டு (வாளா இருத்தல்);* ***தக்கது அன்று*** - *தகுதியன்று;* ***நீ இவனுக்கு*** - *நீ இந்த இராவணனுக்கு;* ***ஈண்டு*** - *இங்கு;* ***சொன்னதோர் விதியினாலே*** - *கூறப்பட்டுள்ள விதிமுறைப்படி;* ***கடன் செயத் துணிதி*** - *இறுதிக் கடன்களைச் செய்வாயாக;* ***என்றான்*** - *என்று கூறினான்.*

***9918. அவ் வகை அருளி, வள்ளல் அனைத்து***
***உலகங்களோடும்***
***எவ் வகை உள்ள தேவர் யாவரும் இரைத்துப்***
***பொங்கிக்***
***கவ்வையின் தீர்ந்தார் வந்து வீழ்கின்றார் தம்மைக்***
***காண***
***செவ்வையின் அவர் முன் சென்றான்; வீடணன்***
***இதனைச் செய்தான்.***

***வள்ளல்*** - *இராமபிரான்;* ***அவ்வகை அருளி*** - *அவ்வாறு (வீடணனிடம்) கூறியருள் செய்து;* ***இரைத்துப் பொங்கி*** - *ஆர்ப்பரித்து (மனம்) பூரித்து;* ***கவ்வையில் தீர்ந்தார்*** - *துன்பங்களிலிருந்து விடுபட்டவர்களாய்;* ***வந்து வீழ்கின்றார்*** - *வந்து தொழ வருகின்ற;* ***அனைத்து உலகங்களோடும்*** - *எல்லா உலகத்தில் உள்ளவர்களோடும்;* ***உள்ள தேவர் யாவரும்*** - *இருக்கின்ற பல்வகைத் தேவர்களையும்;* ***காண*** - *காண்பதற்காக;* *செவ்வையின் - நேராக;* ***அவர் முன் சென்றான்*** - *அத்தேவர்கள் பால் சென்றான்;* ***வீடணன் இதனைச் செய்தான்*** - *(அப்போது) வீடணன் பின்வருமாறு செய்தான்.*

*வீடணன் இராவணன் மேனிமேல் வீழ்ந்து அரற்றுதல்*

***9919. 'போழ்ந்தென அரக்கன் செய்த புன் தொழில்***
***பொறையிற்று ஆமால்;***
***வாழ்ந்த நீ இவனுக்கு ஏற்ற வழிக் கடன் வகுத்தி'***
***என்ன,***
***தாழ்ந்தது ஓர் கருணைதன்னால், தலைமகன் அருள,***
***தள்ளி,***
***வீழ்ந்தனன் அவன்மேல், வீழ்ந்த மலையின்மேல்***
***மலை வீழ்ந்தென்ன.***

***போழ்ந்தென*** - *(நெஞ்சினை வாளால்) பிளந்தாற்போன்ற;* ***அரக்கன் செய்த புன்தொழில்*** - *இராவணன் புரிந்த அற்பச் செயல்;* ***பொறையிற்று ஆம்*** - *பொறுக்கத்தக்கதேயாம்;*

***வாழ்ந்த நீ*** - *(இறந்துபட்ட) இவனுக்குச் செய்யத்தக்க இறுதிக் கிரியைகளை;* ***வரன் முறை வகுத்தி*** - *மரபுப்படி செய்வாயாக;* ***என்ன*** - *என்று;* ***தாழ்ந்தது ஓர் கருணை தன்னால்*** - *இரக்கமுற்றால் செல்லும் (இராமபிரானின் இயல்பான) கருணையினால்;* ***தலை மகன் அருள*** - *இராமபிரான் அருளிச் செய்ய;* ***வீழ்ந்த மலையின் மேல் மலை வீழ்ந்தென்ன*** - *விழுந்து கிடந்த மலையின் மேல் (நின்ற) மலையொன்று விழுந்தது போல;* ***தள்ளி*** - *(துயரம்) தள்ளியதனால்;* ***அவன்மேல் வீழ்ந்தனன்*** - *இராவணன் (உடல்) மேல் வீழ்ந்தான் (வீடணன்).*

*களவியல் அரக்கன் பின்னே தோன்றி கடன்மை தீர்ந்தது. (கம்ப. 6506) நான் உன் தம்பி. இவனுக்கு நான் எப்படிக் கடன் செய்வது என்பது வீடணனின் தயக்கத்திற்குக் காரணம் ஆகலாம். இங்கு வீடணா! இறுதிக் கடனை நீ செய்கிறாயா? இல்லை, நான் செய்யட்டுமா? என்று பெருமான் கேட்டான் என்று நம்பிள்ளை ஈடு கூறுவது நினைவுக்கு வருகிறது. நீ என் தம்பி. இவன் உன் அண்ணன்; ஆகவே, இவன் எனக்கும் உறவினன் ஆவான்.என்று இராவணனுக்கு இராமபிரான் இறுதிக் கடன் செய்ய எழுந்தபோது, உடனே வீடணன் நீர்க்கடன் செய்ய எழுந்தான் என்று நம்பிள்ளை ஈட்டுரை கூறுவது ஒப்பு நோக்கற்பாலது.*

***9920. ஏவரும் உலகத்து எல்லா உயிர்களும் எரியின்***
***நெஞ்சின்***
***தேவரும் முனிவர்தாமும் சிந்தையின் இரக்கம் சேர,***
***தா அரும் பொறையினான்தன் அறிவினால் தகைக்க***
***நின்ற***
***ஆவலும் துயரும் தீர, அரற்றினான் பகு வாய் ஆர.***

***ஏவரும் உலகத்து எல்லா உயிர்களும்*** - *இடையறாது (பெருகி வரும்) உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும்;* ***இரங்கி ஏங்க*** - *இரக்கமுற்று ஏங்கவும்;* ***தேவரும் முனிவர் தாமும் சிந்தையின் இரக்கம் சேர*** - *தேவரும் முனிவர் (கூடத்) தத்தமது நெஞ்சில் இரக்கம் கொள்ளவும்;* ***ஆ அரும் பொறையினான் தன் அறிவினைத் தகைக்க நின்ற*** - *தனது பற்றற்ற உணர்வினைத் தடுக்குமாறு நின்ற;* ***ஆவலும் துயரும் தீர*** - *ஆசையும் துன்பமும் தீருமாறு;* ***பகுவாய் ஆர அரற்றினான்*** - *பிளந்த வாயாரப் புலம்பத் தொடங்கினான்.*

*வாய் விட்டு அரற்றி அழுதால் ஆசையும் துயரும் குறையும் என்று இன்றைய உளநூல் அறிஞரும் கூறுவதற்கேற்ப, "ஆவலும் துயரும் தீர வாயார அரற்றினான்" என்றார்.*

*வீடணன் புலம்பல்*

***அறுசீர் ஆசிரியவிருத்தம் (வேறு)***

***9921. உண்ணாதே உயிர் உண்ணாது ஒரு நஞ்சு;***
***சனகி எனும் பெரு நஞ்சு உன்னைக்***
***கண்ணாலே நோக்கவே, போக்கியதே***
***உயிர்; நீயும் களப் பட்டாயே!***
***எண்ணாதேன் எண்ணிய சொல் இன்று இனித் தான்***
***எண்ணுதியோ? - எண் இல் ஆற்றல்***
***அண்ணாவோ! அண்ணாவோ! அசுரர்கள்தம்***
***பிரளயமே! அமரர் கூற்றே!***

***எண் இல் ஆற்றல் அண்ணாவோ! அண்ணாவோ!*** - *அளவற்ற ஆற்றல்களின் உறைவிடமாயிருந்த என் அண்ணனே! என் அண்ணனே!* ***அசுரர்கள் தம் பிரளயமே*** - *அசுரர்கட்கு எல்லாம் ஊழிக்காலமாய் உருவெடுத்தவனே!;* ***அமரர் கூற்றே!*** - *தேவர்கட்கு எல்லாம் எமனாய் இருந்தவனே!;* ***ஒரு நஞ்சும்*** - *எந்த விடமும்;* ***உண்ணாதே உயிர் உண்ணாது*** - *உண்ணாமல் ஓர் உயிரை உண்ணாது;* ***சனகி எனும் பெரு நஞ்சு*** - *(இதற்கு மாறாக) சானகி என்னும் கொடிய விடம்;* ***கண்ணாலே நோக்கவே*** - *(நீ) கண்ணாலே கண்ட மாத்திரத்தில்;* ***உன்னை உயிர் போக்கியதே*** - *உன் உயிரைப் போக்கியதே;* ***நீயும் களப்பட்டாயே*** - *(ஒப்புயர்வற்ற பெருவீரனாகிய) நீயும் (சாமானியன் போன்று) படுகளப் பட்டு வீழ்ந்து கிடந்தனையே;* ***எண்ணாதேன் எண்ணிய சொல்*** - *எண்ணத் தெரியாதவன் என்று (உன்னால் கருதப்பட்ட) நான் எண்ணி உரைத்த சொற்களை;* ***இன்று இனித்தான் எண்ணுதியோ?*** - *இந்த இறுதிக் காலத்தில் இப்போது தான் எண்ணுகின்றாயா?*

*"திட்டியின் விடமன்ன கற்பின் செல்வி" (கம்ப. 7351) என்பது காண்க. "அசுரர்களின் பிரளயமே!" மகாகவிகட்கே வாய்க்கும் சொல்லாட்சி.*

***9922. "ஓர் ஆசை ஒருவன்மேல் உயிர் ஆசைக்***
***குலமகள்மேல் உடைய காதல்***
***தீர்; ஆசை பழி" என்றேன்; எனை முனிந்த***
***முனிவு ஆறித் தேறினாயோ?***
***போர் ஆசைப்பட்டு எழுந்தகுலம் முற்றும்***
***பொன்றவும்தான் பொங்கி நின்ற***
***பேர் ஆசை பெயர்ந்ததோ? - பெயர்ந்து ஆசைக்***
***கரி இரியப் புருவம் பேர்த்தாய்!***

***ஆசைக்கரி பெயர்ந்து இரியப் புருவம் பேர்த்தாய்*** - *திசை யானைகள் நிலை பெயருமாறு புருவம் பெயர்க்கும் திறல் வாய்ந்தவனே;* ***ஓராதே*** - *உணராமல்;* ***ஒருவன் தன் உயிர் ஆசைக் குலமகள் மேல்*** - *வேறு ஒருவன் தன் உயிர் போன்று நேசித்து வந்த ஒரு குல மகளின் மேல்;* ***உற்ற காதல்*** - *கொண்ட ஆசை;* ***தீராத வசை என்றேன்*** - *(என்றும்) தீராப் பழியைத் தரும் என்று கூறினேன்;* ***எனை முனிந்த முனிவு ஆறித்***

***தேறினாயோ?*** - *(அப்போது) நீ என் மேற் கொண்ட கோபம் (தவறு என்று) (இப்போதாவது) தணிந்து தெளிவடைந்தாயா?;* ***போர் ஆசைப்பட்டு எழுந்த*** - *போரிலே ஆசை கொண்டு எழுந்த;* ***குலம் முற்றும் பொன்றவும்*** - *குலம் முழுவதும் அழிந்து படவும்;* ***பொங்கி நின்ற பேர் ஆசை பெயர்ந்ததோ?*** - *மேன்மேல் உயர்ந்து வந்த உன் பேராசை (இப்போதாவது) ஒழிந்ததா?*

***9923. "அன்றுஎரியில் விழு வேதவதி இவள்காண்;***
***உலகுக்கு ஓர் அன்னை" என்று,***
***குன்று அனைய நெடுந் தோளாய்! கூறினேன்;***
***அது மனத்துள் கொள்ளாதே போய்,***
***உன்தனது குலம் அடங்க, உருத்து அமரில்***
***படக் கண்டும், உறவு ஆகாதே,***
***பொன்றினையே! இராகவன்தன் புய வலியை***
***இன்று அறிந்து, போயினாயோ!"****

***அன்று*** - *ஒரு காலத்தில்;* ***எரியில் விழு வேதவதி*** - *தீயில் (உன்னைச் சபித்து) விழுந்த வேதவதி என்பவள்;* ***உலகுக்கு ஓர் அன்னை*** - *உலகத்துக்கெல்லாம் ஒப்பற்ற தாயாகி (சீதையென்னும்);* ***இவள் காண்*** - *இவளாகி வந்துள்ளாள்;* ***என்று*** - *என்று;* ***குன்று அனைய நெடுந்தோளாய்*** - *மலை போன்ற திண்மையுடைய பெருந்தோளனே!;* ***கூறினேன்*** - *நான் சொன்னேன்;* ***அது மனத்துள் கொள்ளாதே போய்*** - *அவ்வுரையை மனத்துட் கொள்ளாமல் போய்;* ***உன் தனது குலம் அடங்க*** - *உன்னுடைய குலம் முழுவதும் அழிய;* ***அமரில் உருத்து*** - *போரில் சினந்து;* ***படக் கண்டும்*** - *இறந்து மடிதலைக் கண்டும்;* ***உறவு ஆகாதே*** - *(நீ இராமபிரானை) உறவாகக் கொள்ளாமல்;* ***பொன்றினையே*** - *இறுதி வரையில் அவனைப் பகையாகக் கொண்டு அழிந்து ஒழிந்தாயே;* ***இராகவனார் புய வலியை*** - *இராமபிரானுடைய தோள்வலியை (நான் சொல்லும்போது அறியாமல்);* ***இன்று அறிந்து போயினாயோ*** - *(சாகும்போது) அறிந்துகொண்டு போயிருக்கிறாயோ!*

*இறைவனுக்கும் உயிர்கட்கும் உள்ள ஒன்பது வகை (நவவித சம்பந்தம்) உறவுகளில், பிதா புத்திர உறவும் ஒன்று. உறவாகக் கருத வேண்டிய தலைவனைப் பகையாக மயக்க உணர்வால். பிறழ உணர்ந்து, இராவணன் போன்றோர் அழிகின்றனர் என்பதனை "உறவாகாமல் பொன்றினையே" என்பதனால் பெறவைத்தார்.*

***9924. 'மன்றல் மா மலரானும், வடி மழு வாள்***
***படையானும், வரங்கள் ஈந்த***
***ஒன்று அலாதன உடைய முடியோடும்***
***பொடி ஆகி உதிர்ந்து போன;***
***அன்றுதான் உணர்ந்திலையே ஆனாலும்***

***அவன் நாட்டை அணுகாநின்ற***
***இன்றுதான் உணர்ந்தனையே, இராமன்தன்***
***யாவருக்கும் இறைவன் ஆதல்?***

***மன்றல் மா மலரோனும்*** *- மணமுள்ள தாமரை மேல் வாழ்பவனாகிய பிரமதேவனும்;* ***வடி மழுவாள் படையானும்*** *- கூரிய மழுவாளைப் படையாகக் கொண்ட சிவபிரானும்;* ***ஈந்த*** *- கொடுத்தருளிய;* ***வரங்கள்*** *- வரங்கள்;* ***ஒன்று அலாதன உடைய*** *- பத்தாகவுள்ள;* ***முடியோடு*** *- உன் தலைகளோடு சேர்ந்து;* ***பொடியாகி உதிர்ந்து போன*** *- பொடிப் பொடியாக உதிர்ந்து போயின;* ***அன்றுதான் உணர்ந்திலையே ஆனாலும்*** *- (நீ சீதையை எடுத்து வந்து) அன்று இராமனின் ஆற்றலை உணராது போனாலும்;* ***அவன் நாட்டை அணுகா நின்ற இன்றுதான்*** *- அந்த பரமபதத்தை அடையா நின்ற இன்றைக்கு ஆகிலும்;* ***இராமன் தான் யாவர்க்கும் இறைவன் ஆதல்*** *- இராமனே அனைவர்க்கும் இறைவன் ஆவான் என்பதனை;* ***உணர்ந்தனையே*** *- உணர்ந்தாயோ?*

*9925.* ***'வீர நாடு உற்றாயோ? விரிஞ்சனாம்***
***யாவருக்கும் மேலாம் முன்பன்***
***பேரன் நாடு உற்றாயோ? பிறை சூடும்***
***பிஞ்ஞகன்தன் புரம் பெற்றாயோ?***
***ஆர், அணா! உன் உயிரை, அஞ்சாதே,***
***கொண்டு அகன்றார்? அது எலாம் நிற்க,***
***மாரனார் வலி ஆட்டம் தவிர்ந்தாரோ?***
***குளிர்ந்தானோ, மதியம் என்பான்?***

***வீரநாடு உற்றாயோ?*** *- வீரர்கள் அடையும் துறக்க நாட்டை அடைந்தாயோ?;* ***விரிஞ்சன் ஆம் யாவருக்கும் மேலாம் முன்பன் பேரன் நாடு உற்றாயோ?*** *- விரிஞ்சன் எனும் பெயரினனாய் (உயிர்களில்) எவர்க்கும் மேன்மையும் முதன்மையும் உடையவனான நான்முகன் ஆகிய உன் பாட்டனின் நாட்டினை அடைந்தாயோ?;* ***பிறைசூடும் பிஞ்ஞகன் தன் புரம் பெற்றாயோ*** *- பிறை நிலவைச் சிரத்தில் சூடும் சிவபெருமானின் கயிலாய புரத்தையடைந்தாயோ?;* ***அணா*** *- அண்ணா!;* ***உன் உயிரை அஞ்சாதே கொண்டு அகன்றார் ஆர்?*** *- உனது உயிரை அஞ்சாமற் கொண்டு சென்றவர் தான் யார்?;* ***அது எலாம் நிற்க*** *- அது எல்லாம் ஒருபக்கம் இருக்கட்டும்;* ***மாரனார் தனியாட்டம் தவிர்ந்தாரோ?*** *- மன்மதனார் (உன்பால் ஆடிய) வலிய ஆட்டத்தை (இப்போதாவது) நிறுத்திக்கொண்டாரோ;* ***மதியம் என்பான் குளிர்ந்தானோ?*** *- (காம தாபத்தால் உன்னை எரித்துக் கொண்டிருந்த) சந்திரன் (இப்போதாவது) குளிர்ச்சி தருபவன் ஆனானோ?*

*வீரநாடு - வீர சொர்க்கம்.*

***9926. "கொல்லாத மைத்துனனைக் கொன்றாய்" என்று***
***அது குறித்துக் கொடுமை சூழ்ந்து,***
***பல்லாலே இதழ் அதுக்கும் கொடும் பாவி***
***நெடும் பாரப் பழி தீர்ந்தாளே!***
***நல்லாரும் தீயாரும் நரகத்தார்***
***துறக்கத்தார், நம்பி! நம்மோடு***
***எல்லாரும் பகைஞரே; யார் முகத்தே***
***விழிக்கின்றாய்? எளியை ஆனாய்!***

**கொல்லாத மைத்துனனை** - *கொல்லத் தகாத மைத்துனனை;* **கொன்றாய் என்று** - *நீ கொன்று விட்டாய் என்று;* **அது குறித்துக் கொடுமை சூழ்ந்து** - *அக்கொடுமையை மனத்துட் கொண்டு புரியச் சூழ்ச்சி செய்து;* **பல்லாலே இதழ் அதுக்கும் கொடும்பாவி** - *(சமயம் பார்த்த வண்ணம்) பற்களால் இதழைக் கடித்துக் கொண்டிருந்த கொடிய பாவியான சூர்ப்பணகை;* **நெடும் பாரப் பழி தீர்ந்தாளே!** - *(தன் நெஞ்சை யழுத்திக் கொண்டிருந்த) பெரும் பாரமாம் பழியை (இப்போது) தீர்த்துக் கொண்டாளோ?;* **நம்பி** - *நம்பியே;* **நல்லாரும் தீயாரும்** - *நல்லோர்களும் தீயோர்களும்;* **நரகத்தார் துறக்கத்தார்** - *நரகத்திலா (அன்றி) சொர்க்கத்திலா இருப்பார்கள்;* **நம்மோடு எல்லோரும் பகைஞரே!** - *நம்மோடு அனைவரும் பகைமை பாராட்டுபவர்களே!;* **எளியை ஆனாய்** - *(உயர்நிலையிலிருந்து) (காமத்தால்) எளியவனாய் வீழ்ந்தவனே!;* **யார் முகத்தில் விழிக்கின்றாய்?** - *(இப்போது) யார் முகத்தில் விழித்துக் கொண்டிருக்கிறாய்?*

*இராவணன் சூர்ப்பணகையின் கணவனான வித்துருசிங்கனைக் கொன்றமை; "தன்னுடைய தங்கையாம் தடவரைத் தோட் சூர்ப்பணகை தன்னைக் கொண்ட மின்னனயை சுடரிலை வேல் வித்துருசிங்கன் தனை வெங்களத்து வீழ்த்தான்" (உத்தர. திக்கு விசய: 83) சூர்ப்பணகை பழி தீர்க்க முடிவெடுத்திருந்தமை, "நீலமா மணிநிற நிருதர் வேந்தனை மூலநாசம் பெற முடிக்கும் மொய்ம்பினாள், மேலைநாள் உயிரொடும் பிறந்துதான் விளை காலம் ஓர்ந்து உடன் உறை கடிய நோயனாள்" (கம்ப. 2739) என்பதனால் அறிக.*

***9927. 'போர்மகளை, கலைமகளை, புகழ்மகளை,***
***தழுவிய கை பொறாமை கூர,***
***சீர்மகளை, திருமகளை, தேவர்க்கும்***
***தெரிவு அரிய தெய்வக் கற்பின்***
***பேர்மகளை, தழுவுவான் உயிர் கொடுத்து***
***பழி கொண்ட பித்தா! பின்னைப்***
***பார்மகளைத் தழுவினையோ, திசை யானைப்***
***பணை இறுத்த பணைத்த மார்பால்?'***

***போர்மகளை*** - *வெற்றித் திருமகளையும்;* ***கலை மகளை*** - *கலைகட்குரிய நாமகளையும்;* ***புகழ் மகளை*** - *கீர்த்திக்குரிய மகளையும்;* ***தழுவிய கை*** - *அணைத்த உன் கரமானது;* ***பொறாமை கூர*** - *பொறாமை மிகுமாறு;* ***சீர்மகளைத் திருமகளை*** - *சிறப்பு வாய்ந்த மகளான திருமகளை;* ***தேவர்க்கும் தெரிவு அரிய*** - *தேவர்களும் அறிய முடியாத;* ***தெய்வக் கற்பின் பேர்மகளை*** - *தெய்வத்தன்மை வாய்ந்த கற்பினால் பெயர் பெற்றவளான சீதா தேவியை;* ***தழுவுவான்*** - *தழுவும் ஆசையினால்;* ***உயிர் கொடுத்து*** - *உயிரைக் கொடுத்து;* ***பழி கொண்ட*** - *பழியை வாங்கிய;* ***பித்தா*** - *பித்தனே!;* ***திசையானை பணை இறுத்த*** - *திக்கு யானைகளின் கொம்புகளை ஒடித்த;* ***பணைத்த மார்பால்*** - *பெரிய மார்பினால்;* ***பின்னை*** - *பிறகு;* ***பார்மகளைத் தழுவினையே*** - *மண் மகளை அணைத்துக் கிடக்கின்றாயே!*

*திருமகளைத் தழுவ விரும்புவது கண்டு பிற தெய்வ மகளிரை அணைத்த பொறாமை மிக்கது என்க. பொறாமை கூர - பொறுக்க மாட்டாமை மிக எனினுமாம். பார் மகளைக் தழுவல் மண்ணைத் தழுவிக் கிடத்தல். போரிலும் கல்வியிலும், புகழிலும், மேம்பட்டு, இவற்றிற்குத் தெய்வங்களான அதி தேவதைகளை அணைத்து வாழ்ந்தாய். இவற்றோடு அமையாமல் திருமகளாகிய பிறர் மனையை அணைக்க நினைத்து, மண்ணை அணைத்து மாண்டனையே என்றழுதான் வீடணன். சோகச்சுவையைப் பிழிந்து வைத்திருக்கிற பாடல்களுள் இதுவும் ஒன்றாதல் காண்க. உயிர் கொடுத்தாகிலும் புகழை விரும்பிப் பெற வேண்டியதிருக்க உயிர் கொடுத்துப் பழி கொண்டதனால் "பித்தா" என்று அழுதான்.*

### *வீடணன் தேறுதல்*

***9928. என்று ஏங்கி, அரற்றுவான்தனை எடுத்து,***
***சாம்பவனாம் எண்கின் வேந்தன்,***
***'குன்று ஓங்கு நெடுந் தோளாய்! விதி நிலையை***
***மதியாத கொள்கைத்து ஆகிச்***
***சென்று ஓங்கும் உணர்வினையோ? தேறாது***
***வருந்துதியோ?' என்ன, தேறி***
***நின்றான், அப்புறத்து; அரக்கன் நிலை கேட்டாள்***
***மயன் பயந்த நெடுங் கண் பாவை.***

***என்று ஏங்கி*** - *என்று இரங்கி;* ***அரற்றுவான் தனை*** - *கதறுகின்ற வீடணனை;* ***எடுத்து*** - *(கைகளால்) எடுத்து;* ***சாம்பவனாம் எண்கின் வேந்தன்*** - *சாம்பவன் என்கின்ற கரடிகளின் அரசன்;* ***குன்று ஓங்கு நெடுந்தோளாய்!*** - *மலை போல் உயர்ந்த பெருந் தோளனே!;* ***விதி நிலையை மதியாத கொள்கைத்து ஆகி*** - *விதியின் நிலைமையைக் கருதாத கொள்கையைதாய்;* ***சென்று ஓங்கும் - சென்று உயர்கின்ற; உணர்வினையோ?*** - *உணர்வினையுடையவனாய் ஆயினையோ?;* ***தேறாதே அழுந்துதியோ?*** - *தெளியாமல் (துன்பத்தில்) ஆழ்கின்றாயோ?;* ***என்ன*** - *என்று கூற;* ***தேறி*** - *தெளிவுற்றவனாய்;* ***அப்புறத்து நின்றான்*** - *அப்புறமாக நின்றான்; (வீடணன்)* ***மயன்***

***பயந்த நெடுங்கண் பாவை*** - *மயனின் மகளாகிய பெரிய கண்களையுடைய மண்டோதரி;* ***அரக்கன் நிலை கேட்டாள்*** - *இராவணன் (பட்ட) நிலையைக் கேள்வியுற்றாள்.*

## *மண்டோதரியும் அரக்கியரும் இராவணன் கிடக்கும் இடம் அடைதல்*

**கலிவிருத்தம்**

***9929. அனந்தம் நூறாயிரம் அரக்கர் மங்கைமார்,***
***புனைந்த பூங் குழல் விரித்து அரற்றும் பூசலார்,***
***இனம் தொடர்ந்து உடன் வர, எய்தினாள் என்ப -***
***நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினாள்.***

***அனந்தம் நூறாயிரம் அரக்கர் மங்கைமார்*** - *பல இலட்சக் கணக்கினரான இராட்சதப் பெண்கள்;* ***புனைந்த பூங்குழல் விரித்து*** - *மலர் சூடிய கூந்தல்களை விரித்து;* ***அரற்றும் பூசலார்*** - *கதறுகின்ற அழுகையினராய்;* ***இனம் தொடர்ந்து*** - *கும்பலாகத் தொடர்ந்து;* ***உடன் வர*** - *கூட வர;* ***நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினாள்*** - *நினைவும் மறப்பும் அற்ற நெஞ்சினளாகிய மண்டோதரி;* ***எய்தினாள்*** - *அடைந்தாள்.*

*தன்னுடைய கணவனை மறந்து விடுவது, பின் நினைவது என்னும் நிலையின்றி, எப்போதும் கணவனை நெஞ்சுட் கொண்டிருப்பவள் ஆதலால், "நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினள்" என்றார். ஒப்பு. "உன்னினேன் என்றேன், மற்று என் மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத்தக்கனள்" (குறள் 1316)*

***9930. இரக்கமும் தருமமும் துணைக்கொண்டு, இன் உயிர்***
***புரக்கும் நன் குலத்து வந்து ஒருவன் பூண்டது ஓர்***
***பரக்கழி ஆம் எனப் பரந்து, நீண்டதால் -***
***அரக்கியர் வாய் திறந்து அரற்றும் ஓதையே.***

***இரக்கமும் தருமமும் துணைக்கொண்டு*** - *தயையும் தருமமும் துணையாகக் கொண்டு;* ***இன்னுயிர் புரக்கும் நன் குலத்து ஒருவன்*** - *இனிய உயிர்களைப் பாதுகாக்கப் பிறந்த நல்ல குலத்துப் பிறந்த ஒருவனை;* ***பூண்டதோர் பரக்கழி யான் என*** - *(அவ்வாறு செய்யாமல்) மேற்கொண்டதொரு மிகு பழி பரந்து விரிவது போல;* ***அரக்கியர் வாய் திறந்து அரற்றும் ஓதை*** - *அரக்கிமார்கள் வாயைத் திறந்து கதறுகின்ற ஓசையானது;* ***பரந்து நீண்டது*** - *பரவி விரிந்தது.*

*உயர் குலத்துப் பிறந்தான் ஒருவன் செய்த பழிச் செயல் "மதிக்கண் மறுப்போல்" உலகமெங்கும் பரந்து தெரியும். அதுபோல்அரக்கியர் அழும் ஓசை உலகெங்கும் இராவணன் இறப்பு தெரியுமாறு பரவியது என்பதாம்.*

***9931. நூபுரம் புலம்பிட, சிலம்பு நொந்து அழ,***
***கோபுரம்தொறும் புறம் குறுகினார் சிலர்;***
***'ஆ! புரந்தரன் பகை அற்றது ஆம்' எனா,***
***மா புரம் தவிர, விண் வழிச் சென்றார் சிலர்.***

***நூபுரம் புலம்பிட*** *- நூபுரம் வருந்தவும்;* ***சிலம்பு நொந்து அழ*** *- சிலம்பு புலம்பிடவும்;* ***கோபுரம் தொறும் புறம் சிலர் குறுகினர்*** *- (நகரவாயில்) கோபுரந்தோறும் சிலர் வெளியே வந்தனர்;* ***ஆபுரந்தரன் பகை அற்றது ஆம் எனா*** *- ஓ! இந்திரன் பகை இன்றோடு ஒழிந்தது என்று கூறி;* ***மாபுரம் தவிர விண் வழிச் சென்றார் சிலர்*** *- இலங்கையிலிருந்து (இராவணனின் தேவர் குல மகளிர்) சிலர் வானுலகுக்குச் சென்றனர்.*

*இந்திரனோடு இருந்த பகை இன்றோடு ஒழிந்தது ஆதலால், இனி நம் உலகு செல்வோம் என்று இராவணனால் கவர்ந்து வரப்பட்ட தேவ மாதர் சிலர் வான்வழியே தேவஉலகம் சென்றனர் என்பதாம்.*

***9932. அழைப்பு ஒலி முழக்கு எழ, அழகு மின்னிட,***
***குழைப் பொலி நல் அணிக் குலங்கள் வில்லிட,***
***உழைப் பொலி உண் கண் நீர்த் தாரை மீது உக,***
***மழைப் பெருங் குலம் என, வான் வந்தார் சிலர்.***

***அழைப்பு ஒலி முழக்கு எழ*** *- அழைக்கின்ற ஒலி (இடி) முழக்கைப் போல் எழவும்;* ***அழகு மின்னிட*** *- அழகு மின்னல் போன்று மின்னிடவும்;* ***குழை பொலி நல் அணிக்குலங்கள் வில்லிட*** *- காதணி முதலிய அழகிய நல்ல அணிவகைகள் (வான) வில்போன்று ஒளிரவும்;* ***உழைபொலி*** *- மான்போல் திகழும்;* ***உண்கண்*** *- மைதீட்டப் பெற்ற கண்களிலிருந்து;* ***நீர்த்தாரை மீது உக*** *- கண்ணீர்த் தாரைகள் (மண்) மேலே விழவும்;* ***மழைப் பெரும் குலம் என*** *- மேகக் கூட்டங்கள் போல்;* ***சிலர் வான் வந்தார்*** *- சில மகளிர் வான்வழியாக வந்தனர்.*

*இராவணன் உடலைக் காண வந்த மகளிர், மேகக் கூட்டங்களாக உருவகிக்கப்பட்டனர். அவர்கள் கூவும் ஒலியே இடி முழக்கு. அழகின் ஒளியே மின்னல். ஆபரணங்களே வானவில். கண்ணீர்த்தாரைகளே மழைத்தாரைகள் என உருவகிக்கப் பெற்றுள்ளமை காண்க.*

***9933. தலைமிசைத் தாங்கிய கரத்தர், தாரை நீர்***
***முலைமிசைத் தூங்கிய முகத்தர், மொய்த்து வந்து***
***அலைமிசைக் கடலின் வீழ் அன்னம்போல், அவன்***
***மலைமிசைத் தோள்கள்மேல் வீழ்ந்து, மாழ்கினார்.***

***தலைமிசைத் தாங்கிய கரத்தர்*** - *தலை மேல் சுமந்த கைகளையுடையவரும்;* ***தாரை நீர்*** - *கண்ணீர்த் தாரைகள்;* ***முலை மிசைத் தூங்கிய முகத்தர்*** - *முலைமுகட்டில் வீழுமாறு தொங்கிய முகங்களையுடையவரும்;* ***மொய்த்துவந்து*** *-நெருங்கி வந்து;* ***கடலின் அலைமிசை*** - *கடல் அலைகளின் மேல்;* ***வீழ் அன்னம் போல்*** - *(வந்து) வீழ்கின்ற அன்னக் கூட்டங்களைப் போல;* ***அவன்*** - *அந்த இராவணனின்;* ***மலைமிசைத் தோள்கள் மேல்*** - *மலையினும் விஞ்சிய (வன்மைத்) தோள்களின்மேல்;* ***வீழ்ந்து மாழ்கினார்*** - *நிலைகலங்கிச் சோர்ந்து விழுந்தனர்.*

*மாழ்குதல் - அறிவு நிலை கலங்கல்.*

***9934. தழுவினர் தழுவினர் தலையும் தாள்களும்,***
***எழு உயர் புயங்களும் மார்பும், எங்கணும்***
***குழுவினர், முறை முறை கூறு கூறு கொண்டு***
***அழுதனர் அயர்த்தனர், அரக்கிமார்களே.***

***அரக்கிமார்கள்*** - *இராக்கதப் பெண்டிர்;* ***குழுவினர்*** - *கூட்டம் கூட்டமாய்;* ***தலையும் தாள்களும்*** - *தலைகளும் கால்களும்;* ***எழு உயர் புயங்களும்*** - *கணையமரம் ஒத்த தோள்களும்;* ***மார்பும்*** - *மார்புகளும்; (ஆகிய இராவணன் அங்கங்களின்)* ***எங்கணும்*** - *எல்லாவிடங்களிலும்;* ***முறை முறை கூறு கொண்டனர்*** - *முறை முறையாய் பகுத்துக் கொண்டவராகி; தழுவினர் தழுவினர் - பன்முறை தழுவி;* ***அழுதனர் அயர்த்தனர்*** - *அழுது மயங்கினர்.*

***9935. வருத்தம் ஏது எனின், அது புலவி; வைகலும்***
***பொருத்தமே வாழ்வு எனப் பொழுது போக்குவார்,***
***ஒருத்தர்மேல் ஒருத்தர் வீழ்ந்து, உயிரின் புல்லினார்-***
***திருத்தமே அனையவன் சிகரத் தோள்கள்மேல்.***

***வருத்தம் ஏது எனின்*** - *(இந்த மகளிர்க்கு இது வரையில்) துன்பம் யாது என்றால்;* ***அது புலவி*** - *அது இராவணனிடம் நேர்ந்த புலவியேயாகும்;* ***வைகலும் பொருத்தமே வாழ்வு என*** - *நாடோறும் (அவன் மார்பில்) பொருந்தி வாழ்வதே வாழ்வாகும் என்று கருதி;* ***பொழுது போக்கினார்*** - *காலங்கழித்து வந்த அந்த அரக்கியர்;* ***திருத்தமே அனையவன்*** - *(இறைவன் படைப்பில் பலமுறை) திருத்திச்*

*செம்மைப்பட்ட வடிவினைப் பெற்றவன் எனக் கூறத்தக்க வடிவினையுடைய இராவணனின்;* ***சிகரத் தோள்கள்*** *- தோள்களின் மேல்;* ***ஒருத்தர் மேல் ஒருத்தர் வீழ்ந்து*** *- ஒருவர் மேல் ஒருவர் விழுந்து;* ***உயிரின் புல்லினர்*** *- (அவன்) உயிரைத் தழுவுவதுபோல் தழுவினர்.*

*புலத்தலும் கலத்தலும் ஆகிய துன்ப இன்பங்களைத் தவிர வேறு துன்பமும் இன்பமும் அறியாத அரக்க மாதர், இன்றுதான் துன்பக் கடலில் மூழ்குவார் ஆயினர்; இராவணன் வடிவம் நான்முகனால் பன்முறை திருத்தித் திருத்தி, இறுதியில் செப்பமாக்கப்பட்ட, பூரண வடிவென்பார். "திருத்தமே யனையவன்" என்றார். இனி "திருத்தமே அனைய வான் சிகரத் தோள்கள்" என்று திருத்தத்தைத் தோள்களுக்கு ஏற்றினுமாம். திருத்தம் என்பதனை, தீர்த்தம் எனும் வட சொல்லாகக் கொண்டு, இராவணன் தோள்கள் வீரந்தாங்கிய தீர்த்தத் துறை போன்றவையென்று முந்தைய உரையாசிரியர்கள் உரை கூறினர்.*

***9936. இயக்கியர், அரக்கியர், உரகர் ஏழையர்,***
***மயக்கம் இல் சித்தியர், விஞ்சை மங்கையர் -***
***முயக்கு இயல் முறை கெட முயங்கினார்கள் - தம்***
***துயக்கு இலா அன்பு மூண்டு, எவரும் சோரவே.***

***இயக்கியர் அரக்கியர்*** *- யட்ச மாதரும், இராக்கத மங்கையரும்;* ***உரகர் ஏழையர்*** *- நாகலோகப் பெண்களும்;* ***மயக்கமில் சித்தியர்*** *- மயக்கமற்ற சித்தசாதிப் பெண்டிரும்;* ***விஞ்சை மங்கையர்*** *- வித்தியாதர மகளிரும்; (ஆகிய)* ***எவரும்*** *- யாவரும்;* ***தம் துயக்கிலா அன்பு மூண்டு*** *- தம்முடைய தளராத அன்பின் முனைப்பால்;* ***எவரும் சோர*** *- அனைவரும் அறிவு சோர்ந்து;* ***முயக்கியல் முறை கெட*** *- தழுவும் முறையெல்லாம் தவிர்த்து;* ***முயங்கினார்கள்*** *- (இராவணன் உடலைத்) தழுவினார்கள்.*

***9937. 'அறம் தொலைவுற மனத்து அடைத்த சீதையை***
***மறந்திலையோ, இனும்? எமக்கு உன் வாய்மலர்***
***திறந்திலை; விழித்திலை; அருளும் செய்கிலை;***
***இறந்தனையோ?' என இரங்கி, ஏங்கினார்.***

***அறம் தொலைவுற*** *- (தகாத காதலால்) தருமம் அழியுமாறு;* ***மனத்து அடைத்த சீதையை*** *- உன் உள்ளத்துக்குள்ளே சிறை வைத்திருந்த சீதையை;* ***இனும் மறந்திலையோ?*** *- இறந்த பின்பும் மறந்தாய் இல்லையோ?;* ***எமக்கு உன் வாய் மலர் திறந்திலை*** *- (அதனால்) எம் போன்றோர்க்கு உனது வாய் மலரை நல்கினாய் இல்லை;* ***விழித்திலை*** *- (எம்மை) கண் எடுத்தும் நோக்கினாய் இல்லை;* ***அருளும் செய்கிலை*** *- (வேறு வகையாலும்) அருள் புரிந்தாய் இல்லை;* ***இறந்தனையோ*** *- (நீ) இறந்து போனாயோ;* ***என இரங்கி ஏங்கினார்*** *- என்று இரங்கி ஏங்கி அழுதனர்.*

*மண்டோதரி இராவணன் மார்பில் விழுந்து புலம்புதல்*

***9938. தரங்க நீர் வேலையில் தடித்து வீழந்தென,***
***உரம் கிளர் மதுகையான் உருவின் உற்றனள்,***
***மரங்களும் மலைகளும் உருக, வாய் திறந்து,***
***இரங்கினள் - மயன் மகள், - இனைய பன்னினாள்:***

***மயன் மகள்*** - *மயனின் மகளும் (இராவணனின் பட்டத்தரசியும் ஆகிய) மண்டோதரி;* ***உரம் கிளர் மதுகையான்*** - *மனத் திண்மை வாய்ந்த வலியவனான இராவணனுடைய;* ***உருவின்*** - *உடலின் மேல்;* ***தரங்க நீர் வேலையில்*** - *அலையெறியும் நீரினையுடைய கடலின் மேல்;* ***தடித்து வீழ்ந்தென*** - *மின்னல் வீழ்ந்தது போல்;* ***உற்றனள்*** - *வீழ்ந்தவளாய்;* ***மரங்களும் மலைகளும் உருக*** - *(உருகும் இயல்பில்லாத) மரங்களும் மலைகளும் உருகுமாறு;* ***வாய் திறந்து*** - *வாய்விட்டு;* ***இரங்கினாள்*** - *அழுதவளாய்;* ***இனைய பன்னினாள்*** - *இத்தகைய மொழிகளைக் கூறினாள்.*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***9939. 'அன்னேயோ! அன்னேயோ! ஆ, கொடியேற்கு***
***அடுத்தவாறு! அரக்கர் வேந்தன்***
***பின்னேயோ, இறப்பது? முன் பிடித்திருந்த***
***கருத்து அதுவும் பிடித்திலேனோ?***
***முன்னேயோ விழுந்ததுவும், முடித் தலையோ?***
***படித் தலைய முகங்கள்தானோ?***
***என்னேயோ, என்னேயோ, இராவணனார்***
***முடிந்த பரிசு! இதுவோ பாவம்!***

***அன்னேயோ! அன்னேயோ!*** - *அம்ம!' அம்மம்ம!;* ***கொடியேற்கு அடுத்தவாறு*** - *கொடியவளான எனக்கு வந்துள்ள நிலைமையை என்னென்பது;* ***அரக்கர் வேந்தன் பின்னேயோ இறப்பது*** - *இராக்கதர் தலைவனாகிய இராவணன் இறந்த பின்னேயோ நான் இறப்பது?* ***முன் பிடித்திருந்த கருத்து*** - *முன்பு தொடங்கி நான் கடைப்பிடித்து வந்த கொள்கைகளில்;* ***அதுவும் பிடித்திலேனோ?*** - *அதையும் கைவிட்டு விட்டேனோ?;* ***முன்னேயோ விழுந்ததுவும் முடித்தலையோ?*** - *(அந்தத் தவற்றால்) எனக்கு முன்னாலே (என் கணவரின்) மகுடத் தலைகள் விழுந்தனவோ?* ***படித்தலைய முகங்கள் தானோ?*** - *மண் மேல் கிடப்பவை என் (உயிர் அனையானின்) தலைகள் தானோ?* ***என்னேயோ? என்னேயோ?*** - *என்னென்பேன் என்னென்பேன்?;* ***இராவணனார் முடிந்த பரிசு இதுவோ பாவம்*** - *(உலகைக் கலக்கிய) இராவணனார் வாழ்வு இத்தகையதாகவா முடியவேண்டும்! பாவம்! பாவம்!*

*தானோ - தாமோ. ஒருமை பன்மை மயக்கம். மனமொத்த கணவன் மனைவியர் ஒரு சேர உயிர் துறக்கவேண்டும். அல்லது கணவனுக்குமுன் மனைவி உயிர் துறக்க எண்ணுவது இந்நாட்டு மரபு, மூவுலகங்களையும் கலக்கி வென்றவனும் மண்ணின் மேல் தலை யற்று வீழ்ந்து மாள்வது தான் விதியோ! என்பாள். "இராவணனார் முடிந்த பரிசு இதுவோ பாவம்!" என்றாள்.*

***9940. 'வெள் எருக்கஞ் சடை முடியான் வெற்பு எடுத்த***
***திரு மேனி, மேலும் கீழும்***
***எள் இருக்கும் இடன் இன்றி, உயிர் இருக்கும்***
***இடன் நாடி, இழைத்தவாறோ?***
***'கள் இருக்கும் மலர்க் கூந்தல் சானகியை***
***மனச் சிறையில் கரந்த காதல்***
***உள் இருக்கும்" எனக் கருதி, உடல் புகுந்து,***
***தடவியதோ ஒருவன் வாளி?***

***ஒருவன் வாளி*** *- ஒப்பற்ற இராமபிரானின் அம்பு;* ***வெள் எருக்கம் சடைமுடியான்*** *- வெள்ளை எருக்கம் பூவை (முடியில்) சூடும் சிவபெருமானுடைய;* ***வெற்பு எடுத்த திருமேனி*** *- கயிலை மலையைத் தூக்கிய இராவணனுடைய அழகிய உடலின்;* ***மேலும் கீழும்*** *- உடம்பின் மேல்பகுதியிலும் கீழ்ப்பகுதியிலும்;* ***எள் இருக்கும் இடம் இன்றி*** *- எள் இருக்கும் இடம் கூட இல்லாமல்;* ***உயிர் இருக்கும் இடம் நாடி*** *- உயிர் இருக்கும் இடம் முழுவதையும் தேடி;* ***இழைத்த ஆறோ?*** *- ஆராய்ந்த வண்ணமோ?* ***கள் இருக்கும் மலர்க்கூந்தல் சானகியை*** *- தேன் குடிகொள்ளும் மலர்களைச் சூடிய கூந்தலையுடைய சீதாதேவியை;* ***மனச் சிறையில் கரந்த காதல்*** *- மனம் எனும் சிறையில் ஒளித்து வைத்திருந்த காதலானது;* ***உள் இருக்கும் எனக் கருதி*** *- உள்ளே (இன்னும் எங்காவது) பதுங்கியிருக்கும் என்று எண்ணி;* ***உடல் புகுந்து தடவியதோ?*** *- உடல் முழுதும் நுழைந்து (நுழைந்து) தடவிப் பார்த்ததோ?*

*இறப்பின் பின் நிகழும் புலம்பலில் எள்ளைச் சுட்டிய நயம் காண்க.*

***9941. 'ஆரம் போர் திரு மார்பை அகல் முழைகள்***
***எனத் திறந்து, இவ் உலகுக்கு அப்பால்***
***தூரம் போயின, ஒருவன் சிலை துரந்த***
***சரங் களே; போரில் தோற்று***
***வீரம் போய், உரம் குறைந்து, வரம் குறைந்து,***
***வீழ் ந் தானே! வேறே! கெட்டேன்!***
***ஒர்அம்போ, உயிர் பருகிற்று, இராவணனை?***
***மானுடவன் ஊற்றம் ஈதோ!***

***ஒருவன் சிலை துரந்த சரங்கள்*** *- ஒப்பற்றவனான இராம பிரானுடைய வில் செலுத்திய அம்புகள்;* ***ஆரம் போர் திருமார்பை*** *- முத்து மாலைகள் அணிந்த அழகிய மார்பினை;* ***அகல் முழைகள் என*** *- விரிந்த குகைகள் போல;* ***திறந்து*** *- பிளந்து;* ***இவ் உலகுக்கு அப்பால்*** *- இந்த உலகைக் கடந்து அப்பால்;* ***தூரம் போயின*** *- வெகு தொலைவுக்குச் சென்று விட்டன;* ***போரில் தோற்று*** *- போரில் தோற்று;* ***வீரம் போய்*** *- வீரம் இழந்தும்;* ***உரம் குறைந்தும்*** *- வலிமையிழந்தும்;* ***வரம் குறைந்தும்*** *- பெற்ற வரமெல்லாம் இழந்தும்;* ***வீழ்ந்தனையே*** *- (போர்க்களத்தில்) வீழ்ந்து கிடக்கின்றாயே;* ***இராவணனை ஓர் அம்போ உயிர் பருகிற்று?*** *- இராவணனாகிய உன்னை (இராமன்) விட்ட ஓர் அம்பா உயிரையுண்டது? (நம்ப முடியவில்லை);* ***மானுடவன் ஊற்றம் ஈதோ.*** *- மனிதன் ஒருவனின் வலிமை இத்தகையதோ?*

***9942. 'காந்தையருக்கு அணி அனைய சானகியார்***
***பேர் அழகும், அவர்தம் கற்பும்***
***ஏந்து புயத்து இராவணனார் காதலும், அச்***
***சூர்ப்பணகை இழந்த மூக்கும்,***
***வேந்தர் பிரான், தயரதனார், பணியதனால்***
***வெங் கானில் விரதம் பூண்டு***
***போந்ததுவும், கடைமுறையே புரந்தரனார்***
***பெருந் தவமாய்ப் போயிற்று, அம் மா!***

***காந்தையருக்கு அணி அனைய*** *- மகளிர்க்கெல்லாம் அணி போன்ற;* ***சானகியார் பேர் அழகும்*** *- சீதா தேவியின் பெருமைக்குரிய அழகும்;* ***அவர்தம் கற்பும்*** *- அவர் (பூண்டிருந்தகற்பும்);* ***ஏந்து புயத்து இராவணனார் காதலும்*** *- ஓங்கிய புயங்களையுடைய இராவணனார் (சீதைமேல் கொண்ட தகாத) காதலும்;* ***அச்சூர்ப்பணகை இழந்த மூக்கும்*** *- அந்தச் சூர்ப்பணகை (இதனால்) இழந்து போன மூக்கும்;* ***வேந்தர் பிரான் தயரதனார் பணியதனால்*** *- மன்னர்க்கு மன்னனான தயரதன் ஏவலினால்* ***வெங்கானில் விரதம் பூண்டு போந்ததுவும்*** *- கொடிய கானகத்தே விரத வேடம் பூண்டு (இராமன்) வந்ததுவும்;* ***கடைமுறையே*** *- கடைசியில்;* ***புரந்தனார் பெருந்தவமாய்ப் போயிற்று*** *- இந்திரனார் செய்த பெருந்தவத்தின் பலனாக முடிந்துவிட்டன.*

*மேற்பாடலில் "ஓர் அம்போ இராவணனார் உயிர் பருகிற்று?" என்ற வியப்புக்கு விடையாக, "சானகியார் பேரழகும்.... விரதம் பூண்டு போந்ததுவும்" ஆக எல்லாம் இணைத்து இராவணனார் உயிர் பருகின என்றவாறாம். காந்தையருக்கு அணி - "மடந்தைமார்களில் திலகமே" (கம்ப. 2072) " பெண் அருங்கலமே" (கம்ப. 2077) "தெரிவைமார்க்கு ஒரு கட்டளை எனச் செய்த திருவே" (கம்ப.2078).*
*இந்திரன் முதலிய தேவர்கள் வேண்டலால், இராமாவதாரம் நிகழ்ந்ததும், அங்கு தயரதன் கட்டளை நிறைவேற்றம் காரணமாக இராமன் வனவாசம் நேர்ந்ததும், அங்கு சூர்ப்பணகையின் காம வெறியால், அவளுக்குப் அங்கபங்கம் நிகழ்ந்ததும், அவள் தூண்டலால் இராவணன் சீதா தேவியின் மேற்கொண்ட தகாக் காதலும், அது காரணமாக இராவண வதமும், காரண காரியத் தொடர்ச்சியாக நிகழ்ந்துள்ளமையால் "கடைமுறையே புரந்தரனார் பெருந்தவமாய்ப் போயிற்று" என்றாள்.*

*9943. "தேவர்க்கும், திசைக் கரிக்கும், சிவனார்க்கும்*
*அயனார்க்கும், செங் கண் மாற்கும்,*
*ஏவர்க்கும், வலியானுக்கு என்று உண்டாம்*
*இறுதி?" என ஏமாப்புற்றேன்;*
*ஆவற்கண் நீ உழந்த அருந் தவத்தின்*
*பெருங் கடற்கும், வரம் என்று ஆன்ற*
*காவற்கும், வலியான் ஓர் மானுடவன்*
*உளன் என்னக் கருதினேனோ ?*

**தேவர்க்கும்** - *வானவர்க்கும்; திசைக்கரிக்கும் - திசை யானைகட்கும்;* **சிவனார்க்கும் அயனார்க்கும், செங்கண்மாற்கும்** - *மும்மூர்த்திகட்கும்,;* **ஏவர்க்கும்** - *மற்றும் உள்ள யாவரைக் காட்டிலும்;* **வலியானுக்கு** - *வலியவனான உனக்கு;* **என்று இறுதி உண்டாம்?** - *என்றைக்கு முடிவு வரப்போகிறது?;* **என்று ஏமாப்பு உற்றேன்** - *பெருமிதம் உற்றிருந்தேன்;* **நீ ஆவல்கண்** - *நீ ஆர்வத்தோடு;* **உழன்ற** - *வருந்திச் செய்த;* **அரும் தவத்தின் பெரும் கடற்கும்** - *அரிய பெரிய கடல் போன்ற தவத்திற்கும்;* **வரம் என்று ஆன்ற காவற்கும்** - *வரம் என்று சொல்லப்பெற்ற காவலாகிய பேற்றுக்கும்;* **ஓர் வலியான் ஓர் மானுடவன்** - *(அழிவை விளைக்கவல்ல ஒப்பற்ற வலிமையையுடைய மானிடன்;* **உளன் என்னக் கருதினேனோ?** - *இருக்கின்றான் என நான் நினைக்கவில்லையே!*

*மும்மூர்த்திகள் மூவரும் இராவணனுக்குத் தோற்றமை இராவணன் மந்திரப் படலம் (கம்ப. 6182-86) பாடல்களாலும், உத்தர காண்டத்திற்கு விசயம் படலப் பாடல்களிலும் உணர்க.*

*9944. 'அரை கடை இட்டு அமைவுற்ற முக்கோடி*
*ஆயுவும் முன் அறிஞர்க்கேயும்*
*உரை கடையிட்டு அளப்ப அரிய பேர் ஆற்றல்,*
*தோள் ஆற்றற்கு உலப்போ இல்லை;*
*திரை கடையிட்டு அளப்ப அரிய வரம் என்னும்*
*பாற்கடலைச் சீதை என்னும்*
*பிரை கடை இட்டு அழிப்பதனை அறிந்தேனோ,*
*தவப் பயனின் பெருமை பார்ப்பேன்?*

**அரை கடையிட்டு** - *அரையைக் கடைசியாகக் கொண்டு;* **அமைவுற்ற முக்கோடி ஆயுவும்** - *மூன்று கோடி ஆயுளுக்கும்;* **பேர் அறிஞர்க்கேயும்** - *பெருமை பெற்ற அறிஞர்களாலும்;* **உரை கடையிட்டு அளப்பு அரிய** - *வாய் வார்த்தைகளால் முடிவு காட்டி அளக்க முடியாத;* **பேர் ஆற்றல் தோள் ஆற்றற்கு** - *பெருவலிமை கொண்ட*

*(உன்) தோள் ஆற்றலுக்கு;* ***உலப்பு இல்லை*** *- அழிவு இல்லை (என்று நினைத்து);* ***தவப் பயனின் பெருமை பார்ப்பேன்*** *- தவங்களின் பயனாய் வந்த வரங்களின் பெருக்கத்தை எண்ணிப் பெருமை கொண்டிருந்தவளாகிய நான்;* ***திரை கடையிட்டு அளப்பு அரிய*** *- அலைகளின் முடிவு காட்டி அளக்க முடியாத;* ***வரம் என்னும் பாற்கடலை*** *- (உன்) வரங்கள் ஆகிய பாற்கடலை;* ***சீதை என்னும் பிரை*** *- சீதா தேவியாகிய பிரையானது;* ***கடையிட்டு*** *- இறுதியில் இடப்பட்டு;* ***அழிப்பதனை*** *- அழிக்கப்போவதனை;* ***அறிந்தேனோ*** *- அறிந்தேன் இல்லையே!*

*அரை கடையிட்டு அமைவுற்ற முக்கோடி அரையைக் கடைசியில் கொண்ட மூன்று என்னும் கோடி இராவணன் கடைசியில் வாழ்ந்தது அரைக் கோடி 9899ஆம் பாடல் உரை பார்க்க. ஆயு - ஆயுள் கடைக் குறைந்தது. இராவணன் பெற்ற வரம் பாற்கடல் போல் விரிந்திருந்தும் சீதையென்னும் சிறு பிரைத் துளியால் பாற்கடல் முழுதும் அழிந்து கெட்டது என்று உருவகித்தார். முற்றுருவகம்.*

***9945. 'ஆர் அனார், உலகு இயற்கை அறிதக்கார்?***
***அவை ஏழும் ஏழும் அஞ்சும்***
***வீரனார் உடல் துறந்து, விண் புக்கார்;***
***கண் புக்க வேழ வில்லால்,***
***நார நாள் மலர்க் கணையால், நாள் எல்லாம்***
***தோள் எல்லாம், நைய எய்யும்***
***மாரனார் தனி இலக்கை மனித்தனார்***

***அழித்தனரே, வரத்தினாலே!***

***உலகு இயற்கை அறிதக்கார் அன்னார் யார்*** *- உலகின் இயல்பினை (முழுதும்) அறியத் தகுதியுடையவர் யார்? (யாரும் இல்லை);* ***அவை*** *- அந்த உலகம்;* ***ஏழும் ஏழும்*** *- பதினான்கும்;* ***அஞ்சும் வீரனார்*** *- அஞ்சத்தக்க இராவணனாரும்;* ***உடல் துறந்து விண் புக்கார்*** *- உடலைப் போட்டு விண்உலகம் போய்விட்டார்;* ***கண் புக்க வேழவில்லால்*** *- கணுக்கள் பொருந்திய கரும்பு வில்லால்;* ***நாரம் நாள் மலர்க்கணை*** *- (வண்டொழுக்கை) நாணாகக் கொண்ட அன்றலர்ந்த மலர்களின் கணையால்;* ***நாள் எல்லாம் தோள் எல்லாம்*** *- நாள் முழுவதும் தோள்கள் எல்லாம்;* ***நைய*** *- வருந்துமாறு;* ***எய்யும்*** *- எய்கின்ற;* ***மாரனார் தனியிலக்கை*** *- மன்மதனின் தனிப்பட்ட குறியை (இராவணனை);* ***மனித்தனார்*** *- மனிதராகிய இராமபிரான்;* ***வரத்தினால் அழித்தனரே*** *- அவர் வரத்தின் மேன்மையினால் அழித்து விட்டாரே!*

*இதுநாள் வரை உடலோடு பதினான்கு உலகமும் சென்று அச்சமூட்டி வெற்றியோடு திரும்பி வந்த இராவணன், இன்று உடலோடு செல்ல முடியாமல், தன் உடலைப் போட்டு விட்டு விண்ணுலகு செல்ல நேர்ந்ததே! இந்த உலகின் இயல்பை யாரால் உள்ளபடி அறிய இயலும் என்பது மண்டோதரியின் வியப்பு. கணுவையுடைய கரும்புவில்லும், மலர்க்கணையும் ஒரு மலையனைய மாவீரனின் தோள்களை நைய வைத்து விட்டனவே என்று காமத்தின் வலிமை செப்பியவாறு. காமன் விட்ட கணைகட்கு இலக்கானதன்றி இராவணன் மார்பு, மற்று யார் கணைக்கும் இலக்காக இருந்ததில்லையாதலால், "மாரனார் தனியிலக்கை" என்றாள்.*

*தேவர் பெற்ற வரத்தின் மேன்மையினால் மனிதர் இராவணன் அழித்துவிட்டனர் என்றவாறு.*

## *மண்டோதரி உயிர் பிரிதல்*

**கலிவிருத்தம்**

***9946. என்று அழைத்தனள், ஏங்கி எழுந்து, அவன்***
***பொன் தழைத்த பொரு அரு மார்பினைத்***
***தன் தழைக் கைகளால் தழுவி, தனி***
***நின்று அழைத்து உயிர்த்தாள், உயிர் நீங்கினாள்.***

***என்று அழைத்தனள்*** *- என்று கூவி அழுதவளாய்;* ***ஏங்கி*** *- ஏக்கமுற்று;* ***எழுந்து*** *- எழுந்து;* ***அவன்*** *- அந்த இராவணனின்;* ***பொன் தழைத்த*** *- பொன் அணிகள் தழைத்துக் கிடக்கிற;* ***பொரு அருமார்பினை*** *- ஒப்புரைக்க இயலாத (வீர) மார்பினை;* ***தன் தழைக்கைகளால் தழுவி*** *- தன் தளிர் போன்ற (மெல்லிய) கரங்களால் தழுவி;* ***தனி நின்று*** *- தனித்து நின்று;* ***அழைத்து உயிர்த்தான்*** *- அழைத்தவாறு பெருமூச்சு விட்டவளாய்;* ***உயிர் நீங்கினாள்*** *- உயிர் நீத்தாள்.*

*இப்பிறவியில் உன்னை அணைப்பது இதுவே இறுதியென்று, பொன் தழைத்த அவன் திருமார்பினைப் புல்லி, இனி அது இல்லை எனும் எண்ணம் வந்தவுடன், நெஞ்சு துடிப்பு நின்று விட்டதாகலின், "தழுவி உயிர்த்து உயிர் நீங்கினாள்" என்றார். பெருமூச்சுவிட்டாள். (உயிர்) மூச்சுவிட்டாள். மாசு மறுவற்ற மண்டோதரியின் தூய கற்புப் பெருக்கினை எண்ணி வியந்த நம் முன்னோர்கள், மண்டோதரியை தூய பஞ்ச கன்னிகைகளில் ஒருத்தியாய்ச் சேர்த்துள்ளனர் என்பதை இங்கு நினைக.*

***9947. வான மங்கையர், விஞ்சையர், மற்றும் அத்***
***தான மங்கையரும், தவப் பாலவர்,***
***ஆன மங்கையரும், அருங் கற்புடை***
***மான மங்கையர் தாமும், வழுத்தினார்.***

***வான மங்கையர்*** *- வானாட்டு மகளிரும்;* ***விஞ்சையர்*** *- வித்தியாதரப் பெண்டிரும்;* ***மற்றும் அத்தான மங்கையரும்*** *- மற்றும் அத்தானவ மங்கையரும்;* ***தவப் பாலவர் ஆன*** *- தவத்தின் பக்கத்திலே சென்ற;* ***மங்கையரும்*** *- முனிபத்தினியரும்;* ***அருங் கற்புடை மான மங்கையர்தாமும்*** *- அரிய கற்புடைய மானுட மகளிரும்;* ***வழுத்தினார்*** *- (கற்பரசியாகிய) (மண்டோதரியை) பாராட்டித் துதித்தனர்.*

***9948. பின்னர், வீடணன் பேர் எழில் தம்முனை,***
***வன்னி கூவி, வரன்முறையால், மறை***
***சொன்ன ஈம விதி முறையால் தொகுத்து,***
***இன்னல் நெஞ்சினொடு இந்தனத்து எற்றினான்.***

***பின்னர்*** *- (இதற்குப்) பின்பு;* ***வீடணன்*** *- வீடணன்;* ***வரன் முறையால்*** *- மரபு வழிப்படி;* ***வன்னி கூவி*** *- அக்கினியை ஆவாகனம் செய்து;* ***மறை சொன்ன*** *- வேதம் விதித்துள்ள;* ***ஈம விதிமுறையால்*** *- ஈமக்கடன் விதிகளின் படி;* ***தொகுத்து*** *- (சடங்குப் பொருள்களாகக்) கூட்டி;* ***இன்னல் நெஞ்சினொடு*** *- துயரம் மிக்க உள்ளத்தோடு;* ***பேர் எழில் தம்முனை*** *- பேரழகினனாகிய தம் முன் பிறந்த அண்ணனாகிய இராவணனை;* ***இந்தனத்து ஏற்றினான்*** *- ஈம விறகின்மேல் ஏற்றி வைத்தான்.*

***9949. கடன்கள் செய்து முடித்து, கணவனோடு***
***உடைந்து போன மயன் மகளோடு உடன்***
***அடங்க வெங் கனலுக்கு அவி ஆக்கினான் -***
***குடம் கொள் நீரினும் கண் சோர் குமிழியான்.***

***குடம் கொள் நீரினும்*** *- குடம் கொண்ட நீரை விட மிகுதியாக;* ***கண் சோர் குமிழியான்*** *- குமிழியிட்டுக் கண்ணீரைக் கொட்டும் வீடணன்;* ***கடன்கள் செய்து முடித்து*** *- இறுதிக் கடன்களையெல்லாம் செய்து முடித்தபின்;* ***கணவனோடு உடைந்து போன*** *- கணவனுடனே (தன்) நெஞ்சம் உடைந்து மாண்டு போன;* ***மயன் மகளோடு உடன்*** *- மயனின் மகளாகிய மண்டோதரியுடன்;* ***அடங்க*** *- (அந்த இராவணன் உடல்) அடங்குமாறு;* ***வெங்கனலுக்கு*** *- கொடுந்தீக்கு;* ***அவியாக்கினான்*** *- உணவாக்கினான்.*

*உயிரோடு கட்டையேறுதல் தவிர்த்து, தன் கற்பால் உயிர் பிரித்து, உடன் கட்டையேறினாள் மண்டோதரி. இதனைத் "தலைக்கற்பு" என்பர் சான்றோர். நெருப்புக்கு இரையாக்கினான் என்னாமல் அவியாக்கினான் என்று குறித்த நயம் உணர்க. கற்பொழுக்கம் பேணிய மண்டோதரியும் அவள் கணவனும் வானோர்க்கு நல்விருந்து என்பார் "அவி" என்றார்.*

***9950. மற்றையோர்க்கும் வரன்முறையால் வகுத்து,***
***உற்ற தீக் கொடுத்து, உண்குறு நீர் உகுத்து,***
***'எற்றையோர்க்கும் இவன் அலது இல்' எனா,***
***வெற்றி வீரன் குரை கழல் மேவினான்.***

***மற்றையோர்க்கும்*** - *போரில உயிர் நீத்த மற்றைய வீரர்கட்கும்;* ***வரன் முறையால் வகுத்து*** - *(நூல்கள்) கூறிவரும் முறைப்படி வகைசெய்து;* ***உற்ற தீக் கொடுத்து*** - *உரிய தீக் கொடுத்து;* ***உண்குறு நீர் உகுத்து*** - *உண்ணுமாறு நீர்க் கடன்களையும் புரிந்து;* ***எற்றையோர்க்கும் இவன் அலது இல் எனா*** - *எவர்க்கும் இவன் அல்லால் (வேறு துணை) இல்லை என்று கூறத்தக்க;* ***வெற்றி வீரன்*** - *வெற்றியே தாங்கும் வீரனான் இராமபிரானுடைய;* ***குரைகழல்*** - *ஒலிக்கும் கழல் அணிந்த திருவடிகளை;* ***மேவினான்*** - *அடைந்தான் (வீடணன்). உண்ணும் நீர் உகுத்தல் - வாசோதகம் திலோதகம் கொடுத்தல் என்பர்.*

***9951. வந்து தாழ்ந்த துணைவனை, வள்ளலும்***
***'சிந்தை வெந் துயர் தீருதி, தெள்ளியோய்!***
***முந்தை எய்தும் முறைமை இது ஆம்' எனா,***
***அந்தம் இல் இடர்ப் பாரம் அகற்றினான்.***

***வந்து தாழ்ந்த துணைவனை*** - *(தன்முன்) வந்து அடியிற் பணிந்த தம்பியாகிய வீடணனை;* ***வள்ளலும்*** - *வள்ளலாகிய இராமபிரானும்;* ***தெள்ளியோய்*** - *உலகந் தெளிவுற்ற மேலோனே!;* ***சிந்தை வெம் துயர் தீருதி*** - *(உன்) மனத்தே நிறையும் கொடுந்துயரை நீக்குவாயாக;* ***அது முந்தை எய்தும் முறைமை ஆம்*** - *(இறந்தோரால் எய்தும் துயர் துடைத்து ஆறுதல் கொள்வதே) முந்தையோர் கொண்ட முறைமையாகும்;* ***எனா*** - *என்று; அந்தம் இல் இடர்ப் பாரம் அகற்றினான் - (வீடணன் கொண்ட) முடிவற்ற துன்பச்சுமையை (இராமபிரான் தன் இன்னுரைகளால்) நீக்கியருளினான்.*

*வீடணன் தெளிந்த உள்ளங் கொண்டோனாதலின் உணர்வான் என்று கருதி, பெருமான் "தெள்ளியோய்!" என்று அழைத்தான்.*

## மீட்சிப் படலம்

இராவண வதம் முடிந்தபிறகு சீதாபிராட்டி சிறையிலிருந்து மீண்டதையும், மூவரும் வனவாசம் முடிந்து அயோத்திக்குத் திரும்பியதையும் கூறும் பகுதியாதலின் மீட்சிப்படலம் எனப் பெற்றது.

இராமன் இராவணற்குரிய இறுதிக் கடன்களைச் செய்து முடித்த வீடணனுக்கு ஆறுதல் கூறுகிறான். இலக்குவனை வானர வீரர்களுடன் சென்று வீடணனுக்கு முடி சூட்டச் செய்கிறான். வீடணனுக்கு நீதிகளை எடுத்துரைக்கிறான். சீதைக்கு நற்செய்தி சொல்லிவர அனுமனை அனுப்புகிறான். அனுமனால் செய்தி அறிந்த சீதை மகிழ்கிறாள். அனுமன் அரக்கியரைத் தண்டிக்க விரும்ப சீதை அதை மறுத்துரைக்கிறாள்.

இராமன் வீடணனைச் சீதையைச் சீரொடும் அழைத்து வா என்று அனுப்புகிறான். இருந்தவாறே வருவேன் என்றுரைத்த பிராட்டியை இராமன் ஆணையைக் கூறி அலங்கரித்து வரச் செய்து அழைத்து வருகிறான். இராமனது அழகுத் திருமேனி கண்ட சீதை அனுமனைப் பாராட்டி இராமனை வணங்கி பிரிவினால் உளதாகிய ஏக்கம் நீங்கப் பெறுகிறாள். சீதையை இராமன் கடிந்துரைத்து தீயிடைப் புகும்படி செய்விக்கிறான். சீதை எரியிடை விளங்கலும அக்கினி தேவன் முறையீடும், இராமனுக்கு அக்கினிக் கடவுள் பிராட்டியின் கற்பின் மாட்சியை அறிவித்தலும் நிகழ சீதையை இராமன் ஏற்றுக் கொள்கிறான். பிரமன் சிவன் ஆகியோர் இராமன பரம்பொருள் என்பதை அவனுக்கு உணர்த்துகின்றனர். தயரதன வருகிறான். இராமனோடு உரையாடி மகிழ்கிறான். சீதையைத் தேற்றுகிறான். இலக்குவனைப் பாராட்டுகிறான். இராமனால் கைகேயிபால் கொண்ட கோபம் தணிந்து சுவர்க்கம் திரும்புகிறான். தேவர்கள் இராமனுக்கு வரம் கொடுக்கின்றனர். அரக்கர் கோமான் வீடணன் கொணர்ந்த புட்பக விமானத்தில் அனைவருடனும் ஏறி அயோத்திக்கு இராமன் புறப்படுகிறான். பரத்துவாச முனிவனது உபசரிப்பை இடையில் இராமன் ஏற்கிறான். ஆச்சிரமத்தில் தங்கிய இராமன் அனுமனைப் பரதனிடம் அனுப்புகிறான்.

இராமன் வாராமையால் துன்புற்ற பரதன் எரிபுக எண்ணுகிறான். எரிபுகத் துணியும் பரதனைக் கோசலைத் தாய் தடுக்கிறாள். அப்போது அனுமன் தோன்றி நெருப்பைக் கையால் அணைக்கிறான். இராமனது அடையாள மோதிரம் காட்டி இராமன் வருகையை அறிவிக்கிறான். பரதன் மகிழ்கிறான். பரதன் கேட்க அனுமன் தன் வரலாற்றையும் இராமன் செய்திகளையும் முறையே தெரிவிக்கிறான். பரதன் இராமன் இருக்கும் இடம் நோக்கி அனுமனுடன் கங்கைக் கரை சார்கிறான்.

குகன் பரத்துவாச ஆச்சிரமம் வந்து இராமனைப் பணிந்து அவனோடு சேர்ந்து கொள்கிறான் - அனைவரும் புட்பகத்தில் ஏறி அயோத்தி நகர்ப்புறம் சார்கிறார்கள். இராமனைப் பரதன் காணுகிறான். விமானம் நிலத்தை அடைகிறது. இராமன் வருகை கண்டு தாயார் முதலிய அனைவரும் மகிழ்கின்றனர். வணங்கற்குரியாரை முறைப்படி மற்றவர் வணங்க அனைவரும் விமானத்து ஏறி அயோத்திக்கு வந்து சேர்கிறார்கள் என்பது முதலிய செய்திகள் இப்படலத்துக் கூறப்பட்டுள்ளன.

*இராமன் வீடணனுக்கு ஆறுதல் கூறி இலக்குவனால் முடிசூட்டச் செய்தல்*

***9952. 'வருந்தல், நீதி மனு நெறி யாவையும்***
***பொருந்து கேள்விப் புலமையினோய்!' எனா,***
***அருந் தவப் பயனால் அடைந்தாற்கு அறைந்து,***
***இருந் தவத்து இளையோற்கு இது இயம்பினான்:****

***அருந் தவப் பயனால் அடைந்தாற்கு*** *- தான் செய்த அரிய புண்ணியத்தின் பயனால் இராமனை வந்து அடைந்தவனாகிய வீடணனுக்கு இராமன்;* ***நீதி மனு நெறி யாவையும் பொருந்து கேள்விப் புலமையினோய்!*** *- நீதி நெறிகளையும் மனு தரும் முறைகளையும் ஆகிய யாவற்றையும் நன்கு அறிந்து பொருந்திய கேள்வி ஞானத்தோடு கூடிய அறிவாற்றல் பொருந்திய வீடணனே!;* ***வருந்தல்*** *- வருத்தமுறாதே;* ***எனா*** *- என்று;* ***அறைந்து*** *- எடுத்துக் கூறி (அவனை ஆற்றி);* ***இருந்தவத்து இளையோற்கு*** *- பெரிய தவச் செல்வத்தை உடைய இலக்குவனுக்கு;* ***இது*** *- (பின் வருகின்ற) இந்தச் செய்தியை;* ***இயம்பினான்*** *- எடுத்துரைத்தான்.*

*அறவுணர்வும் தரும சாஸ்திரமும் நிரம்பப் பெற்றவனாதலின் அண்ணன், உறவினர் முதலியோர் இறப்புக்கு வருந்தல் தகுதியன்று என்பதாம். வீடணனது அருந்தவப் பயனை "நீதியும் தருமம் நின்ற நிலைமையும் புலமைதானும், ஆதி அம் கடவுளாலே அருந்தவம் ஆற்றிப் பெற்றாய்" என்ற கும்பகருணன் (கம்ப. 7406) கூற்றால் அறிக.*

***9953. 'சோதியான் மகன், வாயுவின் தோன்றல், மற்று***
***ஏது இல் வானர வீரரொடு ஏகி, நீ***
***ஆதி நாயகன் ஆக்கிய நூல் முறை***
***நீதியானை நெடு முடி சூட்டுவாய்.'****

***நீ*** *- இலக்குவனே நீ;* ***சோதியான் மகன்*** *- சூரியன் மகனாகிய சுக்கிரீவன்;* ***வாயுவின் தோன்றல்*** *- காற்றுக் கடவுளின் மகனாகிய அனுமன்;* ***மற்று ஏது இல் வானர வீரரொடு ஏகி*** *- மற்றுள்ள குற்றம் இல்லாத குரங்கு வீரர்கள் ஆகியோருடன் புறப்பட்டுச் சென்று;* ***நீதியானை*** *- அற நீதியிற் சிறிதும் வழுவாத வீடணனுக்கு;* ***ஆதி நாயகன் ஆக்கிய நூல் முறை*** *- முதற்கடவுளாகிய நாராயணன் தந்த வேத விதிப்படி;* ***நெடுமுடி சூட்டுவாய்*** *- சிறந்த கிரீடத்தைச் சூட்டுவாய்;*

*ஏது - குற்றம். நீதியான் - வீடணன் என்பது முன்னும் கூறப்பட்டது. (கம்ப. 7625) பதினான்கு வருடம் வனவாசம் செய்வதாக மேற்கொண்ட விரதத்தால் இராமன் இலங்கை நகருட் புகாது இலக்குவனைச் சென்று முடிசூட்டச் செய்தான். கிட்கிந்தையில் சுக்கிரீவனுக்கு இலக்குவனைக் கொண்டு முடிசூட்டியதை இங்கு*

*(கம்ப. 4116) நினைக. நீதியானை - உருபு மயக்கம்; நான்காவதன்கண் இரண்டாவது வந்தது.*

***9954. என்று கூறி, இளவலொடு ஆரையும்***
***வென்றி வீரன் விடை அருள் வேலையில்,***
***நின்ற தேவர் நெடுந் திரையோரொடும்***
***சென்று, தம் தம் செய்கை புரிந்தனர்.****

***வென்றி வீரன்*** *- இராமன்;* ***என்று கூறி*** *- இவ்வாறு சொல்லி;* ***இளவலொடு ஆரையும்*** *- இலக்குவனோடு மற்றுள்ளவர்களுக்கும்;* ***விடை அருள் வேலையில்*** *- விடை கொடுத்த பொழுது;* ***நின்ற தேவர்*** *- (அது கேட்டு) அருகிருந்த தேவர்கள்;* ***நெடுந் திசையோரொடும்*** *- எண்திசைக் காவலர்களுடனும்;* ***தம் தம் செய்கை புரிந்தனர்*** *- சென்று தங்கள் தங்களால் (பட்டாபிஷேகத்துக்கு) முடிந்த உதவிகளைச் செய்வாராயினர்.*

*எண் திசைக் காவலர்: இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்போர். நின்ற தேவர் இவர் ஒழியப் பிறராகக் கொள்க. ஆரையும் உருபு மயக்கம். நான்காவதன்கண் இரண்டாவது வந்தது. ஆர்க்கும் விடை கொடுத்து என இயையும்.*

***9955. சூழ் கடல் புனலும், பல தோயமும்,***
***நீள் முடித் தொகையும், பிற நீர்மையும்,***
***பாழி துற்று அரி பற்றிய பீடமும்,***
***தாழ்வு இல் கொற்றத்து அமரர்கள் தந்தனர். ****

***தாழ்வு இல் கொற்றத்து அமரர்கள்*** *- குறைவு படாத வெற்றியைப் பெற்றுள்ள தேவர்கள்;* ***சூழ்கடல் புனலும் பல தோயமும்*** *- உலகைச் சுற்றியுள்ள எழு கடல் நீரும் பிற புண்ணிய ஆற்று நீர்களும்;* ***நீள் முடித்தொகையும்*** *- நீண்ட கிரீடத் தொகைகளும்;* ***பிற நீர்மையும்*** *- பிற அரசர்க்கேற்ற ஆபரணங்களின் தன்மைகளும்;* ***பாழி துற்று*** *- வலிமை செறிந்த;* ***அரி பற்றிய பீடமும்*** *- சிங்கம் தாங்கிய பீடமாகிய சிம்மாசனமும்;* ***தந்தனர்*** *- கொண்டு வந்து கொடுத்தனர்.*

*இராவண வதத்தால் இலங்கை முழுதும் அழிந்து போன படியால் தேவர்கள் புதிதாக எல்லாவற்றையும் கொண்டு கொடுத்தனர். வேண்டியது ஒரு முடியே ஆயினும் முடித்தொகை என்றது இராவணன் பத்துத் தலைகளில் பத்து முடிகள் அணிந்திருந்தமை நோக்கிப் போலும்.*

***9956. வாச நாள் மலரோன் சொல, மான்முகன்***
***காசும் மா நிதியும் கொடு, கங்கை சூடு***
***ஈசனே முதலோர் வியந்து ஏத்திட,***
***தேசு உலாம் மணி மண்டபம் செய்தனன்.****

*__மான்முகன்__ - மானின் முகம் உடையவனாகிய மயன் என்கிற தெய்வத் தச்சன்; __வாச நாள் மலரோன் சொல__ - வாசனையுள்ள அன்றலர்ந்த தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவன் கட்டளையிட; __காசும் மாநிதியும் கொடு__ - மணிகளையும் உயரிய பொன்னையும் கொண்டு; __கங்கை சூடு ஈசனே முதலோர் வியந்திட__ - கங்காநதியைத் தலைமேற் சூடிக் கொண்டுள்ள சிவபெருமான் முதலான தேவர்கள் அதிசயிக்கும் படி; __தேசு உலா மணி மண்டபம் செய்தனன்__ - ஒளி பரவுகிற அழகிய திருவோலக்க பட்டாபிஷேக மண்டபத்தைச் செய்தமைத்தான்.*

*மயன் மான்முகம் உடையவன் என்பதனை 'மான் முக நலத்தவன், மயன்' (கம்ப. 4578) என்பது கொண்டு அறிக.*

***9957. மெய் கொள் வேத விதி முறை விண்ணுளோர்***
***தெய்வ நீள் புனல் ஆடல் திருத்திட,***
***ஐயன் ஆணையினால், இளங் கோளரி***
***கையினால் மகுடன் கவித்தான் அரோ.****

*__விண்ணுளோர்__ - விண்ணுலக வாசிகளான தேவர்கள்; மெய்கொள் __வேத விதிமுறை__ - சத்தியத்தைத் தன்னிடத்தே கொண்டுள்ள வேதத்திற் கூறிய சடங்கு முறைகளின்படி; __தெய்வ நீள் புனல் ஆடல் திருத்திட__ - தெய்வத் தன்மையுள்ள புண்ணிய தீர்த்தங்களினால் அபிஷேகம் செய்தலைச் செவ்வையாகச் செய்ய; __ஐயன் ஆணையினால்__ - இராமனது கட்டளையின் வண்ணம்; __இளங்கோளரி__ - இளைய சிங்கத்தை ஒத்த இலக்குவன்; __கையினால்__ - தன் திருக்கரத்தால்; __மகுடன் கவித்தான்__ - கிரீடத்தை வீடணன் தலைமேற் சூடினான்.*

*தத்துவ விளக்கம் தருதலின் வேதம் மெய்கொள் வேதம் எனப்பட்டது. அரோ. அசை.*

***9958. கரிய குன்று கதிரினைச் சூடி ஓர்***
***எரி மணித் தவிசில் பொலிந்தென்னவே,***
***விரியும் வெற்றி இலங்கையர் வேந்தன் நீடு***
***அரியணைப் பொலிந்தான், தமர் ஆர்த்து எழ.***

***விரியும் வெற்றி இலங்கையர் வேந்தன்*** - *நிறைந்த வெற்றியை உடைய வீடணன்;* ***கரிய குன்று கதிரினைச் சூடி ஓர் எரிமணித் தவிசில் பொலிந்து என்ன*** - *கருநிறம் உள்ள ஒரு மலை சூரியனைத் தலைமேல் அணிந்து கொண்டு ஒப்பற்ற பிரகாசிக்கிற மணிக் கற்களால் ஆகிய பீடத்தில் விளங்கினாற் போல என்று சொல்லும்படி;* ***தமர் ஆர்த்து எழ*** - *உறவினர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்ய;* ***அரியணைப் பொலிந்தான்*** - *சிம்மாசனத்தில் அழகுற வீற்றிருந்தான்.*

*கரிய குன்று - வீடணன், கதிர் - முடி, எரிமணித் தலிசு - சிம்மாசனம் எனக் கொள்க. ஏ, அசை.*

***9959. தேவர் பூ மழை, சித்தர் முதலினோர்***
***மேவு காதல் விரை மலர், வேறு இலா***
***மூவரோடு, முனிவர், மற்று யாவரும்***
***நாவில் ஆசி நறை மலர், தூவினார்.****

***தேவர்*** - *தேவர்கள்;* ***பூ மழை*** - *மலர் மழையையும்;* ***சித்தர் முதலினோர்*** - *சித்தர் முதலானோர்கள்;* ***மேவு காதல் விரை மலர்*** - *மிகுந்த அன்போடு கூடிய மணமிக்க மலர்களையும்;* ***வேறு இலா மூவரோடு முனிவர் மற்று யாவரும்*** - *தம்முள் ஏற்றத்தாழ்வில்லாத மும்மூர்த்திகளும் முனிவர்களும் மற்றுள்ள அனைவரும்;* ***நாவில் ஆசி நறை மலர்*** - *தமது நாவால் கூறுகின்ற ஆசீர்வாதமாகிய மணமிக்க மலர்களையும்;* ***தூவினார்*** - *வீடணன் மேல் சொரிந்தார்கள்.*

*சித்தர் - பதினென்கணத்துத் தேவசாதியில் ஒருவர். சித்தர், வித்தியாதரர், கின்னரர், கிம்புருடர், யக்ஷர், கந்தர்வர், கருடர், சாரணர் என்பவர்களைக் குறிக்கும். ஆசிச் சொற்களை மலர் என்று உபசரித்தார்.*

***9960. முடி புனைந்த நிருதர் முதலவன்***
***அடி வணங்கி இளவலை, ஆண்டை அந்***
***நெடிய காதலினோர்க்கு உயர் நீர்மை செய்து,***
***இடி கொள் சொல்லன் அனலற்கு இது***
***இயம்பினான்:****

***முடி புனைந்த*** - *கிரீடத்தை அணிந்து கொண்ட (பட்டாபிஷேகம் செய்து கொண்ட);* ***நிருதர் முதலவன்*** - *அரக்கர் குலத் தலைவனாகிய வீடணன்;* ***இளவலை அடி வணங்கி*** - *இலக்குவனைக் காலில் வீழ்ந்து வணங்கி;* ***அந்நெடிய காதலினோர்க்கு*** - *அந்த பேரன்பையுடைய இலக்குவனுக்கு;* ***ஆண்டை*** - *அவ்விடத்தே;* ***உயர் நீர்மை செய்து*** - *உயர்ந்த உபசாரங்களை எல்லாம் செய்து;* ***இடிகொள் சொல்லன்*** - *இடிமுழக்கம் போலக் கம்பீரமான குரலை உடையவனாய்;*

***அனலற்கு*** - *தன் அமைச்சர்களில் மூத்தவனாகிய அனலன் என்பானுக்கு;* ***இது இயம்பினான்*** - *பின்வரும் வார்த்தைகளைச் சொல்லலானான்.*

*அனலன், அனிலன், அரன், சம்பாதி என்னும் நால்வர் வீடணன் அமைச்சர்கள். (கம்ப. 6377) என்பது முன்னர்க் கூறியது. அனலன் அவர்களுள் மூத்தவன்.*

***9961. 'விலங்கல் நாண மிடைதரு தோளினாய்!***
***இலங்கை மா நகர் யான் வரும் எல்லை, நீ***
***கலங்கலா நெடுங் காவல் இயற்று' எனா,***
***அலங்கல் வீரன் அடி இணை எய்தினான்.****

***(வீடணன்) விலங்கல் நாண மிடைதரு தோளினாய்!*** - *மலைகளும் வெட்கமுறும்படி அவற்றினும் பெரிதாக நெருங்கி இருக்கின்ற தோள்களை உடைய அனலனே!;* ***நீ யான் இலங்கை மாநகர் வரும் எல்லை*** - *நீ! யான் (இராமனோடு அயோத்தி சென்று) இலங்கை நகரத்துக்குத் திரும்பி வரும் வரை;* ***கலங்கலா நெடுங்காவல் இயற்று*** - *உயிர்கள் யாவும் கலக்கம் உறாதபடி நீண்ட காவலைச் செய்வாயாக;* ***எனா*** - *என்று சொல்லி (அவனை அரசப் பிரதிநிதியாக ஆக்கி);* ***அலங்கல் வீரன்*** - *மாலை அணிந்த வீரனாகிய இராமபிரானது;* ***அடி இணை எய்தினான்*** - *திருவடி இணைகளை வந்து அடைந்தான்.*

*வீடணன் இராமனைப் பிரியாது அயோத்தி செல்லும் எண்ணம் உடையவனாய் இருந்தான் என்பது இதனால் விளங்கும்.*

## *வீடணற்கு இராமன் நீதி கூறல்*

***9962. குரக்கு வீரன், அரசு, இளங் கோளரி,***
***அரக்கர் கோமகனோடு அடி தாழ்தலும்,***
***பொருக்கெனப் புகல் புக்கவற் புல்லி, அத்***
***திருக் கொள் மார்பன் இனையன செப்பினான்:****

***அரக்கர் கோமகனோடு*** - *அரக்கர்க்கு அரசன் ஆகிய வீடணனோடு;* ***குரக்கு வீரன்*** - *வானர வீரன் என்று சிறப்பித்து உரைக்கப்படும் அனுமன்;* ***அரசு*** - *வானர வேந்தனாகிய சுக்கிரீவன்;* ***இளங்கோளரி*** - *வானர இளவரசாகிய சிங்கம் போன்ற அங்கதன் (ஆகியோர்)* ***அடி தாழ்தலும்*** - *(இராமபிரானது அடிகளில் வணங்குதலும்;* ***அத்திருக்கொள் மார்பன் புகல் புக்கவன்*** - *அந்த இராமன் (தன்னிடத்தில்) அடைக்கலம் புகுந்தவனாகிய வீடணனைப்;* ***பொருக்கென*** - *விரைவாக;* ***புல்லி*** - *எடுத்துத் தழுவி;* ***இனையன செப்பினான்*** - *இத்தகைய நீதிகளை எடுத்துரைத்தான்.*

*அனுமன், சுக்கிரீவன், அங்கதன் முதலானோர் வீடணனது பட்டாபிஷேகத்துக்கு இலக்குவனுடன் சென்றோர்.*

***9963. 'உரிமை மூஉலகும் தொழ, உம்பர்தம்
பெருமை நீதி அறன் வழிப் பேர்கிலாது,
இருமை ஏய் அரசாளுதி, ஈறு இலாத்
தரும சீல!' என்றான் - மறை தந்துளான்.****

***மறை தந்துளான்*** *- நான்கு வேதங்களையும் வெளியிட்டருளிய இராமபிரான்;* ***ஈறு இலாத் தருமசீல!*** *- முடிவில்லாத அற ஒழுக்கத்தில் என்றும் நிலைத்து நிற்பவனே!;* ***மூ உலகும் தொழ*** *- மூன்று உலகத்தில் உள்ளாரும் உன்னை மதித்து வணங்குமாறு;* ***உம்பர் தம் பெருமை*** *- தேவர்களுடைய பெருமைக்கும்;* ***நீதி*** *- அரச நீதிக்கும்;* ***அறன் வழி*** *- தரும வழிக்கும்;* ***பேர்கிலாது*** *- (சிறிதும்) மாறுபடாமல்;* ***இருமை ஏய் உரிமை அரசு*** *- இம்மைக்குப் புகழும் மறுமைக்குப் புண்ணியமும் தரத்தக்கதாக உனக்கு உரிமையான இலங்கை அரசை;* ***ஆளுதி*** *- ஆள்வாயாக என்றான்.*

*வேள்வி முதலியவற்றால் தேவர்களை நிறைவு செய்தல் அரசர் கடனாதலின 'உம்பர்தம் பெருமை'க்கு ஒப்ப அரசு ஆளுதி என்றான். இராவணன் தேவர் சீற்றத்துக்கு ஆளாயினமை அறிக. வீடணன் சிரஞ்சீவியாதலின் 'ஈறிலா' என்னும் அடைமொழி பொருந்தியது.*

***9964. பன்னும் நீதிகள் பல பல கூறி, 'மற்று
உன்னுடைத் தமரோடு, உயர் கீர்த்தியோய்!
மன்னி வாழ்க! என்று உரைத்து, அடல் மாருதி -
தன்னை நோக்கினன், தாயர் சொல் நோக்கினான்.****

***தாயர் சொல் நோக்கினான்*** *- தனது சிற்றன்னையாகிய கைகேயியின் சொல்லை மனத்தின்கண் எப்பொழுதும் நினைத்துக் காத்தவனாகிய இராமபிரான்;* ***பன்னும் நீதிகள் பல்பல கூறி*** *- திரும்பத் திரும்ப எடுத்துரைக்கப்படும் அறவுரைகள் பற்பலவற்றை (வீடணனுக்குச்) சொல்லி;* ***உயர்கீர்த்தியோய்*** *- மிக்க புகழை உடைய வீடணனே!* ***மற்று உன்னுடைத் தமரோடு*** *- உன் இனத்தவர்களோடு;* ***மன்னி வாழ்க*** *- நிலைபெற்று வாழ்க;* ***என்று உரைத்து*** *- என்று சொல்லி;* ***அடல் மாருதி தன்னை நோக்கினன்*** *- வலிமை படைத்த அனுமனை (ஒன்று சொல்லுதற்காக)ப் பார்த்தான்.*

*முதலில் நோக்கினான் என்பது மனத்தால் நோக்குதல். மாருதியை நோக்கல் கண்ணால் நோக்குதலாம்.*

*இராமன் அனுமனைச் சீதையிடம் அனுப்பல்*

***9965. இப் புறத்து, இன எய்துறு காலையில்,***
***அப் புறத்ததை உன்னி, அனுமனை***
***'துப்பு உறச் செய்ய வாய் மணித் தோகைபால்***

***செப்புறு, இப்படிப் போய்' எனச் செப்பினான்.***

***இப்புறத்து*** *- இவ்விடத்தில்;* ***இன*** *- இந்நிகழ்ச்சிகள்;* ***எய்துறு காலையில்*** *- நடக்கும் பொழுது;* ***அப்புறத்ததை உன்னி*** *- மேல் நடக்க வேண்டியவைகளை (இராமன்) மனத்தில் கருதி;* ***அனுமனை*** *- அனுமனை அழைத்து;* ***துப்பு உறச் செய்ய வாய் மணித் தோகைபால் போய்*** *- பவழத்தை ஒத்துச் சிவந்த வாயை உடைய அழகிய மயில்போல்வாளாகிய சீதையிடம் சென்று;* ***இப்படி செப்புறு*** *- இங்கு நடந்த செய்திகளைச் சொல்வாயாக;* ***எனச் செப்பினான்*** *- என்று கூறினான்.*

*இப்படி - இத்தன்மைகள் என்றாகும். இங்கு நடந்த தன்மைகள். அவை இராவணவதமும் வீபீடண பட்டாபிஷேகமும் சிறை மீட்சியும் ஆகும். 'துப்பு உறச் செய்ய வாய்' என்பது பவழத்தைச் சிவப்புறச் செய்யும் சிவந்த வாய் என்றுமாம்.*

*அனுமன் சீதையிடம் கூறுதல்*

***9966. வணங்கி, அந்தம் இல் மாருதி, மா மலர்***
***அணங்கு சேர் கடி காவு சென்று அண்மினான்:***
***உணங்கு கொம்புக்கு உயிர் வரு நீர் என,***
***சுணங்கு நோய் முலையாட்கு இவை சொல்லுவான்:***

***அந்தம் இல் மாருதி*** *- அழிவற்ற சிரஞ்சீவியாகிய அனுமன்;* ***வணங்கி*** *- (இராமனை) வணங்கி விடைபெற்றுச் சென்று;* ***மாமலர் அணங்கு சேர் கடிகாவு சென்று அண்மினான்*** *- சிறந்த தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளாகிய சீதாபிராட்டி தங்கியுள்ள காப்பமைந்த அசோக வனத்தை நெருங்கிச் சென்று அடைந்து;* ***சுணங்கு நோய் முலையாட்கு*** *- தேமல் பரவிய நகில்களை உடைய பிராட்டிக்கு;* ***உணங்கு கொம்புக்கு உயிர் வரு நீர் என*** *- காய்ந்து போன கிளைக்கு உயிர் வருதற்குக் காரணமான நீரைப் போல;* ***இவை*** *- (பிராட்டிதளிர்த்தற்குக் காரணமான) இந்தச் செய்திகளைச்;* ***சொல்லுவான்*** *- சொல்லத் தொடங்கினான்.*

*"என்றும் ஓர் துளி வரக் காணா நன் மருந்து போல் நலன் அற உணங்கிய நங்கை"யைத் தளிர்க்கச் செய்தலின் அனுமன் கூறிய செய்திகள் நீர் எனப் பெற்றன; அனுமனும் சிரஞ்சீவி ஆதலின் "அந்தம் இல் மாருதி" எனப்பட்டான்.*

***9967. 'ஏழை சோபனம்! ஏந்திழை, சோபனம்!***
***வாழி, சோபனம்! மங்கல சோபனம்!***
***ஆழி ஆன அரக்கனை ஆரியச்***
***சூழி யானை துகைத்தது, சோபனம்!'***

***ஏழை*** *- பேதமை என்னும் அணிகலன் உடையாளே!;* ***சோபனம்*** *- மிக்க மங்களம் உண்டாகட்டும்;* ***ஏந்திழை*** *- தரித்த அணிகலன்களை உடையாளே!;* ***வாழி*** *- வாழ்வாயாக;* ***ஆரிய சூழி யானை*** *- மேன்மை மிக்கவனாகிய இராமபிரான் என்கிற முகபடாம் அணிந்த யானை;* ***ஆழி ஆன அரக்கனை*** *- தீமைக்கு வரம்பாகிய இராவண ராக்கதனை;* ***துகைத்தது*** *- அழித் தொழித்தது;* ***சோபனம்*** *- (இனி உனக்கு) மங்களம் உண்டாகட்டும் (தொடரும்).*

*'சோபனம்' என்பது மகிழ்ச்சியைத் தெரிவித்து வாழ்த்தும் சொல். அது பன்முறை வந்து மங்கல வாழ்த்தாக ஆயிற்று.*

***9968. பாடினான் திரு நாமங்கள்: பல் முறை***
***கூடு சாரியின் குப்புற்றுக் கூத்து நின்று***
***ஆடி, அங்கை இரண்டும் அலங்குறச்***
***சூடி நின்றனன், குன்று அன்ன தோளினான்.***

***குன்று அன்ன தோளினான்*** *- மலை போன்ற தோள்களை உடையவனாகிய அனுமான்;* ***திரு நாமங்கள் பாடினான்*** *- இராமன் திருப்பெயர்களைப் பாடிக் கொண்டு;* ***பல்முறை கூடுசாரியின் குப்புற்று*** *- பல தடவை இடம் வலமாகச் சென்று குதித்து;* ***கூத்து நின்று ஆடி*** *- ஆட்டம் ஆடுதலைச் செய்து;* ***அங்கை இரண்டும்*** *- தன் அழகிய கை இரண்டையும்;* ***அலங்கு உற சூடி நின்றனன்*** *- மாலை போல் தலைமேல் வளைவாகச் சூடிக் கொண்டு நின்றான்.*

*அலங்கல் என்பது மாலையாதலின் 'அலங்கு உற' என்பது, மாலை போல் பொருந்த இரண்டு கைகளையும் தலைக்கு மேல் கூப்பியது தலையைச் சுற்றிய மாலை போல் ஆயிற்று என்பதாம். மகிழ்ச்சி மிகுதியில் அங்கும் இங்கும் சுற்றிக் கூத்தாடல் மரபு.*

***9969. 'தலை கிடந்தன, தாரணி தாங்கிய***
***மலை கிடந்தனபோல்; மணித் தோள் எனும்***
***அலை கிடந்தன; ஆழி கிடந்தென,***

**நிலை கிடந்தது, உடல் நிலத்தே' என்றான்.** **தாரணி தாங்கிய மலை கிடந்தன போல்** - பூமியைத் தாங்குகிற மலைகள் கீழே விழுந்து கிடந்தன போல; **தலை கிடந்தன** - (இராவணனது) பத்துத் தலைகள் கீழே கிடந்தன; **மணித் தோள் எனும்** - அழகிய தோள்கள் என்கின்ற; **அலை கிடந்தன** - கடல் அலைகள் கிடந்தன; **உடல்** - இராவணனது உடம்பு; **நிலத்தே** - பூமியின்கண்; **ஆழி கிடந்தென** - கடல் கிடந்தது என்று சொல்லும் படி; **நிலை கிடந்தது** - அசையாமல் கிடந்தது; **என்றான்** - என்று (அனுமன்) கூறினான்.

பத்துத் தலைகளும் மலைகள் போல் ஆயின. கடல் கிடந்தது போல் உடல் கிடந்தது. ஆகவே பக்கத்தில் உள்ள இருபது தோள்களும் கடல் அலைகள் போல் உள்ளன எனப் பெற்றது.

**9970. 'அண்ணல் ஆணையின், வீடணனாம் மறக்**
**கண் இலாதவன் காதல் தொடர்தலால்,**
**பெண் அலாது, பிழைத்துளதாகும்' என்று**
**எண்ணல் ஆவது ஓர் பேர் இலதால்' என்றான்.**

**அண்ணல் ஆணையின்** - தலைவனான இராமபிரானது; ஆணையாலும்; **வீடணனாம்** - வீடணன் என்று கூறப்படும்; **மறக்கண் இலாதவன்** - கொடுமையற்ற அறவாளனது; **காதல்** - அன்பு; **தொடர்தலால்** - இடைவிடாது இருத்தலாலும்; **பெண் அலாது பிழைத்து உளதாகும் என்று எண்ணலாவது ஓர் பேர் இலது** - (இலங்கையில்) பெண்மக்கள் அல்லாமல் உயிர் பிழைத்துள்ளவர் என்று நினைக்கத்தக்க ஆடவர் ஒருவர் கூட இல்லை.

வீடணன் அன்பும் இராமன் ஆணையும் இலங்கையை அடியோடு அழித்தது. போர்க்கு வராதவர் ஆதலின் பெண்மக்கள் பிழைத்தனர். ஆல் அசை.

## *பிராட்டியின் மகிழ்ச்சி நிலை*

**9971. ஒரு கலைத் தனி ஒண் மதி நாளொடும்**
**வரு கலைக்குள் வளர்வது மானுறப்**
**பொரு கலைக் குலம் பூத்தது போன்றனள் -**
**பருகல் உற்ற அமுது பயந்த நாள்.**

(அநுமன் கூறிய நற்செய்திகளைக் கேட்ட பிராட்டி) **பருகல் உற்ற அமுது பயந்த நாள்** - பருகுதற்கினிய தேவர் அமுதம் கடைந்தெடுத்த நாளில்; **ஒரு கலைத் தனி ஒண் மதி** - ஒற்றைக் கலை அளவினதாகிய சந்திரன்; **வருகலைக்குள் வளர்வது மானுற** - ஒவ்வொன்றாக வருகின்ற கலைகளால் தன்னுள் தானே வளர்ந்து பதினாறு

*கலைகளும் நிரம்பிய முழு மதியானது போல என்னும்படி;* ***பொரு கலைக்குலம் பூத்தது போன்றனள்*** *- நெருங்கிய கலைகளின் தொகுதி நிரம்பப் பெற்று பொலிவெய்தியதைப் போன்று தழைத்தாள்.*

*அமுதம் கடைந்த பொழுது சந்திரன் திருப்பாற்கடலில் தோன்றியது ஆதலின் 'அமுது பயந்த நாள்' என்றார். ஒருகலையாக முதலில் தோன்றித் தன்னுள்ளே கலைகள் வளரப் பெற்று முழுமதியானது போல பிராட்டியும் தன்னுள்ளே மகிழ்ச்சியால் பூத்துப் பொலிவெய்தினாளாம்.*

***9972. ஆம்பல் வாயும் முகமும் அலர்ந்திட,***
***தேம்பும் நுண் இடை நோவ, திரள் முலை***
***ஏம்பல் ஆசைக்கு இரட்டி வந்து எய்தினாள் -***
***பாம்பு கான்ற பனி மதிப் பான்மையாள்.***

***பாம்பு கான்ற பனிமதிப் பான்மையாள்*** *- இராகுவால் (விழுங்கிக்) கக்கப் பெற்ற குளிர்ந்த நிலவைப் போன்ற தன்மை உடைய பிராட்டி (அநுமன் சொல்லால்);* ***ஆம்பல் வாயும் முகமும் அலர்ந்திட*** *- ஆம்பல் மலரை ஒத்த சிவந்த வாயும் முகமும் மேலும் ஒளி விளங்க;* ***தேம்பும் நுண் இடை நோவ*** *- முன்பே தேய்ந்து வருந்தும் சிறிய இடையானது மேலும் வருந்தும்படி;* ***திரள் முலை*** *- திரண்டுருண்ட நகில் தடங்கள்;* ***ஏம்பல் ஆசைக்கு*** *- மகிழ்ச்சி மேலெழும் ஆசையால்;* ***இரட்டி வந்து எய்தினாள்*** *- (முன்பிருந்ததை விட) இரண்டு மடங்கு வளர்ந்து பொருந்தப் பெற்றாள்.*

*'ஆசையால்' என்னும் மூன்றாவதன்கண் 'ஆசைக்கு' என நான்காவது வந்தது. உருபு மயக்கம்.*

***9973. புந்தி ஓங்கும் உவகைப் பொருமலோ,***
***உந்தி ஓங்கும் ஒளி வளைத் தோள்கொலோ,***
***சிந்தி ஓடு கலையுடைத் தேர்கொலோ -***
***முந்தி ஓங்கின யாவை - முலைகொலோ?***

***முந்தி ஓங்கின*** *- (பிராட்டியிடத்தில்) முற்பட்டு வளர்ந்தவை;* ***புந்தி ஓங்கும் உவகைப் பொருமலோ*** *- மனத்திற்குள் உண்டாகும் மகிழ்ச்சிப் பூரிப்போ;* ***உந்தி ஓங்கும் ஒளி வளைத் தோள்கொலோ*** *- தள்ளப்பட்டு மேல் எழும்புகின்ற ஒளிபொருந்திய வளையலை அணிந்த தோள்களா?;* ***சிந்தி ஓடு கலை உடைத் தேர்கொலோ*** *- அவிழ்ந்து விலகி விடுகின்ற ஆடையை அணிந்துள்ள தேர் போன்ற அல்குல் தடமா?;* ***முலைகொலோ*** *- தனங்களா?*

*இது கவிக்கூற்று. பிராட்டியிடம் தோன்றிய மகிழச்சி மிகுதியைக் கவிஞர் இவ்வாறு கூறினார்.*

***9974. குனித்த, கோலப் புருவங்கள்; கொம்மை வேர்***
***பனித்த, கொங்கை; மழலைப் பணிமொழி***
***நுனித்தது ஒன்று, நுவல்வது ஒன்று, ஆயினாள்;-***
***கனித்த இன் களி கள்ளினின் காட்டுமோ?***

***கோலப் புருவங்கள் குறித்த*** *- அழகிய புருவங்கள் வளைந்துள்ளன;* ***கொங்கை கொம்மை வேர் பனித்த*** *- முலைகள் திரண்டு வியர்வை அரும்பப் பெற்றன;* ***மழலைப் பணிமொழி*** *- மழலையான இன்சொற்களைப் பேசுமவளாகிய பிராட்டி (இப்போது);* ***நுனித்தது ஒன்று நுவல்வது ஒன்று ஆயினாள்*** *- தான் மனதில் கருதியது ஒன்றும் சொல்லுவது ஒன்றும் ஆகப் பெற்றாள்;* ***கனித்த இன்களி*** *- முற்றிய இனிய மகிழ்ச்சியானது;* ***கள்ளினின் காட்டுமோ*** *- கள்ளுண்டார்க்கு நிகழும் மெய்ப்பாடுகளைத் தோற்றுவிக்குமோ.*

*இதுவும் கவிக்கூற்று. புருவம் வளைதல், வியர்வை அரும்பல், பேச்சு குழறல். இவை கள்ளுண்டார் பால் நிகழ்வன; மகிழ்ச்சி மிகுதியடைந்த பிராட்டியின் பாலும் இவை நிகழவே இவ்வாறு கூறினார்.*

***9975. அனையள் ஆகி, அனுமனை நோக்கினாள்,***
***இனையது இன்னது இயம்புவது என்பது ஓர்***
***நினைவு இலாது நெடிது இருந்தாள் - நெடு***
***மனையின் மாசு துடைத்த மனத்தினாள்.***

***நெடுமனையின் மாசு துடைத்த மனத்தினாள்*** *- உயர்ந்த இல்வாழ்க்கையின் குற்றத்தை அறப்போக்கிய சீரிய மனத்தை உடைய பிராட்டி;* ***அனையள் ஆகி*** *- மேற்சொல்லிய மகிழ்ச்சி விம்மிதம் உடையவளாகி;* ***அனுமனை நோக்கினாள்*** *- அனுமனைப் பார்த்தாள்;* ***இனையது இன்னது இயம்புவது என்பது ஓர் நினைவு இலாது நெடிது இருந்தாள்*** *- இத்தகையதான இந்த வார்த்தையைச் சொல்ல வேண்டும் என்கின்ற நினைவு இல்லாமல் நெடுநேரம் சும்மா இருந்தாள்.*

*மகிழ்ச்சி மிகுதியால் பேச ஆற்றாதவளானாள். பிறந்த குடிக்கும், புகுந்த குடிக்கும் புகழ் தேடினள் ஆதலின் 'மனையின் மாசு துடைத்த மனத்தினாள்' என்றார்.*

***9976. "யாது இதற்கு ஒன்று இயம்புவல்?" என்பது***

***மீது உயர்ந்த உவகையின் விம்மலோ?***
***தூது பொய்க்கும் என்றோ?' எனச் சொல்லினான்,***
***நீதி வித்தகன்; நங்கை நிகழ்த்தினாள்:***

***நீதி வித்தகன்*** - *நீதி வழியில் தவறாது நடக்கும் திறமை உடைய அனுமன்; (பிராட்டி ஒன்றும் கூறாது இருந்தமை நோக்கி இதற்குக் காரணம்)* ***இதற்கு யாது ஒன்று இயம்புவல் என்பது*** - *இந்த அநுமன் வார்த்தைக்கு என்ன பதில் கூறுவேன் என்று;* ***மீது உயர்ந்த உவகையின் விம்மலோ*** - *மேல் எழுந்த மகிழ்ச்சிப் பெருக்கினாலா? (அல்லது);* ***தூது பொய்க்கும் என்றோ*** - *(இந்த அநுமன்) சொல்லிய செய்தி பொய்யாயிருக்கும் என்று கருதியோ?* ***எனச் சொல்லினான்*** - *என்று சொன்னான்; (அது கேட்ட)* ***நங்கை நிகழ்த்தினாள்*** - *சீதை பின்வருமாறு சொல்லலானாள்.*

*அனுமனுக்குச் சீதையின் பதில்*

***9977. 'மேக்கு நீங்கிய வெள்ள உவகையால்,***
***ஏக்கமுற்று, "ஒன்று இயம்புவது யாது?" என***
***நோக்கி நோக்கி, அரிது என நொந்துளேன்:***
***பாக்கியம் பெரும் பித்தும் பயக்குமோ?***

***மேக்கு நீங்கிய வெள்ள உவகையால்*** - *தனக்கு மேற்பட்டதொன்றிலாத மகிழ்ச்சிப் பெருக்கினால்;* ***ஏக்கம் உற்று*** - *(என்ன பேசுவது என்று) திகைப்படைந்து;* ***இயம்புவது ஒன்று யாது யாது என நோக்கி நோக்கி*** - *சொல்லும் வார்த்தை இதுவா இதுவா என்று சிந்தித்துச் சிந்தித்து;* ***அரிது என நொந்துளேன்*** - *மறுமொழி கூறுதல் இயலாது என்று மனம் வருந்தி யுள்ளேன்;* ***பாக்கியம் பெரும்பித்தும் பயக்குமோ?*** - *(ஒருவர்க்கு வரும்) நற்பேறு பெரிய மனத்தடுமாற்றத்தையும் தரவல்லதோ?*
*மகிழ்ச்சி மிகுதியால் பித்தேறினாள் என்க.*

***9978. 'முன்னை, "நீக்குவென் மொய் சிறை" என்ற நீ,***
***பின்னை நீக்கி, உவகையும் பேசினை;***
***"என்ன பேற்றினை ஈகுவது?" என்பதை***
***உன்னி நோக்கி, உரை மறந்து ஒவினேன்.***

***முன்னை*** - *(அநுமனே!) முன்பு; மொய்சிறை நீக்குவென் என்ற நீ - நெருக்கிடும் அரக்கர் சிறையிலிருந்து உன்னை விடுவிப்பேன் என்று (தூது வந்த போது) சொல்லிய நீ;* ***பின்னை நீக்கி உவகையும் பேசினை*** - *இப்பொழுது சிறையிலிருந்து விடுவித்து மகிழ்ச்சி மேலிட்டு மங்கல வார்த்தையும் கூறினாய்;* ***என்ன பேற்றினை ஈகுவது என்பதை உன்னி நோக்கி*** - *(உனக்கு) என்ன பாக்கியத்தைத் தருவது என்பதை*

*நினைத்துப் பார்த்து (எதுவும் பொருந்தி வாராமையால்);* ***உரை மறந்து ஒவினேன்*** *- பேச இயலாமல் செயலற்றேன்.*

***9979. 'உலகம் மூன்றும் உதவற்கு ஒரு தனி***
***விலை இலாமையும் உன்னினென்; மேல் அவை***
***நிலை இலாமை நினைந்தனென்; நின்னை என்***
***தலையினால் தொழவும் தகும் - தன்மையோய்!***

***தன்மையோய்!*** *- சிறந்த பண்புகளை உடையவனே!;* ***உலகம் மூன்றும் உதவற்கு ஒரு தனி விலை இலாமையும்*** *- (நீ செய்த உதவிக்குக் கைம்மாறாக) மூன்று உலகங்களையும் உதவலாம் என்றால் அவை அவ்வுதவிக்கு ஒப்பற்ற ஈடாக ஆகாமையை அறிந்தேன்;* ***மேல் அவை நிலை இலாமை நினைந்தனன்*** *- அதன் மேலும் அவ்வுலகங்கள் (நீ செய்த உதவி போல்) நிலைத்த தன்மை உடையன அல்ல என்பதை நினைந்தனன் (வேறு செய்வது ஒன்று இன்மையால்);* ***நின்னை என் தலையினால் தொழவும் தகும்*** *- உன்னை என்னுடைய தலையால் தொழுதலே செய்யத் தகுவதாகும்.*

*"தொழவே தகும்" என்னும் பாடம் சிறப்புடையது - 'தொழவும் தகும்' என்பதனுள் உம்மை பொருட்சிறப்பின்று ஆதலின். உலகம் அழிந்தபின்னும் நிலைத்து நிற்கும் பேருதவிக்கு அழிந்து போகும் 'நிலையிலா உலகங்கள் ஈடாகாமை நினைந்தாள் ஆயிற்று.*

***9980. 'ஆதலான், ஒன்று உதவுதல் ஆற்றலேன்:***
***'யாது செய்வது?" என்று எண்ணி இருந்தனென்:***
***வேத நல் மணி வேகடம் செய்தன்ன***
***தூத! என் இனிச் செய் திறம்? சொல்' என்றாள்.***

***வேத நல் மணி வேகடம் செய்தன்ன தூத*** *- துளைத்துபயோகிக்கும் நல்ல இரத்தினத்தைச் சாணையிட்டு மெருகிட்டு துடைத்து வைத்தாற் போன்ற உத்தம குணங்களை உடைய தூதனாகிய அனுமனே!;* ***ஆதலான்*** *- இக்காரணங்களால்;* ***ஒன்று உதவுதல் ஆற்றலேன்*** *- பொருத்தமானதொரு பொருளை உனக்குக் கைம்மாறாகக் கொடுக்க இயலாதவளாக ஆனேன்;* ***'யாது செய்வது' என்று எண்ணி இருந்தனென்*** *- இனி இவனுக்கு வேறு என்ன செய்யலாம் என்று நினைத்துச் சும்மா இருந்தேன்;* ***இனிச் செய்திறம் என்? சொல்*** *- இனி நான் செய்யும் செயல் யாது சொல்வாயாக.*

*வேதம் - தொளையிடுதல் (வடசொல்) வேகடம் செய்தல் - சாணை பிடித்தல், பட்டை தீட்டுதல் எனினும் ஆம்.*

### *அனுமன் வேண்டுகோளைச் சீதை மறுத்தல்*

***9981. 'எனக்கு அளிக்கும் வரம், எம்பிராட்டி! நின்***
***மனக் களிக்கு மற்று உன்னை அம் மானவன் -***
***தனக்கு அளிக்கும் பணியினும் தக்கதோ? -***
***புனக் களிக் குல மா மயில் போன்றுளாய்!'***

***எம்பிராட்டி*** - *எம் தலைவியே!;* ***புனக் களிக்குல மாமயில் போன்றுளாய்*** - *காட்டின்கண் மகிழ்ச்சி மிகுந்த உயர்ந்த சாதியைச் சேர்ந்த மயிலைப் போன்றவளே!;* ***எனக்கு அளிக்கும் வரம்*** - *நீ எனக்குக் கொடுத்தருளும் வரமானது;* ***நின் மனக்களிக்கு மற்று உன்னை அம்மானவன் தனக்கு அளிக்கும் பணியினும் தக்கதோ?*** - *உன்னுடைய மனமகிழ்ச்சிக்கேற்ப உன்னை அப்பெருமை படைத்த இராமபிரானிடத்தில் கொண்டு சேர்ப்பதைக் காட்டிலும் சிறந்ததான வேறு ஒன்று இருக்கிறதா?*

*மானவன் - பெருமையுற்றவன். மானம் என்பதன் அடியாக வந்த சொல். இனி, மானவன் - மனுவினது குலத்திற் பிறந்தவன் என்று வடசொல் முடிபாகக் கொள்ளுதலும் கூடும். தத்திதாந்த நாமம் என்பர்.*

***9982. என உரைத்தது, 'திரிசடையாள், எம் மோய்!***
***மனவினில் சுடர் மா முக மாட்சியாள்***
***தனை ஒழித்து, இவ் அரக்கியர்தங்களை***
***வினையினில் சுட வேண்டுவென், யான்' என்றான்.****

***என உரைத்து*** - *என்று (அனுமன்) சொல்லி (மேலும்);* ***எம்மோய்*** - *எமது தாயே!;* ***யான் மனவினில் சுடர் மாமுக மாட்சியாள் திரிசடையாள் தனை ஒழித்து*** - *நன்மணிக்கற்கள் போல ஒளிவிடும் முகமலர்ந்த தோற்றமுடையாளாகிய திரிசடை நீங்கலாக;* ***இவ்வரக்கியர் தங்களை*** - *(உங்களைப் பயமுறுத்தித் துன்பம் செய்த) இந்த அரக்கியர்களை;* ***வினையினில் சுட வேண்டுவன்*** - *கொடிய செயலால் சுட்டெரிக்க விரும்புகிறேன்.*

*மனவு - மணிகளுக்கான பொதுப்பெயர். மனவினில் என்பதற்கு 'மனம் போல' எனப் பொருள் உரைத்து, தூயதாகிய தன் மனம் போல ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் முகம் உடையாள் திரிசடை எனினும் ஆம். வினையினில் - வினை போல; தப்பாது கெடுத்தற்கு உவமை.*

***9983. 'உரை அலா உரை உன்னை உரைத்து, உராய்***
***விரைய ஓடி, ''விழுங்குவம்'' என்றுளார்***
***வரை செய் மேனியை வள் உகிரால் பிளந்து,***
***இரை செய்வேன், மறலிக்கு, இனி' என்னுமால்.***

***உன்னை உரை அலா உரை உரைத்து*** - உன்னைச் சொலத்தகாத வார்த்தைகளால் வைது; ***விரைய ஓடி உராய விழுங்குவம் என்றுளர்*** - வேகமாக ஓடிவந்து மேல் விழுந்து உன்னை விழுங்கிவிடுவோம் என்றுள்ளவர்களாகிய இவ்வரக்கியரது; ***வரைசெய் மேனியை*** - மலை போன்ற உடம்பை; ***வள் உகிரால் பிளந்து*** - வளவிய என் கை நகத்தால் பிளந்து; ***மறலிக்கு இரை செய்வேன் இனி*** - யமனுக்கு இரையாக ஆக்குவேன் இனிமேல்; ***என்னும்*** - என்று சொல்லுவான்.

***9984. 'குடல் குறைத்து, குருதி குடித்து, இவர்***
***உடல் முருக்கியிட்டு உண்குவேன்' என்றலும்,***
***அடல் அரக்கியர், 'அன்னை! நின் பாதமே***
***விடலம்; மெய்ச் சரண்' என்று விளம்பலும்.****

***இவர்*** - இவ் வரக்கியரது; ***குடல் குறைத்து*** - குடலை வெட்டி; ***குருதி குடித்து*** - இரத்தத்தைக் குடித்து; ***உடல் முருக்கியிட்டு உண்குவேன்*** - உடலைத் துண்டாக்கி உண்பேன்; ***என்றலும்*** - என்று அனுமன் கூறிய அளவில்; ***அடல் அரக்கியர்*** - வலிமை படைத்த அரக்கிமார்கள்; ***அன்னை*** - தாயே!; ***நின் பாதமே மெய்ச்சரண்*** - நின்னுடைய திருவடிகளே எங்களுக்கு உண்மையான புகலிடம்; ***விடலம்*** - விடமாட்டோம்; ***என்று விளம்பலும்*** - என்று சொல்லுதலும்.

***9985. அன்னை, 'அஞ்சன்மின், அஞ்சன்மின்! நீர்' எனா,***
***மன்னும் மாருதி மா முகம் நோக்கி, 'வேறு***
***என்ன தீமை இவர் இழைத்தார், அவன்***
***சொன்ன சொல்லினது அல்லது? - தூய்மையோய்!****

***அன்னை*** - தாயாகிய பிராட்டி; ***நீர் அஞ்சன்மின் அஞ்சன்மின் எனா*** - (அரக்கியர்களைப் பார்த்து) நீங்கள் பயப்படாதீர்கள் என்று சொல்லி; ***மன்னும் மாருதி மாமுகம் நோக்கி*** - நிலைபெற்ற அனுமனது சீரிய முகத்தைப் பார்த்து; ***தூய்மையோய்*** - பரிசுத்தமானவனே; ***இவர்*** - இவ் வரக்கியர்; ***அவன் சொன்ன சொல்லினது அல்லது*** - அந்த இராவணன் ஏவிய சொற்களைச் சொன்னது அல்லாமல்; ***என்ன தீமை இழைத்தார்*** - (தாமாக) என்ன தீமையை எனக்குச செய்தார்கள்? (என்று கேட்டாள்)

***9986. 'யான் இழைத்த வினையினின் இவ் இடர் -***
***தான் அடுத்தது, தாயினும் அன்பினோய்!***
***கூனியின் கொடியார் அலரே, இவர்!***
***போன அப் பொருள் போற்றலை, புந்தியோய்!****

***தாயினும் அன்பினோய்*** - தாயைக் காட்டிலும் என்பால் அன்புடையவனே!; ***புந்தியோய்*** - அறிவாற்றலிற் சிறந்தவனே!; **இவ் இடர்தான் யான் இழைத்த வினையினின் தான் அடுத்தது** - இச் சிறைத்துன்பம் யான் செய்த தீவினை காரணமாக எனக்கு வந்து சேர்ந்தது; **இவர்** - இவ் வரக்கியர்; **கூனியின் கொடியார் அலரே** - கூனியை விடக் கொடியவர்கள அல்லர் அல்லவா; **போன அப்பொருள் போற்றலை** - நடந்து முடிந்த அந்நிகழ்ச்சிகளை மனத்திற் கொள்ளாதே (என்றான்.)
தானே திட்டமிட்டுச் செய்தவள் கூனி. அவளையே வாழ விட்டுள்ளபோது இராவணன் சொன்னதைச் செய்த இவர்கள் மேல் கோபிக்கலாகுமோ என்றாளாம்.

***9987. 'எனக்கு நீ அருள், இவ் வரம்; தீவினை***
***தனக்கு வாழ்விடம் ஆய சழக்கியர்***
***மனக்கு நோய் செயல்!' என்றனள் - மா மதி***
***தனக்கு மா மறுத் தந்த முகத்தினாள். ****

***மாமதி தனக்கு மாமறு தந்த முகத்தினாள்*** - சிறந்த சந்திரனுக்கு பெரிய களங்கத்தைக் கொடுத்து கீழப்படுத்திய முகம் உடையவளாகிய சீதை (அனுமனைப் பார்த்து); **நீ எனக்கு இவ்வரம் அருள்** - நீ எனக்கு இந்த வரத்தைத் தருதல் வேண்டும்; **தீ வினை தனக்கு வாழ்விடம் ஆய அழக்கியர் மனக்கு நோய் செயல் என்றனள்** - கொடு வினைகளுக்குத் தங்குமிடமாகிய கொடிய இவ்வரக்கியர்களது மனத்துக்குத் துன்பம் செய்யாதே என்று கேட்டுக் கொண்டாள்.

மனத்துக்கு - மனக்கு; அத்துக் கெட்டது - வரம்பு கெட்ட மனம் உடைய அரக்கியர் என்பதை உணர்த்த அத்துக் கெட்டது எனலும் ஆம்.

### *இராமன் வீடணனைச் சீதையை அழைத்து வருக எனல்*

***9988. என்ற போதின், இறைஞ்சினன், 'எம்பிரான்***
***தன் துணைப் பெருந் தேவி தயா' எனா***
***நின்ற காலை, நெடியவன், 'வீடண!***
***சென்று தா, நம தேவியை, சீரொடும்.****

***என்ற போதின்*** - என்று பிராட்டி கூறிய அளவில் (அனுமன்); ***'எம்பிரான் தன் துணைப் பெருந்தேவி தயா' எனா*** - இராமபிரானது ஒப்பற்ற பெருந்தேவியாகிய பிராட்டியின் ஒப்பற்ற கருணை (இருந்தவாறு என்னே) என்று சொல்லி; **இறைஞ்சினன் நின்ற காலை** - வணங்கி நின்ற பொழுது; **நெடியவன்** - (அங்கே)

*இராமபிரான்;* ***வீடண!*** *- வீடணனே!;* ***நம் தேவியை*** *- நம்முடைய பிராட்டியை;* ***சென்று சீரொடும்தா*** *- சென்று சிறப்போடும் அழைத்து வருக;*

***9989. என்னும் காலை, இருளும் வெயிலும் கார்***
***மின்னும் காலை இயற்கைய வீடணன்***
***'உன்னும் காலைக் கொணர்தி' என்று ஓத, அப்***
***பொன்னின் கால் தளிர் சூடினன், போந்துளான்.***

***என்னும் காலை*** *- என்று இராமன் கட்டளையிட்ட போது;* ***இருளும் வெயிலும்*** *- உடம்பால் காரிருளும், அணிகலன்களால் பகல் ஒளியும் உடையனாய்;* ***கார் மின்னும் காலை இயற்கைய வீடணன்*** *- மேகம் மின்னும் பொழுதுண்டாம் தன்மை படைத்த வீடணன்;* ***உன்னும் காலைக் கொணர்தி என்று ஓத*** *- நினைக்குமாத்திரத்தே அழைத்துக் கொண்டு வருக என்று இராமன் சொல்ல;* ***போந்துளான்*** *- உடனே அசோக வனத்துக்கு வந்து சேர்ந்து;* ***அப்பொன்னின் கால் தளிர் துடினன்*** *- அந்த சீதாப் பிராட்டியின் திருவடித் துளிர்களைத் தலைமேற் சூடி வணங்கினான்.*

## *வீடணன் பிராட்டியிடம் கூறல்*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***9990. 'வேண்டிற்று முடிந்தது அன்றே; வேதியர் தேவன் நின்னைக***
***காண்டற்கு விரும்புகின்றான்; உம்பரும் காண வந்தார்;***
***''பூண் தக்க கோலம் வல்லை புனைந்தனை, வருத்தம் போக்கி,***
***ஈண்டக் கொண்டு அணைதி'' என்றான்; எழுந்தருள், இறைவி!' என்றான்.***

***இறைவி*** *- தலைவியே!* ***வேண்டிற்று முடிந்தது அன்றே*** *- நீ விரும்பியது நிறைவேறி விட்டது அல்லவா;* ***வேதியர் தேவன் நின்னைக் காண்டற்கு விரும்புகின்றான்*** *- வேத பாரகர்களாகிய முனிவர்களின் வழிபடுகடவுளாகிய இராமபிரான் உன்னைக் காண்பதற்கு மிகவும் ஆசைப்படுகின்றான்;* ***உம்பரும் காண வந்தார்*** *- (நீங்கள் இருவரும் ஒன்று சேரும் காட்சியைத்) தேவர்களும் காண்பதற்குக் குழுமியுள்ளார்கள்;* ***பூண்தக்க கோலம் வல்லை புனைந்தனை*** *- அணிதற்குத் தகுதியான அலங்காரங்களை விரைவாகச் செய்வித்துக் கொண்டு;* ***வருத்தம் போக்கி*** *- பிரிவினால் உளதாகிய துன்பமெலிவை அகலச் செய்து;* ***ஈண்ட கொண்டு அணைதி*** *- இங்கே விரைவாக அழைத்துக் கொண்டு வருவாயாக;* ***என்றான்*** *- என்று இராமபிரான் கட்டளையிட்டான்;* ***எழுந்தருள்*** *- புறப்படுவாயாக;* ***என்றான்*** *- என்று சொன்னான். (வீடணன்)*

*பிராட்டி வீடணனுக்கு உரைத்தல்*

***9991. 'யான் இவண் இருந்த தன்மை, இமையவர் குழுவும், எங்கள்***
***கோனும், அம் முனிவர்தங்கள் கூட்டமும், குலத்துக்கு ஏற்ற***
***வான் உயர் கற்பின் மாதர் ஈட்டமும், காண்டல், மாட்சி;***
***மேல் நிலை கோலம் கோடல் விழுமியது அன்று - வீர!'***

***வீர!*** *- வீடணனே!;* ***யான் இவண் இருந்த தன்மை*** *- நான் இந்த இலங்கையில் அசோக வனச் சிறையில் இருந்த இயல்பினை;* **இமையவர் குழுவும்** *- தேவர்கள் கூட்டமும்;* **எங்கள் கோனும்** *- எம் தலைவனாகிய இராமனும்;* **அம் முனிவர் தங்கள் கூட்டமும்** *- அங்குள்ள முனிவர்களுடைய குழுவும்;* **குலத்துக்கு ஏற்ற வான் உயர் கற்பின் மாதர் ஈட்டமும்** *- தம் குலத்துக்கு ஏற்றவாறு மிக உயர்ந்த கற்பின் மாட்சிமையுடைய பெண்கள் கூட்டமும்;* **காண்டல்** *- பார்த்தலே;* **மாட்சி** *- சிறப்புடையதாகும்;* **மேல் நிலை** *- இதன் மேலாகிய நிலைமை உடைய;* **கோலம் கோடல்** *- அலங்கரித்துக் கொண்டு வருதல்;* **விழுமியது அன்று** *- சிறந்தது அன்று.*

***9992. என்றனள், இறைவி; கேட்ட இராக்கதர்க்கு இறைவன், 'நீலக்***
***குன்று அன தோளினான் தன் பணியினின் குறிப்பு இது' என்றான்;***
***'நன்று' என நங்கை நேர்ந்தாள், நாயகக் கோலம் கொள்ள;***
***சென்றனர், வான நாட்டுத் திலோத்தமை முதலோர், சேர.***

**என்றனள் இறைவி** *- என்று சொன்னாள் சீதை; கேட்ட* **இராக்கதர்க்கு இறைவன்** *- அது கேட்ட அரக்க அரசனாகிய வீடணன்;* **'நீலக் குன்று அன தோளினான்தன் பணியினின் குறிப்பு இது' என்றான்** *- நீலமலை போன்ற தோள்களை உடைய இராமபிரானது கட்டளையின் குறிப்பு இக்கோலம் கோடல் என்று சொன்னான்;* **நங்கை** *- அது கேட்ட பிராட்டி;* **நன்று என நேர்ந்தாள்** *- நல்லதே என்று அதனை உடன்பட்டாள்; (உடனே);* **வான நாட்டுத் திலோத்தமை முதலோர்** *- தேவர் உலகத்துள்ள திலோத்தமை முதலாகிய தெய்வமகளிர்;* **சேர** *- ஒன்றாக;* **நாயகக் கோலம் கொள்ள**

***சென்றனர்*** - *பிராட்டி அழகிய மேன்மையான அலங்காரம் செய்து கொள்ள வேண்டி அவள்பால் சென்றனர்.*

*பிராட்டியை 'சீரொடும்தா' என்று கூறியது இராமன் ஆதலின் அலங்காரம் செய்து வர வேண்டும் என்பது இராமன் குறிப்பே அன்றி என் கருத்து அன்று என்றான் வீடணன்.*

## *தேவ மாதர்கள் சீதைக்குச் செய்த அலங்காரம்*

***9993. 'மேனகை, அரம்பை, மற்றை உருப்பசி, வேறும் உள்ள***
***வானக நாட்டு மாதர் யாரும், மஞ்சனத்துக்கு ஏற்ற***
***நான நெய் ஊட்டப் பட்ட நவை இல கலவை தாங்கி,***
***போனகம் துறந்த தையல் மருங்குற நெருங்கிப்***
***புக்கார்.***

***மேனகை, அரம்பை, மற்றை உருப்பசி -; வேறும் உள்ள வானக நாட்டு மாதர் யாவரும்*** - *என்று பலவாக உள்ள தேவலோகப் பெண்கள் எல்லாரும்;* ***மஞ்சனத்துக்கு ஏற்ற*** - *பிராட்டியின் அபிடேகத்துக்குப் பொருத்தமான;* ***நானநெய் ஊட்டப்பட்ட நவை இல கலவை தாங்கி*** - *கஸ்தூரிப் புழுகு தீற்றப்பட்டுச் செய்த குற்றம் இல்லாத கலவைச் சாந்தைக் கையில் ஏந்திக் கொண்டு;* ***போனகம் துறந்த தையல்*** - *(இலங்கைச் சிறையில் இருந்த காலம் எல்லாம்); உணவைத் துறந்து விரதம் இருந்த பிராட்டியின்,* ***மருங்கு உற நெருங்கிப் புக்கார்*** - *பக்கத்தில் பொருந்த நெருக்கமாக வந்து சேர்ந்தனர்.*

*நானம் - கஸ்தூரி, புனுகு என்பர். வாசனைத் திரவியங்களில் ஒன்று. சென்ற பாட்டின் இறுதியில் திலோத்தமை முதலோர் என்றமையின் ஏனைய மூவரும் இப்பாடலின் முதற்கண் குறிப்பிட்டார்.*

***9994. காணியைப் பெண்மைக்கு எல்லாம், கற்பினுக்கு***
***அணியை, பொற்பின்***
***ஆணியை, அமிழ்தின் வந்த அமிழ்தினை, அறத்தின்***
***தாயை,***
***சேண் உயர் மறையை எல்லாம் முறை செய்த***
***செல்வன் என்ன***
***வேணியை, அரம்பை, மெல்ல, விரல் முறை சுகிர்ந்து***
***விட்டாள்.***

***அரம்பை*** - *தேவமாதர்களுள் அரம்பை என்பவள்;* ***பெண்மைக்கு எல்லாம் காணியை*** - *பெண்களின் பெண்மைக் குணங்களுக்கு விளைநிலம் எனத்தக்க பிராட்டியை;* ***கற்பினுக்கு அணியை*** - *கற்பு என்னும் நற்பண்புக்கு மேலும் அழகு*

*செய்பவளாய சானகியை;* ***பொற்பின் ஆணியை*** *- அழகிற்கு உரையாணி போன்ற திருமகளை;* ***அமிழ்தின் வந்த அமிழ்தினை*** *- திருப்பாற்கடலில் அமிழ்தத்துடன் தோன்றிய அமுதம் போன்ற செந்திருவை;* ***அறத்தின் தாயை*** *- அறத்தை வளர்க்கும் அன்னையாகிய பிராட்டியை;* ***வேணியை*** *- கூந்தலை;* ***மெல்ல*** *- மெதுவாக;* ***சேண் உயர் மறையை எல்லாம் முறை செய்த செல்வன் என்ன*** *- மிக உயர்ந்த வேதங்களை எல்லாம் பிரித்து வகுத்தருளிய திருமால்போல;* ***விரல் முறை சுகிர்ந்து விட்டாள்*** *- விரல்களால் ஒழுங்காக சிக்கெடுத்து பிரித்து சீர்செய்தாள்.*

*வேதமே பிராட்டியின் கூந்தல் எனவும், வேதத்தை வகைப் படுத்தியது போல் பிராட்டியின் கூந்தலைப் பிரித்து வாரி ஒழுங்கு படுத்தினாள் எனவும் கூறினார். தாயை வேணியைச் சுகிர்ந்து விட்டாள் என்பதனைப் பசுவினை பாலினைக் கறந்தான் என்பது போல இரண்டு செயப்படு பொருள் வந்ததாகக் கொள்க. பசுவினது பாலினைக் கறந்தான் என்று முதற்கண் ஆறாம் வேற்றுமை கொள்வது போல் 'தாயது வேணியைச் சுகிர்ந்து விட்டாள்' என ஆறாவது உருபு அமையின் பொருந்துதல் காண்க. 'தாயை வேணியின் கண்' எனப் பின்னர் ஏழாம் வேற்றுமை வந்து அமைதலும் உண்டு.*

***9995. பாகு அடர்ந்து அமுது பில்கும் பவள வாய்த் தரளப் பத்தி***
***சேகு அற விளக்கி, நானம் தீட்டி, மண் சேர்ந்த காசை***
***வேகடம் செய்யுமாபோல், மஞ்சன விதியின், வேதத்து***
***ஓகை மங்கலங்கள் பாடி, ஆட்டினர், உம்பர் மாதர்.***

***உம்பர் மாதர்*** *- தேவப் பெண்கள்;* ***பாகு அடர்ந்து*** *- சர்க்கரைப் பாகினை ஒத்த இன்சுவை நெருங்கி;* ***அமுது பில்கும்*** *- இன்சொற்களை வெளியிடும்;* ***பவள வாய்*** *- பவளம் போன்ற சிவந்த வாயின்கண் உள்ள;* ***தரளப்பத்தி*** *- முத்து போன்ற பல்வரிசைகளை;* ***சேகு அற விளக்கி*** *- வைரமாகப் பிடித்த மாசு நீங்க சுத்தம் செய்து;* ***நானம் தீட்டி*** *- வாசனைச சாந்தைப் பூசி;* ***மண் சேர்ந்த காசை வேகடம் செய்யுமா போல்*** *- மண்ணிற் படிந்து மங்கிப் போன இரத்தினத்தை சாணையிட்டுச் சுத்தம் செய்து ஒளிவீசச் செய்வது போல;* ***மஞ்சன விதியின்*** *- நீராடுதற்குரிய விதிமுறைகளின் படி;* ***வேதத்து ஓகை மங்கலங்கள் பாடி*** *- வேதநூலிற் கூறிய வண்ணம் மகிழ்ச்சிக்குரிய மங்களமான பாடல்களைப் பாடி;* ***ஆட்டினர்*** *- நீராட்டினார்கள்.*

***9996. உரு விளை பவள வல்லி பால் நுரை உண்டதென்ன***
***மரு விளை கலவை ஊட்டி, குங்குமம் முலையின்***
***ஆட்டி,***
***கருவிளை மலரின் காட்சிக் காசு அறு தூசு, காமன்***
***திரு விளை அல்குற்கு ஏற்ப மேகலை தழுவச்***
***சேர்த்தார்.***

***உரு விளை பவள வல்லி நுரை உண்டது என்ன*** - *அழகிற் சிறந்த பவளக் கொடி பால் நுரையால் மூடப்பெற்றது போலும் என்று சொல்லும்படி;* ***மரு விளை கலவை ஊட்டி*** *- (மேனி எல்லாம்) மணம் நிரம்பிய (வெள்ளிய) கலவைச் சாந்தை மறையும்படி பூசி;* ***குங்குமம் முலையின் ஆட்டி*** *- குங்குமக் குழம்பை முலை முழுக அப்பி;* ***கருவிளை மலரின் காட்சிக்காசு அறு தூசு*** *- கருவிள மலர் போன்ற காணற்கினிய குற்றமற்ற பொன்னாடையோடு;* ***காமன் திரு விளை அல்குற்கு ஏற்ப மேகலை*** *- மன்மதனது செல்வம் விளங்கும் அல்குலைத் தாங்கும் இடைக்குப் பொருத்தமாக மேகலை என்னும ஆபரணமும்;* ***தழுவச சேர்த்தார்*** *- பொருந்தித் தழுவும்படி அணிவித்தார்.*

*சிவந்த சீதையின் திருமேனி மேல் வெண்ணிறக் கலவை அப்பியது பவளக் கொடியைப் பால் நுரை மூடியது போன்றது. பெண்ணுறுப்பை மன்மத பீடம் என்பர் ஆதலின் 'காமன் திருவிளை அல்குல்' என்றார். மேகலை - எட்டுக் கோவைகளை உடைய இடையணியாம்.*

***9997. சந்திரன் தேவிமாரின் தகை உறு தரளப் பைம் பூண்***
***இந்திரன் தேவிக்கு ஏற்ப, இயைவன பூட்டி, யாணர்ச்***
***சிந்துரப் பவளச் செவ் வாய்த் தேம் பசும் பாகு தீற்றி,***
***மந்திரத்து அயினி நீரால் வலஞ்செய்து, காப்பும்***
***இட்டார்.***

***இந்திரன் தேவிக்கு ஏற்ப இயைவன*** *- இந்திரனது மனைவியான இந்திராணிக்குப் பொருத்தமாக உரிய;* ***சந்திரன் தேவிமாரின் தகை உறு தரளப் பைம் பூண்*** *- சந்திரனது மனைவிமார்களாகிய நக்ஷத்திரங்களைப் போன்ற அழகு மிக்க முத்துக்களால் ஆகிய பசும்பொன்னணியை;* ***பூட்டி*** *- அணிவித்து;* ***யாணர்ச் சிந்துரப் பவளச் செவ்வாய்*** *- புதிய சிந்தூரம் போலவும் பவழம் போலவும் சிவந்த வாயில்;* ***தேம் பசும் பாகு தீற்றி*** *- இனிய பசிய பாக்குடன் கூடிய தாம்பூல காரத்தை உண்பித்து;* ***மந்திரத்து அயினி நீரால் வலம் செய்து*** *- மந்திரத்தோடு கூடிய ஆலத்தி நீரால் சுழற்றி;* ***காப்பும் இட்டார்*** *- பின் அதனால் நெற்றிக் காப்பும் இட்டார்கள்.*

*சந்திரன் தேவியர் விண்மீன்கள். அத்தாராகணங்களைப் போன்ற முத்துக்கள் என்க. வாய்க்கு சிந்துரம், பவளம் உவமை. பாகு - பாக்கு எனவே வெற்றிலை சுண்ணாம்பு கொள்ளப்பட்டு தாம்பூலம் எனப் பெற்றது. தீற்றி - தின் என்ற பகுதியால் பிறந்தது.*

### *வீடணன் சீதையை அழைத்து வருதல்*

***9998. மண்டல மதியின் நாப்பண் மான் இருந்தென்ன,***
***மானம்***
***கொண்டனர் ஏற்றி, வான மடந்தையர் தொடர்ந்து***
***கூட,***

***உண்டை வானரரும் ஒள் வாள் அரக்கரும் புறம் சூழ்ந்து ஓட,***
***அண்டர் நாயகன்பால், அண்ணல் வீடணன் அருளிச் சென்றான்.***

***அண்ணல் வீடணன்*** - *தலைமையான வீடணன் (பிராட்டியை);* ***மண்டல மதியின் நாப்பண் மான் இருந்தென்ன*** -

*வட்டமான சந்திரன் நடுவே மான் இருப்பதைப் போல;* ***கொண்டனர் மானம் ஏற்றி*** - *அழைத்துக் கொண்டு வந்தவர்களாய் விமானத்தில் ஏற்றி வைத்து;* ***வான மடந்தையர் தொடர்ந்து கூட*** - *தேவப் பெண்கள் பின் பற்றி உடன் வர;* ***உண்டை வானரரும் ஒள்வாள் அரக்கரும் புறம் சூழ்ந்து ஓட*** - *உருண்ட வடிவமைப்புடைய குரக்கு வீரரும் ஒளிபடைத்த வாள் ஏந்திய அரக்கரும் புறத்தே சுற்றிக் கொண்டு ஓடிவர;* ***அண்டர் நாயகன் பால்*** - *தேவதேவனாகிய இராமபிரானிடத்து;* ***அருளின் சென்றான்*** - *அவன் கட்டளையிட்டருளியபடி சென்று சேர்ந்தான்.*

*குரங்குகளின் உருண்ட வடிவமைப்பு நோக்கி 'உண்டை' என்பது வந்தது. வீடணச் சார்புடைய அரக்கர்கள் பிழைத் திருப்பவர் உனராதலின் 'அரக்கரும்' என்றார்.*

**கலி விருத்தம்**

***9999. இப் புறத்து இமையவர், முனிவர் ஏழையர்,***
***துப்பு உறச் சிவந்த வாய் விஞ்சைத் தோகையர்,***
***முப் புறத்து உலகினும் எண்ணில் முற்றினோர்,***
***ஒப்புறக் குவிந்தனர், ஓகை கூறுவார்.***

***இப்புறத்து*** - *இராமன் இருக்கும் இவ்விடத்து;* ***இமையவர் முனிவர் ஏழையர்*** - *தேவர்கள், முனிவர்கள் பெண்கள்;* ***துப்பு உற சிவந்த வாய் விஞ்சைத் தோகையர்*** - *பவளம் போற் சிவந்த வாயினை உடைய வித்தியாதரப் பெண்கள்;* ***முப்புறத்து உலகினும் எண்ணில் முற்றினோர்*** - *மூவுலகங்களினும் மதிக்கற்பாட்டில் உயர்ந்தவர்கள் எல்லாரும்;* ***ஓகை கூறுவார்*** - *மகிழ்ச்சி வார்த்தைகளைச் சொல்பவர்களாய்;* ***ஒப்புறக் குவிந்தனர்*** - *தம்முள் வேறுபாடில்லாது ஒத்த தன்மையராய்த் திரண்டார்கள்.*

*மக்கள் கூட்டம் திரளும் போது செல்வம் - கல்வி, சாதி, பதவி பற்றிய உயர்வு தாழ்வு கருதப்படாமல் எல்லோரும் ஒருதன்மையராய் இருத்தல் வழக்கீடு.*

***10000. அருங் குலக் கற்பினுக்கு அணியை அண்மினார்,***
***மருங்கு பின் முன் செல வழி இன்று என்னலாய்,***
***நெருங்கினர்; நெருங்குழி, நிருதர் ஓச்சலால்,***

***கருங் கடல் முழக்கு எனப் பிறந்த, கம்பலை*** **அருங்குலக் கற்பினுக்கு அணியை அண்மினார்** - *அரிய உயர்ந்த குலத்தில் தோன்றிக் கற்புக்கு அணிகலமாக விளங்கும் பிராட்டியை (அனைவரும்) அணுகினார்கள்;* **மருங்கு பின் முன் செல வழி இன்று என்னலாய் நெருங்கினர்** - *(பிராட்டி விமானத்தின்) பக்கவாட்டிலும் பின்னும் முன்னும் செல்லுவதற்கு வழி இல்லை என்று சொல்லும் படி நெருங்கினார்கள்;* **நெருங்குழி** - *அவ்வாறு சூழ்ந்து நெருங்கிய பொழுது;* **நிருதர் ஓச்சலால்** - *(வழிவிலகிச் செல்ல வேண்டி); அரக்க காவலர் (பிரம்பை) வீசி விரட்டுதலால்;* **கம்பலை** - *கூக்குரல் ஒலி;* **கருங்கடல் முழக்கு எனப் பிறந்த** - *கரிய கடலின் அலையொலி போலப் பேரளவினதாக உண்டாயிற்று.*

***10001. அவ் வழி இராமனும் அலர்ந்த தாமரைச்***
***செவ்வி வாள் முகம்கொடு செயிர்த்து நோக்குறா,***
***'இவ் ஒலி யாவது?' என்று இயம்ப, இற்று எனா,***
***கவ்வை இல் முனிவரர் கழறினார் அரோ.***

**அவ்வழி** - *அவ்விடத்து;* **இராமனும் அலர்ந்த தாமரைச் செவ்வி வாள் முகம் கொடு** - *மலர்ந்திருக்கின்ற தாமரையின் அழகைத் தன்னிடத்தே கொண்ட ஒளிபடைத்த தன் திருமுகம் கொண்டு;* **செயிர்த்து நோக்குறா** - *கோபித்துப் பார்த்து;* **'இவ் ஒலி யாவது என்று இயம்ப** - *இந்தப் பேரொலி எதனால் விளைந்தது என்று (அருகில் உள்ளாரைக்) கேட்க;* **கவ்வை இல் முனிவரர்** - *துன்பமற்ற முனிவர்கள்;* **கழறினார்** - *இன்னது என்று எடுத்துரைத்தார்கள்.*

*முனிவர் சொல்லின் கடுமையை உணர்த்த, கூறினார் என்னாது கழறினார் என்றார் கம்பர். அதனால் இராமனுக்குச் சீற்றம் சிறந்தது பின் வரும் பாடலால் விளங்கும்.*

## *இராமன் வீடணனைக் கடிதல்*

***10002. முனிவரர் வாசகம் கேட்புறாதமுன்,***
***நனி இதழ் துடித்திட நகைத்து, வீடணன் -***
***தனை எழ நோக்கி, 'நீ, தகாத செய்தியோ,***
***புனித நூல் கற்று உணர் புந்தியோய்?' என்றான்.***

**முனிவரர் வாசகம் கேட்புறாத முன்** - *முனிவர்கள் சொல்லிய வார்த்தை காதில் விழுவதற்கு முன்பாகவே விரைந்து;* **இதழ் நனி துடித்திட நகைத்து** - *அதரங்கள் மிகவும் துடிக்கும்படியாக வெடிபடச் சிரித்து;* **வீடணன் தனை எழ நோக்கி** - *வீடணனை நன்றாக அழுந்தப் பார்த்து;* **புனித நூல் கற்று உணர் புந்தியோய்!** - *தூய்மையான மெய்யுணர் நூல்களை எல்லாம் கற்றறிந்த ஞானவானே!;* **நீ தகாத செய்தியோ** - *நீ தகுதிக்கேலாத செயல்களைச் செய்யலாமா?;* **என்றான்** -.

*'கேட்புறாத முன்' என்பது விரைவு குறித்தது. துன்பப் படுவாரிடத்து இராமனது பரிவு விரையுமாறு கூறியது.*

***10003. 'கடுந் திறல் அமர்க் களம் காணும் ஆசையால்,***
***நெடுந் திசைத் தேவரும் நின்ற யாவரும்***
***அடைந்தனர்; உவகையின் அடைகின்றார்களைக்***
***கடிந்திட யார் சொனார்? - கருது நூல் வலாய்!***

***கருது நூல் வலாய்*** *- உணரப்படும் சாஸ்திரங்களில் வல்ல வீடணனே!;* ***நெடுந்திசைத் தேவரும் நின்ற யாவரும்*** *- நெடிய திக்குப் பாலகர்களாய தேவர்களும் மற்றும் ஆங்காங்கே நின்றிருந்த எல்லாரும்;* ***கடுந்திறல் அமர்க்களம் காணும் ஆசையால்*** *- கொடிய வலிமையோடு போர் நடந்த இடத்தைப் பார்க்கும் விருப்பம் காரணமாக;* ***அடைந்தனர்*** *- நெருங்கித் திரண்டுள்ளனர்;* ***உவகையின் அடைகின்றார்களைக் கடிந்திட யார் சொனார்*** *- மகிழ்ச்சியால் அருகே வந்து சேர்ந்தவர்களை அடித்து விரட்டும்படி யார் உத்தரவிட்டார்கள்.*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***10004. 'பரசுடைக் கடவுள், நேமிப் பண்ணவன், பதுமத்து - அண்ணல்,***
***அரசுடைத் தெரிவைமாரை இன்றியே அமைவது உண்டோ?***
***கரை செயற்கு அரிய தேவர், ஏனையோர், கலந்து காண்பான்***
***விரசுறின், விலக்குவாரோ? வேறு உலார்க்கு என்கொல்? - வீர!***

***வீர*** *- வீடணனே!;* ***பரசு உடைக் கடவுள்*** *- பரசு என்னும் மழு ஆயுதத்தை உடைய கடவுளாகிய சிவபெருமான்;* ***நேமிப் பண்ணவன்*** *- சக்கராயுதத்தை ஏந்திய பரமனாகிய திருமால்;* ***பதுமத்து அண்ணல்*** *- தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவன் ஆகிய முப்பெருங்கடவுளரும்;* ***அரசுடைத் தெரிவை மாரை இன்றியே அமைவது உண்டோ?*** *- தலைமைத் தன்மையுடைய பட்டத்தரசிகளாகிய தம் மனைவியரை இல்லாமல் வருவது உண்டா?;* ***கரை செயற்கு அரிய தேவர் ஏனையோர் கலந்து காண்பான் விரசுறின்*** *- கணக்கிட முடியாத தேவர்களும் மற்றவர்களும் தத்தம் மனைவியருடன் கலந்து போர்க்களக் காட்சியையும் பிராட்டியையும் காண்பதற்காக நெருங்கி வந்தால்;* ***விலக்குவாரோ*** *- தள்ளி அகற்றுவார்களா?;* ***வேறுளார்க்கு என்கொல்*** *- இத்தகைய மேலோர்களுக்கே கூட்டத்தில் தள்ளப்படும் நிலை இருக்குமானால் மற்ற சாதாரணமானவர்கள் கதி என்ன ஆகும்?*

*10005. **'ஆதலான், அரக்கர் கோவே! அடுப்பது அன்று உனக்கும், இன்னே***
***சாதுகை மாந்தர்தம்மைத் தடுப்பது' என்று அருளி, செங் கண்***
***வேதநாயகன்தான் நிற்ப, வெய்து உயிர்த்து, அலக்கண் எய்தி,***
***கோது இலா மனனும் மெய்யும் குலைந்தனன் குணங்கள் தூயோன்.***

***அரக்கர் கோவே!*** - *அரக்கர்களுக்கு அரசனாகிய வீடணனே!;* ***ஆதலான்*** - *ஆகையினால்;* ***இன்னே சாதுகை மாந்தர் தம்மைத் தடுப்பது*** - *இவ்வாறு ஒரு தவற்றிலும் படாத சாமானிய சாது மனிதர்களை அடித்து விரட்டுவது;* ***உனக்கும் அடுப்பது அன்று*** - *உனக்கும் பொருந்துவது அன்று;* ***என்று அருளி*** - *என்று இவ்வாறு சொல்லியருளி;* ***செங்கண் வேதநாயகன்தான் நிற்ப*** - *சிவந்த கண்களையுடைய வேதத் தலைவனாகிய இராமன் நிற்ப;* ***குணங்கள் தூயோன்*** - *குணங்களால் பரிசுத்தமானவனாகிய வீடணன் (அது கேட்டு);* ***அலக்கண் எய்தி*** - *துன்பம் அடைந்து;* ***வெய்து உயிர்த்து*** - *பெருமூச்சு விட்டு;* ***கோது இலா மனனும் மெய்யும் குலைந்தனன்*** - *குற்றமற்ற மனமும் உடம்பும் நிலைதடுமாறப் பெற்றான்.*

*இராமனைக் கண்ட சீதை அனுமனை நன்கு மதித்தல்*

*10006. **அருந்ததி அனைய நங்கை அமர்க் களம் அணுகி, ஆடல்***
***பருந்தொடு கழுகும் பேயும் பசிப் பிணி தீருமாறு***
***விருந்திடு வில்லின் செல்வன் விழா அணி விரும்பி நோக்கி,***
***கருந் தடங் கண்ணும் நெஞ்சும் களித்திட, இனைய சொன்னாள்;***

***அருந்ததி அனைய நங்கை அமர்க்களம் அணுகி*** - *அருந்ததியை ஒத்த கற்பின் செல்வியாகிய சீதை போர்க்களத்தை நெருங்கி;* ***ஆடல் பருந்தொடு கழுகும் பேயும் பசிப்பிணி தீருமாறு*** - *ஆடுகின்ற பருந்தும் கழுகும் பேயும் பசிநோய் நீங்கும்படி;* ***விருந்து இடு வில்லின் செல்வன் விழா அணி விரும்பி நோக்கி*** - *அவைகளுக்கு உணவு புதிதாகத் தருகின்ற வில்லினால விளைக்கும் போராற்றலிற சிறந்த இராமனது போர்க்காட்சிக் கோலத்தை விரும்பிப் பார்த்து;* ***கருந்தடங்கண்ணும் நெஞ்சும களித்திட*** - *கரிய அகன்ற கண்களும் மனமும் உவகை ஏற;* ***இனைய சொன்னாள்*** - *பின்வரும் வார்த்தைகளைச் சொல்லலானாள்;*

***10007. சீலமும் காட்டி, என் கணவன் சேவகக்***
***கோலமும் காட்டி, என் குலமும் காட்டி, இஞ்***
***ஞாலமும் காட்டிய கவிக்கு நாள் அறாக்***
***காலமும் காட்டும்கொல், என் கற்பு?' என்றாள்.***

***சீலமும் காட்டி*** - *என்னுடைய கற்பொழுக்கத்தையும் என் கணவற்குக் காண்பித்து;* ***என் கணவன் சேவகக் கோலமும் காட்டி*** - *என் கணவனாகிய அப்பிரானது போர்க்கோலக் காட்சியையும் யான் பார்க்கும்படிச் செய்து;* ***என் குலமும் காட்டி*** - *நான் பிறந்த குலத்தையும் புகுந்த குலத்தையும் நிலைநிறுத்தி;* ***இஞ் ஞாலமும் காட்டிய கவிக்கு*** - *இவ்வுலகத்தையும் இராவணனால் அழியாதபடி நிலைநிறுத்திய இவ்வனுமனாகிய குரங்குக்கு;* ***என் கற்பு*** - *என் கற்பானது;* ***நாள் அறாக் காலமும் காட்டுங்கொல்*** - *நாள் இடையற்றுப் போகாமல் என்றும் வாழ்வதாகிய சிரஞ்சீவித் தன்மையையும் தருமோ?;* ***என்றாள்*** - *.* *அனுமன் சிறையிலிருந்த செல்வியை இலங்கையிற்கண்டு சொல்லியதே இராவணன் அழிவுக்கும் சீதையின் சிறைமீட்சிக்கும் காரணமாதலின் அனுமனே எல்லாற்றையும் செய்தவன் என நெஞ்சு நெகிழ்ந்தாள் பிராட்டி காலம் என்றும் உள்ளது. உயிர்கள் இடையில் நாள் அறுகின்றன. நாள் அறாமை காலம் உள்ள துணையும் தானும் இருத்தலாகிய அழிவின்மையாம்.*

***10008. 'எச்சில், என் உடல்; உயிர் ஏகிற்றே; இனி***
***நச்சு இலை' என்பது ஓர் நவைஇலாள் எதிர்,***
***பச்சிலை வண்ணமும் பவள வாயும் ஆய்க்***
***கைச் சிலை ஏந்தி நின்றானைக் கண்ணுற்றாள்.***

***என் உடல் எச்சில் உயிர் ஏகிற்றே*** - *இராவணன் கொணர்ந்து சிறை வைத்ததால் என் உடல் தூய்மை இழந்தது; உயிர் எப்பொழுதோ போய்விட்டது;* ***நச்சு இனி இலை*** - *விருப்பம் என்பது எதுவும் இனி எனக்கு இல்லை;* ***என்பது ஓர் நவைஇலாள்*** - *என்று (சிறையிருந்த போது) சொல்லிக் கொண்டிருந்தவளாகிய ஒரு குற்றமும் அற்ற பிராட்டி;* ***பச்சிலை வண்ணமும் பவள வாயுமாய்க் கைச்சிலை ஏந்தி நின்றானை*** - *பச்சிலை போன்ற திருமேனி நிறத்தையும் பவளம் போன்ற சிவந்த திருவாயையும் உடையனாய்க் கையில் கோதண்டம் தாங்கி நின்ற பெருமானை;* ***எதிர் கண்ணுற்றாள்*** - *எதிரே பார்த்தாள்.*

*சிறையிருந்த செல்வியின் சிந்தனையோட்டம் கூறப்பட்டது. இராவணன் தீண்டிலன் ஆயினும் மனத்தால் நினைக்கும்படி நேர்ந்துவிட்டது. ஆதலின் "எச்சில் என் உடல்" என்பாளாம். இராமனே அவட்கு உயிர் ஆதலின் இராமனைப் பிரிந்த போதே 'உயிர் போயிற்று' என்றாளாம்.*

*சீதை இராமனைத் தொழுதலும் இராமன் சீதையைக் காணுதலும்*

***10009. மானமீது அரம்பையர் சூழ வந்துளாள்,***
***போன பேர் உயிரினைக் கண்ட பொய் உடல்***
***தான் அது கவர்வுறும் தன்மைத்து ஆம் எனல்***
***ஆனனம் காட்டுற, அவனி எய்தினாள்.***

***மானமீது அரம்பையர் சூழ வந்துளாள்*** *- விமானத்தின் மேல் தெய்வ மகளிர் சுற்றியிருப்ப வந்தவளாகிய பிராட்டி;* ***போன பேர் உயிரினைக் கண்ட பொய் உடல்தான் அது கவர்வுறும் தன்மைத்து ஆம் எனல்*** *- தன்னை விட்டுப் பிரிந்து போன பெரிய உயிரைப் பார்த்த உயிரற்ற பொய் உடலானது அந்த உயிரைக் கவர்கின்ற தன்மை என்பதை;* ***ஆனனம் காட்டுற அவனி எய்தினாள்*** *- தன் முகமானது காட்டி நிற்க பூமியில் இறங்கினாள்.*

*பிரிந்த உயிரைத் திரும்பப் பற்றுவது போல் சீதை இராமனைப் பார்த்த போது இருந்த முகமலர்ச்சி இருந்ததாம்.*

***10010. பிறப்பினும் துணைவனை, பிறவிப் பேர் இடர்***
***துறப்பினும் துணைவனை, தொழுது, 'நான் இனி***
***மறப்பினும் நன்று; இனி மாறு வேறு வீழ்ந்து***
***இறப்பினும் நன்று'' என ஏக்கம் நீங்கினாள்.***

***பிறப்பினும் துணைவனை*** *- எப்பிறப்பு எடுத்தாலும் பிறவிதோறும் துணையாக வருகின்றவனை;* ***பிறவிப் பேர் இடர் துறப்பினும் துணைவனை*** *- பிறவி என்கிற பெருந்துன்பத்தை விட்டுப் பரமபதம் எய்தினாலும் அங்கேயும் இவ்வுயிர்க்குத் துணையாக இருக்கின்ற நாயகனை;* ***தொழுது*** *- வணங்கி;* ***நான் இனி மறப்பினும் நன்று*** *- (என் ஆசை நிறைவேறிவிட்டது ஆதலின்) நான் இனிமேல் அப்பெருமானை மறந்து விட்டாலும் நல்லதே;* ***என ஏக்கம் நீங்கினாள்*** *- என்று சொல்லி மனத்தளர்ச்சி நீங்கப் பெற்றாள்.*

*"இப்பிறப்பில் காண்டலோ அரிது என்று என்று விம்முறும் கலங்கும்" (கம்ப. 5081) என்கின்ற முன்னைய ஏக்கம் நீங்கப் பெற்றாள் ஆதலின் 'இனி' எதுவானால் என்ன' என்றாளாம்.*

***10011. கற்பினுக்கு அரசினை, பெண்மைக் காப்பினை,***
***பொற்பினுக்கு அழகினை, புகழின் வாழ்க்கையை***
***தற் பிரிந்து அருள் புரி தருமம் போலியை,***

*அற்பின் அத் தலைவனும் அமைய நோக்கினான்.*

***அத் தலைவனும்*** *- அந்த தலைமையான நாயகனாகிய இராமனும்;* ***கற்பினுக்கு அரசினை*** *- கற்பு என்னும் குணநலத்துக்கு அரசாக உள்ளவளை;* ***பெண்மைக் காப்பினை*** *- பெண்மைக் குணங்களுக்கு வாழ்விடமாக உள்ளவளை;* ***பொற்பினுக்கு அழகினை*** *- அழகிற்கு அழகாக விளங்குகின்ற பிராட்டியை;* ***புகழின் வாழ்க்கையை*** *- புகழை இவ்வுலகில் வாழும்படி நிலை நிறுத்திய தேவியை;* ***தன் பிரிந்து அருள்புரி தருமம் போலியை*** *- தனி நாயகனாகிய தன்னைப் பிரிந்து உயிர்களுக்கு நல்லருள் செய்யும் தருமம் போன்ற சீதையை;* ***அற்பின்*** *- அன்பினால்;* ***அமைய நோக்கினான்*** *- நன்றாகப் பார்த்தான்.*

*'பெண்மைக் காப்பினை' என்பதனை "குணங்களை என் கூறுவது? கொம்பினைச் சேர்ந்து அவை உய்யப் பிணங்குவன" (கம்ப. 683) என்ற பாலகாண்டப்பாடல் நன்கு விளக்கும். 'அமைய நோக்கினான்' என்பது ஆசைதீரப் பார்த்தான் என்றவாறாம். நெடுங்காலம் பிரிந்து நின்ற ஏக்கம் தீரப் பார்த்தான் என்பதாம். 'அமைய' என்ற சொல்லாட்சியினால் பின்னர் இராமன் சீதையை நோக்கிக் கூறிய கடிந்துரைகள் உள்ளத்தொடு படாதன என்பதும் உலகோர்க்கு உணர்த்த வந்த உதட்டு வசனங்கள் என்பதும் விளங்கும்.*

## *இராமன் சீதையைக் கடிந்து உரைத்தல்*

***10012. சுணங்கு உறு துணை முலை முன்றில் தூங்கிய***
***அணங்கு உறு நெடுங் கணீர் ஆறு வார்வுற,***
***வணங்கு இயல் மயிலினை, கற்பின் வாழ்வினை,***
***பணம் கிளர் அரவு என எழுந்து, பார்ப்புறா.***

***சுணங்கு உறா துணை முலை முன்றில் தூங்கிய*** *- தேமல் பொருந்திய இரண்டாகிய முலைப் பரப்பில் சோர்ந்த;* ***அணங்கு உறு நெடுங்கண் நீர் ஆறு வார்வுற*** *- வருத்தமிகுதியால் உளதான நீண்ட கண்ணீறாறு ஒழுக;* ***வணங்கு இயல் மயிலினை*** *- வணங்கும் தன்மை உடைய மயில் போல்வாளை;* ***கற்பின் வாழ்வினை*** *- கற்பு நிலைபெற்று வாழக் காரணமானவளாகிய பிராட்டியை;* ***பணம் கிளர் அரவு என எழுந்து பார்ப்புறா*** *- படம் எடுத்துச் சீறுகின்ற பாம்பைப் போலச் சினந்து பார்த்து.*

*இவள் இத்தகையவளாயிருக்கவும் இவனுக்கும் கோபம் வந்தவாறு எவ்வாறு என வியந்ததாம். முன்பில்லாத படத்தை எடுத்துச் சீற்றம் காட்டும் பாம்புபோல என்றது தன்னுள்ளத்தே அன்பு சுரக்கவும் தன்னை ஒரு காரணத்தால் வலிமை செய்து கொண்டு சீறினான் இராமன் என்பது தோன்ற உரைத்ததாம். இங்கு மயிலினை என்று பிராட்டியைக் கூறி, இராமனை அரவு என்றது ஓர் நயம். மயிலே பாம்பைச் சீறுவதாக இருக்கவும் இங்கு மயிலைப் பாம்புசீறியது என்றது ஓர் முரண் நயம் - குற்றமற்ற பிராட்டியைக் குற்றமுள்ளவள் போல இராமன் சீறியது பொருந்தாமையைக் காட்டி நிற்கிறது.*

*10013.* ***'ஊண் திறம் உவந்தனை; ஒழுக்கம் பாழ்பட,***
***மாண்டிலை, முறை திறம்பு அரக்கன் மா நகர்***
***ஆண்டு உறைந்து அடங்கினை; அச்சம் தீர்ந்து,***
***இவண்***
***மீண்டது என் நினைவு? ''எனை விரும்பும்''***
***என்பதோ?***

***ஊண் திறம் உவந்தனை*** - *அரக்கர் ஊரில் உணவு வகைகளை உண்ண விரும்பி நெடுநாள் இருந்தாய்;* ***ஒழுக்கம் பாழ்பட மாண்டிலை*** - *ஒழுக்கம் அழிந்து போகும்படி சாகாமல் உயிருடன் இருந்தாய்;* ***முறை திறம்பு அரக்கன் மாநகர ஆண்டு உறைந்து அடங்கினை*** - *நீதிநெறியும் அறமுறையும் திறம்பிய அரக்கனது இலங்கை நகரில் நெடுநாள் தங்கி அவனுக்கு அடங்கியிருந்தாய்;* ***அச்சம் தீர்ந்து இவண் மீண்டது என் நினைவு?*** - *பயம் இல்லாமல் இவ்விடத்துக்கு இப்பொழுது திரும்பி வந்தது எது கருதி?* ***'எனை விரும்பும்' என்பதோ?*** - *'என்னை இராமன் விரும்புவான்' என்பது உன் நினைவா?*

*சுந்தர காண்டத்தில் அநுமன் சீதை பற்றிச் சொல்லிய வார்த்தைகளாக ''சோகத்தாள் ஆய நங்கை'' ''கண்ணின் நீர்க் கடலில் கண்டேன்'' ''நங்கை ஆர் உயிர் துறப்பதாக எண்ணினன்'' என்பனவற்றை இராமன் கேட்டிருப்பவும் (கம்ப. 6040, 6041, 6045) அவற்றுக்கு மாறாக இங்கு பேசியது வலிந்து செய்ததாகும் என உணரப் போதியதாகும்.*

*10014.* ***'உன்னை மீட்பான்பொருட்டு, உவரி தூர்த்து, ஒளிர்***
***மின்னை மீட்டுறு படை அரக்கர் வேர்அற,***
***பின்னை மீட்டு, உறு பகை கடந்திலேன்; பிழை***
***என்னை மீட்பான்பொருட்டு, இலங்கை எய்தினேன்.***

***உன்னை மீட்பான் பொருட்டு*** - *உன்னைச் சிறையிலிருந்து மீட்பதற்காக;* ***உவரி தூர்த்து*** - *கடலை அணைகட்டி அடைத்து;* ***ஒளிர் மின்னை மீட்டுறு படை அரக்கர் வேர் அற*** - *பிரகாசிக்கின்ற மின்னலைத் தோற்கடிக்கும் படைகளை உடைய அரக்கர்கள் அடியோடு அழியும்படி;* ***பின்னை மீட்டு*** - *பிறகும் மேலும் போர் செய்து மீளச்செய்து;* ***உறு பகை கடந்திலேன்*** - *மிக்க அரக்கர் பகையை வென்றேனில்லை (பின் எதற்காக என்றால்);* ***என்னை பிழை மீட்பான் பொருட்டு இலங்கை எய்தினேன்*** - *என்னைத் தவற்றிலிருந்து நீக்கிக்கொள்ள இலங்கையை அடைந்தேன்.*

*10015.* ***'மருந்தினும் இனிய மன்னுயிரின் வான் தசை***
***அருந்தினையே; நறவு அமைய உண்டியே;***
***இருந்தனையே? இனி எமக்கும் ஏற்பன***

### *விருந்து உளவோ? உரை - வெறுமை நீங்கினாய்!*

***வெறுமை நீங்கினாய்*** *- இல்லாமையை இல்லாதவளே!;* ***மருந்தினும் இனிய*** *- தேவர் அமுதினும் இனியதாகிய;* ***மன் உயிரின் வான்தசை அருந்தினையே*** *- பிராணிகளின் புலால்களைப் புசித்தாயல்லையோ;* ***நறவு அமைய உண்டியே*** *- கள்ளை நன்கு உண்டாயல்லையோ;* ***இனி இருந்தனையே*** *- இவ்வளவான பிறகும் உயிரோடு இருக்கின்றாயல்லையோ;* ***ஏற்பன விருந்து எமக்கும் உளவோ உரை*** *- பொருத்தமான விருந்துணவு எனக்கும் இருக்கின்றனவா? சொல்வாயாக.*

*அரக்கர் உணவு என்பதால் புலாலும் கள்ளும் கூறினானாம். வலிந்து பழிக்க விரும்புவான் ஆதலன் கேலியாக 'எமக்கும் விருந்துளவோ' என்றானாம்.*

***10016. 'கலத்தினின் பிறந்த மா மணியின் காந்துறு***
***நலத்தின் நிற் பிறந்தன நடந்த; நன்மை சால்***
***குலத்தினில் பிறந்திலை; கோள் இல் கீடம்போல்***
***நிலத்தினில் பிறந்தமை நிரப்பினாய்அரோ.***

***கலத்தினின் பிறந்த மாமணியின் காந்துறு நலத்தின் நிற் பிறந்தன நடந்த*** *- ஆபரணங்களிற் பதிக்கப்படும் இரத்தினம் போலப் பிரகாசிக்கின்ற நன்மையோடு பொருந்திய குணம் செயல்களாய் நின்னிடம் முன்பு உள்ளனவாய அவை இப்பொழுது போயின;* ***நன்மை சால் குலத்தினில் பிறந்திலை*** *- மேன்மையுடைய உயர்குலத்தில் பிறந்தவளாய் நடந்து கொள்ளவில்லை;* ***கோள் இல் கீடம் போல் நிலத்தினில் பிறந்தமை நிரப்பினாய்*** *- குறிக்கோள் இல்லாத புழுவைப் போல் மண்ணில் பிறந்தாய் என்பதை நிரூபித்து விட்டாய்.*

*சீதை நிலத்தை உழுதபோது படைச்சாலில் தோன்றியவள் என்பது கருதி இவ்வாறு கூறினான். அரோ அசை.*

***10017. 'பெண்மையும், பெருமையும், பிறப்பும், கற்பு எனும்***
***திண்மையும், ஒழுக்கமும், தெளிவும், சீர்மையும்,***
***உண்மையும், நீ எனும் ஒருத்தி தோன்றலால்,***
***வண்மை இல் மன்னவன் புகழின், மாய்ந்தவால்.***

***பெண்மையும்*** *- பெண்மைக் குணங்களும்;* ***பெருமையும்*** *- பெருமையாகிய குன்றாச் சிறப்பும்;* ***பிறப்பும்*** *- நற்குடிப் பிறப்பும் கற்பு எனும் திண்மையும் ஒழுக்கமும் தெளிவும் சீர்மையும்;* ***உண்மையும்*** *- கற்பு என்கின்ற வலிமையும் சீரிய ஒழுக்கமும், அறிவுத்தெளிவும், மேன்மையும், சத்தியமும் ஆகிய எல்லாம்;* ***நீ எனும்***

***ஒருத்தி தோன்றலால்*** - *சீதை என்னும் நீ ஒருத்தி தோன்றியபடியால்;* ***வண்மை இல் மன்னவன் புகழின் மாய்ந்த*** - *கொடைத் தன்மை இல்லாத அரசனது புகழ் கெடுவது போல அடியோடு அழிந்தன.*

*அநுமன் வார்த்தைகளைக் கொண்டே இராமன் இங்கு இவற்றை அடுக்கிக் கூறினான் என்பதனை முன்வந்த பாடல்களால் (6032, 6035) உணரலாம் - "உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று ஈவார் மேல் நிற்கும் புகழ்" (குறள். 232) ஆதலின் கொடைத்திறம் இல்லாதவனுக்குப் புகழ் இல்லை என்பதாம்.*

***10018. 'அடைப்பர், ஐம் புலன்களை; ஒழுக்கம் ஆணியாச்***
***சடைப் பரம் புனைந்து, ஒளிர் தகையின் மா தவம்***
***படைப்பர்; வந்து இடை ஒரு பழி வந்தால், அது***
***துடைப்பர், தம் உயிரொடும் - குலத்தின் தோகைமார்.***

***குலத்தின் தோகைமார்*** - *நற்குலத்தில் பிறந்த பெண்கள்;* ***ஐம்புலன்களை அடைப்பர்*** - *(தம் கணவரைப் பிரிந்த காலத்து) ஐம்புலன்களையும் பொறிவழிச் செல்லாது தடுத்து நிறுத்துவர்;* ***ஒழுக்கம் ஆணியா*** - *ஒழுக்கத்தைப் பாதுகாத்தலே உறுதியாகக் கொண்டு;* ***சடைப்பரம் புனைந்து*** - *கூந்தலை அலங்கரியாது சடையாகிய சுமையாகக் கொண்டு;* ***ஒளிர் தகையின் மாதவம் படைப்பர்*** - *விளங்கும் அழகோடு பெருந்தவம் செய்வர்;* ***வந்து இடை ஒரு பழி வந்தால்*** - *எதிர்பாராது இடையில் ஒரு பழி வருமானால்;* ***அது தம் உயிரொடும் துடைப்பர்*** - *அப்பழியைப் போக்கத் தம் உயிரையும் போக்கிக் கொள்வர்.*

*நற்குலப் பெண்டிர் இயல்பு உனக்கில்லை என்று இகழ்ந்தானாம். இத்தன்மையுடையாள் பிராட்டி என்பதனை "ஆவியம் துகில் புனைவதொன்றன்றி வேறறியாள்" "செல் அரித்திடவும் ஆண்டு எழாதாள்" (கம்ப. 5079, 5078, 5083) என்னும்*

***10019. 'யாது யான் இயம்புவது? உணர்வை ஈடு அறச்***
***சேதியாநின்றது, உன் ஒழுக்கச் செய்தியால்;***
***சாதியால்; அன்று எனின், தக்கது ஓர் நெறி***
***போதியால்' என்றனன் - புலவர் புந்தியான்.***

***புலவர் புந்தியான்*** - *ஞானியர் மனத்தில் விளங்குபவனாகிய இராமன் (சீதையை நோக்கி);* ***யான் இயம்புவது யாது*** - *நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது?;* ***உன் ஒழுக்கச் செய்தி*** - *உனது நடவடிக்கை;* ***உணர்வை ஈடுஅறச் சேதியா நின்றது*** - *என் உணர்வுகளை அடியோடு வெட்டிவிட்டது;* ***சாதியால்*** - *(உன் ஒழுக்கத்தை) உறுதி செய்து சாதிப்பாயாக;* ***அன்று எனின்*** - *அது முடியாது என்றால்;* ***தக்கது ஓர்நெறி போதியால் என்றனன்*** - *உனக்குத் தகுதியான வழியில் போவாயாக என்று கூறினான்.*

*'சாதி' என்று கூறியதால் பிறர் அறியுமாறு செய்தலே அவன் கருத்து என்பதும் அவனுக்கு அவள் ஒழுக்கத்தின் ஐயமின்று என்பதும் தெள்ளத் தெளிவாக விளங்கும். பலர் முன்னிலையில் சாதிக்கு மாறுரைத்தற்கு அதுவே கருத்து ஆதல் அறிக.*

***10020.* முனைவரும், அமரரும், மற்றும் முற்றிய**
**நினைவு அரு மகளிரும், நிருதர் என்று உளார்**
**எனைவரும், வானரத்து எவரும், வேறு உளார்**
**அனைவரும், வாய் திறந்து, அரற்றினார்அரோ.**

*(அது கேட்டு)* **முனைவரும்** *- முனிவர்களும்;* **அமரரும்** *- தேவர்களும்;* **மற்றும் முற்றிய நினைவு அரு மகளிரும்** *- வேறு சூழ்ந்திருந்த சிறந்த பெண்களும்;* **நிருதர் என்று உளார் எனைவரும்** *- அரக்கர் என்றுள்ள எல்லாரும்;* **வானரத்து எவரும்** *- குரங்கினத்தைச் சேர்ந்தவர்களும்;* **வேறுளார் அனைவரும்** *- மற்றுள்ள எல்லாரும்;* **வாய்திறந்து அரற்றினார்** *- வாய் திறந்து அலறி அழுதார்கள்.*

*இராமன் கடிந்துரை கேட்ட சீதை நிலை*

***10021.* கண் இணை உதிரமும், புனலும் கான்று உக,**
**மண்ணினை நோக்கிய மலரின் வைகுவாள்,**
**புண்ணினைக் கோல் உறுத்தனைய பொம்மலால்**
**உள் நினைப்பு ஒவி நின்று, உயிர்ப்பு வீங்கினாள்.**

**மண்ணினை நோக்கிய மலரின் வைகுவாள்** *- பூவுலகத்தில் அவதாரம் எடுத்து வந்த செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமிப் பிராட்டியாகிய சீதை (அவ்வார்த்தை கேட்டு);* **கண் இணை உதிரமும் புனலும் கான்று உக** *- கண்கள் இரத்தமும் நீரும் கக்கிச் சிந்த;* **புண்ணினைக் கோல் உறுத்தனைய பொம்மலால்** *- புண்ணின்கண் அம்பு செருகியதனால் ஏற்பட்டது போன்ற துன்பம் உடையவளாய்;* **உள் நினைப்பு ஓவி நின்று** *- மனத்தின்கண் நினைப்பு ஒழிந்து அடங்கி;* **உயிர்ப்பு வீங்கினாள்** *- பெருமூச்சு விட்டாள்.*

*இராமனைப் பிரிந்து சிறைப்பட்டது புண். இராமன் கடிந்துரை அப்புண்ணில் கோலிட்டாற்போல் ஆயிற்று.*

***10022.* பருந்து அடர் சுரத்திடை, பருகு நீர் நசை,**
**வருந்து அருந் துயரினால் மாளலுற்ற மான்,**

***இருந் தடம் கண்டு, அதின் எய்துறாவகைப்***
***பெருந் தடை உற்றெனப் பேதுற்றாள்அரோ.***

***பருந்து அடர் சுரத்திடை*** *- பருந்துகள் நெருங்கியுள்ள பாலை நிலத்தில்;* ***பருகு நீர் நசை வருந்து அருந்துயரினால் மாளலுற்ற மான்*** *- உண்ணுதற்குரிய நீர் வேட்கையால் வருந்துகின்ற அரிய துன்பத்தால் இறக்கும் தறுவாயடைந்த மானானது;* ***இருந்தடம் கண்டு*** *- பெரிய நீர் உள்ள தடாகத்தைக் கண்ணாற்கண்டு;* ***அதின் எய்துறா வகை*** *- அந்த தடாகத்தில் இறங்கி நீர் உண்டு தாகம் தணியாதபடி அதிற் செல்லவொண்ணாத வண்ணம்;* ***பெருந்தடை உற்றென*** *- பெரிய தடை நேர்ந்து துயரப்பட்டால் போல;* ***பேதுற்றாள்*** *- மயக்கம் அடைந்தாள்.*

*இராமனைக் காணும் வேட்கை நீர் நசையாகவும் மான் சீதையாகவும் இராமனைக் கண்டது தடாகத்தைக் காணுதல் எனவும், இராமன் கடுமொழி தடைபட்டதாகவும் கொள்க.*

***10023. உற்று நின்று, உலகினை நோக்கி, ஓடு அரி***
***முற்றுறு நெடுங் கண் நீர் ஆலி மொய்த்து உக,***
***'இற்றது போலும், யான் இருந்து பெற்ற பேறு:***

***உற்றதால் இன்று அவம்!' என்று என்று ஓதுவாள்;***
*(பிராட்டி)* ***உலகினை உற்று நின்று நோக்கி*** *- உலகினை நன்கு கவனித்துப் பார்த்து;* ***ஓடு அரி முற்றுறு நெடுங்கண் நீர் ஆலி மொய்த்து உக*** *- சிவந்த கரிய ரேகைகள் நிறைந்த நீண்ட கண்களிலிருந்து வரும் நீர்த்துளி திரண்டு கீழ்விழ;* ***யான் இருந்து பெற்ற பேறு இற்றது போலும்*** *- யான் உயிர் வாழ்ந்திருந்து பெற்ற பாக்கியம் வீணாயிற்றுப் போலும்;* ***இன்று அவம் உற்ற*** *- (என் பாக்கியம்) இன்று வீண் ஆன தன்மையை அடைந்தது;* ***என்று என்று ஓதுவாள்*** *- என்று திரும்பத் திரும்பக் கூறி வருந்துவாளானாள்.*

*'யான் இருந்து பெற்ற பேறு' என்பதனை முன்னர் 7653ஆம் பாடலோடு ஒப்பு நோக்கி உணர்க, ஆல் அசை.*

***10024. 'மாருதி வந்து, எனைக் கண்டு, "வள்ளல் நீ***
***சாருதி ஈண்டு" எனச் சமையச் சொல்லினான்;***
***யாரினும் மேன்மையான் இசைத்தது இல்லையோ,***
***சோரும் என் நிலை? அவன் தூதும் அல்லனோ?***

***மாருதி வந்து எனைக் கண்டு*** *- அனுமன் இலங்கைக்கு வந்து என்னைப் பார்த்து;* ***வள்ளல் நீ சாருதி ஈண்டு என அமையச் சொல்லினான்*** *- வள்ளலே! நீ இலங்கைக்கு வர*

*இருக்கிறாய் என்று பொருந்த உரைத்தான்;* ***யாரினும் மேன்மையான்*** *- எல்லாரினும் மேம்பட்டவனாகிய அவ்வனுமன்;* ***சோரும் என் நிலை*** *- உயிர் சோரும் சிறையிருந்த என் உண்மை நிலையை;* ***இசைத்தது இல்லையோ*** *- உனக்கு எடுத்துச் சொல்ல வில்லையோ;* ***அவன் தூதும் அல்லனோ*** *- அவன் உன்னால் என்னிலை அறிந்து வர அனுப்பப் பெற்ற தூதுவனும் அல்லனோ?*

*இதனால் நீயே தூதாக அனுப்பி என் நிலை தெரிந்து கொண்டு பின்னர் அதற்கு மாறாகக் கடிந்துரைத்தால் எனக்கு எது புகல் என்றாளாம்.*

***10025. 'எத் தவம், எந் நலம், என்ன கற்பு, நான்***
***இத்தனை காலமும் உழந்த ஈது எலாம்***
***பித்து எனல் ஆய், அவம் பிழைத்ததாம் அன்றே,***
***உத்தம! நீ மனத்து உணர்ந்திலாமையால்.***

***உத்தம*** *- ஆடவர் திலகனே!;* ***இத்தனை காலமும் உழந்த எத்தவம் எந்நலம் என்ன கற்பு ஈதெலாம்*** *- இத்தனை நாள்களாக நான் வருந்திச் சிறையிருந்து காத்த எந்தத் தவம் எந்த நன்மை எத்தகைய கற்பு இவைகள் எல்லாம்;* ***நீ மனத்து உணர்ந்திலாமையால்*** *- நீ உன் திருவுளத்து ஏற்றுக் கொண்டு உணராதபடியால்;* ***பித்து எனலாய் அவம் பிழைத்ததாம்*** *- பைத்தியச் செயல் என்னும்படி வீணாகி பழுதுபட்டுப் போயிற்று.*

*அத்தனைக்கும் பயன் இராமனே. ஆதலால் அவனை இழத்தலால் அத்தனையும் பயன் இலதாயின. அன்று, ஏ - அசை.*

***10026. 'பார்க்கு எலாம் பத்தினி; பதுமத்தானுக்கும்***
***பேர்க்கல் ஆம் சிந்தையள் அல்லள், பேதையேன்;***
***ஆர்க்கு எலாம் கண்ணவன், "அன்று" என்றால், அது***
***தீர்க்கல் ஆம் தகையது தெய்வம் தேறுமோ?***

***பார்க்கெலாம் பத்தினி*** *- உலகத்தார்க்கெல்லாம் மிகச் சிறந்த கற்பின் செல்வி;* ***பதுமத்தானுக்கும் பேர்க்கலாம் சிந்தையள் அல்லள்*** *- படைப்புக் கடவுளான பிரமனாலும் மாற்றக் கூடிய மனநிலை உடையவள் அல்லள் (என்று பாராட்டப்படும் தன்மை உடைய);* ***பேதையேன்*** *- பேதமை உடையளாகிய யான்;* ***ஆர்க்கெலாம் கண்ணவன்*** *- உலகில் உள்ளார் அனைவர்க்கும் காட்டும் கண்ணாக விளங்குகின்ற இராமன்;* ***அன்று என்றால்*** *- அப்படிப்பட்டவள் இல்லை என்று சொல்வான் ஆனால்;* ***அது தீர்க்கலாம் தகையது தெய்வம் தேறுமோ*** *- அக்கருத்தைப் போக்கும் தன்மையை வேறொரு தெய்வம் அறியுமோ? (அறியாது என்றபடி.)*

*அவனே எல்லார்க்கும் முதல்வன் ஆதலால் அவன் கருத்தை மாற்றுதல் யார்க்கும் அரிது என்றபடி.*

***10027. 'பங்கயத்து ஒருவனும், விடையின் பாகனும்,***
***சங்கு கைத் தாங்கிய தருமமூர்த்தியும்,***
***அங்கையின் நெல்லிபோல் அனைத்தும் நோக்கினும்,***
***மங்கையர் மன நிலை உணர வல்லரோ?***

***10028. 'ஆதலின், புறத்து இனி யாருக்காக என்***
***கோது அறு தவத்தினைக் கூறிக் காட்டுகேன்?***
***சாதலின் சிறந்தது ஒன்று இல்லை; தக்கதே,***
***வேத! நின் பணி; அது விதியும்' என்றனள்.***

***வேத!*** - வேத வடிவினன் ஆகிய பெருமானே!; ***ஆதலின்*** - உலகியல்பு இவ்வாறு இருத்தலின்; ***இனி புறத்து யாருக்காக என் கோது அறு தவத்தினைக் கூறிக் காட்டுகேன்*** - இனிமேல் வெளியில் வேறு யாருக்காக என் குற்றமற்ற தவத்தை நிரூபித்துக் காட்ட வேண்டும்; ***சாதலின் சிறந்தது ஒன்று இல்லை*** - சாவதைக் காட்டிலும் எனக்கு நற்பயன் தருவது வேறு இல்லை; ***நின் பணி தக்கதே*** - நீ இட்ட கட்டளையும் அதுவே, எனக்குத் தகுதியானதே; ***விதியும் அது*** - என் விதியும் அதுவே; என்றனள் - .

*இப்படலத்து 68ஆம் பாடலில் இராமன் கூற்றாக 'சாதியால்' என்று வந்த வார்த்தைக்கு 'சாவாயாக' என்று பொருள் கொண்டு, 'நின்பணி தக்கதே' என்றாளாகக் கொள்ளலாம். அங்கே 'சாதி' என்பது 'சான்று கொண்டு நிரூபி' என்று பொருள்பட்டது. சாதித்தலால் வேறு பயனில்லை என்றபொழுது சாதலே தக்கது என்றவாறாயிற்று.*

## *சீதை இலக்குவன் அமைத்த தீயை அணுகுதல்*

***10029. இளையவன் தனை அழைத்து, 'இடுதி, தீ' என***
***வளை ஒலி முன் கையாள் வாயின் கூறினாள்;***
***உளைவுறு மனத்தவன் உலகம் யாவுக்கும்***
***களைகணைத் தொழ, அவன் கண்ணின் கூறினான்.***

***வளை ஒலி முன்கையாள்*** - ஒலிக்கின்ற வளையல் அணிந்த முன்கையை உடைய சீதை; ***இளையவன் தனை அழைத்து தீ இடுக என வாயின் கூறினாள்*** - இலக்குவனைக் கூப்பிட்டு நெருப்பை உண்டாக்கி அமைத்துத் தருக என்று வாயாற் சொன்னாள், அது கேட்ட; ***உளைவு உறு மனத்தவன்*** - வருந்துகின்ற மனம் உடையவனாகிய இலக்குவன்; ***உலகம் யாவுக்கும் களை கணைத் தொழ*** - எல்லா உலகங்களுக்கும் துன்ப நீக்கத்திற்குப் பற்றுக் கோடாக உள்ள தமயனாகிய இராமபிரானை (இது

*ஏற்கத் தக்கதோ என்னும் குறிப்பினால்) வணங்க;* ***அவன்*** *- அந்த இராமன்;* ***கண்ணின் கூறினான்*** *- தன் கண்ணின் குறிப்பினாலேயே (செய்க என்று) நெருப்பிடக் கூறினான்.*

***10030. ஏங்கிய பொருமலின் இழி கண்ணீரினன்,***
***வாங்கிய உயிரினன் அனைய மைந்தனும்,***
***ஆங்கு எரி விதி முறை அமைவித்தான்; அதன்***
***பாங்குற நடந்தனள், பதுமப் போதினாள்.***

***ஏங்கிய பொருமலின்*** *- அழுகின்ற விம்மலால்;* ***இழி கண்ணீரினன்*** *- இறங்குகின்ற கண்ண நீரினை உடையனாய்;* ***வாங்கிய உயிரினன் அனைய மைந்தனும்*** *- போய்விட்ட உயிரை உடையவனை ஒத்த இளைய பெருமாளும்;* ***ஆங்கு*** *- அவ்விடத்தே; எரி - நெருப்பை;* ***விதிமுறை அமைவித்தான்*** *- முறைப்படி உண்டாக்கித் தந்தான்;* ***பதுமப் போதினாள்*** *- தாமரைத் திருமகளாய பிராட்டி;* ***அதன் பாங்குற நடந்தனள்*** *- அந்த நெருப்பின் அருகாமையில் பொருந்த நடந்து சென்று நெருங்கினாள்.*

*இச்செயலில் இலக்குவனுக்குச் சிறிதும் விருப்பம் இல்லை என்பது அவன் நிலையாலும் செயலாலும் விளங்கும். இவ்வாறாகவும் ஆரண்யத்தில் இலக்குவனை வைது புறம்போக்கிய சீதைக்குப் பாடம் கற்பிக்கவே இந்த நாடகம் நிகழ்ந்தது என்பார் கூற்று கேலிக் கூத்தாகவே முடியும். அன்றியும் மனத்து வைத்து வஞ்சம் தீர்ப்பது என்பது இராமனது பண்பு நலத்துக்குச் சிறிதும் ஒவ்வாது என்பதும் உணர்க.*

***10031. தீயிடை, அருகுறச் சென்று, தேவர்க்கும்***
***தாய் தனிக் குறுகலும், தரிக்கிலாமையால்,***
***வாய் திறந்து அரற்றின - மறைகள் நான்கொடும்,***
***ஒய்வு இல் நல் அறமும், மற்று உயிர்கள் யாவையும்.***

**தேவர்க்கும்** *- தேவர்க்கெல்லாம் அன்னையாகிய பிராட்டி;* ***தீயிடை அருகுறச் சென்று தனிக் குறுகலும்*** *- நெருப்பின் இடையே அருகாமையில் சென்று தனியாகச் சேர்ந்த அளவில்;* ***தரிக்கிலாமையால்*** *- அக் கொடுமையைப் பார்க்கவே சகியாமையால்;* ***மறைகள் நான்கொடும் ஒய்வு இல் நல் அறமும் உயிர்கள் யாவையும் வாய்திறந்து அரற்றின*** *- நால் வேதமும் ஒய்விலாத தரும தேவதையும் எல்லா உயிர்களும் வாயைத் திறந்து கதறி அழுதன.*

***10032. வலம்வரும் அளவையில் மறுகி, வான் முதல்***
***உலகமும் உயிர்களும் ஒலமிட்டன;***

***அலம்வரல் உற்றன; அலறி, 'ஐய! இச்***
***சலம்இது தக்கிலது' என்னச் சாற்றின.***

***வலம் வரும் அளவையில்*** - *தீயைச் சுற்றி வரும் பொழுது;* ***வான் முதல் உலகமும் உயிர்களும் மறுதி ஓலமிட்டன*** - *வான், மண், பாதலம் முதலாகிய உலகங்களும் அங்கங்குள்ள உயிர்களும் மனம் மயங்கி கூக்குரலிட்டன;* ***அலம் வரல் உற்றன*** - *சுழற்சி அடைந்தன;* ***அலறி*** - *கதறி;* ***ஐய!*** - *இராமனே!;* ***இச்சலம் இது தக்கின்று என்னச் சாற்றின*** - *இத்தன்மையதான இத்தீமை இவளுக்குத் தகுதியுடையதன்று என்று கூறின.*

*'தக்கின்று' என்பதனை உனக்குத் தக்கின்று என்னும் பொருள்படக் கூறினும் அமையும். சலம் - கோபம் எனலும் ஆம்.*

***10033. இந்திரன் தேவியர் முதல ஏழையர்,***
***அந்தர வானின்நின்று அரற்றுகின்றவர்,***
***செந் தளிர்க் கைகளால் சேயரிப் பெருஞ்***
***சுந்தரக் கண்களை எற்றித் துள்ளினார்.***

***இந்திரன் தேவியர் முதல ஏழையர்*** - *இந்திராணி முதலிய பெண்கள்;* ***அந்தர வானின் நின்று அரற்று கின்றவர்*** - *ஆகாய வெளியில் நின்று கூக்குரலிடுபவர்;* ***சேயரிப் பெருஞ் சுந்தரக் கண்களை*** - *சிவந்த கோடுகள் பொருந்திய பெரிய அழகிய தமது கண்களை;* ***செந்தளிர்க் கைகளால் எற்றித் துள்ளினார்*** - *சிவந்த தளிர் போன்ற தம்கரங்களால் அடித்துக் கொண்டு துடித்தார்கள்.*

*கைகளால் முகத்தில் அறைந்து கொள்ளுதல் அவலத்தில் நிகழும் மெய்ப்பாடு.*

***10034. நடுங்கினர், நான்முகன் முதல நாயகர்;***
***படம் குறைந்தது, படி சுமந்த பாம்பு; வாய்***
***விடம் பரந்துளது என, வெதும்பிற்றால் உலகு;***
***இடம் திரிந்தன, சுடர்; கடல்கள் ஏங்கின.***

***நான்முகன் முதல நாயகர்*** - *பிரமன் முதலிய தலைமைத் தேவர்கள்;* ***நடுங்கினர்*** - *அச்சமுற்றார்கள்;* ***படி சுமந்த பாம்பு படம் குறைந்தது*** - *உலகைச் சுமக்கும் ஆதிசேடனாகிய பாம்பு படம் ஒடுங்கிற்று;* ***வாய் விடம் பரந்துளது என உலகு வெதும்பிற்றால்*** - *அப்பாம்பின் விடம் பரவியது என்று சொல்லும்படி உலகம் வெதும்பியது;* ***சுடர் இடம் திரிந்தன*** - *சூரிய சந்திரர்கள் உதிக்கும் இடம் மாறினர்;* ***கடல்கள் ஏங்கின-.***

*சீதை தீயிடைப் புகுதல்*

***10035. கனத்தினால் கடந்த பூண் முலைய கைவளை,***
***'மனத்தினால், வாக்கினால், மறு உற்றேன்எனின்,***
***சினத்தினால் சுடுதியால், தீச் செல்வா!' என்றாள்;***
***புனத் துழாய்க் கணவற்கும் வணக்கம் போக்கினாள்.***

***கனத்தினால் கடந்த பூண் முலைய கைவளை*** *- பருத்து அளவின் மிகுந்த ஆபரணங்கள் அணிந்த தனங்களை உடைய வளைக்கையளாகிய பிராட்டி (அக்கினியை நோக்கி);* ***தீச் செல்வா!*** *- அக்கினி தேவனே!;* ***மனத்தினால் வாக்கினால் மறு உற்றேன் எனின் சினத்தினால் சுடுதியால் என்றாள்*** *- நான் மனத்தாலும் சொல்லாலும் களங்கம் உற்றவளானால் கோபத்தால் என்னைச் சுட்டெரிப்பாயாக என்று கூறினாள்;* ***புனத்துழாய்க் கணவற்கும் வணக்கம் போக்கினாள்*** *- காட்டில் தோன்றும் துளசியை அணிந்த தன் நாயகனாகிய இராமனுக்கும் வணக்கம் செய்தாள்.*

*மெய் மனம் வாக்கின் வழியதாதலின் மனம் வாக்குக் கூறவே மெய்யால் என்பது கூறாமலே முடிந்தது. இதனை உபலட்சணம் என்பர்.*

***10036. நீந்த அரும் புனலிடை நிவந்த தாமரை***
***ஏய்ந்த தன் கோயிலே எய்துவாள் எனப்***
***பாய்ந்தனள்; பாய்தலும், பாலின் பஞ்சு எனத்***
***தீய்ந்தது அவ் எரி, அவள் கற்பின் தீயினால்.***

***நீந்த அரும் புனலிடை நிவந்த தாமரை*** *- நீந்துதற்கரிய வெள்ள நீரிலே உயர்ந்து மேல் தோன்றும் தாமரை மலராகிய;* ***ஏய்ந்த தன் கோயிலே எய்துவாள் என*** *- பொருந்திய தன் வாழிடத்தையே அடைவாள் போல;* ***பாய்ந்தனள்*** *- (நெருப்பில்) பாய்ந்தாள்;* ***பாய்தலும் பாலின் பஞ்சு என அவ் எரி அவள் கற்பின் தீயினால் தீய்ந்தது*** *- பாய்ந்தவுடன் பால் போன்ற வெண்மையான பஞ்சு போல அந்த நெருப்பு பிராட்டியின் கற்பு என்னும் நெருப்பால் தீய்ந்து போனது.*

*சீதை எரியிடை விளங்குதல்*

***10037. அழுந்தின நங்கையை அங்கையால் சுமந்து***
***எழுந்தனன் - அங்கி, வெந்து எரியும் மேனியான்,***
***தொழும் கரத் துணையினன், சுருதி ஞானத்தின்***

**கொழுந்தினைப் பூசலிட்டு அரற்றும் கொள்கையான்.**

**வெந்து எரியும் மேனியான் அங்கி** - *கற்பு நெருப்பால் தீய்ந்த உடம்பினனாய அக்னிதேவன்;* **அழுந்தின நங்கையை** - *தன்னில் பாய்ந்து புகுந்த சீதையை;* **அங்கையால் சுமந்து** - *தன் உள்ளங்கையால் தாங்கி;* **எழுந்தனன்** - *மேல் வந்தான்;* **தொழும் கரத்துணையினன்** - *(இராமனைத்) தொழுகின்ற இணைக் கரங்களை உடையனாய்;* **சுருதி ஞானத்தின் கொழுந்தினை** - *வேதங்களால் உணர்த்தப்படும் மெய்ஞ்ஞானத்தின் முடிபொருளாக விளங்கும் இராம பிரானைப் பார்த்து;* **பூசல் இட்டு அரற்றும் கொள்கையான்** - *அடைக்கலம் வேண்டி ஒலிசெய்து கதறுகின்ற தன்மையன் ஆயினன்.*

***10038. ஊடின சீற்றத்தால் உதித்த வேர்களும்***
***வாடிய இல்லையால்; உணர்த்துமாறு உண்டோ?***
***பாடிய வண்டொடும், பனித்த தேனொடும்***
***சூடின மலர்கள் நீர் தோய்த்த போன்றவால்.***

**ஊடின சீற்றத்தால்** - *தன் கணவன் தன்பால் மாறுபட்டு ஊடிய கோபத்தால்;* **உதித்த வேர்களும்** - *தன்னிடம் உண்டாகிய வியர்வைத் துளிகளும்;* **வாடிய இல்லை** - *உலரவில்லை; உணர்த்துமாறு உண்டோ? - அவளது கற்பின் சிறப்பை உணர்த்த வேறு ஒன்று உண்டோ?;* **சூடின மலர்கள் பாடிய வண்டொடும் பனித்த தேனொடும் நீர் தோய்த்த போன்ற** - *அவள் அணிந்திருந்த பூக்கள் தம்பால் பாடித் திரிந்த தேனீக்களோடும் துளித்த தேனொடும் நீரில் தோய்த்து எடுத்தாற் போலக் குளிர்ந்தன.*

***10039. திரிந்தன உலகமும் செவ்வை நின்றன;***
***பரிந்தவர் உயிர் எலாம் பயம் தவிர்ந்தன;***
***அருந்ததி முதலிய மகளிர் ஆடுதல்***
***புரிந்தனர், நாணமும் பொறையும் நீங்கினார்.***

**திரிந்தன உலகமும் செவ்வை நின்றன** - *(முன்பு பிராட்டியின் துன்பம் கண்டு) சுழன்றனவாகிய உலகங்களும் (இப்போது அது நீங்கியதால்) நேரே நின்றன;* **பரிந்தவர் உயிர் எலாம் பயம் தவிர்ந்தன** - *(என்ன நிகழுமோ என்று பயந்து) வருந்தியவர்களது உயிர் எல்லாம் இப்போது பயம் நீங்கப் பெற்றன;* **அருந்ததி முதலிய மகளிர்** - *அருந்ததி முதலான கற்பின் செல்வியர்;* **நாணமும் பொறையும் நீங்கினார் ஆடுதல் புரிந்தனர்** - *நாணமும் அடக்கமும் நீங்கப் பெற்றவர்களாய் மகிழ்ச்சியால் ஆடுதல் செய்தனர்.*

*தீக் கடவுள் முறையீடு; இராமன் வினா*

***10040. 'கனிந்து உயர் கற்பு எனும் கடவுள் - தீயினால்,***
***நினைந்திலை, என் வலி நீக்கினாய்' என,***
***அநிந்தனை அங்கி, 'நீ அயர்வு இல் என்னையும்***
***முனிந்தனை ஆம்' என முறையிட்டான்அரோ.***

***அங்கி*** *- தீக்கடவுள்;* ***அநிந்தனை*** *- பழிப்புக்கிடமில்லாவதனான இராமபிரானை நோக்கி;* ***நீ நினைந்திலை*** *- (இவளது கற்பு கூடும் தன்மையது என்பதனை) நீ நினையாதொழிந்தாய்;* ***கனிந்து உயர் கற்பு எனும் கடவுள் தீயினால் என் வலி நீக்கினாய் என*** *- முற்ற உயர்ந்த சீதாதேவியின் கற்பு என்னும் தெய்வ நெருப்பால் என் வலிமையைப் போக்கிவிட்டாய் எனக் கூறி;* ***அயர்வு இல் என்னையும் முனிந்தனை ஆம் என முறையிட்டான்*** *- சோர்வில்லாத என்னையும் நீ கோபித்தாய் போலும் என்பதாக முறையிட்டான்.*

*'என்னையும்' என்ற உம்மை இவளையன்றி எனப் பொருள் தருதலின் இறந்தது தழீஇய எச்சவும்மையாம். அரோ - அசை.*

***10041. இன்னது ஓர் காலையில், இராமன், 'யாரை நீ?***
***என்னை நீ இயம்பியது, எரியுள் தோன்றி? இப்***
***புன்மை சால் ஒருத்தியைச் சுடாது போற்றினாய்***

***அன்னது ஆர் சொல்ல? ஈது அறைதியால்' என்றான்.***

***இராமன்*** *-;* ***இன்னது ஓர் காலையில்*** *- நெருப்புத் தேவன் முறையிட்ட போது;* ***நீ யாரை, எரியுள் தோன்றி நீ இயம்பியது என்னை?*** *- நீ யார்? நெருப்பினுள்ளிருந்து வந்து நீ சொல்லியது என்ன?;* ***இப்புன்மை சால் ஒருத்தியைச் சுடாது போற்றினாய், அன்னது ஆர் சொல்ல*** *- இப்பழிக்கிடமாகிய ஒரு பெண்ணை எரிக்காமல் காப்பாற்றினாய், அவ்வாறு காப்பாற்றியது யார் சொல்லியதால்;* ***ஈது அறைதி*** *- இதற்குப் பதில் சொல்;* ***என்றான்*** *-.*

*ஆல், அசை*

*தீக்கடவுள் மறுமொழி*

***10042. 'அங்கி, யான்; என்னை இவ் அன்னை கற்பு எனும்***
***பொங்கு வெந் தீச் சுடப் பொறுக்கிலாமையால்,***
***இங்கு அணைந்தேன்; உறும் இயற்கை நோக்கியும்,***
***சங்கியாநிற்றியோ, எவர்க்கும் சான்றுளாய்?***

***எவர்க்கும் சான்றுளாய்!*** - *எல்லார்க்கும் அகத்தே நின்று சாட்சியாக இருக்கின்ற பரம்பொருளே!;* ***யான் அங்கி*** - *நான் தீக்கடவுள்;* ***என்னை இவ் அன்னை கற்பு எனும் பொங்கு வெந்தீ சுட பொறுக்கிலாமையால் இங்கு அணைந்தேன்*** - *என்னை இந்த மாதாவினது கற்பு என்று சொல்லப்படும் மேலெழுந்த கொடு நெருப்பு சுட அதனைத் தாங்க முடியாமையால் நெருப்பில் நின்று எழுந்து இங்கு வந்தேன்;* ***உறும் இயற்கை நோக்கியும்*** - *எனக்கு உண்டாகிய தன்மையைப் பார்த்த பிறகும்;* ***சங்கியா நிற்றியோ ?*** - *இவளைச் சந்தேகிக்கிறாயா? (என்னையே சந்தேகிக்கிறாயா? எனலும் ஆம்.)*

*உள்குவார் உள்ளத்திலிருந்து அவரவர் செய்யும் எல்லாச் செயல்களுக்கும் சாட்சியாய்க் கண்டு கொண்டுள்ளான் இறைவன் ஆதலின் அவன் அறியாதது ஏதும் இல்லை என்றவாறாம். அது கருதி 'எவர்க்கும் சான்றுளாய்' என்றார்.*

***10043. 'வேட்பதும், மங்கையர் விலங்கினார்எனின்***
***கேட்பதும், பல் பொருட்கு ஐயம் கேடு அற***
***மீட்பதும், என்வயின் என்னும் மெய்ப்பொருள் -***
***வாள் - பெருந் தோளினாய்! - மறைகள் சொல்லுமால்.***

***வாள் பெருந்தோளினாய்*** - *ஒளி படைத்த பெரிய தோள்களை உடைய இராமனே;* ***மங்கையர் வேட்பதும்*** - *பெண்களை மணம் செய்து கொள்வதும்;* ***விலங்கினார் எனின் கேட்பதும்*** - *அப்பெண்கள் இல்லற ஒழுக்கில் மாறுபட்டார் எனக் கருதின் என் மூலமாக விசாரிப்பதும்;* ***பல பொருட்கு ஐயம் கேடு உற மீட்பதும்*** - *எந்த ஒரு பொருளிடமும் ஏற்படும் சந்தேகத்தை நீக்கித் தெளிவு பிறப்பித்துக் கொள்வதும்;* ***என்வயின்*** - *அக்கினியாகிய என் மூலமாகவே;* ***என்னும் மெய்ப் பொருள் மறைகள் சொல்லும்*** - *என்கின்ற உண்மையை வேதங்கள் எடுத்துக் கூறும்.*

*ஆல், அசை*

***10044. 'ஐயுறு பொருள்களை ஆசு இல் மாசு ஓரீஇக்***
***கையுறு நெல்லி அம் கனியின் காட்டும் என்***
***மெய்யுறு கட்டுரை கேட்டும், மீட்டியோ ? -***
***பொய் உறா மாருதி உரையும் போற்றலாய்!***

***பொய் உறா மாருதி உரையும் போற்றலாய்*** - *வாய்மையில் சிறிதும் தவறாத அனுமனது வார்த்தையையும் கருதிப் பாதுகாவாதவனே!;* ***ஐயுறு பொருள்களை ஆசு இல் மாசு ஓரீஇ*** - *சந்தேகித்த பொருள்களின் இடமாக குற்றம் நீக்கி அச்சந்தேகத்தைப் போகச் செய்து;* ***கைஉறு நெல்லியம் கனியின் காட்டும் என் மெய் உரை கேட்டும் மீட்டியோ*** - *உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெள்ளத் தெளிவாகக் காட்டுகிற என்னுடைய சத்திய வார்த்தையைக் கேட்ட பிறகும் திரும்பச் சேர்த்துக் கொள்ளாயோ.*

*10045.* ***'தேவரும் முனிவரும், திரிவ நிற்பவும்,***
***மூவகை உலகமும், கண்கள் மோதி நின்று,***
***''ஆ!'' எனல் கேட்கிலை; அறத்தை நீக்கி, வேறு***
***ஏவம் என்று ஒரு பொருள் யாண்டுக் கொண்டியோ?***

***தேவரும் முனிவரும் திரிவ நிற்பவும் மூவகை உலகமும்*** - *தேவர்களும் முனிவர்களும் சர அசரங்களாகிய மூவகை உலகப் பொருள்களும் உயிர்களும்;* ***கண்கள் மோதி நின்று 'ஆ' எனல் கேட்கிலை*** - *கண்களை அடித்துக் கொண்டு நின்று 'ஆ' என்று இரங்குகின்ற சொல் உன் காதில் விழவில்லையா?;* ***அறத்தை நீக்கி ஏவம் என்று ஒரு பொருள் யாண்டுக் கொண்டி*** - *தரும வடிவாகிய நீ அறத்தைப் போக்கி பாவம் என்ற ஒரு பொருளை எங்கிருந்து பெற்றாய்?*

*ஓகாரம் ஐயப்பொருள். ஒளியின்முன் இருள் நில்லாமை போல ''அறத்தின் முன் நில்லாதாம் பாவம்'' ஆதலின் தரும வடிவினனான உன்னிடம் பாவம் எப்படி வந்தது என்று இராமனை அக்கினி வியந்து கேட்டான். ஏவம் - பாவம்.*

*10046.* ***'பெய்யுமே மழை? புவி பிளப்பது அன்றியே***
***செய்யுமே, பொறை? அறம் நெறியில் செல்லுமே?***
***உய்யுமே உலகு, இவள் உணர்வு சீறினால்?***
***வய்யுமேல், மலர்மிசை அயனும் மாயுமே.'***

***இவள் உணர்வு சீறினால்*** - *தெய்வக் கற்பினளாய இவள் உணர்வு நிலை திரிந்து கோபம் அடைந்தால்;* ***மழை பெய்யுமே*** - *மழை பொழியுமா?* ***புவி பிளப்பது அன்றியே பொறை செய்யுமே?*** - *பூமி வெடிப்பது அல்லாமல் பொருளைத் தாங்குதல் செய்யுமா?;* ***அறம் நெறியில் செல்லுமே*** - *அறம் நேரான வழியில் நடக்குமா?;* ***உலகு உய்யுமே*** - *உலகம் பிழைக்குமா?; வய்யுமேல் - (இவள்) சபித்தால்;* ***மலர்மிசை அயனும் மாயும்*** - *மலர்மேல் வீற்றிருக்கும் நான்முகனும் இறந்து படுவான்.*

*கற்புடை மகளிரின் ஆற்றலுக்கு இயற்கை அடங்கி நிற்றல் கூறியவாறு.*

## *சீதையை இராமன் ஏற்றுக் கொள்ளல்*

*10047.* ***பாடு உறு பல் மொழி இனைய பன்னி நின்று,***
***ஆடுறு தேவரொடு உலகம் ஆர்த்து எழ,***
***சூடு உறும் மேனிய அலரி, தோகையை***

***மாடு உறக் கொணர்ந்தனன்; வள்ளல் கூறுவான்.***

***சூடு உறும் மேனிய அலரி*** - *கற்பனலால் வெந்த உடம்பினை உடைய தீக்கடவுள்;* ***பாடு உறு பல் மொழி இனைய பன்னி நின்று*** - *பெருமை பொருந்திய பல இத்தகைய வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லி;* ***ஆடுறு தேவரொடு உலகம் ஆர்த்து எழ*** - *களிப்பினால் ஆடுகின்ற தேவர்களொடு உலகமும் ஆரவாரித்து உடன் வர;* ***தோகையை*** - *மயில் அன்னாளாய சீதையை;* ***மாடு உறக் கொணர்ந்தனன்*** - *(இராமன்) அருகில் கொண்டு வந்தான்;* ***வள்ளல்*** - *(அது கண்ட) இராமபிரான்;* ***கூறுவான்*** - *சொல்வானாயினன்.*

***10048. 'அழிப்பு இல சான்று நீ, உலகுக்கு; ஆதலால்***
***இழிப்பு இல சொல்லி, நீ இவளை, ''யாதும் ஓர்***
***பழிப்பு இலள்'' என்றனை; பழியும் இன்று; இனிக்***
***கழிப்பிலள்' என்றனன் - கருணை உள்ளத்தான்.***

***கருணை உள்ளத்தான்*** - *அருள் உள்ளம் வாய்ந்தவனாகிய இராமன்;* ***(தீக்கடவுளை நோக்கி) நீ உலகுக்கு அழிப்பு இல சான்று*** - *நீ இந்த உலகத்துக்கு பிறிதொன்றால் நீக்க முடியாத சாட்சி ஆவாய்; ஆதலால்-;* ***நீ இவளை இழிப்பு இல சொல்லி ''யாதும் ஓர் பழிப்பு இவள் என்றனை*** - *நீ இவளை இகழ்ச்சிக்கு இடம் இல்லாத உயர்ந்த வார்த்தைகளாற் பாராட்டி யாதொரு பழிப்புக்கும் இடம் இல்லாதவள் என்று உறுதி கூறினை;* ***பழியும் இன்று*** - *இவளிடத்து பழியும் இல்லை;* ***(எனவே) 'இனி கழிப்பு இலள்' என்றனன்*** - *'இனி (என்னால் இவள் நீக்கத் தக்கவள் அல்லள்' என்று கூறினான்.*

**கலிநிலைத்துறை**

*பிரமன் இராமனது பரம்பொருள் தன்மை கூறல்*

***10049. உணர்த்துவாய் உண்மை ஒழிவு இன்று, காலம் வந்துளதால்,***
***புணர்த்தும் மாயையில் பொதுவுற நின்று, அவை உணரா***
***இணர்த் துழாய்த் தொங்கல் இராமற்கு' என்று இமையவர் இசைப்ப,***
***தணப்பு இல் தாமரைச் சதுமுகன் உரைசெயச் சமைந்தான்.***

***இமையவர்*** - *தேவர்கள்;* ***(பிரமனிடம்) புணர்த்தும் மாயையில் பொதுவுற நின்று அவை உணரா இணர்த்துழாய்த் தொங்கல் இராமற்கு*** - *தானே தனது நினைவால் இவர்களிடத்தே கூட்டுகின்ற மாயையில் மற்றவைகளைப் போலவே தானும் ஒன்றித்து நின்று தன் பரம்பொருள் தன்மையை உணரா திருக்கின்ற பூங்கொத்தாகிய துளசி மாலையை அணிந்துள்ள இராமனுக்கு;* ***உண்மை ஒழிவு இன்று உணர்த்துவாய்*** - *இராமனுக்கு அவனது உண்மை நிலையை சிறிதும் விடுபடாமல் உணர்த்து வாயாக;* ***காலம் வந்துளது*** - *அதற்குரிய காலம் வந்திருக்கிறது;* ***என்று இசைப்ப*** - *என்று கூற;* ***தணப்பு இல் தாமரைச் சதுமுகன் உரைசெயச் சமைந்தான்*** - *பிரியாத திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றிய நான்முகன் சொல்லத் தொடங்கினான்.*

*திருமாலின் சங்கற்ப கற்பிதம் மாயை. சீவர்களை மயக்குகிறது. தானும் அவதார சீலத்தில் அம்மாயையில் மறைந்து தன்னை உணராதவனாக இருக்கிறான் அம் ஆமுதல்வன் என்பது இதனுள் கூறப்பட்டது. நாகபாசப் படலத்துக் கருடன் துதியை இதனுடன் ஒத்துக் காண்க.*

***10050. 'மன்னர் தொல் குலத்து அவதரித்தனை; ஒரு மனிதன்***
***என்ன உன்னலை உன்னை, நீ; இராம! கேள், இதனை;***
***சொன்ன நான்மறைத் துணிவினில் துணிந்த மெய்த் துணிவு***
***நின் அலாது இல்லை; நின்னின் வேறு உளது இலை - நெடியோய்!***

***நெடியோய்*** - *(நிலம் கடந்த) நெடியவனாய திருமாலே!;* ***இராம!*** - *இராமனே!;* ***நீ இதனை கேள்*** - *நீ நான் சொல்கிற இந்த உரையைக் கேட்பாயாக;* ***மன்னர் தொல் குலத்து அவதரித்தனை*** - *அரசர்களது பழமையான சூரிய குலத்தில் தசரத குமாரனாகத் தோன்றினாய்;* ***ஒரு மனிதன் என்ன உன்னை உன்னலை*** - *ஒரு மனிதனாக உன்னை நீ கருதற்க;* ***சொன்ன நான் மறைத் துணிவினில் துணிந்த மெய்த் துணிவு நின் அலாது இல்லை*** - *எல்லாவற்றையும் எடுத்துச் சொன்ன நான்கு வேதங்களின் முடிந்த முடிபாகிய (வேத சிரஸ் எனப்படும்) உபநிடத முடிவில் சொல்லப் படும் முடிபொருள் நின்னை அல்லாமல் வேறு இல்லை;* ***நின்னின் வேறு உளது இலை*** - *நின்னை அல்லாமல் நின்னிடத்திருந்து நீங்கி வேறு பொருள்கள் உளது என்னும் இருப்பினைப் பெறுவதும் இல்லை.*

*நீயே பரம்பொருள்; நீயே எல்லாப் பொருளும்; உன்னையல்லாது வேறு பொருள் எதுவும் இல்லை எனவும் கூறலாம்.*

***10051. 'பகுதி என்று உளது, யாதினும் பழையது, பயந்த***
***விகுதியால் வந்த விளைவு, மற்று அதற்குமேல் நின்ற***

***புகுதி, யாவர்க்கும் அரிய அப் புருடனும், நீ; இம்***
***மிகுதி உன் பெரு மாயையினால் வந்த வீக்கம்.***

***யாதினும் பழையது பகுதி என்று உளது*** - *எல்லாவற்றினும் பழைமை யானதாகிய மூலப்பிருகிருதி என்று உள்ள தத்துவமும்;* ***பயந்த*** - *அம் மூலப் பிருகிருதியால் தரப்பட்ட;* ***விகுதியால் வந்த விளைவு*** - *விகாரத்தால் உண்டான காரியங்களாகிய தத்துவங்களும்;* ***மற்று அதற்குமேல் நின்ற பகுதி யாவர்க்கும் அரிய அப்புருடனும்*** - *அந்தத் தத்துவங்களின் வேறாகக் கண்டுணர்தற்கரியதாய் மேற்பட்டு நின்ற ஜீவாத்மாவும்;* ***நீ*** - *நீயேயாவாய்;* ***இம்மிகுதி*** - *இந்த உலகத் தோற்றம் எல்லாம்;* ***உன் பெரு மாயையினால் வந்த வீக்கம்*** - *உனது பெரிய சங்கற்பம் (நினைவு) என்று சொல்லப்படுகிற மாயையால் உண்டான பரப்பாகும்.*

*சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற தன் மாத்திரைகள் ஐந்து, மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஞானேந்திரியங்கள் ஐந்து, வாக்கு வாதம் பாணி பாயுரு உபத்தம் என்ற கன்ம இந்திரியங்கள ஐந்து, நீலம் நீர் தீ காற்று ஆகாயம் என்ற பூதங்கள் ஐந்து, மகத் அகங்காரம் மனம். பிருகிருதி என்ற நான்கும் கூடி தத்துவங்கள் 24. புருடன் என்கிற சீவாத்மா 25 பரம்பொருள் 26. இருபத்தாறாவது தத்துவமாய பரம்பொருளாகிய பிரம்மத்தின் சங்கற்பமே தத்துவங்கள் அனைத்தும் என்றவாறாகும். ஆகவே நீ இலாது வேறு இலை; நின்னின் வேறு இலை என்பதையே மீண்டும் உணர்த்தியவாறாகும்.*

***10052. 'முன்பு பின்பு இரு புடை எனும் குணிப்பு அரு முறைமைத்***
***தன் பெருந் தன்மை தான் தெரி மறைகளின் தலைகள்***
***''மன் பெரும் பரமார்த்தம்'' என்று உரைக்கின்ற மாற்றம்,***
***அன்ப! நின்னை அல்லால், மற்று இங்கு யாரையும் அறையா.***

***அன்ப!*** - *எவ்வுயிர்களிடத்தும் அன்புள்ளவனே!;* ***முன்பு பின்பு இருபுடை எனும் குணிப்பு அரு முறைமைத் தன் பெருந்தன்மை தான் தெரி மறைகளின் தலைகள்*** - *தோற்றம், இறுதி என்கின்ற இருபக்கத்தையும் இன்னது என்று அளவிட்டறிதற்கரிய முறைமை யுடையதும் தன் அளப்பரும் தன்மையைத் தானே அறிய வல்லதும் ஆகிய வேதங்களின் முடிபொருள் காட்டும் வேத சிரஸ் எனப்படும் உபநிடதங்கள்;* ***''மன் பெரும் பரமார்த்தம் என்று உரைக்கின்ற மாற்றம்*** - *நிலை பெற்ற மிக மேலான பரம்பொருள் என்று குறிப்பிடுகின்ற சொல்;* ***நின்னை யல்லால் மற்று இங்கு யாரையும் அறையா*** - *(இராமனாக அவதரித்துள்ள) திருமாலாகிய நின்னை அல்லாமல் வேறாக இங்குள்ள பிரமருத்திர இந்திராதி தேவர்களுள் யாரையும் குறிப்பிடாது.*

*மற்ற எல்லோரும் சீவாத்மாக்களே அன்றி பரப்பிரம்மம் ஆகா என்றதாம். "முன்பு பின்பு... தலைகள்" என்பதற்கு, தோற்றமும், இறுதியும் ஆக இருபக்கத்தையும் அறிய வாராத தன்மையை உடைய பரம்பொருளாகிய தன் பெருந்தன்மையைத் தன் ஞானத்தால் தானறிந்துரைக்கின்ற வேத சிரள் எனப்படும் உபநிடதம் எனப் பொருள் கூறலும் ஒன்று. இவ்வுரையில் வேத உபநிடதங்களே பரம்பொருளின் தோற்ற இறுதிகளை அறியவல்லன என்ற பொருள் உண்டாகும். பரமார்த்தம் - பரம் பொருள் - மேலான பொருள் - பரப் பிரம்மம் எனப்பெறும். வேதத்தின் வேர் பிரணவம். வேதத்தின் தலை - உபநிடதம் ஆகும்.*

***10053. 'எனக்கும், எண் வகை ஒருவற்கும், இமையவர்க்கு இறைவன் -***
***தனக்கும், பல் பெரு முனிவர்க்கும், உயிருடன் தழீஇய***
***அனைத்தினுக்கும், நீயே பரம் என்பதை அறிந்தார்***
***வினைத் துவக்குடை வீட்ட அருந் தளைநின்று மீள்வார்.***

***எனக்கும்*** *- பிரமனாகிய எனக்கும்;* ***எண்வகை ஒருவற்கும்*** *- அட்டமூர்த்தியாக உள்ள உருத்திரனுக்கும்;* ***இமையவர்க்கு இறைவன் தனக்கும்*** *- இந்திரனுக்கும்; பல்பெரு முனிவர்க்கும் - பல பெரிய முனிவர்களுக்கும்;* ***உயிருடன் தழீஇய அனைத்தினுக்கும்*** *- உயிருடைய பொருள்களாய எல்லாவற்றுக்கும்;* ***நீயே பரம் என்பதை அறிந்தார்*** *- நீயே மேலானவன் (இறைவன்) என்கின்ற உண்மையை அறிந்த ஞானிகள்;* ***வினைத் துவக்கு உடை வீட்ட அரும் தளை நீன்று மீள்வார்*** *- இருவினைகளாகிய வலைக்குள் அகப்பட்டு மீள முடியாத அரிய பிறவி என்னும் பெருந் தளையிலிருந்து மீண்டு வீடுபேறு அடைவார். அட்டமூர்த்தி சிவபெருமான். "நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், யஜமானன் என்கிற ஆன்மா" ஆக எட்டு வடிவங்களை உடையவன். "இருநிலனாய்த் தீயாகி நீரும் ஆகி, இயமானனாய், எறியும் காற்றும் ஆகி, அருநிலைய திங்களாய், ஞாயிறாகி, ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி" என்ற திருநாவுக்கரசர் அருளிய நின்ற திருத்தாண்டகம் கூறுமாறு அறிக. இருவினைகளாற் பிறவியும் பிறவியால் இருவினைகளும் என இவை காரண காரியத் தொடர்ச்சியாய் முடிவின்றித் தொடர்தலின் 'வீட்ட அருந்தளை' என்றார்.*

***10054. 'என்னைத்தான் முதல் ஆகிய உருவங்கள் எவையும்***
***முன்னைத் தாய் தந்தை எனும் பெரு மாயையில் மூழ்கி,***
***தன்னைத் தான் அறியாமையின், சலிப்ப; அச் சலம் தீர்ந்து,***
***உன்னைத் தாதை என்று உணர்குவ, முத்தி வித்து, ஒழிந்த.***

***என்னைத் தான் முதலாகிய உருவங்கள் எவையும்*** - *உற்பத்திக்குக் காரணமான என்னை முதலாக உடைய உயிர் வருக்கங்கள் எல்லாம்;* ***முன்னை தாய் தந்தை எனும் பெரு மாயையில் மூழ்கி*** - *பிறப்புக்கு முதலான தாய் தந்தை எனும் சுற்றமாகிய உலக மாயையில் அழுந்தியிருக்கும் உண்மை மறந்து;* ***தன்னைத் தான் அறியாமையில் சலிப்ப*** - *தம்முடைய ஆத்ம வடிவத்தையும் அது நீயாயிருத்தலையும் தம்மால் அறிய முடியாமல் தளர்ச்சியடைந்து துன்பம் அடைவனவாம்;* ***அச்சலம் தீர்ந்து ஒழிந்த உன்னைத் தாதை என்று உணர்குவ முத்திவித்து*** - *அந்த பொய்மை நீங்கி விலகியவாகிய சீவன்கள் உன்னையே எல்லாவற்றுக்கும் முதலாகிய தந்தை என்று அறிவனவாம்; அவையே வீட்டுலகத்தில் விளையும் வித்தாவனவாம்.*

*உயிர்க்குப் பிறவி தரும் தாய் தந்தையரை அறிதலும் வினையையும், பிறவியையும் கூட்டுவிக்கும் அதிகாரி முதல்வனாகிய பிரமனை அறிதலும், அதற்கும் மேலாக தன் சங்கற்பத்தால் அனைத்தையும் நடத்துகின்ற பரம்பொருளாகிய முதல்வனே தந்தை என அறிதலும் ஆகிய மூன்று நிலைகளுள் இரண்டு பிறவிக்கு வித்து, இறுதி ஒன்று வீட்டுக்கு வித்து என்றார்.*

***10055. "ஐ - அஞ்சு ஆகிய தத்துவம் தெரிந்து அறிந்து,***
***அவற்றின்***
***மெய் எஞ்சாவகை மேல் நின்ற நினக்குமேல் யாதும்***
***பொய் எஞ்சா இலது" என்னும் ஈது அரு மறை***
***புகலும்;***
***வய்யம் சான்று; இனி, சான்றுக்குச் சான்று இலை,***
***வழக்கால்.***

***ஐ அஞ்சு ஆகிய தத்துவம் தெரிந்து அறிந்து*** - *பூதம் 5, புலன் 5, பொறி 5, கன் மேந்திரியம் 5, மகத், அகங்காரம், மனம் மூலப்பிருகிருதி, சீவன் 5 என்று கூறப்படும் ஐந்து ஐந்துகளாகிய இருபத்தைந்து தத்துவங்களையும் நன்கு ஆராய்ந்து அறிந்து;* ***அவற்றின் மெய் எஞ்சாவகை மேல் நின்ற நினக்கு மேல் யாதும் பொய் எஞ்சா இலது*** - *அவற்றைச் சரீரமாகக் கொண்டு சரீரியாக சிறிதும் குறைவு படாமல் நடத்தி மேலாய் நின்ற இருபத்தாறாவது தத்துவமாக நின்ற உனக்கு மேல் எதுவும் உண்மையாக இல்லை;* ***என்னும் ஈது*** - *என்கின்ற இவ்வுண்மையை;* ***அருமறை புகலும்*** - *அரிய வேதம் எடுத்துக் கூறும்; வய்யம் சான்று - இதற்கு இவ்வுலகமே (நின்னால் இயங்குதலின் நீ இன்றி இயங்காமையின் சான்றாகும்;* ***இனி சான்றுக்குச் சான்று இலை*** *- சாட்சிக்கு இன்னொரு சாட்சி வேண்டுதல் இல்லை ஆதலின் இதை இனியும் நிரூபிக்க வேண்டியதின்று;* ***வழக்கால்*** - *இது வழக்கும் ஆகும்.*

*உலகு என்பது (வையம்) உயர்ந்தோர் மாட்டே ஆதலின் உயர்ந்தோர்களே சான்று எனலும் ஆம். பரம்பொருள் சரீரியாக இருந்து இருபத்தைந்து தத்துவங்களை சரீரமாகக் கொண்டு இயக்குவது என்பதாகிய சரீர சரீரி பாவம் இங்கு கூறப்பட்டுள்ளது.*

***10056. 'அளவையால் அளந்து, "ஆம்," "அன்று", என்று***

***அறிவுறும் அமைதி***
***உளவை யாவையும் உனக்கு இல்லை; உபநிடத்து***
***உனது***
***களவை ஆய்ந்து உறத் தெளிந்திலது ஆயினும்,***
***கண்ணால்,***
***துளவை ஆய் முடியாய்! ''உளை நீ'' எனத் துணியும்.***

***துளவை ஆய் முடியாய்!*** *- திருத்துளசியை ஆராய்ந்து எடுத்துச் சிறந்து அணிந்த திருமுடி உடைய திருமாலே!;* ***அளவையால் அளந்து*** *- பிரமாணங்களால் ஆராய்ந்து அளவிட்டு 'ஆம்' 'அன்று' என்று அறிவுறும் அமைதி;* ***உளவை யாவையும் உனக்கு இல்லை*** *- உண்டு என்றும் இல்லை என்றும் அறிவுறுத்தப்படும் தன்மை உடைய நிலைகள் எவையும் உன்னிடம் பயன்படா; இல்லையாகும்;* ***உபநிடத்து*** *- உபநிடதங்களில்;* ***உனது களவை ஆய்ந்து உறத் தெளிந்திலது ஆயினும்*** *- நீ எல்லாவற்றினும் மறைந்து அவையேயாய் இருந்து கொண்டிருக்கும் களவை ஆராய்ந்து உன்னை நன்கு காண இயன்றிலது ஆனாலும் அது;* ***கண்ணால் 'நீ உளை' எனத் துணியும்*** *- தன் ஞானக்கண்ணால் நீ அறியவாரா விடினும் இருக்கின்றாய் என்று அறுதியிட்டுக் கூறும்.*

*பிரமாணங்களால் பிரமாணங்களுக்குக் கட்டுப்பட்ட பொருள்களைத் தான் ஆராய்தல் இயலும். பிரமாணங்களுக்கு அப்பாற்பட்ட பொருள்களை ஆராய இயலாது; கடலைப் படியால் முகந்தளத்தல் இயலாமை போல என்க. தன்னை அளக்கும் அளவைகளாகவும் அவனே இருக்கிற போது அளக்குமாறு எவ்வாறு? என்றார். உபநிடதம் சரீர சரீரி பாவத்தால் அந்தர்யாமியாய் உள்ள இறைவனைக் கட்புலனாக அறிய இயலாவிடினும் அனுமானத்தால் உண்டு என்று துணியும்; பகலுக்கும் இரவுக்கும் இடையில் மாலை என்பது உண்டு என அறிதல் போல எனினும் ஆம்.*

***10057. 'கரணம் என்று உள உன்னை வந்து அறிவு***
***காணாமே,***
***அரணம் அல்லவர்க்கு இவை கடந்து அகல்வு அரிது***
***ஆக,***
***மரணம் தோற்றம் என்று இவற்றிடை மயங்குப;***
***அவர்க்கு உன்***
***சரணம் அல்லது ஓர் சரண் இல்லை, அன்னவை***
***தவிர்ப்பான்.***

***அரணம் அல்லவர்க்கு*** *- உன்னைத் தமக்குப் பாதுகாவலாகப் பற்றாதவர்களுக்கு;* ***உன்னை வந்து அறிவு காணாமே*** *- உன்னை நெருங்கி அறிவினால் அறிந்து கொள்ளாதபடி;* ***கரணம் என்று உள*** *- ஐம்பொறிகள் என்றுள்ளவைகள் பெருந்தடையாக ஆகும்;* ***(அதனால்) இவை கடந்து அகல்வு அரிதாக*** *- இப்*

*பொறிகளைக் கடந்து மேற்சென்று அறிதல் முடியாததாக;* ***மரணம் தோற்றம் என்று இவற்றிடை மயங்குப*** *- இறப்பு பிறப்பு என்ற பாசவலைக்குட்பட்டு மீண்டும் மீண்டும் தடுமாறுவர்;* ***அன்னவை தவிர்ப்பான்*** *- அப்பிறப்பு இறப்புகளாகிய துன்பங்களை நீக்குதற்கு;* ***அவர்க்கு*** *- அவர்களுக்கு;* ***உன் சரணம் அல்லது ஓர் சரண் இல்லை*** *- உன் திருவடியிணைகள் அல்லாமல் வேறு ஓர் புகலிடம் இல்லை.*

*சரணாகதமே விவேக மார்க்க ம ் வேறு அன்று என்று பிரபத்தியைக் கூறினார்.*

***10058. 'தோற்றம் என்பது ஒன்று உனக்கு இல்லை;***
***நின்கணே தோற்றும்,***
***ஆற்றல் சால் முதல் பகுதி; மற்று அதனுள் ஆம்,***
***பண்பால்***
***காற்றை முன்னுடைப் பூதங்கள்; அவை சென்று,***
***கடைக்கால்***
***வீற்று வீற்று உற்று வீவுறும்; நீ என்றும் விளியாய்.***

***தோற்றம் என்பது ஒன்று உனக்கு இல்லை*** *- தோன்றுதல் என்பதாகிய தன்மை உனக்கு இல்லை (அநாதி);* ***ஆற்றல் சால் முதற்பகுதி நின்கணே தோற்றும்*** *- வலிமை மிக்க மூலப்பிருகிருதி மாயை என்கிற தத்துவம் நின்னிடத்திருந்து வெளிப்படும்;* ***மற்று அதனுள் ஆம் பண்பால்*** *- பின்னர் அதின் உள்ளிருந்து ஒன்றொன்றாக வெளிப்படும் முறையால்;* ***காற்றை முன்னுடைப் பூதங்கள்*** *- காற்று, ஆகாயம் முதலாகிய ஐம்பூதங்கள் தோற்றும்;* ***கடைக்கால்*** *- ஊழிமுடிவில்;* ***அவை சென்று வீற்று வீற்று உற்று வீவுறும்*** *- ஒன்று ஒன்றுக்குள் ஒடுங்கி அழிந்து போகும்;* ***நீ என்றும் விளியாய்*** *- நீ எப்பொழுதும் அழியமாட்டாய்.*

*தோற்றமும் இறுதியும் பரம்பொருளுக்கு இல்லை என்பதும், தத்துவங்களுக்கு அவ்விரண்டும் உண்டு என்பதும் கூறப் பெற்றன.*

***10059. 'மின்னைக் காட்டுதல்போல் வந்து விளியும் இல்***
***உலகம் -***
***தன்னைக் காட்டவும், தருமத்தை நாட்டவும், தனியே***
***என்னைக் காட்டுதி; இறுதியும் காட்டுதி; எனக்கும்***
***உன்னைக் காட்டலை; ஒளிக்கின்றும் இலை, மறை***

***உரையால்.***

***மின்னைக் காட்டுதல் போல் வந்து விளியும் இவ் உலகம் தன்னைக் காட்டவும்*** *- வானம் மின்னலைக் காட்டுதல் போல தோன்றி உடனே மறையும் இந்த*

*உலகத்தைக் காட்டவும்;* ***தருமத்தை நாட்டவும்*** *- இவ்வுலகில் தருமத்தை நிலை நிறுத்தவும்;* ***தனியே*** *- உன்னின் வேறாக;* ***என்னைக் காட்டுதி*** *- என்னைப் படைக்கிறாய்;* ***இறுதியும் காட்டுதி*** *- எனக்கு அழிவையும் உண்டாக்குகிறாய்;* ***எனக்கும்-; உன்னைக் காட்டலை*** *- உலக காரணமானவனாகிய உன் உண்மை நிலையைக் காட்டுவாயல்லை;* ***ஒளிக்கின்றும் இலை*** *- மறைத்திருக்கின்றாயும் இல்லை;* ***மறை உரை*** *- இவை அனைத்தையும் வேதங்கள் கூறுகின்றன.*

*ஆல், அசை. 'மறை உரையால்' நான் உன்னை அறிதலின் ஒளிக்கின்றாயும் அல்லை என்றும் உரை கூறுவர். தோன்றிய உடனே மறையும் மின்னல் போல என்பதால் சகம் என்பர். சகம் - நிலையற்றது.*

***10060. 'என் உருக் கொடு இவ் உலகினை ஈனுதி; இடையே***
***உன் உருக் கொடு புகுந்து நின்று ஓம்புதி;***
***உமைகோன்***
***தன் உருக் கொடு துடைத்தி; மற்று இது தனி***
***அருக்கன்***
***முன் உரு கொடு பகல் செயும் தரத்தது - முதலோய்!***

***முதலோய்!*** *- எல்லாவற்றுக்கும் மூலமானவனே!;* ***என் உருக்கொடு இவ் உலகினை ஈனுதி*** *- பிரமனாகிய என் வடிவம் கொண்டு இந்த உலகத்தை உண்டாக்குகிறாய்;* ***இடையே*** *- நடுவில்;* ***உன் உருக்கொடு புகுந்து நின்று ஓம்புதி*** *- திருமாலாகிய உன் வடிவத்தை எடுத்துக் கொண்டு புகுந்து நின்று பாதுகாக்கிறாய்;* ***உமை கோன் தன் உருக்கொடு துடைத்தி*** *- உமாதேவியின் கணவராகிய சிவபெருமான் வடிவம் கொண்டு அழிக்கிறாய்;* ***மற்று இது*** *- நீ செய்யும் இச்செயல்;* ***தனி அருக்கன்*** *- ஒப்பற்ற ஒருவனாகிய சூரியன்;* ***முன் உருக்கொடு பகல் செயும் தரத்தது*** *- கருதிய உருவம் கொண்டு காலையில் பகலை உண்டாக்கி, உச்சத்தில் பகலை நடத்தி நிறுத்தி, தனது மறைவால் மாலையில் பகலை முடித்தல் போல உள்ளதாம்.*
*காலைச் சூரியன், உச்சிச் சூரியன், மாலைச் சூரியன் என்று மூன்றாகாது ஒன்றாதல் போல மும்மூர்த்திகளாக அதிட்டித்து நின்று முத்தொழிலும் செய்வான் ஒருவனே என்றார் என்க.*

***10061. 'ஓங்காரப் பொருள் தேருவோர்தாம் உனை***
***உணர்வோர்;***
***ஓங்காரப் பொருள் என்று உணர்ந்து, இரு வினை***
***உகுப்போர்;***
***"ஓங்காரப் பொருள் ஆம்" "அன்று" என்று ஊழி***
***சென்றாலும்,***
***ஓங்காரப் பொருளே பொருள் என்கலா உரவோர்.***

***ஓங்காரப் பொருள் தேருவோர்தாம் உனை உணர்வோர்*** - *பிரணவப் பொருளை ஆராய்ந்தறிகின்றவர்களே உன் உண்மையான சொரூபத்தை உணர்வாராவர் (அவர்கள்);* ***ஓங்காரப் பொருள் என்று உணர்ந்து இருவினை உகுப்போர்*** - *உன்னைப் பிரணவப் பொருள் என்ற தியானித்து இருவினைகளும் கழியப் பெற்று முத்தி அடைவர்;* ***ஓங்காரப் பொருளே பொருள் என்கலா உரவோர்*** - *பிரணவப் பொருளே பரம்பொருளாகும் என்ற உண்மையை உணரமாட்டாத அறிவை உடையவர்கள்;* ***ஓங்காரப் பொருள் ஆம்*** - *இறைவனாகிய நீ பிரணவப் பொருளாக உள்ளாய் என்றும்;* ***'அன்று' என்று*** - *இல்லை என்றும் தடுமாறி;* ***ஊழி சென்றாலும்*** - *உகாந்த காலம் கடந்தாலும் (பிறவியிலிருந்து வீடு பெறார்.)*

*பரம் பொருளே பிரணவமாகிய 'ஓம்' என்பது தியானிப்பார் சிறப்புக் கூறியது. தன் தன்மையும், பரம்பொருள் தன்மையும், புருஷார்த்தங்களின் தன்மையும், அடையும் உபாயத்தின் தன்மையும், அதற்கு விரோதிகளாக உள்ளவற்றின் தன்மையும் ஆகிய ஐந்தையும் பிரணவம் தன் சொல்லாலும் பொருளாலும் உணர்த்துவது.*

***10062. 'இனையது ஆகலின், எம்மை மூன்று உலகையும்***
***ஈன்று, இம்***
***மனையின் மாட்சியை வளர்த்த எம் மோயினை***
***வாளா***
***முனையல்'' என்று அது முடித்தனன் - முந்து நீர்***
***முளைத்த***
***சினையின் பந்தமும் பகுதிகள் அனைத்தையும்***
***செய்தோன்.***

***முந்து நீர் முளைத்த சினையின் பந்தமும் பகுதிகள் அனைத்தையும் செய்தோன்*** - *நிலத்திற்கு முன்னதாகிய நீரிலிருந்து தோன்றிய முட்டை வடிவான இவ் வண்டத்தையும் அவற்றின் பகுதியாகிய பல்வேறு யோனி பேதங்களையும் படைத்தருளியவனாகிய பிரமன்;* ***இனையது ஆகலின்*** - *பரம்பொருளாகிய நீயே இராமனாக அவதரித்தலின்;* ***எம்மை மூன்று உலகையும் ஈன்று இம்மனையின் மாட்சியை வளர்த்த எம்மோயினை வாளா முனையல்!*** - *என்னையும் மூவுலகங்களையும் பெற்றெடுத்து இல்லற மேன்மையை உன்னோடிருந்து அழகுற நடத்துகிற சர்வ சக்தியாகிய எம் தாயை வீணே வெறுக்க வேண்டா;* ***என்று அது முடித்தனன்*** - *என்று கூறித் தன் உரையை நிறைவு செய்தான்.*

## *சிவபெருமான் உண்மை உணர்த்தல்*

***10063. என்னும் மாத்திரத்து, ஏறு அமர் கடவுளும்***
***இசைத்தான்;***
***'உன்னை நீ ஒன்றும் உணர்ந்திலை போலுமால்,***
***உரவோய்!***
***முன்னை ஆதி ஆம் மூர்த்தி நீ; மூவகை உலகின்***

***அன்னை சீதை ஆம் மாது, நின் மார்பின் வந்து***
***அமைந்தாள்.***

***என்னும் மாத்திரத்து*** *- என்று பிரமன் இராமனுக்கு உண்மை உணர்த்திய அளவில்;* ***ஏறு அமர் கடவுளும் இசைத்தான்*** *- எருதின் மேல் அமர்ந்துள்ள கடவுளாய சிவனும் (பின்வருமாறு) உண்மை உணர்த்தினான்;* ***உரவோய்!*** *- வலிமை உள்ள இராமனே!;* ***நீ உன்னை ஒன்றும் உணர்ந்திலை போலுமால்*** *- நீ உன்னை இன்னவாறு என்று ஒரு சிறிதும் உணர்ந்தாயில்லை போலும்;* ***நீ முன்னை ஆதி ஆம் மூர்த்தி*** *- நீ எல்லார்க்கும் முற்பட்டவனாகிய ஆதிப் பரம்பொருள்;* ***சீதை அம்மாது நின் மார்பின் வந்து அமைந்தாள் மூவகை உலகின் அன்னை*** *- சீதை என்கிற பெண் உன் திருமார்பில் வந்து பொருந்தியிருப்பவளாகிய மூவுலகங்களுக்கும் தாயாகிய பிராட்டியாவாள்.*

***10064. 'துறக்கும் தன்மையள் அல்லளால், தொல்லை எவ்***
***உலகும்***
***பிறக்கும் பொன் வயிற்று அன்னை; இப் பெய்வளை***
***பிழைக்கின்,***
***இறக்கும் பல் உயிர்; இராமன்! நீ இவள் திறத்து***
***இகழ்ச்சி***
***மறக்கும் தன்மையது' என்றனன் - வரதர்க்கும்***
***வரதன்.***

***இராமன்!*** *- இராமனே!;* ***தொல்லை எவ் உலகும் பிறக்கும் பொன் வயிற்று அன்னை*** *- பழயதாகிய எல்லா உலகங்களும் தோன்றுதற் கிடனாகிய அழகிய உதரத்தையுடைய மகாமாதாவாகிய இவள்;* ***துறக்கும் தன்மையள் அல்லள்*** *- உன்னால் கைவிடப்படும் தன்மை உடையவளல்லள்;* ***இப்பெய்வளை பிழைக்கின் பல்உயிர் இறக்கும்*** *- இப்பெண் பிழை செய்வாளானால் எல்லா உயிர்களும் இறந்துபடும்;* ***நீ இவள் திறத்து இகழ்ச்சி மறக்கும் தன்மையது*** *- நீ இவள் விஷயத்தில் அலட்சியம் காட்டுவது மறந்து விடத் தக்கது;* ***என்றனன் வரதர்க்கும் வரதன்*** *- என்று கூறினான் வரந்தரும் கடவுளர்க்கு வரம் தரும் சிவபெருமான்.*

*சிவன் தயரதனுக்குக் கூறல்*

***10065. பின்னும் நோக்கினான், பெருந் தகைப் புதல்வனைப்***
***பிரிந்த***
***இன்னலால் உயிர் துறந்து, இருந் துறக்கத்துள்***
***இருந்த***
***மன்னவற் சென்று கண்டு, 'நின் மைந்தனைத்***
***தெருட்டி,***

*முன்னை வன் துயர் நீக்குதி, மொய்ம்பினோய்!'*
*என்றான்.*

***பின்னும் நோக்கினான்*** - *(சிவன் மேலும் செய்ய வேண்டுவதை மனத்தால் நினைத்துப் பார்த்து;* ***பெருந்தகைப் புதல்வனைப் பிரிந்த இன்னலால் உயிர் துறந்து இருந் துறக்கத்துள் இருந்த மன்னவன் சென்று கண்டு*** - *மேம்பாடுடைய மகனாகிய இராமனைப் பிரிந்த துன்பத்தால் உயிர் போகப் பெற்று சுவர்க்க லோகத்தில் இருந்த தசரதனைச் சென்று பார்த்து;* ***'மொய்ம்பினோய்! நின்மைந்தனைத் தெருட்டி முன்னை வன்துயர் நீக்குதி என்றான்*** - *வலிமை படைத்தவனே! உன் மகனாகிய இராமனைத் தெளிவித்து அவன் மனத்தில் உள்ள வலிய துன்பத்தைப் போக்குவாயாக என்று கூறினான்.*

*10066.* ***ஆதியான் பணி அருள் பெற்ற அரசருக்கு அரசன்***
***காதல் மைந்தனைக் காணிய உவந்தது ஓர்***
***கருத்தால்***
***பூதலத்திடைப் புக்கனன்; புகுதலும், பொரு இல்***
***வேத வேந்தனும் அவன் மலர்த் தாள்மிசை***
***விழுந்தான்.***

***ஆதியான் பணி அருள் பெற்ற அரசருக்கு அரசன்*** - *சிவபெருமான் கட்டளையாகிய அருளைப் பெற்ற சக்கரவர்த்தியாகிய தயரதன்;* ***காதல் மைந்தனைக் காணிய உவந்தது ஓர் கருத்தால்*** - *தன் அன்பு மகனைக் காண வேண்டும் என்று ஆசைப்பட்ட ஓர் எண்ணத்தால்;* ***பூதலத்திடைப் புக்கனன்*** - *மண்ணுலகத்தில் நுழைந்தான்;* ***புகுதலும்*** - *(அவ்வாறு) பூமிக்கு வருதலும்;* ***பொருஇல் வேத வேந்தனும் அவன் மலர்த் தாள்மிசை விழுந்தான்*** - *ஒப்பற்ற வேதத் தலைவனான இராமனும் அத்தயரதனது மலர்போலும் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.;*

*10067.* ***வீழ்ந்த மைந்தனை எடுத்து, தன் விலங்கல் ஆகத்தின்***
***ஆழ்ந்து அழுந்திடத் தழுவி, தன் கண்ணின் நீர்***
***ஆட்டி***
***வாழ்ந்த சிந்தையின் மனங்களும் களிப்புற, மன்னன்***
***போழ்ந்த துன்பங்கள் புறப்பட, நின்று இவை***
***புகன்றான்.***

***மன்னன்*** - *தயரதன்;* ***வீழ்ந்த மைந்தனை எடுத்து*** - *தன்னடியில் விழுந்து வணங்கிய மகனைத் தூக்கி;* ***தன் விலங்கல் ஆகத்தின் ஆழ்ந்து அழுந்திடத் தழுவி*** - *தன்னுடைய அகன்ற மார்பின்கண் நன்றாக அழுந்தும் படி இறுக அணைத்து;* ***தன் கண்ணின் நீர்***

***ஆட்டி*** - *தன் கண்ணிலிருந்து வருகின்ற கண்ணநீரால் அவனை முழுக்காட்டி;* ***போழ்ந்த துன்பங்கள் புறப்பட*** - *இதுகாறும் அவனைப் பிரிந்ததனால் ஏற்பற்ற துன்பங்கள் வெளியேற;* ***நின்று இவை புகன்றான்*** - *எதிர் நின்று பின்வரும் சொற்களைச் சொன்னான்.*

***10068. 'அன்று கேகயன் மகள் கொண்ட வரம் எனும் அயில் வேல்***
***இன்றுகாறும் என் இதயத்தினிடை நின்றது, என்னைக்***
***கொன்று நீங்கலது, இப்பொழுது அகன்றது, உன் குலப் பூண்***
***மன்றல் ஆகம் ஆம் காந்த மா மணி இன்று வாங்க.***

***கேகயன் மகள் அன்று கொண்ட வரம் எனும் அயில்வேல் என் இதயத்தினிடை இன்றுகாறும் நின்றது*** - *கேகயத்தரசன் மகளாகிய கைகேயி (அயோத்தியில் உனது பட்டாபிஷேகத்துக்கு நாள் குறித்த) அன்று என்னிடம் பெற்றுக் கொண்ட வரம் என்ற கூரிய வேல் என நெஞ்சகத்து இன்று வரை தங்கியிருந்தது;* ***என்னைக் கொன்று நீங்கலது*** - *என்னைக் கொலை செய்து இறக்கடித்த பிறகும் நீங்கவில்லை;* ***இன்று உன் குலப்பூண் மன்றல் ஆகம் ஆம் காந்த மாமணி வாங்க இப்பொழுது அகன்றது*** - *இன்றைக்கு (உன்னை இறுகத் தழுவிய போது) உன் சிறந்த ஆபரணங்களை அணிந்த மணம் பொருந்திய மார்பு ஆகிய காந்தமாமணி இழுத்த படியால் இப்பொழுது (அவ்வேல்) அகன்று போயிற்று.*

*வரம்; 'இராமன் வனம் போக வேண்டும்' என்று கேட்ட வரத்தைக் குறித்தது. பரதன் நாடாள்வதில் தயரதனுக்கு வெறுப்பின்மை. "மண்ணே கொள் நீ மற்றைய தொன்றும் மற (கம்ப. 1522) என்பதாலும் உணரலாகும். போரிடைப் புண்ணில் படைக்கலத் துகள்கள் சிக்கியிருக்குமானால் காந்த மணியைப் புண்ணின் மேல் காட்டின் இரும்புத் துண்டுகள் காந்தத்தால் ஈர்க்கப்பட்டு வெளியேறும் சிகிச்சைமுறை பற்றி வரத்தை வேல் ஆகவும் அது தைத்த தயரதன் இதயத்திலிருந்து அதனை வெளியேற்ற இராமனது தழுவிய மார்பு காந்த மணியாகவும் இங்கு கொள்ளப் பெற்றதைக் காட்சிப் படலத்து 63 ஆம் பாடலோடு (கம்ப. 5131) பொருத்திப் பார்த்து அறிக.*

***10069. 'மைந்தரைப் பெற்று வான் உயர் தோற்றத்து மலர்ந்தார்,***
***சுந்தரப் பெருந் தோளினாய்! என் துணைத் தாளின்***
***பைந் துகள்களும் ஒக்கிலர் ஆம் எனப் படைத்தாய்;***
***உய்ந்தவர்க்கு அருந் துறக்கமும் புகழும் பெற்று உயர்ந்தேன்.***

**சுந்தரப் பெருந்தோளினாய்** - *அழகிய பெரிய தோள்களை உடைய இராமனே!;* **மைந்தரைப் பெற்று வானுயர் தோற்றத்து மலர்ந்தார் என் துணைத்தாளின் பைந் துகள்களும் ஒக்கிலர் ஆம் எனப் படைத்தாய்** - *நல்ல மக்களைப் பெற்று மிக உயர்ந்த பெருமையுடன் விளங்கியவர்கள் கூட எனது இரண்டுகால்களில் உள்ள சிறு தூசுக்கும் ஒப்பாகார் என்னும்படி நீ எனக்குச் சிறந்த பெருமையை உண்டாக்கித் தந்தாய்;* **உய்ந்தவர்க்கு அருந் துறக்கமும் புகழும் பெற்று உயர்ந்தேன்** - *(தீவினையிலிருந்து) பிழைத்தவர்களுக்குப் பெறுதற்கரிய மேல் உலகமும், புகழும் (மறுமைக்கும் இம்மைக்குமாகப்) பெற்று (உன்னால் இருமையிலும்) உயர்ந்தேன்.*

***10070. 'பண்டு நான் தொழும் தேவரும் முனிவரும் பாராய்,***
***கண்டு கண்டு எனைக் கைத்தலம் குவிக்கின்ற***
***காட்சி;***
***புண்டரீகத்துப் புராதனன்தன்னொடும் பொருந்தி***
***அண்டமூலத்து ஓர் ஆசனத்து இருத்தினை, அழக!'***

**அழக** - *அழகனே!;* **நான் பண்டு தொழும் தேவரும் முனிவரும்** - *நான் முன்பு வணங்குகின்ற தேவர்களும் முனிவர்களும்;* **எனைக் கண்டு கொண்டு கைத்தலம் குவிக்கின்ற காட்சி பாராய்** - *என்னைத் திரும்பத் திரும்பப் பார்த்து கைகளைக் குவித்து வணங்குகிற காட்சியைப் பார்ப்பாயாக;* **புண்டரீகத்துப் புராதனன் தன்னொடும் பொருந்தி** - *தாமரைத்தவிசில் உள்ள பழயவனாகிய பிரமனோடும் கூடிச் சமானமாக;* **அண்டமூலத்து ஓர் ஆசனத்து இருத்தினை** - *அண்டகோளத்தின் முகப்பின்கண் ஒப்பற்ற பீடத்தில் என்ன இருக்கச் செய்தாய்.*

### *சீதையைத் தயரதன் தேற்றல்*

***10071. என்று, மைந்தனை எடுத்து எடுத்து, இறுகுறத் தழுவி,***
***குன்று போன்று உள தோளினான், சீதையைக் குறுக,***
***தன் துணைக் கழல் வணங்கலும், கருணையால்***
***தழுவி,***
***நின்று, மற்று இவை நிகழ்த்தினான், நிகழ்த்த அரும்***
***புகழோன்;***

**குன்றுபோன்று உள தோளினான்** - *மலைபோன்றுள்ள தோள்களை உடையவனாகிய தயரதன்;* **என்று** - *என்று கூறி;* **மைந்தனை எடுத்து இறுகுறத் தழுவி** - *மகனைத் தூக்கி நன்றாகத் தழுவிப் பின்னர்;* **சீதையைக் குறுக** - *சீதை இருந்த இடத்தை அணுக;* **தன் துணைக் கழல் வணங்கலும்** - *தனது இரண்டு அடிகளைப்*

*பிராட்டி வணங்குதலும்;* ***கருணையால் தழுவி*** *- அன்பு கலந்த கண்ணோட்டத்தால் அவளை அருளி;* ***நிகழ்த்த அரும் புகழோன்*** *- கூறுதற்கரிய நின்ற புகழை உடைய தயரதன்;* ***மற்று இவை நிகழ்த்தினான்*** *- பின்வரும் சொற்களைச் சொன்னான்.*

***10072. "நங்கை! மற்று நின் கற்பினை உலகுக்கு நாட்ட,***
***அங்கி புக்கிடு" என்று உணர்த்திய அது மனத்து***
***அடையேல்;***
***சங்கை உற்றவர் பெறுவதும் உண்டு; அது சரதம்;***
***கங்கை நாடுடைக் கணவனை முனிவுறக் கருதேல்.***

***நங்கை!*** *- சீதையே!;* ***நின் கற்பினை உலகுக்கு நாட்ட அங்கிபுக்கிடு என்று உணர்த்திய அது மனத்து அடையேல்*** *- உனது கற்பின் சிறப்பை உலகின் கண் நிலை நிறுத்த வேண்டி 'நெருப்பின் கண் புகும்படியாக' இராமன் கூறிய அதனை மனத்துக் கொள்ளாதே;* ***சங்கை உற்றவர் பெறுவதும் உண்டு, அது சரதம்*** *- உலகில் சந்தேகம் உற்றவர்கள் இவ்வாறு நெருப்பின் மூலமாகவும் பிறவற்றின் மூலமாகவும் மெய்ப்பிக்கச் செய்து அதனால் ஐயம் நீங்குதல் கண்கூடு; உலகில் இயல்பாக நடைபெறுவதே;* ***கங்கை நாடு உடைக் கணவனை முனிவுறக் கருதேல்*** *- (அவ்வாறு சாதிக்கச் செய்ததுபற்றி) கோசல நாட்டிற்கு அரசனான உன் கணவனை வெறுக்கக் கருதாதே.*

*உலகின்கண் உள்ளார் எவரேனும் உன் கற்பில் ஐயம் கொள்வராயின் அது நீங்கி அவர் தெளிய வேண்டி 'அங்கி புக்கிடு' என்றானே அன்றி, அவனுக்குச் சந்தேகம் என்பது அந்நிகழ்ச்சிக்குப் பொருளாகாது என்று தயரதன் மகன் செயலுக்குக் காரணம் கூறி மருகியைத் தேற்றினான். இக் காரணத்தை இராமன் கூறியதாகக் கூறாமல் தயரதன் மூலமாகக் கூறியதாக அமைத்தது கவியின் சாதுர்யத்தை எடுத்துக்காட்டும் என்பர். மகாவித்துவான், மயிலம், வே. சிவசுப்பிரமணியன் அவர்கள்.*

***10073. ""பொன்னைத் தீயிடைப் பெய்தல் அப் பொன்னுடைத்***
***தூய்மை -***
***தன்னைக் காட்டுதற்கு" என்பது மனக் கொளல்***
***தகுதி;***
***உன்னைக் காட்டினன், "கற்பினுக்கு அரசி" என்று,***
***"உலகில்,***
***பின்னைக் காட்டுவது அரியது" என்று எண்ணி, இப்***
***பெரியோன்.***

***"பொன்னைத் தீயிடைப் பெய்தல் அப்பொன்னுடைத் தூய்மை தன்னைக் காட்டுதற்கு" என்பது மனக்கொளல் தகுதி*** *- பொன்னை நெருப்பில் போடுவது*

*பொன்னைச் சொக்கத் தங்கம் என உலகிற்குக் காண்பிப்பதற்காகத்தான் என்று மனத்தின் கண் நினைத்தலே தகுதி (அதுபோல);* ***இப்பெரியோன்*** *- குணங்களால் உயர்ந்த இவன்;* ***உலகில் பின்னைக் காட்டுதற்கு அரியது என்று எண்ணி உன்னை 'கற்பினுக்கு அரசி' என்று காட்டினன்*** *- உலகத்தில் (இச்சமயம் தவறினால்) பிறகு தெளிவித்தல் இயலாது என்று கருதி உன்னை 'கற்பிற் சிறந்தவள்' என்று (இந் நிகழ்ச்சியால்) தெளிவித்தான்.*

*சுத்தத் தங்கம் தீயில் இட்டால் குறையாது மாற்றும் எடையும், அதனைத் தீயில் இட்டே அறிவர். ஆகவே உலகிற்காகச் சான்று வேண்டல் தவறன்று.*

***10074. 'பெண் பிறந்தவர், அருந்ததியே முதல் பெருமைப்***
***பண்பு இறந்தவர்க்கு அருங் கலம் ஆகிய பாவாய்!***
***மண் பிறந்தகம் உனக்கு; நீ வான்நின்றும் வந்தாய்;***
***எண் பிறந்த நின் குணங்களுக்கு இனி இழுக்கு***
***இலையால்'***

***பெண் பிறந்தவர் அருந்ததியே முதல் பெருமைப் பண்பு இறந்தவர்க்கு அருங்கலம் ஆகிய பாவாய்!*** *- பெண்ணாய்ப் பிறந்தவர்களாகிய அருந்ததி முதலாகிய பெருமையின் எல்லை கடந்தவர்களுக்கும் அணிகலம் போல உள்ள பெண்ணே!* ***உனக்கு பிறந்தகம் மண்*** *- உனக்குப் பிறப்பிடம் இம் மண்ணாகும்;* ***(ஆனால்) நீ வான் நின்றும் வந்தாய்*** *- நீ வீட்டுலகத்தின் நின்றும் இங்கு வந்து அவதரித்தாய்;* ***எண் பிறந்த நின் குணங்களுக்கு இழுக்கு இனி இலையால்*** *- உலகால் நன்கு மதிக்கற்பாடு உடைய நின் சிறந்த குணங்களுக்கு யாதொரு குறையும் இனி வராது.*

*'எண் பிறந்த' என்பது நன்கு மதிக்கற்பாடு உடைய "சான்றோரால் எண்ணப்பட" என்ற (குறள் 922) குறளில் எண்ணுதல் நன்கு மதித்தலாமாறு அறிக. 'எண்பு இறந்த' எனப் பிரித்து 'கணக்கற்ற' எனப்பொருள் உரைத்தலும் ஒன்று.*

## *தயரதன் இலக்குவனைப் பாராட்டல்*

***10075. என்னச் சொல்லி, அவ் ஏந்திழை திரு மனத்து***
***யாதும்***
***உன்னச் செய்வது ஓர் முனிவு இன்மை மனம்***
***கொளா உவந்தான்;***
***பின்னைச் செம்மல் அவ் இளவலை, உள் அன்பு***
***பிணிப்ப,***
***தன்னைத் தான் எனத் தழுவினன், கண்கள் நீர்***

***ததும்ப.***

**செம்மல்** - *தயரதன்;* ***என்னச்சொல்லி*** *- என்று இவ்வாறு உரைத்து;* ***அவ் ஏந்திழை திருமனத்து யாதும் உன்னச் செய்வது ஓர் முனிவு இன்மை மனம் கொளா உவந்தான்*** *- அந்தச் சீதை தன் நல்ல மனத்தில் சிறிதும் கருதுகின்ற வெறுப்பு இன்மை நிகழ்ந்தபடியைத் தன் மனத்தில் அறிந்து மகிழ்ச்சி அடைந்தான்;* ***பின்னை*** *- பிறகு;* ***அவ் இளவலை*** *- அந்த இளைய பெருமாளாகிய இலக்குவனை;* ***உள்அன்பு பிணிப்ப*** *- மனத்தகத்துச் சிறந்த அன்பு கட்டி இழுக்க;* ***தன்னைத்தான் என கண்கள் நீர் ததும்ப தழுவினன்*** *- தானே தன்னைத் தழுவிக்கொள்வது போல கண்களில் நீர் பெருகத் தழுவிக்கொண்டான்.*

*தான் அவன் என்னும் வேறின்மையைத் தயரதன் இலக்குவன்பால் கண்டான். தனக்குக் கண்ணும் உயிருமாம் இராமனைத்தான் இருந்து காத்தாற் போல அவன் பதினான்கு ஆண்டுகள் உடனிருந்து காத்தவன். எனவேதான் அவன் என வேறின்மை கண்டான் ஆயிற்று; அகத்தே அன்பு தழுவ புறத்தே மேனிதழுவியது.*

***10076. கண்ணின் நீர்ப் பெருந் தாரை மற்று அவன் சடைக் கற்றை***
***மண்ணின் நீத்தம் ஒத்து இழிதர, தழீஇ நின்று, 'மைந்த!***
***எண் இல் நீக்க அரும் பிறவியும் என் நெஞ்சின் இறந்த***
***புண்ணும் நீக்கினை, நுமையனைத் தொடர்ந்து உடன் போந்தாய்.***

**கண்ணின் நீர்ப்பெருந்தாரை** *- (தயரதன்) கண்களிலிருந்து வழிகின்ற பெரிய நீர் ஒழுக்கானது;* ***மற்றுஅவன் சடைக்கற்றை மண்ணின் நீத்தம் ஒத்து இழுதர*** *- அந்த இலக்குவனது சடாபாரமாகிய மண்ணிலே வெள்ளம்போலப் பெருக்கெடுத்து இறங்கி வீழ;* ***மைந்த!*** *- இலக்குவனே!;* ***நுமையனைத் தொடர்ந்து உடன் போந்தாய்*** *- உன் தமையனான இராமனைப் பின் பற்றி அவனுடனே காடு சென்றாய்;* ***(அதனால்) எண் இல் நீக்க அரும்பிறவியும் என் நெஞ்சின் இறந்த புண்ணும் நீக்கினை*** *- கணக்கில்லாத நீக்குதற்கரிய உனது பிறவி நோயையும் என் மனத்தில் மிக்கிருந்த புண்ணையும் போக்கிவிட்டாய்.*

***10077. 'புரந்தரன் பெரும் பகைஞனைப் போர் வென்ற உன்தன்***
***பரந்து உயர்ந்த தோள் ஆற்றலே தேவரும் பலரும்***
***நிரந்தரம் புகல்கின்றது; நீ இந்த உலகின்***

***அரந்தை வெம் பகை துடைத்து, அறம்***
***நிறுத்தினை - ஐய!'***

***ஐய!*** *- இலக்குவனே!;* ***புரந்தரன் பெரும் பகைவனைப் போர் வென்ற உன்தன் பரந்து உயர்ந்த தோள் ஆற்றலே தேவரும் பலரும் நிரந்தரம் புகில்கின்றது*** *- இந்திரன் பகைவனாய இந்திரசித்துவைப் போரின்கண் வென்ற உன்னுடைய விசாலத்து உயர்ந்துள்ள தோள்வலிமைதான் தேவரும் பிறரும் நாடோறும் சொல்லுவதாகும்;* ***நீ இந்த உலகின் அரந்தை வெம்பகை துடைத்து அறம் நிறுத்தினை*** *- நீ இந்த உலகத்தின் துன்பமான கொடிய*

*அரக்கர்களாகிய பகையை அழித்து அறத்தை நிலைபெறும்படிச் செய்தாய்.*

*தயரதன் வரம் கேட்கக்கூற இராமன் வரம் கேட்டல்*

***10078. 'என்று, பின்னரும், இராமனை, 'யான் உனக்கு ஈவது***
***ஒன்று கூறுதி, உயர் குணத்தோய்!' என, 'உனை***
***யான்***
***சென்று வானிடைக் கண்டு, இடர் தீர்வென் என்று***
***இருந்தேன்;***
***இன்று காணப் பெற்றேன்; இனிப் பெறுவது என்?'***
***என்றான்.***

***என்று*** *- இலக்குவனை இவ்வாறு பாராட்டிவிட்டு;* ***பின்னரும்*** *- பிறரும்;* ***இராமனை*** *- இராமனைப் பார்த்து;* ***உயர்குணத்தோய்*** *- உத்தம குணங்களை உடையவனே!* ***'யான் உனக்கு ஈவது ஒன்று கூறுதி' என*** *- நான் உனக்குக் கொடுக்க வேண்டுவது ஒன்றைக் கூறுக என்று கேட்ப (அதற்கு இராமன்);* ***யான் உனை வானிடைச் சென்று கண்டு இடர் தீர்வென் என்று இருந்தேன் இன்று காணப் பெற்றேன் இனிப் பெறுவது என்? என்றான்*** *- நான் உன்னை விண்ணுலகத்திடத்தில் சென்று கண்டு துன்பம் நீங்குவேன் என்று நினைத்திருந்தேன்; (ஆனால்) இன்று இங்கேயே காணும் பேறு அடைந்தேன்; புதிதாக இனிப் பெறுவதற்கு என்ன இருக்கிறது, என்று கூறினான்.*

***10079. 'ஆயினும், உனக்கு அமைந்தது ஒன்று உரை' என,***
***அழகன்,***
***தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்,***
***தாயும் தம்பியும் ஆம் வரம் தருக!' எனத்***
***தாழ்ந்தான்;***

***வாய் திறந்து எழுந்து ஆர்த்தன, உயிர் எலாம்,***
***வழுத்தி.***

*(தயரதன்,), **ஆயினும்** - ஆனாலும்; **உனக்கு அமைந்தது ஒன்று உரை என** - உனக்குப் பொருந்திய தொன்றினைக் கேட்க என்று சொல்ல; **அழகன்** - இராமன்; **நீ தீயள் என்று துறந்த என் தெய்வமும் மகனும்** - உன்னால் தீயவள் என்று துறக்கப் பட்ட என் தெய்வமாகிய கைகேயியும், பரதனும்; **'தாயும் தம்பியும் ஆம் வரம் தருக' என தாழ்ந்தான்** - எனக்குத் தாயும் தம்பியும் ஆகும்படியான வரத்தைத் தருக எனக் கேட்டு வணங்கினான்; **(அது கேட்டு அவன் அருள் திறம் நினைந்து) உயிர் எலாம் வழுத்தி** - உயிர்கள் எல்லாம் அவனை வணங்கி; **வாய்திறந்து எழுந்து ஆர்த்தன** - எழுந்து வாய்திறந்து மகிழ்ச்சிப் பேரொலி செய்தன.*

*துறந்த படியை, நகர் நீங்குபடலம் 49 ஆம் பாடல் (கம்ப. 1654) எடுத்துக்காட்டும். கைகேயியைத் தாரம் அல்லள் எனவும், பரதனை மகன் என்றுன்னேன்; உரிமைக்கு ஆகான் எனவும் துறந்தான தயரதன். வரம் வேண்டும் போது கைகேயியையும், பரதனையும எப்படிக் குறிப்பிடுவது என்னும்போது 'தெய்வமும், மகனும்' என்று இராமன் அழைத்தது கம்பரின் கவிசாதுர்யமாகும். என் தாயும என்று குறிப்பிட்டால் தயரதன் மனைவியல்லள் என்று சொல்லிய பிறகு தாய், தம்பி, என்று குறிப்பிட முடியாது. எனவே தெய்வம என்றான் இராமன். மகன் என்பது உறவுப் பொருளில் வாராது 'சிறுவன்' என்பது போலப் பொதுப் பொருளில் வந்தது என்று கொள்ளலாம். தயரதன் கைகேயியை மனைவி என்று ஏற்றுக கொண்டாலே இராமன் தாய் என்று அழைக்க முடியும், தயரதன பரதனை மகன் என்றாலே இராமன் அவனைத் தம்பி என்று அழைக்க முடியும் என்பதை உன்னி 'தெய்வமும் மகனும்' 'தாயும் தம்பியும்' ஆம்வரம் தருக என்று கேட்டான் இராமன் என்பது கம்பர் கவிநயத்துக்கு எடுத்துக்காட்டு. உரையாடல்களை அமைக்குந் திறனில் கம்பரின் உயர்ந்த கவித்துவத்துக்கு எடுத்துக்காட்டாகும் என்பர் என குருநாதர் மகா வித்துவான மயிலம் வே. சிவசுப்பிரமணியன் அவர்கள். இராமனது பண்பு நலங்கள் சிறந்து வெளிப்படுவதற்கும், அவனது விரிந்த சகோதரத்துவத்துக்கு எல்லை கண்டதும் 14 ஆண்டு வனவாசமே ஆதலின் அதனைத் தந்த கைகேயியே இராமனைத் தெய்வமாக்கியவள் ஆதலின் இராமன் அச்சிற்றன்னையைத் 'தெய்வம்' என்றது மிகவும் பொருத்தமானதே என்பது அவர்கருத்து.*

***10080. 'வரத கேள்!' எனத் தயரதன் உரை செய்வான்; 'மறு***
***இல்***
***பரதன் அன்னது பெறுக! தான் முடியினைப் பறித்து,***
***இவ்***
***விரத வேடம் மற்று உதவிய பாவிமேல் விளிவு***
***சரதம் நீங்கலதாம்' என்றான், தழீஇய கை தளர.***

***வரத*** - *இராமனே!;* ***கேள் என*** - *கேட்பாயாக என்று;* ***தயரதன் உரை செய்வான்*** - *தயரதசக்கரவர்த்தி அவனுக்குப் பதில்கூறுவான்;* ***மறுஇல் பரதன் அன்னது பெறுக*** - *குற்றமற்ற பரதன் (நீ கேட்ட வண்ணம்) என் மகனாகி உனக்குத் தம்பியாம் உரிமை பெறுக;* ***தான் முடியினைப் பறித்து*** - *உனக்கு அளிக்க இருந்த முடியினைத் தானே கூடாது என்று பிடுங்கி;* ***இவ்விரத வேடம் மற்று உதவிய பாவிமேல்*** - *இம் மரவுரிக் கோலத்தை வேறாக உனக்குத் தந்த பாவியாகிய கைகேயிபால்;* ***விளிவு சரதம் நீங்கலதாம் என்றான் தழீஇய கை தளர*** - *கோபமானது உறுதியாக என்னைவிட்டு நீங்கவில்லை என்று இராமனைத் தழுவிக் கொண்டிருந்தகைகள் தழுவுதல் விட்டுத் தளரக் கூறினான்.*

*கைகேயிபால் கோபம் நீங்காத தயரதன் அவளை மனைவியாக ஏற்றுக் கொள்ளாதவரை பரதன் மகனாவது எங்ஙனம்? அடிமரத்தை வெட்டிவிட்டு நுனிமரம் தழைக்க வேண்டும் என்று கூறுவது போல் இஃது அமையும் ஆதலின், மீண்டும் கைகேயியைப் பற்றி இராமன் தயரதனிடம் கேட்பான் ஆயினன்.*

### *கைகேயியின் பால் தயரதன் கோபம் தணிந்து விண் ஏகுதல்*

***10081. 'ஊன் பிழைக்கிலா உயிர் நெடிது அளிக்கும் நீள் அரசை***
***வான் பிழைக்கு இது முதல் எனாது, ஆள்வுற மதித்து,***
***யான் பிழைத்தது அல்லால், என்னை ஈன்ற எம் பிராட்டி-***
***தான் பிழைத்தது உண்டோ?' என்றான், அவன் சலம் தவிர்ந்தான்.***

*(இராமன்)* ***ஊன் பிழைக்கிலா உயிர் நெடிது அளிக்கும் நீள் அரசை*** - *உடலோடு கூடிய சீவாத்மாக்களைச் சிறிதும் தவறு வராமல் பாதுகாக்கும் பெரிய அரசுரிமையை;* ***வான் பிழைக்கு இது முதல் எனாது*** - *பெருங்குற்றத்திற்கெல்லாம் இது அடிப்படையான காரணம் ஆகும் என்று கருதாமல்;* ***ஆள்வுற மதித்து*** - *ஏற்று ஆளக் கருதி;* ***யான் பிழைத்தது அல்லால்*** - *நான் தவறு செய்தேனே அல்லாமல்;* ***என்னை ஈன்ற எம்பிராட்டி*** - *என்னைப் பெற்ற மாதாவாகிய கைகேயி அன்னையான;* ***தான் பிழைத்தது உண்டோ? என்றான்*** - *அவள் தவறு செய்தது உண்டோ என்று கேட்டான்;* ***அவன் சலம் தவிர்ந்தான்*** - *தயரதன் இராமன் புகழ் பெறுதற்கும், தான் மகனால் பெருமை அடைதற்கும் கைகேயி கேட்ட வரமே காரணம் என்பதுணர்ந்து அவள்பாற் கொண்ட கோபம் நீங்கினான்; அவளை மனைவியாக அங்கீகரித்தான் என்பதாம்.*

*'பின்குற்றம் மன்னும் பயக்கும் அரசு என்றல் பேணேன்; மன்னன் 'முடிகொள்க, எனக் கொண்டது என் குற்றம் அன்றோ' என்பதை (கம்ப. 1733) இங்குக் கருதுக.*

*இப்படலத்து தயரதன் இராமனால் பெற்ற பெருஞ் சிறப்புகளாக 118, 119 ஆம் பாடல்களில் (கம்ப. 10069, 70) குறிப்பிடப்பட்டவைகள் இராமனது வனவாசத்தால் அன்றோ கிடைத்தன என்பதை உணர்ந்து 'கைகேயி கேட்டவரத்தால் இராமன் புகழ் உயர்ந்தது; இராமனால் நான் பெருமை அடைந்தேன்' என்று கைகேயிபால் கோபம் நீங்கப் பெற்றான் தயரதன் என்க.*

***10082. எவ் வரங்களும் கடந்தவன் அப் பொருள் இசைப்ப,***
***'தெவ் வரம்பு அறு கானிடைச் செலுத்தினாட்கு ஈந்த***
***அவ் வரங்களும் இரண்டு; அவை ஆற்றினார்க்கு***
***ஈந்த***
***இவ் வரங்களும் இரண்டு' என்றார், தேவரும் இரங்கி.***

***எவ் வரங்களும் கடந்தவன்*** *- யாரிடமும் வரம் வேண்டுமாறு இல்லாது, எல்லார்க்கும் வரம் ஈபவன் ஆதலின்) எல்லா வரங்களுக்கும் அப்பாற்பட்டவனாகிய இராமன்;* ***அப்பொருள் இசைப்ப*** *- அவ்வாறு கூற;* ***'தெவ்வரம்பு அறுகானிடைச் செலுத்தினாட்கு ஈந்த அவ்வரங்களும் இரண்டு*** *- வரம்பற்ற பகைவர்களை உடைய காட்டுக்கு இராமனை அனுப்பிய கைகேயிக்கு அளித்த அந்த வரங்களும் இரண்டு;* ***அவை ஆற்றினாற்கு ஈந்த இவ்வரங்களும் இரண்டு'*** *- அவ்வரங்களின்படி நடந்து செய்து முடித்தவனாகிய இராமனுக்குத் தந்த இந்த வரங்களும் இரண்டு;* ***என்றார்*** *- என்று கூறினர்;* ***தேவரும் இரங்கி*** *- தேவர்களும் மனம் உருகி.*

***10083. வரம் இரண்டு அளித்து, அழகனை, இளவலை,***
***மலர்மேல்***
***விரவு பொன்னினை, மண்ணிடை நிறுத்தி,***
***விண்ணிடையே உரவு மானம்மீது ஏகினன் -***
***உம்பரும் உலகும்***
***பரவும் மெய்யினுக்கு உயிர் அளித்து, உறு புகழ்***
***படைத்தோன்.***

***உம்பரும் உலகும் பரவும் மெய்யினுக்கு உயிர் அளித்து உறுபுகழ் படைத்தோன்*** *- தேவர்களும் உலகமும் பரவுகின்ற சத்தியத்துக்காகத் தன்னுயிரைத் தந்து பெரும்புகழ் படைத்த தயரதன்;* ***இரண்டு வரம் அளித்து*** *- இராமனுக்கு இரண்டு வரம் தந்து;* ***அழகனை இளவலை, மலர்மேல் விரவு பொன்னினை மண்ணிடை நிறுத்தி, உரவு மானம் மீது விண்ணிடையே ஏகினன்*** *- இராமனை, இலக்குவனை, தாமரை மேல் வீற்றிருக்கும் திருமகளாகிய சீதையைப் பூமியின்கண் நிற்கும்படிச்செய்து, வலிய விமானம்மேல் ஏறி மேல் உலகத்திடத்துச் சென்று சேர்ந்தான்.*

## *இராமன் தேவர்களிடம் வரம்வேண்டல்*

***10084. கோட்டு வார் சிலைக் குரிசிலை அமரர்தம் குழாங்கள்***
***மீட்டும் நோக்குறா, ''வீர! நீ வேண்டுவ வரங்கள்***
***கேட்டியால், என, 'அரக்கர்கள் கிளர் பெருஞ்***
***செருவில்***
***வீட்ட, மாண்டுள குரங்கு எலாம் எழுக!' என***
***விளம்பி.***

***கோட்டு வார் சிலைக்குரிசிலை அமரர்தம் குழாங்கள் மீட்டும் நோக்குறா*** - *வளைந்த நீண்ட வில்லேந்திய இராமனைத் தேவர்கூட்டங்கள் திரும்பவும் பார்த்து;* ***வீர!*** - *வீரனே!;* ***நீ வேண்டுவ வரங்கள் கேட்டியால்' என*** - *நீ விரும்பும் வரங்களைக் கேட்பாயாக என்று கூற; (இராமன்)* ***'அரக்கர்கள் கிளர் பெருஞ் செருவில் வீட்ட மாண்டுள குரங்கு எலாம் எழுக' என விளம்பி*** - *அரக்கர்கள் மிக்கு எழுந்த போரிலே கொல்ல இறந்து போன குரங்குகள் எல்லாம் மீண்டும் உயிர் பெற்று எழுக எனக் கேட்டு;*

***10085. பின்னும் ஓர் வரம், ' வானரப் பெருங் கடல் பெயர்ந்து,***
***மன்னு பல் வனம், மால் வரைக் குலங்கள், மற்று***
***இன்ன***
***துன் இடங்கள், காய் கனி கிழங்கோடு தேன் துற்ற,***
***இன் உண் நீர் உளவாக! என இயம்பிடுக' என்றான்.***

***பின்னும் ஓர் வரம்*** - *மீண்டும் ஒரு வரம்;* ***வானரப் பெருங் கடல் பெயர்த்து மன்னு*** - *வானர சேனையானது இடம் மாறிச் சென்று நிலைக்கின்ற;* ***பல்வனம், மால் வரைக் குலங்கள்,மற்று இன்ன துன் இடங்கள்*** - *பல காடுகள், பெரிய மலைக் கூட்டங்கள், மற்றும் இதுபோன்ற வானரம் வாழ் இடங்கள் எல்லாம்;* ***காய், கனி, கிழங்கோடு தேன் துற்ற இன் உண் நீர் உளவாக'*** - *காயும் பழமும் கிழங்குகளும் நிறைந்து, தேன்களும் நெருங்க, உண்ணுதற்கு இனிய குடிநீரும் நிரம்பப் பெறுக;* ***'என இயம்பிடுக'*** - *என்று வரம் தருக;* ***என்றான்*** - *என்று கேட்டான்.*

***10086. வரம் தரும் முதல், மழுவலான், முனிவரர், வானோர்***
***புரந்தராதி, மற்று ஏனையோர், தனித் தனி புகழ்ந்து***
***ஆங்கு,***
***'அரந்தை வெம் பிறப்பு அறுக்கும் நாயக! நினது***
***அருளால்***

*குரங்கு இனம் பெறுக!' என்றனர், உள்ளமும்*
*குளிர்ப்பார்.*

***வரம் தரும் முதல்*** - *வரம் கொடுக்கும் தன்மையனாய பிரமன்;* ***மழுவலான்*** - *சிவன்;* ***முனிவரர், வானோர்*** - *முனிவர்கள், தேவர்கள்;* ***புரந்தராதி மற்று ஏனையோர்*** - *இந்திரன் முதலாக மற்றுள்ளவர்கள்;* ***தனித்தனி ஆங்கு புகழ்ந்து*** - *தனித்தனியாக இராமனை அவ்விடத்தே பாராட்டி;* ***அரந்தை வெம்பிறப்பு அறுக்கும் நாயக!*** - *துன்பம் தரும் பிறவியை வேரோடு களையும் பெருமானே!;* ***'குரங்கு இனம்*** - *குரங்குக்கூட்டம்;* ***நினது அருளால்*** - *உன்னுடைய பரமகருணையால்;* ***பெறுக' என்றனர் உள்ளமும் குளிர்ப்பார்*** - *நீ கேட்ட அனைத்தையும் பெறுவதாக என்று மனம் குளிர்ந்து கூறினார்கள்.*

*மனக்குளிர்ச்சி இராமன் தன் பொருட்டுப் போர்க்கு வந்த குரங்கினத்துக்கு நன்றிக் கடனாகவே வரங்கள் கேட்டான் என்ற பேரருளை நினைந்து என்க.*

*10087.* ***முந்தை நாள் முதல் கடை முறை அளவையும் முடிந்த***
***அந்த வானரம் அடங்கலும் எழுந்து, உடன் ஆர்த்து,***
***சிந்தையோடு கண் களிப்புறச் செரு எலாம்***
***நினையா,***
***வந்து தாமரைக் கண்ணனை வணங்கின, மகிழ்ந்து.***

***முந்தை நாள் முதல் கடை முறை அளவையும் முடிந்த*** - *போர் தொடங்கிய முதல் நாள் முதலாக இறுதி நாள் வரையும் இறந்துபோன;* ***அந்த வானரம் அடங்கலும் எழுந்து*** - *அந்த குரங்குகள் எல்லாம் உயிர் பெற்று எழுந்து;* ***உடன் ஆர்த்து*** - *சேர்ந்து பேரொலி செய்து;* ***சிந்தை யோடு கண்களிப்புற*** - *மனமும் கண்ணும் மகிழ்ச்சி அடைய;* ***செருஎலாம் நினையா*** - *நடந்த போர்களை எல்லாம் நினைத்து;* ***மகிழ்ந்து வந்து தாமரைக் கண்ணனை வணங்கின*** - *உவகையோடு வந்து இராமபிரானைக் கும்பிட்டன.*

*10088.* ***கும்பகன்னனோடு இந்திரசித்து, வெங் குலப் போர்***
***வெம்பு வெஞ் சினத்து இராவணன், முதலிய வீரர்***
***அம்பின் மாண்டுள வானரம் அடங்க வந்து ஆர்ப்ப,***
***உம்பர் யாவரும் இராமனைப் பார்த்து, இவை***
***உரைத்தார்:***

***கும்பகன்னனோடு இந்திர சித்து*** -*;* ***வெங்குலப் போர் வெம்பு வெஞ்சினத்து இராவணன் முதலிய வீரர்*** - *கொடிய உயர்ந்த போரில் சீறுகின்ற கொடுஞ்சினத்தை உடைய இராவணன் முதலிய வீரர்களும்;* ***அம்பின் மாண்டுள வானரம் அடங்க வந்து***

***ஆர்ப்ப*** - *அம்பினால் இறந்து போன குரங்குகள் ஒன்று சேர வந்து ஆரவாரம் செய்ய;* ***உம்பர் யாவரும்*** - *தேவர்கள் எல்லாம்;* ***இராமனைப் பார்த்து*** *-;* ***இவை உரைத்தார்*** - *பின் வருவனவற்றைச் சொன்னார்கள்.*

## *தேவர்கள் இராமனுக்கு உரைத்தல்*

***10089. 'இடை உவாவினில் சுவேலம் வந்து இறுத்து, எயில் இலங்கைப்***
***புடை அவாவுறச் சேனையை வளைப்பு உறப் போக்கி,***
***படை அவாவுறும் அரக்கர்தம் குலம் முற்றும் படுத்து,***

***கடை உவாவினில் இராவணன் தன்னையும் கட்டு.***

***இடை உவாவினில் சுவேலம் வந்து இறுத்து*** - *தேய்பிறைப் பக்கத்து அட்டமித்திதியில் இலங்கையுள்ள இடமான சுவேலமலையில் வந்து தங்கி;* ***எயில் இலங்கைப் புடை அவாவுறச் சேனையை வளைப்புறப் போக்கி*** - *மதில் சூழ்ந்த இலங்கையைச் சுற்றிப பக்கத்தில் விரும்பி வளைத்துக் கொள்ளும்படி சேனையைச் செலுத்தி;* ***படைஅவாவுறும் அரக்கர்தம் குலம் முற்றும் படுத்து*** - *படையின் கண் எப்பொழுதும் ஆசைப்படுகின்ற அரக்கர்கள் குலம் முழுவதையும் கொன்று;* ***கடை உவாவினில்*** - *இறுதியான அமாவாசை நாளில்;* ***இராவணன் தன்னையும் கட்டு*** - *இராவணனையும் அழித்து.*

***10090. ''வஞ்சர் இல்லை இவ் அண்டத்தின்'' எனும்படி மடித்த***
***கஞ்ச நாள் மலர்க் கையினாய்! அன்னை சொல் கடவா,***
***அஞ்சொடு அஞ்சு நான்கு என்று எணும் ஆண்டு போய் முடிந்த;***
***பஞ்சமிப் பெயர் படைத்துள திதி இன்று பயந்த.***

***வஞ்சர் இல்லை இவ் அண்டத்தின் எனும்படி மடித்த கஞ்ச நாள் மலர்க் கையினாய்*** - *இவ்வுலகத்தில் வஞ்சகர்களே இல்லை என்னும்படி அழித்தொழித்த தாமரையின் அன்றலர்ந்த மலர்போலும் கைகளை உடைய இராகவனே!;* ***அன்னை சொல் கடவா*** - *கைகேயியாகிய தாய் சொன்ன சொல்லை மீறாத;* ***அஞ்சொடு அஞ்சு நான்கு எனும் ஆண்டு போய் முடிந்த*** - *பதினான்கு என்கின்ற ஆண்டுகள் சென்று கழிந்து விட்டன;* ***இன்று பஞ்சமிப் பெயர் படைத்துள திதி பயந்த*** - *இன்றைய நாள் பஞ்சமி என்னும் பெயர் பெற்றுள்ள திதியைப் பெற்றுள்ளது.*

***10091. 'இன்று சென்று, நீ பரதனை எய்திலை என்னின்***
***பொன்றுமால் அவன் எரியிடை; அன்னது போக்க,***
***வென்றி வீர! நீ போதியால்' என்பது விளம்பா,***
***நின்ற தேவர்கள் நீங்கினார்; இராகவன் நினைந்தான்.***

***'வென்றிவீர்!*** - *வெற்றியை உடைய வீரனே!;* ***நீ இன்று சென்று பரதனை எய்திலை என்னின் அவன் எரியிடை பொன்றுமால்*** - *நீ இன்றே போய் அயோத்தியில் பரதனை அடையவில்லை ஆனால் அப்பரதன் நெருப்பில் வீழ்ந்து உயிர்துறப்பான்;* ***நீ போதியால்'*** - *நீ (விரைந்து அயோத்திக்குப் போவாயாக;* ***என்பது விளம்பா*** - *என்பதைச் சொல்லி;* ***நின்ற தேவர்கள் நீங்கினார்*** - *(வரம் கொடுத்து ஆண்டு) நின்ற தேவர்கள் விலகிச் சென்றார்கள்;* ***இராகவன் - ; நினைந்தான்*** - *புறப்பட எண்ணினான்.*

*வீடணன் புட்பகவிமானம் கொணர்தல்*

***10092. 'ஆண்டு பத்தொடு நாலும் இன்றோடு அறும்ஆயின்,***
***மாண்டதாம் இனி என் குலம், பரதனே மாயின்;***
***ஈண்டுப் போக ஓர் ஊர்தி உண்டோ?' என, 'இன்றே***
***தூண்டு மானம் உண்டு' என்று, அடல் வீடணன்***
***தொழுதான்.***

*(இராமன்) '* ***ஆண்டு பத்தொடு நாலும் இன்றோடு அறும் ஆயின்*** - *பதினான்கு ஆண்டுகளும் இன்றோடு முடிந்து போகுமானால்;* ***பரதனே மாயின்*** - *பரதன் இறந்து படுவானாயின்;* ***இனி என் குலம் மாண்டதாம்*** - *இனிமேல் என் சூரிய குலம் முடிந்து போயிற்று என்றே ஆகும்;* ***ஈண்டுப் போக ஓர் ஊர்தி உண்டோ?' என*** - *விரைந்து அயோத்திக்குச் செல்ல ஓர் வாகனம் இருக்கிறதா? என்று கேட்க;* ***அடல் வீடணன்*** - *வலிய வீடணன்;* ***'இன்றே தூண்டு மானம் உண்டு' என்று தொழுதான்'*** - *இன்றைக்கே அயோத்தி சென்று சேரச் செலுத்துகின்ற விமானம் உள்ளது என்று சொல்லி வணங்கினான்.*

*பரதன் இறந்தால் தொடர்ந்து அனைவரும் இறப்பர் ஆதலின் குலம் மாண்டது என்றான். விமானம் - புட்பகம்.*

***10093. வாங்கினான் இரு நிதியொடு தனதனில், வள்ளால்!***
***ஓங்குமால், வெள்ளம் ஏழு பஃது ஏறினும், ஒல்காது;***
***ஈங்கு உளார் எலாம் இவருவது; இவரின் நீ இனிது***

***பூங் குலா நகர் புகுதி, இஞ் ஞான்று' எனப் புகன்றான்.***

*(மீண்டும் வீடணன்)'* ***வள்ளல்!*** *- இராமனே!;* ***தனதனில் இரு நிதியோடு வாங்கினான்*** *- குபேரனிடத்திருந்து (இராவணன்) பெருஞ்செல்வத்தோடு (இவ்விமானத்தைக்) கைப்பற்றிக்* ***கொண்டான்; ஓங்குமால்*** *- (இவ்விமானம்) உயர்ந்து செல்ல வல்லது;* ***வெள்ளம் ஏழுபஃது ஏறினும், ஒல்காது*** *- எழுபது வெள்ளம் குரங்குச் சேனைகளும் ஏறினாலும் தளராது;* ***ஈங்கு உளார் எலாம் இவருவது*** *- இங்கே உள்ளவர்கள் அனைவரும் ஏறிச் செல்லக் கூடியது;* ***இவரின்*** *- இதில் ஏறினாய் ஆனால்;* ***நீ இஞ்ஞான்று பூங் குலாநகர் இனிது புகுதி'*** *- நீ இன்றைக்கே பொலிவு நிறைந்த அயோத்தி நகர்க்கு இனிமையாகப் போய்ச் சேர்வாய்;* ***எனப் புகன்றான்*** *- என்று சொன்னான்.*

*10094.* ***'இயக்கர் வேந்தனுக்கு அரு மறைக் கிழவன் அன்று ஈந்த,***
***துயக்கு இலாதவர் மனம் எனத் தூயது, சுரர்கள்***
***வியக்க வான் செலும் புட்பக விமானம் உண்டு' என்றே***
***மயக்கு இலான் சொல, 'கொணருதி வல்லையின்' என்றான்.****

***மயக்கு இலான்*** *- மனமயக்கமாகிய அஞ்ஞானம் அற்ற மகா ஞானியாகிய வீடணன்;* ***'இயக்கர் வேந்தனுக்கு*** *- யக்ஷர்களின் அரசனான குபேரனுக்கு;* ***அருமறைக் கிழவன்*** *- வேதத்தலைவனாகிய பிரமன்;* ***அன்று ஈந்த*** *- முன்னாளில் கொடுத்ததும்;* ***துயக்கு இலாதவர் மனம் எனத் தூயது*** *- குற்றமற்ற ஞானியர் மனம் போலத் தூய்மையானதும்;* ***சுரர்கள் வியக்க வான் செலும்*** *- தேவர்களும் அதிசயிக்கும்படி வானவீதியில் செல்வதும் ஆகிய; புட்பக விமானம் உண்டு என்றே சொல-;* ***(அதுகேட்ட இராமன்) 'வல்லையின் கொணருதி'*** *- விரைவாகக் கொண்டு வருக; என்றான் -*

*10095.* ***அண்டகோடிகள் அனந்தம் ஒத்து, ஆயிரம் அருக்கர்***
***விண்டது ஆம் என விசும்பிடைத் திசை எலாம் விளங்க***
***கண்டை ஆயிர கோடிகள் மழை எனக் கலிப்ப,***
***கொண்டு அணைந்தனன் நொடியினின், அரக்கர்தம் கோமான்.****

***அனந்தம் அண்ட கோடிகள் ஒத்து*** - கணக்கற்ற உலக உருண்டைகள் கோடிக்கணக்காகச் சேர்ந்தாற் போலப் பெரியதாய்; ***ஆயிரம் அருக்கர் விண்டது ஆம் என விசும்பிடைத் திசை எலாம் விளங்க*** - ஆயிரம் சூரியர்கள் ஒருசேர வெளிப்பட்டுப் பிரகாசித்தாற் போலத் தன் பேரொளியால் ஆகாயத்திடத்துத் திக்குகள் எல்லாம் விளக்கமுறவும்; ***ஆயிரகோடி கண்டைகள் மழை எனக் கலிப்ப*** - (தன்னிடம் கட்டிய) ஆயிரகோடிக் கணக்கான பெரிய மணிகள் மழை போல ஒலிக்கவும் (புட்பக விமானத்தை) ***அரக்கர்தம் கோமான்*** - அரக்கர்க்கு அரசனான வீடணன்; ***நொடியினின் கொண்டு அணைந்தனன்*** - ஒரு மாத்திரைப் பொழுதில் (இராமன் முன்) கொண்டு வந்து சேர்த்தான்.

## *இராமன், சீதை, இலக்குவன் விமானத்தில் ஏறுதல்*

***10096. 'அனைய புட்பக விமானம் வந்து அவனியை அணுக,***
***இனிய சிந்தனை இராகவன் உவகையோடு, 'இனி***
***நம்***
***வினையம் முற்றியது' என்று கொண்டு ஏறினன்;***
***விண்ணோர்***
***புனை மலர் சொரிந்து ஆர்த்தனர், ஆசிகள்***
***புகன்றே.***

***அனைய புட்பக விமானம் வந்து அவனியை அணுக*** - அத்தகைய புட்பக விமானமானது வந்து தரையிறங்க; ***இனிய சிந்தனை இராகவன்*** - நற்சிந்தனைகளை உடைய இராமன்; ***உவகையோடு*** - மகிழ்ச்சியோடு; ***'இனி நம் வினையம் முற்றியது' என்று கொண்டு ஏறினன்*** - இனி (பரதனைக் காத்தலாகிய) நம் செயல் நிறைவேறியது என்று மனத்திற் கொண்டு ஏறினான்; ***விண்ணோர் ஆசிகள் புகன்று புனைமலர் சொரிந்து ஆரவாரித்தனர்*** - தேவர்கள் வாழ்த்துரைத்து சூடும் மலர்களைத் தூவி மகிழ்வொலி செய்தனர்.

***10097. வணங்கு நுண் இடைத் திரிசடை வணங்க, வான்***
***கற்பிற்கு***
***இணங்கர் இன்மையாள் நோக்கி, 'ஓர் இடர் இன்றி***
***இலங்கைக்கு***
***அணங்குதான் என இருத்தி' என்று, ஐயன்மாட்டு***
***அணைந்தாள்;***
***மணம் கொள் வேல் இளங் கோளரி மானம் மீப்***

***படர்ந்தான்.****

***வான்கற்பிற்கு இணங்கர் இன்மையாள்*** - *சிறந்த கற்பிற்குத் தன்னோடு ஒப்பவர்கள் இல்லாது உயர்ந்தாளாகிய சீதை;* ***வணங்கு நுண் இடைத் திரிசடை வணங்க*** - *வளைந்த மிகச் சிறியதாகிய இடையை உடைய திரிசடை வந்து வணங்க;* ***நோக்கி*** - *அவளைப் பார்த்து;* ***'ஓர் இடர் இன்றி இலங்கைக்கு அணங்குதான் என இருத்தி' என்று*** - *ஒரு சிறிதும் துன்பம் இல்லாமல் இலங்கை நகரத்துக்கு ஒரு தெய்வப் பெண்ணாக இருப்பாயாக என்று ஆசி கூறி;* ***ஐயன் மாட்டு அணைந்தாள்*** - *இராமபிரானிடம் புட்பகவிமானத்தில் வந்து சேர்ந்தாள்;* ***மணம் கொள் வேல் இளம் கோளரி மானம் மீப் படர்ந்தான்*** - *புலால் மணம் கமழும் வேலையுடைய இளைய சிங்கமாகிய இலக்குவன் விமானத்தின் மேல் ஏறினான்.*

## *இராமன் துணைவர்க்கு விடைதரல்*

***10098. அண்டம் உண்டவன் மணி அணி உதரம் ஒத்து,***
***அனிலன்***
***சண்ட வேகமும் குறைதர, நினைவு எனும்***
***தகைத்தாய்,***
***விண்தலம் திகழ் விமான புட்பகம் எனும்***
***அதன்மேல்***
***கொண்ட கொண்டல், தன் துணைவரைப் பார்த்து,***
***இவை குணித்தான்:****

***அண்டம் உண்டவன் மணி அணி உதரம் ஒத்து*** - *உலகம் உண்ட திருமாலினது மணிகளால் அழகு பெற்ற வயிற்றை ஒத்து;* ***அனிலன் கண்ட வேகமும் குறைதர*** - *வாயு தேவனது அளப்பரிய ஊழிக்கால வேகமும் குறைவு என்னும்படி;* ***நினைவு எனும் தகைத்தாய்*** - *மனோ வேகம் என்று சொல்லும் படியாக;* ***விண்தலம் திகழ் விமான புட்பகம் என்னும் அதன் மேல்*** - *விண்ணிடத்தே விளங்குகின்ற புட்பக விமானம் என்கின்ற அதன்மேல்;* ***கொண்ட கொண்டல்*** - *ஏறிய கார்நிறத்தண்ணல்;* ***தன் துணைவரைப் பார்த்து*** - *தன் துணைவர்களாகிய விபீடணன், சுக்ரீவன் முதலியவர்களைப் பார்த்து;* ***இவை குணித்தான்*** - *பின் வரும்சொற்களை ஆலோசித்துக் கூறலானான்.*

***10099. வீடணன்தனை அன்புற நோக்குறா, விமலன்,***
***'தோடு அணைந்த தார் மவுலியாய்! சொல்வது,***
***ஒன்று உளது; உன்***
***மாடு அணைந்தவர்க்கு இன்பமே வழங்கி, நீள்***
***அரசின்,***
***நாடு அணைந்தவர் புகழ்ந்திட, வீற்றிரு நலத்தால்.****

***விமலன்*** - *மலமற்றவனாகிய பரம்பொருள்;* ***வீடணன்தனை அன்புற நோக்குறா*** - *வீடணனை அன்பு பொருந்தப் பார்த்து;* ***'தோடு அணைந்த தார் மவுலியாய்!*** - *இதழ்கள் நெருங்கிய மாலை அணிந்த முடியை உடையவனே!;* ***சொல்வது ஒன்று உளது*** - *உனக்குச் சொல்ல வேண்டுவது ஒன்று இருக்கிறது;* ***நீள் அரசின்*** - *நீண்ட இலங்கை அரசில்;* ***உன் மாடு அணைந்தவர்க்கு இன்பமே வழங்கி*** - *உன்பக்கத்தில் சேர்ந்தவர்களுக்கு இன்பத்தையே கொடுத்து;* ***நாடு அணைந்தவர் புகழ்ந்திட*** - *உன் நாட்டில் உள்ளவர் அனைவரும் புகழுமாறு;* ***நலத்தால் வீற்றிரு*** - *நன்மையோடு அரசு வீற்றிருப்பாயாக.*

***10100. 'நீதி ஆறு எனத் தெரிவுறு நிலைமை பெற்று உடையாய்!***
***ஆதி நான்மறைக் கிழவன் நின் குலம் என அமைந்தாய்!***
***ஏதிலார் தொழும் இலங்கை மா நகரினுள், இனி நீ***
***போதியால்' எனப் புகன்றனன் - நான் மறை புகன்றான்.****

***நான் மறை புகன்றான்*** - *நான்கு வேதங்களையும் சொல்லிய இராமன்.* ***நீதி ஆறு எனத் தெரிவுறு நிலைமை பெற்று உடையாய்!*** - *நீதி வழி இதுவே என உன்னைக் கண்டு உலகம் விளங்கிக்கொள்ளும் தன்மையான குணம் செயல்களை உடையவனே!* ***ஆதி நான் மறைக் கிழவன் நின் குலம் என அமைந்தாய்!*** - *மூலமான பிரமதேவன் உன்னுடைய குலம் என்று சொல்லும்படி தோன்றியவனே!;* ***எதிலார் தொழும் இலங்கை மாநகரினுள்*** - *பகைவரும் அஞ்சி வணங்கும் இலங்கை எனும் பெரிய நகரத்துள்;* ***'இனி நீ போதியால்' என ப் புகன்றனன்*** - *இனி நீ செல்வாயாக என்று சொன்னான்.*

***10101. 'சுக்கிரீவ! நின் தோளுடை வன்மையால் தசம் தொகு***
***அக் கிரீவனைத் தடிந்து, வெம் படையினால் அசைந்த***
***மிக்க வானரச் சேனையின் இளைப்பு அற மீண்டு, ஊர்***
***புக்கு, வாழ்க!' எனப் புகன்றனன் - ஈறு இலாப் புகழோன்.****

***ஈறு இலாப் புகழோன்*** - *முடிவில்லாத புகழை உடைய இராமன்; 'சுக்கிரீவ!;* ***நின் தோள் உடை வன்மையால் தசம் தொகு சுக்கிரீவனைத் தடிந்து*** - *உன்னுடைய தோள் பலத்தால் பத்து என்று தொக்க அம் முடிகளை உடைய இராவணனைக் கொன்று;* ***வெம்படையினால் அசைந்த*** - *கொடிய போர் ஆயுதங்களால் தளர்ந்த;* ***மிக்க வானரச்***

***சேனையின் இளைப்பு அற மீண்டு*** - அளவுகடந்த குரங்குச் சேனையின் களைப்பு நீங்கும் படி திரும்பி; ***ஊர் புக்கு வாழ்க!'*** - கிட்கிந்தை புகுந்து வாழ்வாயாக; ***எனப் புகன்றனன்*** - என்று கூறினான்.

***10102. வாலி சேயினை, சாம்பனை, பனசனை, வயப் போர்***
***நீலன் ஆதிய நெடும் படைத் தலைவரை, நெடிய***
***காலின் வேலையைத் தாவி மீண்டு அருளிய***
***கருணை***
***போலும் வீரனை, நோக்கி, மற்று இம் மொழி***
***புகன்றான்.****

***வாலி சேயினை*** - அங்கதனை; ***சாம்பனை, பனசனை வயப் போர் நீலன் ஆதிய நெடும் படைத்தலைவரை -; நெடிய காலின்*** - நீண்ட காலால்; ***வேலையைத் தாவி மீண்டு அருளிய கருணை போலும் வீரனை*** - கடலைத் தாண்டித் திரும்ப வந்துரைத்த தன் கருணையைபோன்ற அனும வீரனை; ***நோக்கி*** - பார்த்து; ***மற்று இம்மொழி புகன்றான்*** - வேறு இந்த சொற்களை உரைத்தான்.

*வயம் - வலி. ஒரு சிலர்பெயர் குறித்தமையால் படையில் உள்ள குமுதன், நளன் போன்றோர்க்கும் உபலட்சணமாகக் கொள்க.*

### *துணைவர் வேண்டுகோளை இராமன் ஏற்றல்*

***10103. ஐயன் இம் மொழி புகன்றிட, துணுக்கமோடு***
***அவர்கள்,***
***மெய்யும் ஆவியும் குலைதர, விழிகள் நீர் ததும்ப,***
***செய்ய தாமரைத் தாள் இணை முடி உறச் சேர்த்தி,***
***'உய்கிலேம், நின்னை நீங்கின்' என்று இனையன***
***உரைத்தார்.****

***ஐயன் இம்மொழி புகன்றிட*** - இராமன் இச்சொற்களைச் சொல்ல; ***அவர்கள் துணுக்கமோடு*** - துணைவர்கள் நடுக்கத்தோடு; ***மெய்யும் ஆவியும் குலைதர*** - உடம்பும் உயிரும் நிலைதடுமாற; ***விழிகள் நீர் ததும்ப*** - கண்களில் நீர் குலுங்க; ***செய்ய தாமரைத் தோள்இணை முடி உறச் சேர்த்தி*** - இராமனது சிவந்த தாமரையனைய திருவடி இணைகளைத் தங்கள் முடியின்கண் பொருந்த வணங்கி; ***'நின்னை நீங்கின் உய்கிலேம்' என்று*** - உன்னைப் பிரிந்தால் உயிர் வாழேம் என்று; ***இனையனை உரைத்தார்*** - பின்வரும் வாசகங்களைச் சொன்னார்கள்.

***10104. 'பார மா மதில் அயோத்தியின் எய்தி, நின் பைம் பொன்***
***ஆர மா முடிக் கோலமும் செவ்வியும் அழகும்,***
***சோர்வு இலாது, யாம் காண்குறும் அளவையும் தொடர்ந்து,***
***பேரவே அருள்' என்றனர் - உள் அன்பு பிணிப்பார்.****

***உள்அன்பு பிணிப்பார்*** *- இராமனிடத்து அகம் நிறைந்த அன்பினால் கட்டுப்பட்டவராய் அவர்;* ***'பாரமாமதில் அயோத்தியில் எய்தி*** *- மிகப்பெரிய மதிலாற் சுற்றப்பட்ட அயோத்தி மாநகரை அடைந்து;* ***நின் பைம்பொன் ஆர மாமுடிக் கோலமும் செவ்வியும் அழகும்*** *- (அங்கே) உன்னுடைய பசியபொன்னாலும் முத்தாலும் ஆகிய பெரிய முடியை அணிந்து கொள்ளும் பட்டாபிடேகக் காட்சியும் ஒளியும் அழகும்;* ***யாம் சோர்விலாது காண்குறும் அளவையும்*** *- நாங்கள் சோர்வில்லாமல் கண்டு மகிழும் வரை;* ***தொடர்ந்து பேரவே அருள்'*** *- உன்னைப் பின்பற்றி வந்து திரும்புவதற்கு அருள் செய்க;* ***என்றனர்*** *- .*

***10105. அன்பினால் அவர் மொழிந்த வாசகங்களும், அவர்கள்***
***துன்பம் எய்திய நடுக்கமும், நோக்கி, 'நீர் துளங்கல்;***
***முன்பு நான் நினைந்திருந்தது அப் பரிசு; நும் முயற்சி***
***பின்பு காணுமாறு உரைத்தது' என்று உரைத்தனன் - பெரியோன்.***

***பெரியோன்*** *- உயர்ந்தோனாகிய இராமன்;* ***அவன் அன்பினால் மொழிந்த வாசகங்களும்*** *- துணைவர்கள் தன்மாட்டுக் கொண்ட உள்ளன்பால் கூறிய வார்த்தைகளும்;* ***துன்பம் எய்திய அவர்கள் நடுக்கமும்*** *- துன்பம் அடைந்தபடியால் அவர்களுக்கு உண்டாகிய நடுக்கத்தையும்;* ***நோக்கி*** *- பார்த்து;* ***நீர்துளங்கல்*** *- நீங்கள் கலங்க வேண்டா;* ***முன்பு நான் நினைத்திருந்தது அப்பரிசு*** *- முன்னால் நான் மனத்தில் எண்ணியது (உங்களையும் அயோத்திக்கு உடன் அழைத்துச் செல்வதாகிய) அதையேதான்;* ***நும் முயற்சி பின்பு காணுமாறு உரைத்தது*** *- உங்கள் செயலைப் பின்னால் அறியும்படி அவ்வாறு கூறினேன்;* ***என்று உரைத்தான்*** *- என்பதாகக் கூறினான்.*

***10106. ஐயன் வாசகம் கேட்டலும், அரி குலத்து அரசும்,***
***மொய் கொள் சேனையும், இலங்கையர் வேந்தனும், முதலோர்***
***வையம் ஆளுடை நாயகன் மலர்ச் சரண் வணங்கி,***
***மெய்யினோடு அருந் துறக்கம் உற்றார் என வியந்தார்.****

***ஐயன் வாசகம் கேட்டலும்*** - *இராமன் கூறிய அவ்வார்த்தைகளைக் கேட்டவுடன்;* ***அரிகுலத்து அரசும் மொய்கொள் சேனையும் இலங்கையர் வேந்தனும் முதலோர்*** - *குரங்குச் கூட்டத்து அரசனாகிய சுக்ரீவனும் நெருங்கிய குரங்குச் சேனையும் இலங்கை அரசனாகிய வீடணனும் முதலானவர்கள்;* ***வையம் ஆளுடை நாயகன் மலர்ச்சரண் வணங்கி*** - *உலகைத் தன் அடிமையாக உடைய இராமபிரானது மலர்போன்ற அடிகளை வழிபட்டு;* ***மெய்யினோடு அருந் துறக்கம் உற்றார் என வியந்தார்*** - *உடம்போடு அரிய சுவர்க்கம் போனவர்களைப் போலப் பெரு மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்தனர்.*

*அனைவரும் விமானத்தில் ஏறுதல்*

***10107. அனையது ஆகிய சேனையோடு அரசனை, அனிலன்***
***தனயன் ஆதியாம் படைப் பெருந் தலைவர்கள்***
***தம்மை,***
***வனையும் வார் கழல் இலங்கையர் மன்னனை, 'வந்து***
***இங்கு***
***இனிதின் ஏறுமின், விமானம்' என்று, இராகவன்***
***இசைத்தான்.***

***இராகவன்*** - *இராமன்;* ***அனையது ஆகிய சேனையோடு அரசனை*** - *அப்படிப்பட்டதாகிய குரங்குச் சேனையோடு அரசனாகிய சுக்ரீவனை;* ***அனிலன் தனயன் ஆதியாம் படைப்பெருந் தலைவர்கள் தம்மை*** - *காற்றின் மகனாகிய அனுமன் முதலாகிய பெரிய சேனைத் தலைவர்களை;* ***வனையும் வார் கழல் இலங்கையர் மன்னனை*** - *கட்டப்பட்ட நீண்ட வாரினை உடைய வீரக் கழல் அணிந்த வீடணனை;* ***'இங்கு வந்து இனிதின் விமானம் ஏறுமின்' என்று இசைத்தான்*** - *இங்கே வந்து மகிழ்வாக விமானத்தில் ஏறி அமருங்கள் என்று சொன்னான்.*

***10108. சொன்ன வாசகம் பிற்பட, சூரியன் மகனும்,***
***மன்னு வீரரும், எழுபது வெள்ள வானரரும்,***
***கன்னி மா மதில் இலங்கை மன்னொடு கடற்படையும்***
***துன்னினார், நெடும் புட்பகமிசை ஒரு சூழல்.****

***சொன்ன வாசகம் பிற்பட*** - *(இராமன்) சொன்ன வார்த்தை பிற்படும்படி;* ***(தாம் முற்பட்டு அவ்வளவு விரைவாக) சூரியன் மகனும்*** - *சுக்ரீவனும்;* ***மன்னுவீரரும் எழுபது வெள்ள வானரரும்*** - *நிலைபெற்ற அனுமன், அங்கதன் முதலிய வீரரும் எழுபது வெள்ளம் குரங்குச் சேனையும்;* ***கன்னி மாமதில் இலங்கை மன்னொடு கடற்படையும்*** - *பிறரால் கைப்பற்றப்படாத பெருமதிலை உடைய இலங்கை அரசனாகிய வீடணனோடு அவனது கடல் போன்ற அரக்கர் படையும்;* ***நெடும்***

***புட்பகம் மிசை ஒரு சூழல் துன்னினார்*** - *மிகப்பெரிய புட்பகவிமானத்தின் மேல் ஒரு ஓரத்தில் நெருங்கி அமர்ந்தார்கள்.*

*இவ்வளவு பேரும் விமானத்தின் ஒரு சூழல் துன்னினார் எனவே புட்பகத்தின் பேரளவு உணர்த்தப்பெற்றது.*

***10109. பத்து நால் என அடுக்கிய உலகங்கள் பலவின்***
***மெத்து யோனிகள் ஏறினும் வெளியிடம் மிகுமால்;***
***முத்தர் ஆனவர் இதன் நிலை மொழிகுவது அல்லால்***
***இத் தராதலத்து இயம்புதற்கு உரியவர் யாரே!***

*(புட்பகம்)* ***பத்து நால் என அடுக்கிய உலகங்கள் பலவின் மெத்து யோனிகள் ஏறினும் வெளியிடம் மிகும்*** - *கீழ்ஏழ்; மேல் ஏழ் என அடுக்கிக் கூறப்படும் பதினான்கு உலகங்கள் பலவற்றினும் உயர்த்துக் கூறப்படும் உயிர் வர்க்கங்கள் அனைத்தும் ஏறினாலும் வெற்றிடமானது மிகுதியாக இருக்கும்;* ***இதன் நிலை*** - *இந்த புட்பகவிமானத்தின் தன்மையை;* ***முத்தர் ஆனவர் மொழிகுவது அல்லால்*** - *வீடு பெற்ற மெய்ஞ்ஞானிகள் தம் ஞானத்தால் கூறுவதற்கு முடியுமே அல்லாமல்;* ***இத்தராதலத்து*** - *இம் மண்ணுலகில்;* ***இயம்புதற்கு யாரே உரியவர்*** - *சொல்லுவதற்கு யாரால் இயலும். (இயலாது என்றபடி)*

### *அறுசீர் ஆசிரியவிருத்தம்*

***10110. எழுபது வெள்ளத்தோரும், இரவி கான்முளையும், எண்ணின்,***
***வழு இலா இலங்கை வேந்தும், வான் பெரும் படையும், சூழ***
***தழுவு சீர் இளைய கோவும், சனகன் மா மயிலும், போற்ற,***
***விழுமிய குணத்து வீரன் விளங்கினன், விமானத்து உம்பர்.***

***விழுமிய குணத்து வீரன்*** - *சிறந்த நற்குணங்களால் பெருமை பெற்ற இராமன்;* ***எழுபது வெள்ளத்தோரும் இரவி கான் முளையும் எண்ணின் வழு இலா இலங்கை வேந்தும் வான் பெரும் படையும் சூழ*** - *எழுபது வெள்ளம் குரங்குச் சேனையில் உள்ளாரும் சுக்ரீவனும் கருத்தில் சிறிதும் குறையில்லாத வீடணனும் மிகப் பெரிய அவனது அரக்கர்படையும் சுற்றியிருப்ப;* ***தழுவு சீர் இளைய கோவும் சனகன் மாமயிலும் போற்ற*** - *புகழ் தழுவும் இலக்குவனும் சானகியும் துதிக்க;* ***விமானத்து உம்பர் விளங்கினன்*** - *விமானத்தின் மேல் விளக்க முற்றுத் தோன்றினான்.*

***10111. அண்டமே போன்றது ஐயன் புட்பகம்; அண்டத்து***

***உம்பர்,***
***எண் தரும் குணங்கள் இன்றி, முதல் இடை ஈறு***
***இன்றி, ஆகி,***
***பண்டை நான்மறைக்கும் எட்டாப் பரஞ்சுடர்***
***பொலிவதே போல்,***
***புண்டரீகக் கண் வென்றிப் புரவலன் பொலிந்தான்***
***மன்னோ?***

***ஐயன் புட்பகம் அண்டமே போன்றது*** - *இராமன் ஏறியிருந்த புட்பகவிமானம் அண்ட உருண்டையைப் போல் இருந்தது;* ***அண்டத்து உம்பர்*** - *அவ் அண்டத்தின் மேலாக;* ***எண் தரும் குணங்கள் இன்றி முதல் இடை ஈறு இன்றி ஆகி பண்டை நான் மறைக்கும் எட்டாப் பரஞ்சுடர் பொலிவதே போல்*** - *நினைத்தற்குரிய குணங்கள் இல்லாமல். பிறப்பு வளர்ப்பு அழிவு இல்லாததாய் ஆகி பழைய நால் வேதங்களுக்கும் காணக்கிடைக்காத பரம்பொருள் விளங்கும் தன்மை போல;* ***புண்டரீகக் கண் வென்றிப் புரவலன் பொலிந்தான்*** - *தாமரை மலர் போன்ற கண்களை உடைய வெற்றி பெற்ற காத்தற்கடவுளாகிய திருமால் விளங்கினான்.*

*மன், ஓ, அசைகள்.*

*10112.* ***தேனுடை அலங்கல் மௌலிச் செங் கதிர்ச் செல்வன்***
***சேயும்,***
***மீனுடை அகழி வேலை இலங்கையர் வேந்தும்,***
***வெற்றித்***
***தானையும், பிறரும், மற்றைப் படைப் பெருந்தலைவர்***
***தாமும்,***
***மானுட வடிவம் கொண்டார், வள்ளல்தன்***
***வாய்மைதன்னால்.***

***வள்ளல் தன் வாய்மை தன்னால்*** - *இராமபிரானது அருள் மொழி ஆற்றலால்;* ***தேனுடை அலங்கல் மௌலிச்செங்கதிர்ச் செல்வன் சேயும்*** - *தேன் பொருந்திய மாலைசூடிய முடியணிந்த சூரியன் மகனாய சுக்கிரீவனும்;* ***மீனுடை அகழி வேலை இலங்கையர் வேந்தும்*** - *மீன் பொருந்திய கடலை அகழியாக உடைய இலங்கைக்கு அரசனாகிய வீடணனும்;* ***வெற்றித் தானையும்*** - *வெற்றி பெற்ற சேனையும்;* ***பிறரும் மற்றைப் படைப்பெருந்தலைவர் தாமும்*** - *மற்றவர்களும் ஏனைய சேனைத்தலைவர்களும் (குரக்கு வடிவும் அரக்க வடிவும் நீங்கி);* ***மானுட வடிவம் கொண்டார்*** - *மனித வடிவு கொண்டார்கள்.*

*இது புட்பகத்தின் செயலன்று என்பதற்காக 'வள்ளல் தன் வாய்மைதன்னால்' என்றார். மானுட வடிவம் பிறர்காண்டற்கு என்க.*

*இராமன் சீதைக்கு இனிய காட்சிகள் காட்டுதல்*

***10113. குட திசை மறைந்து, பின்னர்க் குண திசை உதயம் செய்வான்***
***வட திசை அயனம் உன்னி வருவதே கடுப்ப, மானம்***
***தடை ஒருசிறிது இன்று ஆகி, தாவி வான் படரும் வேலை,***
***படை அமை விழியாட்கு ஐயன் இனையன பகலுற்றான்.****

***மானம்*** - *விமானம்;* ***குடதிசை மறைந்து பின்னர்க் குணதிசை உதயம் செய்வான்*** - *மேற்கில் மறைந்து பிறகு கிழக்கில் தோன்றுபவனாகிய சூரியன்;* ***வடதிசை அயனம் உன்னி வருவதே கடுப்ப*** - *(தென்திசையிலிருந்து) வடக்கே நோக்கிச் செலல் கருதி வருவதை ஒப்ப;* ***ஒரு சிறிது தடை இன்று ஆகி*** - *ஒரு சிறிய தடை கூட இல்லாமல்;* ***வான் தாவி படரும் வேலை*** - *விண்ணில் பறந்து செல்கின்ற சமையத்தில்;* ***ஐயன்*** - *இராமன்;* ***படைஅமை விழியாட்கு*** - *வேலும் வாளும் போல கண்களையுடைய பிராட்டிக்கு;* ***இனையன பகரலுற்றான்*** - *பின்வருவனவற்றைக் கூறலானான். அயனம் - செலவு.*

***10114. வென்றி வீடணன் கொணர்ந்த புட்பக விமானம் தன்மேல்***
***ஒன்றும் நல் சீதையோடும், உம்பரும் பிறரும் காண,***
***வென்று உயர் சேனையோடும், இராமனும் விரைவின் எய்தி,***
***தென் திசை இலங்கை ஆதி, தேவிக்குத் தெரியக் காட்டும்.****

***வென்றி வீடணன் கொணர்ந்த புட்பக விமானம் தன்மேல்*** - *வெற்றியுடைய வீடணன் கொண்டுவந்த புட்பகத்தின் மேல்;* ***ஒன்றும் நல் சீதையோடும் வென்று உயர் சேனையோடும்*** - *தன்னோடு ஒன்றிய நல்ல பிராட்டியோடும் வெற்றியால் உயர்ந்த சேனைகளோடும்;* ***இராமனும் விரைவின் எய்தி*** - *இராமனும் வேகமாக அடைந்து;* ***உம்பரும் பிறரும் காண*** - *தேவரும் மற்றவர்களும் கண்டு கொண்டிருக்க;* ***தேவிக்கு*** - *சீதைக்கு;* ***தென்திசை இலங்கை ஆதி தெரியக் காட்டும்*** - *தெற்கே உள்ள இலங்கை முதலாக அனைத்தையும் நன்கு விளங்கக் காண்பிப்பானாயினன்.*

***10115. 'இலங்கையை வலஞ் செய்து ஏக' என
நினைந்திடுமுன் மானம்
வலம் கிளர் கீழை வாயில் வர, 'பிரகத்தன், நீலன்
நலம் கிளர் கையின் மாண்டது இவண்' என,
நமன்தன் வாயில்
லந்திட, 'ஈங்குக் கண்டாய், சுபாரிசற் கட்டது'
என்றான்.****

***'இலங்கையை வலம் செய்து ஏக' என நினைத்திடுமுன்*** - இலங்கையை வலமாகச் சுற்றிக்கொண்டு செல்லட்டும் என்று (இராமன்) மனத்தில் நினைக்கும் முன்னர் (நினைப்பறிந்தது போல); ***மானம் வலம் கிளர் கீழை வாயில் வர*** - புட்பகம் வெற்றி உயர்ந்த கிழக்கு வாசலுக்கு வர; (இராமன் சீதைக்கு) ***'நீலன் நலம் கிளர் கையின் பிரகத்தன் மாண்டது இவண்' என*** - குரங்குச் சேனைத்தலைவன் நீலனது நன்மைவிளங்கிய கையினால் இராவண சேனைத்தலைவன் பிரகத்தன் மாண்டது இவ்விடம் என்று சொல்ல; ***நமன் தன் வாயில் கலந்திட*** - யமனது வாசலாகிய தெற்கு வாசலுக்கு விமானம் வர; ***'சுபாரிசன் கட்டது ஈங்குக் கண்டாய்' என்றான்*** - பெரும் பக்கனை அழித்தது இங்கேதான் என்பதை அறிவாயாக என்றான் இராமன்.

***10116. குடதிசை வாயில் ஏக, 'குன்று அரிந்தவனை வென்ற
விட நிகர் மேகநாதன் இளவலால் வீழ்ந்தது' என் முன்,
வட திசை வாயில் மேவ, 'இராவணன் மவுலி பத்தும்,
உடலமும் இழந்தது இங்கு' என்று உணர்த்தி வேறு***

***உரைக்கலுற்றான்.****

***குடதிசை வாயில் ஏக*** - விமானம் மேற்குத் திசை வாசலை அடைய; ***குன்று அரிந்தவனை வென்ற விடநிகர் மேகநாதன் இளவலால் வீழ்ந்தது' என்முன்*** - மலையின் சிறகுகளை அரிந்த இந்திரனை வென்ற கொடுவிடத்தை ஒத்த இந்திரசித்து இலக்குவனால் இறந்தது (இங்கே) என்று சொல்வதற்கு முன்; ***வடதிசை வாயில் மேவ*** - இலங்கையின் வடக்கு வாசலை விமானம் அடைய; ***இராவணன் மவுலி பத்தும் உடலமும் இழந்தது இங்கு' என்று உணர்த்தி*** - இராவணன் கிரீடத்தலை பத்தும் தன் பேருடலமும் இழந்தது இங்கேதான் என்று சீதைக்கு அறியச் சொல்லி; ***வேறு உரைக்கலுற்றான்*** - வேறு செய்திகள் சொல்லத் தொடங்கினான்.

*விமானம் இலங்கையின் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு வாயில்களாக முறையே வருதல் வலம் வந்ததாக ஆதல் காண்க. இராமன் மனதில் நினைத்ததை அறிந்து ஏவ வேண்டாது செய்யும் ஆற்றல் உடையது புட்பகம் என்றவாறாம்.*

### *இராமன் சீதைக்குச் சேதுவைக் காட்டல்*

***10117. 'நன்னுதல்! நின்னை நீங்கி, நாள் பல கழிந்த பின்றை,***
***மன்னவன் இரவி மைந்தன், வான் துணையாக நட்ட***
***பின்னை, மாருதி வந்து, உன்னைப் பேதறுத்து, உனது பெற்றி***
***சொன்னபின், வானரேசர் தொகுத்தது இச் சேது கண்டாய்.***

***நன்னுதல்!*** - *அழகிய நெற்றியுடையாளே!;* ***நின்னை நீங்கி*** - *உன்னைப் பிரிந்து;* ***பலநாள் கழிந்த பின்றை*** - *பலநாள் கழித்த பிறகு;* ***மன்னவன் இரவிமைந்தன்*** - *வானர அரசனாய சுக்கிரீவன்;* ***வான் துணையாக நட்டபின்னை*** - *சிறந்த துணைவனாக என்னோடு நட்புச்செய்த பிறகு;* ***மாருதி வந்து*** - *அனுமன் தூது வந்து;* ***உன்னைப் பேது அறுத்து*** - *உன்னை மயக்கத்திலிருந்தும் கலக்கத்திலிருந்தும் நீக்கி;* ***உனது பெற்றி சொன்னபின்*** - *உனது இருப்பின் தன்மையை (என்னிடம்) மீண்டு வந்து சொன்ன பிறகு;* ***வானரேசர் தொகுத்தது இச் சேது*** - *வானரத் தலைவர்கள் கட்டியது இவ் அணையாகும்;* ***கண்டாய்*** - *அறிவாயாக (என்றான் இராமன்).*

***10118. 'மற்று இதன் தூய்மை எண்ணின், மலர் அயன்தனக்கும் எட்டா;***
***பொன் தொடித் தெரிவை! யான் என் புகலுகேன்! கேட்டி, அன்பால்***
***பெற்ற தாய் தந்தையோடு தேசிகற் பிழைத்து, சூழ்ந்த***
***சுற்றமும் கெடுத்துளோரும் எதிர்ந்திடின் சுரர்கள் ஆவார்.***

***பொன்தொடித் தெரிவை!*** - *பொன்வளையல் அணிந்த சீதையே!;* ***மற்று இதன் தூய்மை எண்ணின்*** - *இந்தச் சேதுவின் பரிசுத்தமான தன்மையை நினைத்துப் பார்த்தால்;* ***மலர் அயன் தனக்கும் எட்டா*** - *மலர் மேல் உள்ள நான்முகனாலும் நினைக்க இயலாது;* ***யான் என் புகலுகேன்*** - *யான் என்னவென்று சொல்வேன்;* ***கேட்டி*** - *கேட்பாயாக;* ***அன்பால் பெற்ற தாய் தந்தையோடு தேசிகற் பிழைத்து*** - *அன்புடன்தம்மைப் பெற்று வளர்த்த தாய் தந்தையோடு ஆசார்யனிடத்திலும் தவறு செய்து;* ***சூழ்ந்த சுற்றமும் கெடுத்து ளோரும்*** - *தன்னை ஆதரவாகப் பற்றிச் சுற்றிய உறவினர்களையும் கெடுத்தவர்களும் கூட;* ***எதிர்ந்திடின்*** - *(இச்சேதுவுக்கு) நேர்படுவார்களாயின் (காண்பார்களாயின்);* ***சுரர்கள் ஆவார்*** - *(கண்ட அளவிலே அவர்கள்) தேவர்கள் ஆவார்கள்.*

***10119. 'இந்திரற்கு அஞ்சி, மேல் நாள், இருங் கடல் புக்கு, நீங்காக்***

***கந்தர சயிலம், தன்னைக் கண்டவர் வினைகள் தீர்க்கும்***
***கந்தமாதனம் என்று ஓதும் கிரி, இவண் கிடப்ப கண்டாய்;***
***பைந்தொடி! அடைத்த சேது பாவனம் ஆயது' என்றான்.***

***பைந்தொடி! -*** *பசிய வளையல் அணிந்த சானகியே!;* ***இந்திரற்கு அஞ்சி மேல்நாள் இருங்கடல் புக்கு நீங்காக் கந்தர சயிலம்*** *- இந்திரனுக்குப் பயந்து முன்னாளில் பெரிய கடலுள் புகுந்து அதை விட்டு வெளி வராத குகைகளை உடைய மலை;* ***தன்னைக் கண்டவர் வினைகள் தீர்க்கும் கந்தமாதனம் என்று ஓதும் கிரி*** *- தன்னைப் பார்த்தவர்களது தீவினைகளைத் தீர்க்கக்கூடிய கந்தமாதனம் என்று சொல்லப் படுகிற மலை;* ***இவண் கிடப்ப கண்டாய்*** *- இங்கே இருப்பதைப் பார்ப்பாயாக;* ***அடைத்த சேது பாவனம் ஆயது' என்றான்*** *- (இந்த மலைத்தொடர்பால்) கடலை அடைத்த அணை பரிசுத்தம் உடையதாக ஆயிற்று என்று சொன்னான்.*

*மலைகளின் சிறகுகளை இந்திரன் அரிந்தமையின் அவனுக்குப் பயந்து கடலுட்புக்கு ஒளிந்தன சில மலைகள். கந்தரம் - குகை. பாவனம் - தூய்மை. இனி கடல் அடைத்த சேதுவாகிய அணையால் கந்தமாதனம் தூய்மை பெற்றது என்றும் கொள்ள இடம் உண்டு.*

***10120. 'கங்கையோடு, யமுனை, கோதாவரி, நருமதை, காவேரி,***
***பொங்கு நீர் நதிகள் யாவும், படிந்து அலால், புன்மை போகா;***
***சங்கு எறி தரங்க வேலை தட்ட இச் சேது என்னும***
***இங்கு இதின் எதிர்ந்தோர் புன்மை யாவையும் நீங்கும்அன்றே.****

***கங்கையோடு யமுனை கோதாவரி நருமதை காவேரி*** *- ;* ***பொங்கு நீர் நதிகள் யாவும் படிந்து அலால் புன்மை போகா*** *- என்று கூறப்படுகிற மிகுந்த நீரினையுடைய ஆறுகள் யாவும் தம்முள் முழுகினால் அல்லாமல் முழுகியவர்களுடைய பாவம் போகா;* ***சங்கு எறி தரங்க வேலை தட்ட இச் சேது என்னும் இங்கு இதின்*** *- சங்குகளை வீசுகின்ற அலைகளை உடைய கடலில் தடுத்துக் கட்டப் பெற்ற இந்த அணை என்று சொல்லப்படுகிற இங்கு இதனை;* ***எதிர்ந்தோர் புன்மை யாவையும் நீங்கும்*** *- பார்த்தவர்கள் (சந்தித்தவர்கள்) பாவம் எல்லாம் நீங்கும்.*

*அன்று, ஏ. அசைகள். 'அன்றே நீங்கும்' என்றுகூட்டி அன்றைக்கே நீங்கும் எனப்பொருள் உரைப்பினும் அமையும். புண்ணிய நதிகளினும் புகழ் மிக்கது சேது என்றதாம்.*

***10121. 'நெற்றியின் அழலும் செங் கண் நீறு அணி கடவுள் நீடு***
***கற்றை அம் சடையில் மேவு கங்கையும், ''சேது ஆகப் பெற்றிலம்'' என்று கொண்டு, பெருந் தவம் புரிகின்றாளால்;***
***மற்று இதன் தூய்மை எவ்வாறு உரைப்பது? - மலர்க்கண் வந்தாய்!'****

***மலர்க்கண் வந்தாய்!*** *- தாமரை மலரின்கண் தோன்றிய திருமகளாகிய பிராட்டியே!;* ***நெற்றியின் அழலும் செங்கண்நீறு அணி கடவுள்*** *- நெற்றியின்கண் நெருப்புக் கனலும் செங்கண்ணை உடையவனாய்த் திருநீறு பூசுகின்ற கடவுளாகிய இவனது;* ***கற்றை அம் சடையில் மேவு கங்கையும்*** *- சடைத்தொகுதியில் பொருந்தியுள்ள கங்கா நதித் தேவியும்;* ***'சேது ஆகப் பெற்றிலம்' என்று கொண்டு பெருந்தவம் புரிகின்றாள்*** *- நாம் சேதுவாக ஆகப் பெறாமல் போய்விட்டோமே என்று வருந்தி பெரிய தவத்தைச் செய்கின்றாள்;* ***(என்றால்) மற்று இதன் தூய்மை எவ்வாறு உரைப்பது*** *- வேறான இந்தச் சேது அணையின் தூய்மையை எவ்வாறு சொல்ல இயலும்?*

***10122. தெவ் அடும் சிலைக் கை வீரன் சேதுவின் பெருமை யாவும்,***
***வெவ்விடம் பொருது நீண்டு மிளிர்தரும் கருங் கண் செவ்வாய்,***
***நொவ் இடை, மயில் அனாட்கு நுவன்றுழி, 'வருணன் நோனாது,***
***இவ் இடை வந்து கண்டாய், ''சரண்'' என இயம்பிற்று என்றான்.***

***தெவ் அடும் சிலைக்கை வீரன்*** *- பகைவர்களை அழிக்கின்ற வில் ஏந்திய கையினை உடைய இராமன்;* ***சேதுவின் பெருமை யாவும்*** *- சேது என்னும் அணையின் பெருமை எல்லாவற்றையும்;* ***வெவ்விடம் பொருது நீண்டு மிளிர்தரும் கருங்கண் செவ்வாய் நொவ் இடை மயில் அனாட்கு நுவன்றுழி*** *- கொடிய விடத்தோடு போர்செய்து (காதுவரை) நீண்டு விளங்குகின்ற கரிய கண்ணையும் சிவந்த வாயையும் குறுகிக் குறுகித் துன்புறுகின்ற இடையையும் உடைய மயில் போன்ற சீதைக்குச் சொல்லி வருகிறபோது;* ***(ஓர் இடம் காட்டி) 'வருணன் நோனாது வந்து சரண் என இயம்பிற்று இவ் இடை கண்டாய்' என்றான்*** *- வருணனானவன் என் அம்பின் கனலைப் பொறுக்கமாட்டாமல் ஓடி வந்து அபயம் என்று என்பால் சொல்லியது இந்த இடத்தில்தான் காண்பாயாக என்று கூறினான்.*

*10123. 'இது தமிழ் முனிவன் வைகும் இயல் தரு குன்றம்; முன் நாறு*
*அது வளர் மணிமால் ஓங்கல்; உப் புறத்து, உயர்ந்து தோன்றும்*
*அது திகழ் அனந்த வெற்பு' என்று அருள் தர, 'அனுமன் தோன்றிற்று*
*எது?' என, அணங்கை நோக்கி, இற்று என இராமன் சொன்னான்.*

***'இது தமிழ் முனிவன் வைகும் இயல்தருகுன்றம்*** *- இது தமிழ் முனிவனாகிய அகத்தியன் தங்கியிருந்து தமிழிலக்கணத்தைத் தந்த பொதியமலை;* ***முன் நாறு அது வளர் மணி மால் ஓங்கல்*** *- முன்னால் தோன்றுகின்ற அது மணம் வீசி வளர்கின்ற திருமால் இருஞ் சோலை மலை;* ***உட் புறத்து உயர்ந்து தோன்றும் அது திகழ் அனந்த வெற்பு'*** *- இடைக்கண்ணே உயரமாகத் தோன்றுகிற அது விளங்குகிற திருவேங்கட மலை;* ***என்று அருள் தர*** *- என்றிவ்வாறு இராமபிரான் உரைத்தருள் செய்ய; (சீதை)* ***அனுமன் தோன்றிற்று எது? என*** *- அனுமன் தங்களைச் சந்திக்கத் தோன்றியது எந்த இடத்தில் என்று கேட்க;* ***அணங்கை நோக்கி*** *- சீதையைப் பார்த்து;* ***இராமன் - ; இற்று என சொன்னான்*** *- இந்த இடத்தில்தான் என்று (ருசியமுக பர்வதத்தைக்) காட்டிச் சொன்னான்.*

*'இயல் தரு குன்றம்' என்று பாடம் கொண்டு சிறப்புமிகுந்த இயல்புடைய மலை என்பாரும் உளர். தமிழின் முதல் இலக்கணம் அகத்தியனால் செய்யப் பட்ட அகத்தியம் என்பது நோக்கி 'இயல் தரு குன்றம்' என்றது பொருந்துவதே. பிராட்டியின் திருவுளத்தே அனுமன்பால் எழுந்த பேரன்பு அனுமன் சந்தித்த இடத்தைக் கேட்டறிய வேண்டும் என்னும் ஆர்வத்தைத் தூண்டியது என்க.*

*10124. 'வாலி என்று அளவு இல் ஆற்றல் வன்மையான், மகர நீர் சூழ்*
*வேலையைக் கடக்கப் பாயும் விறல் உடையவனை வீட்டி,*
*நூல் இயல் தரும நீதி நுனித்து அறம் குணித்த மேலோர்*
*போல் இயல் தபனன் மைந்தன் உறைதரும் புரம் ஈது' என்றான்.*

***வாலி என்று அளவு இல் ஆற்றல் வன்மையான், மகரநீர் சூழ் வேலையைக் கடக்கப் பாயும் விறல் உடையவனை வீட்டி*** *- வாலி என்று கூறப்படுகிற அளவு படாத*

*பேராற்றலோடு கூடிய வலிமையுடையவனும் சுறாமீன்கள் சுற்றும் கடலைத் தாண்டிச் செல்லும் வெற்றி உடையவனும் ஆகியவனை அழித்து;* ***நூல் இயல் தரும நீதி நுனித்து அறம் குணித்த மேலோர் போல்*** *- நூல்களிற் கூறியுள்ள இயல்பின்படி தரும நீதியை நுட்பமாகக் கருதி அறத்தையே கருதும் சீர்மை உடைய மேலோர்கள் போன்ற;* ***இயல் தபனன் மைந்தன் உறைதரும் புரம் ஈது என்றான்*** *- இயல்பினை உடைய சூரியன் மகனாய சுக்ரீவன் தங்கியுள்ள கிட்கிந்தை இது என்றான்.*

***10125. 'கிட்கிந்தை இதுவேல், ஐய! கேட்டியால்; எனது பெண்மை***
***மட்கும்தான், ஆய வெள்ள மகளிர் இன்று ஆகி, வானோர்***
***உட்கும் போர்ச் சேனை சூழ, ஒருத்தியே அயோத்தி எய்தின்,***
***கள் கொந்து ஆர் குழலினாரை ஏற்றுதல் கடன்மைத்து' என்றாள்.***

***'ஐய!*** *- இராமனே! கிட்கிந்தை - கிட்கிந்தா நகரம்;* ***இதுவேல்*** *- இதுவாக இருக்குமானால்;* ***கேட்டி*** *- நான் சொல்வதைக் கேட்பாயாக;* ***ஆயவெள்ள மகளிர் இன்று ஆகி, வானோர் உட்கும் போர் சேனை சூழ ஒருத்தியே அயோத்தி எய்தின்*** *- தோழியர் கூட்டமான பெண்கள் இல்லாமல் தேவர்களும் அஞ்சும்படியான போர்ச்சேனை சுற்றியிருப்ப நான் ஒருத்தி மட்டும் இவ்விமானத்தில் அயோத்தி அடைந்தால்;* ***எனது பெண்மை மட்கும்*** *- என் பெண்தன்மை பொலிவு கெடும்; (ஆதலின்)* ***கள் கொந்து ஆர் குழலினாரை ஏற்றுதல் கடன்மைத்து' என்றாள்*** *- தேன் நிரம்பிய பூங்கொத்துகள் பொருந்திய கூந்தல் உடைய கிட்கிந்தை மகளிரை இவ்விமானத்தில் ஏற்றிக் கோடல் செய்யத் தகும் முறைமை உடையது என்று கூறினாள்.*

*பெண்மை, நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்கள் உடைமையாம். கணவன் அருகிருக்கினும் பெரிய ஆண்கள் கூட்டத்தில் தனியே ஒரு பெண் இருத்தல் என்பது கூச்சம் தரும் ஆதலின் இவ்வாறு கூறினாள். ஆல், தான் உரையசை.*

***10126. அம் மொழி இரவி மைந்தற்கு அண்ணல்தான் உரைப்ப, அன்னான்***
***மெய்ம்மை சேர் அனுமன்தன்னை நோக்கி, ''நீ விரைவின், வீர!***
***மைம் மலி குழலினாரை மரபினின் கொணர்தி' என்ன,***

***செம்மை சேர் உள்ளத்து அண்ணல் கொணர்ந்தனன்.***
***சென்று மன்னோ.***

***அண்ணல் அம்மொழி இரவிமைந்தற்கு உரைப்ப*** - *இராமன் சீதையின் அச்சொல்லை சுக்கிரீவனுக்குச் சொல்ல;* ***அன்னான் மெய்ம்மை சேர் அனுமன்தன்னை நோக்கி*** - *சுக்கிரீவன் சத்தியவானாகிய அனுமனைப் பார்த்து;* ***'வீர! நீ விரைவின் மைம்மலி குழலினாரை மரபினின் கொணர்தி' என்ன*** - *வீர அனுமனே! நீ விரைந்து கருமை பரவிய கூந்தலுடைய நம் நகரப் பெண்களை அவரவர்க்குரிய முறைப்படி கொண்டு வருக என்று கூற;* ***செம்மை சேர் உள்ளத்து அண்ணல் சென்று கொணர்ந்தனன்*** - *மனக்கோட்டம் இல்லாத பெரியோனாகிய அனுமன் உடனே சென்று அழைத்து கொண்டு வந்தான்.*

*தான், உரையசை, மான், ஓ, அசைநிலை.* ***மரபு*** - *அவரவர்க்குரிய தகுதி வரிசை.* ***10127.***
***வரிசையின் வழாமை நோக்கி, மாருதி மாதர்***
***வெள்ளம்***
***கரை செயல் அரிய வண்ணம் கொணர்ந்தனன்,***
***கணத்தின் முன்மை;***
***விரை செறி குழலினார் தம் வேந்தனை வணங்கி,***
***பெண்மைக்கு,***
***அரசியை ஐயனோடும் அடி இணை தொழுது,***

***நின்றார்.***

***மாருதி*** - *அனுமன்;* ***கரைசெயல் அரிய வண்ணம் மாதர் வெள்ளம்*** - *வரம்பிடமுடியாத தன்மை உடைய மகளிர் கூட்டத்தை;* ***வரிசையின் வழாஅமை நோக்கி*** - *அவரவர்கட்குரிய தகுதியிற் சிறிதும் பிறழாதபடி பார்த்து;* ***கணத்தின் முன்னம் கொணர்ந்தனன்*** - *ஒரு கணப்பொழுதில் அழைத்துக் கொண்டு வந்தான்;* ***விரைசெறி குழலினார் தம் வேந்தனை வணங்கி*** - *மணம் நிறைந்த கூந்தலை உடைய அம்மகளிர் தம்முடைய அரசனாய சுக்கிரீவனை முதலில் தொழுது;* ***பெண்மைக் கரசியை ஐயனோடும் அடியிணை தொழுது நின்றார்*** - *பெண்மைக் குணங்களுக்குத் தலைமையானவளை இராமனோடும் திருவடி இணைகளைக் கும்பிட்டு நின்றார்கள்.*

*கிட்கிந்தை மகளிர் ஆதலின் இராமனை முதற்கண் வணங்காது தம் அரசனை முதற்கண் வணங்கினர் என்பது பண்புடைமையைக் காட்டி நிற்கும். இராமனை வணங்கும் போதும் பெண்டிர் என்பதற்கேற்ப சீதையை முன்னிட்டே வணங்கினர் என்பது உயரிய பண்பாடாதல் வெள்ளிடை.*

***10128. மங்கலம் முதலவாய மரபினின் கலப்பை யாவும்***
***அங்கு அவர் கொணர்ந்து, பெண்மைக்கு அரசியைத்***
***தொழுது சூழ,***

***நங்கையும் உவந்து, 'வேறு ஓர் நவை இலை, இனி மற்று' என்றாள்;***
***பொங்கிய விமானம்தானும், மனம் என, எழுந்து போன.***

***மங்கலம் முதலவாய மரபினின் கலப்பையாவும்*** - *அட்டமங்கலம் முதலாகச் சொல்லப்படும் அடிப்பட வந்த தொன்று தொடு வழக்கமாய பொருள்கள் எல்லாவற்றையும்;* ***அவர் அங்கு கொணர்ந்து*** - *அம்மகளிர் விமானத்தின்கண் கொண்டு வந்து;* ***பெண்மைக்கு அரசியைத் தொழுது சூழ*** - *சீதாபிராட்டியை வணங்கிச் சுற்றியிருப்ப;* ***நங்கையும் உவந்து*** - *சீதையும் மகிழ்ச்சி அடைந்து;* ***'மற்றுவேறு, ஓர் நவை இனி இலை' என்றாள்*** - *வேறொரு துன்பமும் இனி இல்லை என்று சொன்னாள்;* ***பொங்கிய விமானந்தானும் மனம் என எழுந்து போன*** *-உயர்ந்த புட்பகமும் மனத்தின் வேகம் போல புறப்பட்டுச் சென்றது. அட்டமங்கலம் - பெரியோர்க்குச் செய்யும் உபசாரப்பொருள்கள் எட்டாம். அவை, சாமரை, தீபம், பூர்ணகும்பம், இரட்டைக் கயல், கண்ணாடி, தோட்டி, கொடி, முரசு என்பனவாகும். விமானம் எழுந்து போனது கூறுதலால் முன்பு தரையிறங்கி நின்றது அறிக. விமானம் ஒன்றாக இருக்கவும் 'போன" என்று பன்மையாகக் கூறியது பேரளவினதாதல் பற்றி; ஒருமை பன்மை மயக்கம்.*

**கலிநிலைத்துறை**

***10129. போதா விசும்பில் திகழ் புட்பகம் போதலோடும்,***
***சூது ஆர் முலைத் தோகையை நோக்கி, 'முன் தோன்று சூழல்***
***கோதாவரி; மற்று அதன் மாடு உயர் குன்று நின்னை,***
***பேதாய்! பிரிவுத் துயர் பீழை பிணித்தது' என்றான்.***

***விசும்பில் போதா திகழ் புட்பகம் போத லோடும்*** - *வானத்தில் எழுந்து விளங்குகிற புட்பக விமானம் சென்ற உடனே; (இராமன்)* ***சூது ஆர் முலைத்தோகையை நோக்கி*** - *சூதாடுகின்ற கருவியை ஒத்துப் பொருந்திய நகில்களை உடைய மயில் போல்வாளைப் பார்த்து;* ***'பேதாய்*** - *இளம்பெண்ணே!;* ***முன்தோன்று சூழல் கோதாவரி*** - *முன்னே தோன்றுகிற இடம் கோதாவரியாகும்;* ***மற்று அதன் மாடு உயர் குன்று*** - *அதன் அருகில் உள்ள உயர்ந்த சிறிய மலைதான்;* ***நின்னை*** - *உன்னை (என்னிடமிருந்து)* ***பிரிவுத்துயர் பீழை பிணித்தது'*** - *பிரித்தலால் உண்டாகிய பிரிவு என்னும் துயர் நோயால் கட்டியது;* ***என்றான்*** *-*

*பிரிவுத்துயர் பீழை அவளுக்கும் இவனுக்கும் ஒத்ததாகும். அவள், இவனிடமிருந்து பிரியும்போது இவனும் அவளிடமிருந்து பிரிகின்றான் ஆதலின். பீழை - நோய்.*

### கலித்துறை வேறு

*10130. **'சிரத்து வாச வண்டு அலம்பிடு தெரிவை! கேள்; இது நீள்***
***தரத்து உவாசவர், வேள்வியர், தண்டகம்; அதுதான்***
***வரத்து வாசவன் வணங்குறு சித்திரகூடம்;***
***பரத்துவாசவன் உறைவிடம் இது' எனப் பகர்ந்தான்.***

***'சிரத்து வாச வண்டு அலம்பிடு தெரிவை! கேள்*** - *தலைமுடியின் கண் (நறுமணமலர்களால்) வாசனையுண்ணும் வண்டுகள் ஒலிக்கின்ற பெண்ணே! கேட்பாயாக;* ***இது நீள் தரத்து உவாசவர், வேள்வியர் தண்டகம்*** - *இது உயர்ந்த தன்மையுடைய உபாசனை செய்கின்ற விரதிகளும் யாகம் செய்பவர்களாகிய முனிவர்களும் (உறைகின்ற) தண்டக ஆரண்யம்;* ***அதுதான் வரத்து வாசவன் வணங்குறு சித்திரகூடம்*** - *அதோ தோன்றுகிற இடமானது மேன்மையுடைய இந்திரனும் வணங்கத்தக்க சித்திர கூடமலை;* ***இது பரத்துவாசவன் உறைவிடம்'*** - *(அண்மையில் காணும்) இது பரத்துவாசமுனிவன் தங்கியுள்ள தவச்சாலையாகும்;* ***எனப் பகர்ந்தான்*** - *என்று சொன்னான்.*

*10131. **மின்னை நோக்கி, அவ் வீரன் ஈது இயம்பிடும் வேலை,***
***தன்னை நேர் இலா முனிவரன் உணர்ந்து, தன் அகத்தின்,***
***'என்னை ஆளுடை நாயகன் எய்தினன்' என்னா,***
***துன்னு மா தவர் சூழ் தர, எதிர்கொள்வான், தொடர்ந்தான்.***

***மின்னை நோக்கி*** - *சீதையைப் பார்த்து;* ***அவ்வீரன் ஈது இயம்பிடும் வேலை*** - *அந்த இராமன் இதனைச் சொல்லிக் கொண்டுள்ள போது;* ***தன்னை நேர் இலா முனிவரன் உணர்ந்து*** *-தனக்கு யாரும் ஒப்பில்லாத சிறந்த தவமுனிவனாகிய பரத்துவாசன்; உணர்ந்து;* ***தன் அகத்தின்*** - *தன் தவச்சாலையின் கண்;* ***'என்னை ஆளுடை நாயகன் எய்தினன்' என்னா*** - *என்னையும் அடிமை கொண்டருளும் பரம் பொருளாகிய பெருமான் வந்துவிட்டான் என்று கருதி;* ***துன்னு மாதவர் சூழ்தர*** - *நெருங்கிய முனிவரர்கள் சுற்றிவர;* ***எதிர்கொள்வான்*** - *வரவேற்க;* ***தொடர்ந்தான்*** - *(இராமன்); வரும்வழியை நோக்கி வந்தான்.*

*'உணர்ந்து' என்பது அறிதலன்று; ஞானத்தால் இராமன் என்னாது பரம் பொருள் என உணர்தலாம். 'தன் அகத்தின்' என்பதற்குத் தன் உள்ளத்தின் கண்' என*

*உரைப்பினும் அமையும். புறத்தே இராமன் என்கிற நிலையில் இவன் முனிவர்களை வழிபடினும் அவர்கள் அவனைப் பரம்பொருளே என உள்ளத்தே தியானத்தால் உணர்ந்து தம்மை அடிமையாகவும் அவனை ஆண்டானாகவும் கருதுவர என்பதை 'என்னை ஆளுடை நாயகன்' எனப் பரத்துவாசன் கூறியது உணர்த்தும்.*

### *பரத்துவாச ஆச்சிரமத்தில் இராமன்*

***10132. ஆதபத்திரம், குண்டிகை, ஒரு கையின் அணைத்து,***
***போதம் முற்றிய தண்டு ஒரு கையினில் பொலிய,***
***மா தவப் பயன் உருவு கொண்டு எதிர் வருமாபோல்***
***நீதி வித்தகன் நடந்தமை நோக்கினன், நெடியோன்.***

***ஆதபத்திரம், குண்டிகை ஒரு கையின் அணைத்து*** *- குடை, கமண்டலம் இரண்டையும் ஒரு கையில் சேரப்பிடித்துக்கொண்டு;* ***தண்டு ஒருகையினில் பொலிய*** *- மற்றொரு கையில் தண்டம் விளங்க;* ***மாதவப்பயன் உருவுகொண்டு எதிர் வருமாபோல்*** *- பெரிய தவத்தின் பயன் திரண்டு ஒரு வடிவு எடுத்துக்கொண்டு எதிர் வருவதைப் போல;* ***போதம் முற்றிய நீதி வித்தகன்*** *- தத்துவஞானம் நிரம்பிய நீதி நெறியில் சதுரப்பாடு உடைய பரத்துவாசன்;* ***நடந்தமை*** *- தன்னை எதிர்கொள்ள நடந்து வருகின்றமையை;* ***நெடியோன் நோக்கினன்*** *- இராமன் பார்த்தான்.*

*ஆதபம் - வெய்யில் - திரம் - நீக்குதல் - வெய்யிலை நீக்குவது என்ற காரணம்பற்றி குடைக்கு வந்தது, வடசொல். போதம் முற்றியமைக்கு அடையாளமான தண்டு என்பதும்ஒன்று.*

***10133. எண் பக, தினை அளவையும் கருணையோடு***
***இசைந்த***
***நட்பு அகத்து இலா அரக்கரை நருக்கி, மா மேரு***
***விட்பு அகத்து உறை கோள் அரி எனப் பொலி***
***வீரன்,***
***புட்பகத்தினை வதிகென நினைந்தனன், புவியில்.***

***எண்பக*** *- நெஞ்சம் பிளவுபடும்படி;* ***தினை அளவையும்*** *- தினை அளவு கூட;* ***கருணையோடு இசைந்த நட்பு அகத்து இலா அரக்கரை நருக்கி*** *- அருளோடு கூடிய நட்புத்தன்மை மனத்தில் இல்லாத அரக்கர்களைக் கொன்று;* ***மாமேரு விட்பு அகத்து உறை கோளரி எனப் பொலி வீரன்*** *- பெரிய மேருமலையின் பிறப்பிடமாய பொந்தில் உள்ளே வசிக்கின்ற சிங்கம் போல விளங்குகின்ற வீர இராகவன்;* ***புட்பகத்தினை புவியல் வதிக என நினைந்தனன்*** *- புட்பக விமானத்தைப் பூமியில் தங்குக என்று நினைத்தான்.*

*பரத்துவாசன் உபசாரம்*

***10134. உன்னும் மாத்திரத்து, உலகினை எடுத்து உம்பர் ஓங்கும்***
***பொன்னின் நாடு வந்து இழிந்தெனப் புட்பகம் தாழ,***
***என்னை ஆளுடை நாயகன், வல்லையின் எதிர் போய்,***
***பன்னு மா மறைத் தபோதனன் தாள்மிசைப் பணிந்தான்.***

**உன்னும் மாத்திரத்து** - *நினைக்கின்ற ஒரு மாத்திரைக்கால அளவில்;* **உலகினை எடுத்து உம்பர் ஓங்கும் பொன்னின் நாடு வந்து இழிந்து என புட்பகம் தாழ** - *உலகைச் சுமந்து ஆகாயத்தின் மேலுயரும் தேவலோகம் கீழே இறங்கியது என்று சொல்லும்படி புட்பகவிமானம் மண்ணில் இறங்க;* **என்னை ஆளுடை நாயகன்** - *என்னை அடிமை கொண்டருளும் பெருமான்;* **வல்லையின்** - *விரைவாக;* **எதிர்போய்** - *எதிர்சென்று;* **பன்னு மாமறைத்தபோதனன் தாள்மிசைப் பணிந்தான்** - *இடையறாது சொல்லிக்கொண்டுள்ள உயர்ந்த வேதபாரகனாகிய தவசிரேஷ்டனது திருவடிகளின் மேல் வீழ்ந்து வணங்கினான்.*

*'என்னை ஆளுடை நாயகன்' கவிக்கூற்று.*

***10135. அடியின் வீழ்தலும் எடுத்து, நல் ஆசியோடு அணைத்து,***
***முடியை மோயினன் நின்றுழி, முளரி அம் கண்ணன்***
***சடில நீள் துகள் ஒழிதர, தனது கண் அருவி***
***நெடிய காதல் அம் கலசம்அது ஆட்டினன், நெடியோன்.***

**அடியின் வீழ்தலும்** - *(இராமன்) தன் அடியில்வீழ்ந்து வணங்கியவுடன்;* **எடுத்து** - *தூக்கி;* **நல் ஆசியோடு அணைத்து** - *நல்ல வாழ்த்துரையுடன் அணைத்துக்கொண்டு;* **முடியை மோயினன் நின்றுழி** - *இராமனது உச்சியை மோந்து நின்ற பொழுது;* **முளரி அம் கண்ணன்** - *தாமரைக் கண்ணனான இராமனது;* **சடில நீள் துகள் ஒழிதர** - *சடாபாரத்தில் உள்ள நீண்ட புழுதியானது நீங்கும்படி;* **நெடியோன் தனது கண் அருவி** - *உயர்ந்தவனாகிய பரத்துவாசன் தன்னுடைய கண்ணிலிருந்து அருவியாக வழிகின்ற நீரை;* **நெடிய காதல் அம்கலசம் அது** - *உயர்ந்து நின்ற தன் உள்ளத்தன்பாகிய கலசத்தால் முகந்து;* **ஆட்டினான்** - *நீராட்டித் தூய்மைசெய்தான்.*

*'தெடியோன்' பரத்துவாசனைக் குறித்தது. இனி, 'நெடியோன் அடியின் வீழ்தலும்' என்று முதற்கண்கூட்டி இராமன் எனலும் ஒன்று. உச்சி மோத்தல் குழந்தை*

*மாட்டுப்பெற்றோர் அன்புச் செயலாகும். தந்தை நிலையில் உச்சிமோந்தான் என்க. அன்பாகிய கலசத்தால் கண்ணருவி நீர் கொண்டு இராமன் சடைப்புழுதி போக நீராட்டினான் என்பதாகும்.*

***10136. கருகு வார் குழல் சனகியோடு இளவல் கை தொழுதே,***
***அருகு சார்தர, அருந் தவன் ஆசிகள் வழங்கி,***
***உருகு காதலின் ஒழுகு கண்ணீரினன், உவகை***
***பருகும் ஆர் அமிழ்து ஒத்து, உளம் களித்தனன், பரிவால்.***

***கருகு வார் குழல் சனகியோடு*** *- கருமையான நீண்ட கூந்தலையுடைய சீதையோடு;* ***இளவல் கைதொழுதே அருகு சார்தர*** *- இலக்குவன் கைகுவித்து வணங்கிப் பக்கத்தில் வர;* ***அருந்தவன்*** *- பரத்துவாசன்;* ***ஆசிகள் வழங்கி*** *- வாழ்த்துரைகள் கூறி;* ***உருகு காதலன் ஒழுகு கண்ணீரினன்*** *- மனம் கரைந்து வரும் கண்ணீர்ப் பெருக்கோடு;* ***உவகை பருகும் ஆர் அமிழ்து ஒத்து பரிவால் உளம் களித்தனன்*** *- மகிழ்ச்சியோடு பருகுகின்ற தேவர் அமுதத்தை உண்டால் ஒத்து அன்பினால் உளம் பூரித்தான்.*

***10137. வானரேசனும், வீடணக் குரிசிலும், மற்றை***
***ஏனை வீரரும், தொழும்தொறும் ஆசிகள் இயம்பி***
***ஞான நாதனைத் திருவொடு நன் மனை கொணர்ந்தான்***
***ஆன மாதவர் குழாத்தொடும் அரு மறை புகன்றே.***

***வானரேசனும்*** *- சுக்ரீவனும்;* ***வீடணக்குரிசிலும்*** *- வீடணன் என்கின்ற நம்பியும்;* ***மற்றை ஏனை வீரரும்*** *- மற்றுள்ளபிற வீரர்களும்;* ***தொழும்தொறும் ஆசிகள் வழங்கி*** *- வணங்குந்தோறும் வாழ்த்து தந்து;* ***ஆன மாதவர் குழாத்தொடும் அருமறை புகன்று*** *- தன்னோடு உடன் கூடிய முனிவர் கூட்டத்தோடும் அரிய வேதங்களைச் சொல்லிக்கொண்டே;* ***ஞான நாதனைத் திருவொடு நன் மனைகொணர்ந்தான்*** *- ஞானத்திரளாய் நின்ற பெருமானைப் புருஷாகார பூதையாகிய திருமகளோடும் தன் நல்ல மனைக்கு அழைத்துக் கொண்டு சென்றான்.*

***10138. பன்னசாலையுள் புகுந்து, நீடு அருச்சனை பலவும்***
***சொன்ன நீதியின் புரிந்து, பின், சூரியன் மருமான் -***
***தன்னை நோக்கினன், பல் முறை கண்கள் நீர்***

***ததும்ப,***
***பின் ஓர் வாசகம் உரைத்தனன், தபோதரின் பெரியோன்;***

***பன்னசாலையுள் புகுந்து*** - *தன் தவச்சாலைக்குள் அழைத்துக்கொண்டு புகுந்து;* ***தபோதரின் பெரியோன்*** - *முனிவர்களில் உயர்ந்தோன் ஆகிய பரத்துவாசன்;* ***நீடு அருச்சனை பலவும்*** - *உரிய உபசார வழிபாடுகள் எல்லாம்;* ***சொன்ன நீதியின் புரிந்து*** - *சாத்திரங்களிற் சொல்லப்பட்ட முறைப்படி செய்து;* ***பின்*** - *பிறகு;* ***சூரியன் மருமான் தன்னை*** - *சூரியனது வழியில் தோன்றிய இராமனை;* ***பல்முறை கண்கள் நீர்ததும்ப நோக்கினன்*** - *பலமுறை கண்களில் நீர் ததும்பும் படி பார்த்தவனாய்;* ***பின் ஓர் வாசகம் உரைத்தனன்*** - *பிறகு ஒரு சொல் சொன்னான்.*

***10139. 'முனிவர் வானவர் மூவுலகத்துளோர் யாரும்***
***துனி உழந்திடத் துயர் தரு கொடு மனத் தொழிலோர்***
***நனி மடிந்திட, அலகைகள் நாடகம் நடிப்ப,***
***குனியும் வார் சிலைக் குரிசிலே! என், இனிக் குணிப்பாம்?***

***முனிவர், வானவர், மூவுலகத்துளோர் யாரும்*** *-;* ***துனி உழந்திடத்துயர்தரு கொடுமனத் தொழிலோர்*** - *வருந்தும்படி துன்பங்களைச்செய்கின்ற கொடுமையான மனமும் தொழிலும் உடையோராய அரக்கர்;* ***நனி மடிந்திட*** - *மிகவும் இறந்துபோக;* ***அலகைகள் நாடகம் நடிப்ப*** - *பேய்கள் களத்தில் நடனம் ஆட;* ***குனியும் வார்சிலைக் குரிசிலே!*** - *வளைந்த கோதண்டத்தை ஏந்திய நம்பியே!* ***இனி என் குணிப்பாம்?*** - *இனி என்ன எண்ணி உரைக்க உள்ளது?*

***10140. 'விராதனும், கரனும், மானும், விறல் கெழு கவந்தன்தானும்,***
***மராமரம் ஏழும், வாலி மார்பமும், மகர நீரும்,***
***இராவணன் உரமும், கும்பகருணனது ஏற்றம்தானும்,***
***அராவ அரும் பகழி ஒன்றால் அழித்து, உலகு அளித்தாய் - ஐய!'***

***ஐய!*** - *இராமனே!;* ***விராதனும்*** - *கரனும் -;* ***மானும்*** - *மானாகிய மாரீசனும்;* ***விறல்கெழு*** - *வலிமைமிக்க ;* ***கவந்தன் தானும்- மரா மரம் ஏழும் வாலிமார்பமும் -;*** ***மகர நீரும்*** - *வருணன் வாராதபோது சீறியதால் கடல்நீரும்;* ***இராவணன் உரமும் கும்பகருணனது*** *- ;* ***ஏற்றம் தானும்*** - *உயர்வும்;* ***அராவ அரும் பகழி ஒன்றால்*** -

*அராவிச்செய்யப்பட்ட அரிய ஓர் அம்பினாலே;* ***அழித்து*** *- கொன்று செருக்கடக்கி;* ***உலகு அளித்தாய்*** *- உலகைக் காப்பாற்றினாய்.*

***10141. 'சித்திர கூடம் தீர்ந்து, தென் திசைத் தீமை தீர்த்திட்டு***
***இத் திசை, அடைந்து, எம் இல்லின் இறுத்தமை இறுதியாக,***
***வித்தக! மறந்திலேன் யான்; விருந்தினையாகி, எம்மோடு***
***இத்திறம் இருத்தி' என்றான், மறைகளின் இறுதி கண்டான்.****

***மறைகளின் இறுதி கண்டான்*** *- வேத முடிவினை நன்குணர்ந்தவனாகிய பரத்துவாசன்; (இராமனைநோக்கி)* ***வித்தக!*** *- சதுரப்பாடு உடையவனே!;* ***சித்திரகூடம் தீர்ந்து*** *- சித்திரகூட மலையிலிருந்து நீங்கி;* ***தென்திசைத் தீமை தீர்த்திட்டு*** *- தெற்குத்திசையில் உள்ள அரக்கர்களாய தீமையைப் போக்கி;* ***இத்திசை அடைந்து*** *- வடதிசை வந்து சேர்ந்து;* ***எம் இல்லம் இறுத்தமை இறுதியாக*** *- என் தவச்சாலையில் தங்கியமை வரையிலும்;* ***மறந்திலேன் யான்*** *- நான் உன்னை ஒரு கணமும் மறக்கவில்லை;* ***விருந்தினையாகி*** *- விருந்து ஏற்றுக்கொண்டு;* ***எம்மோடு*** *- எங்களோடு;* ***இத்திறம்*** *- இன்றேபோல்;* ***இருத்தி*** *- இருப்பாயாக;* ***என்றான்*** *-.*

***10142. 'கரதலம் அதனின் நீடு கார்முகம் வளைய வாங்கி,***
***சரத வானவர்கள் துன்பம் தணித்து, உலகங்கள் தாங்கும்***
***மரகத மேனிச் செங்கண் வள்ளலே! வழுவா நீதிப்***
***பரதனது இயல்பும் இன்றே பணிக்குவென்; கேட்டி' என்றான்.****

***கரதலம் அதனின் நீடு கார்முகம் வளைய வாங்கி*** *- கையின் கண் உயர்ந்த கோதண்டம் என்னும் வில்லை வளைத்து இழுத்து;* ***சரத வானவர்கள் துன்பம் தணித்து*** *- உண்மை வாழ்வுள்ள தேவர்களது துயரத்தைப் போக்கி;* ***உலகங்கள் தாங்கும்*** *- உலகமனைத்தையும் பாதுகாக்கின்ற;* ***மரகத மேனிச் செங்கண்வள்ளலே!*** *- மரகத மணி போன்ற மேனியையும் சிவந்த கண்களையும் உடைய கொடையாளனே;* ***'வழுவா நீதிப் பரதனது இயல்பும் இன்றே பணிக்குவென், கேட்டி' என்றான்*** *- சிறிதும் பிசகாத நீதியை உடைய பரதன் தற்போதுள்ள தன்மையையும் இன்றைக்கே சொல்வேன் கேட்பாயாக என்று சொன்னான்.*

**கலிநிலைத்துறை வேறு**

***10143. 'வெயர்த்த மேனியன்; விழி பொழி மழையன்; மூ வினையைச்***
***செயிர்த்த சிந்தையன்; தெருமரல் உழந்து உழந்து அழிவான்;***
***அயிர்த்து நோக்கினும், தென் திசை அன்றி, வேறு அறியான்***
***பயத்த துன்பமே உருவு கொண்டென்னலாம் படியான்.****

*(பரதன்)* ***வெயர்த்த மேனியன்*** *- வியர்வை அரும்பிய உடம்புடையான்;* ***விழி பொழி மழையன்*** *-கண்கள் மழைநீர் போலக் கண்ணீர் விடுகின்றதன்மையன்;* ***மூவினையைச் செயிர்த்த சிந்தையன்*** *- பழைய வினைகளைக் கோபித்த மனத்தவன்;* ***தெருமரல் உழந்து உழந்து அழிவான்*** *- மனச சுழற்சியால் வருந்திவருந்திக் கெடுவான்;* ***அயிர்த்து நோக்கினும் தென்திசை அன்று வேறு அறியான்*** *- ஐயுற்றுப் பார்த்தாலும் (நீ சென்றுள்ள) தென் திசை தவிர வேறு திசைகளைப் பார்க்க அறியான்;* ***பயத்த துன்பமே உருவு கொண்டு என்னலாம்படியான்*** *- அச்சத்துடன் கூடிய துன்பமே உருவம் கொண்டாற் போன்ற வடிவம் உடையவன்.*

***10144. இந்தியம் களைந்து, இருங் கனி காய் நுகர்ந்து, இவுளிப்***
***பந்தி வந்த புல் பாயலான்; பழம்பதி புகாது,***
***நந்தியம்பதி இருந்தனன், பரதன் - நின் நாமம்***
***அந்தியும், பகல் அதனினும், மறப்பிலன் ஆகி.****

***பரதன் -; இந்தியம் களைந்து*** *- பொறிகளைப் புலன்வழி செல்லாது நீக்கி;* ***இருங்கனிகாய் நுகர்ந்து*** *- பெரிய பழங்களையும் காய்களையுமே உண்டு;* ***இவுளிப் பந்தி வந்த புல் பாயலான்*** *- குதிரை வரிசைகள் மேய்தற்குரிய புல்லையே படுக்கையாகக் கொண்டுள்ளான்;* ***பழம்பதி புகாது நந்தியம்பதி*** *- பழமையான அயோத்தியில் செல்லாது நந்திக் கிராமத்திலேயே;* ***நின் நாமம் அந்தியும் பகல் அதனினும்மறப்பிலன் ஆகி*** *- உன்னுடைய பெயரை இரவினும் பகலினும் மறவாதவனாய்;* ***இருந்தனன்*** *- இருந்தான்.*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***10145. என்று உரைத்து, 'அரக்கர் வேந்தன் இருபது என்று உரைக்கும் நீலக்***
***குன்று உரைத்தனைய தோளும், குலவரைக் குவடும்***

***ஏய்க்கும்***
***என்று உரைத்தனைய மௌலித் தலை பத்தும்,***
***இறுத்த வீர!***
***நின்தனைப் பிரிந்தது உண்டே, யான்' என***
***நிகழ்த்தினானால்.****

***என்று உரைத்து*** - *என்றிவ்வாறு பரத்து வாசன் சொல்லி;* ***அரக்கர் வேந்தன் இருபது என்று உரைக்கும் நீலக் குன்று உரைத்தனைய தோளும் குலவரைக் குவடும் ஏய்க்கும் என்று உரைத்தனைய மௌலித் தலை பத்தும் இறுத்த வீர!*** - *இராவணனது நீலமலை என்று சொலத்தகுந்த இருபது தாள்களையும் எட்டுக்குலமலைகளின் சிகரங்கள் எனக் கூறத் தக்க மகுடம் அணிந்த பத்துத் தலைகளையும் அழித்த வீரனே!; யான்* ***நின்தனைப் பிரிந்தது உண்டே'?*** - *நான் நின்னை என்றாவது பிரிந்ததுண்டா?;* ***என நிகழ்த்தினான்*** - *என்று கூறினான்.*

## *இராமன் பதில் உரை*

***10146. 'மின்னை ஏய் உமையினானும், விரை மலர்த்***
***தவிசினானும்***
***நின்னையே புகழ்தற்கு ஒத்த நீதி மாதவத்தின்***
***மிக்கோய்!***
***உன்னையே வணங்கி, உன்தன் அருள் சுமந்து***
***உயர்ந்தேன்; மற்று இங்கு***
***என்னையே பொருவும் மைந்தன் யான் அலாது***
***இல்லை' என்றான்.****

***'மின்னை ஏய் உமையினானும்*** - *மின்னலை ஒத்த உமாதேவியை உடைய சிவனும்;* ***விரைமலர்த் தவிசினானும்*** - *மணமிக்க உந்தித்தாமரையில் உள்ள பிரமனும்;* ***நின்னையே புகழ்தற்கு ஒத்த நீதி மாதவத்தின் மிக்கோய்!*** - *உன்னையே சிறப்பித்துச் சொல்லுமாறு நீதியோடு கூடிய பெருந்தவத்தில் சிறந்தவனே!;* ***உன்னையே வணங்கி உன்தன் அருள் சுமந்து உயர்ந்தேன்*** - *உன்னை வழிபட்டு உனது மனக்கருணையை நிறையப் பெற்று அதனால் உயர்ந்துள்ளேன்; (அதனால்)* ***மற்று இங்கு என்னையே பொருவும் மைந்தன் யான் அலாது இல்லை' என்றான்*** - *இவ்வுலகில் என்னை ஒத்த மகன் நான் அல்லாது வேறு யாரும் இல்லை எனும் பேறு பெற்றேன் என்று கூறினான் (இராமன்).*

### பரத்துவாசன் வரம் தருதல்

*10147.* ***அவ் உரை புகலக் கேட்ட அறிவனும், அருளின்***
***நோக்கி,***
***'வெவ் அரம் பொருத வேலோய்! விளம்புகேன்;***
***கேட்டி, வேண்டிற்று***
***எவ் வரம் எனினும்; தந்தேன்; இயம்புதி' எனலும்,***
***ஐயன்,***
***'கவ்வை இன்று ஆகி வென்றி கவிக்குலம் பெற்று***

***வாழ்க.**** **அவ் உரை புகலக் கேட்ட அறிவனும்** - *அவ்வாறு இராமன் கூறிய முகமனுரைகளைக் கேட்ட தத்துவ ஞானியாகிய பரத்துவாசனும்;* **அருளின் நோக்கி** - *அருட்பார்வையால் இராமனைப் பார்த்து;* **'வெவ் அரம் பொருத வேலோய்! விளம்புகேன், கேட்டி வேண்டிற்று எவ்வரம் எனினும் தந்தேன்; இயம்புதி' எனலும்** - *கொடிய அரத்தால் அராவிச் செய்த வேலை உடைய இராகவனே! சொல்வேன் கேட்பாயாக; நீ விரும்பியது எந்த வரமானாலும் தந்துவிட்டேன், சொல்க என்று கூறுதலும்;* **ஐயன்** - *இராமன்;* **' கவிக்குலம் கவ்வை இன்று ஆகி வென்றி பெற்று வாழ்க** - *குரங்குக்கூட்டம் துன்பமின்றி சென்ற இடங்களில் எல்லாம் வெற்றி பெற்று வாழ்க; (என்று கேட்டு) தொடரும்.*

*10148.* ***'அரி இனம் சென்ற சென்ற அடவிகள் அனைத்தும்***
***வானம்***
***சொரி தரு பருவம் போன்று, கிழங்கொடு கனி காய்***
***துன்றி***
***விரிபுனல் செழுந்தேன் மிக்கு, விளங்கு!' என***
***இயம்புக' என்றான்.***
***விரியும் மாதவனும், 'அஃதே ஆக!' எனப்***
***புகன்றிட்டானால்.***

**'அரி இனம் சென்ற சென்ற அடலிகள் அனைத்தும் வானம் சொரிதரு பருவம் போன்று** - *குரங்குகள் போன காடுகள் எங்கிலும் எப்பருவத்தும் கார்காலம் போல;* **கிழங்கொடு கனி காய் துன்றி விரிபுனல் செழுந்தேன் மிக்கு விளங்கு' என இயம்புக'' என்றான்** - *கிழங்கும் கனியும் காயும் நெருங்கி, மிகுந்த நீரும், தேனும் நிரம்பி விளங்கட்டும் என்று வரம் கூறுக என்று கேட்டான் இராமன்;* **விரியும் மாதவனும்** - *அகன்று பரந்த பெருந்தவம் உடைய பரத்துவாசனும்;* **'அஃதே ஆக' எனப் புகன்றிட்டான்** - *அப்படியே ஆகட்டும் என்று சொல்லி முடித்தான். ஆல், அசை.*

*10149.* ***அருந்தவன், 'ஐய! நின்னோடு அனிக வெஞ்***
***சேனைக்கு எல்லாம்***
***விருந்து இனிது அமைப்பென்' என்னா, விளங்கும்***

***முத்தீயின் நாப்பண்***
***புரிந்து ஓர் ஆகுதியை ஈந்து, புறப்படும் அளவில்,***
***போகம்***
***திருந்திய வானநாடு சேர வந்து இறுத்தது அன்றே.****

***அருந்தவன்*** - *பரத்துவாசன்;* ***'ஐய!*** - *இராம!;* ***நின்னோடு அனிக வெஞ் சேனைக்கு எல்லாம் விருந்து இனிது அமைப்பன் என்னா*** - *உன்னோடு வந்துள்ள அணிவகுப்புற்ற இக்கொடிய சேனைகளுக்கு எல்லாம் விருந்துணவு நன்குறச் செய்து தருவேன் என்று சொல்லி;* ***விளங்கும் முத்தீயின் நாப்பண் புரிந்து ஓர் ஆகுதியை ஈந்து*** - *விளங்குகின்ற வேள்வித்தீயின் நடுவே மந்திரங்களை விரும்பிச் சொல்லி ஓர் அவிர்ப்பாகத்தைக் கொடுத்து;* ***புறப்படும் அளவில்*** - *எழுந்த அக்கணத்திலேயே;* ***திருந்திய வான நாடு சேர வந்து இறுத்தது*** - *இன்பங்கள் நிறைந்த சுவர்க்கலோகம் அப்படியே கீழ்இறங்கி அங்கே தங்கியது.*

*அன்று, ஏ - அசைகள்.*

***10150. அரைசரே ஆதியாக, அடியவர் அந்தமாக,***
***கரைசெயல் அரிய போகம் துய்க்குமா கண்டு,***
***இராமற்கு***
***அரைசியல் வழாமை நோக்கி, அறுசுவை அமைக்கும்***
***வேலை***
***விரைசெறி கமலக்கண்ணன் அனுமனை விளித்துச்***
***சொன்னான்:****

***அரைசரே ஆதியாக அடியவர் அந்தமாக*** - *அரசர் முதல் தொண்டர் வரை;* ***கரை செயல் அரிய போகம் துய்க்குமா கண்டு*** - *கணக்கிட இயலாத இன்பங்களை நுகர்வதைப் பரத்துவாசன் பார்த்து;* ***அரசியல் வழாஅமை நோக்கி இராமற்கு அறுசுவை அமைக்கும் வேலை*** - *அரசர்க்குள்ள இயல்பில் சிறிதும் வழுவாதபடி பார்த்து இராமனுக்கு அறுசுவை உணவைப் படைத்துக்கொடுக்கும் அச்சமயத்தில்;* ***விரை செறி கமலக் கண்ணன்*** - *மணமிக்க தாமரை போன்ற கண்ணுடைய இராமபிரான்;* ***அனுமனை விளித்துச் சொன்னான்*** - *அனுமனைக் கூப்பிட்டு அருகே அழைத்துப் பின்வருமாறு சொன்னான்.*

### *இராமன் அனுமனைப் பரதனிடம் அனுப்பல்*

**கலித்துறை**

***10151. 'இன்று நாம் பதி வருதுமுன், மாருதி! ஈண்டச்***
***சென்று, தீது இன்மை செப்பி, அத் தீமையும் விலக்கி***

நின்ற காலையின் வருதும்' என்று ஏயினன்,
நெடியோன்
'நன்று' எனா, அவன், மோதிரம் கைக் கொடு
நடந்தான்.

**'நெடியோன்** - இராமன்; **'மாருதி!** - அனுமனே!; **இன்று நாம் பதிவருது முன்** - நாம் இன்றைக்கு அயோத்திக்கு வருவதற்கு முன்னாக; **ஈண்டச் சென்று** - விரைந்து போய்; **தீது இன்மை செப்பி அத்தீமையும் விலக்கி நின்ற காலையின் வருதும்' என்று ஏயினன்** - எனக்கு ஒரு தீமையும் இல்லை என்பதைப் பரதனுக்குச் சொல்லி அவனுக்கு நேர்ந்து விடும் (தீப்புகல் ஆகிய) தீமையையும் தடுத்து நீ அங்கே இருக்கும் நேரத்தில் வருவேன் என்று ஏவி அனுப்பினான்; (அதுகேட்ட) **அவன்** - அந்த அனுமன்; **'நன்று' எனா** - அப்படியே நல்லது என்று சொல்லி; **மோதிரம் கைக்கொடு நடந்தான்** - இராமன் அளித்த அடையாளமான கணையாழியை கையில் வாங்கிக் கொண்டு புறப்பட்டான்.

உடம்பொடு புணர்த்தலால் இராமன் கூறியதோடு கணையாழியும் தந்தான் என்பதைப் பெற வைத்தார்.

10152. தந்தை வேகமும், தனது நாயகன் தனிச் சிலையின்
முந்து சாயகக் கடுமையும், பிற்பட முடுகி,
சிந்தை பின் வரச் செல்பவன், குகற்கும் அச்
சேயோன்
வந்த வாசகம் கூறி, மேல் வான் வழிப் போனான்.

**தந்தை வேகமும்** - தன் தந்தையாகிய காற்றின் வேகமும்; **தனது நாயகன் தனிச்சிலையின் முந்து சாயகக் கடுமையும் பிற்பட முடுகி** - தனது தலைவனாய இராமனுடைய ஒப்பற்ற கோதண்டத்திலிருந்து வெளிச் செல்லும் அம்பின் வேகமும் பின்னிடும்படி விரைந்து சென்று; **சிந்தை பின் வரச் செல்பவன்** - தன்மனம் தன்னைப்பின் தொடரும்படி செல்கின்ற அனுமன்; **அச்சேயோன் வந்த வாசகம்** - அந்தச் செவ்வியனாகிய இராமன் திரும்பி வந்து கொண்டிருக்கிறான் என்கின்ற வார்த்தையை; **குகற்கும் கூறி** - வழியில் உள்ள குகப்பெருமாளுக்கும் சொல்லி; **மேல் வான் வழிப் போனான்** - மேலே ஆகாய வழியாகச் சென்றான்.

கலி விருத்தம்

10153. இன்று இசைக்கு இடம் ஆய இராகவன்
தென் திசைக் கருமச் செயல் செப்பினாம்
அன்று இசைக்கும் அரிய அயோத்தியில்

***நின்று இசைத்துள தன்மை நிகழ்த்துவாம்.***

***இன்று*** - *இப்போது;* ***இசைக்கு இடம் ஆய இராகவன்*** - *புகழுக்கு இருப்பிடமாக உள்ள இராமனது;* ***தென்திசைக் கருமச் செயல் செப்பினாம்*** - *தெற்குத் திசையில் செய்த செயல்களை எல்லாம் சொன்னோம்;* ***அன்று*** - *அப்போது;* ***இசைக்கும் அரிய அயோத்தியில்*** - *புகழும் புகழுக்கும் அரியதாகிய அயோத்தி என்னும் மாநகரத்தில்;* ***நின்று இசைத்துள தன்மை நிகழ்த்துவாம்*** - *பொருந்தி நடந்துள்ள நிகழ்ச்சிகளை இனிமேல் சொல்லுவோம்.*

*நந்தியம்பதியில் பரதன்*

***10154. நந்தியம்பதியின்தலை, நாள்தொறும்***
***சந்தி இன்றி நிரந்தரம், தம்முனார்***
***பந்தி அம் கழல் பாதம் அருச்சியா,***
***இந்தியங்களை வென்றிருந்தான்அரோ.***

*(பரதன்)* ***நந்தியம் பதியின் தலை*** - *நந்திக்கிராமத்தின் கண்;* ***நாள்தொறும்*** - *நாள்தோறும்;* ***சந்தி இன்றி*** *-காலை, நண்பகல், மாலை என்கின்ற வந்தனைப் பொழுது மட்டும் அல்லாமல்;* ***நிரந்தரம்*** - *அறுபது நாழிகையும் (எப்பொழுதும்) தம்முனார் - தன் தமயனாராகிய இராமரது;* ***பந்தி அம் கழல் பாதம் அருச்சியா*** - *வரிசையான அழகிய வீரக்கழல் அணிந்த திருவடிகளைப் பூசித்துக்கொண்டு;* ***இந்தியங்களை வென்று இருந்தான்*** - *பொறிகளை அடக்கியாண்டு இருந்தான். அரோ - அசை.*

***10155. துன்பு உருக்கவும், சுற்றி உருக்க ஒணா***
***என்பு உருக்கும் தகைமையது இட்டது ஆய்,***
***முன்பு உருக் கொண்டு ஒரு வழி முற்றுறா***
***அன்பு உருக் கொண்டது ஆம் எனல் ஆகுவான்;***

***துன்பு சுற்றி உருக்கவும்*** - *(இராமனைப் பிரிந்துள்ள) பிரிவு என்னும் துன்பம் சூழ்ந்து உருக்குதலால்;* ***உருக்க ஒணா என்பு உருக்கும் தகைமையது இட்டது ஆய்*** - *எதனாலும் உருக்கமுடியாத எலும்பையும் உருக்கக்கூடிய தன்மை பொருந்தியதாய்;* ***முன்பு உருக்கொண்டு ஒருவழி முற்றுறா*** - *முன்னொரு காலத்திலும் வடிவம் கொண்டு ஓரிடத்தும் முழுமையாய்த் தோற்றாத;* ***அன்பு உருக் கொண்டது ஆம் எனல் ஆகுவான்*** - *அன்பே ஒரு வடிவம் கொண்டது ஆகும் என்று சொலற்குரியவனாக உள்ளான்.*

***10156. நினைத்தலும் தடம் கண் இணை நீர் வர,***
***இனத்த தண்டலை நாட்டு இருந்தேயும், அக்***
***கனத்த கந்தமும் காயும் கனிகளும்***
***வனத்த அல்ல அருந்தல் இல் வாழ்க்கையான்;***

***நினைத்தலும் தடங்கண் இணை நீர் வர*** - *இராமனை நினைத்த அளவில் விசாலமான இருகண்களிலும் நீர்பெருக;* ***இனத்த தண்டலைநாட்டு இருந்தேயும்*** - *கூட்டமான சோலைகள் சூழ்ந்த தனது நாட்டின்கண் இருந்தும்;* ***அக் கனத்த கந்தமும் காயும் கனிகளும் வனத்த அல்ல*** - *அந்த மேன்மையுடைய கிழங்கும் காயும் பழங்களும் ஆய காட்டின்கண் கிடைக்கும் பொருள்களை அல்லாமல் பிறவற்றை;* ***அருந்தல் இல் வாழ்க்கையான்*** - *நுகர்தல் இல்லாத வாழ்க்கை உடையவன்.*

***10157. நோக்கின் தென் திசை அல்லது நோக்குறான்;***
***ஏக்குற்று, ஏக்குற்று, 'இரவி குலத்து உளான்***
***வாக்கில் பொய்யான்; வரும், வரும்' என்று, உயிர்***
***போக்கிப் போக்கி, உழக்கும் பொருமலான்.***

***நோக்கின் தென் திசை அல்லது நோக்குறான்*** - *பார்த்தால் இராமன் சென்ற தென்திசையைத் தவிர வேறு திசைகளைப் பாரான்;* ***ஏக்குற்று, ஏக்குற்று*** - *ஏங்கி ஏங்கி;* ***'இரவி குலத்து உளான் வாக்கில் பொய்யான்; வரும் வரும் 'என்று*** - *சூரிய குலத்தில் தோன்றியவன் சத்தியம் தவறமாட்டான், சொன்னவாறு வருவான் என்று கருதி;* ***உயிர் போக்கிப் போக்கி உழக்கும் பொருமலான்*** - *உயிரை விட்டு விட்டு வருந்தும் துக்கத்தை உடையவன்.*

***10158. உண்ணும் நீர்க்கும் உயிர்க்கும் உயிரவன்,***
***எண்ணும் கீர்த்தி இராமன், திரு முடி***
***மண்ணும் நீர்க்கு வரம்பு கண்டால் அன்றி,***
***கண்ணின் நீர்க்கு ஓர் கரை எங்கும் காண்கிலான்.***

***உண்ணும் நீர்க்கும் உயிர்க்கும் உயிரவன் எண்ணும் கீர்த்தி இராமன்*** - *பருகுகின்ற நீர்க்கும் அதனால் தளிர்க்கும் உயிர்க்கும் உயிராக உள்ளவனாய் எல்லாராலும் மதிக்கப்படும் புகழை உடைய இராமனது;* ***திருமுடி மண்ணும் நீர்க்கு வரம்புகண்டால் அன்றி*** - *திருமுடியை நீராட்டுகின்ற பட்டாபிடேக நீர்க்கு எல்லை கண்டால் அல்லாமல்;* ***கண்ணின் நீர்க்கு ஓர் கரை எங்கும் காண்கிலான்*** - *தன் கண்ணிலிருந்து வழிகின்ற நீர்க்கு ஓர் முடிவை ஒரிடத்தும் ஒருபொழுதும் காணாதவன்.*

***10159. அனையன் ஆய பரதன், அலங்கலின்***
***புனையும் தம்முனார் பாதுகைப் பூசனை***
***நினையும் காலை, நினைத்தனனாம் அரோ,***
***மனையின் வந்து அவன் எய்த மதித்த நாள்.***

***அனையன் ஆய பரதன்*** - *அப்படிப்பட்டவனாகிய பரதன்;* ***அலங்கலின் புனையும் தம்முனார் பாதுகைப் பூசனை*** - *மாலையால் அலங்கரிக்கின்ற தம் தமையனாராய இராமனது திருவடிப் பாதுகைகளின் பூசனையை;* ***நினையும்காலை*** - *செய்ய எண்ணிய காலத்தில்;* ***அவன் மனையின் வந்து எய்த மதித்த நாள் நினைந்தனனாம்*** - *இராமன் அயோத்தி அரண்மனைக்குத் திரும்ப வந்து சேரக் கருதிக் கூறிய நாளைப் பற்றி நினைந்தானாம்.*

*அரோ - அசை*

*பரதனிடம் சோதிடர் கூறுதல்*

***10160. 'யாண்டு வந்து இங்கு இறுக்கும்?' என்று***
***எண்ணினான்,***
***'மாண்ட சோதிட வாய்மைப் புலவரை***
***ஈண்டுக் கூய்த் தருக' என்ன, வந்து எய்தினார்,***
***'ஆண்தகைக்கு இன்று அவதி' என்றார்அரோ.***

***'யாண்டு வந்து இங்கு இறுக்கும்' என்று எண்ணினான்*** - *இராமன் எப்பொழுது வந்து இங்கு சேர்வான் என்று நினைத்த பரதன்;* ***'மாண்ட சோதிட வாய்மைப் புலவரை ஈண்டுக் கூஉய்த்தருக' என்ன வந்து எய்தினார்*** - *மாட்சிமை பொருந்திய கணித நூலில் தப்பாமல் கூறும் ஆற்றலுடையாரை இங்கே கூப்பிட்டுத்தருக என்று சொல்ல; வந்து சேர்ந்தவர்களாய சோதிடர்;* ***'ஆண்தகைக்கு இன்று அவதி' என்றார்*** - *இராமனுக்கு இன்று வருதற்குரிய நாளாகிய காலம் என்று சொன்னார்கள். அரோ - அசை.*

*பரதன் அவலித்தல்*

***10161. என்ற போதத்து, இராமன் வனத்திடைச்***
***சென்ற போதத்தது அவ் உரை, செல்வத்தை***
***வென்ற போதத்த வீரனும் வீழ்ந்தனன்,***

**கொன்ற போதத்து உயிர்ப்புக் குறைந்துளான்.**

**என்ற போதத்து** - என்று சோதிடர்கள் சொன்ன நேரத்தில்; **செல்வத்தை வென்ற போதத்து வீரனும் வீழ்ந்தனன்** - அரச செல்வத்தை வேண்டாம் என்று உதறித்தள்ளி வென்ற ஞான வீரனாகிய பரதனும் துடித்து விழுந்தான்; **இராமன் வனத்திடைச் சென்ற போதத்தது அவ்உரை** - இராமன் காட்டுக்குச் சென்ற போது கூறியதாகிய அந்த வார்த்தை (நினைவு வந்து); **கொன்ற போதத்து உயிர்ப்புக் குறைந்துளான்** - தன்னைக் கொன்ற சமயத்தில் மூச்சு அடங்கிப் போனான்.

அவ் உரை திருவடிசூட்டு படலம் 133 ஆம் பாடலில் (ஆம் ப. 2507) பரதன் வேண்டியதை ஏற்று, 134ஆம் பாடலில் இராமன் (2508) 'அன்னது ஆக' என்று கூறிய உரை. அந்த வார்த்தை மனத்திற்கு வந்து வருத்தியதால் மூர்ச்சை அடைந்தான்.

**10162. மீட்டு எழுந்து, விரிந்த செந் தாமரைக்**
**காட்டை வென்று எழு கண் கலுழிப் புனல்**
**ஓட்ட, உள்ளம் உயிரினை ஊசல் நின்று**
**ஆட்டவும், அவலத்து அழிந்தான்அரோ.**

**மீட்டு எழுந்து** - உயிரினை மீட்டுத் திரும்பவும் எழுந்து; **விரிந்த செந்தாமரைக் காட்டை வென்று எழு கண் கலுழிப் புனல் ஓட்ட** - அலர்ந்த செந்தாமரைக் கூட்டத்தைத் தன் அழகால் வென்று விளங்கும் கண்கள் கலங்கல் நீரை ஒழுகவிட; **உள்ளம் உயிரினை ஊசல் நின்று ஆட்டவும்** - மனம் உயிரை ஊசலாடச் செய்யவும்; **அவலத்து அழிந்தான்** - துக்கத்தில் மூழ்கி நிலைகெட்டான்.

அரோ - அசை.

**10163. 'எனக்கு இயம்பிய நாளும், என் இன்னலும்,**
**தனைப் பயந்தவள் துன்பமும், தாங்கி, அவ்**
**வனத்து வைகல் செய்யான்; வந்து அடுத்தது ஓர்**
**வினைக் கொடும் பகை உண்டு' என விம்மினான்.**

**எனக்கு இயம்பிய நாளும்** - எனக்கு வருவதாகக் குறிப்பிட்ட நாளும்; **என் இன்னலும்** - என் துன்பமும்; **தனைப் பயந்தவள் துன்பமும்** - தன்னைப் பெற்றெடுத்தவளாய கோசலையின் துயரத்தையும்; **தாங்கி** - கிடக்கட்டும் என்று சுமந்து; **வானத்து வைகல் செய்யான்** - காட்டின் கண் தங்கியிருத்தலைச் செய்ய மாட்டான்; **வந்து அடுத்தது ஓர் வினைக் கொடும்பகை உண்டு** - அவனை (அயோத்திக்கு வரமுடியாதவாறு) தடுக்க வந்து சேர்ந்ததாகிய ஒரு தீவினையால் நேர்ந்த கொடிய

*பகை உண்டு போலும்;* ***என விம்மினான்*** *- என்று மனத்தில் கருதித்துயருற்றான். வாராமைக்குக் காரணம் தடையோ என்பது.*

***10164. 'மூவகைத் திருமூர்த்தியர் ஆயினும்***
***பூவகத்தில், விசும்பில், புறத்தினில்,***
***ஏவர் கிற்பர் எதிர் நிற்க, என்னுடைச்***
***சேவகற்கு?' என ஐயமும் தேறினான்.***

***மூவகைத் திருமூர்த்தியர் ஆயினும்*** *- அரன், அரி, அயன் என்னும் மூன்று மூர்த்திகள் ஆனாலும்,* ***பூவகத்தில்***, ***விசும்பில்***, *புறத்தினில் - பூமியில் விண்ணில், வேறு இடங்களில்;* ***என்னுடைச் சேவகற்கு*** *- என்னுடைய தலைவனான இராமனுக்கு;* ***எதிர் நிற்க*** *- எதிர்த்து நிற்பதற்கு;* ***எவர் கிற்பர்*** *- எவர் வல்லமை உடையவர்;* ***என ஐயமும் தேறினான்*** *- என்று 'பகை உண்டு' என்ற சந்தேகத்திலிருந்து தெளிந்தான்.*

*எனவே கொடும்பகை அவனை ஒன்றும் செய்யாது என்று கருதி முன் நினைப்பை மாற்றித் தடுமாறுகிறான் பரதன்.*

***10165. 'என்னை, ''இன்னும் அரசியல் இச்சையன்***
***அன்னன் ஆகின், அவன் அது கொள்க'' என்று***
***உன்னினான் கொல், உறுவது நோக்கினான்?***
***இன்னதே நலன்' என்று இருந்தான்அரோ.***

***'என்னை 'இன்னும் அரசியல் இச்சையன்*** *- இன்னமும் பரதன் அரசாளும் ஆசை உடையவனாய் உளன்;* ***அன்னன் ஆகில் அவன் அது கொள்க'*** *- அப்படியிருந்தால் அவன் அரசாட்சியைக் கொண்டிருக்கட்டும்;* ***என்று உன்னினான் கொல்*** *- என்று நினைத்திருப்பானோ;* ***உறுவதை நோக்கினான்*** *- இனிச் செய்யவேண்டுவதை எண்ணிப்பார்த்தவன்;* ***'இன்னதே நலன்' என்று இருந்தான்*** *- நம் காட்டிலே இருப்பதே நல்லது என்று இருந்து விட்டானாகும். அரோ -* ***அசை.***

*தான் நாடாள விட்டுக்கொடுத்து வராமல் இருந்திருக்கக் கூடும் என்று புதிய காரணத்தைக் கற்பித்துக் கொண்டான் பரதன்.*

***10166. 'அனைத்தில் அங்கு ஒன்றும் ஆயினும் ஆகுக;***
***வனத்து இருக்க; இவ் வையம் புகுதுக;***
***நினைத்து இருந்து நெடுந் துயர் மூழ்கிலேன்;***
***மனத்து மாசு என் உயிரொடும் வாங்குவேன்.'***

***அனைத்தில் அங்கு ஒன்றும் ஆயினும் ஆகுக*** - *அத்தனைக் காரணங்களில் எது ஒன்று ஆனாலும் ஆகட்டும்;* ***வனத்து இருக்க; வையம் புகுதுக*** - *அவன் காட்டில் இருக்கட்டும் அல்லது நாட்டுக்குள் வரட்டும்; (அது பற்றியும் எனக்குக் கவலை யில்லை)* ***நினைத்து இருந்து நெடுந்துயர் மூழ்கிலேன்*** - *பலபடியாக நினைத்து நினைத்துப் பெருந்துன்பத்தில் மூழ்க மாட்டேன்;* ***மனத்து மாசு என் உயிரொடும் வாங்குவேன்*** - *என் மனத்துன்பத்தை என் உயிரோடு நீக்கிக் கொள்வேன்.*

*நான் இறந்தால் என் மனத்துன்பமும் போய்விடும் என்று கருதித் தற்கொலைக்குத் துணிகிறான்.*

### *பரதன் சத்துருக்கனை அழைத்தல்*

***10167. என்னப் பன்னி, 'இளவலை என்னுழைத்***
***துன்னச் சொல்லுதிர்' என்னலும், தூதர் போய்***
***'உன்னைக் கூயினன், உம்முன்' எனா முனம்,***
***முன்னர்ச் சென்றனன், மூவர்க்கும் பின் உளான்.***

***என்னப்பன்னி*** - *என்று பலமுறை கூறி;* ***'இளவலை என்னுழைத் துன்னச் சொல்லுதிர்' என்னலும்*** - *தம்பியாகிய சத்துருக்கனை என்னிடம் வரச்சொன்னதாகச் சொல்லுங்கள் என்று (தூதரிடம்) சொல்லுதலும்;* ***தூதர் போய்*** - *தூதர் (சத்துருக்கனிடம்) சென்று;* ***'உம்முன் உன்னைக் கூஉயினன்' எனா முனம்*** - *உன் அண்ணனாய பரதன் உன்னை அழைத்தான் என்று சொல்வதற்கு முன்னாலே;* ***மூவர்க்கும் பின் உளான் முன்னர்ச் சென்றனன்*** - *இராமர்க்கும் பரதலக்குவர்களுக்கும் பின பிறந்தவனாய சத்துருக்கன் பரதன் முன்னர்ச் சென்றான்.*

### *பரதன் வரம் வேண்டல்*

***10168. தொழுது நின்ற தன் தம்பியை, தோய் கணீர்***
***எழுது மார்பத்து இறுகத் தழுவினான்,***
***அழுது, 'வேண்டுவது உண்டு, ஐய! அவ் வரம்,***
***பழுது இல் வாய்மையினாய்! தரற்பாற்று' என்றான்.***

***தொழுது நின்ற தன் தம்பியை*** - *வணங்கி நின்ற தன் தம்பி சத்துருக்கனை;* ***தோய் கணீர் எழுது மார்பத்து இறுகத் தழுவினான்*** - *நிறைந்த கண்ணீரால் மெழுகப் பெற்ற தன் மார்பில் பரதன் நன்கு தழுவி;* ***அழுது*** - *அவலித்து;* ***ஐய!*** - *அய்யனே!;* ***வேண்டுவது உண்டு*** - *நின்பால் நான் வேண்டிக் கொள்வது ஒன்று உண்டு;* ***அவ்வரம்*** - *அந்த வரத்தை;* ***பழுது இல் வாய்மையினாய்!*** - *குற்றமற்ற சத்தியம் உடையவனே!;* ***தரற்பாற்று*** - *தரவேண்டும்;* ***என்றா*** *ன்-.*

*10169.* ***'என்னது ஆகும்கொல், அவ் வரம்?'' என்றியேல்,***
***சொன்ன நாளில் இராகவன் தோன்றிலன்;***
***மின்னு தீயிடை யான் இனி வீடுவென்;***

***மன்னன் ஆதி; என் சொல்லை மறாது' என்றான்.***

**'அவ்வரம் என்னது ஆகும் கொல்' என்றியேல்** - *அவ்வரம் யாதாகுமோ என்று கேட்பாயானால்;* **இராகவன் சொன்ன நாளில் தோன்றிலன்** - *இராமன் குறித்த நாளில் வரவில்லை;* **யான் மின்னு தீயிடை வீடுவென்** - *யான் ஒளிரும் நெருப்பின் உயிர் துறப்பென்;* **என் சொல்லை மறாது மன்னன் ஆதி** - *என் வார்த்தை மறுக்காமல் அயோத்திக்கு அரசனாக இருந்து ஆள்வாயாக;* **என்றான்** -.

*சத்துருக்கன் வருந்தி உரைத்தல்*

*10170.* ***கேட்ட தோன்றல், கிளர் தடக் கைகளால்***
***தோட்ட தன் செவி பொத்தி, துணுக்குறா,***
***ஊட்டு நஞ்சம் உண்டான் ஒத்து உயங்கினான்;***
***நாட்டமும் மனமும் நடுங்காநின்றான்.***

**கேட்ட தோன்றல்** - *பரதன் உரை கேட்ட சத்துருக்கன்;* **கிளர் தடக்கைகளால் தோட்ட தன் செவி பொத்தி** - *மேல் எழுந்த நீண்ட தன் கைகளால் துளையுடைய தன் காதுகளை மூடிக்கொண்டு;* **துணுக்குறா** - *விதிர்ப்பு எய்தி;* **ஊட்டு நஞ்சம் உண்டான் என்று உயங்கினான்** - *பிறர் ஊட்டிய விடத்தை உண்டவனைப் போலச் சோர்ந்தான்;* **நாட்டமும் மனமும் நடுங்கா நின்றான்** - *கண்ணும் மனமும் நடுங்குகின்றவனாக ஆனான்.*

*10171.* ***விழுந்து, மேக்கு உயர் விம்மலன், வெய்து உயிர்த்து***
***எழுந்து, 'நான் உனக்கு என்ன பிழைத்துளேன்?***
***அழுந்து துன்பத்தினாய்!' என்று அரற்றினான் -***
***கொழுந்து விட்டு நிமிர்கின்ற கோபத்தான்.***

**விழுந்து** - *கீழே விழுந்து;* **மேக்கு உயர் விம்மலன்** - *மேலும் மேலும் விம்மி;* **வெய்துயிர்த்து எழுந்து** - *பெரிதாக மூச்சுவிட்டு எழுந்து;* **அழுந்து துன்பத்தினாய்!** - *துன்பத்தில் அழுந்தியவனே!* **நான் உனக்கு என்ன பிழைத்துளேன் -** *நான் உனக்கு என்ன தவறு செய்தேன்;* **என்று அரற்றினான்** - *என்று புலம்பி;* **கொழுந்து விட்டு**

***நிமிர்கின்ற கோபத்தான்*** - *மேல சுவாலை விட்டு உயர்கின்ற கோபம் உடையவன் ஆனான்.*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***10172. 'கான் ஆள நிலமகளைக் கைவிட்டுப்
போனானைக் காத்து, பின்பு
போனானும் ஒரு தம்பி; ''போனவன்
தான் வரும் அவதி போயிற்று'' என்னா,
ஆனாத உயிர் விட என்று அமைவானும்
ஒரு தம்பி; அயலே நாணாது,
யானாம் இவ் அரசு ஆள்வென்? என்னே,
இவ் அரசாட்சி! இனிதே அம்மா!***

***கான் ஆள*** - *காட்டில் வாழ;* ***நில மகளைக் கைவிட்டுப் போனானைக் காத்து, பின்பு போனானும் ஒரு தம்பி*** - *பூதேவியை வேண்டாம் என்று உதறிச் சென்ற இராமனைக் காப்பாற்றி அநுமன் பின்னே போனவனும் ஒரு தம்பியாகிய இலக்குவன்;* ***போனவன்தான் வரும் அவதி போயிற்று என்னா*** - *காடு போன இராமன் தான் திரும்ப வரக் குறித்த காலம் கடந்தது என்று சொல்லி;* ***ஆனாத உயிர் விட என்று அமைவானும் ஒரு தம்பி*** - *அமைந்திராத ஆற்றாமை உடைய உயிரை விட்டுவிட என்று முயல்கின்றவனும் ஒரு தம்பியாகிய பரதன்;* ***அயலே நாணாது யான் ஆம் இவ் அரசு ஆள்வென்*** - *(இவர்களுடனேயே பிறந்து) மற்றொருவனாகிய யான் இந்த நாணமில்லாமல் அரசை ஆளுவேனாம்;* ***இந்த அரசாட்சி என்னே*** - *இந்த அரசாட்சி யாதாக உள்ளது;* ***இனிதே*** - *மிக இனிதே.*

*அம்மா வியப்பிடைச் சொல் - என்னே; இனிதே இகழ்ச்சிக் குறிப்பு. இராமன் பின் பிறந்தாரோடு தன்னை ஒப்பிட்டுப் பார்த்து வருந்தும் சத்துருக்கன் கூற்று நெஞ்சைப் பிழியும் தன்மையது. ஒவ்வொருவரும் துன்பத்தில் பங்குபெற தான் மட்டும் அரசாட்சியில் பங்கு பெற்றவனாகக் குறிப்பிடப்பட்டது அவனைத் துடிக்க வைத்தது.*

***10173. ''மன்னின் பின், வள நகரம் புக்கு
இருந்து வாழ்ந்தானே, பரதன் என்னும்
சொல் நிற்கும்'' என்று அஞ்சி, புறத்து
இருந்தும், அருந் தவமே தொடங்கினாயே!
''என்னின் பின் இவன் உளனாம்'' என்றே
உன் அடிமை உனக்கு இருந்ததேனும்
உன்னின் பின் இருந்ததுவும், ஒரு
குடைக் கீழ் இருப்பதுவும் ஒக்கும்' என்றான்.***

***மன்னின் பின் வளநகரம் புக்கு இருந்து வாழ்ந்தானே பரதன் என்னும் சொல் நிற்கும்*** - *இராமனாகிய அரசன் காடு போன பிறகு அயோத்தி நகரம் புகுந்து அரசு வீற்றிருந்து வாழ்ந்தான் இந்த பரதன் என்ற வார்த்தை உலகில் உண்டாகும்;* ***என்று அஞ்சி புறத்து இருந்தும் அருந்தவமே தொடங்கினாயே*** - *என்று பயந்து அயோத்திக்குப் புறத்தே நந்தியம்பதியில் இருந்தும் அரிய தவத்தையே செய்யத் தொடங்கினாய் அல்லவா?;* ***என்னின் பின் இவன் உளனாம் என்றே*** - *நான் அக்கினிப் பிரவேசம் செய்து உயிரை விட்டபிறகு இவன் பிழைத்திருப்பான் என்று;* ***உன் அடிமை உனக்கு இருந்த தேனும்*** - *உன் அடியவனான என் விஷயத்தில் உனக்கு எண்ணம் இருந்தாலும்;* ***உன்னின் பின் இருந்ததுவும்*** - *நீ இறந்த பிறகு உனக்குப்பிறகு உடன் இறவாமல் உயிரோடு இருந்ததுவும்;* ***ஒரு குடைக்கீழ் இருப்பதுவும் ஒக்கும் என்றான்*** - *நீ உள்ளபோதே உன்னை அகற்றி ஒரு வெண் கொற்றக் குடைகீழ் நான் இருந்து அரசாள்வதும் ஒன்றுதானே என்று கூறி வருந்தினான்.*

*இராமன் அடிமையாகிய தன்னைப் பற்றி உணர்ந்த பரதன், தன் அடிமையாகிய சத்துருக்கனாகிய என்னைப் பற்றி அங்ஙனம் உணர்ந்தானில்லையே என்ற ஏக்கம் சத்துருக்கன் மனத்தைப் பிழிந்து இங்ஙனம் பேசச் செய்கிறது. அவலத்தில் ஆழமான கவிச் சுவையைக் கம்பர் காட்டும் இடமாகும் இது.*

### *பரதன் எரி அமைக்க தம்பியைப் பணித்தல்*

***10174. முத்து உருக் கொண்டு அமைந்தனைய முழு***
***வெள்ளிக்***
***கொழு நிறத்து, முளரிச் செங் கண்,***
***சத்துருக்கன் அஃது உரைப்ப, 'அவன் இங்குத்***
***தாழ்க்கின்ற தன்மை, யான் இங்கு***
***ஒத்திருக்கலால் அன்றே? உலந்ததன்பின்***
***இவ் உலகை உலைய ஒட்டான்;***
***அத் திருக்கும் கெடும்; உடனே புகுந்து ஆளும்***
***அரசு; எரி போய் அமைக்க' என்றான்.***

***முத்து உருக் கொண்டு அமைந்தனைய முழு வெள்ளிக் கொழு நிறத்து முளரிச் செங்கண் சத்துருக்கன் அ ஃது உரைப்ப*** - *முத்து வடிவம் கொண்டு செய்தது போன்ற முழுமையான வெள்ளியின் கொழுவிய வெண்மை நிற மேனியை உடைய தாமரை போலும் கண்ணான் ஆகிய சத்துருக்கன் அந்த வார்த்தைகளைச் சொல்ல; (அது கேட்ட பரதன்)* ***அவன் இங்குத் தாழ்க்கின்ற தன்மை*** - *அந்த இராமன் நாடு வரத் தாமதிக்கின்ற காரணம்;* ***யான் இங்கு ஒத்திருக்கலாம் அன்றே*** - *யான் இங்கு அரசாட்சியோடு கூடி இருக்கின்ற தன்மையால் அல்லவா?;* ***உலந்ததன்பின் இவ் உலகை உலைய ஒட்டான்*** - *நான் இறந்தபிறகு இந்த உலகத்தை வருந்தும்படி விடமாட்டான்;* ***அத்திருக்கும் கெடும்*** - *அந்த மாறுபட்ட நினைவும் அவனை விட்டுப் போகும்;* ***உடனே புகுந்து அரசு ஆளும்*** - *உடனே விரைந்து அயோத்திக்குள் நுழைந்து அரசை ஆள்வான் (ஆதலின் சத்துருக்க!);* ***'போய் எரி அமைக்க' என்றான்*** - *நீ சென்று நெருப்பைத் தயார் செய்வாயாக என்று சொன்னான்.*

*கோசலை வருதல்*

***10175. அப்பொழுதின், இவ் உரை சென்று, அயோத்தியினின்***
***இசைத்தலுமே, அரியை ஈன்ற***
***ஒப்பு எழுத ஒண்ணாத கற்புடையாள்***
***வயிறு புடைத்து, அலமந்து ஏங்கி,***
***இப்பொழுதே உலகு இறக்கும், யாக்கையினை***
***முடித்து ஒழிந்தால், மகனே!' என்னா,***
***வெப்பு எழுதினால் அன்ன மெலிவுடையாள்***
***கடிது ஓடி, விலக்க வந்தாள்.***

***அப்பொழுதின்*** *- அந்த நேரத்தில்;* ***இவ் உரை சென்று*** *- பரதன் கூறிய இச்சொல் (காற்றுவாக்கில்) சென்று;* ***அயோத்தியினின் இசைத்தலுமே*** *- அயோத்தி நகரத்தில் சொல்லப்பட்டதுமே;* ***அரியை ஈன்ற ஒப்பு எழுத ஒண்ணாத கற்புடையாள், வெப்பு எழுதினால் அன்ன மெலிவுடையாள்*** *- திருமாலைப் பெற்ற உவமை சொல்ல முடியாத கற்புடையாளும் பிரிவுத் துயரத்தினால் வெம்மை எழுதி வைத்தாற்போன்ற தளர்ச்சியடைந்த திருமேனியுடையாளும் ஆகிய கோசலை;* ***வயிறு புடைத்து, அலமந்து, ஏங்கி*** *- வயிற்றில் அடித்துக்கொண்டு, மனம் சுழன்று, இரங்கி;* ***மகனே! யாக்கையினை முடித்து ஒழிந்தால் இப்பொழுதே உலகு இறக்கும் என்னா*** *- பரதனே! நீ உன் உடலை (எரியில் வீழ்த்து) அழித்து ஒழிந்து போனால் அக்கணமே உலகம் முழுதும் இறந்துபடும் என்று சொல்லி;* ***விலக்க*** *-அவனைத் தடுக்க;* ***கடிது ஓடி வந்தாள்*** *- விரைந்து ஓடி வந்தாள்.*

***10176. மந்திரியர், தந்திரியர், வள நகரத்தவர்,***
***மறையோர், மற்றும் சுற்ற,***
***சுந்தரியர் எனப் பலரும் கை தலையில்***
***பெய்து இரங்கித் தொடர்ந்து செல்ல,***
***இந்திரனே முதல் ஆய இமையவரும்***
***முனிவரரும் இறைஞ்சி ஏத்த,***
***அந்தர மங்கையர் வணங்க, அழுது அரற்றி,***
***பரதனை வந்து அடைந்தாள் அன்றே.***

*(அவள்)* ***மந்திரியர், தந்திரியர், வள நகரத்தவர், மறையோர், மற்றும் சுற்ற*** *- அமைச்சர், சேனைத் தலைவர், அயோத்தி நகர மாந்தர், அந்தணர் மற்றும்உள்ளோர் தன்னைச் சுற்றிவர;* ***சுந்தரியர் எனைப் பலரும் கை தலை மேல் பெய்து இரங்கித் தொடர்ந்து செல்ல*** *- மகளிர் முதல் அனைவரும் தலைமேல் கையால் அடித்துக்கொண்டு மனமிரங்கி அவனைப் பின்பற்றிச் செல்ல;* ***இந்திரனே முதல் ஆய இமையவரும்***

***முனிவரரும் இறைஞ்சி ஏத்த*** - இந்திரன் முதலான தேவர்களும் முனிவர்களும் பரம் பொருளை வணங்கித் தோத்திரம் செய்ய; ***அந்தர மங்கையர் வணங்க*** - தேவப் பெண்கள் வணங்க; ***அழுது அரற்றி*** - அழுது பலவாறு புலம்பி; ***பரதனை வந்து அடைந்தாள்*** - பரதனை வந்து சேர்ந்தாள்.

*அன்று, ஏ, அசைகள். ஏத்த என்றது இவளுக்கு நலமாகவும் இச்செயல் இனிதாக முடியவும் வாழ்த்தலாகும். பரம்பொருளின் அன்னையாதலின் தேவமங்கையர் வணங்கினர்.*

### *கோசலை பரதனைத் தடுத்துரைத்தல்*

***10177. விரி அமைத்த நெடு வேணி புறத்து அசைந்து***
***வீழ்ந்து ஓசிய, மேனி தள்ள,***
***எரி அமைத்த மயானத்தை எய்துகின்ற***
***காதலனை இடையே வந்து,***
***சொரிவு அமைப்பது அரிது ஆய மழைக் கண்ணாள்***
***தொடருதலும், துணுக்கம் எய்தா,***
***பரிவு அமைந்த திரு மனத்தான் அடி தொழுதான்;***
***அவள் புகுந்து, பற்றிக் கொண்டாள்.***

***விரி அமைத்த நெடு வேணி புறத்து அசைந்து வீழ்ந்து ஓசிய*** - விரிந்து பொருந்திய நீண்ட சடை முதுகின்கண் அசைந்து விழுந்து வளைய; ***மேனி தள்ள*** - உடம்பு தடுமாற; ***எரி அமைத்த மயானத்தை எய்துகின்ற காதலனை*** - நெருப்பு உண்டாக்கிய இடுகாட்டை அடைகின்ற அன்பு மகனாகிய பரதனை; ***இடையே வந்து*** - நடுவில் புகுந்து வந்து; ***சொரிவு அமைப்பது அரிது ஆய மழைக் கண்ணாள் தொடருதலும்*** - சொரிந்து உண்டாக்குதல் இயலாது என்று சொல்லும்படி நீர் மழை போல ஒழுகுகின்ற கண்ணுடைய கோசலை பின்பற்றிக் கொள்ளுதலும்; ***பரிவு அமைந்த திரு மனத்தான்*** - அன்பால் நிறைந்தமைந்த நன்மனம் உடைய பரதன்; ***துணுக்கம் எய்தா*** - நடுக்கமுற்று; ***அடிதொழுதான்*** - அவள் காலில் வீழ்ந்து வணங்கினான்; ***அவள் புகுந்து பற்றிக் கொண்டாள்*** - கோசலை அவனிடையே புகுந்து அவனை இறுகப் பிடித்துக் கொண்டாள்.

**கலி விருத்தம்**

***10178. 'மன் இழைத்ததும், மைந்தன் இழைத்ததும்,***
***முன் இழைத்த விதியின் முயற்சியால்;***
***பின் இழைத்ததும், எண்ணில், அப் பெற்றியால்;***
***என் இழைத்தனை, என் மகனே?' என்றாள்.***

***மன் இழைத்ததும்*** *- தயரதன் இறந்ததும்;* ***மைந்தன் இழைத்ததும்*** *- இராமன் காடு போயதும்;* ***முன் இழைத்த விதியின் முயற்சியால்*** *- முன்னால் செய்தமைத்த வினையாகிய விதியின் விளைவால் நடந்தவையாகும்;* ***பின் இழைத்ததும்*** *- பின் குறித்த காலத்தில் வாராமையும்;* ***எண்ணில்*** *- யோசித்தால்;* ***அப்பெற்றியால்*** *- அதுபோல விதியின் விளைவே;* ***என் மகனே!*** *- என் மகனாகிய பரதனே (விதியாலன்றி)* ***என் இழைத்தனை*** *- நீயாக என்ன செய்யத் துணிந்தாய்?* ***என்றாள்*** *. தாமாக இயல்பாக நடப்பனவற்றை விதியின் விளைவு என்றும் நாமாக வலிந்து மேற்கொண்டு செய்வனவற்றை வினை என்றும் வேறு பிரித்துணரலாம்.*

***10179. 'நீ இது எண்ணினையேல், நெடு நாடு எரி***
***பாயும்; மன் அருஞ் சேனையும் பாயுமால்;***
***தாயர் எம் அளவு அன்று; தனி அறம்***
***தீயின் வீழும்; உலகும் திரியுமால்.***

*(பரதா!)* ***நீ இது எண்ணினையேல் நெடுநாடு எரி பாயும்*** *- நீ எரியில் வீழ்ந்து உயிர் துறப்பதாக நினைத்தால் இப்பெரிய நாட்டில் உள்ளார் அனைவரும் எரி பாய்வர்;* ***மன் அருஞ் சேனையும் பாயும்*** *- மன்னர்களும் அரிய சேனைகளும் பாயும்;* ***தாயர் எம் அளவு அன்று*** *- தாயர்களாகிய எங்கள் அளவில் மாத்திரம் நிற்பது அன்று;* ***தனி அறம் தீயின் வீழும்*** *- ஒப்பற்ற தருமமே எரியில் வீழும்;* ***உலகும் திரியும்*** *- உலகம் நிலைகெட்டுச் சுழலும்.*

*ஆல் அனைத்தும் உரையசை;*

***10180. 'தரும நீதியின்தன் பயன் ஆவது உன்***
***கருமமே அன்றிக் கண்டிலம், கண்களால்;***
***அருமை ஒன்றும் உணர்ந்திலை; ஐய! நின்***
***பெருமை, ஊழி திரியினும், பேருமோ?***

***ஐய!*** *- பரதனே!;* ***தரும நீதியின் தன் பயன் ஆவது உன் கருமம் அன்றிக் கண்டிலம் கண்களால்*** *- அற நீதியின் பயன்பாடு என்பது உன் செயலே அல்லாமல் எங்கள் கண்களால் வேறு காணவில்லை;* ***அருமை ஒன்றும் உணர்ந்திலை*** *- நின்னுடைய அருமையை ஒருசிறிதும் உணரவில்லை;* ***நின் பெருமை ஊழி திரியினும் பேருமோ*** *- உனது பெருமை ஊழிக்காலம் மாறுபடினும் மாறுபடாது.*

***10181. 'எண் இல் கோடி இராமர்கள் என்னினும்,***

***அண்ணல் நின் அருளுக்கு அருகு ஆவரோ?***
***புண்ணியம் எனும் நின் உயிர் போயினால்,***
***மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?***

**எண் இல் கோடி இராமர்கள் என்னினும் அண்ணல் நின் அருளுக்கு அருகு ஆவரோ?** *- கணக்கற்ற கோடியளவான இராமர்கள் ஒன்று சேர்ந்தாலும் பெருமைக்குரியவனே உன் அருளுக்குச் சமானமாக அருகில் வைத்துக் காணவும் ஒவ்வார்;* **புண்ணியம் எனும் நின் உயிர் போயினால், மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ** *- புண்ணிய வடிவாகிய நின் உயிர் போனால் நிலமும் ஆகாயமும் ஏனைய உயிர்களும் வாழா, இறந்துபடும்.*

*நிலம் வான் என்பது இடையில் உள்ள நீர், தீ, காற்று மூன்றுக்கும் உபலட்சணம் ஆகும். நிலஉயிர் - வான் உயிர் என்று இரண்டு உலகத்து உயிர்களைக் குறிப்பிட்டதாகக் கோடினும் தவறின்று.*

***10182. 'இன்று வந்திலனேஎனின், நாளையே***
***ஒன்றும் வந்து, உனை, உன்னி, உரைத்த சொல்***
***பின்றும் என்று உணரேல்; பிழைத்தான்எனின்,***
***பொன்றும் தன்மை புகுந்தது போய்' என்றாள்.***

*(இராமன்)* **இன்று வந்திலனே எனின்** *- இன்று வரவில்லை என்றால்;* **நாளையே வந்து உனை ஒன்றும்** *- நாளைக்கே வந்து உனைச் சேர்வான்;* **உன்னி உரைத்த சொல்** *- அவன் கருதிச் சொன்ன வார்த்தையில்;* **பின்றும் என்று உணரேல்** *- பின்னிட்டு வாராதிருப்பான் என்று உணராதே;* **பிழைத்தான் எனின்** *- அப்படித் தவறுவான் ஆயின்;* **போய் பொன்றும் தன்மை புகுந்தது** *- வந்து அவனே அழியும் அபாயத்தன்மை நேர்ந்தது (ஆகும்);* **என்றாள்.**

***10183. 'ஒருவன் மாண்டனன் என்று கொண்டு, ஊழி வாழ்***
***பெரு நிலத்துப் பெறல் அரும் இன் உயிர்க்***
***கருவும் மாண்டு அறக் காணுதியோ? - கலைத்***
***தருமம் நீ அலது இல் எனும் தன்மையாய்!***

**கலைத் தருமம் நீஅலது இல் எனும் தன்மையாய்! -** *சாத்திரங்களிற் சொல்லப்படும் தருமம் நீ அல்லாமல் வேறு இல்லை என்று கூறத்தக்க குண நலம் உடையாய்!;* **ஒருவன் மாண்டனன் என்று கொண்டு** *- ஒரு இராமன் மாண்டான் என்பதாக மனத்தில் கருதி (உன் உயிரை மாய்த்து அதனால்);* **பெரு நிலத்து** *- இப்பூஉலகில்;* **ஊழிவாழ்** *- நெடுங்காலம் வாழக்கூடிய;* **பெறல் அரும் இன்னுயிர்க் கருவும் மாண்டு அறக்**

***காணுதியோ*** - *பெறுதற்கரிய இனிய உயிரின் தோற்றமும் அடியோடு இல்லாது போகச் செய்யப் பார்க்கிறாயா? (அது சரியன்று)*

***10184. ' ''இறக்கையும், சிலர் ஏகலும், மோகத்தால்***
***பிறக்கையும், கடன்'' என்று, பின் பாசத்தை***
***மறக்கைகாண், மகனே! வலி ஆவது;***
***துறக்கைதானும்?' என்றாள் - மனம் தூய்மையாள்.***

***மனம் தூய்மையாள்*** - *தூய மனம் உடைய கோசலை;* ***மகனே!*** - *பரதனே!;* ***இறக்கையும்*** - *இறப்பதும்;* ***சிலர் ஏகலும்*** - *சிலர் உலகைப் பிரிந்து செல்லுதலும்;* ***மோகத்தால் பிறக்கையும்*** - *ஆசையின் காரணமாக மீண்டு பிறப்பெடுப்பதும்;* ***கடன்*** - *உலக முறைமை;* ***என்று*** - *எனக்கருதி;* ***பின் பாசத்தை மறக்கை வலி ஆவது காண்*** - *பிறகு பாசமாகிய பற்றை மறந்துவிடுதல் தான் உள்ள வலிமை என்பதாகும் என அறிவாயாக;* ***துறக்கை தானும்*** - *துறப்பது என்பதும் (அதுவே);* ***என்றாள்.***

*பரதன் தாய் உரையை மறுத்தல்*

***10185. ' ''மைந்தன் என்னை மறுத்து உரைத்தான்'' எனல்,***
***எந்தை மெய்ம்மையும், இக் குலச் செய்கையும்,***
***நைந்து போக, உயிர் நிலை நச்சிலேன்;***
***முந்து செய்த சபதம் முடிப்பனால்.***

*(அம்மா!)* ***மைந்தன் என்னை மறுத்து உரைத்தான் எனல்*** - *என் மகன் என் சொல்லை மறுத்துப் பேசிவிட்டான் என்று கருதாதே;* ***எந்தை மெய்ம்மையும் இக்குலச் செய்கையும் நைந்து போக*** - *என் தந்தையின் சத்தியமும் இக்குலத்தின் ஒழுக்கமும் தேய்ந்து அழிய;* ***உயிர் நிலை நச்சிலேன்*** - *உயிர் வாழ விரும்பவில்லை;* ***முந்து செய்த சபதம் முடிப்பன்*** - *சித்திரகூடத்தில் செய்த சபதத்தை முடிப்பேன்;*

*எனல் - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. ஆல் - உரையசை.*

***10186. 'யானும், மெய்யினுக்கு இன் உயிர் ஈந்து போய்,***
***வானுள் எய்திய மன்னவன் மைந்தனால்;***
***கானுள் எய்திய காகுத்தற்கே கடன்?***
***ஏனையோர்க்கும் இது இழுக்கு இல் வழக்கு அன்றோ?***

***யானும் - மெய்யினுக்கு இன் உயிர் ஈந்து போய் வானுள் எய்திய மன்னவன் மைந்தன்*** - *நானும் வாய்மைக்குத் தன்னுயிரைக் கொடுத்துச் சென்று விண்ணுலகடைந்த தயரதன் மகன்தான்; (வாய்மை காப்பது என்பது)* ***கானுள் எய்திய காகுத்தற்கே கடன்?*** *- காட்டிற்குச் சென்ற இராமனுக்கு மட்டுமா முறைமை (எனக்கில்லையா);* ***ஏனையோர்க்கும்*** *- தயரதன் பிள்ளைகளாய என் போன்றவர்களுக்கும்;* ***இது*** *- வாய்மை காப்பது;* ***இழுக்கு இல் வழக்கு அன்றோ?*** *- குற்றம் இல்லாத முறைமை அல்லவா (என் சபத வாய்மை காத்து தயரதன் மகன் என்று குலத்தின் ஒழுக்கத்தை நிலை நிறுத்துவேன் என்றான்.)*

*ஆல் - உரையசை.*

***10187. 'தாய் சொல் கேட்டலும், தந்தை சொல் கேட்டலும்,***
***பாசத்து அன்பினைப் பற்று அற நீக்கலும்,***
***ஈசற்கே கடன்; யான் அ ஃது இழைக்கிலேன்;***
***மாசு அற்றேன், இது காட்டுவென், மாண்டு' என்றான்.***

***தாய் சொல் கேட்டலும், தந்தை சொல் கேட்டலும் பாசத்து அன்பினைப் பற்று அற நீக்கலும்*** *- இரத்த பாசத்தால் உறவு முறையால் உள்ளதாகிய அன்பை அடியோடு போக்கிக் கொள்ளுதலும் ஆகிய இவை;* ***ஈசற்கே கடன்*** *- இராமனுக்கே செய்யும் முறைமையாகும்;* ***யான் அஃது இழைக்கிலேன்*** *- நான் அதனைச் செய்யமாட்டேன்;* ***மாசு அற்றேன்*** *- குற்றம் அற்றவன் யான்;* ***இது மாண்டு காட்டுவென்*** *- இதனை இறந்து அனைவர்க்கும் அறிவிப்பேன்;* ***என்றான்.***

*அனுமன் தோன்றி எரியை அவித்தல்*

***10188. என்று தீயினை எய்தி, இரைத்து எழுந்து***
***ஒன்று பூசலிடும் உலகோருடன்***
***நின்று பூசனை செய்கின்ற நேசற்கு,***

***குன்றுபோல் நெடு மாருதி கூடினான்.***

***என்று தீயினை எய்தி*** *- என்று சொல்லி, நெருப்பை அணுகி;* ***இரைத்து எழுந்து ஒன்று பூசலிடும் உலகோருடன்*** *- கூக்குரலிட்டு சேர்ந்து ஆரவாரம் செய்து அழுகின்ற உலக மக்களுடன்;* ***நின்று பூசனை செய்கின்ற நேசற்கு*** *- சேர்ந்து நின்று விழுவதற்கு முன்பாக அக்கினியைப் பூசிக்கின்ற அன்பனாகிய பரதனுக்கு முன்;* ***குன்றுபோல் நெடு மாருதி கூடினான்*** *- மலை போன்ற பேருருவுடைய அனுமன் வந்து சேர்ந்தான்.*

*பரதன் எரியில் வீழ்வது பற்றி உலகோர் அரற்றிப் பூசல் இட்டனர். 'நேசற்கு' 'நேசன்கண்' ஏழாவதன் கண் நான்காவது வந்த உருவு மயக்கம் எனக் கொண்டு பொருள் உரைத்தலும் ஒன்று. முன் வருவிக்கப்பட்டது.*

***10189. 'அய்யன் வந்தனன்; ஆரியன் வந்தனன்;***
***மெய்யின் மெய் அன்ன நின் உயிர் வீடினால்,***
***உய்யுமே, அவன்?' என்று உரைத்து, உள் புகா,***
***கய்யினால் எரியைக் கரி ஆக்கினான்.***

*(அனுமன்)* ***அய்யன் வந்தனன்; ஆரியன் வந்தனன்*** *- தலைவனான இராமன் வந்தான் மேலோன் வந்தான்;* ***மெய்யின் மெய் அன்ன நின் உயிர் வீடினால் அவன் உய்யுமே*** *- சத்தியத்திற்கு உடல் போன்றுள்ள உனது உயிர் அழிந்துபட்டால் அந்த இராமன் உயிர் வாழ்வானா?;* ***என்று உரைத்து உள் புகா*** *- என்று சொல்லி உள்ளே நுழைந்து;* ***கய்யினால் எரியைக் கரி ஆக்கினான்*** *- தன் கரங்களாற் பிசைந்து நெருப்பை அணைத்துக் கரியாக ஆகுமாறு செய்துவிட்டான்.*

*இராமன் வந்தான் என்பதற்கு நெருப்பைக் கையால் அணைத்து சான்றாக (கரியாக) ஆக்கினான் என்றும் பொருள் கொள்ளுமாறு 'கரியாக்கினான்' என்றது ஓர் நயம்.*

***10190. ஆக்கி, மற்று அவன் ஆய் மலர்த் தாள்களைத்***
***தாக்கத் தன் தலை தாழ்ந்து வணங்கி, கை***
***வாக்கின் கூடப் புதைத்து, 'ஒரு மாற்றம் நீ***
***தூக்கிக் கொள்ளத் தகும்' எனச் சொல்லினான்.***

***ஆக்கி*** *- அவ்வாறு நெருப்பை அவித்துக் கரியாக்கி;* ***மற்று அவன் ஆய்மலர்த் தாள்களைத் தாக்கத் தன்தலை தாழ்ந்து வணங்கி*** *- அப்பரதனது அழகிய மலர் போன்ற திருவடிகளை மோதும்படி நெருக்கமாகத் தன் தலையால் தாழ்ந்து வணக்கம் செய்து;* ***கை வாக்கின் கூடப் புதைத்து*** *- கையால் வாயை நன்கு மூடிக் கொண்டு;* ***ஒரு மாற்றம் நீ தூக்கிக் கொள்ளத் தகும்' எனச் சொல்லினான்*** *- ஒரு சொல் நீ ஆராய்ந்து ஏற்றுக் கொள்ளத் தகுவது என்று சொன்னான்;*

*தலை வணங்குதல், வாய் புதைத்தல் பெரியோர்பால் செய்யத்தகும் அடக்கமாம்.*

***10191. 'இன்னம் நாழிகை எண் - ஐந்து உளது ஐய!***
***உன்னை முன்னம் வந்து எய்த உரைத்த நாள்;***
***இன்னது இல்லைஎனின், அடி நாயினேன்***

*முன்னம் வீழ்ந்து, இவ் எரியில் முடிவெனால்.*

***ஐய!*** *- பரதனே!;* ***உன்னை முன்னம் வந்து எய்த உரைத்த நாள்*** *- உன்னை முன்பு வந்து அடைவதாகச் சித்திர கூட மலையில் சொல்லிய நாள்;* ***இன்னம் எண் ஐந்து நாழிகை உளது*** *- முடிவுற இன்னமும் நாற்பது நாழிகை உள்ளது;* ***இன்னது இல்லை எனின்*** *- அப்படி இல்லை என்று மெய்ப்பித்தால்;* ***அடி நாயினேன் - நாயிற கடையனான யான்*** *; இவ் எரியில் முன்னம் வீழ்ந்து முடிவெனால் -* ***இந்நெருப்பில் உனக்கு முன்பாக விழுந்து இறப்பேன்.***

*10192. 'ஒன்றுதான் உளது; உன் அடியேன் சொலால்,*
*நின்று தாழ்த்தருள், நேமிச் சுடர் நெடுங்*
*குன்று தோன்றளவும்; இது குன்றுமேல்,*
*பொன்றும், நீயும், உலகமும் - பொய் இலாய்!*

***பொய் இலாய்!*** *- சத்தியவானே;* ***ஒன்றுதான் உளது*** *- நான் கூற வேண்டுவது ஒன்றுதான் இருக்கிறது;* ***உன் அடியேன் சொலால்*** *- உன்னுடைய அடியேனாகிய என் சொல்லால்;* ***நேமிச் சுடர் நெடுங் குன்று தோன்றளவும்*** *- வட்டமான ஒளி வடிவுடைய சூரியன் உதயமலையில் தோன்றுகின்ற அளவு வரையும்;* ***நின்று தாழ்த்தருள்*** *- தாமதித்து நின்றருளுவாயாக;* ***இது குன்று மேல் -*** *இராமன் இதற்குள் வருவான் என்ற என் வார்த்தை பழுது படுமானால்;* ***நீயும் உலகமும் பொன்றும்*** *- நீயும் ஏன் உலகமும் கூட அழிந்துபடும் (இது சத்தியம்) தன்னைப் பரதனது அடியேன் என்று சொல்லி பரதனை அன்பாற் பிணித்த அனுமனது சொற் சாதுரியம் காண்க. அவன் சொல்லின் செல்வன் அன்றோ.*

*10193. 'எங்கள் நாயகற்கு இன் அமுது ஈகுவான்,*
*பங்கயத்துப் பரத்துவன் வேண்டலால்,*
*அங்கு வைகினன் அல்லது, தாழ்க்குமோ?*
*இங்கண், நல்லது ஒன்று இன்னமும் கேட்டியால்:*

***எங்கள் நாயகற்கு*** *- எங்கள் பெருமானாகிய இராமனுக்கு;* ***இன் அமுது ஈகுவான்*** *- இனிய உணவு தருவதற்காக;* ***பங்கயத்துப் பரத்துவன் வேண்டலால்*** *- தாமரை மாலை உடைய பரத்துவாச முனிவன் வேண்டியபடியால்;* ***அங்கு வைகினன் அல்லது தாழ்க்குமோ*** *- அங்கே பரத்துவாச ஆச்சிரமத்தில் தங்கினானே அல்லாமல் தாமதிப்பானா?* ***நல்லது ஒன்று இன்னமும் இங்கண் கேட்டி*** *- நல்லதாகிய இன்னும் உள்ள ஒரு செய்தியை இவ்விடத்துக் கேட்பாயாக.*

*பங்கயத்துப் பரத்துவன் - அந்தணர்க்குத் தாமரை மலர் மாலை உரித்து என்பது பற்றிப் போலும். 'தாமரைக் கண்ணியை' என்னும் கலித்தொகையுள் தாமரை மாலை பற்றி அந்தணத் தலைமகன் என்று நச்சினார்க்கினியர் உரை உரைத்தமை காண்க. ஆல் உரையசை.*

## *இராமனது கணையாழியை அனுமன் காட்டல்*

***10194. 'அண்டர் நாதன் அருளி அளித்துளது***
***உண்டு ஓர் பேர் அடையாளம்; உனக்கு அது***
***கொண்டு வந்தனென்; கோது அறு சிந்தையாய்!***
***கண்டு கொண்டருள்வாய்' எனக் காட்டினான்.***

***கோது அறு சிந்தையாய்!*** *- குற்றம் அற்ற மனம் உடைய பரதனே!;* ***அண்டர் நாதன் அருளி அளித்துளது ஓர் பேர் அடையாளம் உண்டு, அது உனக்கு கொண்டு வந்தனென், கண்டு கொண்டருள்வாய் எனக் காட்டினான்*** *- தேவதேவனாய் இராமபிரான் அருள் செய்து அன்பினால் தந்தது ஒரு பெரிய அடையாளம் இருக்கிறது; அதனை உனக்காகக் கொண்டு வந்தேன். பார்த்துப் பெற்றுக்கொண்டருள்வாயாக' என்று சொல்லி கணையாழியைக் காண்பித்தான்.*

***10195. காட்டிய மோதிரம் கண்ணில் காண்டலும்,***
***மூட்டு தீ வல் விடம் உற்று முற்றுவார்க்கு***
***ஊட்டிய நல் மருந்து ஒத்ததாம்அரோ,***
***ஈட்டிய உலகுக்கும் இளைய வேந்தற்கும்.***

***காட்டிய மோதிரம் கண்ணில் காண்டலும்*** *- அனுமன் காண்பித்த மோதிரம் கண்ணில் கண்ட அளவில்;* ***ஈட்டிய உலகுக்கும் இளைய வேந்தற்கும்*** *- அங்கு தொகுக்கப்பட்ட உலக மக்களுக்கும் பரதனுக்கும் அது;* ***மூட்டு தீ வவ்விடம் உற்று முற்றுவார்க்கு ஊட்டிய நல் மருந்து ஒத்தது*** *- எரிகின்ற தன்மையை மேலும் அதிகப்படுத்தும் வலிய விடம் ஏறப் பெற்று முற்றிய நிலையில் உள்ளவர்களுக்கு அது அடியோடு நீங்க ஊட்டப்பெற்ற நல்ல மருந்தினை ஒத்ததாயிற்று.*

*ஆம், அரோ உரையசை.*

***10196. அழுகின்ற வாய் எலாம் ஆர்த்து எழுந்தன;***
***விழுகின்ற கண் எலாம் வெள்ளம் மாறின;***
***உழுகின்ற தலை எலாம் உயர்ந்து எழுந்தன;***
***தொழுகின்ற, கை எலாம், காலின் தோன்றலை.***

**அழுகின்ற வாய் எலாம் ஆர்த்து எழுந்தன** - இதுவரை அழுது கொண்டிருந்த வாய்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து எழுந்தன; **விழுகின்ற கண் எலாம் வெள்ளம் மாறின** - நீர் விழுகின்ற அழுத கண்கள் வெள்ளநீர் மாறப் பெற்றன; **உழுகின்ற தலை எலாம் உயர்ந்து எழுந்தன** - கீழே உழுவதைப் போலச் சாய்ந்த தலைகள் மேல் உயர்ந்து நிமிர்ந்தன; **கை எலாம்** - கைகள் எல்லாம்; **காலின் தோன்றலைத் தொழுகின்ற** - காற்றின் மகனாகிய அனுமனைத் தொழுகின்றன.

*மோதிரம் பெற்ற பரதன் தன்மை*

***10197. 'மோதிரம் வாங்கி, தன் முகத்தின்மேல் அணைத்து,***
***'ஆதரம் பெறுவதற்கு ஆக்கையோ?' எனா***
***ஓதினர் நாண் உற, ஓங்கினான் - தொழும்***

***தூதனை முறை முறை தொழுது துள்ளுவான்.***

**தொழும் தூதனை முறை முறை தொழுது துள்ளுவான்** - மோதிரம் கொடுத்துத் தன்னை வணங்கிய தூதனாகிய அநுமானைப் பன்முறை வணங்கித் துள்ளுகின்ற பரதன்; **மோதிரம் வாங்கி, தன் முகத்தின் மேல் அணைத்து** - அநுமன் காட்டிய மோதிரத்தை எடுத்துத் தன் முகத்தின் மேலாக அணைத்துக் கொண்டு; **ஆதரம் பெறுவதற்கு ஆக்கையோ? எனா ஓதினர்** - இராமனைப் பிரிந்து வருந்திய இவன் உடம்பு அவன் அன்பைப் பெறுவதற்குரிய வலிமை உடைய உடம்புதானா இது என்று கூறியவர்கள்; **நாண் உற** - வெட்கம் அடையும்படி; **ஓங்கினான்** - உடல் பூரிக்கப பெற்றான்.

***10198. ஆதி வெந் துயர் அலால், அருந்தல் இன்மையால்***
***ஊதுறப் பறப்பதாய் உலர்ந்த யாக்கை போய்,***
***'ஏதிலன் ஒருவன்கொல்' என்னல் ஆயது;***
***மாதிரம் வளர்ந்தன, வயிரத் தோள்களே.***

**ஆதி வெந்துயர் அலால்** - இராமனைப் பிரிந்தது முதலே கொடிய துன்பமே; மகிழ்ச்சி இல்லாமையாலும்; **அருந்தல் இன்மையால்** - நல்ல உணவுகளை உண்ணுதல் இன்மையாலும்; **ஊதுறப் பறப்பதாய் உலர்ந்த யாக்கை போய்** - ஊதினால் பறப்பதாக வற்றிப் போன உடம்பானது போய்; **ஏதிலன் ஒருவன் கொல் என்னது ஆயது** - இவன் பரதனல்ல அயலான் ஒருவன் போலும் என்று ஐயுறும்படி ஆயிற்று; **வயிரத் தோள்கள் மாதிரம் வளர்ந்தன** - அவனுடைய வலிய தோள்கள் திசையளவும் வளர்ந்தன.

ஏ - அசை.

***10199. அழும்; நகும்; அனுமனை ஆழிக் கைகளால்***
***தொழும்; எழும்; துள்ளும், வெங் களி துளக்கலால்;***
***விழும் அழிந்து; ஏங்கும்; போய் வீங்கும்; வேர்க்கும்; அக்***
***குழுவொடும் குனிக்கும்; தன் தடக் கை கொட்டுமால்.***

***அழும்*** - *அழுவான்;* ***நகும்*** - *சிரிப்பான்;* ***ஆழிக் கைகளால் அனுமனை தொழும்*** - *மோதிரம் உள்ள கையால் அனுமனைத் தொழுவான்;* ***எழும்*** - *எழுவான்;* ***வெங்களி துளக்கலால் துள்ளும்*** - *விரும்பும் மகிழ்ச்சி அவனை அசைப்பதால் துள்ளித் துடிப்பான்;* ***அழிந்து விழும்*** - *உடனே சோர்ந்து விழுவான்;* ***ஏங்கும்*** - *இரங்குவான்;* ***போய் வீங்கும்*** - *மேற்சென்று பூரிப்பான்;* ***வேர்க்கும்*** - *வியர்ப்பான்;* ***அக்குழுவொடும் குனிக்கும்*** - *மகிழும் கூட்டத்தாருடனே நடமிடுவான்;* ***தன் தடக்கை கொட்டும்*** - *தனது நீண்ட கைகளைத் தட்டுவான்.*

*ஆல் - உரையசை.*

***10200. 'ஆடுமின், ஆடுமின்!' என்னும்; 'ஐயன்பால்***
***ஓடுமின், ஓடுமின்!' என்னும்; 'ஓங்கு இசை***
***பாடுமின், பாடுமின்! என்னும்; 'பாவிகாள்!***
***சூடுமின், சூடுமின், தூதன் தாள்!' எனும்.***

***ஆடுமின், ஆடுமின்! என்னும்*** - *ஆடுங்கள் என்பான்;* ***ஐயன்பால் ஓடுமின், ஓடுமின்! என்னும்*** - *இராமனிடம் ஓடுங்கள் என்பான்;* ***ஓங்கு இசை பாடுமின், பாடுமின் என்னும்*** - *உயர்ந்த இசைப் பாடல்களைப் பாடுங்கள் என்பான்;* ***பாவிகாள்*** - *பாவிகளே!;* ***தூதன் தாள் சூடுமின், சூடுமின்! என்னும்*** - *தூதனாகிய அனுமன் அடியைத் தலையில் சூடுங்கள் என்பான்.*

***10201. 'வஞ்சனை இயற்றிய மாயக் கைகையார்***
***துஞ்சுவர், இனி' எனத் தோளைக் கொட்டுமால்;***
***குஞ்சித அடிகள் மண்டிலத்தில் கூட்டுற,***
***அஞ்சனக் குன்றின் நின்று ஆடும், பாடுமால்.***

***வஞ்சனை இயற்றிய மாயக் கைகையார்*** - *இராமனுக்கு வஞ்சனை செய்த தீய தன்மை கொண்ட கைகேயியானவர்;* ***இனி துஞ்சுவர் எனத் தோளைக் கொட்டும்*** -

*இனிமேல் இறந்து படுவர் என்று தன் தோள்களைத் தட்டுவான்;* **குஞ்சித அடிகள்** *- வளைத்து மடித்த கால்கள்;* **மண்டிலத்தில் கூட்டுற** *- வட்டமாகச் சேரும்படி;* **அஞ்சனக் குன்றின்** *- மை மலைபோல;* **நின்று ஆடும், பாடும்** *- நின்று கொண்டு ஆடுவான், பாடுவான்.*

*ஆல் - உரையசை.*

***10202. 'வேதியர்தமைத் தொழும்; வேந்தரைத் தொழும்;***
***தாதியர்தமைத் தொழும்; தன்னைத் தான் தொழும்;***
***ஏதும் ஒன்று உணர்குறாது இருக்கும்; நிற்குமால்;-***
***காதல் என்றதுவும் ஓர் கள்ளின் தோன்றிற்றே!***

**வேதியர் தமைத் தொழும்** *- அந்தணர்களை வணங்குவான்;* **வேந்தரைத் தொழும்** *- அரசர்களை வணங்குவான்;* **தாதியர் தமைத் தொழும்** *- பணி புரியும் சேடிப் பெண்களைத் தொழுவான்;* **தன்னைத் தான் தொழும்** *- தன்னைத் தானே வணங்கிக் கொள்வான்;* **ஏதும் ஒன்று உணர்குறாது இருக்கும் நிற்கும்** *- எது ஒன்றையும் உணராமல் இருப்பான், நிற்பான்;* **காதல் என்றதுவும் ஓர் கள்ளின் தோன்றிற்றே!** *- அன்பு என்பதுவும் ஓர் கள்போலத் தோன்றியதே!*

*கள்ளுண்டார் செயலின் உச்சம் தன்னைத் தான் தொழல்.*

### *பரதன் அனுமனைப் புகழ்ந்து 'நீ யார்?' எனல்*

***10203. அத் திறத்து ஆண்தகை, அனுமன்தன்னை, 'நீ***
***எத் திறத்தாய்? எமக்கு இயம்பி ஈதியால்!***
***முத் திறத்தவருளே ஒருவன்; மூர்த்தி வேறு***
***ஒத்திருந்தாய் என உணர்கின்றேன்' என்றான்.***

**அத்திறத்து ஆண்தகை** *- அத்தன்மைகளை உடைய ஆண்களிற் சிறந்தவனாகிய பரதன்;* **அனுமன் தன்னை** *- அநுமனை;* **நீ எத்திறத்தாய்? எமக்கு இயம்பி ஈதி** *- நீ எத்தன்மை உடையவன் என்று உன்னைப் பற்றி எங்களுக்குச் சொல்லி அருளுக;* **முத்திறத்தவருளே ஒருவன் ஒத்திருந்தாய் மூர்த்தி வேறு என உணர்கின்றேன்' என்றான்** *- மும்மூர்த்திகளுள் ஒருவனை ஒத்திருக்கின்றாய்; வடிவம் மட்டும் வேறாய் உள்ளது என ஊகித்தறிகிறேன் என்றான்.*

***10204. 'மறையவர் வடிவு கொண்டு, அணுக வந்தனை;***

***இறைவரின் ஒருத்தன் என்று எண்ணுகின்றனென்;***
***''துறை எனக்கு யாது எனச் சொல்லு, சொல்!''***
***என்றான்;***
***அறை கழல் அனுமனும் அறியக் கூறுவான்:***

***மறையவர் வடிவு கொண்டு அணுக வந்தனை*** - *அந்தணர் வேடம் கொண்டு நெருங்கி வந்திருக்கிறாய் (ஆயினும்);* ***இறைவரின் ஒருத்தன் என்று எண்ணுகின்றனென்*** - *மும்மூர்த்திகளுள் ஒருவன் நீ என்று கருதுகின்றேன்;* ***துறை எனக்கு யாது எனச் சொல்லு சொல் என்றான்*** - *உன் வரலாறு யாது என்று எனக்கு விரைந்து சொல்லுக என்றான்;* ***அறைகழல் அனுமனும் அறியக் கூறுவான்*** - *ஒலிக்கும் கழலை அணிந்த அனுமனும் நன்கு விளக்கிக் கூறுவானானான்.*

*அனுமன் தன் வரலாறு கூறல்*

***10205. 'காற்றினுக்கு அரசன்பால் கவிக் குலத்தினுள்***
***நோற்றனன் வயிற்றின் வந்து உதித்து, நும் முனாற்கு***
***ஏற்றிலா அடித் தொழில் ஏவலாளனேன்;***
***மாற்றினென் உரு, ஒரு குரங்கு, மன்ன! யான்.***

***மன்ன!*** - *பரதனே!;* ***காற்றினுக்கு அரசன் பால்*** - *வாயு தேவனிடமாக;* ***கலிக்குலத்தினுள் நோற்றனள் வயிற்றின் வந்து உதித்து*** - *குரங்குக் கூட்டத்துள் தவம் செய்தவள் வயிற்றில் வந்து பிறந்து;* ***நும் முனாற்கு*** - *உம்முடைய அண்ணனுக்கு;* ***ஏற்றிலா அடித்தொழில் ஏவலாளனேன்*** - *அவருடைய பெருமைக்குச் சிறிதும் ஒவ்வாத அடிமைத்தொழில் புரியும் பணியாளன்;* ***உரு மாற்றினென்*** - *வடிவை மாற்றிக்கொண்டுள்ளேன்;* ***யான் ஒரு குரங்கு*** *-.*

***10206. அடித் தொழில் நாயினேன் அருப்ப யாக்கையைக்***
***கடித் தடந் தாமரைக் கண்ணின் நோக்கு' எனா,***
***பிடித்த பொய் உருவினைப் பெயர்த்து நீக்கினான்,***
***முடித்தலம் வானவர் நோக்கின் முன்னுவான்.***

***அடித்தொழில் நாயினேன் அருப்ப யாக்கையைக்*** - *அடிமைத் தொழில் செய்யும் கீழான எனது சிறுமையான குரங்குடம்பை;* ***கடித்தடந் தாமரைக் கண்ணின் நோக்கு எனா*** - *மணம் வீசும் அகன்ற தாமரை மலர் போன்ற உன் கண்களால் பார்ப்பாயாக என்று;* ***பிடித்த பொய் உருவினைப் பெயர்த்து நீக்கினான்*** - *அப்போது எடுத்திருந்த பொய்யான மறையவர் வடிவத்தை மாற்றிப் போக்கினான்;* ***முடித்தலம் வானவர்***

**நோக்கின் முன்னுவான்** - *முடியானது தேவர்கள் கண்களில் படும்படி மேற்பட்டு வளர்வான் ஆனான்.*

***10207. வெஞ் சிலை இருவரும், விரிஞ்சன் மைந்தனும்,***
***'எஞ்சல் இல் அதிசயம் இது' என்று எண்ணினார்;***
***துஞ்சிலது ஆயினும், சேனை துண்ணென***
***அஞ்சினது, அஞ்சனை சிறுவன் ஆக்கையால்.***

**வெஞ்சிலை இருவரும்** - *கொடியவில் ஏந்திய பரத சத்துருக்கனர்களும்* **விரிஞ்சன் மைந்தனும்** - *பிரமனது மானச புத்திரனாய வசிட்டனும்;* **எஞ்சல் இல் அதிசயம் இது என்று எண்ணினார்** - *குறைவில்லாத ஆச்சரியப்படத்தக்க தோற்றம் என்று கருதினார்கள்;* **துஞ்சிலது ஆயினும், அஞ்சனை சிறுவன் ஆக்கையால் சேனை துண்ணென அஞ்சினது** - *இறக்கவில்லை ஆனாலும் அஞ்சனாதேவியின் மகனான அனுமனது உடம்பைக் கண்டதால் அயோத்திச் சேனை திடுக்கிட்டு பயந்தது.*

***10208. 'ஈங்கு நின்று யாம் உனக்கு இசைத்த மாற்றம் அத்***
***தூங்கு இருங் குண்டலச் செவியில் சூழ்வர***
***ஒங்கல ஆதலின், உலப்பு இல் யாக்கையை***

***வாங்குதி, விரைந்து' என, மன்னன் வேண்டினான்.***

**மன்னன்** - *பரதன் (அநுமனை);* **ஈங்கு நின்று யாம் உனக்கு இசைத்த மாற்றம்** - *இங்கே இருந்து நாங்கள் உனக்குச் சொன்ன வார்த்தை;* **தூங்கு இருங் குண்டலச் செவியில் சூழ்வர ஒங்கல** - *தொங்குகின்ற பெரிய குண்டலமணிந்த காதுகளில் சுற்றிப் பொருந்த ஓங்கி வரமாட்டுகின்றில;* **ஆதலின், உலப்பு இல் யாக்கையை** - *வற்றாத இப் பேருடம்பை;* **விரைந்து வாங்குதி** - *விரைந்து சுருக்கி மாற்றுவாயாக;* **என வேண்டினான்** - *என்று வேண்டிக் கொண்டான்;*

*பரதனுக்கு அனுமன் முன் நிகழ்ச்சிகள் கூறுதல்*

***10209. சுருக்கிய உருவனாய்த் தொழுது, முன் நின்ற***
***அருக்கன் மாணாக்கனை ஐயன், அன்பினால்***
***பொருக்கென வனத்திடைப் புகுந்த தன்மையை***

***உருக்கி என் உணர்வுற உரைத்தியால்' என்றான்.*** **ஐயன்** - *பரதன்;* **சுருக்கிய உருவனாய்த் தொழுது முன் நின்ற அருக்கன் மாணாக்கனை** - *சிறிதாக்கிக் கொண்ட வடிவுடைய வனாய் வணங்கி முன்னால் நின்ற சூரியன் மாணவனாகிய அனுமனை;* **அன்பினால்** - *அன்புடனே (நோக்கி);* **பொருக்கென** - *விரைவாக;* **வனத்திடைப் புகுந்த தன்மையை** - *காட்டின்கண் நடந்த நிகழ்ச்சிகளை;*

***என் உணர்வு உருக்கி உற உரைத்தி என்றான்*** - *என் உணர்வு உருகும்படி சொல்வாயாக என்று கேட்டான்;*

*அருக்கன் மாணவன் என்பதனை முன் வீடணன் அடைக்கலப் படலம் 102ஆம் பாடல் (கம்ப. 6466) கொண்டு அறிக. 'பொருக்கென' விரைவுக்குறிப்பு. ஆல் - உரையசை.*

***10210. சித்திரகூடத்தைத் தீர்ந்த பின், சிரம்***
***பத்து உடையவனுடன் விளைந்த பண்பும், தான்***
***இத் தலை அடைந்ததும், இறுதி ஆய, போர்***
***வித்தகத் தூதனும் விரிக்கும் சிந்தையான்.***

***போர் வித்தகத் தூதனும்*** - *போர்த் திறமையில் சதுரப்பாடு உடைய அனுமனும்;* ***சித்திர கூடத்தைத் தீர்ந்தபின்*** - *பரதன் சந்தித்த சித்திர கூடமலையை நீங்கிய பிறகு;* ***பத்து சிரம் உடையவனுடன் விளைந்த பண்பும்*** - *பத்துத் தலைகளை உடைய இராவணனுடன் நடந்த போர்ச் செயல்களையும்;* ***தான் இத்தலை அடைந்ததும் இறுதி ஆய*** - *தான் அயோத்திக்குப் பரதனிடம் வந்து சேர்ந்ததும் முடிவாக நடந்த செய்திகளை;* ***விரிக்கும் சிந்தையான்*** - *விரித்துக் கூறும் மனம் உடையவனாக ஆனான்.*

***10211. 'குன்று உறழ் வரி சிலைக் குரிசில், எம்பிரான்***
***தென் திசைச் சித்திரகூடம் தீர்ந்தபின்,***
***வன் திறல் விராதனை மடித்து, மா தவர்***
***துன்றிய தண்டக வனத்துள் துன்னினான்.***

***குன்று உறழ் வரிசிலைக் குரிசில் எம்பிரான்*** - *மலை ஒத்த கட்டமைந்த வில்லையுடைய நம்பியாகிய இராமபிரான்;* ***தென்திசை சித்திரகூடம் தீர்ந்தபின்*** - *தெற்கே உள்ள சித்திரகூட மலையை நீங்கியபிறகு;* ***வன்திறல் விராதனை மடித்து*** - *வலிமையுடைய விராதனை அழித்து;* ***மாதவர் துன்றிய தண்டக வனத்துள் துன்னினான்*** - *முனிவர்கள் நெருங்கியுள்ள தண்டகக் காட்டுக்குள் சேர்ந்து தங்கினான்.*

***10212. 'ஆங்கு உறை தபோதனர், ''அரக்கர்க்கு ஆற்றலேம்,***
***நீங்கினம் தவத் துறை, நீதியோய்!'' என,***
***'தீங்கு செய்பவர்களைச் செகுத்தல் திண்ணம்; நீர்***
***வாங்குமின் மனத் துயர், வாய்மையால்' என்றான்.***

***ஆங்கு உறை தபோதனர்*** - *அங்கே வசிக்கின்ற தவ முனிவர்கள்;* ***நீதியோய்! அரக்கர்க்கு ஆற்றலேம், தவத்துறை நீங்கினம் என*** - *நீதிச் செல்வனான இராமனே!*

*அரக்கர் செய்யும் துன்பத்தைத் தாங்க முடியாதவர்களாக உள்ளோம்;* ***தவத்திலிருந்தும் கூட விலகிவிட்டோம் (சரண்) என்று*** *சொல்ல (இராமன்);* ***நீர் மனத்துயர் வாங்குமின், தீங்கு செய்பவர்களைச் செகுத்தல் திண்ணம், வாய்மை என்றான்*** *- முனிவர்களே உங்கள் மனத்துன்பத்தை எடுத்து விடுங்கள்; தீங்கு செய்பவர்களை நான் அழிப்பது உறுதி இது சத்தியம் என்று அவர்களுக்கு வாக்களித்தான்;*

*இதனை முன் அகத்தியப் படலத்துள் (2633-2654) காண்க. ஆல் - உரையசை.*

***10213. 'ஆறு நாள் ஆண்டு அவண் வைகி, அப் புறத்து***
***ஈறு இலா முனிவரர் ஏய ஆணையால்***
***மாறு இலாத் தமிழ் முனி வனத்தை நண்ணினான்,***
***ஊறு இலா முனிவரன் உவந்து முன் வர.***

***ஆறு நால் ஆண்டு அவண் வைகி*** *- பத்து ஆண்டுகள் அங்கு தங்கியிருந்து;* ***அப்புறத்து*** *- அதன்பிறகு;* ***ஈறு இலா முனிவரர் ஏய ஆணையால்*** *- அழிவில்லாத தவத்தோர் ஏவிய கட்டளைப்படி;* ***மாறு இலாத் தமிழ் முனி வனத்தை*** *- தனக்கு சமானமில்லாத தமிழ் முனியாகிய அகத்தியன் வாழும் காட்டை (அகத்தியாச்சிரமம்);* ***ஊறு இலா முனிவரன் உவந்து முன்வர நண்ணினான்*** *- துன்பமற்ற அகத்தியன் மகிழ்ந்து எதிர்கொள்ள அடைந்தான்.*

*அகத்தியனுக்கு அரக்கர் அஞ்சுவர் ஆதலின் 'ஊறு இலா' என்றார்.*

***10214. 'குடங்கையில் வாரிதி அனைத்தும் கொண்டவன்***
***தடங் கணான்தனை எதிர் தழுவி, சாபமும்,***
***கடுங் கணைப் புட்டிலும், கவசம்தானும், அத்***

***திடம் படு சுரிகையும், சேர ஈந்தனன்.***

***குடங்கையில் வாரிதி அனைத்தும் கொண்டவன்*** *- தன் அகங்கையில் கடலை உழுந்தளவு ஆக்கிக் கொண்ட அகத்தியன்;* ***தடங்கணான்தனை எதிர் தழுவி*** *- அகன்ற கண்களை உடைய இராமனை எதிரே தழுவிக்கொண்டு;* ***சாபமும், கடுங்கணைப் புட்டிலும் கவசம்தானும், அத்திடம் படு சுரிகையும் சேர ஈந்தனன்*** *- வில்லும், விரைந்து செல்லும் அம்புகளை உடைய தூணியும் மார்புக் கவசமும், அத்தன்மையான வன்மை பெற்ற வாளும் ஆகியவற்றை ஒரு சேர இராமனுக்கு அளித்தான்.*

***10215. 'அப் புறத்து எருவையின் அரசைக் கண்ணுறா,***
***துப்பு உறச் சிவந்த வாய்த் தோகைதன்னுடன்***
***மெய்ப் புகழ்த் தம்பியும் வீரன்தானும் போய்,***

***மைப் பொழில் துறு பஞ்சவடியின் வைகினார்.***

***அப்புறத்து*** - *அதன்பிறகு;* ***எருவையின் அரசைக் கண்ணுறா*** - *கழுகுகளின் அரசனாகிய சடாயுவைச் சந்தித்து;* ***துப்பு உறச் சிவந்த வாய்த் தோகை தன்னுடன் மெய்ப்புகழ்த் தம்பியும் வீரன் தானும் போய்*** - *பவழம் எனச் சிவந்த வாயினை உடைய சீதையோடு உண்மைப் புகழ் உடைய இலக்குவனும் இராமனும் புறப்பட்டுச் சென்று;* ***மைப்பொழில் துறு பஞ்சவடியின் வைகினார்*** - *கரிய சோலைகள் நெருங்கியுள்ள 'பஞ்சவடி' என்ற இடத்தில் தங்கினார்கள்.*

***அறுசீர் ஆசிரிய விருத்தம்***

***10216. 'பல் பகல் இறந்த பின்றை, பாதக அரக்கி தோன்றி,***
***மெல்லிய இடையினாளை வெகுண்டுழி, இளைய வீரன்***
***அல்கிய திருவைத் தேற்றி, அவளுடைச் செவியும் மூக்கும்***
***மல்கிய முலையும் கொய்தான்; மறித்து, அவள் கரற்குச் சொன்னாள்.***

***பல்பகல் இறந்த பின்றை*** - *பலநாள் கழிந்த பிறகு;* ***பாதக அரக்கி தோன்றி*** - *கொடிய சூர்ப்பணகை அங்கே வந்து;* ***மெல்லிய இடையினாளை வெகுண்டுழி*** - *மென்மையான இடையுடைய சீதையைக் கோபித்து அச்சுறுத்திய போது;* ***இளைய வீரன்*** - *இலக்குவன்;* ***அல்கிய திருவைத் தேற்றி*** - *அதனால் மனம் சுருங்கிய (துன்புற்ற) சீதையைத் தெளிவித்து;* ***அவளுடைச் செவியும் மூக்கும் மல்கிய முலையும் கொய்தான்*** - *அந்த சூர்ப்பணகையின் காது, மூக்கு, வளர்ந்த கொங்கை அனைத்தையும் பறித்துவிட்டான்;* ***அவள் மறித்து கரற்குச் சொன்னாள்*** - *அவள் திரும்பச் சென்று கரனிடம் முறையிட்டாள்.*

***10217. 'கரனொடு திரிசிராவும், கடிய தூடணனும், காந்தி***
***எரியும் மூன்று அனலே ஒப்பார், எழுந்து, வெஞ் சேனையோடும்***
***விரவினர்; ஐயன் செங் கை வில்லினை நோக்கும் முன்பு, ஓர்***
***எரி தவழ் பஞ்சின் உக்கார்; அரக்கியும், இலங்கை புக்காள.***

***காந்தி எரியும் மூன்று அனலே ஒப்பார்*** - *பற்றி எரியும் குன்று நெருப்புகளை ஒத்தவர்களாகிய;* ***கரனொடு திரிசிராவும், கடில தூடணனும்*** - *கரன், திரிசிரா, கொடிய தூடணன் ஆகிய மூவரும்;* ***வெஞ் சேனையோடும் எழுந்து விரவினர்*** - *கொடிய தங்கள் சேனைகளோடும் புறப்பட்டு இராமனோடு போரிற் கலந்தனர்;* ***ஐயன் செங்கை வில்லினை நோக்கும் முன்பு*** - *இராமன் அம்பு விடவேண்டி தன் கையில் உள்ள வில்லைப் பார்க்கும் முன்பே;* ***எரி தவழ் பஞ்சின் உக்கார்*** - *நெருப்புப் பற்றிய பஞ்சு போல இருந்த இடம் தெரியாமல் போனார்கள்;* ***அரக்கியும் இலங்கை புக்காள்*** - *சூர்ப்பணகையும் இலங்கைக்குச் சென்றாள்;*

***10218. 'இருபது தடக் கையான்மாட்டு இசைத்தலும், எழுந்து பொங்கி,***
***ஒருபது திசையும் உட்க, வஞ்சக உழை ஒன்று ஏவி,***
***தரு பதம் சமைந்த முக்கோல் தாபத வடிவம் கொண்டு,***
***திருவினை நிலத்தொடு ஏந்தி, தென் திசை இலங்கை புக்கான்.***

*(அவன் இலங்கை சென்று)* ***இருபது தடக்கையான் மாட்டு இசைத்தலும்*** - *இருபது கைகளை உடைய இராவணன்பால் சொன்ன அளவில் (அவன்);* ***ஒரு பது திசையும் உட்க*** - *பத்துத் திசையும் அஞ்சும்படி;* ***பொங்கி எழுந்து*** - *கோபத்துடன் புறப்பட்டு;* ***வஞ்சக உழை ஒன்று ஏவி*** - *பொய்மான் ஒன்றை அனுப்பி;* ***தரு பதம் சமைந்த முக்கோல் தாபத வடிவம் கொண்டு*** - *தத்துவம் தருகின்ற செவ்வி அமைந்த திரிதண்டம் ஏந்திய முனிவர் வேடமணிந்து கொண்டு;* ***திருவினை நிலத்தொடு ஏந்தி*** - *சீதையை அவள் இருந்த மண்ணொடும் சுமந்து;* ***தென்திசை இலங்கை புக்கான்*** - *தெற்கேயுள்ள இலங்கை மாநகரிற் சென்று புகுந்தான்.*

***10219. 'போகின்ற காலை, ஏற்ற சடாயுவைப் பொருது வீட்டி,***
***வேகின்ற உள்ளத்தாளை வெஞ் சிறை அதனின் வைத்தான்;***
***ஏகின்ற வஞ்ச மான் மாரீசன் - கொன்று, இளவலோடு***
***பாகின்ற கீர்த்தி அண்ணல் தந்தையைப் பரிவின் கண்டான்.***

***போகின்ற காலை*** - *அந்த இராவணன் இலங்கைக்குப் போம்பொழுது;* ***ஏற்ற சடாயுவைப் பொருது வீட்டி*** - *தன்னை எதிர்த்த சடாயுவைப் போர் செய்து வீழ்த்தி;* ***வேகின்ற உள்ளத்தாளை வெஞ்சிறை அதனின் வைத்தான்*** - *வெந்த உள்ளமுடைய பிராட்டியைக் கொடுஞ் சிறைக்கண் வைத்தான் (பின் இராமன்);* ***ஏகின்ற வஞ்ச மான் மாரீசன் கொன்று*** - *ஓடுகின்ற வஞ்சத் தன்மையுள்ள மானாகிய*

*மாரீசனைக் கொன்று;* ***இளவலோடு*** *- இலக்குவனோடு வந்து;* ***பாகின்ற கீர்த்தி அண்ணல் தந்தையைப் பரிவின் கண்டான்*** *- பரவுகின்ற புகழ் உடைய தலைமையோன் ஆகிய சடாயுவை அன்போடு பார்த்தான்.*

***10220. 'அன்னவன்தனக்கு வேண்டும் அருங் கடன் முறையின் ஆற்றி,***
***நன்னுதல்தன்னைத் தேடித் தென் திசை நடக்கும் ஐயன்,***
***மன்னிய கவந்தன்தன்னை உயிரொடு சாபம் மாற்றி,***
***தன்னையே மறப்பிலாத சவரி பூசனையும் கொண்டான்.***

***அன்னவன் தனக்கு*** *- சடாயுவுக்கு;* ***வேண்டும் அருங்கடன் முறையின் ஆற்றி*** *- செய்யவேண்டிய நீர்க்கடன்களை முறைப்படி செய்து முடித்து;* ***நன்னுதல் தன்னைத் தேடித்*** *- சீதையைத் தேடிக் கொண்டு;* ***தென்திசை நடக்கும் ஐயன்*** *- தெற்கே நோக்கிச் செல்லும் இராமன்;* ***மன்னிய கவந்தன் தன்னை உயிரொடு சாபம் மாற்றி*** *- அங்கே நிலைபெற்ற கவந்தனை உயிரும் சாபமும் போகும்படி செய்து (பிறகு);* ***தன்னையே மறப்பிலாத சவரி பூசனையும் கொண்டான்*** *- தன்னை எப்பொழுதும் மறவாத சவரி என்னும் தவமூதாட்டியின் வழிபாட்டினையும் ஏற்றுக் கொண்டான்.*

***10221. 'ஆங்கு அவள்தனது சொல்லால், அருக்கன் மா மகனை அண்மி,***
***பாங்குற நட்டு, ''வாலி பருவரல் கெடுப்பென்'' என்னா,***
***ஓங்கிய மரமும் வாலி உரமும் ஊடுருவ எய்திட்டு,***
***ஆங்கு அவன்தனக்குச் செல்வம் அரசொடும் அருளின் ஈந்தான்.***

***ஆங்கு அவள் தனது சொல்லால்*** *- அங்கே சவரியின் வார்த்தையால்;* ***அருக்கன் மாமகனை அண்மி*** *- சூரியன் மகனாய சுக்கிரீவனை அணுகி;* ***பாங்குற நட்டு*** *- இதமாக நட்புச் செய்து;* ***'வாலி பருவரல் கெடுப்பன்' என்னா*** *- வாலியாகிய துன்பத்தை நீக்குவேன் என்று அவனுக்குச் சொல்லி;* ***ஓங்கிய மரமும் வாலி உரமும் ஊடுருவ எய்திட்டு*** *- உயர்ந்து நின்ற மராமரங்கள் ஏழினையும் வாலி மார்பினையும் உள்ளுருவிச் செல்லும்படி அம்பு எய்து;* ***ஆங்கு*** *- அங்கே;* ***அவன் தனக்கு*** *- சுக்கிரீவனுக்குச்;* ***செல்வம் அரசொடும் அருளின் ஈந்தான்*** *- செல்வத்தையும் அரசையும் கருணையாலே கொடுத்தான்.*

***10222. 'கால மா மாரி நீங்க, கவயனோடு இடபன், காந்து***
***நீலன், மா மயிந்தன், சாம்பன், சதவலி, பனசன், நீடு***
***வாலி மா மைந்தன் என்று இவ் வானரத் தலைவரோடு***
***கூல வான் சேனை சூழ, அடைந்தனன், எங்கள் கோமான்.***

***மா மாரி காலம் நீங்க** - கார்காலம் கழிந்தபிறகு; **கவயனோடு இடபன் காந்து நீலன், மா மயிந்தன், சாம்பன், சதவலி, பனசன்; நீடு வாலி மா மைந்தன்** - பெருமையுற்ற வாலியின் மகனாகிய அங்கதன்; **என்று இவ் வானரத் தலைவரோடு -; கூல வான்சேனை சூழ** - வால் உடைய குரங்குச் சேனை சுற்றிவர; **எங்கள் கோமான் அடைந்தனன்** - எங்கள் அரசனாய சுக்கிரீவன் (இராமனை) வந்து சேர்ந்தான்.*

***10223. 'எழுபது வெள்ளத்து உற்ற குரக்கினம் எழுந்து பொங்கி,***
***அழுவ நீர் வேலை என்ன அடைந்துழி, அருக்கன் மைந்தன்,***
***தழுவிய திசைகள்தோறும் தனித்தனி இரண்டு வெள்ளம்***
***பொழுது இறை தடாது மீளப் போக்கினன், திருவை நாடி,***

***எழுபது வெள்ளத்துற்ற குரக்கினம் பொங்கி எழுந்து** - எழுபது வெள்ளம் என்னும் கணக்கினை உடைய குரங்குகள் சீறிப் புறப்பட்டு; **அழுவ நீர் வேலை என்ன அடைந்துழி** - பரந்த நீரையுடைய கடல் என்னுமாறு வந்து சேர்ந்த பொழுது; **அருக்கன் மைந்தன்** - சுக்கிரீவன்; **திருவை நாடி** - சீதையைத் தேடி வருமாறு; **தழுவிய திசைகள் தோறும்** - நான்கு திசைகளிலும்; **தனித்தனி இரண்டு வெள்ளம்** - இரண்டிரண்டு வெள்ளக் கணக்கான குரங்குகளை; **இறை பொழுது தடாது மீள** - சிறு பொழுதும் தாமதியாது தேடித் திரும்பும்படி; **போக்கினன்** - அனுப்பினான்.*

***10224. 'தென் திசை இரண்டு வெள்ளம் சேனையும், வாலி சேயும்***
***வன் திறல் சாம்பனோடு வாவினர் ஏவ, நாயேன்***
***குன்றிடை இலங்கை புக்கு, திருவினைக் குறித்து மீண்ட***
***பின்றை வந்து, அளக்கர் வேலைப் பெரும் படை இறுத்தது அன்றே.***

**தென்திசை** - *தெற்கே;* **இரண்டு வெள்ளம் சேனையும் -; வாலி சேயும்** - *அங்கதனும்;* **வன்திறல் சாம்பனோடு** - *வலிய கரடிகளின் தலைவன் சாம்பனோடு;* **வாவினர் ஏவ** - *தாவிச் செல்லும் குரங்கினத்தார் அனுப்ப;* **நாயேன்** - *அடியேன்;* **குன்றிடை இலங்கை புக்கு** - *திரிகூட மலைக்கிடையில் உள்ள இலங்கையில் புகுந்து;* **திருவினைக் குறித்து மீண்ட பின்றை** - *சீதையைக் கண்டு வந்து சொல்லியபிறகு;* **வேலைப் பெரும்படை** - *வானர சேனைக்கடல்;* **அளக்கர் வந்து இறுத்தது** - *கடற்கரையில் வந்து தங்கியது.*

*அன்று ஏ அசை.*

***10225. அறிவினுக்கு அறிவு போல்வான் வீடணன், அலங்கல் தோளான்,***
***செறி புயத்து அரக்கன் தம்பி, "திருவினை விடுதி; அன்றேல்,***
***இறுதி உற்றனை, நின் வாணாள்" என அவன் உரைப்ப, சீறிக்***
***கறுவுற, பெயர்ந்து போந்து, கருணையான் சரணம் பூண்டான்.***

**அறிவினுக்கு அறிவு போல்வான் வீடணன்** - *அறிஞருள் மிக்க வீடணன் ஆகிய;* **அலங்கல் தோளான்** - *மாலை அணிந்த தோள்களை உடையவனும்;* **செறிபுயத்து அரக்கன் தம்பி** - *இருபது செறிந்த புயங்களை உடைய இராவணன் தம்பியும் ஆகிய;* **அவன்** *-; (இராவணன்பால்);* **திருவினை விடுதி; அன்றேல் நின்வாணாள் இறுதி உற்றனை என்று உரைப்ப** - *சீதையை விட்டுவிடு இல்லையானால் நின் ஆயுளுக்கு இறுதி நேர்ந்தவனாக ஆவாய் என்று எடுத்துச் சொல்ல;* **சீறிக்கறுவுற** - *(அது கேட்ட இராவணன் அவனை) கோபித்துக் கொல்ல வஞ்சம் வைக்க;* **பெயர்ந்து போந்து** - *இலங்கையிலிருந்து புறப்புட்டு வந்து;* **கருணையான் சரணம் பூண்டான்** - *அருளாளனாகிய உன் தமயனின் திருவடிகளைத் தலையில் சூடி அடைக்கலம் பெற்றான்.*

***10226. 'ஆங்கு அவற்கு அவயம் நல்கி, அரசொடு முடியும் ஈந்து,***
***பாங்கினால் வருணன்தன்னை அழைத்திட, பரிவு இலாமை***
***தாங்கினன் சிறிது போது, தாமரை நயனஞ் சேப்ப,***
***ஓங்கும் நீர் ஏழும் அன்னான் உடலமும் வெந்த அன்றே.***

***ஆங்கு*** - *அங்கே;* ***அவற்கு*** - *வீடணனுக்கு;* ***அவயம் நல்கி*** - *அடைக்கலம் தந்து;* ***அரசொடு முடியும் ஈந்து*** - *இலங்கை அரசளித்துப் பட்டாபிசேகம் செய்து;* ***பாங்கினால்*** - *இதமாக (தவம் செய்து);* ***வருணன் தன்னை அழைத்திட*** - *வருண தேவனை அழைக்கவும்;* ***பரிவு இலாமை*** - *அவன் வருவதற்கு அன்பு காட்டாமல் இருக்க அதனை;* ***சிறிது போது தாங்கினன்*** - *சிறிதளவு காலம் பொறுத்தான்; (பிறகு);* ***தாமரை நயனம் சேப்ப*** - *தாமரைக் கண்கள் சிவக்க கோபிக்கவே;* ***ஓங்கும் நீர் ஏழும்*** - *ஏழு கடல்களும்;* ***அன்னான் உடலமும்*** - *வருணனது மேனியும்;* ***வெந்த*** - *வெந்தன;*

*அன்று, ஏ அசைகள்*

***10227. 'மற்று அவன் அவயம் என்ன, மலர்ச் சரண்***
***அடைந்த வேலை,***
***வெற்றி வானரர்கள் பொங்கி, வெற்பினால் வேலை***
***தட்டல்***
***முற்றுற நன்கு இயற்றி, மொய் ஒளி இலங்கை புக்கு,***
***பற்றினர் சுற்றி ஆர்த்தார், வானவர் பயங்கள்***
***தீர்ந்தார்.***

***மற்று அவன் 'அவயம்' என்ன மலர்ச்சரண் அடைந்த வேலை*** - *அவ்வருணன் அவயம் என்று சொல்லித் திருவடி மலரில் விழுந்த பொழுது;* ***வெற்றி வானரர்கள் பொங்கி*** - *வெற்றியுடைய வானர வீரர்கள் மேல் எழுந்து;* ***வெற்பினால் வேலை தட்டல் முற்றுற நன்கு இயற்றி*** - *மலைகளால் கடலைத் தடுத்தலை முடிவு பெற நன்றாகச் செய்து;* ***மொய் ஒளி இலங்கை புக்கு*** - *ஒளி படைத்த இலங்கை நகருக்குள் புகுந்து;* ***பற்றினர் சுற்றி ஆர்த்தார்*** - *பற்றிக் கொண்டு முற்றுகை செய்து சூழ வளைத்து ஆரவாரித்தார்கள்;* ***வானவர் பயங்கள் தீர்ந்தார்*** - *தேவர்கள் தம் பயங்கள் நீங்கப் பெற்றார்கள்.*

***10228. 'மலையினை எடுத்த தோளும், மதமலை திளைத்த***
***மார்பும்,***
***தலை ஒரு பத்தும் சிந்தி, தம்பிதன் தோளும் தாளும்***
***கொலை தொழில் அரக்கர்ஆயோர் குலத்தொடும்***
***தலத்து வீழ,***
***சிலையினை வளைவித்து, ஐயன் தேவர்கள்***
***இடுக்கண் தீர்த்தான்.***

***ஐயன்*** - *இராமன் (இராவணனது);* ***மலையினை எடுத்த தோளும்*** - *கயிலை மலையை எடுத்த இருபது தோளும்;* ***மதமலை திளைத்த மார்பும்*** - *திக்கு யானைகள் போரிட்ட மார்பும்;* ***தலை ஒரு பத்தும்*** - *பத்துத் தலைகளும்;* ***சிந்தி*** - *சிதறி வீழச் செய்து;*

***தம்பிதன் தோளும் தாளும்*** - அவன் தம்பியாகிய கும்பகருணனது தோளும் கால்களும்; ***கொலை தொழில் அரக்கர் ஆயோர் குலத்தொடும் தலத்து வீழ*** - கொல்லும் தொழில் உடைய அரக்கர்களது கூட்டத்தோடும் பூமியில் விழும்படி; ***சிலையினை வளைவித்து*** - வில் வளைத்து அம்புகள் வீசி; ***தேவர்கள் இடுக்கண் தீர்த்தான்*** - தேவர்களது துன்பம் போக்கினான்.

***10229. 'இலக்குவன் பகழி ஒன்றால் இந்திரசித்து என்று ஓதும்***
***விலக்க அரு வலத்தினானும் இளைஞரும் கிளையும் வீழ்ந்தார்;***
***மலக்கம் உண்டு உழலும் தேவர் மலர் மழை தூவி ஆர்த்து, அன்று***
***உலக்குநர் குழுக்கள்தோறும் உடற் குறை ஆடல் கண்டார்.***

***இலக்குவன் பகழி ஒன்றால்*** - இலக்குவனது அம்பு ஒன்றினாலே; ***இந்திரசித்து என்று ஓதும் விலக்கு அரும் வலத்தினானும் இளைஞரும் கிளையும் வீழ்ந்தார்*** - தடுக்கரிய வல்லமையுடைய இந்திரசித்தும் அவன் தம்பியரும் உறவினர்களும் இறந்தொழிந்தனர்; ***மலக்கம் உண்டு உழலும் தேவர்*** - அரக்கர்களால் கலங்கித் திரியும் தேவர்கள்; ***மலர் மழை தூவி ஆர்த்து*** - மலரை மழை போல் சொரிந்து பேரொலி செய்து; ***அன்று*** - அப்போர் நடந்த போது; ***உலக்குநர் குழுக்கள் தோறும்*** - இறந்தவர் கூட்டத்தில் எல்லாம்; ***உடற்குறை ஆடல் கண்டார்*** - கவந்தங்கள் ஆடுவதைக் கண்டார்கள்.

*உடற்குறை ஆடல் விரிவினை 9512 - 9513 பாடல்களில் கண்டு இன்புறுக. இந்தப் படல் முன்பாடலுக்கு முன் அமைவது பொருத்தமாக இருக்கும். இந்திரசித்து வதம் முடிந்து இராவணவதம் ஆதலின் ஆயினும் கும்பகருண வதம் பின்னிடும் ஆதலின் முன் அமைந்தது போலும். செய்திகளைத் தொழுத்துக் கூறல் என்னும் அளவில் ஒரு சேரக் கொள்க.*

***10230. 'தேவரும் முனிவர்தாமும், சித்தரும் தெரிவைமாரும்,***
***மூவகை உலகுளோரும், முறை முறை தொழுது மொய்ப்ப,***
***பூவைபோல் நிறத்தினானும், வீடணப் புலவர் கோமாற்கு***
***யாவையும் இயம்பி, ''மாண்டோர்க்கு இயற்றுதி கடன்கள்'' என்றான்.***

**தேவரும் முனிவர்தாமும் சித்தரும் தெரிவைமாரும் மூவகை உலகுளோரும் முறை முறை தொழுது மொய்ப்ப** - *(இராமனை) நெருங்க;* **பூவை போல் நிறத்தினானும்** - *காயாமலர் மேனியுடைய இராமனும்;* **வீடணப் புலவர் கோமாற்கு** - *வீடணன் என்னும் அரச அறிஞனுக்கு;* **யாவையும் இயம்பி** - *எல்லா அறிவுரைகளும் கூறி;* **'மாண்டோர்க்கு இயற்றுதி கடன்கள்' என்றான்** - *இறந்தவர் அனைவர்க்கும் நீர்க்கடன் செய்க என்று கூறினான்.*

***10231. 'நான்முகன், விடையை ஊரும் நாரி ஓர் பாகத்து***
***அண்ணல்,***
***மான்முகன் முதலாய் உள்ள வானவர் தொழுது***
***போற்ற,***
***ஊன்முகம் கெழுவு வேலாய்! உம்பர் நாயகியைச் சீறி,***
***தேன் முகம் மலரும் தாரான், அரி சொல, சீற்றம்***
***தீர்ந்தான்.***

**ஊன்முகம் கெழுவு வேலாய்!** -*பகைவரது புலால் பொருந்திய வேலை உடைய பரதனே!;* **நான்முகன், விடையை ஊரும் நாரிஓர் பாகத்து அண்ணல், மான்முகன் முதலாய் உள்ள வானவர் தொழுது போற்ற** - *பிரமன், சிவன், மயன் முதலிய தேவர்கள் துதிக்க;* **உம்பர் நாயகியைச் சீறி** - *தேவ தேவியாகிய சீதையைக் கோபித்து;* **தேன் முகம் மலரும் தாரான்** -*தேன் நின்று பிலிற்றும் மாலையுடைய இராமன் (பின்னர்);* **அரி சொல** - *அக்கினி தேவன் உண்மை விளக்கி உரைக்க;* **சீற்றம் தீர்ந்தான்** - *கோபம் நீங்கப் பெற்றான்.*

*மான்முகன் - மான் போன்ற முகம் உடைய மயன் - மண்டோதரியின் தந்தையாவான்.*

***10232. 'மெய்யினுக்கு உயிரை ஈந்த வேந்தர்கோன்***
***விமானத்து எய்த,***
***அய்யனும் இளைய கோவும் அன்னமும் அடியில் வீழ,***
***கய்யினால் பொருந்தப் புல்லி, கண்ணின் நீர்க் கலசம்***
***ஆட்டி,***
***''செய்வரம் அருளுக'' என்றான்; திருவின் நாயகனும்***
***கொண்டான்.***

**மெய்யினுக்கு உயிரை ஈந்த வேந்தர் கோன்** - *சத்தியத்தைக் காக்க உயிரை விட்ட தயரதன்;* **விமானத்து எய்த** - *விண்ணுலகிலிருந்து விமானத்தில் வர;* **அய்யனும் இளைய கோவும்** - *இராமனும் இலக்குவனும்;* **அன்னமும் அடியில் வீழ** - *சீதையும் விழுந்து வணங்க;* **கையினால் பொருந்தப் புல்லி** - *தயரதன் தன் கைகளால் அவர்களை*

*நன்கு தழுவி;* ***கண்ணின் நீர்க் கலசம் ஆட்டி*** *- கண்களாகிய கலசத்தால் நீராட்டி;* ***செய்வரம் அருளுக என்றான்*** *- நான் செய்யக்கூடிய வரம் கேட்பாயாக என்று சொன்னான்;* ***திருவின் நாயகனும் கொண்டான்*** *- சீதை கேள்வனாகிய இராமனும் அவன்பால் பின்கூறும் வரம் கொண்டான்.*

*"செய்யவட்கு அருளுக" என்றான் என்ற பாடம் சீதை காரணமாகத் தயரதன் சொன்னதைக் குறிப்பிடும். 'வரம் அருளுக' என்றல் தயரதனாகிய தந்தை முறை உடையான் மைந்தனிடம் கூறும் முறையாக இல்லையாதலின் 'கேட்க'என்ற பொதுப்பொருளில் கோடல் சால்புடைத்து.*

***10233. ' "என்னை நன் கருணைதன்னால் ஈன்று எடுத்து,***
***இனிது பேணும்***
***அன்னையும் மகனும் முன்போல் ஆக" என,***
***அருளின் ஈந்து,***
***மன்னவன் போய பின்றை, வானரம் வாழ்வு கூர,***
***பொன் நெடு நாட்டில் உள்ளார் வரம் பல வழங்கிப்***
***போனார்.***

*(இராமனிடம் தயரதனிடம்)* ***என்னை நன் கருணை தன்னால் ஈன்று எடுத்து இனிது பேணும் அன்னையும் மகனும் முன் போல் ஆகு என*** *- என்னைத் தன் அருளால் பெற்றெடுத்துப் பெரிதும் காத்த கைகேயியும் பரதனும் தாயும் தம்பியும் ஆகவேண்டும் என்று கேட்க;* ***அருளின் ஈந்து மன்னவன் போய பின்றை*** *- அருளால் தந்து தயரதன் புறப்பட்டுச் சென்றபிறகு;* ***வானரம் வாழ்வு கூர*** *- குரங்குகளின் வாழ்வு சிறக்க;* ***பொன் நெடுநாட்டில் உள்ளார்*** *- தேவர் உலகத்தில் உள்ள தேவர்கள்;* ***பல வரம் வழங்கிப் போனார்*** *- பல வரங்களை வழங்கிச் சென்றார்கள்.*

***10234. வெள்ளம் ஓர் ஏழு பத்தும், விலங்க அரும் வீரர் ஆகி***
***உள்ளவர் அறுபத்து ஏழு கோடியும், ஒற்றை ஆழி***
***வள்ளல்தன் மகனும், உள்ளம் மகிழ்வுற விமானம்***
***ஈந்தான் -***
***எள்ளல் இல்லாத கீர்த்தி வீடணன், இலங்கை***
***வேந்தன்.***

***எள்ளல் இல்லாத கீர்த்தி இலங்கை வேந்தன் வீடணன்*** *- இகழப் படாத புகழ் உடைய இலங்கை அரசனாகிய வீடணன்;* ***வெள்ளம் ஓர் எழுபத்தும்*** *- எழுபது வெள்ளம் குரக்குச் சேனையும்;* ***விலங்க அரும் வீரர் ஆகி உள்ளவர் அறுபத்து எழு கோடியும்*** *- தடுத்தற்கரிய வீரர்கள் அறுபத்தேழு கோடிப் பேரும்;* ***ஒற்றை ஆழி வள்ளல்தன் மகனும்*** *- ஓராழித் தேரானாய சூரியன் மகன் சுக்கிரீவனும்;* ***உள்ளம் மகிழ்வுற*** *- அயோத்திக்கு வருவது பற்றி மனமகிழ்வு அடைய;* ***விமானம் ஈந்தான்*** *- புட்பக விமானத்தைத் தந்தான்.*

*10235. 'ஆரியன் பின்னை நின்னை அன்பினால் நினைந்து, காதல்*
*சூரியன் மகனும், தொல்லைத் துணைவரும், இலங்கை வேந்தும்,*
*பேர் இயல் படையும் சூழ, பெண்ணினுக்கு அரசியோடும்*
*சீரிய விமானத்து ஏறி, பரத்துவன் இருக்கை*

*சேர்ந்தான்.*

**ஆரியன்** - மேலவனான இராமன்; **பின்னை** - பிறகு; **நின்னை -; அன்பினால்; நினைந்து** - அன்பால் நினைத்து; **காதல் சூரியனும் மகனும்** - தன்பால் அன்புடைய சுக்ரீவனும்; **தொல்லைத் துணைவரும்** - பழைய நண்பர்களும்; **இலங்கை வேந்தும்** - வீடணனும்; **பேர் இயல் படையும் சூழ** - பேரளவினதாகிய சேனைகளும் சுற்றிவர; **பெண்ணினுக்கு அரசியோடும்** - சீதையோடும்; **சீரிய விமானத்து ஏறி** - சிறந்த புட்பகத்தில் ஏறி; **பரத்துவன் இருக்கை சேர்ந்தான்** - பரத்துவாச முனிவனது ஆச்சிரமத்தை அடைந்தான்.

*10236. 'அன்பினால் என்னை, நின்பால் ஆழியும் காட்டி, ''ஆன்ற*
*துன்பு எலாம் துடைத்தி என்று'' துரந்தனன், தோன்றல்' என்று,*
*முன்பினால் இயன்ற எல்லாம் மொழிந்தனன் - முது நீர் தாவி*
*வன்பினால் இலங்கை முற்றும் எரிக்கு உணவாக வைத்தோன்.*

**அன்பினால்** - என்பாற் கொண்ட அன்பாலே; **தோன்றல்** - இராமன்; **என்னை நின்பால் ஆழியும் காட்டி** - நின்னிடம் மோதிரத்தையும் காட்டி; **'ஆன்ற துன்பு எலாம் துடைத்தி' என்று** - இதுவரை அமைந்த துன்பத்தை எல்லாம் நீக்குக என்று சொல்லி; **துரந்தனன்** - விரைய அனுப்பினான்; **என்று -(இவ்வாறு) முன்பினால் இயன்ற எல்லாம்** - முன்னும் பின்னும் நடந்த நிகழ்ச்சிகளை எல்லாம் தொகுத்து; **முதுநீர் தாலி வன்பினால் இலங்கை முற்றும் எரிக்கு உணவாக வைத்தோன்** - கடலைத் தாவி வலிமையாலே இலங்கை முழுவதையும் தீக்கடவுளுக்கு உணவாக இட்ட அனுமன்; **மொழிந்தனன்** - சொல்லி முடித்தான்.

முன், பின் என்பன அநுமன் இராமனைச் சந்திப்பதற்கு முன்னும் பின்னும் எனக் கொள்க.

*பரதன் அனுமன் கை பற்றி கங்கை சேர்தல்*

***10237.* காலின் மா மதலை சொல்ல, பரதனும் கண்ணீர் சோர,**
***'வேலி மா மதில்கள் சூழும் இலங்கையில் வேட்டம் கொண்ட***
***நீல மா முகில் பின் போனான் ஒருவன்; நான் நின்று நைவேன்,***
***போலுமால்; இவைகள் கேட்பேன்; புகழ் உடைத்து, அடிமை மன்னோ.'***

***காலின் மாமதலை சொல்ல*** - *காற்றின் மகனாய அனுமான் சொல்ல;* **பரதனும் கண்ணீர் சோர** - *(அது கேட்டு) பரதனும் கண்ணீர் சொரிய நின்று;* **வேலி மா மதில்கள் சூழும் இலங்கையில் வேட்டம் கொண்ட** - *நீர் வேலியுடைய மதில் சுற்றிய இலங்கையில் வேட்டையாட விரும்பிய;* **நீல மா முகில்பின் ஒருவன் போனான்** - *நீலமேகமாய இராமன் பின்னால் இலக்குவன் சென்றான்;* **நான் நின்ற நைவேன் போலும்** - *நான் இங்கிருந்து வருந்துவேன் போலும்;* **இவைகள் கேட்பேன்** - *இச்செய்திகளைக் கேட்பவனாகவே ஆனேன்;* **அடிமை புகழ் உடைத்து** - *நான் இராமற்குச் செய்த அடிமை புகழ் உடையது என்று வருந்திக் கூறினான்.*

*ஆல் - உரையசை. மன், ஓ அசை.*

***10238.* என்று அவன் இரங்கி ஏங்கி, இரு கணும் அருவி சோர,**
***வன் திறல் அனுமன் செங் கை வலக் கையால் பற்றி, காலின்***
***சென்றனன் இருளினூடு, செறி புனல் கங்கை சேர்ந்தான்,***
***குன்றினை வலஞ் செய் தேரோன் குண கடல் தோன்றும் முன்னர்.****

**அவன்** - *அப்பரதன்;* **என்று இரங்கி ஏங்கி** - *இவ்வாறு கூறி அழுது வருந்தி;* **இருகணும் அருவி சோர** - *இரண்டு கண்களிலிருந்தும் கண்ணீர் அருவியாய்ச் சொரியுமாறு;* **வன்திறல் அனுமன் செங்கை** - *வலிமை மிக்க அனுமனது சீரிய கையை;* **வலக்கையால் பற்றி** - *தனது வலது கையினால் பிடித்துக் கொண்டு;* **இருளின் ஊடு காலின் சென்றனன்** - *இருளின் இடையே காலால் நடந்து சென்று;* **குன்றினை வலம்**

**செய்தேரோன்** - *மேருமலையை வலமாகச் சுற்றி வருகின்ற தேரினை உடைய சூரியன்;* **குணகடல் தோன்று முன்னர்** - *கீழ்க்கடலில் உதயமாவதற்கு முன்னாலே;* **செறிபுனல் கங்கை சேர்ந்தான்** - *நீர் நிறைந்த கங்கைக் கரையை அடைந்தான்.*

*சூரியன் உதயம் ஆதல்*

***10239. இராவணன் வேட்டம் போய் மீண்டு, எம்பிரான், அயோத்தி எய்தி,***
***தராதல மகளும் பூவின் தையலும் மகிழ, சூடும்***
***அராவு பன் மௌலிக்கு ஏய்ந்த சிகாமணி, குணபால் அண்ணல்***
***விராவுற எடுத்தாலென்ன, வெய்யவன் உதயம் செய்தான்.****

**எம்பிரான்** - *எமது தலைவனாகிய இராமபிரான்;* **இராவணன் வேட்டம் போய் மீண்டு** - *இராவணனை வேட்டையாடிக் கொல்லுவதற்காக இலங்கை சென்று திரும்பி வந்து;* **தராதல மகளும் பூவின் தையலும் மகிழ** - *பூமி என்கின்ற பெண்ணும், தாமரை மலரில் வீற்றிருக்கின்ற திருமகளும் மகிழ்ச்சி அடையும்படி;* **சூடும்** - *அணிந்து கொள்கின்ற;* **அராவு பொன் மௌலிக்கு ஏய்ந்த சிகாமணி** - *அராவிச் செய்யப் பெற்ற பொன்னால் ஆகிய மகுடத்துக்குப் பொருந்திய உச்சி மணியை;* **குணபால் அண்ணல்** - *கீழ்த்திசைக் காவலன் ஆகிய இந்திரன்;* **விராவுற எடுத்தால் என்ன** - *பொருத்தமுறத் தோன்றும்படி மேலே தூக்கிப் பிடித்தாற் போல என்னுமாறு;* **வெய்யவன் உதயம் செய்தான்** - *சூரியன் கீழ்த்திசையில் தோன்றினான்.*

*இராவண வதத்தால் பெருநலம் பெற்றவன் இந்திரன் ஆதலின் அவன் இராமன் மகுடத்துக்குப் பொருந்திய சிரோரத்னத்தைத் தன் திசைக்கண்ணே தோற்றுவித்தது போன்றது சூரியோதயம் ஆகும். இயற்கையான சூரிய உதயத்தைக் கற்பனை செய்தலின் தற்குறிப்பேற்ற உவமையணியாகும். சிகாமணி - சிரோரத்னம். இராமன் தன்னை ஆளப் போதலால் பூதேவி மகிழ்ந்தாளாம் - துன்பங்கள் நீங்கி நன்மை பெறுதலால் சீதேவி மகிழ்ந்தாளாம்.*

*பரதன் வினாவும் அனுமன் விடையும்*

***10240. காலை வந்து இறுத்த பின்னர், கடன் முறை கமலக்கண்ணன்***
***கோல நீள் கழல்கள் ஏத்தி, குரக்கினத்து அரசை நோக்கி, 'சாலவும் கலைகள் வல்லோய்! தவறு உண்டு போலும், வாய்மை;***

***மூலமே உணரின், உன்தன் மொழிக்கு எதிர்
மொழியும் உண்டோ?***

*(பரதன்)* ***காலை வந்து இறுத்த பின்னர்*** *- காலைப் பொழுது தோன்றியபிறகு;* ***கடன் முறை*** *- நாட்காலத்தே தான் செய்யும் முறைமைப்படி;* ***கமலக்கண்ணன் கோல நீள் கழல்கள் ஏத்தி*** *- தாமரை மலர் போன்ற கண்களை உடைய இராமபிரானது அழகிய நீண்ட திருவடிகளை வழிபட்டு;* ***குரக்கினத்து அரசை நோக்கி*** *- அனுமனைப் பார்த்து;* ***'சாலவும் கலைகள் வல்லோய்*** *- சகல சாஸ்திர நூல்களிலும் விற்பனன் ஆகியவனே;* ***உன்தன் மொழிக்கு எதிர் மொழியும் உண்டோ*** *- உன்னுடைய வார்த்தைக்கு எதிராகச் சொல்லத்தக்க வார்த்தையும் இருக்கிறதா (ஆயினும்);* ***மூலமே உணரின்*** *- அடிமுதல் நன்றாக உணர்ந்து பார்த்தால்;* ***வாய்மை தவறுண்டு போலும்*** *- உன்னுடைய சொல்லில் தவறு இருக்கிறது போல உள்ளது.*

***10241. 'எழுபது வெள்ளம் சேனை வானரர், இலங்கை
வேந்தன்
முழு முதல் சேனை வெள்ளம், கணக்கு இல
மொய்த்த என்றால்,
அழுவ நீர் வேலை சுற்றும் அரவம் இன்றாக
வற்றோ?
விழுமிது, ''எம்பிரான் வந்தான்'' என்று உரைத்தது,
வீர!' என்றான்.***

***வீர!*** *- வீரனாகிய அனுமனே!;* ***எழுபது வெள்ளம் சேனை வானரர்*** *- எழுபது வெள்ளக் கணக்கான சேனைகளாகிய வானரர்கள்;* ***இலங்கை வேந்தன் முழுமுதல் சேனை வெள்ளம்*** *- இலங்கையரசனாகிய வீடணனது அளவிறந்த சேனைக் கூட்டம்;* ***கணக்கு இல மொய்த்த என்றால்*** *- கணக்கில்லாதன ஒன்று சேர்ந்து நெருங்கி விட்டன என்றால்;* ***அழுவ நீர் வேலை சுற்றும் அரவம் இன்றாக அற்றோ*** *- ஆழமான நீர்ப்பரப்பான கடலின் கண் சுற்றுகின்ற பேரொலி போன்ற பேர் ஆரவாரம் இல்லாமல் இருக்க இயலுமா? (அவ்வொலி ஏதும் இல்லாமையால்);* ***எம்பிரான் வந்தான் என்று உரைத்தது விழுமிது*** *- இராமபிரான் வந்து விட்டான் என்று நீ கூறியது நன்றாயிருக்கிறது;* ***என்றான்.***

*'விழுமிது' என்னும் சொல் இகழ்ச்சிக் குறிப்பு.*

***10242. 'ஓசனை இரண்டு உண்டு அன்றே, பரத்துவன்
உறையும் சோலை;
வீசு தெண் திரையிற்று ஆய வெள்ளம் ஓர் ஏழு
பத்தும்***

***மூசிய பழுவம் இங்ஙன் கிடப்பதோ, முரற்றல் இன்றி?***
***பேசியது அமையும்; நம் கோன் எங்கு உளன்,***
***பெரும!' என்றான்.***

**பெரும!** - அனுமனே!; **பரத்துவன் உறையும் சோலை** - பரத்துவாச முனிவனது ஆசிரமச் சோலை (இங்கிருந்து); **இரண்டு ஓசனை உண்டு அன்றே** - இரண்டு யோசனை தூரத்தின் கண் உள்ளது அல்லவா? (அவ்வாறாயின்); **வீசு தெண் திரையிற்று ஆய வெள்ளம் ஓர் எழுபத்தும்** - அலை வீசும் கடற்பரப்பைப் போலக் கணக்கிடத் தக்க எழுபது வெள்ளமாகிய சேனைகளும்; **மூசிய பழுவம்** - நெருங்கக் கிடக்கின்ற அச்சோலைக் காடு; **முரற்றல் இன்றி இங்ஙனம் கிடப்பதோ?** - (நம் காதில் கட்கும்படி) ஒலி செய்யாமல் அமைதியாக இவ்வாறும் இருக்க இயலுமா?; **பேசியது அமையும்** - நீ இதுவரை கூறியது மிக நன்றாய் இருந்தது (இனியும் அதை நீட்ட வேண்டா); **நம் கோன் எங்கு உளன்** - நம் தலைவனாய இராமபிரான் எங்கே இருக்கின்றான்; **என்றான்**.

'பேசியது அமையும்' என்பது இகழ்ச்சிக் குறிப்பு. இவ்வளவு ஐயத்திலும் அனுமனைப் பெரும! வீர! என்று விளித்தது பரதனது பண்பு நலத்தைக் காட்டும்.

*10243.* ***பரதன் அஃது உரைத்தலோடும், பணிந்து மாருதியும், 'சீர் சால்***
***விரத மா தவத்து மிக்கோய்! விண்ணவர் தமையும் வேண்டி***
***வரதன் ஆண்டு அளிப்ப வந்த வரத்தினால், மலரும் தேனும்***
***சரதமே மாந்தி மாந்தித் துயின்றது, தானை எல்லாம்.***

**பரதன் அஃது உரைத்தலோடும்** - பரதன் அவ்வாறு சொல்லி முடித்த அளவில்; **மாருதியும் பணிந்து** - அனுமனும் (பரதனை) வணங்கி; **சீர் சால் விரத மாதவத்து மிக்கோய்!** - புகழ் பொருந்திய நோன்பினால் உயர்ந்த பெருந்தவத்தில் சிறந்த பெரியோய்!; **வரதன் விண்ணவர் தமையும் வேண்டி ஆண்டு அளிப்ப வந்த வரத்தினால்** - வரந்தரவல்ல பரத்துவாசன் தேவர்களை வழிபட்டு ஓர் ஆகுதியை வேள்விக்கண் அளிப்ப அதனாற் பெற்ற வரத்தின் மேன்மையால்; **தானை எல்லாம்** - சேனைகள் எல்லாம்; **மலரும் தேனும் சரதமே மாந்தி மாந்தித் துயின்றது** - மலரையும் தேனையும் மிகுதியாகப் பெற்று நன்கு உண்டு மயங்கி அயர்ந்து துயின்று விட்டது (அதனால் ஒலி இல்லை) தொடரும்.

சேனை எல்லாம் - தொகுதியொருமை. துயின்றது என முடிந்தது.

*10244.* ***'வானவர் கொடுக்க வந்த வரத்தினால், மதுபம் மூசும்***

***தேனொடு கிழங்கும் காயும் கனிகளும் பிறவும் சீர்த்துக்***
***கானகம் பொலிதலாலே, கவிக் குலம் அவற்றை மாந்தி,***
***ஆனனம் மலர்ந்தது இல்லையாகும்; நீ துயரல், எந்தாய்!***

***எந்தாய்!*** *- என் தந்தைக்கு ஒப்பான பரதனே!;* **வானவர் கொடுக்க வந்த வரத்தினால்** *- தேவர்கள் அளிக்க உண்டாகிய வரபலத்தாலே;* ***கானகம்*** *- காடு;* **மதுபம் மூசும் தேனொடு கிழங்கும் காயும் கனிகளும் பிறவும் சீர்த்துப் பொலிதலாலே** *- வண்டுகள் மொய்க்கின்ற தேனோடு கிழங்கு, காய், பழம், பிற ஆகியவற்றால் வளம் பெற்று விளங்குவதால்;* ***கவிக்குலம் அவற்றை மாந்தி*** *- குரங்குக் கூட்டம் அவைகளை உண்டு மயங்கி;* **ஆனனம் மலர்ந்தது இல்லையாகும்** *- முகம் கண் விழிக்காமல் உறங்கியவாகும்;* ***நீ துயரல்*** *- (இராமன் வந்தானில்லையோ என்று கருதி) நீ வருந்தாதே. தொடரும்.*

***10245. 'இனி ஒரு கணத்தின், எம் கோன் எழுந்தருள் தன்மை ஈண்டுப்***
***பனி வரும் கண்ணின் நீயே பார்த்தி' என்று உரைத்தான்; இப்பால்,***
***முனிவனது இடத்து வந்த முளரி அம் கண்ணன் வண்ணக்***
***குனி சிலைக் குரிசில், செய்தது இற்று எனக் குணிக்கலுற்றாம்:***

**இனி ஒரு கணத்தின்** *- இனிமேல் ஒரு கணப் பொழுதிற்குள்;* ***எம் கோன் எழுந்தருள் தன்மை*** *- இராமபிரான் இங்கே எழுந்தருளப் போகின்ற பாங்கினை;* **ஈண்டு** *- இவ்விடத்தே;* **பனிவரும் கண்ணின் நீயே பார்த்தி என்று உரைத்தான்** *- நீர் பெருகுகின்ற கண்களை உடைய நீயே பார்ப்பாய் என்று சொல்லி முடித்தான்;* **இப்பால்** *- இன்னொரு புறமாகிய (பரத்துவாச ஆசிரமத்தே);* **முனிவனது இடத்தே வந்த முளரியம் கண்ணன் வண்ணக் குனிசிலைக் குரிசில்** *- பரத்துவாச ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்த தாமரைக் கண்ணனாகிய அழகிய வளைந்த வில்லை உடைய இராமபிரான்;* **செய்தது இற்று எனக் குணிக்கல் உற்றாம்** *- செய்த செயல் இது என்று சொல்லத் தொடங்கினோம்.*

*இது கவிக்கூற்று.*

*குகன், பரத்துவாச ஆசிரமத்தில் இராமனைத் தரிசித்தல்*

***10246. அருந்தவன் சுவைகள் ஆறோடு அமுது இனிது அளிப்ப, ஐயன்***
***கருந் தடந் கண்ணியோடும் களைகணாம் துணைவரோடும்,***
***விருந்து இனிது அருந்தி, நின்ற வேலையின்,வேலை போலும்***
***பெருந் தடந் தானையோடும், கிராதர் கோன் பெயர்ந்து வந்தான்.***

***அருந்தவன் ஆறு சுவைகளோடு அமுது இனிது அளிப்ப*** *- பரத்துவாசன் அறுசுவைகளோடு கூடிய உணவினை நன்றாகக் கொடுக்க;* ***ஐயன் கருந்தடங் கண்ணியோடும் களைகணாம் துணைவரோடும் விருந்து இனிது அருந்தி நின்ற வேலையின்*** *- இராமபிரான் சீதாபிராட்டியோடு துன்பத்திற்குத் துணையாகிய சுக்கிரீவ விபீடண ஆதியாகிய சகோதரர்களோடும் விருந்தினை நன்கு அருந்தியிருந்த சமயத்தில்;* ***கிராதர் கோன்*** *- வேடர வேந்தனாய குகன்;* ***வேலை போலும் பெருந்தடந் தானையோடும் பெயர்ந்து வந்தான்*** *- கடல் போன்ற தனது பெரிய அகன்ற வேடச் சேனையோடும் (சிருங்கிபேரத்திருந்து) புறப்பட்டு அங்கு வந்து சேர்ந்தான்.*

***10247. தொழுதனன்; மனமும் கண்ணும் துளங்கினன்; சூழ ஓடி***
***அழுதனன்; கமலம் அன்ன அடித்தலம்அதனின் வீழ்ந்தான்;***
***தழுவினன் எடுத்து, மார்பில் தம்பியைத் தழுவுமாபோல்;***
***'வழு இலர் வலியர்அன்றோ, மக்களும் மனையும்?' என்றான்.***

*(குகன் இராமனைக் கண்டு)* ***தொழுதனன்*** *- கும்பிட்டான்;* ***மனமும் கண்ணும் துளங்கினன்*** *- மனமும் கண்களும் தடுமாறப் பெற்றான்;* ***சூழ ஓடி அழுதனன்*** *- இராமனைச் சுற்றி ஓடி அழுதான்;* ***கமலம் அன்ன அடித்தலம் அதனின் வீழ்ந்தான்*** *- தாமரை மலர் போன்ற இராமனது திருவடியிணையின்கண் விழுந்தான்;* ***மார்பில் தம்பியைத் தழுவுமாபோல்*** *- இராமன் மார்பின் கண்ணே தம்பியைத் தழுவிக் கொள்வது போலத்;* ***தழுவினன் எடுத்து*** *- தழுவித்தூக்கி;* ***மக்களும் மனையும் வழுவிலர் வலியர் அன்றோ?*** *- உன் மக்களும், குடும்பத்தினரும் தீங்கின்றி வலியராக உள்ளனரல்லவா?;* ***என்றான்*** *- என்று விசாரித்தான்.*

*தொழுது, துளங்கி, ஓடி, அழுது, விழுந்தான் என எச்சமாக்கி முடிவன முற்றாதல் 'பாவம்' நோக்கி.*

## *குகனும் இராமனும்*

***10248. 'அருள் உனது உளது, நாயேற்கு; அவர் எலாம்***
***அரிய ஆய***
***பொருள் அலர்; நின்னை நீங்காப் புணர்ப்பினால்***
***தொடர்ந்து போந்து***
***தெருள்தரும் இளைய வீரன் செய்வன***
***செய்கலாதேன்;***
***மருள் தரு மனத்தினேனுக்கு இனிது அன்றோ,***

***வாழ்வு மன்னோ?***

***நாயேற்கு உனது அருள் உளது*** *- அடியேனுக்குப் (பெறற்கரிய) உனது பெருங்கருணை உள்ளது;* ***அவர் எலாம் அரிய ஆய பொருள் அலர்*** *- மக்களும் மனையும் ஆய அவர்கள் எல்லாம் அருமையான பொருளாக மாட்டார் அது நிற்க;* ***நின்னை நீங்காப் புணர்ப்பினால் தொடர்ந்து போந்து*** *- உன்னை விட்டுப் பிரியாத மனப் பிணிப்புடனே பின்பற்றி வந்து;* ***தெருள் தரும் இளைய வீரன்*** *- மெய்யுணர்வு பெற்ற இலக்குவன்;* ***செய்வன செய்கலா தேன்*** *- செய்த திருத்தொண்டுகளைச் செய்ய இயலாதவனாகிய;* ***மருள்தரும் மனத்தினேனுக்கு வாழ்வு இனிது அன்றோ*** *- மயக்கமுற்ற மனம் உடைய எனக்கு வாழ்வு சுவையானது அல்லவா? (மிக நன்றாயிருந்தது)*

*தன்னைத் தானே நொந்து உரைக்கின்றான் குகன் ஆதலின் இவ்வாறு கூறினான். இராமபிரான் உடனேயே இருத்து தொண்டு செய்யும் அவாவினன் என்பதை முன்னும் (1990 - 1993) காண்க. மன் ஓ - கழிவிரக்கத்தின்கண் வந்தது.*

***10249. ஆயன பிறவும் பன்னி, அழுங்குவான்தன்னை, 'ஐய!***
***நீ இவை உரைப்பது என்னே; பரதனின் நீ வேறு***
***உண்டோ?***
***போய், இனிது இருத்தி' என்ன, புளிஞர்கோன்***
***இளவல் பொன் தாள்***
***மேயினன் வணங்கி, அன்னை விரை மலர்த் தாளின்***
***வீழ்ந்தான்.***

***ஆயன பிறவும் பன்னி*** - இவ்வாறான வார்த்தைகள் பலவற்றையும் திரும்பப் பலமுறை சொல்லி; ***அழுங்குவான் தன்னை*** - வருந்துகின்ற குகனைப் பார்த்து (இராமபிரான்); ***ஐய! நீ இவை உரைப்பது என்னே!*** - குகனே! நீ இத்தகைய வார்த்தைகளைக் கூறல் வேண்டுமா?; ***பரதனின் நீ வேறு உண்டோ*** - பரதனும் நீயும் எனக்கு ஒன்றல்லவா; ***போய் இனிது இருத்தி*** - சென்று நன்கு இருப்பாயாக; ***என்ன*** - என்று சொல்லி அனுப்ப; ***புளிஞர் கோன்*** - வேடர் தலைவனாய குகன்; ***இளவல் பொன் தாள் மேயினன் வணங்கி*** - இலக்குவனது பொலிவு பெற்ற திருவடிகளை விருப்பத்தோடு வழிபட்டு; ***அன்னை விரைமலர்த்தாளின் வீழ்ந்தான்*** - சீதாபிராட்டியினது மணம நாறும் மலர்போன்ற திருவடிகளில் விழுந்து வணங்கினான்.

*இராமன் குகனை அனைவர்களுக்கும் அறிமுகம் செய்தல்*

***10250. தொழுது நின்றவனை நோக்கி,***
***துணைவர்கள்தமையும் நோக்கி,***
***முழுது உணர் கேள்வி மேலோன் மொழிகுவான்;***
***'முழு நீர்க் கங்கை***
***தழுவு இரு கரைக்கும் நாதன்; தாயினும் உயிர்க்கு நல்லான்;***
***வழுவு இலா எயினர் வேந்தன்; குகன் எனும் வள்ளல் என்றான்;***

***முழுது உணர் கேள்வி மேலோன்*** - முற்ற நண்குணர்ந்த கேள்வி ஞானத்தினால் நிரம்பப் பெற்ற பெரியோனாகிய இராமபிரான்; ***தொழுது நின்றவனை நோக்கி துணைவர்கள் தமையும் நோக்கி மொழிகுவான்*** - வணங்கி நின்ற குகனைப் பார்த்து; சுக்ரீவ வீடணாதி துணைவர்களையும் பார்த்துச் சொல்கின்றான்; ***முழு நீர்க்கங்கை தழுவு இரு கரைக்கும் நாதன்*** - (இவன்) நிரம்பிய நீரை உடைய கங்கையைத் தழுவியுள்ள இரு கரைப் பகுதி நாடுகளுக்கும் தலைவன்; ***உயிர்க்கு தாயினும் நல்லான்*** - உயிர்களுக்குத் தாயைக் காட்டிலும் மிகவும் நல்லவன்; ***வழுவு இலா எயினர் வேந்தன்*** - குற்றமற்ற வேடர் அரசன்; ***குகன் எனும் வள்ளல்*** - குகன் என்னும் பெயருடைய பெரியோன்; ***என்றான்***

*வேடராஜன், குகன் என்பதைப்பின் தள்ளி, கங்கையிருகரை உடையான் தாயினும் நல்லான் என்பவற்றைத் துணைவர்களுக்கு முன் வைத்து அறிமுகம் செய்த அருமை அறிந்து இன்புறுக.*

*சூரியன் மறைதல்*

***10251. அண்ணல் அஃது உரைத்தலோடும், அரி குலத்து அரசன் ஆதி***
***நண்ணிய துணைவர் யாரும் இனிது உறத் தழுவி,***

***நட்டார்;***
***கண்ணகல் ஞாலம் எல்லாம் கங்குலால் பொதிவான்***
***போல,***
***வண்ண மால் வரைக்கும் அப் பால் மறைந்தனன்,***

***இரவி என்பான்.*** **அண்ணல் அஃது உரைத்தலோடும்** - *இராமபிரான் அவ்வாறு (குகனை அறிமுகம் செய்து) கூறிய அளவில்;* **அரி குலத்து அரசன் ஆதி** - *குரங்குக் குலத்துக்கு அரசனாகிய சுக்ரீவன் முதலாக;* **நண்ணிய துணைவர் யாரும்** - *வீடணன் முதலிய துணைவர்கள் எல்லாரும்;* **இனிதுறத் தழுவி நட்டார்** - *இனிமை பொருந்த மனத்தாலும் உடலாலும் தழுவி நண்பு செய்தார்கள்;* ***(இந்நிலையில்)*** **கண்ணகல் ஞாலம் எல்லாம் கங்குலால் பொதிவான் போல** - *இடமகன்ற உலகம் எல்லாம் இருளால் மூடுகின்றவனைப் போல;* **இரவி என்பான்** - *சூரியன் என்பவன்;* **வண்ண மால் வரைக்கும் அப்பால் மறைந்தனன்** - *அழகிய பெரிய மேரு மலைக்கும் பின்னால் மறையச் சென்றான்.*

## *சூரியன் உதயமும் இராமன் புறப்படுதலும்*

***10252. அலங்கல் அம் தொடையினானும், அந்தியின்***
***கடன்கள் ஆற்றி,***
***பொலங் குழை மயிலினோடு துயிலுற, புணரி போலும்***
***இலங்கிய சேனை சூழ, இளவலும் எயினர் கோனும்,***
***கலங்கலர் காத்து நின்றார்; கதிரவன் உதயம்***
***செய்தான்.***

**அலங்கல் அம் தொடையினானும்** - *அசைகின்ற அழகிய மாலையை அணிந்த இராமபிரானும்;* **அந்தியில் கடன்கள் ஆற்றி** - *மாலைக்காலத்தே செய்யும் நீர்க்கடன்களை நிறைவேற்றி;* **பொலங்குழை மயிலினோடு துயிலுற** - *பொன்னாலாய காதணி அணிந்த மயில்போலும் சீதையோடு உறங்க;* **புணரிபோலும் இலங்கிய சேனை சூழ** - *கடல் சூழப் பரந்து விளங்கும் சேனை சுற்றியிருப்ப;* **இளவலும் எயினர் கோனும் கலங்கலர் காத்து நின்றார்** - *இலக்குவனும் குகனும் சிறிதும் உறக்கத்தால் கலங்காத வராய்க் காவல் செய்து இருந்தார். (இந்நிலையில்);* **கதிரவன் உதயம் செய்தான்** - *சூரியன் தோன்றினான்.*

***10253. கதிரவன் உதிப்ப, காலைக் கடன் கழித்து,***
***இளவலோடும்***
***அதிர் பொலன் கழலினான் அவ் அருந்***
***தவன்தன்னை ஏத்தி,***
***விதி தரு விமானம் மேவி, விளங்கிழையோடும்,***

***கொற்றம்***
***முதிர் தரு கருணையோடும், முனி மனம் தொடரப்***
***போனான்.***

***கதிரவன் உதிப்ப*** - சூரியோதயம் ஆன அளவில்; ***அதிர் பொலன் கழலினான்*** - ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்த திருவடியுடைய இராமன்; ***காலைக் கடன் கழித்து*** - காலைப் பொழுதில் செய்யவேண்டிய நீர்க்கடன் வழிபாடுகளை நிறைவேற்றி; ***இளவலோடும்*** - இலக்குவனோடும்; ***அவ் அருந்தவன் தன்னை ஏத்தி*** - அந்த அரிய பரத்துவாச முனிவனைத் துதித்து வணங்கி; ***விதிதரு விமானம் மேவி*** - பிரமனால் (குபேரனுக்குக்) கொடுக்கப்பெற்ற புட்பக விமானத்தை அடைந்து; ***விளங்கிழையோடும்*** - சீதையோடும்; ***கொற்றம் முதிர் தருகருணையோடும்*** - வெற்றியாற் சிறந்து பெற்ற பேரருளோடும்; ***முனி மனம் தொடரப் போனான்*** - பரத்துவாச முனிவனது மனம் அன்பினால் தன்னைப் பின்பற்றி வரச் சென்றான்.

*10254.* ***தாவி வான் படர்ந்து மானம் தடையிலாது ஏகும்***
***வேலை,***
***தீவிய கன்னி ஆகிச் செருக்கிய காமச் செவ்வி***
***ஓவியம் உயிர் பெற்றென்ன உம்பர்கோன் நகரும்***
***ஒவ்வா***
***மா இயல் அயோத்தி சூழும் மதில் புறம்***
***தோன்றிற்றுஅன்றே.***

***மானம்*** - புட்பக விமானம்; ***தாவி*** - மேலே கிளம்பி; ***வான் படர்ந்து*** - விண்ணில் பரந்து சென்று; ***தடை இலாது ஏகும் வேலை*** - எதனாலும் தடைபடாமல் செல்கின்ற போது; ***தீவிய கன்னி ஆகிச்*** - இனிய கன்னித் தன்மை உடையதாகி; ***செருக்கிய காமச் செவ்வி*** - நிரம்பி முதிர்ந்த விரும்பத் தக்க பேரழகால்; ***ஓவியம் உயிர் பெற்று என்ன*** - சித்திரம் உயிர் கொண்டு வந்தாற் போன்ற; ***உம்பர் கோன் நகரும் ஒவ்வா*** - இந்திரனது அமராவதி நகரமும் ஒப்பாகாத; ***மா இயல் அயோத்தி சூழும் மதில்புறம் தோன்றிற்று*** - திருமகள் தங்கிய அயோத்தியைச் சுற்றியுள்ள மதிலின் புறம் தோன்றியது. அன்று, ஏ அசைகள். மதிலுக்குக் கன்னித்தன்மை பிறர் கைப்படாமையாகும் 'கன்னி மதில்' எனல் வழக்கு. பிறவற்றை மதில் மேலும் அயோத்தி மேலும் ஏற்றலாம்.

*10255.* ***பொன் மதில் கிடக்கை சூழப் பொலிவுடை நகரம்***
***தோன்ற,***
***நன் மதிக் கிழவர்தம்மை நோக்கிய ஞான மூர்த்தி,***
***'சொல் மதித்து ஒருவராலும் சொலப்படா அயோத்தி***
***தோன்றிற்று'***

***என்னலும், கரங்கள் கூப்பி எழுந்தனர், இறைஞ்சி நின்றார்.***

**பொன் மதில் கிடக்கை சூழப் பொலிவுடை நகரம் தோன்ற** - *பொன்னாற் செய்த மதிற்பரப்பாற் சுற்றப்பட்ட அழகுடைய அயோத்தி நகரமானது தோன்ற;* **நன்மதிக் கிழவர் தம்மை நோக்கிய ஞானமூர்த்தி** - *நல்ல அறிவாற் சிறந்த துணைவர்களைப் பார்த்த ஞான வடிவினனாய இராமபிரான்;* **சொல் மதித்து ஒருவராலும் சொலப்படா அயோத்தி தோன்றிற்று என்னலும்** - *சொல்லால் கருதி இத்தகையது என்று ஒருவராலும் சொல்ல இயலாத அயோத்தி மாநகரம் தோன்றியது என்று சொல்லிய அளவிலே;* **கரங்கள் கூப்பி எழுந்தனர் இறைஞ்சி நின்றார்** - *அனைவரும் கைகளைத் தலைமேல் குவித்து எழுந்து வணங்கி நின்றார்கள்.*

*இராமபிரான் அரசு வீற்றிருக்கும் திருநகர் ஆதலின் அதுவே தாம் வழிபடும் திருக்கோயில் எனக்கருதிக் கண்ட மாத்திரத்தே கைகுவித்து எழுந்து வணங்கினர் என்க.*

## *புட்பக விமானத்தின் வருகை*

**கலி விருத்தம்**

***10256. அன்னது ஓர் அளவையின், விசும்பின் ஆயிரம்***
***துன் இருங் கதிரவர் தோன்றினார் என,***
***பொன் அணி புட்பகப் பொரு இல் மானமும்,***
***மன்னவர்க்கு அரசனும், வந்து தோன்றினார்.***

**அன்னது ஓர் அளவையின்** - *அந்த சமயத்தில்;* **விசும்பின் துன் இருங்கதிரவர் ஆயிரம் தோன்றினார் என** - *ஆகாயத்தில் நெருங்கிய பெரிய சூரியர் ஆயிரவர் தோன்றினார்கள் என்று சொல்லும்படி;*

**பொன் அணி புட்பகப் பொருஇல் மானமும்** - *பொன்னால் அழகு பெற்ற புட்பகம் என்னும் பெயருடைய ஒப்பற்ற விமானமும்;* **மன்னவர்க்கு அரசனும்** - *அரசர்க்கரசனாகிய சக்கரவர்த்தி இராமபிரானும்;* **வந்து தோன்றினார்** - *வந்து அநுமன் கண்காணத் தோன்றினர்.*

*'தோன்றினார்' என்னும் வினைமுற்று 'புட்பக விமானமும் மன்னவர்க்கு அரசனும்' என்ற இரண்டையும் தலைமைப் பொருட்கு வினை கொடுப்பவே தலைமையில் பொருளும் முடிந்தன ஆவதோர் முறை பற்றி இயைத்தது என்க.*

*அனுமன் பரதனுக்குக் காட்டிக் கூறுதல்*

***10257. 'அண்ணலே! காண்டியால் - அலர்ந்த தாமரைக்***
***கண்ணனும், வானரக் கடலும், கற்புடைப்***
***பெண் அருங் கலமும், நின் பின்பு தோன்றிய***
***வண்ண வில் குமரனும், வருகின்றார்களை.***

**அண்ணலே** - பரதனே!; **அலர்ந்த தாமரைக் கண்ணனும்** - அன்றலர்ந்த செந்தாமரை மலர் போலும் கண்களையுடையவனான இராமபிரானும்; **வானரக் கடலும்** - வானர சேனைச் சமுத்திரமும்; **கற்புடைப் பெண் அருங்கலமும்** - கற்பிற் சிறந்த பெண்டிர்க்கு அணிகலமாய சீதாபிராட்டியும்; **நின்பின்பு தோன்றிய வண்ணவில் குமாரனும்** - உனக்குப் பின்னால் பிறந்த அழகிய வில் ஏந்திய இலக்குவனும்; **வருகின்றார்களை காண்டி** - என இவர்கள் வந்து கொண்டிருப்பவர்களைப் பார்ப்பாயாக.

வானரக் கடலை இடையே கூறியது, அதன் ஆர்ப்பொலி கேளாமையால் முன்பு பரதன் இராமனது வருகையை ஐயுற்றான் ஆதலின் என்க. ஆல் - அசை.

***10258. 'ஏழ் - இரண்டு ஆகிய உலகம் ஏறினும்***
***பாழ் புறம் கிடப்பது, படி இன்றாயது, ஓர்***
***சூழ் ஒளி மானத்துத் தோன்றுகின்றனன்***
***ஊழியான்' என்று கொண்டு, உணர்த்தும் காலையே.***

**ஊழியான்** - யுக முடிவுக் காலத்தும் நிலை பெற்றுள்ளவனாகிய இராமபிரான்; **ஏழ் இரண்டு ஆகிய உலகம் ஏறினும்** - பதினான்கு உலகங்களிலுள்ள அத்தனையும் தன்மேல் ஏறினாலும்; **புறம் பாழ் கிடப்பது** - புறத்தே வெற்றிடம் உள்ள தாயிருப்பதும்; **படி இன்றாயது** - தனக்குச் சமானம் இல்லாததும் ஆகிய; **ஓர் சூழ் ஒளி மானத்துத் தோன்றுகின்றனன்** - ஒப்பற்ற ஒளி சுற்றிய விமானத்தில் காணப்படுகின்றான்; **என்று கொண்டு உணர்த்தும் காலை** - என்றிவ்வாறு (அநுமன் பரதனுக்கு) தெளிவிக்கும் சமயத்தில்; தொடரும்.

ஏ. அசை.

***10259. பொன் ஒளிர் மேருவின் பொதும்பில் புக்கது ஓர்***
***மின் ஒளிர் மேகம்போல் வீரன் தோன்றலும்,***
***அந் நகர் ஆர்த்த பேர் ஆர்ப்பு, இராவணன்,***
***தென் நகர்க்கு அப் புறத்து அளவும் சென்றதால்.***

**பொன் ஒளிர் மேருவின் பொதும்பில் புக்கது ஓர் மின் ஒளிர் மேகம் போல் வீரன் தோன்றலும்** - *பொன்மயமாக விளங்குகின்ற மேருமலையின் குகைக்குள் நுழைந்த ஒரு மின்னல் விளங்கும் கருமேகம் போல இராமபிரான் காணப்பட்ட உடனே;* **அந்நகர் ஆர்த்த பேர் ஆர்ப்பு** - *அந்த அயோத்தி நகரம் ஆரவாரித்த பேரோசை;* **இராவணன் தென் நகர்க்கு அப்புறத்து அளவும் சென்றது** - *இராவணனது தெற்கே உள்ள இலங்கை நகருக்கு அப்பாலும் சென்று ஒலித்தது.*

*ஆல் அசை.*

*பரதன் இராமனைக் காணல்*

***10260. ஊனுடை யாக்கை விட்டு உண்மை வேண்டிய***
***வானுடைத் தந்தையார் வரவு கண்டென,***
***கானிடைப் போகிய கமலக்கண்ணனை,***
***தானுடை உயிரினை, தம்பி நோக்கினான்.***

**கானிடைப் போகிய கமலக் கண்ணனை** - *காட்டிற்குச் சென்ற தாமரை மலர் போன்ற கண்களை உடைய இராமனை;* **தானுடை உயிரினை** - *தன்னுடைய உயிராக உள்ளவனை;* **தம்பி** - *அவன் தம்பியாகிய பரதன்;* **ஊனுடை யாக்கை விட்டு உண்மை வேண்டிய வானுடைத் தந்தையார் வரவு கண்டென நோக்கினான்** - *ஊன் பொதிந்த உடம்பைப் போகவிட்டு சத்தியத்தை விரும்பி வானுலகு சென்ற தசரத சக்கரவர்த்தியாகிய தன் தந்தையார் திரும்பி வருவது கண்டாற் போலப் பார்த்தான்.*

*"வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்" (கம்ப. 4018) என்றதனை ஈண்டுக் கருதுக. முன்னர் 'இறந்தனன் தாதையை எதிர்கண் டென்னவே" (கம்ப. 2427) என்று பரதன் இராமனைச் சந்தித்தது பற்றிக் கூறியதும் நினைக்கத்தகும்.*

***10261. கெட்ட வான் பொருள் வந்து கிடைப்ப, முன்பு தாம்***
***பட்ட வான் படர் ஒழிந்தவரின் பையுள் நோய்***
***சுட்டவன், மானவன் - தொழுதல் உன்னியே,***
***விட்டனன் மாருதி கரத்தை, மேன்மையான்.***

**மேன்மையான்** - *சிறந்த குணங்களுக்கு இருப்பிடமானவனாகிய பரதன்;* **முன்பு தாம் பட்ட வான்படர்** - *ஒருவர் தாம் முன்பு அடைந்த மிகப் பெரிய துன்பம்;* **கெட்டவான் பொருள் வந்து கிடைப்ப** - *தொலைத்து விட்ட சிறந்த பொருள் மீண்டும் கிடைத்துவிட அதனால்;* **ஒழிந்தவரின்** - *நீங்கப் பெற்றவரைப் போல;* **பையுள் நோய் சுட்டவன்** - *துன்ப நோயைத் தொலைத்தவனாய்;* **மானவன்**

**தொழுதல் உன்னி** - *இராமனை வணங்கக் கருதி;* **மாருதி கரத்தை விட்டனன்** - *இதுவரை பிடித்திருந்த அனுமனது கைகளை இப்போது பிடி நெகிழ விட்டான்.*

*பரதன் அநுமன் கையைப் பற்றி வந்ததாக வான்மீகம் கூறவில்லை. கம்பரது கற்பனை இது. துன்பத்திற்குத் துணையாவாரைப் பற்றி வருதல் உலகியல்பு ஆதலின்.*

***10262. அக் கணத்து அனுமனும் அவண் நின்று ஏகி, அத்***
***திக்குறு மானத்தைச் செல்வன் எய்தி, அச்***
***சக்கரத்து அண்ணலைத் தாழ்ந்து முன் நின்றான்;***
***உக்கு உறு கண்ண நீர் ஒழுகும் மார்பினான்.***

**அக்கணத்து** - *(பரதன் கை நெகிழ்ந்த) அவ்வளவில்;* **அநுமனும் அவண் நின்று ஏகி** - *அநுமனும் அங்கிருந்து சென்று;* **அத்திக்குறு மானத்தைச் செல்வன் எய்தி** - *அந்த திசையளாவிப் பரந்த புட்பக விமானத்தை முறையாக அடைந்து;* **உக்கு உறு கண்ண நீர் ஒழுகும் மார்பினான்** - *சிந்தி விழுகின்ற கண்ணீர் ஒழுகப் பெற்ற மார்பை உடையவனாய்;* **சக்கரத்து அண்ணலைத் தாழ்ந்து முன் நின்றான்** - *இராமபிரானை வணங்கி முன்னே நின்றான்.*

***10263. 'உருப்பு அவிர் கனலிடை ஒளிக்கலுற்ற அப்***
***பொருப்பு அவிர் தோளனைப் பொருந்தி, நாயினேன்,***
***திருப் பொலி மார்ப! நின் வரவு செப்பினேன்;***
***இருப்பன ஆயின, உலகம் யாவையும்.***

**திருப்பொலி மார்ப!** - *திருமகள் தங்கிய மார்பை உடையவனே!;* **நாயினேன்** - *அடியேன்;* **உருப்பு அவிர் கனலிடை ஒளிக்கல் உற்ற அப் பொருப்பு அவிர் தோளனைப் பொருந்தி** - *வெப்பம் விளங்கும் நெருப்பின்கண் விழுந்து உயிர் துறக்கலுற்ற அந்த மலைபோல் விளங்கும் தோள் உடைய பரதனைச் சென்றடைந்து;* **நின் வரவு செப்பினேன்** - *நின்னுடைய வருகையைச் சொன்னேன்; (அதனால் அவன் நெருப்பின் கண் விழாதொழிந்தான் ஆகவே)* **உலகம் யாவையும் இருப்பன ஆயின** - *உலகம் எல்லாம் உயிர்பெற்று வாழ்வனவாயின.*

***10264. 'தீவினை யாம் பல செய்ய, தீர்வு இலா***
***வீவினை முறை முறை விளைவ, மெய்ம்மையாய்!***
***நீ அவை துடைத்து நின்று, அழிக்க நேர்ந்ததால்;***
***ஆயினும், அன்பினாய்! யாம் செய் மா தவம்.'***

***மெய்ம்மையாய்!*** *- உண்மையின் வடிவமானவனே!;* ***ஆயினும் அன்பினாய்*** *- தாயைக் காட்டிலும் பேரன்புடையவனே!;* ***யாம் பல தீவினை செய்ய*** *- நாங்கள் பல தீய செயல்களைச் செய்ய;* ***தீர்வு இலா வீவினை முறை முறை விளைவ*** *- அச்செயல்கள் நீங்காமல் கெடுதிகளை முறை முறையாகத் தோற்றுவிப்பனவாயின;* ***நீ அவை துடைத்து நின்று அழிக்க நேர்ந்தது*** *- அனுமனாகிய நீ அத்தீமைகளை அடியோடு அழித்துப் போக்கும்படி ஆகியது;* ***யாம் செய் மாதவம்*** *- நாங்கள் செய்த புண்ணியப் பயனாலே ஆகும். (தொடரும்)*

*"தீயவை செய்தார் கெடுதல் நிழல் தன்னை, வீயாது அடி உறைந்தற்று" என்னும் குறள் (208) பல தீவினைசெய்ய தீர்வு இலா வீவினை முறை முறை விளைவ" என்னும் அடிகளில் அமைந்திருத்தல் காண்க. ஆல் - அசை.*

***10265. என்று உரைத்து, அனுமனை இறுகப் புல்லினான்;***
***ஒன்று உரைத்து இறுப்பது என், உனக்கும்,***
***எந்தைக்கும்,***
***இன் துணைத் தம்பிக்கும், யாய்க்கும்?' என்றனன் -***
***குன்று இணைத்தன உயர் குவவுத் தோளினான்.***

***என்று உரைத்து*** *- என்று இவ்வாறு கூறி;* ***குன்று இணைத்தன உயர் குவவுத் தோளினான்*** *- இரண்டு குன்றுகள் நெருங்கினாற் போன்ற உயர்ந்து திரண்ட தோளினை உடைய இராமன்;* ***அனுமனை இறுகப் புல்லினான்*** *- அனுமனை நன்கு தழுவி;* ***உனக்கும் எந்தைக்கும் இன்துணைத் தம்பிக்கும் யாய்க்கும்*** *- அனுமனாகிய உனக்கும், சத்திய வாக்கினராகிய தசரத சக்கரவர்த்திக்கும் என்னை உடன் பிரியாத இனிய துணையாகிய இலக்குவனுக்கும் தாயாகிய கோசலைக்கும்;* ***ஒன்று உரைத்து இறுப்பது என்*** *- நன்றியாக ஒரு வார்த்தை சொல்லி முடிப்பது எவ்வாறு இயலும்? என்றனன்;*

*தம்பி என்பது பரதன் என்பாரும் உளர் - இன்துணைத் தம்பி என்பது இலக்குவனைக் குறித்தலே சிறந்ததாம்.*

***10266. ஈடுறு வான் துணை இராமன் சேவடி***
***சூடிய சென்னியன், தொழுத கையினன்,***
***ஊடு உயிர் உண்டு என உலர்ந்த யாக்கையன்,***
***பாடு உறு பெரும் புகழ்ப் பரதன் தோன்றினான்.***

***பாடு உறு பெரும் புகழ்ப் பரதன்*** *- பெருமை பொருந்திய சிறந்த புகழை உடைய பரதன்;* ***ஈடு உறு வான் துணை இராமன் சேவடி*** *- தனக்குத்தானே சமானமாய சிறந்த துணையாக உள்ள இராமன் திருவடி நிலைகளை;* ***சூடிய சென்னியன்*** *- சென்னி மேல் அணிந்து கொண்டவனாய்;* ***தொழுத கையினன்*** *- கைகளால் வணங்கிக்*

*கொண்டு;* ***ஊடு உயிர் உண்டு என உலர்ந்த யாக்கையன்*** *- உள்ளே உயிரும் இருக்கிறது என்று கண்டார் கருதலாம்படி வற்றிப் போன உடம்புடையவனாகி;* ***தோன்றினான்*** *- (இராமன முன்னாலே) வந்தான்.*

*இராமன்பால் முன்பு பெற்ற பாதுகைகளைத் தலை மேற் சூடி வந்தான் என்பதாகும்.*

### *இராமன் பரதனைக் கண்டு மகிழ்தல்*

***10267. தோன்றிய பரதனைத் தொழுது, தொல் அறச்***
***சான்று என நின்றவன், 'இனைய தம்பியை,***
***வான் தொடர் பேர் அரசு ஆண்ட மன்னனை,***
***ஈன்றவள் பகைஞனை, காண்டி ஈண்டு' எனா,***

***தொல் அறச்சான்று என நின்றவன்*** *- பழமையான அறத்துக்குச் சாட்சியாக உள்ளவனாகிய அநுமான்;* ***தோன்றிய பரதனைத் தொழுது*** *- அங்கே வந்த பரதனை வணங்கி (இராமனுக்கு);* ***இனைய தம்பியை*** *- இத்தகைய உடன்பிறப்பை;* ***வான் தொடர் பேரரசு ஆண்ட மன்னனை*** *- மிக உயர்ந்த பாரம்பரியம் உள்ள பெரிய சூரிய குல ஆட்சி செய்த அரசனை;* ***ஈன்றவள் பகைஞனை*** *- பெற்ற தாயாகிய கைகேயிக்கு எதிரியாக இருந்தவனை;* ***ஈண்டு காண்டி*** *- இங்கே காண்பாயாக;* ***எனா*** *- என்று; தொடரும்*

***10268. காட்டினன் மாருதி; கண்ணின் கண்ட அத்***
***தோட்டு அலர் தெரியலான் நிலைமை சொல்லுங்கால்,***
***ஓட்டிய மானத்துள் உயிரின் தந்தையார்***
***கூட்டு உருக் கண்டன்ன தன்மை கூடினான்.***

***மாருதி காட்டினன்*** *- அநுமன் காட்டினான்;* ***கண்ணின் கண்ட அத் தோட்டலர் தெரியலான் நிலைமை சொல்லுங்கால்*** *- கண்ணாலே பரதனைப் பார்த்த அந்த இதழ் மலர்ந்த மாலை அணிந்த இராமனது தன்மையைத் தெரியச் சொல்லுவோமானால்;* ***ஒட்டிய மானத்துள்*** *- வானின்றிழிந்து வந்த விமானத்தில்;* ***உயிரின் தந்தையார் கூட்டு உரு*** *- உயிர் போலச் சிறந்த தன் தந்தையாகிய தசரத சக்கரவர்த்தியின் பொருந்திய வடிவத்தை;* ***கண்டன்ன தன்மை கூடினான்*** *- இலங்கையில் இராவணவதத்தின்பின் கண்டது போன்ற தன்மையை அடையப் பெற்றான்.*

*பரதனைத் தந்தையாக இராமன் காணவும், இராமனைத் தந்தையாகப் பரதன் காணவும் இக்காட்சி அமைந்து ஒருவர் ஒருவரிற் புகுந்தாற் போன்று அமைந்து நலம் செய்கிறது.*

### *புட்பக விமானம் கீழ் இறங்குதல்*

***10269. ஆனது ஓர் அளவையின், அமரர்கோனொடும்***
***வானவர் திரு நகர் வருவது ஆம் என,***
***மேல் நிறை வானவர் வீசும் பூவொடும்***
***தான் உயர் புட்பகம் நிலத்தைச் சார்ந்ததால்.***

***தான் உயர் புட்பகம்*** - *மிக உயர்ந்த புட்பக விமானமானது;* ***ஆனது ஓர் அளவையின்*** - *அப்படிப்பட்ட நேரத்திலே;* ***வானவர் திருநகர் அமரர் கோனொடும் வருவது ஆம் என*** - *தேவர் தலை நகராய அமராவதி இந்திரனோடு கீழிறங்கி வருவதுபோல என்று சொல்லும்படி;* ***மேல் நிறை வானவர் வீசும் பூவொடும்*** - *விண்ணில் நிறைந்த விளங்கும் தேவர்கள் தூவுகின்ற மலர்களொடும்;* ***நிலத்தைச் சார்ந்தது*** - *நிலத்திடத்தை வந்தடைந்தது.*

*ஆல் - அசை.*

### *இராமன் வருகையால் அனைவரும் உற்ற நிலை*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

***10270. தாயருக்கு அன்று சார்ந்த கன்று எனும் தகையன்***
***ஆனான்;***
***மாயையின் பிரிந்தோர்க்கு எல்லாம் மனோலயம்***
***வந்தது ஒத்தான்;***
***ஆய் இளையார்க்குக் கண்ணுள் ஆடு இரும் பாவை***
***ஆனான்;***
***நோய் உறுத்து உலந்த யாக்கைக்கு உயிர்***
***புகுந்தாலும் ஒத்தான்.***

*(இராமன்)* ***தாயருக்கு*** - *தன்னைப் பிரிந்த தாய்மார்களுக்கு;* ***அன்று சார்ந்த கன்று எனும் தகையன் ஆனான்*** - *பிரிந்து உடனே வந்தடைந்த கன்றின் தன்மையை ஒத்தவனாக ஆனான்;* ***மாயையின் பிரிந்தோர்க்கு எல்லாம்*** - *அவித்தையாகிய அஞ்ஞானம் நீங்கிய மெய்ஞ்ஞானிகளுக்கு எல்லாம்;* ***மனோலயம் வந்தது ஒத்தான்*** - *மனம் லயிக்குமிடமாகிய பரப்பிரம்மத்தோடு ஒன்றுபடும் தன்மை வந்து சேர்ந்தாற்போல ஆனான்;* ***ஆய் இளையார்க்குக் கண்ணுள் ஆடு இரும்பாவை ஆனான்*** - *தன்*

*பிரிவால் மெலிந்து நுணுகிய பரத சத்துருக்கனராய தம்பிமார்களுக்கு அவர்கள் கண்ணிற் கருமணியாம் பாவையாக ஆனான். (மற்றவர்களுக்கு எல்லாம்)* ***நோய் உறுத்து உலந்த யாக்கைக்கு உயிர் புகுந்தாலும்***

***ஒத்தான்*** - நோய் துன்புறுத்த அதனால் வற்றிப் போன உடம்பிற்குள் மீண்டும் உயிர்வந்து புகுந்தாற் போலும் தன்மையாக ஆனான்.

*'கன்று பிரி காரா' (கம்ப. 2367) என்பது இராமனைப் பிரிந்த தாயர் நிலைக்கு முன்னும் கூறப்பட்டது. 'மாயையின் பிரிந்தார்க்கு' என்பதற்கு மாயையிலிருந்து நீங்கியவர்களுக்கு என்று நீக்கப் பொருள் கூறாமல் 'மாயையால்' என ஏதுப் பொருள் கொண்டு, மாயையால் பிரமத்தை விட்டுப் பிரிந்தவர்கள் மீண்டும் பிரமத்தோடு கூடியது போல் என அத்வைத வேதாந்தப் பொருள் கூறல் மிகவும் பொருந்தும் என்பது என் குருநாதர் மகாவித்துவான் மயிலம், வே. சிவசுப்பிரமணியம் கருத்து. 'மனோலயம்' என்பது மனமற்ற இடம் என்பதாகி பரப்பிரம்ம எனப் பொருள் தந்து 'முத்தி நிலை' குறித்தது. 'ஆய் நுணுக்கம்' " ஆய்தல் ஒய்தல் நிகழ்த்தல் சாய் ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்" என்பது தொல்காப்பியம். (தொல். சொல். 25)*

***10271. எளிவரும் உயிர்கட்கு எல்லாம் ஈன்ற தாய் எதிர்ந்தது ஒத்தான்;***
***அளி வரும் மனத்தோர்க்கு எல்லாம் அரும் பத அமுதம் ஆனான்;***
***ஒளி வரப் பிறந்தது ஒத்தான், உலகினுக்கு; ஒண்கணார்க்குத்***
***தெளிவு அருங் களிப்பு நல்கும் தேம் பிழித் தேறல் ஒத்தான்.***

***எளிவரும் உயிர்கட்கு எல்லாம்*** - எளிமை நிலையடைந்த உயிர்களுக்கு எல்லாம்; ***ஈன்ற தாய் எதிர்ந்தது ஒத்தான்*** - பெற்ற அன்னை வந்து கிடைத்தது போல ஆனான்; ***அளி வரும் மனத்தோர்க்கு எல்லாம் அரும் பத அமுதம் ஆனான்*** - அன்பு பொருந்திய மனம் உடையவர்களுக்கெல்லாம் கிடைத்தற்கரிய தேவர் அமுதம் கிடைத்தாற் போன்றவனாக ஆனான்; ***உலகினுக்கு ஒளி வரப் பிறந்தது ஒத்தான்*** - உலகத்திற்கு இருளை நீக்கி ஒளி தோன்றியது போல ஆனான்; ***ஒண் கணார்க்குத் தெளிவு அருங்களிப்பு நல்கும் தேம்பிழித் தேறல் ஒத்தான்*** - ஒள்ளிய கண்களை உடைய மகளிர்க்குத் தெளிவற்ற மயக்கச்செருக்கு தருகின்ற தேனினது பிழிந்த தெளிவைப் போன்றான். இரங்கத்தகும் நிலை எளிவருதல். தன்னைத் தந்தும் தன் குழந்தையின் எளிமையை நீக்குபவள் தாய் ஆதலன் 'தாய் போன்றான்' என்றார். உலகு என்பது உயர்ந்தோரைக் குறித்தது என்று கொண்டு அத்தகைய முனிவர்களுக்குத் தனது உண்மை வடிவம் மறையாது நன்கு தெரியும்படி 'ஒளிவரப் பிறந்தது' போன்றான் எனலும் ஒன்று. மகளிர் பரவசம் அடைந்தனர் இராமனைக் கண்டு என்க.

***10272. ஆவி அங்கு அவன் அலால் மற்று இன்மையால்,***

***அனையன் நீங்க,***
***காவி அம் கழனி நாடும், நகரமும், கலந்து வாழும்***
***மா இயல் ஒண்கணாரும், மைந்தரும், வள்ளல் எய்த,***
***ஓவியம் உயிர் பெற்றென்ன ஓங்கினர், உணர்வு பெற்றார்.***

***அவன் அலால்*** - *அந்த இராமனையல்லாமல்;* ***அங்கு ஆவி மற்று இன்மையால்*** - *அயோத்தியில் உயிர் வேறு இல்லாமையால்;* ***அனையன் நீங்க*** - *அந்த இராமபிரான் அயோத்தியைப் பிரிந்து காடு செல்ல;* ***காவி அம் கழனி நாடும் நகரமும் கவன்று வாழும் மா இயல் ஒண்கணாரும் மைந்தரும்*** - *குவளை மலர்கள் நிறைந்த வயல்கள் சூழ்ந்த கோசல நாடும் அயோத்தி நகரமும் கவலையால் வாடி வாழ்கின்ற மாவடு ஒத்த கண் உடைய மகளிரும் ஆடவரும்;* ***வள்ளல் எய்த*** - *இராமபிரான் மீண்டு வர;* ***ஓவியம் உயிர் பெற்றன்ன*** - *சித்திரம் உயிர் பெற்று எழுந்தாற்போல;* ***உணர்வு பெற்றார் ஓங்கினர்*** - *அறிவு வரப் பெற்றவர்களாய் இழந்த நலத்தைப் பெற்று உயர்ந்தனர்.*

*இராமன் அயோத்தியர் உயிர் என்பதை முன்னும் (கம்ப. 1380, 1352) கூறியுள்ளார்.*

*10273.* ***சுண்ணமும், சாந்தும், நெய்யும், சுரி வளை முத்தும், பூவும்,***
***எண்ணெயும், கலின மா விலாழியும், எண் இல் யானை***
***வண்ண வார் மதமும், நீரும், மான்மதம் தழுவும் மாதர்***
***கண்ண ஆம் புனலும், ஓடிக் கடலையும் கடந்த அன்றே.***

***சுண்ணமும்*** - *வாசப் பொடியும்;* ***சாந்தும்*** - *சந்தனமும்;* ***நெய்யும்*** - *வாச நெய்யும்;* ***சுரிவளை முத்தும்*** - *வளைந்த சங்கீன்ற முத்தும்;* ***பூவும்- எண்ணெயும் - கலின மா விலாழியும்*** - *சேணம் பூட்டப் பெற்ற குதிரைகளின் நுரையும்;* ***எண் இல் யானை வண்ண வார் மதமும்*** - *கணக்கற்ற யானைகளின் நிறமமைந்த ஒழுக்காகிய மதநீரும்;* ***நீரும் - மான்மதம் தழுவும் மாதர் கண்ண ஆம் புனலும்*** - *கஸ்தூரி பூசிக்குளிக்கும் மகளிரது உடலில் வழிந்தோடும் நீரும்;* ***ஓடிக் கடலையும் கடந்த*** - *பெருக்கெடுத்துச் சென்று கடலையும் தாண்டிவிட்டன;*

*அன்று, ஏ - அசை. அயோத்தி நகர மக்களின் மகிழ்ச்சிப் பெருக்கைப் புலப்படுத்தினர்.*

## *இராமன் வசிட்டனை வணங்கல்*

*10274.* ***அனைவரும் அனையர் ஆகி அடைந்துழி, அருளின் வேலை -***
***தனை இனிது அளித்த தாயர் மூவரும், தம்பிமாரும்***
***புனையும் நூல் முனிவன்தானும், பொன் அணி விமானத்து ஏற,***
***வனை கழல் குரிசில் முந்தி, மா தவன் தாளில் வீழ்ந்தான்.***

***அனைவரும் அனையர் ஆகி அடைந்துழி*** - *எல்லோரும் அத்தன்மை உடையவர்களாய் மகிழ்ச்சிப் பெருக்கோடு விமானம் நெருங்கிய அளவில்;* ***அருளின் வேலை தனை இனிது அளித்த தாயர் மூவரும்*** - *அருள்கடலாகிய இராமனைப் பெற்ற தாய்மார்கள் மூவரும்;* ***தம்பிமாரும்*** - *பரத சத்துருக்கனன் ஆதியரும்;* ***புனையும் நூல் முனிவன் தானும்*** - *முப்புரிநூல் அணிந்த முனிசிரேஷ்டனான வசிட்டனும்;* ***பொன் அணி விமானத்து ஏற*** - *பொன்னால் அழகு பெற்ற விமானத்தின்கண் ஏற வர;* ***வனைகழல் குரிசில*** - *கட்டிய வீரக்கழலை உடைய இராகவன்;* ***முந்தி*** - *முற்பட்டுச் சென்று;* ***மாதவன் தாளில் வீழ்ந்தான்*** - *வசிட்ட முனிவனது திருவடிகளில் விழுந்து வணங்கினான்.*

*அயோத்தி மதிலுக்குப் புறம்பே கீழிறங்கிய விமானத்தில் அனைவரும் அயோத்தி செல்ல எறினர் என உணர்க.*

*10275.* ***எடுத்தனன் முனிவன், மற்று அவ் இராமனை ஆசி கூறி,***
***அடுத்துள துன்பம் நீங்க, அணைத்து அணைத்து, அன்பு கூர்ந்து,***
***விடுத்துழி, இளைய வீரன் வேதியன் தாளில் வீழ,***
***வடித்த நூல் முனியும் முன்போல், வாழ்த்தினான், ஆசி கூறி.****

***மற்று அவ் இராமனை முனிவன் எடுத்தனன்*** - *அங்கே இந்த இராமனை வசிட்ட முனிவன் தூக்கினான்;* ***அடுத்துள துன்பம் நீங்க ஆசி கூறி*** - *பிரிவினால் உண்டாகிய துன்பம் நீங்கும்படி ஆசீர்வாதம் செய்து;* ***அணைத்து அணைத்து*** - *தழுவி; விடுத்துழி - விடுத்தவுடன்;* ***இளைய வீரன்*** - *இலக்குவன்;* ***வேதியன் தாளில் வீழ*** - *வசிட்டன் திருவடியில் வீழ்ந்து வணங்க;* ***வடித்த நூல் முனியும்*** - *தேர்ந்த சாஸ்திர வல்லுநனான வசிட்டனும்;* ***முன்போல்*** - *இராமனுக்குச் செய்தது போலவே;* ***ஆசி கூறி வாழ்த்தினான்.***

*அடுத்துள துன்பம் வசிட்டனதாகவும் இராமனதாகவும் கொள்ளலாம்.*

*இராமன் தாயரை வணங்கல்*

***10276. கைகயன் தனயை முந்தக் கால் உறப் பணிந்து, மற்றை***
***மொய் குழல் இருவர் தாளும் முறைமையின் வணங்கு செங் கண்***
***ஐயனை, அவர்கள்தாமும் அன்புறத் தழுவி, தம் தம்***
***செய்ய தாமரைக் கணீரால் மஞ்சனத்தொழிலும் செய்தார்.***

***முந்த*** *- முற்பட;* ***கைகயன் தனயை கால் உறப் பணிந்து*** *- கேகயப் தரசன் மகளாகிய கைகேயித் தாயின் திருவடிகளில் நன்கு வணங்கி;* ***மற்றை மொய்குழல் இருவர் தாளும் முறைமையின் வணங்கு*** *- ஏனை நெருங்கிய கூந்தலை உடைய கோசலை, சுமித்திரை, ஆகிய இருவர் திருவடிகளையும் முறையாக வணங்குகின்ற;* ***செங்கண் ஐயனை*** *- சிவந்த கண்களை உடைய இராகவனை;* ***அவர்கள் தாமும் அன்புறத் தழுவி*** *- அத்தாய்மார்களும் அன்பினால் அணைத்து;* ***தம் தம் செய்ய தாமரைக் கண் நீரால் மஞ்சனத் தொழிலும் செய்தார்*** *- தம்முடைய சிவந்த தாமரை மலர் போன்ற கண்களிலிருந்து வருகின்ற கண்ணீரினாலே நீராட்டும் தொழிலையும் செய்தார்கள்.*

*அன்பினால் உண்டாகிய கண்ணீர்ப் பெருக்கால் முழுக்காட்டினர் என்க. கைகேயி அன்னையை முந்துறப் பணிந்தது அவள் சாபம் நீக்குதற்கு என்க. பலராலும் பாதிக்கப்பட்டவள் அவள் ஆதலின் அவள் துன்பம் பெரிதாயிற்று பெரிய பெருமாளுக்கு.*

*சீதையும் இலக்குவனும் வணங்கல்*

***10277. அன்னமும் முன்னர்ச் சொன்ன முறைமையின் அடியில் வீழ்ந்தாள்;***
***தன் நிகர் இலாத வென்றித் தம்பியும் தாயர்தங்கள்***
***பொன் அடித் தலத்தில் வீழ, தாயரும் பொருந்தப் புல்லி,***
***'மன்னவற்கு இளவல் நீயே; வாழி!' என்று ஆசி சொன்னார்.****

***அன்னமும்*** *- சீதையும்;* ***முன்னர்ச் சொன்ன முறைமையின் அடியில் வீழ்ந்தாள்*** *- இராமன் வணங்கியதாகச் சொல்லிய முறைப்படியே கைகேயி, கோசலை, சுமித்திரை ஆகிய தாய்மார்கள் திருவடியில் வணங்கினாள்;* ***தன் நிகர் இலாத வென்றித் தம்பியும் தாயர் தங்கள் பொன் அடித் தலத்தில் வீழ*** *- தனக்குச் சமானம் இல்லாத வெற்றியை உடைய தம்பியாகிய இலக்குவனும் தாய்மார்களது*

*பொலிவுற்ற திருவடிகளில் வீழ்ந்து வணங்க;* ***தாயரும் பொருந்தப் புல்லி*** *- தாய்மார்களும் நன்கு தழுவி;* ***மன்னவற்கு நீயே இளவல் வாழி என்று ஆசி சொன்னார்*** *- இராமனுக்கு நீயே தம்பியாவாய் வாழ்க என்று மங்கலம் உரைத்தார்கள்.*

*பரதன் இராமனை வணங்கல்.*

***10278. சேவடி இரண்டும் அன்பும் அடியுறையாகச் சேர்த்தி,***
***பூ அடி பணிந்து வீழ்ந்த பரதனைப் பொருமி விம்மி,***
***நாவிடை உரைப்பது ஒன்றும் உணர்ந்திலன், நின்ற நம்பி,***
***ஆவியும் உடலும் ஒன்றத் தழுவினன், அழுது சோர்வான்.***

***நின்ற நம்பி*** *- அங்கு நின்ற ஆடவர் திலகனாய இராகவன்;* ***சேவடி இரண்டும் அன்பும் அடியுறையாகச் சேர்த்தி*** *- திருவடி நிலையாகிய பாதுகை இரண்டையும் தன் உள்ளத்து அன்பையும் அவ்விராகவனது திருவடிக்கீழ் தங்குவதாகச் சேர்ப்பித்து;* ***பூ அடி பணிந்து வீழ்ந்த பரதனை*** *- தன் மலர் போன்ற அடிகளில் வணங்கி விழுந்த பரதனைப் பார்த்து;* ***பொருமி விம்மி*** *- புலம்பி விம்மி;* ***நாவிடை உரைப்பது ஒன்றும் உணர்ந்திலன்*** *- தன் நாவால் சொல்லத்தகும் வாசகம் ஒன்றும் உணராதவனாய்;* ***அழுது சோர்வான்*** *- புலம்பிச் சோர்ந்து;* ***ஆலியும் உடலும் ஒன்ற தழுவினன்*** *- உயிரும் உடலும் ஒன்றாகுமாறு தழுவினான்.*

*முன்பு பெற்ற பாதுகையை இப்போது அன்போடு முன் வைத்து வணங்கினான்.*

***10279. தழுவினன் நின்றகாலை, தத்தி வீழ் அருவி சாலும்***
***விழு மலர்க் கண்ணீர் மூரி வெள்ளத்தால், முருகின் செவ்வி***
***வழுவுற, பின்னி மூசு மாசுண்ட சடையின் மாலை***
***கழுவினன், உச்சி மோந்து, கன்று காண் கறவை அன்னான்.***

***தழுவினன் நின்ற காலை*** *- இப்படி இராமன் பரதனைத் தழுவியபோது;* ***தத்தி வீழ் அருவி காலும் விழு மலர்க் கண்ணீர் மூரி வெள்ளத்தால்*** *- தவழ்ந்து வருகின்ற அருவி போன்ற சிறந்த மலர் போன்ற கண்களிலிருந்து பெருகிய வலிய நீர்ப் பெருக்கினால்;* ***முருகின் செவ்வி வழுவுற*** *- இளமையழகின் சிறப்பு குலையும்படி;* ***பின்னி*** *- முறுக்கி;* ***மூசு மாசு உண்ட சடையின் மாலை*** *- மொய்க்கின்ற அழுக்கு தின்ற சடைக்கற்றையை;* ***கழுவினன்*** *- கழுவியவனாய்;* ***உச்சி மோந்து*** *- பரதனது உச்சியை*

*முகர்ந்து;* ***கன்று காண் கறவை அன்னான்*** *- தன் கன்றைக் கண்ட பசுவைப் போல ஆயினன்.*

### *இலக்குவன் பரதனை வணங்கல்*

***10280. அனையது ஓர் காலத்து, அம் பொன் சடை முடி அடியது ஆக,***
***கனை கழல் அமரர் கோமாற் கட்டவன் - படுத்த காளை,***
***துனை பரி, கரி, தேர், ஊர்தி என்று இவை பிறவும், தோலின்***
***வினை உறு செருப்புக்கு ஈந்தான் விரை மலர்த் தாளின் வீழ்ந்தான்.***

***அனையது ஓர் காலத்து*** *- அந்த நேரத்தில்;* ***கனை கழல் அமரர் கோமான் கட்டவன் படுத்த காலை*** *- செருக்கிய வீரக்கழல் அணிந்த இந்திரனது வென்றவனை (இந்திரசித்துவை) அழித்தொழித்த வீரனாகிய இலக்குவன்;* ***அம்பொன் சடைமுடி அடியது ஆக*** *- தனது அழகிய பொன்மயமான சடா மகுடம் பரதனது அடியில் விழும்படி;* ***துனை பரி, கரி, தேர், ஊர்தி என்று இவை பிறவும் தோலின் வினை உறு செருப்புக்கு ஈந்தான்*** *- விரைந்து செல்லும் குதிரை, யானை, தேர், வாகனம என்று இவைகள் எல்லாவற்றையும் ஆளும் தன்மையைத் தோலாற செய்த தொழில் திறம் அமைந்த இராமனது பாத அணிக்குத் தந்தவனாகிய பரதனது;* ***விரை மலர்த்தாளின் வீழ்ந்தான்*** *- மணம் வீசும் மலர் போன்ற திருவடிகளில் விழுந்து வணங்கினான்.*

*பாதுகையை அரசாள வைத்த தன்மையை நயமாகக் குறித்தமை உணர்ந்து இன்புறத் தக்கது.*

***10281. ஊடுறு கமலக் கண்ணீர் திசைதொறும் சிவிறி ஓட,***
***தாள்தொடு தடக் கை ஆரத் தழுவினன் - 'தனிமை நீங்கி,***
***காடு உறைந்து உலைந்த மெய்யோ, கையறு கவலை கூர***
***நாடு உறைந்து உலைந்த மெய்யோ, நைந்தது?' என்று உலகம் நைய.***

*(பரதன், அவனை)* ***ஊடுறு கமலக் கண்ணீர் திசைதொறும் சிவிறி ஓட*** *- தாமரை போன்ற கண்களின் உள்ளே இருந்து பெருகுகின்ற கண்ணீரானது நாலா பக்கங்களிலும் பரந்து சிதறி ஓட;* ***தனிமை நீங்கி காடு உறைந்து உலைந்த மெய்யோ?*** *- இராமனைப் பிரிந்த தனிமையிலிருந்து விடுபட்டு அவனுடனே சென்று காட்டின்கண் அவனோடு தங்கி வருந்திய இலக்குவனது உடம்போ;* ***கையறு கவலை***

***கூர நாடு உறைந்து உலைந்து மெய்யோ*** - செயலற்ற பிரிவுத்துன்பம் மேலும் மேலும் மிகுதலால் அயோத்தி நாட்டு நந்திக் கிராமத்தில் தங்கி உண்பதும் உறங்குவதும் இன்றி வருந்திய பரதனது உடம்போ; ***நைந்தது?*** - எது மிகவும் வருந்தியது; ***என்று உலகம் நைய*** - என்று உலகம் இருவரையும் ஒருசேரப் பார்த்து வருந்தும்படி; ***தாள் தொடு தடக்கை ஆரத் தழுவினன்*** - முழந்தாள் அளவு நீண்ட தன் கைகளால் நன்றாகத் தழுவிக் கொண்டான்.

*பரதன் இலக்குவனைத் தழுவி நின்ற காட்சி கண்டு உலகம் வருந்தியபடி.*

### *சத்துருக்கன் மூவரையும் பணிதல்*

***10282. மூவர்க்கும் இளைய வள்ளல், முடிமிசை முகிழ்த்த கையன்,***
***தேவர்க்கும் தேவன் தாளும், செறி கழல் இளவல் தாளும்,***
***பூவர்க்கும் பொழிந்து வீழ்ந்தான்; எடுத்தனர் பொருந்தப் புல்லி,***
***வாவிக்குள் அன்னம் அன்னாள் மலர் அடித் தலத்து வீழ்ந்தான்.***

***மூவர்க்கும் இளைய வள்ளல்*** - மூவர்க்கும் இளையவனாகிய சத்துருக்கன்; ***முடிமிசை முகிழ்த்த கையன்*** - தலைமேற் கூப்பிய கையுடையவனாய்; ***தேவர்க்கும் தேவன் தாளும்*** - இராமன் திருவடி; ***செறிகழல் இளவல் தாளும்*** - கட்டிய கழல் உடைய இலக்குவன் திருவடி; ***பூவர்க்கம் பொழிந்து வீழ்ந்தான்*** - ஆகியவற்றில் மலர் மழை பொழிந்து விழுந்து வணங்கினான்; ***பொருந்தப் புல்லி எடுத்தனர்*** - அவர்கள் அவனை நன்கு தழுவித் தூக்கினர் (பின்னர் அவன்); ***வாவிக்குள் அன்னம் அன்னாள் மலர் அடித்தலத்து வீழ்ந்தான்*** - பொய்கையில் வாழும் அன்னம் போன்ற சீதையின் மலர் போன்ற திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

### *துணைவர்களை அறிமுகப் படுத்தல்*

***10283. பின் இணைக் குரிசில்தன்னைப் பெருங் கையால் வாங்கி, வீங்கும்***
***தன் இணைத் தோள்கள் ஆரத் தழுவி, அத் தம்பிமாருக்கு,***
***இன் உயிர்த் துணைவர்தம்மைக் காட்டினான்; இருவர் தாளும்,***
***மன் உயிர்க்கு உவமை கூர வந்தவர், வணக்கம் செய்தார்.***

***பின் இணைக் குரிசில் தன்னைப் பெருங்கையால் வாங்கி*** - *தன் தம்பியும் பரதனோடு இணையாக உள்ளவனும் ஆகிய சத்துருக்கனைத் தனது நீண்ட கைகளால எடுத்து;* ***வீங்கும் தன் இணைத் தோள்கள் ஆரத் தழுவி*** - *பருத்த தனது இரண்டாகிய தோள்கள் முழுகும்படி அணைத்து;* ***அத்தம்பிமாருக்கு*** - *அந்த பரத சத்துருக்கனர்களுக்கு;* ***இன் உயிர் துணைவர் தம்மைக் காட்டினான்*** - *இனிய உயிர் போன்ற தனது துணைவர்களாகிய சுக்கிரீவ, வீடணர்களைக் காட்டி அறிமுகம் செய்வித்தான்;* ***மன் உயிர்க்கு உவமை கூர வந்தவர்*** - *உலக உயிர்களுக்கு உவமைச் சிறப்பு உண்டாகும்படி வந்தவர்களாய அவர்கள்;* ***இருவர் தாளும்*** - *பரத சத்துருக்கனர் தாள்களை;* ***வணக்கம் செய்தார்*** - *வணங்கினார்கள்.*

*துணைவர் என்பது இருவரைக் குறித்தது. குகனையன்று. அவன் முன்பே அறிமுகமாதலின்.*

***10284. குரக்கினத்து அரசை, சேயை, குமுதனை, சாம்பன்தன்னை***
***செருக் கிளர் நீலன்தன்னை, மற்றும் அத் திறத்தினோரை,***
***அரக்கருக்கு அரசை, வெவ்வேறு அடைவினின் முதன்மை கூறி,***
***மருக் கமழ் தொடையல் மாலை மார்பினன், பரதன், நின்றான்.****

***மருக்கமழ் தொடையல் மாலை மார்பினன் பரதன்*** - *மணம் வீசும் கட்டமைந்த மாலை அணிந்த மார்பினை உடைய பரதன்;*

***குரக்கினத்து அரசை*** - *சுக்கிரீவனை;* ***சேயை*** - *அங்கதனை;* ***குமுதனை சாம்பன் தன்னை செருக்கிளர் நீலன் தன்னை-; மற்றும் அத்திறத்தோரை*** - *வேறு அத்தகையவர்களை;* ***அரக்கருக்கு அரசை*** - *வீடணனை;* ***வெவ்வேறு அடைவினின்*** - *அவரவர்க்கு உரிய முறைப்படி;* ***முதன்மை கூறி*** - *உபசார வார்த்தைகள் கூறி;* ***நின்றான்.***

*சுமந்திரன் வருதல்*

***10285. மந்திரச் சுற்றத்துள்ளார் தம்மொடும், வயங்கு தானைத்***
***தந்திரத் தலைவரோடும், தமரொடும், தரணி ஆளும்***
***சிந்துரக் களிறு போல்வார் எவரொடும், சேனையோடும்,***

***சுந்தரத்தடந் தோள் வெற்றிச் சுமந்திரன்***
***தோன்றினானால்.****

***சுந்தரத் தடந்தோள் வெற்றிச் சுமந்திரன்*** - *அழகிய அகன்ற தோள்களை உடைய வெற்றியுடைய சுமந்திரன் என்னும் முதல் அமைச்சன்;* ***மந்திரச் சுற்றத்துள்ளார் தம்மொடும்*** - *மந்திராலோசனைச் சபையில் இருத்தற்குரியோர்களோடும்;* ***வயங்கு தானைத் தந்திரத் தலைவரோடும்*** - *விளங்கிய சேனைத் தலைவர்களோடும்;* ***தமரொடும்*** - *ஏனைய சுற்றத்தினரோடும்;* ***தரணி ஆளும் சிந்துரக் களிறு போல்வார் எவரொடும்*** - *உலகை ஆளும் சிந்தூரம் அணிந்த ஆண்யானை போன்ற மன்னர்களோடும்;* ***சேனையோடும் தோன்றினான்.***

*ஆல் - அசை.*

***10286. அழுகையும், உவகைதானும் தனித்தனி அமர் செய்து***
***ஏற,***
***தொழுதனன், எழுந்து விம்மி, சுமந்திரன்***
***நிற்றலோடும்,***
***தழுவினன் இராமன், மற்றைத் தம்பியும் அனைய***
***நீரான்,***
***'வழு இனி உளது அன்று, இந்த மா நிலக்கிழத்திக்கு'***

***என்றான்.****

***சுமந்திரன்-; அழுகையும் உவகை தானும் தனித்தனி அமர் செய்து ஏற*** - *அழுகையும் மகிழ்ச்சியும் தனித்தனியாக ஒன்றோடொன்று போட்டியிட்டு மேலே மிக;* ***எழுந்து விம்மி தொழுதனன் நிற்றலோடும்*** - *நின்று துடித்து வணங்கி நின்ற அளவில்;* ***இராமன் தழுவினன்*** - *இராமன் தழுவினன்;* ***மற்றைத் தம்பியும் அனைய நீரான்*** - *இலக்குவனும் அதுபோலவே தழுவினன் (பின்னர் சுமந்திரன்);* ***இந்த மாநிலக் கிழத்திக்கு*** - *இந்த நிலமகளுக்கு;* ***இனி வழு உளது அன்று என்றான்*** - *இனித்துன்பம் இல்லை என்று மகிழ்ச்சி கூறினான்.*

*இறுதியாக வனத்தில் இராமனைவிட்டு வந்தவனாதலின் மீண்டும் காணப் பெற்றபோது அழுகை உவகையும் போட்டியிடுவனவாக ஆனான் சுமந்திரன்.*

***10287. 'ஏறுக சேனை எல்லாம் விமானமீது' என்று,***
***தன்போல்***
***மாறு இலா வீரன் கூற, வந்துள அனிக வெள்ளம்***
***ஊறு இரும் பரவை வானத்து எழிலியுள்***

***ஒடுங்குமாபோல்***
***ஏறி, மற்று இளைய வீரன் இணை அடி தொழுதது***
***அன்றே.***

***தன் போல் மாறு இலா வீரன்*** *- தனக்கு ஒப்பாக மற்று ஒன்று இல்லாத பெருவீரனாகிய இராமபிரான்;* ***சேனை எல்லாம் விமானம் மீது ஏறுக என்று கூற*** *- எல்லாச் சேனைகளும் விமானத்தின் மேல் ஏறட்டும் என்று கட்டளையிட;* ***வந்துள அனிக வெள்ளம்*** *- வந்த சேனைப் பெருக்கு;* ***ஊறு இரும் பரவை வானத்து எழிலியுள் ஒடுங்குமா போல்*** *- மேலும் மேலும் ஊறுகின்ற கடல் விண்ணில் உள்ள மேகத்துள் ஒடுங்குவதைப் போல;* ***ஏறி*** *- விமானத்தில் ஏறி;* ***இளைய வீரன் இணை அடி தொழுதது*** *- இலக்குவனது திருவடிகளை வணங்கியது.*

*அன்று, ஓ - அசை.*

***10288. 'உரைசெயின், உலகம் உண்டான் மணி அணி***
***உதரம் ஒவ்வா,***
***கரை செயல் அரிய வேதக் குறுமுனி கையும் ஒவ்வா,***
***விரை செறி அலங்கல் மாலைப் புட்பக விமானம்'***
***என்றுஎன்று,***
***உரைசெய்து, வான் உளோர்கள் ஒண் மலர் தூவி***
***ஆர்த்தார்.****

***வான் உளோர்கள்*** *- தேவர்கள்;* ***விரை செறி அலங்கல் மாலைப் புட்பகவிமானம் உரைசெயின்*** *- மணமிக்க மலர் மாலை அணிந்த இந்த புட்பக விமானம் பற்றிச் சொல்லப் புக்கால்;* ***உலகம் உண்டான் மணி அணி உதரம் ஒவ்வா*** *- உலகம் உண்டவனாகிய திருமாலின் அழகு பொருந்திய திருவயிறும் உவமையாகாது;* ***கரைசெயல் அரிய வேதக் குறுமுனி கையும் ஒவ்வா*** *- கரை காண முடியாத வேதங்களை உணர்ந்த அகத்திய முனிவனது (கடலை அடக்கிய) கையும் உவமையாகாது;* ***என்று என்று*** *- என்று கூறி;* ***ஒண் மலர் தூவி ஆர்த்தார்*** *- ஒள்ளிய மலர்களைத் தூவி ஆரவாரம் செய்தனர்.*

*உலகை அடக்கிய வயிறும், கடலை அடக்கிய கையும் புட்பகத்துக்கு ஒவ்வா என்றதாம்.*

***10289. அசனியின் குழுவும், ஆழி ஏழும் ஒத்து***
***ஆர்த்ததென்ன,***
***விசையுறு முரசும், வேதத்து ஓதையும், விளி கொள்***
***சங்கும்,***

***இசையுறு குரலும், ஏத்தின் அரவமும், எழுந்து பொங்கி,***
***திசை உறச் சென்று, வானோர் அந்தரத்து ஒலியின் தீர்ந்த.***

***விசையுறு முரசும்*** *- வேகமாக அடிக்கப் பெறும் முரசு ஓசையும்;* ***வேதத்து ஓதையும்*** *- வேத ஓசையும்;* ***விளிகொள் சங்கும்*** *- சங்க நாதமும்;* ***இசை உறுகுரலும்*** *- இராகம் கூடிய வாய்ப் பாட்டொலியும்;* ***ஏத்தின் அரவமும்*** *- தோத்திர முழக்கொலியும்;* ***எழுந்து பொங்கி*** *- மேலே புறப்பட்டுச் சென்று;* ***திசை உறச் சென்று*** *- நாலா பக்கமும் அளாவி;* ***வானோர் அந்தரத்து ஒலியின்*** *- தேவர்கள் மகிழ்ச்சிப் பெருக்கால் மேலே செய்யும் ஆரவாரத்தின் கண்;* ***தீர்ந்த*** *- ஒலியடங்கிப் போயின;*

*தேவர்கள் மகிழ்ச்சி ஆரவாரத்தின் மிகுதி உணர்த்தியது.*

# திருமுடி சூட்டு படலம்

இராமபிரான் இலங்கையிலிருந்து மீண்டு அயோத்தியை அடைந்து திருமகுடம் தரித்துக் கொண்டதைக் கூறும் படலம். திருவபிடேகப் படலம் எனவும் பிரதிகளில் காணப்படுகிறது.

*இராமன் தம்பியரோடு அரச கோலம் கொள்ளுதல்*

***10290. நம்பியும் பரதனோடு நந்தியம்பதியை நண்ணி,***
***வம்பு இயல் சடையும் மாற்றி, மயிர் வினை முற்றி, மற்றைத்***
***தம்பியரோடு தானும் தண் புனல் படிந்த பின்னர்,***
***உம்பரும் உவகை கூர, ஒப்பனை ஒப்பச் செய்தார்.***

**நம்பியும்** - இராமபிரானும்; **பரதனோடு** - (தவமிருந்த); **பரதனோடும், மற்றைத் தம்பியரோடு** - மற்றைத் தம்பியர்களோடும் **தானும்** - தானுமாக; **நந்தி அம்பதியை நண்ணி** - நந்திக் கிராமமாகிய அழகிய நகரத்தை அடைந்து; **வம்பு இயல் சடையும் மாற்றி** - நறுமணம் கமழ்கின்ற சடையை நீக்கி; **மயிர்வினை முற்றி** - மயிர் கழிக்கும் செயலை முடித்து; **தண்புனல் படிந்த பின்னர்** - குளிர்ந்த நீரில் குளித்த பிறகு; **உம்பரும் உவகை கூர** - தேவர்களும் மகிழ்ச்சி கொள்ளுமாறு; **ஒப்பனை ஒப்பச் செய்தார்** - அழகு நலன்களைப் பொருந்துமாறு செய்யலாயினர்.

***10291. நிருதியின் திசையில் தோன்றும் நந்தியம்பதியை நீங்கி,***
***குருதி கொப்பளிக்கும் வேலோன் கொடி மதில் அயோத்தி மேவ,***
***சுருதி ஒத்தனைய வெள்ளைத் துரகதக் குலங்கள் பூண்டு,***
***பருதி ஒத்து இலங்கும் பைம் பூண் பரு மணித் தேரின் ஆனான்.****

**குருதி கொப்பளிக்கும் வேலோன்** - இரத்தம் பொழியும் வேற்படையாளனாகிய இராமன்; **நிருதியின் திசையில் தோன்றும்** தென் மேற்கு திசையில் தோன்றுகின்ற; **நந்தியம்பதியை நீங்கி** - நந்திக் கிராமத்தினின்றும் புறப்பட்டு; **கொடி மதில் அயோத்தி மேவ** - கொடிகளால் அழகு பெற்றிருக்கும் மதில் சூழ்ந்த அயோத்தி நகரை அடையும் பொருட்டு; **சுருதி ஒத்தனைய** - வேதங்களுக்கு நிகரான; **வெள்ளை துரகதக் குலங்கள் பூண்டு** - வெண்ணிறப் புரவிகள் பூட்டப் பெற்ற; **பருதி ஒத்து இலங்கும்** - கதிரவனைப்

*போல் ஒளி வீசும்;* ***பைம்பூண் பருமணித் தேரின் ஆனான்*** *- பசும்பொன்னால் புனையப் பெற்ற பெருமணிகளால் அலங்கரிக்கப்பட்ட தேரின் மீது ஏறினான்.*

*நிருதி - தென்மேற்குத் திசைக் காவலன்.*

*சத்துவம் நிறைந்தவை வேதங்கள். சத்துவம் வெண்ணிறம் என்பர். வெள்ளைப் புரவிகட்கு அதனால் வேதங்களை ஒப்பிட்டார்.*

### *தம்பிமாருடன் இராமன் அயோத்தி புகுதல்*

***10292. ஊழியின் இறுதி காணும் வலியினது உயர் பொன் தேரின்,***
***ஏழ் உயர் மதமா அன்ன இலக்குவன் கவிகை ஏந்த,***
***பாழிய மற்றைத் தம்பி பால்நிறக் கவரி பற்ற,***
***பூழியை அடக்கும் கண்ணீர்ப் பரதன் கோல் கொள்ளப் போனான்.***

***ஊழியின் இறுதி காணும்*** *- யுக முடிவின் எல்லை காணவல்ல;* ***வலியினது*** *- உறுதி மிக்கதான;* ***உயர்பொன் தேரின்*** *- உயர்ந்த பொன்னாலாகிய தேரில்;* ***ஏழ் உயர் மதமா அன்ன*** *- ஏழு முழ உயரமுள்ள மதம் செறிந்த யானை போன்ற;* ***இலக்குவன்*** *- (இளையவனாகிய) இலக்குவன்;* ***கவிகை ஏந்த*** *- வெண் கொற்றக் குடையைப் பிடித்து நிற்கவும்;* ***பாழிய மற்றைத் தம்பி*** *- வல்லமை மிக்க இன்னொரு தம்பி (சத்துருக்கன்);* ***பால் நிறக் கவரி பற்ற*** *- வெண்ணிறமான சாமரையை ஏந்தவும்;* ***பூழியை அடக்கும் கண்ணீர்ப் பரதன்*** *- இந்தப் புவியையே மறைக்கவல்ல உவகைக் கண்ணீர் சிந்தும் பரதன்;* ***கோல் கொள்ள*** *- குதிரைகளை ஏவும் கோலைக் கொண்டு செலுத்தவும்;* ***போனான்*** *- (இராமபிரான்) சென்றான்.*

*ஏழு முழம் உயர்ந்திருத்தல் பட்டத்து யானையின் சிறப்பு. புழுதி என்பது மண்ணாதலின் பூமிஎனப் பொருள் பெற்றது.*

### *வீடணன் முதலியோர் செல்லுதல்*

***10293. வீடணக் குரிசில், மற்றை வெங் கதிர்ச் சிறுவன், வெற்றிக்***
***கோடு அணை குன்றம் ஏறி, கொண்டல் தேர் மருங்கு செல்ல,***
***தோடு அணை மவுலிச் செங் கண் வாலி சேய் தூசி செல்ல,***
***சேடனைப் பொருவும் வீர மாருதி பின்பு சென்றான்.****

***வீடணக் குரிசில்*** - வீடணனாகிய சிறப்பு மிக்கவனும்; ***மற்றை*** - பின்னும்; ***வெங்கதிர்ச் சிறுவன்*** - வெப்பம் உமிழும் கதிரவன் மைந்தன் சுக்கிரீவனும்; ***வெற்றிக்கோடு அணை*** - (போரில்) வெற்றி தேடித் தரும் கொம்புகளை உடைய; ***குன்றம் ஏறி*** - மலை போன்ற யானை மீது இவர்ந்து; ***கொண்டல் தேர் மருங்கு செல்ல*** - முகில் வண்ணனான இராமபிரானின் தேருக்கு அருகில் செல்லவும்; ***தோடு அணை மவுலி*** - மலர் செறிந்த மகுடம் சூடிய; ***செங்கண் வாலி சேய்*** - சிவந்த கண்களை உடைய வாலியின் மைந்தன் அங்கதன்; ***தூசி செல்ல*** - முன்னணியிற் செல்லவும்; ***சேடனைப் பொருவும்*** - ஆதிசேடனுக்கு ஒப்பான வீர மாருதி - வீரம் செறிந்த அனுமன்; ***பின்பு சென்றான்*** - பின்னர்ச் சென்றான்.

*முன்னர் விரிஞ்சனுக்கும் விடை வல்லானுக்கும் உவமித்த அனுமனை இங்கு ஆதிசேடனுக்கு உவமித்தார். அறிவிற் சிறந்தவன் சேடன்.*

***10294. அறுபத்து ஏழ் அமைந்த கோடி யானைமேல்***
***வரிசைக்கு ஆன்ற***
***திறம் உற்ற சிறப்பர் ஆகி, மானுடச் செவ்வி வீரம்***
***பெறுகுற்ற வனப்பர் உச்சி பிறங்கு வெண் குடையர்***
***செச்சை***
***மறு உற்ற அலங்கல் மார்பர், வானரத் தலைவர்***
***போனார்.***

***வரிசைக்கு ஆன்ற திறம் உள்ள*** - தகுதிக்கேற்பக் கூறுபாடு உற்ற; ***சிறப்பர் ஆகி*** - சிறப்பை உடையவராகி; ***மானுடச் செவ்வி*** - மனித வடிவுடன் கூடி; ***வீரம் பெருகுற்ற*** - ஆண்மை பொருந்திய வராகி; ***வனப்பர்*** - அழகு உடையவரும்; ***உச்சி பிறங்கு வெண் குடையர்*** - தலை மீது வெண்கொற்றக் குடையை உடையவரும்; ***செச்சை*** - செஞ்சாந்தக் குழம்பு பூசப் பெற்றதும்; ***மறு உள்ள*** - தழும்பு பட்டதுமான; ***அலங்கல் மார்பர்*** - மாலை சூடிய மார்பினை உடையவரும்; ***அறுபத்தேழ் அமைந்த கோடி*** - அறுபத்தேழு கோடி எண்ணிக்கையினருமாகிய; ***வானரத் தலைவர் யானை மேல் போனார்*** - வானரத் தலைவர்கள் யானை மீது ஏறிச் சென்றனர்.

***10295. எட்டு என இறுத்த பத்தின் ஏழ் பொழில் வளாக***
***வேந்தர்***
***பட்டம் வைத்து அமைந்த நெற்றிப் பகட்டினர், பைம்***
***பொன் தேரர்,***
***வட்ட வெண்குடையர், வீசு சாமரை மருங்கர்,***
***வானைத்***
***தொட்ட வெஞ் சோதி மோலிச் சென்னியர், தொழுது***
***சூழ்ந்தார்***

***நெற்றிப் பட்டம் வைத்து அமைந்த*** - நெற்றிப் பட்டம் தைத்து அமைக்கப்பட்ட; ***பகட்டினர்*** - யானையை உடையவரும்; ***பைம்பொன் தேரர்*** - பசும் பொன்னாலமைந்த தேரினை உடையவரும்; ***வட்ட வெண்குடையர்*** - வட்ட வடிவமான வெண் குடையை உடையவரும்; ***சாமரை வீசு மருங்கர்*** - இருபுறமும் கவரி வீசப் பெற்றவரும்; ***வானைத் தொட்*** - ஆகாயத்தை அளாவும்; ***வெஞ்சோதி*** - வெவ்விய ஒளியை உடைய; ***மோலிச் சென்னியர்*** - மகுடம் தரித்த தலையை உடையவருமான; ***எட்டென இறுத்த பத்தின்*** - எட்டென்று முடிகின்ற பத்து அதாவது பதினெட்டுப் பிரிவான; ***ஏழ் பொழில் வளாக வேந்தர்*** - ஏழு பூமிகளின் எல்லையிலுமிருந்த மன்னர்கள்; ***தொழுது சூழ்ந்தார்*** - வணங்கிச் சூழ்ந்தனர்.

*பதினெட்டு நாடுகளாவன சிங்களம், புட்பகம் சோனகம், சாவகம், சீனம், துளு, குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், திராவிடம், கலிங்கம், அங்கம், சங்கம், மகதம், மராடம் முதலியனவாம். ஏழ்பொழில் - ஏழு தீவுகளாம்.*

## *சீதா பிராட்டியின் பயணம்*

***10296. வானர மகளிர் எல்லாம் வானவர் மகளிராய் வந்து***
***ஊனம் இல் பிடியும் ஒண் தார்ப் புரவியும் பிறவும் ஊர்ந்து,***
***மீன்இனம் மதியைச் சூழ்ந்த தன்மையின் விரிந்து சுற்ற,***
***பூ நிற விமானம்தன்மேல் மிதிலை நாட்டு அன்னம் போனாள்.***

***வானர மகளிர் எல்லாம்*** - வானரப் பெண்கள் அனைவரும்; ***வானவர் மகளிராய் வந்து*** - தேவ கன்னிகையராய் உருமாறி; ***ஊனமில் பிடியும்*** - குற்றமற்ற பெண்யானை மீதும்; ***ஒண்தார்ப் புரவியும்*** - ஒள்ளிய மாலை பூண்ட குதிரையின் மீதும்; ***பிறவும் ஊர்ந்து*** - (சிவிகை முதலிய) பிற ஊர்திகள் மீதும் ஏறிச் செலுத்தி; ***மீன் இனம்*** - விண்மீன் கூட்டம்; ***மதியைச் சூழ்ந்த தன்மையின் விரிந்து சுற்ற*** - நிலாவைச் சுற்றிய தன்மைபோல் சூழ்ந்துவர; ***பூ நிற விமானம் தன் மேல்*** - பொலிவுடைய விமானத்தின் மீது; ***மிதிலை நாட்டு அன்னம் போனாள்*** - மிதிலை நாட்டின் அன்னம் போன்ற சீதாபிராட்டி சென்றாள்.

***10297. தேவரும் முனிவர்தாமும் திசைதொறும் மலர்கள் சிந்த,***
***ஓவல் இல் மாரி ஏய்ப்ப, எங்கணும் உதிர்ந்து வீங்கிக்***
***கேவல மலராய், வேறு ஓர் இடம் இன்றிக் கிடந்த ஆற்றால்,***

***பூ எனும் நாமம், இன்று இவ் உலகிற்குப்***
***பொருந்திற்று அன்றே.***

**தேவரும் முனிவர் தாமும்** - *வானவரும் முனிவர்களும்;* **திசை தொறும் மலர்கள் சிந்த** - *எல்லாத் திசைகளிலிருந்தும் பூக்களைச் சொரிய;* **ஓவல் இல் மாரி ஏய்ப்ப** - *இடையறாது மழை பொழிவதைப் போன்று;* **எங்கணும் உதிர்ந்து வீங்கி** - *எல்லா இடத்திலும் பொழிந்து பெருகி;* **கேவல மலராய்** - *மலர்கள் மட்டுமேயாக நிறைந்து;* **வேறு ஓர் இடமின்றிக் கிடந்த ஆற்றால்** - *மற்றேதும் இடம் பெற முடியாமற் கிடந்த தன்மையால்;* **இவ்வுலகிற்கு** - *இந்தப் புவிக்கு,* **இன்று** - *இந்த நாளில்;* **பூ எனும் நாமம்** - *பூ என்கிற பெயர்;* **பொருந்திற்று** - *பொருந்துவதாயிற்று;* **அன்று** - *அசை;* **ஏ** - *தேற்றம்; பூமிக்குப் பூ என்னும் பெயரமைந்தமைக்குப் பிறிதொரு காரணம் கற்பித்தார்.*

***10298. கோடையில் வறந்த மேகக் குலம் எனப் பதினால்***
***ஆண்டு***
***பாடு உறு மதம் செய்யாத பணை முகப் பரும***
***யானை,***
***காடு உறை அண்ணல் எய்த, கடாம் திறந்து***
***உகுத்த வாரி***
***ஓடின, உள்ளத்து உள்ள களி திறந்து***
***உடைந்ததேபோல்.***

**கோடையில்** - *முதுவேனிற் காலத்தில்;* **வறந்த** - *நீர் வறண்ட;* **மேகக் குலம் என** - *முகிற் கூட்டம் போன்று; பதினால் ஆண்டு - (நீண்ட) பதினான்கு ஆண்டுக்காலம்;* **பாடு உறு மதம் செய்யாத** - *வெளிப்படுத்துகின்ற மதத்தைப் பொழியாமலிருந்த;* **பணைமுகப் பரும யானை** - *கொம்புகளை முகத்தில் பெற்ற சேணமமைந்த களிறுகள்;* **காடு உறை அண்ணல் எய்த** - *வனவாசம் முடித்த இராமபிரான் திரும்பி வந்தமையால்;* **கடாம் திறந்து உகுத்த வாரி** - *கன்னம் திறந்து பொழிந்த மதநீர்;* **உள்ளத்து உள்ள களி திறந்து உடைந்ததே போல்** - *(அவற்றின்) மனத்துக்குள் அடக்கி வைத்திருந்த களிப்பு உடைந்து வெளிப்பட்டது போல்;* **ஓடின** - *பெருகி ஓடலாயிற்று.*

*முன்னர் நகர் நீங்கு படலத்துள், தான யானையும் களி துறந்தன (கம்ப. 1806) என்றவர் இங்கு களிபெருகின என்றார்.*

***10299. துரகத் தார்ப் புரவி எல்லாம், மூங்கையர் சொல்***
***பெற்றென்ன,***
***அரவப் போர் மேகம் என்ன, ஆலித்த; மரங்கள்***
***ஆன்ற***
***பருவத்தால் பூத்த என்னப் பூத்தன; பகையின் சீறும்***
***புருவத்தார் மேனி எல்லாம் பொன் நிறப் பசலை***

**பூத்த.**

***துரகத் தார்ப் புரவி எல்லாம்*** - *கிண்கிணி மாலை யணிந்த குதிரைகள் எல்லாம்;* ***மூங்கையர் சொல் பெற்றென்ன*** - *ஊமையர்கள் பேசும் திறம் பெற்றாற் போலவும்;* ***அரவப் போர் மேகம் என்ன*** - *ஆரவார ஒலி முழக்கும் மேகங்கள் போலவும்;* ***ஆலித்த*** - *கனைத்தன;* ***மரங்கள்*** - *அனைத்து மரங்களும்;* ***ஆன்ற பருவத்தால்*** - *பொருந்திய பருவ காலத்தில்;* ***பூத்த என்ன*** - *மலர்ந்தன போன்று;* ***பூத்தன*** - *விரிந்தன;* ***பகையின் சீறும்*** - *எதிரிகள் மீது சினந்து வளைவது போல் (வளையும்);* ***புருவத்தார்*** - *புருவத்தை உடைய மகளிர்;* ***மேனி எல்லாம்*** - *உடல் முழுவதும்;* ***பொன் நிறப் பசலை பூத்த*** - *தங்க நிறப் பசலை படர்ந்தது.*

*பதினான்கு ஆண்டுகள் கனைக்காதிருந்த குதிரைகள் இராமன் வருகையால் கனைக்கலாயின.*

## *இராமன் அரண்மனை உடைதல்*

***10300. ஆயது ஓர் அளவில், செல்வத்து அண்ணலும்***
***அயோத்தி நண்ணி,***
***தாயரை வணங்கி, தங்கள் இறையொடு முனியைத்***
***தாழ்ந்து,***
***நாயகக் கோயில் எய்தி, நானிலக் கிழத்தியோடும்***
***சேயொளிக் கமலத்தாளும் திரு நடம் செய்யக்***
***கண்டான்.***

***ஆயது ஓர் அளவில்*** - *அந்தச் சமயத்தில்;* ***செல்வத்து அண்ணலும்*** - *எல்லாத் திருவும் பொருந்திய தலைவன் இராமபிரானும்;* ***அயோத்தி நண்ணி*** - *அயோத்தி நகரையடைந்து;* ***தாயரை வணங்கி*** - *தன் அன்னையாரைப் பணிந்து;* ***நாயகக் கோயில் எய்தி*** - *அனைத்துலக நாயகனான திருமாலின் ஆலயத்தை அடைந்து;* ***தங்கள் இறையொடு*** - *தங்கள் குலதெய்வத்தோடு;* ***முனியைத் தாழ்ந்து*** - *குல குருவான வசிட்டரையும் வணங்கி;* ***நானிலக் கிழத்தியோடும்*** - *நில மகளோடு;* ***சேயொளிக் கமலத்தாளும்*** - *சிவந்த ஒளிமிக்க தாமரைத் திருவும்;* ***திருநடம் செய்யக் கண்டான்*** - *(மிக்க உவகையோடு) களி நடம் புரிவதைக் கண்ணுற்றான்.*

*நாயகக் கோயில் - அரண்மனையும் ஆகலாம்.*

## *நகரமாந்தர் மகிழ்ச்சி*

***10301. 'வாங்குதும் துகில்கள்' என்னும் மனம் இலர்,***

***கரத்தின் பல்கால்***
***தாங்கினர் என்ற போதும், மைந்தரும் தையலாரும்,***
***வீங்கிய உவகை மேனி சிறக்கவும், மேன் மேல்***
***துள்ளி***
***ஓங்கவும், களிப்பால் சோர்ந்த உடை இலாதாரை***
***ஒத்தார்.***

***துகில்கள் வாங்குதும் என்னும்*** *- ஆடைகளைக் களைந்து விட வேண்டும் என்னும்;* ***மனம் இலர்*** *- எண்ணமில்லாதவரான;* ***மைந்தரும் தையலாரும்*** *- (அயோத்தி நகர்) ஆண்களும் பெண்களும்;* ***களிப்பால்*** *- இராமனைக் கண்ட மகிழ்ச்சியால் (தளர்கின்ற ஆடையை);* ***கரத்தின்*** *- தம் கரங்களால்;* ***பல்கால் தாங்கினர் என்ற போதும்*** *- பன்முறையும் தாங்கி நின்றார்கள் என்ற போதிலும்;* ***வீங்கிய உவகை*** *- பெருகிய மகிழ்ச்சியால்;* ***மேனி சிறக்கவும்*** *- உடல் பூரித்தலால்;* ***மேன்மேல் துள்ளி ஓங்கவும்*** *- மேலும் மேலும் துள்ளிப் பாய்தலாலும்* ***சோர்ந்த உடை இலாதாரை ஒத்தார்*** *- நெகிழ்ந்த ஆடையற்ற திகம்பரரை ஒத்திருந்தார்கள்.*

*சமணரில் திகம்பரர் ஆடை அணியாதவர் ஆவர்.*

***10302. வேசியர் உடுத்த கூறை வேதியர் சுற்ற, வெற்றிப்***
***பாசிழை மகளிர் ஆடை அந்தணர் பறித்துச் சுற்ற,***
***வாசம், மென் கலவைச் சாந்து, என்று இனையன,***
***மயக்கம்தன்னால்***
***பூசினர்க்கு இரட்டி ஆனார், பூசலார் புகுந்துளோரும்.***

***வேசியர் உடுத்த கூறை*** *- கணிகையர் உடுத்திருந்த சேலையினை (தடுமாற்றம் நேர்ந்தமையால்);* ***வேதியர் சுற்ற*** *- வேதியர்கள் தரிக்கவும்;* ***வெற்றிப் பாசிழை மகளிர் ஆடை*** *- ஊடலில் வெற்றி கொள்ளும் பசிய பொன்னணிகள் அணிந்த பெண்களின் ஆடையினை;* ***அந்தணர் பறித்துச் சுற்ற*** *- அந்தணர் வலிந்து பறித்துச் சுற்றிக் கொள்ளவும்;* ***வாசம்*** *- நறுமணப் பொருள்களும்;* ***மென் கலவைச் சாந்து*** *- மெல்லிதாய் நறும் பொருள்கள் கலந்து அரைத்த சாந்தும்;* ***என்று இனையன*** *- என்னும் இவற்றை;* ***பூசலார்*** *- பூசிக் கொள்ளாது;* ***புகுந்துளோரும்*** *- வந்தவர்களும்;* ***மயக்கம் தன்னால்*** *- மக்களின் உவகை மயக்கத்தால்;* ***பூசினர்க்கு இரட்டி ஆனார்*** *- (மணப் பொருள்கள்) பூசியவரைக் காட்டிலும் இருமடங்கு அப்பிக் கொண்டார்கள்.*

***10303. இறைப் பெருஞ் செல்வம் நீத்த ஏழ் - இரண்டு***
***ஆண்டும், யாரும்***
***உறைப்பு இலர் ஆதலானே, வேறு இருந்து ஒழிந்த***
***மின்னார்,***

***பிறைக் கொழுந்து அனைய நெற்றிப் பெய் வளை மகளிர், மெய்யை***
***மறைத்தனர் பூணின், மைந்தர் உயிர்க்கு ஒரு மறுக்கம் தோன்ற.***

***இறை*** - *ஆட்சியாகிய;* ***பெருஞ்செல்வம் நீத்த*** - *பெருந்திருவினை நீங்கிய;* ***ஏழ் இரண்டு ஆண்டும்*** - *பதினான்கு ஆண்டுக் காலத்திலும்;* ***யாரும் உறைப்பு இலர் ஆதலானே*** - *அனைவரும் மனமகிழ்ச்சியற்றிருந்தவர்களாதலால்;* ***வேறு இருந்து ஒழிந்த*** - *(கணவருடன் கூடாது) தனித்திருந்து; கழித்த;* ***பிறைக் கொழுந்து அனைய நெற்றி*** - *இளம் பிறை போன்ற நெற்றியினை உடைய;* ***மின்னார்*** - *மின்னலைப் போன்றவரும்;* ***பெய்வளை மகளிர்*** - *வளையல் அணிந்தவருமான பெண்கள்;* ***மைந்தர்*** - *ஆண்மக்களுடைய;* ***உயிர்க்கு மறுக்கம் எய்த*** - *உயிருக்குக் கலக்கம் ஏற்படுமாறு;* ***மெய்யை*** - *தம் உடலை;* ***பூணில் மறைத்தனர்*** - *அணிகலன்களால் மூடிக் கொண்டனர்.*

***10304. விண் உறைவோர்தம் தெய்வ வெறியோடும், வேறுளோர்தம்***
***தண் நறு நாற்றம் தம்மில் தலைதடுமாறும் நீரால்,***
***மண் உறை மாதரார்க்கும் வான் உறை மடந்தைமார்க்கும்,***
***உள் நிறைந்து உயிர்ப்பு வீங்கி ஊடல் உண்டாயிற்று அன்றே.***

***விண் உறைவோர் தம்*** - *வானுலகில் வாழ்கின்றவர்களின்;* ***தெய்வ வெறியொடும்*** - *தெய்வீக நறுமணத்தோடும்;* ***வேறுளோர் தம்*** - *(மற்ற) மனித உலகத்தவர்களின்;* ***தண்நறு நாற்றம்*** - *குளிர்ந்த நறுமணம்;* ***தம்மில் தலைதடுமாறு நீரால்*** - *தமக்குள் கலந்து வீசும் தன்மையால்;* ***மண் உறை மாதரார்க்கும்*** - *மண்ணுலகத்துப் பெண்களுக்கும்;* ***வான் உறை மடந்தைமார்க்கும்*** - *விண்ணுலக மாதர்கட்கும்;* ***உள் நினைந்து உயிர்ப்பு வீங்கி*** - *உள்ளே (வெறுப்பு) பெருகிப் பெரு மூச்சாய் வெளிப்பட்டு;* ***ஊடல் உண்டாயிற்று*** - *பிணக்கு ஏற்பட்டது.*

*அன்று, ஏ - அசை.*

***10305. ஆயது ஓர் அளவில், ஐயன், பரதனை, அருளின் நோக்கி,***
***'தூய வீடணற்கும், மற்றைச் சூரியன் மகற்கும், தொல்லை***

***மேய வானரர்கள் ஆய வீரர்க்கும், பிறர்க்கும், நம்தம்***
***நாயகக் கோயில் உள்ள நலம் எலாம் தெரித்தி'***
***என்றான்.****

**ஆயது ஓர் அளவில்** - அந்தப் பொழுதில்; **ஐயன்** - இராமபிரான்; **பரதனை அருளின் நோக்கி** - பரதனை அன்புறப் பார்த்து; **'தூய வீடணற்கும்** - உளந்தூய வீடணனுக்கும்; **மற்றை** - மற்றும்; **சூரியன் மகற்கும்** - கதிரவன் மைந்தனான சுக்கிரீவனுக்கும்; **தொல்லை மேய** - பழமை வாய்ந்த; **வானரர்கள் ஆய வீரர்க்கும்** - வானர வீரர்களுக்கும்; **பிறர்க்கும்** - மற்றையோருக்கும்; **நம்தம்** - நம்முடைய; **நாயகக் கோயில் உள்ள** - முதன்மை வாய்ந்த அரண்மனையில் அமைந்துள்ள; **நலம் எலாம் தெரித்தி** - சிறப்புக்கள் எல்லாவற்றையும் விளக்குவாயாக; **என்றான்** - என்று கூறினான்.

*10306.* ***என்றலும், இறைஞ்சி, மற்றைத் துணைவர்கள்***
***யாவரோடும்***
***சென்றனன் எழுந்து, மாடம் பல ஒரீஇ, உலகில்***
***தெய்வப்***
***பொன் திணிந்து அமரரோடும் பூமகள் உறையும்***
***மேருக்***
***குன்று என விளங்கித் தோன்றும் நாயகக் கோயில்***
***புக்கான்.****

**என்றலும்** - இவ்வாறு இராமன் கூறுதலும்; **இறைஞ்சி** - (பரதன்) வணங்கி; **மற்றைத் துணைவர்கள் யாவரோடும்** - பிற அன்பர்கள் அனைவரோடும்; **எழுந்து சென்றனன்** - எழுந்து

புறப்பட்டவனாகி; **மாடம் பல ஒரீஇ** - பல மாட கூடங்கள் தாண்டி; **உலகில்** - அனைத்துலகங்களிலும்; **பொன் திணிந்து** - (சிறந்த) பொன் செறிந்து; **அமரரோடும் பூமகள் உறையும்** - தேவர்களோடு திருமகளும் உறைகின்ற; **மேருக்குன்று என** - இமயமலை போன்று; **விளங்கித் தோன்றும்** - ஒளிபெற்றுத் திகழும்; **தெய்வ நாயகக் கோயில் புக்கான்** - தெய்வத்தன்மை பொருந்திய தலைமை அரண்மனைக்குச் சென்றான்.

*10307.* ***வயிரம், மாணிக்கம், நீலம், மரகதம் முதலாய் உள்ள***
***செயிர் அறு மணிகள் ஈன்ற செழுஞ் சுடர்க் கற்றை***
***சுற்ற,***
***உயிர் துணுக்குற்று நெஞ்சும் உள்ளமும் ஊசலாட,***

***மயர்வு அறு மனத்து வீரர், இமைப்பிலர், மயங்கி நின்றார்.***

***மயர்வு அறு மனத்து வீரர்*** - *கலக்கமற்ற மனம் படைத்த வீடணன் முதலாம் வீரர்கள்;* ***வயிரம் மாணிக்கம் நீலம்*** *மரகதம் முதலாய் உள்ள - வைரம், மாணிக்கம், நீலம், மரகதம் தொடக்கமாய் உள்ள;* ***செயிர் அறுமணிகள் ஈன்ற*** *- குற்றமற்ற மணிக்கற்கள் தந்த;* ***செழுஞ்சுடர்க் கற்றை சுற்ற*** *- வளமான ஒளிக்கிரணங்கள் தம்மைச் சூழவும்;* ***உயிர்*** *- தமது உயிர்;* ***துணுக்குற்று*** *- திடுக்கிட;* ***நெஞ்சும்*** *உள்ளமும் ஊசலாட - மனமும் உணர்வும் தடுமாற;* ***இமைப்பிலர்*** *- இமைக்கவும் மறைந்தவர்களாய்* ***மயங்கி நின்றார்*** *- மயக்கம் கொண்டு நின்றார்கள்.*

***10308. விண்டுவின் மார்பில் காந்தும் மணி என விளங்கும் மாடம்***
***கண்டனர்; பரதன் தன்னை வினவினர், அவர்க்கு, 'காதல்***
***புண்டரீகத்துள் வைகும் புராதனன், கன்னல் தோளான்,***
***கொண்ட நல் தவம்தன்னாலே உவந்து, முன் கொடுத்தது' என்றான்.****

***விண்டுவின் மார்பில்*** *- திருமாலின் மார்பினில்;* ***காந்தும் மணி என*** *- ஒளி விடும் கௌத்துவ மணி போன்று;* ***விளங்கும் மாடம் கண்டனர்*** *- திகழும் மாடத்தைக் கண்டவர்கள்;* ***பரதன் தன்னை வினவினர்*** *- பரதனிடம் அது குறித்துக் கேட்டனர்;* ***அவர்க்கு*** *- அவர்களிடம் (பரதன்);* ***'புண்டரீகத்துள் வைகும் புராதனன்*** *- உந்தித் தாமரையில் வாழும் பழம் பெருமை மிக்க பிரமதேவன்;* ***கன்னல் தோளான்*** *- கரும்பு போல் இனிமை மிக்க தோள்களை உடைய இட்சுவாகு மன்னனுக்கு;* ***கொண்ட நல் தவத்தினாலே*** *- (அவன்) மேற்கொண்ட அருந்தவத்தைப் பாராட்டி;* ***காதல்*** *- அன்புடன்;* ***உவந்து*** *- மகிழ்ந்து;* ***முன் கொடுத்தது*** *- முன்னர் பரிசாகத் தந்ததாகும்;* ***என்றான்*** *- எனக் கூறினான்.*

***10309. 'பங்கயத்து ஒருவன் இக்குவாகுவிற்கு அளித்த பான்மைத்து***
***இங்கு இது மலராள் வைகும் மாடம்' என்று இசைத்த போதில்,***
***'எங்களால் துதிக்கலாகும் இயல்பதோ' என்று கூறி,***
***செங் கைகள் கூப்பி, வேறு ஓர் மண்டபம்அதனில் சேர்ந்தார்.***

***பங்கயத்து ஒருவன்*** - தாமரையில் வைகும் ஒப்பற்ற பிரமதேவன்; ***இக்குவாகுவிற்கு*** - இட்சுவாகு மன்னனுக்கு; ***அளித்த பான்மைத்து*** - அளித்த சிறப்புக்குரிய; ***இங்கு இது மலராள் வைகும் மாடம்*** - இங்கு அமைந்துள்ள இந்த திருமகள் தங்கும் இனிய மாடம்; ***என்று இசைத்த போதில்*** - என்று பரதன் இயம்பியபோது, (வீடணாதியர்); ***எங்களால் துதிக்கலாகும் இயல்பதோ*** - எங்களால் புகழக் கூடி அளவினதோ இது?; ***என்று கூறி*** - என்று மொழிந்து; ***செங்கைகள் கூப்பி*** - தம் சிவந்த கரங்களால் வணங்கி; ***வேறு ஓர் மண்டபம் அதனில்*** - மற்றொரு மண்டபத்துக்கு; ***சேர்ந்தார்*** - சென்று சேர்ந்தனர்.

***10310. இருந்தனர், அனைய மாடத்து இயல்பு எலாம் எண்ணி எண்ணி,***
***பரிந்தனன் இரவி மைந்தன், பரதனை வணங்கி 'தூயோய்!***
***கருந் தட முகிலினாற்குக் காப்பு நாண் அணியும் நல் நாள்***
***தெரிந்திடாது இருத்தல் என்னோ?' என்றலும்,***

***அண்ணல் செப்பும்:***

***அனைய மாடத்து இயல்பு எலாம்*** - அந்த மாடத்தின் தன்மையை எல்லாம்; ***எண்ணி எண்ணி இருந்தனர்*** - (வீடணாதியர்) நினைந்து நினைந்து வியந்திருந்தனர்; ***இரவி மைந்தன்*** - சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன்; ***பரிந்தனன்*** - அன்பு பூண்டவனாய்; ***பரதனை வணங்கி*** - பரதனைப் பணிந்து; ***'தூயோய்!*** - புனிதம் மிக்கவனே; ***கருந்தட முகிலினாற்கு*** - `கரிய பெரிய முகில் போலும் நிறம் படைத்த இராமபிரானுக்கு; ***காப்பு நாண்*** - (மங்கல மகுடம் புனைதற்கு) காப்பு நாணினை; ***அணியும் நல்நாள்*** - அணிந்து கொள்ளும் இனிய நாள்; ***தெரிந்திடாது இருத்தல் என்னோ*** - இன்னமும் நாங்கள் அறியமுடியாமல் இருப்பது ஏன்; ***என்றலும்*** - எனக் கேட்டலும்; ***அண்ணல் செப்பும்*** - பரதன் கூறுவானாயினன்.

***10311. 'ஏழ் கடல் அதனில் தோயம், இரு நதி பிறவில் தோயம்***
***தாழ்வு இலாது இவண் வந்து எய்தற்கு அருமைத்து ஓர் தன்மைத்து என்ன,***
***ஆழி ஒன்று உடையோன் மைந்தன், அனுமனைக் கடிதின் நோக்க,***
***சூழ் புவி அதனை எல்லாம் கடந்தனன், காலின் தோன்றல்.***

***ஏழ்கடலதனில் தோயம்*** - *ஏழு கடல்களிலிருந்து கொண்டு வரும் புனித நீரும்;* ***பிற இருநதியில் தோயம்*** - *வேறுள்ள பெரிய நதிகளிலிருந்து கொண்டுவரும் தீர்த்தங்களும்;* ***தாழ்விலாது*** - *தாமதமின்றி;* ***இவண் வந்து எய்தற்கு*** - *இங்கு வந்து சேருதற்கு;* ***அருமைத்து ஓர் தன்மைத்து*** - *அரிய தன்மையுடையது;* ***என்ன*** - *என்று (பரதன்) கூற;* ***ஆழி ஒன்று உடையோன் மைந்தன்*** - *ஒற்றைச் சக்கரத் தேரினனான சூரியன் புதல்வன் (சுக்கிரீவன்);* ***அனுமனைக் கடிதின் நோக்க*** - *அனுமனை விரைந்து பார்க்கவும்;* ***காலின் தோன்றல்*** - *காற்றின் மைந்தனாகிய அனுமன்;* ***சூழ் புவி அதனை எல்லாம்*** - *கடல் சூழ் உலகத்தின் (தொலைவை) எல்லாம்;* ***கடந்தனன்*** - *உடன் கடந்து சென்றான்.*

***10312. 'கோமுனியோடு மற்றைக் கணிதரைக் கொணர்க!' என்னா***
***ஏவினன்; தேர் வலான் சென்று இசைத்தலும், உலகம் ஈன்ற***
***பூமகன் தந்த அந்தப் புனித மா தவன் வந்து எய்த,***
***யாவரும் எழுந்து போற்றி, இணை அடி தொழுது நின்றார்.***

***கோமுனியோடு*** - *தலைமை வாய்ந்த வசிட்ட முனிவரோடு;* ***மற்றை*** - *பிற;* ***கணிதரைக் கொணர்க*** - *சோதிடரையும் அழைத்து வருக; என்னா -* ***என்று;*** *ஏவினன் - (பரதன்) அமைச்சருக்குக் கட்டளையிட்டான்;* ***தேர் வலான்*** - *தேர் செலுத்துவதில் வல்ல (அமைச்சன்) சுமந்திரனும்;* ***சென்று இசைத்தலும்*** - *சென்று முனிவரிடம் கூறியதும்;* ***உலகம் ஈன்ற பூமகன்*** - *உலகைப் படைத்த பிரம தேவன்;* ***தந்த அந்தப் புனித மாதவன்*** - *பெற்ற அப்புனித மாமுனி (வசிட்டனும்);* ***வந்து எய்த*** - *வந்து சேர்தலும்;* ***யாவரும் எழுந்து போற்றி*** - *அனைவரும் எழுந்து துதித்து;* ***இணைஅடி தொழுது நின்றார்*** - *அடியிணை வணங்கி நின்றனர்.*

***10313. அரியணை பரதன் ஈய, அதன்கண் ஆண்டு இருந்த அந்தப்***
***பெரியவன், அவனை நோக்கி, 'பெரு நிலக் கிழத்தியோடும்***
***உரிய மா மலராளோடும் உகந்தனர் ஒருவு இல் செல்வம்***
***கரியவன் உய்த்தற்கு ஒத்த காப்பு நாள் நாளை' என்றான்.***

***அரியணை ஈய*** - *சிங்காதனம் இடவும்;* ***அதன் கண் ஆண்டு இருந்த*** - *அதன் மீது அங்கே அமர்ந்த;* ***அந்தப் பெரியவன்*** - *அந்தப் பெருந்தகை;* ***அவனை நோக்கி*** - *பரதனைப் பார்த்து;* ***'பெரு நிலக் கிழத்தியோடும்*** - *பூமிப் பிராட்டியோடும்;* ***உரிய மாமலராளோடும்*** - *பொருந்திய திருமகளோடும்;* ***உகந்தனர்*** - *உவந்திருந்து;* ***ஒருவு இல் செல்வம்*** - *அழியாப் பெருஞ்செல்வம் (நுகர்ந்து);* ***கரியவன்*** - *கரு நிறத்து இராமன்;* ***உய்த்தற்கு*** - *ஆட்சி நடத்துதற்கு;* ***ஒத்த காப்பு நாள்*** - *இசைந்த காப்பு அணியும் நன்னாள்;* ***நாளை*** - *நாளைய தினமாகும் ;* ***என்றான்*** *-.*

***10314. இந்திர குருவும் அன்னார் எனையவர் என்ன நின்ற***
***மந்திர விதியினாரும், வசிட்டனும், வரைந்து விட்டார்-***
***சந்திர கவிகை ஓங்கும் தயரத ராமன் தாமச்***
***சுந்தர மவுலி சூடும் ஓரையும் நாளும் தூக்கி.***

***இந்திர குருவும் அன்னார்*** - *தேவ குரு வியாழனை நிகர்த்தவராய்;* ***எனையவர் என்ன நின்ற*** - *எத்துணைப் பேர் எனக் கருதுமாறு பலராக நின்ற;* ***மந்திர விதியினாரும்*** *;- மந்திர விதிகளில் தேர்ந்தவரும்;* ***வசிட்டனும்*** - *மாமுனி வசிட்டரும்;* ***சந்திர கவிகை ஓங்கும்*** - *நிலவென ஒளிரும் வெண்கொற்றக் குடை உயர்த்திய;* ***தயரதராமன்*** - *தசரத ராமனுக்கு;* ***தாமம்*** - *ஒளிமிக்கதும்;* ***சுந்தரம்*** - *அழகு வாய்ந்ததுமான;* ***மவுலி சூடும்*** - *திருமுடி சூடுகின்ற;* ***ஓரையும் நாளும் தூக்கி*** - *நல்வேளையையும் நாளையும் ஆராய்ந்து;* ***வரைந்து விட்டார்*** - *எழுதி அனுப்பினார்.*

***10315. அடுக்கிய உலகம் மூன்றும், ஆதரத் தூதர் கூற,***
***இடுக்கு ஒரு பேரும் இன்றி, அயோத்தி வந்து இறுத்தார் என்றால்,***
***தொடுக்குறு கவியான் மற்றைத் துழனியை இறுதி தோன்ற***
***ஒடுக்குறுத்து உரைக்கும் தன்மை நான்முகத்து ஒருவற்கு உண்டோ?***

***அடுக்கிய உலகம் மூன்றும்*** - *ஒன்றன் மேல் ஒன்றாகத் திகழும் மூன்று உலகங்களிலும்;* ***ஆதரத் தூதர்*** - *ஆர்வம் மிக்க தூதர்கள்;* ***கூற*** - *(திருமுடி சூட்டு நிகழ்ச்சியை) எடுத்துச் சொல்ல;* ***இடுக்கு ஒரு பேருமின்றி*** - *சிற்றிடம் கூட வெற்றிடமாக இல்லாமல்;* ***அயோத்தி வந்து இறுத்தார் என்றால்*** - *(அத்துணைப் பேரும்); அயோத்தியில் வந்து தங்கினார்கள் எனில்,* ***மற்றை*** - *வேறு;* ***துழனியை*** - *பேரொலியை;* ***இறுதி தோன்ற*** - *முடிவாக;* ***ஒடுக்குறுத்து*** - *தொகுத்து;* ***தொடுக்குறு கவியான்*** - *புனைகின்ற கவியால்;* ***உரைக்கும் தன்மை*** - *எடுத்துரைக்கும் ஆற்றல்;* ***நான் முகத்து ஒருவற்கு உண்டோ*** - *பிரம தேவனுக்கும் இருக்குமோ? (இராது என்றபடி.)*

*10316. அவ் வயின் முனிவனோடும் பரதனும், அரியின் சேயும்,*
*செவ்வியின் நிருதர்கோனும், சாம்பனும், வாலி சேயும்,*
*எவ்வம் இல் ஆற்றல் வீரர் யாவரும், எழுந்து சென்று,*
*ஆங்கு*
*அவ்வியம் அவித்த சிந்தை அண்ணலைத் தொழுது*
*சொன்னார்.**

***அவ்வயின்*** *- அப்பொழுது;* ***முனிவனோடும்*** *- வசிட்ட முனிவனோடு;* ***அரியின் சேயும்*** *- சூரியன் புதல்வன் சுக்கிரீவனும்;* ***செல்வியின் நிருதர் கோனும்*** *- செம்மை மிக்க அரக்கர் தலைவன் வீடணனும்;* ***சாம்பனும்*** *- சாம்பவந்தனும்;* ***வாலிசேயும்*** *- வாலியின் புதல்வன் அங்கதனும்;* ***எவ்வம் இல் ஆற்றல் வீரர்*** *- குற்றமற்ற வல்லமைமிக்க வீரர்கள்;* ***யாவரும்*** *- அனைவரும்;* ***ஆங்கு*** *- அவ்விடத்தில்;* ***அவ்வியம் அவித்த சிந்தை*** *- பொறாமை அகற்றிய உள்ளம் படைத்த;* ***அண்ணலை*** *- இராமபிரானை;* ***தொழுது சொன்னார்*** *- வணங்கி (முடிசூட்டு நாள் குறித்துக்) கூறினர்.*

*10317. 'நாளை நீ மவுலி சூட நன்மை சால் பெருமை*
*நல்நாள்;*
*காளை! நீ அதனுக்கு ஏற்ற கடன்மைமீது இயற்றுக!'*
*என்று,*
*வேளையே பொடியதாக விழிக்கும் நீள் நுதலின்*
*வெண் பூம்*
*பூளையே சூடுவானைப் பொருவும் மா முனிவன்*
*போனான்.**

*(வசிட்டன் இராமனிடம்)* ***நீ மவுலி சூட*** *- நீ மகுடன் சூட;* ***நன்மை சால் பெருமை நல்நாள் நாளை*** *- நலம் தரும் பெருமை சான்ற சிறந்த நாள் நாளை;* ***காளை*** *- (ஆதலால்) காளை போன்றவனே;* ***நீ அதனுக்கு ஏற்ற*** *- நீ அப்பொறுப்புக்கு ஏற்றவாறு;* ***கடன்மை மீது இயற்றுக*** *- கடமைகளின் மேல் கவனம் செய்க;* ***என்று*** *- என்று கூறி;* ***வேளையே பொடியதாக விழிக்கும்*** *- மன்மதனையே சாம்பலாக்கக் கண் காட்டும்;* ***நீள் நுதலின்*** *- நீண்ட நெற்றியை உடைய;* ***வெண்பூம் பாளையே*** *- வெண்ணிறத்துப் பூளைப் பூவையே;* ***சூடுவானை*** *- சூடுகின்ற சிவ பெருமானை;* ***பொருவும்*** *- நிகர்த்த;* ***மாமுனிவன்*** *- பெருமுனி வசிட்டன்;* ***போனான்*** *- சென்றான்.*

*10318. நான்முகத்து ஒருவன் ஏவ, நயன் அறி மயன் என்று*
*ஓதும்*
*நூல் முகத்து ஓங்கு கேள்வி நுணங்கியோன்,*
*வணங்கு நெஞ்சன்,*

***கோல் முகத்து அளந்து, குற்றம் செற்று, உலகு எல்லாம் கொள்ளும்
மான் முகத்து ஒருவன், நல் நாள் மண்டபம் வயங்கக் கண்டான்.***

***நான்முகத்து ஒருவன் ஏவ*** - *பிரமனாகிய ஒப்பற்றவன் கட்டளையிட;* ***நயன் அறிமயன் என்று ஓதும்*** - *கலைநுட்பம் வல்ல (தெய்வ தச்சன்) மயன் என்று அறியப்படும்;* ***நூல் முகத்து ஓங்கு கேள்வி*** - *சிற்ப நூலில் சிறந்த கேள்வியுடனே;* ***நுணங்கியோன்*** - *நுண்மாண் நுழைபுலம் மிக்கவனாகிய;* ***மான் முகத்து ஒருவன்*** - *மான்முகம் பெற்ற ஒப்பற்றவன்;* ***வணங்கும் நெஞ்சன்*** - *வணங்கி நிற்கும் உள்ளம் படைத்தவன்;* ***கோல் முகத்து அளந்து*** - *கோல்முகம் கொண்டு அளந்து;* ***குற்றம் செற்று*** - *குற்றம் களைந்து;* ***உலகு எல்லாம் கொள்ளும்*** - *உலகையே தனக்குள் அடக்கும்;* ***மண்டபம்*** - *மண்டபத்தை;* ***நல்நாள்*** - *மங்கள நாளில்;* ***வயங்கக் கண்டான்*** - *விளக்கமுறக் கட்டி முடித்தான்.*

## *இராமன் புனித நீராட்டு*

***10319. 'சூழ் கடல் நான்கின் தோயம், எழு வகை ஆகச் சொன்ன
ஆழ் திரை ஆற்றின் நீரோடு அமைத்தி இன்று' என்ன, 'ஆம்' என்று,
ஊழியின் இறுதி செல்லும் தாதையின் உலாவி, ஒன்றா
ஏழ் கடல் நீரும் தந்தான், இருந்து உய்ய மருந்து தந்தான்.***

***சூழ்*** - *உலகைச் சூழ்ந்துள்ள;* ***கடல் நான்கின் தோயம்*** - *நான்கு கடல்களின் நீரும்;* ***எழுவகை ஆகச் சொன்ன*** - *எழு வகையாகக் கூறப்பட்ட;* ***ஆழ் திரை*** - *ஆழ்ந்த அலை கொண்ட கடல் நீரும்;* ***ஆற்றின் நீரோடு*** - *ஆறுகளின் நீரோடு;* ***அமைத்தி*** - *கொண்டு வந்து சேர்க்க;* ***என்ன*** - *என்று (சுக்கிரீவன்) ஆணையிட;* ***இருந்து உய்ய மருந்து தந்தான்*** - *நெடிது வாழச் சஞ்சீவி மலை மருந்து தந்தவனாகிய அனுமனும்;* ***ஆம் என*** - *அப்படியே செய்வேன் என்று;* ***ஊழியின் இறுதி செல்லும்*** - *யுக முடிவில் எழுகின்ற;* ***தாதையின் உலாவி*** - *சண்ட மாருதம் போல் எழுந்து சென்று;* ***ஒன்றா*** - *ஒரே சமயத்தில்;* ***ஏழ்கடல் நீரும் தந்தான்*** - *எழுகடல் நீரையும் கொணர்ந்து தந்தான்.*

***10320. எரி மணிக் குடங்கள் பல் நூற்று யானைமேல்***

***வரிசைக்கு ஆன்ற***
***விரி மதிக் குடையின் நீழல், வேந்தர்கள் பலரும்***
***ஏந்தி,***
***புரை மணிக் காளம் ஆர்ப்ப, பல்லியம் துவைப்ப,***
***பொங்கும்***
***சரயுவின் புனலும் தந்தார், சங்குஇனம் முரல***
***மன்னோ.****

**வேந்தர்கள் பலரும்** - *பல நாட்டு மன்னர்களும்;* **வரிசைக்கு ஆன்ற** - *தம் தகுதிக்கு ஏற்ப;* **விரிமதிக் குடையின் நீழல்** - *விரிந்த நிலவு போன்ற வெண்கொற்றக் குடை நிழலில்;* **பல் நூற்று எரிமணிக் குடங்கள்** - *பல நூறு சுடர் மிக்க இரத்தினக் குடங்களை;* **யானை மேல் ஏந்தி** - *யானை மீதமர்ந்து ஏந்தி;* **புரை** - *உள்துளை கொண்ட;* **மணிக்காளம் ஆர்ப்ப** - *அழகிய எக்காளம் ஒலிக்க;* **பல்லியம் துவைப்ப** - *பல இசைக்கருவிகளும் முழங்க;* **சங்கு இனம் முரல பொங்கும்** - *சங்குகள் ஒலிக்க அலைகள் எழும்;* **சரயுவின் புனலும் தந்தார்** - *சரயு நீதி நீரும் கொண்டு வந்தனர்.*

*மின் - அசை.*

***10321. மாணிக்கப் பலகை தைத்து, வயிரத் திண் கால்கள்***
***சேர்த்தி,***
***ஆணிப்பொன் சுற்றி முற்றி, அழகுறச் சமைத்த பீடம்,***
***ஏண் உற்ற பளிக்கு மாடத்து இட்டனர்; அதனின்மீது***
***பூண் உற்ற திரள் தோள் வீரன் திருவொடும்***
***பொலிந்தான் மன்னோ.****

**மாணிக்கப் பலகை தைத்து** - *மாணிக்கத்தால் செய்த பலகை பொருத்தப் பெற்று;* **வயிரத்தின் கால்கள் சேர்த்தி** - *வைரத்தால் வலிய கால்கள் செய்தமைத்து;* **ஆணிப்பொன் சுற்றிமுற்றி** - *உயர்ந்த பொன்னால் சுற்றும் பூர்த்தி செய்யப் பட்டு;* **அழகுறச் சமைத்த பீடம்** - *எழிலாக உருவாக்கிய பீடத்தை;* **ஏண் உற்ற** - *பெருமை சான்ற;* **பளிக்கு மாடத்து** - *பளிங்கு மாடத்தில்;* **இட்டனர்** - *அமைத்தனர்;* **அதனின் மீது** - *அப்பீடத்தின் மேல்;* **பூண் உற்ற** - *அணிகலன் அணிந்த;* **திரள் தோள் வீரன்** - *திரண்ட தோள்களை உடைய வீரனாகிய இராமபிரான்;* **திருவொடும் பொலிந்தான்** - *சீதா பிராட்டியோடும் அழகுற வீற்றிருந்தான். மன் - அசை.*

***10322. மங்கல கீதம் பாட, மறை ஒலி முழங்க, வல் வாய்ச்***
***சங்குஇனம் குமுற, பாண்டில் தண்ணுமை ஒலிப்ப,***
***தா இல்***

***பொங்கு பல்லியங்கள் ஆர்ப்ப, பூ மழை பொழிய, விண்ணோர்***
***எங்கள் நாயகனை வெவ்வேறு எதிர்ந்து, அபிடேகம் செய்தார்.****

***மங்கல கீதம் பாட*** - மங்கலப் பாடல்கள் ஒலிக்கவும்; ***மறை ஒலி முழங்க*** - வேத முழக்கம் கேட்கவும்; ***வல் வாய்ச் சங்கு இனம் குமுற*** - பெரிய வாயை உடைய சங்குகள் ஒலிக்கவும்; ***பாண்டில் தண்ணுமை ஒலிப்ப*** - தாளமும் மத்தளமும் ஓசை செய்யவும்; ***தா இல் பல்லியம் பொங்கி ஆர்ப்ப*** - குற்றம் தீர்ந்த பல்வகை இசைக் கருவிகள் மேலெழுந்து ஆரவாரிக்கவும்; ***பூ மழை பொழிய*** - பூ மாரி பெய்யவும்; ***விண்ணோர்*** - வானோர்; ***எங்கள் நாயகனை*** - எங்கள் தலைவனாகிய இராமபிரானை; ***வெவ்வேறு*** - தனித்தனியாக; ***எதிர்ந்து அபிடேகம் செய்தார்*** - அயோத்தியில் வரவேற்று தீர்த்தமாட்டினர்.

*10323.* ***மா தவர், மறைவலாளர், மந்திரக் கிழவர், மற்றும்***
***மூதறிவாளர், உள்ள சான்றவர் முதல் நீராட்ட,***
***சோதியான் மகனும், மற்றைத் துணைவரும், அனுமன்தானும்,***
***தீது இலா இலங்கை வேந்தும், பின் அபிடேகம் செய்தார்.***

***மாதவர்*** - முனிவர்களும்; ***மறைவலாளர்*** - அந்தணர்களும்; ***மந்திரக் கிழவர்*** - அமைச்சர்களும்; ***மற்றும்*** - மேலுமுள்ள; மூதறிவாளர் - பேரறிஞர்களும்; ***உள்ள சான்றவர்*** - அங்கிருந்த சான்றோர்களும்; ***முதல் நீராட்ட*** - முதலில் அபிடேகம் செய்தபின்; ***சோதியான் மகனும்*** - சூரியன் மகனாகிய சுக்கிரீவனும்; ***மற்றைத் துணைவரும்*** - பிற நண்பர்களும்; ***அனுமன் தானும்*** - அனுமனும்; ***தீது இலா இலங்கை வேந்தும்*** - களங்கமற்ற வீடணனும்; ***பின் அபிடேகம் செய்தார்*** - தொடர்ந்து அபிடேகம் செய்தனர்.

*10324.* ***'அம் கண் வான், உலகம், தாய அடி, மலர்த் தவிசோன் ஆட்டும்***
***கங்கை வார் சடையின் ஏற்றான், கண்ணுதல் ஒருவன்; இந் நாள்***
***சிங்கஏறு அனையான் செய்ய திருமுடி ஆட்டும் நல் நீர்***
***எங்கண் ஏற்று அன்னோன் வாழும்?' என்றனர், புலவர் எல்லாம்.****

***'அம் கண் வான்*** *- அழகிய வானகத்தையும்;* ***உலகம்*** *- மண்ணகத்தையும்;* ***தாய அடி*** *- அளந்த (திருமால்) திருவடிகளை;* ***மலர்த் தவிசோன்*** *- உந்தித் தாமரை வாழும் பிரமதேவன்;* ***ஆட்டும் கங்கை*** *- நீராட்டிய கங்கா தீர்த்தத்தை;* ***கண்ணுதல் ஒருவன்*** *- நெற்றிக் கண் கொண்ட ஒப்பற்ற சிவபெருமான்;* ***வார் சடையின் ஏற்றான்*** *- விரிந்த சடையில் ஏற்றுக் கொண்டான்;* ***இந்நாள்*** *- இன்று;* ***சிங்க ஏறு ஆனையான்*** *- ஆண் சிங்கம் போன்ற இராமனின்;* ***செய்ய திருமுடி*** *- செப்பமான திருமுடியில்;* ***ஆட்டும் நல் நீர்*** *- அபிடேகமான புனித நீரை;* ***எங்கண் ஏற்று*** *- எவ்விடம் ஏற்று;* ***அன்னோன் வாழும்*** *- அச்சிவபெருமான் வாழ்வான்;* ***என்றனர்*** *- என்று கூறி வியந்தனர்;* ***புலவர் எல்லாம்*** *- அறிஞர்கள் ஆனோர் எல்லாரும்.*

***10325. மரகதச் சயிலம் செந் தாமரை மலர்க் காடு பூத்து,***
***திரை கெழு கங்கை வீசும் திவலையால் நனைந்து,***
***செய்ய***
***இரு குழை தொடரும் வேற் கண் மயிலொடும்***
***இருந்தது ஏய்ப்ப,***
***பெருகிய செவ்வி கண்டார், பிறப்பு எனும் பிணிகள்***
***தீர்ந்தார்.***

***மரகதச் சயிலம்*** *- மரகத மலை;* ***செந்தாமரை மலர்க்காடு பூத்து*** *- செந்தாமரை மலர்த் தொகுதி மலரப் பெற்று;* ***திரைகெழு கங்கை*** *- அலைகள் செறிந்த கங்கை நதியின்;* ***வீசும் திவலையால் நனைந்து*** *- வீசுகின்ற துளிகளால் ஈரமுற்று;* ***செய்ய*** *- சிவந்த;* ***இருகுழை தொடரும்*** *- இரு செவிக் குழைகளையும் தொட்டு மீளும்;* ***வேற்கண்*** *- வேல் விழி கொண்ட;* ***மயிலொடும் இருந்தது எய்ப்ப*** *- ஒரு மயிலோடு விளங்கியது போன்று;* ***பெருகிய செல்வி கண்டார்*** *- விரியும் அழகினைக் கண்டவர்கள்;* ***பிறப்பு எனும் பிணிகள் தீர்ந்தார்*** *- பிறப்பு என்ற நோய் தீரப் பெற்றவர்கள் ஆயினர்.*

***10326. தெய்வ நீராடற்கு ஒத்த செய் வினை வசிட்டன்***
***செய்ய,***
***ஐயம் இல் சிந்தையான் அச் சுமந்திரன்***
***அமைச்சரோடும்***
***நொய்தினின் இயற்ற, நோன்பின் மாதவர் நுனித்துக்***
***காட்ட,***
***எய்தின இயன்ற பல் வேறு, இந்திரற்கு இயன்ற***
***என்ன.***

***தெய்வ நீர் ஆடற்கு ஏற்ற*** *- புனித தீர்த்தங்கள் அபிடேகம் செய்தற்குப் பொருத்தமான;* ***செய்வினை*** *- சடங்குகளை;* ***வசிட்டன் செய்ய*** *- வசிட்ட முனிவன்*

*இயற்றுமாறு;* ***நோன்பின் மாதவர்*** *- விரத வேதியர்கள்;* ***நுனித்துக் காட்ட*** *- நுட்பங்களைச் சுட்டிக் காட்ட;* ***ஐயமில் சிந்தையான்*** *- தெளிவு மிக்க சிந்தனையாளனாகிய;* ***அச்சுமந்திரன்*** *- அந்தச் சுமந்திரன்;* ***அமைச்சரோடும்*** *- அமைச்சர் பெருமக்களோடு;* ***நொய்தினின் இயற்ற*** *- விரைந்து பணி செய்ய;* ***இந்திரற்கு இயன்ற என்ன*** *- இந்திரனுக்கு அமைவது போன்று;* ***பல்வேறு இயன்ற எய்தின*** *- பல்வகைப் பொருள்களும் வந்து சேர்ந்தன.*

## *வசிட்டன் இராமனுக்கு முடி புனைதல்*

***10327. அரியணை அனுமன் தாங்க, அங்கதன் உடை வாள் ஏந்த,***
***பரதன் வெண் குடை கவிக்க, இருவரும் கவரி பற்ற,***
***விரை செறி குழலி ஓங்க, வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்***
***மரபுளோர் கொடுக்க வாங்கி, வசிட்டனே புனைந்தான், மௌலி.***

***அரி அணை அனுமன் தாங்க*** *- சிங்காதனத்தை அனுமன் காத்து நிற்கவும்;* ***அங்கதன் உடைவாள் ஏந்த*** *- அங்கதன் உடை வாளை ஏந்தி நிற்கவும்;* ***பரதன் வெண்குடை கவிக்க*** *- வெண் கொற்றக் குடையைப் பரதன் பிடித்து நிழற்றவும்;* ***இருவரும் கவரி பற்ற*** *- இலக்குவ சத்துருக்கர் இருவரும் சாமரை ஏந்தவும்;* ***விரைசெறி*** *- மணம் கமழ்கிற;* ***குழலி ஓங்க*** *- கூந்தலை உடைய பிராட்டி பெருமிதமாய் விளங்கவும்;* ***வெண்ணெயூர்ச் சடையன்*** *- திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளல்;* ***தங்கள் மரபுளோர்*** *- கால் வழியின் முன்னோராக உள்ளோர்;* ***கொடுக்க வாங்கி*** *- கொடுக்கப் பெற்றுக்கொண்டு;* ***மௌலி*** *- மகுடத்தை;* ***வசிட்டனே புனைந்தான்*** *- வசிட்ட முனிவனே சூட்டினான்.*

*கம்ப நாடர் இப்பாடலில் தன்னை வாழ்வித்த சடையப்ப வள்ளலுக்கு எந்நாளும் அழியாத நன்றி மகுடம் சூட்டியுள்ளார். மன்னர்க்கு முடி கவிக்கும் உரிமை வேளாளருக்கு இருந்ததைச் சோழ நாட்டு வரலாறு கூறும். அத் தமிழ் மரபை இங்கு இணைத்து மகிழ்கிறார் கம்ப நாடர்.*

*வசிட்டனே என்று தேற்றேகாரம் அமைந்தமைக்குக் காரணம், முன்னம் வசிட்டன் திட்டமிட்ட பட்டாபிடேகம் நிறைவேறாது போக, இன்று தானே மீண்டும் முடிசூட்டினான் என்பதை உணர்த்தவே ஆகும். இனி மகாவித்துவான் மயிலம் வே. சிவசுப்பிரமணியன் அவர்கள் கருத்து வருமாறு.*

*பதினான்கு ஆண்டுகள் இராமபிரான் வனவாசம் செய்ததனால் பெற்ற பேறு அனுமனும் அங்கதனும் ஆதலின் அவர்களைப் பரதன் முதலோனோர்க்கு முன் இம்முடி சூட்டும் பாடலில் கூறினார் கம்பர். இராமனையும் இலக்குவனையும்*

*பரதனையும் பிராட்டியையும் மீட்டுத் தந்த பெருமை அனுமனுக்கே உரியதாதலின் அவனே அரியணை நிலைத்தற்கும் உரியவன் என்னும் கருத்தினால் அவனை முதற்கண் 'அரியணை அனுமன் தாங்க' என்றார். இதனை கம்ப. 4143 ஆம் பாடல் கொண்டும் அறிக. முன்பு அங்கதனுக்கு அடைக்கலம் அளித்த போது "பொன்னுடை வாளை நீட்டி நீ இது பொறுத்தி" (கம்ப. 4093) என்றதனை நினைப்பிற் கொண்டு 'அங்கதன் உடைவாள் ஏந்த' என்று கூறினார். பதினான்கு ஆண்டுகளுக்கு முன்னர் முடிசூட்டு விழா நடந்திருக்குமானால் இவ்விருவரையும் ஆண்டுக் காணமுடியாதன்றோ என்பதனை நினையுங்கால் இப்பாடலின் சிறப்பும் வரிசைமுறையும் அழகும் புலனாகும் என்பது. இராமபிரானது வனவாசமாகிய முதலுக்குக் கிடைத்த வட்டி அனுமனும் அங்கதனும் என்பர் வாகீசகலாநிதி கி.வா. ஜகந்நாதன் அவர்கள்.*

***10328. வெள்ளியும் பொன்னும் ஒப்பார் விதி முறை மெய்யின் கொண்ட***
***ஒள்ளிய நாளின், நல்ல ஓரையின், உலகம் மூன்றும்***
***துள்ளின குனிப்ப, மோலி சூடினன் - கடலின் வந்த***
***தெள்ளிய திருவும், தெய்வப் பூமியும், சேரும் தோளான்.***

***கடலின் வந்த*** *- திருப்பாற் கடலில் தோன்றிய;* ***தெள்ளிய திருவும்*** *- தெளிந்த அழகுடைய இலக்குமியும்;* ***தெய்வப் பூமியும்*** *- தெய்வத் தன்மை மிக்க பூமிப் பிராட்டியும்;* ***சேரும்*** *- அணைகின்ற;* ***தோளான்*** *- தோளை உடையவனாகிய இராமபிரான்;* ***கொண்ட ஒள்ளிய நாளின்*** *- தேர்ந்தெடுத்த சிறந்த நன்னாளில்;* ***நல்ல ஓரையின்*** *- சிறந்த நல் வேளையில்;* ***உலகம் மூன்றும் துள்ளின குனிப்ப*** *- மூன்று உலகமும் மகிழ்ச்சி நிரம்பியவாறு வணங்க;* ***வெள்ளியும் பொன்னும் ஒப்பார்*** *- அசுர குரு சுக்கிரனும், தேவ குரு வியாழனும் போன்ற நல்லோர்;* ***விதி முறை*** *- விதித்த முறைப்படியே;* ***மௌலி*** *- மகுடத்தை;* ***மெய்யின் சூடினன்*** *- தலையில் சூடிக் கொண்டான்.*

***10329. சித்தம் ஒத்துளன் என்று ஓதும் திரு நகர்த் தெய்வ நன்னூல்***
***வித்தகன் ஒருவன் சென்னி மிலைச்சியதுஎனினும், மேன்மை***
***ஒத்த மூஉலகத்தோர்க்கும் உவகையின் உறுதி உன்னின்,***
***தம்தம் உச்சியின்மேல் வைத்தது ஒத்தது, அத் தாம மோலி.***

***திரு நகர்த் தெய்வ நன்னூல்*** - *அத்திரு நகர்க் கண் உள்ள தெய்வச் சிறப்பு வாய்ந்த நூல்களில்;* ***வித்தகன்*** - *வல்லவனும்;* ***சித்தம் ஒத்துளன்*** - *மனத்துக்கு இசைந்தவனும்;* ***என்று ஓதும் ஒருவன்*** - *என்று பேசப்படும் ஒப்பற்ற வசிட்ட மாமுனிவன்;* ***சென்னி மிலைச்சியது எனினும்*** - *இராமபிரான் தலையில் சூட்டியது என்றாலும்;* ***அத் தாம மோலி*** - *அவ்வொளி மிகுந்த மகுடம்;* ***மேன்மை ஒத்த*** - *மேன்மை பொருந்திய;* ***மூ உலகத்தோர்க்கும்*** - *மூன்று உலகிலுள்ளோருக்கும்;* ***உவகையின் உறுதி உன்னின்*** - *(அப்போது ஏற்பட்ட) மகிழ்ச்சியின் அளவை எண்ணினால்;* ***தம்தம் உச்சியின் மேல்*** - *தம் சொந்தத் தலையின் மீது;* ***வைத்தது ஒத்தது*** - *வைத்தாற் போல் அமைந்திருந்தது.*

***10330. பல் நெடுங் காலம் நோற்று, தன்னுடைப் பண்பிற்கு ஏற்ற***
***பின் நெடுங் கணவன்தன்னைப் பெற்று, இடைப் பிரிந்து, முற்றும்***
***தன் நெடும் பீழை நீங்கத் தழுவினாள், தளிர்க் கை நீட்டி,***
***நல் நெடும் பூமி என்னும் நங்கை, தன் கொங்கை ஆர.***

***பல் நெடுங்காலம் நோற்று*** - *பல்லாண்டுகள் நீண்ட காலம் நோன்பிருந்து;* ***தன்னுடைய பண்பிற்கு ஏற்ற*** - *தன்னுடைய தகுதிக்கு ஏற்றவாறு;* ***நெடுங் கணவன் பெற்று*** - *உயர்ந்த கணவனை அடைந்து;* ***இடை பிரிந்து*** - *சிறிது காலம் அவனைப் பிரிந்திருந்து;* ***தன் நெடும் பீழை முற்றும் நீங்க*** - *தன் பெருந்துன்பம் முழுவதும் நீங்கிவிட;* ***நன்னெடும் பூமி என்னும் நங்கை*** - *சிறந்த பெரிய பூமி என்னும் மாது;* ***தளிர்க் கை நீட்டி*** - *தளிர்க் கரம் நீட்டி;* ***தன் கொங்கை ஆர*** - *தன் மார்பு குளிர;* ***தழுவினாள்*** - *தழுவி இன்புற்றாள்.*

### *பரதனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டுதல்*

***10331. விரத நூல் முனிவன் சொன்ன விதி நெறி வழாமை நோக்கி,***
***வரதனும், இளைஞற்கு ஆங்கண் மா மணி மகுடம் சூட்டி,***
***பரதனைத் தனது செங்கோல் நடாவுறப் பணித்து, நாளும்***
***கரை தெரிவு இலாத போகக் களிப்பினுள் இருந்தான் மன்னோ.***

***விரத நூல் முனிவன்*** *- விரதம் வழுவாத வேதம் வல்ல வசிட்ட முனிவன்;* ***சொன்ன*** *- சொல்லிய;* ***விதிநெறி*** *- விதி முறைகள்;* ***வழாமை நோக்கி -*** *தவறாது காத்து;* ***வரதனும்*** *- அருளாளனாகிய இராமபிரானும்;* ***இளைஞர்க்கு*** *- தன் தம்பிமார் மூவர்க்கும்;* ***மாமணி மகுடம் சூட்டி*** *- மாணிக்கம் இழைத்த உயர்ந்த மகுடம் அணிவித்து;* ***பரதனை*** *- பரத நம்பியை;* ***தனது செங்கோல் நடாவுறப் பணித்து*** *- தன் செங்கோலாட்சி நடத்துமாறு கட்டளையிட்டு;* ***நாளும்*** *- நாள்தோறும்;* ***கரை தெரிவிலாத போகக் களிப்பினுள் இருந்தான்*** *- எல்லையற்ற இன்ப மகிழ்ச்சியில் திளைத்திருந்தான்.*

*மாபெரும் சோதனைகள் தாண்டி உலகத்து உயிர்களெல்லாம் உவகை பூக்க இராமபிரான் சீதா பிராட்டியோடும் மணி மகுடம் சூடினான். பின்னர் ஒரு முன்னுதாரணம் காட்டுவானாய்த் தம்பியர்க்கும் பொறுப்புகளைப் பகிர்ந்தளித்தான். பரத நம்பிக்கு ஆட்சிப் பங்களித்தான். மெய்யாகவே இராமராச்சியம் என்பது பகிர்ந்தாளும் பண்பாடு உடையது என்று மெய்ப்பித்தான் இராமபிரான்.*

## விடை கொடுத்த படலம்

*முடிசூட்டு விழாவைக் காண வந்திருந்த அனைவர்க்கும் இராமன் விடை கொடுத்தனுப்பியதைக் கூறும் பகுதி என்பது இதன் பொருள்.*

*முடிசூட்டு விழா நடந்தேறிய பிறகு நாள்தோறும் சீதா பிராட்டியோடு திருவோலக்க மண்டபத்தில் மன்னரும் பரிவாரச் சுற்றங்களும் புடைசூழ ஸ்ரீராமன் கொலு வீற்றிருந்து அரசு புரிதலும் அப்போது சுக்ரீவன், வீடணன், குகன் ஆகியோர் தம் சேனை சூழத் திருவோலக்க மண்டபத்துக்கு வருதலும், இராமன் அவர்களை இனிதிருக்க கட்டளையிடுதலும் இவ்வாறு இரண்டு மாதங்கள் கழிதலும் பின்னர் இராமன் மறையவர்களுக்கும் இரவலர்களுக்கும் வேண்டுவன அளித்து அனுப்பி, அரசர்களை வருக என அழைத்து அவர்கள் வந்த பின்னர் அவர்களுக்குப் பரிசுகள் அளித்து விடை கொடுத்து அனுப்புதலும், சுக்ரீவனுக்கும் அங்கதனுக்கும் அனுமனுக்கும் சாம்பனுக்கும் நீலனுக்கும் சதவலிக்கும் கேசரிக்கும் நளன், குமுதன், தாரன், பனசன் மற்றுமுள்ள அறுபத்தேழு கோடியாம் வானர சேனைத் தலைவர்க்கும் வரிசைக்கு ஒப்ப ஈந்து விடைகொடுத்தலும் வீடணனுக்கும் குகனுக்கும் அவரவர் சிறப்பிற்கேற்ப உரிய வரிசைகள் தந்து அவரவரை அவரவர்தம் நாட்டிற்குச் சென்று இனிது அரசு செய்யுமாறு பணித்து விடை கொடுத்தலும் அவர்கள் பரத, இலக்குவ, சத்துருக்கனர்களையும் வசிட்டரையும், தாயரையும், சீதாபிராட்டியையும் இராமபிரானையும் வலங்கொண்டு பணிந்து விடைபெற்றுத் தத்தம் பதியைச் சார்தலும் அவர்களையெல்லாம் அனுப்பி வைத்து, அயோத்தியில் வையகம் எல்லாம் செங்கோல் மனுநெறி முறையில் செல்ல இராமன் இனிது அரசாட்சி செய்திருத்தலும் ஆகிய செய்திகள் இப்படலத்துக் கூறப்பட்டுள்ளன.*

### *இராமன் சீதையோடு அரியணையில் வீற்றிருத்தல்*

***10332. பூமகட்கு அணிஅது என்னப் பொலி பசும் பூரி சேர்த்தி,***
***மா மணித் தூணின் செய்த மண்டபம்அதனின் நாப்பண்,***
***கோமணிச் சிவிகைமீதே, கொண்டலும் மின்னும் போல,***
***தாமரைக் கிழத்தியோடும் தயரத ராமன் சார்ந்தான்.***

***பூமகட்கு அணி அது என்ன*** *- நிலமகளுக்கு இது ஓர் அணிகலன் என்று சொல்லும்படியாக;* ***பொலி பசும் பூரி சேர்த்தி மாமணித் தூணின் செய்த மண்டபம் அதனின் நாப்பண்*** *- விளங்கும் பசிய பொன்னைக் கொண்டு சிறந்த மணிக்கற்களால் ஆகிய தூண்களை அமைத்துச் செய்த திருவோலக்க மண்டபத்தின் நடுவில்;* ***கோமணிச் சிவிகை மீதே*** *- சிறந்த மணிகள் அழுத்திச் செய்த பல்லக்கின் மேல்;* ***கொண்டலும் மின்னும் போல*** *- மேகமும் மின்னலும் போல;* ***தயரதராமன்*** *- தசரத சக்கரவர்த்தியின் புதல்வனான ஸ்ரீராமன்;* ***தாமரைக்***

***கிழத்தியோடும்*** - *தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளாகிய சீதாபிராட்டியோடும்;* ***சார்ந்தான்*** - *வந்து சேர்ந்தான்.*

*பல்லக்கில் ஏறி அத்தாணி மண்டபத்துக்கு வந்து சேர்ந்தான். பூரி - பொன்.*

***10333. விரி கடல் நடுவண் பூத்த மின் என ஆரம் வீங்க,***
***எரி கதிர்க் கடவுள்தன்னை இனமணி மகுடன் ஏய்ப்ப,***
***கரு முகிற்கு அரசு செந்தாமரை மலர்க் காடு பூத்து,***
***ஓர்***
***அரியணைப் பொலிந்தது என்ன, இருந்தனன்,***
***அயோத்தி வேந்தன்.***

***அயோத்தி வேந்தன்*** - *அயோத்தி நகருக்கு அரசனான ஸ்ரீராமன்;* ***விரிகடல் நடுவண் பூத்த மின் என ஆரம் வீங்க*** - *அகன்ற கடலின் நடுவில் தோன்றிய மின்னலைப் போல முத்தாரம் மார்பில் தோன்ற;* ***எரி கதிர்க்கடவுள் தன்னை இனமணி மகுடம் ஏய்ப்ப*** - *பிரகாசிக்கிற ஆயிரம் கிரணங்களை உடைய சூரியனைக் கூட்டமான மணிகள் அழுத்திச் செய்யப் பெற்ற கிரீடம் ஒத்திருக்க;* ***கருமுகிற்கு அரசு செந்தாமரை மலர்க்காடு பூத்து*** - *கருமேகத்துக்கு அரசானது செந்தாமரைப் பூக்கள் காடுபோலத் தன்னிடையே பூக்கப் பெற்று;* ***ஓர் அரியணைப் பொலிந்தது என்ன இருந்தனன்*** - *ஒரு சிம்மாசனத்தில் வீற்றிருந்தது என்று சொல்லும்படி வீற்றிருந்தான்.*

***10334. மரகதச் சயிலமீது வாள் நிலாப் பாய்வது என்ன,***
***இரு குழை இடறும் வேற் கண், இளமுலை, இழை***
***நலார்தம்***
***கரகமலங்கள் பூத்த கற்றை அம் கவரி தெற்ற,***
***உரகரும், நரரும், வானத்து உம்பரும், பரவி ஏத்த,***

***மரகதச் சயில மீது வாள் நிலாப் பாய்வது என்ன*** - *பச்சைமணியால் ஆகிய மலையின் மேல் ஒளி நிலா வெள்ளம் பாய்வது போல;* ***இருகுழை இடறும் வேற்கண், இளமுலை, இள நலார்தம் கர கமலங்கள் பூத்த கற்றை அம்கவரி தெற்ற*** - *இரண்டு காதணிகளை முட்டித்தள்ளும் வேல் போன்ற நீண்ட கண்களையும், இளமுலைகளையும் உடைய இளமையும் அழகும் உடைய மகளிரது கைகளாகிய தாமரை மலரில் பூத்த வெண் சாமரைகள் மேலே வீசப்பெற;* ***உரகரும் நரரும் வானத்து உம்பரும் பரவி ஏத்த*** - *நாகலோகத்தினரும், புனிதர்களும் தேவலோகத் தேவரும் பரவித் தோத்திரம் செய்ய.*

*10335. **உலகம் ஈர் - ஏழும் தன்ன ஒளி நிலாப் பரப்ப, வானில்***
***திலக வாள் நுதல் வெண் திங்கள் சிந்தை நொந்து, எளிதின் தேய,***
***கலக வாள் நிருதர் கோனைக் கட்டழித்திட்ட கீர்த்தி***
***இலகி மேல் நிவந்தது என்ன, எழு தனிக் குடை நின்று ஏய.***

***திலக வாள் நுதல்*** *- இராமபிரானது திலகம் அணிந்த ஒளிபடைத்த நெற்றி;* ***உலகம் ஈர்எழும் தன்ன ஒளிநிலாப் பரப்ப*** *- பதினான்கு உலகங்களிலும் தனது நிலவொளியைப் பரவச் செய்தலால்;* ***வானில் வெண் திங்கள் சிந்தை நொந்து எளிதின் தேய*** *- வானத்தில் வரும் வெண்ணிலவானது மனம் வருந்தி மெல்ல மெல்லத் தேய்ந்து போக;* ***எழுதனிக் குடை*** *- அரியணைக்கு மேலாக எழுந்துள்ள வெண்கொற்றக் குடையானது;* ***கலக வாள் நிருதர் தன்னைக் கட்டழித்திட்ட கீர்த்தி இலகி மேல் நிவந்தது என்ன*** *- கலகமிடுகின்ற கொடிய அரக்கர்களை அடியோடு இல்லையாம் படிச் செய்த பெரும்புகழ் விளங்கி மேல் உயர்ந்துள்ளது போல;* ***நின்று ஏய*** *- நின்று பொருத்தமுற அமைய.*

*புகழ் வெண்மை நிறமாதலின் அது குடைக்கு உவமையாயிற்று. 'திலகவாள் நுதல் போன்ற வெண்திங்கள்' என்று நுதலைத் திங்களுக்கு அடையாக்கி, குடையின் ஒளி நிலா உலகம் ஈரேழும் பரவுதலால் திங்கள் சிந்தை நொந்து தேய' எனப் பொருள் உரைத்தல் சிறந்தது என்பது என் குருநாதர் மகாவித்துவான் மயிலம் வே. சிவசுப்பிரமணியன் அவர்கள் கருத்து.*

*10336. **மங்கல கீதம் பாட, மறையவர் ஆசி கூற,***
***சங்குஇனம் குமுற, பாண்டில் தண்ணுமை துவைப்ப, தா இல்***
***பொங்கு பல்லியங்கள் ஆர்ப்ப, பொரு கயல் கருங் கண், செவ் வாய்***
***பங்கய முகத்தினார்கள் மயில் நடம் பயில மாதோ.***

***மங்கல கீதம் பாட*** *- மங்கலப் பாடல்கள் பாடப்பெற;* ***மறையவர் ஆசி கூற*** *- அந்தணர்கள் ஆசீர்வாத மொழிகளைக் கூற;* ***சங்கு இனம் குமுற*** *- சங்கங்கள் ஊதப் பெற;* ***பாண்டில் தண்ணுமை துவைப்ப*** *- தாளமும் மத்தளமும் ஒலியைச் செய்ய;* ***தாஇல் பொங்கு பல்லியங்கள் ஆர்ப்ப*** *- குற்றமற்ற பலவகையான வாத்தியங்கள் ஆரவாரிப்ப;* ***பொருகயல், கருங்கண், செவ்வாய், பங்கய முகத்தினார்கள்*** *- பொருகின்ற கயல்மீன் போன்ற கரிய கண்ணையும், சிவந்த வாயையும் உடைய தாமரை போன்ற முகத்தினராய மகளிர்கள்;* ***மயில் நடம் பயில*** *- மயில் போல நடனம் ஆடவும்.*

*பாண்டில் - தாளம், மாதோ - அசை.*

*10337.* ***திரை கடல் கதிரும் நாணச் செழு மணி மகுட கோடி***
***கரை தெரிவு இலாத சோதிக் கதிர் ஒளி பரப்ப, நாளும்***
***வரை பொரு மாட வாயில் நெருக்குற வந்து, மன்னர்***
***பரசியே வணங்கும்தோறும் பதயுகம் சேப்ப மன்னோ.***

***திரைகடல் கதிரும் நாண*** - *அலைகடலின் மேல் தோன்றுகின்ற உதய சூரியனும் நாணமுறும் படி;* ***செழுமணி மகுட கோடி*** - *(வணங்க வந்த மன்னர்களின்) செழுமையான மணிகள் அழுத்திச் செய்யப் பெற்ற மகுட வரிசைகள்;* ***கரை தெரிவு இலாத சோதிக் கதிர் ஒளி பரப்ப*** - *முடிவு காணமுடியாத சோதிப் பிரகாசத்தை எங்கும் பரவச் செய்யும்படி;* ***நாளும் வரைபொரு மாட வாயில் நெருக்குற வந்து*** - *நாள்தோறும் மலையொத்த அரண்மனை வாயிலில் நெருக்கித்தள்ளி வந்து;* ***மன்னர் பரசியே வணங்குந்தோறும் பதயுகம் சேப்ப*** - *அரசர்கள் விழுந்து வணங்குதலால் திருவடியிணைகள் சிவந்து போகவும்.*

*10338.* ***மந்திரக் கிழவர் சுற்ற, மறையவர் வழுத்தி ஏத்த,***
***தந்திரத் தலைவர் போற்ற, தம்பியர் மருங்கு சூழ,***
***சிந்துரப் பவளச் செவ் வாய்த் தெரிவையர் பலாண்டு கூற,***
***இந்திரற்கு உவமை ஏய்ப்ப எம்பிரான் இருந்தகாலை.***

***மந்திரக் கிழவர் சுற்ற*** - *அரசனது ஆலோசனைக்குரிய அமைச்சர் முதலியோர் சுற்றியிருப்ப;* ***மறையவர் வழுத்தி ஏத்த*** - *அந்தணர்கள் தோத்திரம் செய்து பாராட்ட;* ***தந்திரத் தலைவர் போற்ற*** - *சேனைத் தலைவர்கள் துதிக்க;* ***தம்பியர் மருங்கு சூழ*** - *பரத இலக்குவ சத்துருக்கனராகிய தம்பிமார்கள் பக்கத்தில் சூழ இருப்ப;* ***சிந்துரப் பவளச் செவ்வாய்த் தெரிவையர் பலாண்டு கூற*** - *செந்நிறமான பவளம் போன்ற சிவந்த வாயை உடைய மகளிர்கள் பல்லாண்டு கூறி வாழ்த்த; (இவ்வாறு)* ***எம்பிரான்*** - *ஸ்ரீராமபிரான்;* ***இந்திரற்கு உவமை ஏய்ப்ப இருந்த காலை*** - *இந்திரன் திருவோலக்க மிருந்தமைக்கு உவமை சொல்லலாம் படி வீற்றிருந்த பொழுது.*

*இராமபிரானது திருவோலக்கத்துக்கு இந்திரனது திருவோலக்கத்தை உவமை யாக்கினால் இந்திரனது திருவோலக்கம் இதனினும் சிறந்ததாகிவிடும்; 'உவமை உயர்ந்ததாதலின்' என்று கருதிய கவிச் சக்கரவர்த்தி உவமையாக்கி இதுபோல இந்திரனது திருவோலக்கம் உள்ளது என்று சொல்லி அதனினும் இது மேம்பட்டது என்ற கருத்தைப் பெற வைக்கவே 'இந்திரற்கு உவமை ஏய்ப்ப எம்பிரான் இருந்த' என்றார். இந்நயம் நினையுந்தொறும் இன்பம் பயப்பது என்பது என் குருநாதர் மகாவித்துவான், மயிலம். வே.சிவசுப்பிரமணியன் அவர்கள் கருத்து.*

*சுக்ரீவன், வீடணன், குகன் வணங்கல்*

*10339.* ***மயிந்தன், மா துமிந்தன், கும்பன், அங்கதன், அனுமன், மாறு இல்***
***சயம் தரு குமுதக்கண்ணன், சதவலி, குமுதன், தண் தார்***
***நயம் தெரி ததிமுகன், கோகசமுகன் முதல நண்ணார்***
***வியந்து எழும் அறுபத்து ஏழு கோடியாம் வீரரோடும்.***

**மயிந்தன், மாதுமிந்தன், கும்பன், அங்கதன், அனுமன், மாறுஇல் சயம் தரு குமுதக்கண்ணன், சதவலி, குமுதன், தண்தார் நயம் தெரி ததிமுகன், கோகசமுகன் முதல நண்ணார் வியந்து எழும்** - *பகைவர்கள் ஆச்சரியப்படும்படியான;* **அறுபத்து ஏழு கோடியாம் வீரரோடும்** - *வானர சேனைத் தலைவர்கள் அறுபத்தேழு கோடியினர். சுக்கிரீவனுடன் வந்தோர்களுடன்.*

*10340.* ***ஏனையர் பிறரும் சுற்ற, எழுபது வெள்ளத்து உற்ற***
***வானரரோடும் வெய்யோன் மகன் வந்து வணங்கிச் சூழ,***
***தேன் இமிர் அலங்கல் பைந் தார் வீடணக் குரிசில், செய்ய***
***மான வாள் அரக்கரோடு வந்து, அடி வணங்கிச் சூழ்ந்தான்.***

**ஏனையர் பிறரும் சுற்ற** - *எழுபது வெள்ளத்துற்ற வானரரோடும்;* **வெய்யோன் மகன்** - *சுக்கிரீவன்;* **வந்து வணங்கிச் சூழ - தேன் இமிர் அலங்கல் பைந்தார் வீடணக் குரிசில்** - *வண்டுகள் ஒலிக்கின்ற அசையும் பசிய மாலை அணிந்த வீடண நம்பி;* **செய்யமான வாள் அரக்கரோடும் வந்து** - *சீரிய பெருமை படைத்த கொடிய அரக்கர்களோடும் வந்து;* **அடிவணங்கிச் சூழ்ந்தான்** - *இராமன் திருவடியை வணங்கிச் சுற்றியிருந்தான்.*

*10341.* ***வெற்றி வெஞ் சேனையோடும், வெறிப் பொறிப் புலியின் வெவ் வால்***
***சுற்றுறத் தொடுத்து வீக்கும் அரையினன், சுழலும் கண்ணன்,***
***கல் திரள் வயிரத் திண் தோள் கடுந் திறல் மடங்கல் அன்னான்,***

***எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறை, குகன்,***
***தொழுது சூழ்ந்தான்.***

**வெறிப் பொறிப் புலியின் வெவ்வால்** - *நிறம் அமைத்த புள்ளிகளை உடைய புலியின் கொடிய வாலை;* **சுற்றுறத் தொடுத்து வீக்கும் அரையினன்** - *சுற்றி இழுத்துக் கட்டிய இடுப்பை உடைய;* **சுழலும் கண்ணன்** - *சுழல்கின்ற கண்களை உடைய;* **கல்திரள்**

**வயிரத்திண்தோள்** - *கல்லைப் போல உருண்ட வலிய தோள்களை உடைய;* **கடுந்திறல் மடங்கல் அன்னான்** - *மிக்க வலிமை படைத்த சிங்கத்தைப் போன்றவனாகிய;* **எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறை குகன்** - *கரையோடு மோதுகின்ற நீர்ப்பெருக்கினை உடைய கங்கையில் உள்ள மரக்கலங்களுக்குத் தலைவன் ஆகிய குகன்;* **வெற்றி வெஞ்சேனையோடும்** - *தன்னுடைய வெற்றி பெற்ற கொடிய சேனையோடும்;* **தொழுது சூழ்ந்தான்** - *இராமனை வணங்கிச் சுற்றி இருந்தான்.*

## *இராமன் அனைவர்க்கும் முகமன் கூறல்*

***10342. வள்ளலும் அவர்கள்தம்மேல் வரம்பு இன்றி வளர்ந்த***
***காதல்***
***உள்ளுறப் பிணித்த செய்கை ஒளி முகக் கமலம்***
***காட்டி,***
***அள்ளுறத் தழுவினான் போன்று அகம் மகிழ்ந்து,***
***இனிதின் நோக்கி,***
***'எள்ளல் இலாத மொய்ம்பீர்! ஈண்டு இனிது***
***இருத்திர்' என்றான்.***

**வள்ளலும்** - *இராமபிரானும்;* **அவர்கள் தம்மேல் வரம்பு இன்றி வளர்ந்த காதல்** - *அத்துணைவர்களிடத்து அளவுபடாது வளர்ந்த பேரன்பானது;* **உள்ளுறப் பிணித்த செய்கை** - *தன்மனத்தை இறுகக் கட்டியிருக்கிற பாங்கினை;* **ஒளி முகக் கமலம் காட்டி** - *ஒளி சிறந்த தனது முகத்தாமரை மூலம் காண்பித்து;* **அள்ளுறத் தழுவினான் போன்று அகம் மகிழ்ந்து** - *நெஞ்சாரத் தழுவினவனைப் போல மனம் மகிழ்ச்சி அடைந்து;* **இனிதின் நோக்கி** - *கருணைப் பார்வையால் இனிமையாகப் பார்த்து;* **'எள்ளல் இலாத மொய்ம்பீர்** - *இகழப் படாத வலிமை படைத்தவர்களே!* **ஈண்டு இனிது இருத்திர்** - *இங்கே இனிமையாக இருங்கள்; என்றான் -*

***10343. நல் நெறி அறிவு சான்றோர், நான்மறைக் கிழவர்,***
***மற்றைச்***
***சொல் நெறி அறிவு நீரார், தோம் அறு புலமைச்***

***செல்வர்,***
***பல் நெறிதோறும் தோன்றும் பருணிதர், பண்பின்***
***கேளிர்,***
***மன்னவர்க்கு அரசன் பாங்கர், மரபினால்***
***சுற்றம்ன்னோ.***

***நல்நெறி அறிவு சான்றோர்*** - *சாத்திரங்களிற் கூறப்பட்ட நல்ல வழிகளால் ஆகிய அறிவான் அமைந்தவர்கள்;* ***நான்மறைக் கிழவர்*** - *சதுர் வேத பாரகர்;* ***மற்றைச் சொல் நெறி அறிவு நீரார்*** - *வேறுபட்ட பல்துறை அறிவிற் சிறந்த தன்மை உடையவர்கள்;* ***தோம் அறு புலமைச் செல்வர்*** - *குற்றமற்ற புலமையால் உயர்ந்தவர்கள்;* ***பல்நெறிதோறும் தோன்றும் பருணிதர்*** - *பல்வகைப்பட்ட சாத்திரங்களினும் நுட்ப அறிவு பெற்ற நிபுணர்கள்;* ***பண்பின் கேளிர்*** - *நற்குணங்களுக்கு உறைவிடம் ஆனவர் (ஆகியோர்);* ***மன்னவர்க்கு அரசன் பாங்கர்*** - *சக்கரவர்த்தியாகிய ஸ்ரீராமன் அருகில்;* ***மரபினால் சுற்ற*** - *அவரவர்க்கு உரிய முறைமைப் படி சுற்றியிருப்ப.*

*மன், ஓ - அசைநிலை.*

*10344.* ***தேம் படு படப்பை மூதூர்த் திருநகர் அயோத்தி***
***சேர்ந்த***
***பாம்பு - அணை அமலன்தன்னைப் பழிச்சொடும்***
***வணக்கம் பேணி,***
***வாம் புனல் பரவை ஞாலத்து அரசரும் மற்றுளோரும்***
***ஏம்பல் உற்று இருந்தார்; நொய்தின், இரு மதி***
***இறந்தது அன்றே.***

***தேம்பரு படப்பை மூதூர்த் திருநகர் அயோத்தி சேர்ந்த பாம்பணை அமலன் தன்னைப் பழிச்சொடு வணக்கம் பேணி*** - *தேன் சிந்துகின்ற சோலைகள் சூழ்ந்த பழமையான ஊராகிய அயோத்தி என்னும் திருநகரை வந்தடைந்த ஆதிசேஷ சயனனாகிய பெரிய பெருமாளைத் தோத்திரம் செய்து வணங்கி;* ***வாம்புனல் பரவை ஞாலத்து அரசரும் மற்றுளோரும்*** - *தரைமேல் வாவுகின்ற நீரை உடைய கடலாற் சூழப் பெற்ற இவ்வுலகத்து அரசர்களும் மற்றும் உள்ளவர்களும்;* ***ஏம்பல் உற்று இருந்தார்*** - *மகிழ்ச்சி அடைந்து இருந்தார்கள் (இவ்வாறு);* ***நொய்தின்*** - *இலேசாக;* ***இருமதி இறந்தது*** - *இரண்டு திங்கள் சென்றது 'பாம்பணை அமலன்' இட்சுவாகு குலதனமாகிய ஸ்ரீரங்கநாதன் என்னும் பெரிய பெருமாளாகும். திருமாலின் அவதாரமாகிய ஸ்ரீராமன் என்றுரைப்பாரும் உளர். அது முன்னும் இப்படலத்துப் பல இடங்களிலும் வந்துள்ளமையின் பெரிய பெருமாள் என்பதே இங்குச் சிறப்புடைத்து. அன்று, ஏ - அசைகள்.*

*10345.* ***நெருக்கிய அமரர் எல்லாம் நெடுங் கடற் கிடை நின்று ஏத்த,***
***பொருக்கென அயோத்தி எய்தி, மற்று அவர் பொருமல் தீர,***
***வருக்கமோடு அரக்கர் யாரும் மடிதர, வரி வில் கொண்ட***
***திருக் கிளர் மார்பினான் பின் செய்தது செப்பலுற்றாம்:***

**நெருக்கிய அமரர் எல்லாம்** - *ஒன்று திரண்ட தேவர்கள் எல்லாம்;* **நெடுங்கடற்கு இடைநின்று ஏத்த** - *பெரிய திருப்பாற் கடலின் இடையிலே நின்று துதிக்க;* **மற்று அவர் பொருமல் தீர** - *துன்புற்ற அவர்களது துயரம் நீங்கும்படி;* **பொருக்கென** - *விரைவாக;* **அயோத்தி எய்தி** - *அயோத்தியை அடைந்து;* **அரக்கர் யாரும் வருக்கமொடு மடிதர** - *அரக்கர்கள் எல்லாம் தம் கூட்டத்தோடு அழிந்து போக;* **வரிவில் கொண்ட திருக்கிளர் மார்பினான்** - *கட்டமைந்த வில்லைக் கையில் ஏந்திய திருமகள் விளங்கும் மார்பினனாகிய ஸ்ரீராமன்;* **பின் செய்தது செப்பலுற்றாம்** - *பின்னால் செய்த செயல்களைக் கூறத் தொடங்கினோம். இது கவிக்கூற்று.*

*இதனை முன்னர் 184 முதல் 203 வரை உள்ள பாலகாண்டப் பாடல்களைப் பொருத்தி அறிந்து கொள்க.*

*மறையவர் தானம் கொள்ளல்*

*10346.* ***மறையவர்தங்கட்கு எல்லாம் மணியொடு முத்தும் பொன்னும்,***
***நிறை வளம் பெருகு பூவும், சுரபியும், நிறைத்து, மேல் மேல்,***
***'குறை இது; என்று இரந்தோர்க்கு எல்லாம் குறைவு அறக் கொடுத்து, பின்னர்,***
***அறை கழல் அரசர்தம்மை 'வருக' என அருள, வந்தார்.***

***(இராமன்)*** - *மறையவர் தங்கட்கு எல்லாம் - அந்தணர்க்கெல்லாம்;* **மணியொடு முத்தும் பொன்னும்** -; **நிறைவளம் பெருகு பூவும் சுரபியும்** - *நிறைந்த வளந்தரக்கூடிய பூமியும், பசுவும்;* **நிறைத்து** - *நிறையும்படிக் கொடுத்து;* **மேல் மேல்** - *மேலும் மேலும்;* ***'குறை இது' என்று இரந்தோர்க் கெல்லாம் குறைவு அறக் கொடுத்து*** - *தமக்கு இது வேண்டும் என்று கேட்டவர்களுக்கெல்லாம் அவர்களுடைய குறைவு தீரும்படி வேண்டுமளவு கொடுத்து;* **பின்னர்** - *பிறகு;* **அறை கழல் அரசர்தம்மை** -

*ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்த அரசர்களை;* ***'வருக' என அருள*** *- வருக என்று அழைத்தருள;* ***வந்தார்*** *- அவர்களும் வந்தார்கள்.*

## *இராமன் யாவர்க்கும் விடை கொடுத்தல்*

***10347. அய்யனும் அவர்கள்தம்மை அகம் மகிழ்ந்து, அருளின் நோக்கி,***
***வய்யகம், சிவிகை, தொங்கல், மா மணி மகுடம், பொன் பூண்,***
***கொய் உளைப் புரவி, திண் தேர், குஞ்சரம் ஆடை இன்ன***
***மெய் உறக் கொடுத்த பின்னர், கொடுத்தனன் விடையும் மன்னோ.***

***அய்யனும்*** *- இராமனும்; அவர்கள் தம்மை - அரசர்களை;* ***அகம் மகிழ்ந்து அருளின் நோக்கி*** *- மனமகிழ்ச்சியுற்று அருளோடு பார்த்து;* ***வையகம், சிவிகை, தொங்கல், மாமணி மகுடம், பொன்பூண், கொய் உளைப் புரவி, திண்தேர், குஞ்சரம், ஆடை இன்ன -; மெய் உறக் கொடுத்த பின்னர்*** *- நன்றாக கொடுத்த பிறகு;* ***விடையும் கொடுத்தனன்*** *- அவர்கள் தம்மூர் செல்ல விடை ஈந்து அனுப்பினான்.*

*மன், ஓ - அசைகள், வையகம் - எதுகை நோக்கி போலியாய் 'வய்யகம்' ஆயிற்று. தொங்கல் - மாலை. குஞ்சரம் - யானை. இவர்கள் முடிசூட்டுவிழாக் காண வந்தவர்கள்.*

***10348. சம்பரன்தன்னை வென்ற தயரதன் ஈன்ற காலத்து***
***உம்பர்தம் பெருமான் ஈந்த ஒளி மணிக் கடகத்தோடும்,***
***கொம்புடை மலையும், தேரும், குரகதக் குழுவும், தூசும்,-***
***அம்பரம்தன்னை நீத்தான் - அலரி காதலனுக்கு ஈந்தான்.***

***அம்பரம் தன்னை நீத்தான்*** *- திருப்பாற்கடலைத் துறந்து அயோத்தியில் அவதரித்த இராமபிரான்;* ***சம்பரன்தன்னை வென்ற தயரதன்*** *- இந்திரன் பகையாகிய சம்பரனை வென்ற தயரதசக்கரவர்த்தி;* ***ஈன்ற காலத்து*** *- தன்னைப் பெற்றெடுத்த பொழுது;* ***உம்பர்தம் பெருமான் ஈந்த ஒளிமணிக் கடகத்தோடும்*** *- தேவர் தலைவனாகிய இந்திரன் தனக்குக் கொடுத்த ஒளிபடைத்த மணிகள் அழுத்திய கடகத்தோடும்;* ***கொம்புடைமலையும்*** *- யானைகளும்;* ***தேரும் -; குருகதக் குழுவும்*** *- குதிரைக்*

*கூட்டமும்; **தூசும்** - பட்டாடையும் (ஆகியவற்றை); **அலரி** - சூரியனது; **காதலனுக்கு** - மகனாகிய சுக்கிரீவனுக்கு; **ஈந்தான்** -.*

***10349. அங்கதம் இலாத கொற்றத்து அண்ணலும், அகிலம் எல்லாம்***
***அங்கதன் என்னும் நாமம் அழகுறத் திருத்துமாபோல்,***
***அங்கதம் கன்னல் தோளாற்கு அயன் கொடுத்ததனை ஈந்தான்;***
***அங்கு அதன் பெருமை மண்மேல் ஆர் அறிந்து அறையகிற்பார்?***

***அங்கதம் இலாத கொற்றத்து அண்ணலும்** - பழிப்பில்லாத வெற்றியை உடைய இராகவனும்; **அகிலம் எல்லாம்** - இந்த உலகம் முழுவதும்; **அங்கதன் என்னும் நாமம்** - அங்கதன் என்ற அவனுடைய பெயரை; **அழகுறத் திருத்துமா போல்** - அழகு பொருந்த வழங்கச் செய்யுமாறு போல; **அங்கதம்** - தோள் வளையை; **கல்நல் தோளாற்கு அயன் கொடுத்ததனை** - கல்போன்ற நல்ல தோளை உடைய இட்சுவாகு மன்னனுக்கு பிரமன் கொடுத்ததாகிய அதனை; **ஈந்தான்** - (அங்கதனுக்கு) கொடுத்தான்; **அங்கு அதன் பெருமை மண்மேல் ஆர் அறிந்து அறையகிற்பார்?** - அந்தத் தோள்வளையின் பெருமையை இந்நிலவுலகில் யாரால் அறிந்து சொல்ல முடியும்.*

***10350. பின்னரும், அவனுக்கு ஐயன் பெரு விலை ஆரத்தோடும்***
***மன்னும் நுண் தூசும், மாவும், மதமலைக்கு அரசும்; ஈயா,***
***'உன்னை நீ அன்றி, இந்த உலகினில் ஒப்பு இலாதாய்!***
***மன்னுக, கதிரோன் மைந்தன்தன்னொடும் மருவி' என்றான்.***

***ஐயன்** - இராமன்; **அவனுக்கு** - அங்கதனுக்கு; **பின்னரும்** - மேலும்; **பெருவிலை ஆரத்தோடும்** - மிக்க விலை உடைய முத்துமாலையோடும்; **மன்னும் நுண் தூசும்** - நிலைபெற்ற நுண்ணிய பட்டாடையும்; **மாவும்** - குதிரையும்; **மதமலைக்கு அரசும்** - யானையும்; **ஈயா** - அளித்து; **'உன்னை நீ அன்றி இந்த உலகினில் ஒப்பு இலாதாய்!** - உனக்கு நீயே அல்லாமல் இந்த உலகில் வேறு உவமை சொல்ல முடியாமல் சிறந்தவனே! **கதிரோன் மைந்தன் தன்னொடும் மருவி மன்னுக** - சுக்கிரீவனோடும் பொருந்தி வாழ்க; **என்றான்** -.*

*10351. **மாருதிதன்னை ஐயன் மகிழ்ந்து, இனிது அருளின் நோக்கி,***
***'ஆர் உதவிடுதற்கு ஒத்தார், நீ அலால்? அன்று செய்த***
***பேர் உதவிக்கு யான் செய் செயல் பிறிது இல்லை; பைம் பூண்***
***போர் உதவிய திண் தோளாய்! பொருந்துறப் புல்லுக!' என்றான்.***

***ஐயன் மாருதி தன்னை மகிழ்ந்து இனிது அருளின் நோக்கி*** *- இராமன் அனுமனை மகிழ்ச்சியோடு இனிமையாக அருட் பார்வை பார்த்து;* ***'பைம்பூண் போர் உதவிய திண்தோளாய்!*** *- பசிய பூண் அணிந்த போர்க்குத் தகுதியாகிய வலிய தோளை உடையவனே!* ***நீ அலால் ஆர் உதவிடுதற்கு ஒத்தார்?*** *- நீ அல்லாமல் வேறு யார் உதவி செய்வதற்கு ஏற்றவர்கள் உளர்;* ***அன்று செய்த பேர் உதவிக்கு யான் செய் செயல் பிறிது இல்லை*** *- அன்று இராவணயுத்தத்தின் போது நீ ஆற்றிய பெரிய உதவிகளுக்கு நான் செய்யக்கூடிய கைம்மாறாகிய செயல் வேறு எதுவும் இல்லை;* ***'பொருந்துறப் புல்லுக'*** *- என்னை நன்கு தழுவிக் கொள்வாயாக, இதுவன்றி வேறு கைம்மாறு இல்லை;* ***என்றான்*** *-.*

*அனுமனை 'என்னைத் தழுவிக் கொள்க' என்று இராமன் கூறவே இராமன் தழுவப்பட்டவன் ஆகிறான். தழுவுகின்றவன் உயர்ந்தோன் என்னும் முறைப்படி இராமன் இப்படிக் கூறியதனால் அநுமனைத் தன்னினும் உயர்ந்தவனாக ஆக்கினான்; தனக்குக் கைம்மாறு கருதாமல் உதவி செய்தவர்களைத் தன்னினும் உயர்ந்தோராக ஆக்கிவிடுதல் இராமனது பண்பு நலம் ஆகும் என்பது திருச்சி பேராசிரியர் இரா. இராதகிருஷ்ணன் அவர்கள் வழங்கிய நயவுரை.*

*"போர் உதவிய திண் தோளால் பொருந்துறப் புல்லுக" என்பது மேடை ஏறிய பாடம். இனி மாருதியைத் தழுவிக் கொள்ளச் சொல்லவே அவனுக்குள் இவன் உடம்பு அடங்கியதாகும். எனவே அனுமனுக்குத் தன்னுடம்பையே கொடுத்தான் ஆயிற்று. அசோகவனத்தில் 'இராம' நாமம் சொல்லி பிராட்டியைக் கொடுத்தான். இராவண வதத்தில் இருமுறை இளைய பெருமாளையும் ஒருமுறை பெரிய பெருமானையும் மீட்டுக் கொடுத்து 'நின்னின் தோன்றினோம்' (கம்ப.8812) என்று சொல்ல வைத்தான். எரி வீழ்ந்து இறந்து புக எண்ணிய பரதனைக் காத்து உயிர் கொடுத்து நிறுத்தினான். இங்ஙனம் நால்வர் உடம்பையும் நிறுத்திய அவனுக்குத் தன் திருமேனியைக் கொடுக்கவே எல்லாம் கொடுத்ததாக ஆகும் என்று கருதித் தழுவிக் கொள்ளச் சொன்னான் ஆகும்; அவன் திருமேனி சகலமும் ஆய் இருப்பதன்றோ ஆதலின் அவன் திருமேனி அநுமனுக்கு எல்லாம் கொடுத்ததாக ஆயிற்று என்பது என் குருநாதர் மகாவித்துவான் மயிலம் வே. சிவசுப்பிரமணியன் அவர்கள் கருத்து.*

*10352.* ***என்றலும், வணங்கி நாணி, வாய் புதைத்து, இலங்கு தானை***
***முன்தலை ஒதுக்கி நின்ற மொய்ம்பனை முழுதும் நோக்கி,***
***பொன் திணி வயிரப் பைம் பூண் ஆரமும், புனை மென் தூசும்,***
***வன் திறல் கயமும், மாவும், வழங்கினன், வயங்கு சீரான்.***

***வயங்கு சீரான்*** *- விளங்கிய புகழை உடைய இராமன்;* ***என்றலும்*** *- இவ்வாறு கூறுதலும்;* ***வணங்கி, நாணி, வாய் புதைத்து, இலங்கு தானை முன்தலை ஒதுக்கி நின்ற மொய்ம்பனை*** *- பணிந்து நாண்முற்று வாயைக் கையால புதைத்துக் கொண்டு விளங்கிய வேட்டி முகப்பினை அடக்கிக் கொண்டு நின்ற வலியோனாகிய அனுமனை;* ***முழுதும் நோக்கி*** *- நன்றாகப் பார்த்து;* ***பொன் திணி வயிரப் பைம்பூண் ஆரமும்*** *- பொன் திணித்துச் செய்யப் பெற்ற பசிய பூணும் முத்துவடமும்;* ***புனை மென் தூசும்*** *- அணிதற்குரிய மெல்லிய பட்டாடையும்;* ***வன்திறல் கயமும்*** *- வலிமிக்க யானையும்;* ***மாவும்*** *- குதிரையும்;* ***வழங்கினன்*** *- ஈந்தான்.*

*தானை மடக்கலும் வாய்புதைத்தலும் அடக்கம் என்னும் மெய்ப்பாட்டின் அடையாளம் ஆகும்.*

*10353.* ***பூ மலர்த் தவிசை நீத்து, பொன் மதில் மிதிலை பூத்த***
***தேமொழித் திருவை ஐயன் திருவருள் முகத்து நோக்க,***
***பா மறைக் கிழத்தி ஈந்த பரு முத்த மாலை கைக் கொண்டு***
***ஏமுறக் கொடுத்தான், அந்நாள், இடர் அறிந்து உதவினாற்கே.***

***ஐயன்*** *- இராமன்;* ***பூ மலர்த் தலிசை நீத்து*** *- தாமரை மலராகிய பீடத்தை வெறுத்து;* ***பொன் மதில் மிதிலை பூத்த தேமொழித் திருவை*** *- பொன்னாற் செய்த மதில் சூழ்ந்த மிதிலையில் தோன்றிய தேன் போலும் மொழியுடைய திருமகளாகிய சீதையை;* ***திருவருள் முகத்து நோக்க*** *- திருவருளோடு கூடிய முகத்தால் பார்க்க; (அவள்)* ***அந்நாள் இடர் அறிந்து உதவினாற்கு*** *- அசோக வனத்தில் தன் துன்பமறிந்து உதவிய அனுமனுக்கு;* ***பாமறைக் கிழத்தி ஈந்த பருமுத்தமாலை கைக்கொண்டு ஏமுறக் கொடுத்தாள்*** *- பரவிய வேதத்தலைவியாகிய சரஸ்வதி தேவி தனக்களித்த முத்து மாலை ஒன்றைக் கையிற் கொண்டு இன்பமுறக் கொடுத்தாள். ஏ - அசை.*

*10354. **சந்திரற்கு உவமை சான்ற, தாரகைக் குழுவை வென்ற,***
***இந்திரற்கு ஏய்ந்ததாகும் என்னும் முத்தாரத்தோடு***
***கந்து அடு களிறு, வாசி, தூசு, அணிகலன்கள், மற்றும்***
***உந்தினன், எண்கின் வேந்தற்கு - உலகம் முந்து உதவினானே.***

***உலகம் முந்து உதவினான்*** - *உலகத்தை முற்காலத்துப் பிரமனால் தந்தருளிய திருமாலின் அவதாரமான இராமன்;* ***சந்திரற்கு உவமை சான்ற*** - *நிலவுக்கு உவமையாகச் சொல்லப்படக் கூடிய;* ***தாரகைக் குழுவை வென்ற*** - *நட்சத்திரக் கூட்டங்களை வென்ற;* ***இந்திரற்கு ஏய்ந்த தாகும் என்னும் முத்தாரத்தோடு*** - *இந்திரன் அணிதற்குப் பொருந்தியதாகும் என்று சொல்லப்படும் முத்து மாலையோடு;* ***கந்து அடுகளிறு, வாசி, தூசு, அணிகலன்கள், மற்றும்*** - *கட்டுத்தறியை அழிக்கும் யானை, குதிரை, பட்டாடை, ஆபரணங்கள், ஏனைய பிறவும்;* ***எண்கின் வேந்தற்கு உந்தினன்*** - *கரடிக் கூட்டத்தின் தலைவனான சாம்பனுக்குத் தந்தான்.*

*10355. **நவ மணிக் காழும், முத்தும், மாலையும், நலம் கொள் தூசும்,***
***உவமை மற்று இலாத பொன் பூண் உலப்பு இல பிறவும், ஒண் தார்க்***
***கவன வெம் பரியும், வேகக் கதமலைக்கு அரசும், காதல்***
***பவனனுக்கு இனிய நண்பன் பயந்தெடுத்தவனுக்கு ஈந்தான்.***

***காதல் பவனனுக்கு இனிய நண்பன் பயந்து எடுத்தவனுக்கு*** - *அன்பால் காற்றுக்கு இனிய நண்பனாகிய அக்கினி தேவன் மகனாகிய நீலன் என்னும் வானர சேனைத் தலைவனுக்கு;* ***நவமணிக் காழும்*** - *நவமணிகளால் ஆகிய வடமும்;* ***முத்தும் மாலையும் நலங்கொள் தூசும் உவமை மற்று இலாத பொன் பூண் உலப்பு இல பிறவும் - ; ஒண்தார்க் கவன வெம் புரியும் வேகக் கதமலைக்கு அரசும் - ; ஈந்தான்*** - *கொடுத்தான்.*

*தார் - கிண்கிணி மாலை, கவனம் - வேகம். கதமலை - சீற்றமுடைய மலை போன்ற யானை.*

*10356. **பத வலிச் சதங்கைப் பைந் தார்ப் பாய் பரி, பணைத் திண் கோட்டு***
***மதவலிச் சைலம், பொன் பூண், மா மணிக்கோவை, மற்றும்***

***உதவலின் தகைவ அன்றி, இல்லன உள்ள எல்லாம்***
***சதவலிதனக்குத் தந்தான் - சதுமுகத்தவனைத்***
***தந்தான்.***

***சதுமுகத் தவனைத் தந்தான்*** - *நான்முகனைப் பெற்றவனாகிய திருமாலாகிய இராமன்;* ***சதவலி தனக்கு*** - *சதவலி என்னும் பெயருடைய வானர சேனைத் தலைவனுக்கு;* ***பதவலிச் சதங்கைப் பைந்தார் பாய்பரி*** - *வலிமையான பதத்திலே சதங்கை அணிந்த பசிய கிண்கிணி மாலையுடைய பாயும் குதிரை;* ***பணைத்தின் கோட்டு மதவலிச் சைலம்*** - *பருத்த வலிய தந்தங்களை உடைய மதமிக்க மலையாகிய யானை;* ***பொன் பூண், மாமணிக் கோவை மற்றும் உதவலின் தகைவ இன்றி இல்லன*** - *கொடுப்பதற்குத் தடை ஏதும் இல்லாமல்;* ***உள்ள எல்லாம்*** - *உள்ள எல்லாவற்றையும்;* ***தந்தான்*** -.

*10357.* ***'பேச அரிது ஒருவர்க்கேயும் பெரு விலை; இதனுக்கு***
***ஈதுக்***
***கோ, சரி இலது' என்று எண்ணும் ஒளி மணிப்***
***பூணும், தூசும்,***
***மூசு அரிக்கு உவமை மும்மை மும்மதக் களிறும்,***
***மாவும்,***
***கேசரிதனக்குத் தந்தான் - கிளர் மணி முழவுத்***
***தோளான்.***

***கிளர் மணி முழவுத் தோளான்*** - *மிக்குவிளங்கும் அழகிய முழவு போன்ற தோள் உடைய இராமன்;* ***கேசரி தனக்கு*** - *அனுமன் தந்தையாகிய கேசரிக்கு;* ***பெருவிலை ஒருவர்க்கேயும் இதனுக்குப் பேச அரிது*** - *மிக்க விலையை ஒருவராலும் இதனுக்குப் பேச முடியாது;* ***ஈதுக்கோ சரி இலது*** - *இதற்கொப்பான பொருள் இல்லை;* ***என்று எண்ணும் ஒளி மணிப் பூணும் தூசும்*** - *என்று மதிப்பிடப்படும் ஒளி படைத்த மணி ஆபரணமும் பட்டாடையும்;* ***மூசு அரிக்கு மும்மை உவமை மும்மதக் களிறும்*** *உலகெங்கும் பரவும் வடவைத் தீக்கு மூன்று மடங்கு உவமையாகக் கூடிய மும்மத யானையும்;* ***மாவும்*** - *குதிரையும்;* ***தந்தான்*** -

*10358.* ***வளன் அணி கலனும் தூசும், மா மதக் களிறும்,***
***மாவும்,***
***நளனொடு குமுதன், தாரன், நவை அறு பனசன்,***
***மற்றோர்***
***உளம் மகிழ்வு எய்தும் வண்ணம் உலப்பில பிறவும்***
***ஈந்தான் -***

***களன் அமர் கமல வேலிக் கோசலக் காவலோனே.***

***களன் அமர் கமல வேலிக் கோசலக் காவலோன்*** - *நெற்களங்கள் நிரம்பியுள்ள தாமரைப் பூ வேலியை உடைய கோசல நாட்டரசனாய இராமன்;* ***நளனொடு குமுதன், தாரன், நவை அறு பனசன், மற்றோர் உளம் மகிழ்வு எய்தும் வண்ணம் - ; வளன் அணி கலனும் தூசும் மாமதக் களிறும் மாவும்*** - *உலப்பில பிறவும் - கணக்கில்லாத மற்றைப் பொருள்களையும்;* ***ஈந்தான்*** *-.*

***10359. அவ் வகை அறு பத்து ஏழு கோடியாம் அரியின் வேந்தர்க்கு***
***எவ் வகைத் திறனும் நல்கி, இனியன பிறவும் கூறி,***
***பவ்வம் ஒத்து உலகில் பல்கும் எழுபது வெள்ளம் பார்மேல்***
***கவ்வை அற்று இனிது வாழக் கொடுத்தனன், கடைக் கண் நோக்கம்.***

*(இராமன்)* ***அவ்வகை*** *- அவ்வாறு; அறுபத்து ஏழு கோடியாம்* ***அரியின் வேந்தர்க்கு*** *- அறுபத்தேழு கோடி என்னும் கணக்கினை உடைய குரங்கு அரசர்களுக்கு;* ***எவ்வகைத் திறனும் நல்கி*** *- எல்லாவகைப் பட்ட பொருளும் கொடுத்து;* ***இனியன பிறவும் கூறி*** *- பிரிய வசனங்களையும் சொல்லி;* ***பவ்வம் ஒத்து உலகில் பல்கும் எழுபது வெள்ளம்*** *- கடல் நீரைப் போல வற்றாது உலகில் பெருகும் எழுபது வெள்ளம் குரங்குகள்;* ***பார்மேல்*** *- உலகில்;* ***கவ்வை அற்று இனிது வாழ*** *- துன்பமின்றி; நன்றாக வாழும்படி;* ***கடைக்கண் நோக்கம்*** *- தனது கடைக்கண் பார்வையாகிய திருவருளைக:ி* ***கொடுத்தனன்*** *- கொடுத்தான்.*

***10360. மின்னை ஏர் மௌலிச் செங் கண் வீடணப் புலவர் கோமான் -***
***தன்னையே இனிது நோக்கி, 'சராசரம் சுமந்த சால்பின்***
***நின்னையே ஒப்பார் நின்னை அலது இலர், உளரேல்; ஐய!***
***பொன்னையே இரும்பு நேரும்ஆயினும் பொரு அன்று' என்றான்.***

***( இராமன்) - மின்னை ஏர் மௌலிச் செங்கண் வீடணப் புலவர் கோமான் தன்னையே இனிது நோக்கி*** *- மின்னலை ஒத்த கிரீடத்தை அணிந்த சிவந்த கண்களை உடைய வீடணன் என்னும் அறிஞர்க்கரசனை அன்பொழுகப் பார்த்து;* ***'ஐய! சராசரம் சுமந்த சால்பின்*** *- ஐயனே! உலகமுழுதும் தாங்கிய சான்றாண்மையை*

*உடைய;* **நின்னையே ஒப்பார் நின்னை அலது இலர்** *- உன்னைப் போன்றவர்கள் நீயே அல்லாமல் வேறு யாரும் இலர்;* **உளரேல்** *- அப்படி இருப்பதாகக் கூறினால் (அது எவ்வாறாகும் எனின்);* **பொன்னையே இரும்பு நேரும் ஆயினும் பொரு அன்று என்றான்** *- பொன்னை ஒருகாலத்து இரும்பு ஒத்துவிடும் ஆனாலும் உனக்கு ஒப்பல்ல என்றான்.*

***10361. என்று உரைத்து, அமரர் ஈந்த எரி மணிக்***
***கடகத்தோடு***
***வன் திறல் களிறும், தேரும், வாசியும், மணிப்***
***பொன் பூணும்,***
***பொன் திணி தூசும், வாசக் கலவையும், புது மென்***
***சாந்தும்,***
***நன்று உற, அவனுக்கு ஈந்தான் - நாகணைத்***
***துயிலைத் தீர்ந்தான்.***

**நாகணைத் துயிலை தீர்ந்தான்** *- பாம்பணைத் துயிலை நீங்கி அவதரித்த இராமன்;* **என்று உரைத்து** *- என்று வீடணனைப் பாராட்டிக் கூறி;* **அவனுக்கு** *- அந்த வீடணனுக்கு;* **நன்று உற** *- நன்மை பொருந்த;* **அமரர் ஈந்த எரிமணிக் கடகத்தோடு** *- தேவர்கள் கொடுத்த ஒளிவீசும் மணிகள் அழுத்திய கடகத்தோடு;* **வன்திறல் களிறும் தேரும் வாசியும் மணிப்பொன் பூணும் பொன்திணி தூசும் வாசக் கலவையும் புதுமென் சாந்தும் - ; ஈந்தான்** *-.*

***10362. சிருங்கபேரம்அது என்று ஓதும் செழு நகருக்கு***
***இறையை நோக்கி,***
***'மருங்கு இனி உரைப்பது என்னோ, மறு அறு***
***துணைவற்கு?' என்னா,***
***கருங் கைம் மாக் களிறும், மாவும், கனகமும், தூசும்,***
***பூணும்,***
***ஒருங்குற உதவி, பின்னர் உதவினன் விடையும்***
***மன்னோ.***

*(இராமன்)* **சிருங்க பேரம் அது என்று ஓதும் செழுநகர்க்கு இறையை நோக்கி** *- குகனைப் பார்த்து; 'மறு அறு துணைவற்கு மருங்கு இனி உரைப்பது என்னோ?';* **என்னா** *- குற்றமற்ற சகோதரனாய உனக்கு இப்போது சொல்ல வேண்டியது யாது உள்ளது என்று சொல்லி;* **கருங்கை மாக்களிறும் மாவும் கனகமும் தூசும் பூணும் -; ஒருங்குற உதவி** *- சேரக் கொடுத்து;* **பின்னர் விடையும் உதவினன்** *- பிறகு ஊர் செல்ல உத்தரவும் கொடுத்தான். மன், ஓ - அசைகள்.*

***10363. அனுமனை, வாலி, சேயை, சாம்பனை, அருக்கன் தந்த***
***கனை கழல் காலினானை, கருணை அம் கடலும் நோக்கி,***
***'நினைவதற்கு அரிது நும்மைப் பிரிக என்றல்; நீவிர் வைப்பும்***
***எனது; அது காவற்கு இன்று என் ஏவலின் ஏகும்' என்றான்.***

***கருணை அம்கடலும்*** *- அருட்கடலாய் விளங்கும் இராமபிரானும்;* ***அனுமனை வாலிசேயை சாம்பனை அருக்கன் தந்த கனைகழல் காலினானை; நோக்கி*** *- பார்த்து;* ***'நும்மை பிரிக என்றல் நினைவதற்கு அரிது*** *- உங்களைப் பிரிந்து செல்க என்று கூறுதல் கூற நினைப்பதற்கே முடியாத செயல் ஆகும் (ஆனாலும்);* ***நீவிர் வைப்பும் எனது*** *- உங்கள் நாடுகளும் தற்போது என்னுடையதே அல்லவா (ஆதலின்);* ***அது காவற்கு*** *- அந் நாடுகளைக் காப்பதற்கு;* ***இன்று என் ஏவலின் ஏகும்*** *- இன்று என் கட்டளையை மேற்கொண்டு செல்லுங்கள்;* ***என்றான்*** *-.*

***10364. இலங்கை வேந்தனுக்கும் இவ்வாறு இனியன யாவும் கூறி,***
***அலங்கல் வேல் மதுகை அண்ணல் விடைகொடுத்தருளலோடும்,***
***நலம் கொள் பேர் உணர்வின் மிக்கோர், நலன் உறும் நெஞ்சர், பின்னர்க்***
***கலங்கலர், 'ஏய செய்தல் கடன்' எனக் கருதிச் சூழ்ந்தார்.***

***இலங்கை வேந்தனுக்கும்*** *- வீடணனுக்கும்;* ***இனியன யாவும் இவ்வாறு கூறி*** *- பிரிய வார்த்தைகளை இவ்வாறே சொல்லி;* ***அலங்கல் வேல் மதுகை அண்ணல்*** *- மாலையணிந்த வேலினையுடைய; வலிமிக்க இராமபிரான்;* ***வி டை கொடுத்தருளலோடும்*** *- உத்திரவு கொடுத்துப் புறப்படச் சொல்லிய அளவில்;* ***நலம்கொள் பேருணர்வின் மிக்கோர்*** *- நன்மை கொண்ட மெய்யுணர்வால் சிறந்த அவர்கள்;* ***நலன் உறும் நெஞ்சர்*** *- ஆறுதல் அடைந்த மனம் உடையராய்;* ***பின்னர்க் கலங்கலர்*** *- பிறகு தடுமாற்றம் அடையாதவராய்;* ***'ஏய செய்தல் கடன்'*** *- இராமபிரான் ஏவிய பணியைச் செய்தல் தமக்குரிய கடமை;* ***எனக் கருதிச் சூழ்ந்தார்*** *- என்று கருதிப் புறப்பட முடிவு செய்தார்கள்.*

***10365. பரதனை, இளைய கோவை, சத்துருக்கனனை, பண்பு ஆர்***
***விரத மா தவனை, தாயர் மூவரை, மிதிலைப் பொன்னை,***
***வரதனை, வலம்கொண்டு ஏத்தி, வணங்கினர் விடையும் கொண்டே,***
***சரத மா நெறியும் வல்லோர் தத்தம பதியைச் சார்ந்தார்.***

***சரதமா நெறியும் வல்லோர்*** *- என்றும் நிச்சயமான பரமபத நெறிக்கும் வல்லோராகிய அவர்கள்;* ***பரதனை இளைய கோவை சத்துருக்கனனை பண்பு ஆர் விரத மாதவனை தாயர் மூவரை மிதிலைப் பொன்னை வரதனை*** *- வலம் கொண்டு ஏத்தி - சுற்றி வந்து தோத்தரித்து;* ***வணங்கினர் விடையும் கொண்டு*** *- வணங்கி விடை பெற்று;* ***தத்தம பதியைச் சார்ந்தார்*** *- தங்கள் தங்கள் நகரங்களை அடைந்தார்கள்.*

*இராமனை முதலாகக் கொண்டு பரதனைச் சந்தித்த அவர்கள் விடைபெறும் போது பரதனை முதலாக இராமனாகிய வரதனை இறுதியாக வலம் கொண்டு ஏத்திச் சென்றதாகக் கூறியது ஓர் நயம். தத்தமபதி - சிருங்க பேரம், கிட்கிந்தை, இலங்கை என்று அவரவர் நகரம்.*

***10366. குகனைத் தன் பதியின் உய்த்து, குன்றினை வலம் செய் தேரோன்***
***மகனைத் தன் புரத்தில் விட்டு, வாள் எயிற்று அரக்கர் சூழ,***
***ககனத்தின்மிசையே ஏகி, கனை கடல் இலங்கை புக்கான், -***
***அகன் உற்ற காதல் அண்ணல், அலங்கல் வீடணன், சென்று, அன்றே.***

***அகன் உற்ற காதல் அண்ணல் அலங்கல் வீடணன்*** *- நெஞ்சார்ந்த அன்புடைய பெரியோனாகிய மாலை அணிந்த வீடணன்;* ***வாள் எயிற்று அரக்கர் சூழ*** *- கூரிய பல்லினை உடைய அரக்கர்கள் தன்னைச் சுற்ற;* ***ககனத்தின் மிசையே ஏகி*** *- (புட்பக விமானத்தில் அனைவரையும் அழைத்துக் கொண்டு;* ***ஆகாய வழியாகச் சென்று. குகனைத் தன் பதியின் உய்த்து*** *- குகனை அவன் நகராகிய சிருங்க பேரத்தில் கொண்டு விட்டு;* ***குன்றினை வலம் செய் தேரோன் மகனை*** *- மகாமேரு மலையைச் சுற்றி வரும் தேரினையுடைய சூரியன் மகனாகிய சுக்கிரீவனை;* ***தன்புரத்தில் விட்டு*** *- அவன் நகராகிய கிட்கிந்தையில் கொண்டுவிட்டு;* ***அன்றே சென்று*** *- அன்றைக்கே போய்;* ***இலங்கை புக்கான்*** *- இலங்காபுரியைச் சென்றடைந்தான்.*

*'சென்று புக்கான்' என இயைத்து, அன்றே அசை எனினும் ஆம்.*

### *இராமன் இனிது அரசாட்சி நடத்தல்*

***10367. அய்யனும் அவரை நீக்கி, அருள் செறி துணைவரோடும்***
***வய்யகம் முழுதும் செங்கோல் மனு நெறி முறையில் செல்ல,***
***செய்ய மா மகளும் மற்றச் செகதல மகளும் சற்றும்***
***நய்யுமாறு இன்றிக் காத்தான், நானிலப் பொறைகள் தீர்த்தே.***

***அய்யனும்*** *- இராமபிரானும்;* ***அவரை நீக்கி*** *- அவர்களை அனுப்பிய பிறகு;* ***அருள் செறி துணைவரோடும்*** *- தன்னருள் நிரம்பிய பரத இலக்குவ சத்துருக்கனர்களோடும் கூடி;* ***வய்யகம் முழுதும்*** *- உலகம் முழுவதும்;* ***செங்கோல் மனு நெறி முறையில் செல்ல*** *- தன் அரசாட்சியாகிய செங்கோல் நீதி நெறிமுறைப்படி நடவா நிற்ப;* ***செய்ய மாமகளும்*** *- திருமகளும்;* ***மற்றச் செகதல மகளும்*** *- பூமகளும்;* ***சற்றும் நையுமாறு இன்று*** *- சிறிதும் வருத்தமுறாமல்;* ***நானிலப் பொறைகள் தீர்த்து*** *-பூமியின் சுமைகளை நீக்கி, காத்தான் -*

*திருமகளுக்கு வருத்தம் தீயோரைச் சார்தல். பூமகளுக்கு வருத்தம் பிணி பகை மிகுதல் - நிலப் பொறை தீர்த்தல் - வசீகரமும் வளமும் மிகப் பெற மழை அளவுபடப் பெறுதலாகும். இராம ராஜ்யம் இவ்வாறு இருந்தது என்றதாம்.*

***10368. உம்பரோடு இம்பர்காறும், உலகம் ஓர் ஏழும் ஏழும்,***
***'எம் பெருமான்!' என்று ஏத்தி, இறைஞ்சி நின்று, ஏவல் செய்ய,***
***தம்பியரோடும், தானும், தருமமும், தரணி காத்தான் -***
***அம்பரத்து அனந்தர் நீங்கி, அயோத்தியில் வந்த வள்ளல்.***

***அம்பரத்து*** *- திருப்பாற்கடலில்;* ***அனந்தர் நீங்கி*** *- அறிதுயிலிலிருந்து விலகி;* ***அயோத்தியில் வந்த வள்ளல்*** *- அயோத்தியில் ஸ்ரீராமனாக அவதரித்து பலர்க்கும் அருள் செய்த இராமபிரான்;* ***உம்பரோடு இம்பர் காறும்*** *- தேவர் முதல் மக்கள் வரை;* ***உலகம் ஓர் ஏழும் ஏழும்*** *- பதினான்கு உலகங்களும்;* ***'எம்பெருமான்' என்று ஏத்தி*** *- எம்பெருமான் என்று துதித்து;* ***இறைஞ்சி நின்று ஏவல் செய்ய*** *- வணங்கி நின்று தன் கட்டளையை நிறைவேற்ற;* ***தம்பியரோடும் தானும் தருமமும்*** *-*

*தம்பியர்களோடும் தானும் அறக்கடவுளும் ஒன்றாக நின்று;* ***தரணி காத்தான்*** *- இந்த உலகம் முழுவதையும் பாதுகாத்தான்.*

### *மிகைப் பாடல்கள்*

### *28. இராவணன் சோகப் படலம்*

*902.* *தொழும்பு செய்து உளர் ஆம் தேவர் துயரினர்*
*போலத் தாமும்*
*பழங்கண் உற்று, உடைய வேந்தன் இணை அடி*
*விடாது பற்றி,*
*உளம் களிப்புறுவோர் ஓயாது அழுதனர்; மைந்தன்*
*ஆவி*
*இழந்தனன் என்னக் கேட்டு, ஆங்கு, இடி உறும்*
*அரவை ஒத்தாள். (43-1)*

*903.* *உம்பரின் உலவும் தெய்வ உருப்பசி முதல் ஆய ஐம்பது கோடி தெய்வத் தாதியர்*
*அழுது சூழ்ந்தார்; தும்பியின் இனத்தை எல்லாம் தொலைத்திடும்*
*குருளை மாய,*
*கம்பம் உற்று, அரியின் பேடு கலங்கியது என்னச்*
*சோர்ந்தாள். (43-2)*

*904.* *பத்து எனும் திசையும் வென்று, கயிலையில் பரனை*
*எய்தி,*
*அத் தலை அமர் செய்து, ஆற்றான்; அவன் இடத்து*
*உமை அன்பால் தன்*
*கைத்தலக் கிளி நிற்கு ஈய, கவர்ந்து எனக்கு*
*அளித்து நின்ற*
*வித்தகக் களிறே! இன்னும் வேண்டினேன்,*
*எழுந்திராயே! (50-1)*

*905.* *'மஞ்சு அன மேனி வள்ளல் வளரும் நாள், மன்னர்*
*தோள் சேர்*
*நஞ்சு அன விழியால் அன்றி, நகை மணிப் புதல்வர்,*
*நல்லோர், செஞ் சிலை மலரால் கோலித் திரிந்தவா*
*என்னில்,*
*செல்லும்,*
*வெஞ் சமர் இன்னும் காண வல்லனோ விதி*
*இலாதேன்!' (52-1)*

### *29. படைக் காட்சிப் படலம்*

*906.* *தொல்லை சேர் அண்ட கோடித் தொகையில் மற்று*

*அரக்கர் சேனை*
*இல்லையால் எவரும்; இன்னே எய்திய இலங்கை*
*என்னும்*
*மல்லல் மா நகரும் போதா; வான் முதல் திசைகள்*
*பத்தின்*
*எல்லை உற்றளவும் நின்று, அங்கு எழுந்தது, சேனை*
*வெள்ளம். (2-1)*

*907. மேய சக்கரப் பொருப்பிடை மேவிய திறலோர், ஆயிரத் தொகை பெருந் தலை உடையவர், அடங்கா மாயை கற்றவர், வரத்தினர், வலியினர், மறப் போர்த் தீயர், இத் திசை வரும் படை அரக்கர் - திண்*
*திறலோய்! (22-1)*

*908. சீறு கோள் அரி முகத்தினர்; திறற் புலி முகத்து*
*ஐஞ் -*
*ஞூறு வான் தலை உடையவர்; நூற்றிதழ்க் கமலத்து ஏறுவான் தரும் வரத்தினர்; ஏழ் பிலத்து உறைவோர், ஈறு இலாத பல் அரக்கர்; மற்று எவரினும் வலியோர்.*
*(25-1)*

*909. சாலும் மா பெருந் தலைவர்கள் தயங்கு எரி நுதற்*
*கண்*
*சூலபாணிதன் வரத்தினர், தொகுத்த பல் கோடி மேலையாம் அண்டத்து உறைபவர், இவர் பண்டு*
*விறலால்*
*கோல வேலுடைக் குமரனைக் கொடுஞ் சமர்*
*துரந்தோர். (27-1)*

*910. ஆதி அம் படைத் தலைவர்கள், வெள்ளம் நூறு; அடு*
*போர்*
*மோது வீரர், மற்று ஆயிர வெள்ளம்; மொய்*
*மனத்தோர்*
*'காது வெங் கொலைக் கரி, பரி, கடுந் திறல்*
*காலாள்,*
*ஓது வெள்ளம் மற்று உலப்பு இல கோடி' என்று*
*உரைப்பார். (30-1)*

*911. அன்னது அன்றியும், ஆழி நீர்க்கு அப் புறத்து*
*உலகில்,*
*துன்னுறும் சத கோடி வெள்ளத் தொகை அரக்கர் - தன்னை ஓர் கணத்து எரித்தது, சலபதி வேண்ட, மன் இராகவன் வாளி ஒன்று; அவை அறிந்திலிரோ?*
*(43-1)*

### *30. மூலபல வதைப் படலம்*

*912.* *போனபின், பல புவனம் என்று உரைக்கின்ற பொறை சேர்*
*ஆன அண்டங்கள் எவற்றினும் அமர்ந்திடும் மூலத் தானைதன்னையும், 'எழுக' எனச்*
*சாற்றினர் - தறுகண்*
*கோன் உரைத்தமை தலைக்கொளும் கொடும் படைத்தலைவர்.* *(3-1)*

*913.* *மூன்றின் நூற்றினோடு ஆயிரம் முள்வன் வெள்ளம் ஆன்ற தேர், பரி, கரியவை, ஆளையும், அடங்கி, மூன்று லோகமும் முற்றும் போய் முடிவுறும் என்ன ஏன்று சென்றது., அவ் இராமன்மேல், இராக்கதப் பரவை.* *(23-1)*

*914.* *'தான் அல்லாது ஒரு பொருள் இலை எனத் தகும் முதல்வன் -*
*தான் இராமன் என்று எழில் உரு எடுத்ததும் தவறோ?* *தான் எம்மோடு பல் புவனங்கள் தனி வயிற்று அடக்கும்*
*தானம் மேவினர்க்கு இவர் ஒரு பொருள் எனத் தகுமோ?* *(26-1)*

*915.* *'நின்று காண்குதிர், இறைப் பொழுது; இங்கு நீர் வெருவல்;*
*இன்று இராகவன் பகழி மற்று இராக்கதப் புணரி கொன்று வற்றிடக் குறைத்து உயிர் குடிக்கும்' என்று அமரர்க்கு*
*அன்று முக்கனான் உரைத்தல் கேட்டு, அவர் உளம் தெளிந்தார்.* *(26-2)*

*916.* *வானின் மேவிய அமரருக்கு இத் துணை மறுக்கம் ஆனபோது, இனி அகலிடத்து உள்ள பல் உயிர்கள் ஈனம் எய்தியது இயம்பல் என்? எழுபது வெள்ளத் தானை ஆகிய கவிப் படை சலித்தது, பெரிதால்.*
*(26-3)*

*917.* *வாய் உலர்ந்தன சில சில; வயிறு எரி தவழ்வுற்று ஓய்தல் உந்தின சில சில; ஓடின நடுங்கிச் சாய்தல் உந்தின சில சில; தாழ் கடற்கு இடையே பாய்தல் உந்தின சில சில - படர் கவிப் படைகள்.*
*(29-1)*

*918.* *அனுமன் ஆற்றலும், அரசனது ஆற்றலும், இருவர் தனுவின் ஆற்றலும், தங்களைத் தாங்குவர் தாங்கார், 'கனியும் காய்களும் உணவு உளோ; மலை உள காக்க*
*மனிதர் ஆளில் என், இராக்கதர் ஆளில் என், வையம்?'* *(44-1)*

*919. என்று, சாம்பவன் முதலிய தலைவர்கள் இயம்ப, குன்று உலாம் புயத்து அங்கதன் குறுநகை புரிந்தே, 'நன்று நும் உரை; நாயகர்ப் பிழைத்து, நம் உயிர்*
*கொண்டு,*
*ஒன்றி வாழ்தலும் உரிமையதே?' என உரைப்பான்.*
*(44-2)*

*920. 'ஆளி மா முகவர், சீறும் அடு புலி முகவர், மிக்க யாளி மா முகவர், யானை முகவர், மற்று எரியும்*
*வெங் கண்*
*கூளி மா முகவர் ஆதி அளப்பு இல கோடி உள்ளார்; ஊழி சென்றாலும் உட்கார்; ஒருவர் ஓர் அண்டம்*
*உண்பார். (52-1)*

*921. என்று எடுத்து, எண்கின் தானைக்கு இறையவன்*
*இயம்பலோடும்*
*வன் திறல் குலிசம் ஓச்சி, வரைச் சிறகு அரிந்து,*
*வெள்ளிக்*
*குன்றிடை நீலக் கொண்மூ அமர்ந்தென, மதத் திண்*
*குன்றில்*
*நின்றவன் அளித்த மைந்தன் மகன் இவை*
*நிகழ்த்தலுற்றான். (54-1)*

*922. 'இசைந்தனன் அமருக்கு; எல்லா உலகமும்*
*இமைப்பின் வாரிப்*
*பிசைந்து, சிற்றுதரத்து உண்ணப்பெற்ற நாள் பிடித்த*
*மூர்த்தம்*
*இசைந்தது போலும்!' என்று, ஆங்கு, அயன் சிவன்*
*இருவர் தத்தம்*
*வசம் திகழ் கருத்தினூடே மதித்திட, வயங்கி*
*நின்றான். (69-1)*

*923. மற்றும் வேறு அறத்துள் நின்ற வான நாடு*
*அணைந்துளோர்,*
*'கொற்ற வில்லி வெல்க! வஞ்ச மாயர் வீக!*
*குவலயத்து உற்ற தீமை தீர்க, இன்றொடு!' என்று கூறினார்;*
*நிலம்*
*துற்ற வெம் படைக் கை நீசர் இன்ன இன்ன*
*சொல்லினார்: (72-1)*

*924. அரைக் கணத்து அரக்கர் வெள்ளம் அளவு இல்*
*கோடி ஆவி போய்த்*
*தரைப் பட, பல் அண்ட கோடி தகர, அண்ணல்தன்*

கை வில்
இரைக்கும் நாண் இடிப்பினுக்கு உடைந்து, 'இராம
ராம!' என்று
உரைக்கும் நாமமே எழுந்து, உம்பரோடும் இம்பரே.
*(76-1)*

925. சிரம் ஒடிந்து சிந்தினார்கள் சிலவர்; செஞ் சுடர்ப்
படைக்
கரம் ஒடிந்து சிந்தினார்கள் சிலவர்; கல்லை வெல்லு
மா
உரம் ஒடிந்து சிந்தினார்கள் சிலவர்; ஊழி காலம்
வாழ்
வரம் ஒடிந்து சிந்தினார்கள் சிலவர்; - மண்ணின் மீது
அரோ. *(76-2)*

926. அண்ட கோளம் எண் திசாமுகங்கள் எங்கும் ஆகியே, மண்டி மூடி வாழ் அரக்கர்தாமும், வாகை வீரன்மேல், கொண்டல்எழும், ஊழிவாய், ஓர் குன்றில் மாரி
பொழிவபோல்
சண்ட வேகம் ஏறி, வாளி மழை சொரிந்து
தாக்கினார். *(83-1)*

927. தேரின்மீது அனந்த கோடி நிருதர், சீறு செம் முகக் காரின்மீது அனந்த கோடி வஞ்சர், காலின் வாவு
மாத்
தாரின்மீது அனந்த கோடி தறுகண் நீசர், தாழ்வு
இலாப்
பாரின்மீது அனந்த கோடி பதகர், வந்த பற்றினார்.
*(83-2)*

928. துடி, தவண்டை, சங்கு, பேரி, துந்துமிக் குலங்கள்,
கைத்
தடி, துவண்ட ஞாண், இரங்கு தக்கையோடு பம்பை,
மற்று
இடி பொதிந்த முரசம் ஆதி எண் இல் பல்லியக்
குழாம்
படி நடுங்கவே, பகைக் களத்தின் ஓசை விஞ்சவே.
*(83-3)*

929. இரைத்து அடர்ந்து அரக்கர் வெள்ளம், எண் இல்
கோடி, இடைவிடாது
உருத்தல் கண்டு, இராகவன் புன்முறுவல் கொண்டு,
ஒவ்வொருவருக்கு
ஒருத்தனாய் தன்மை தானும் உணர்வுறாதபடி எழ, சரத்தின் மாரி பெய்து, அரக்கர் தலை தரைக்கண்
வீழ்த்தினான். *(83-4)*

*930.* *'நுனித்திடத்திற்கு அருங் கடுப்பின் நொடிவரைக்குள் எங்குமாய்க்*
*குனித்த வில் கை வாளி மாரி மழை சொரிந்து கோறலால்,*
*மனித்தன் மற்று ஒருத்தன் என்ற வாய்மை நன்று நன்று' எனா,*
*வினைத் திறத்து அரக்கர் விம்மிதத்தர் ஆய், விளம்புவார்.* *(83-5)*

*931.* *'விண்ணின்மீது அனந்த கோடி வீரன்' என்பர்; 'அல்ல இம்*
*மண்ணின்மீது அனந்த கோடி மனிதன்' என்பர்; அல்ல வெங்*
*கண்ணினூடு அனந்த கோடி கண்ணன்' என்பர்; 'அல்ல உம்*
*எண்ணமீது அனந்த கோடி உண்டு, இராமன்' என்பரால்.* *(83-6)* *932.* *இத் திறத்து அரக்கர் வெள்ளம் எங்கும் ஈது இயம்ப,*
*நின்று*
*எத் திறத்தினும் விடாது, இராமன் எங்கும் எங்குமாய் அத் திறத்து அரக்கரோடும், ஆனை, தேர், பரிக்*
*குலம்,*
*தத்துறச் சரத்தின் மாரியால் தடிந்து, வீழ்த்தினான்.* *(83-7)*

*933.* *இடைவிடாது அளப்பு இல் வெள்ளம் இற்று இறந்து போகவும்*
*படை விடாது அரக்கர் ஆளிபோல் வளைந்துபற்றவும், கொடைவிடாதவன் பொருள் குறைந்திடாதும் வீதல்போல்,*
*தொடைவிடாது இராமன் வாளி வஞ்சர்மீது தூவினான்.* *(83-8)*

*934.* *இன்னவாறு இராமன் எய்து, சேனை வெள்ளம் யாவையும்,*
*சின்னபின்னமாக, நீறு செய்தல் கண்டு, திருகியே, மின்னு வாள் அரக்கர் வெள்ளம், எண்ணில் கோடி,*
*வெய்தினின்*
*துன்னி, மூடும் அந்தகாரம் என்ன வந்து சுற்றினார்.* *(96-1)*

*935.* *வானின்மீது அனந்த கோடி மாய வஞ்சர் மண்டினார், ஆனைமீது அனந்த கோடி அடல் அரக்கர் அண்மினார்;*
*சோனை மேகம் ஒத்து அனந்த கோடி தீயர்*

*சுற்றினார்,*
*மீன வேலை ஒத்து அனந்த கோடி வஞ்சர் மேவினார்.*
*(96-2)*

*936.* *அடல் வார் சிலை அமலன் சொரி கனல் வெங் கணை கதுவி,*
*தொடர் போர் வய நிருதக் கடல் சுவறும்படி பருக,*
*படுமாறு அயல் வரு தீயவர் பல கோடியர் பலரும் சுடர் ஏறிய படை மாரிகள் சொரிந்தார், புடை வளைந்தார். (101-1)*

*937.* *கோல் பொத்திய நெடு நாணினில் கோமான் தொடை நெகிழ*
*மேல் பொத்திய நிருதக் குலம் வேரொடு உடன் விளிய,*
*தோல் பொத்திய உயிர் யாவையும் தொடக்கற்று உடன் மடிய,*
*கால் பொத்திய கை ஒத்தன, காகுத்தன் வெங் கணையால். (102-1)*

*938.* *அது போது அகல் வானில் மறைந்து, அரு மாயை செய் அரக்கர்,*
*எது போதினும் அழிவு அற்றவர், இருள் வான் உற மூடி,*
*சத கோடிகள் கணை மாரிகள் தான் எங்கும் நிறைத்தார்;*
*சது மா மறை அமலன் அவை தடிந்தான், தழற் படையால். (108-1)*

*939.* *அமலன் விடும் அனல் வெம் படை அடு வெம் பொறி சிதறி*
*திமிலம்கொடு ககனம் செறி திறல் வஞ்சகர் புரியும் பிமரம் கெட, அவர்தம் உடல் பிளவுண்டு உயிர் அழிய,*
*சமரம் புகும் அளவு இல்லவர்தமை வென்றது, ஓர் நொடியின். (108-2)*

*940.* *காலாள் எனும் நிருதப் படை வெள்ளம் கடைகணித்தற்கு*
*ஏலாதன பல கோடிகள் இமையோர் கரை காணார்; பாலாழியின் மிசையே துயில் பரமன் சிலை பொழியும் கோலால் அவர் குறைவுற்றனர்; குறையாதவர் கொதித்தார். (112-1)*

*941.* *கொதித்தார் எழு கடல்போல் வளைவுற்றார்; கொடு முசலம்*
*குதித்து ஓடிய சிலை வாளிகள், கூர் வேல், கதை,*

*குலிசம்.*
*விதைத்தார், பொரும் அமலன்மிசை வெய்தே; பல*
*உயிரும்*
*விதித்தானையும் விதித்தான் சிலை வளைத்தே, சரம்*
*விதைத்தான். (112-2)*

*942. கொள்ளை வெஞ் சமர் கோலும் இராக்கத வெள்ளமும் குறைவுற்றது; மேடொடு பள்ளம் இன்றிப் படும் குருதிக் கடல் உள்ள வான் கடற்கு ஓடியது இல்லையால்.*
*(127-1)*

*943. தேயம் எங்கும் இடம் சிறிது இன்றியே, மாய வஞ்சர் மடிய, பிண மலை போய் வளர்ந்து விசும்பொடும் புல்லிற்றால்; ஆய தன்மை அங்கு அண்ணலும் நோக்கியே.*
*(127-2)*

*944. கடல் எரிக்க கனற் படை கார்முகத்து - இடை தொடுத்து, அதை ஏவி, 'இரும் பிணத் திடல் அனைத்தையும் தீர்க்க' எனச் செப்பினான்; பொடி - படுத்தி இமைப்பில் புகுந்ததால்.*
*(127-3)*

*945. அண்டம் முற்றும் அனைத்து உயிரும் எடுத்து உண்டு உமிழ்ந்து படைக்கும் ஒருவனுக்கு உண்டு எனற்கு அரிது என்? உளது இச் செயல். எண் தரும் தவர் எண்ணுவது இல்லையால்.*
*(127-4)*

*946. இற்றது ஆக இராக்கத வீரர்கள் உற்று, ஓர் ஆயிர வெள்ளம் உடன்று, எதிர் சுற்றினார், படை மாரி சொரிந்துளார்; வெற்றி வீரனும் கை வில் வணக்கினான்.*
*(127-5)*

*947. தலை அறுந்தவரும், தடத் திண் புய மலை அறுந்தவரும், வயக் கையொடு*
*சிலை அறுந்தவரும், திமிரத்தின் மெய்ந் நிலை*
*அறுந்தவரும், அன்றி, நின்றது ஆர்?*
*(127-6)*

*948. தேர் அளப்பு இல பட்ட; சிறு கண் மாக் கார் அளப்பு இல பட்ட; கடும் பரித் தார் அளப்பு இல பட்ட; தடம் புயப் பேர் அளப்பு இலர் பட்டனர், பீடு இலார். (127-7)*

*949. வானகத்தோடு மா நிலம், எண் திசை ஆன திக்கு ஒரு பத்தும், அடுத்துறத் தான் நெருக்கிய வஞ்சகர்தம் தலை, போன திக்கு அறியாது, புரட்டினான். (127-8)*

*950. சுடரும் வேல், கணை, தோமரம், சக்கரம் அடரும் மூஇலைச் சூலம், மற்று ஆதியாம் படையின் மாரி பதகர் சொரிந்து, இடை தொடர, வீரன் துணித்தனன் வாளியால். (127-9)*

*951. ஏனமோடு, எண்கு, சீயம், எழு மத யானை, ஆளி, புலி என்று இவை முகம் ஆன தீய அரக்கர் மடிந்திட, வானவன் கணை மாரி வழங்கினான். (127-10)*

*952. வடி சுடர்க் கணை மாற்ற, அங்கு ஆயிர முடியுடைத் தலையோர் தலையும் முடிந்து இடுவது இத் தலத்தே, இடி ஏற்றில் வான் வட வரைச் சிகரங்கள் மறிவபோல். (127-11)*

*953. இரதம், யானை, இவுளியோடு எண் இலா நிருதர் வெள்ளம் நெடு நிலத்து இற்றிட, சரதம் அன்னை சொல் தாங்கி, தவத்து உறும் விரத வீரன் தன் வாளியின் வீட்டினான். (127-12)*

*954. கடு வைத்து ஆர் களன் கைப் படு கார்முகம் ஒடியத் தாக்கும் ஒருவன் சிலையின்வாய், வடவைத் தீச் சொரி வாளியின் மா மழை பட, மற்று ஆயிர வெள்ளமும் பட்டதால். (127-13)*

*955. பால் ஒத்து ஆழியில் பாம்பு - அணைமேல் துயில் சீலத்தான், இமையோர் செய் தவத்தினின் ஞாலத்து ஆய இறைவன், இராவணன் மூலத் தானை முடிய முருக்கினான். (127-14)*

*956. ஈது அவர் சொல, கயிலை ஈசனும் நகைத்து,*
*இமையவர்க்கும் ஒளி வான்*
*ஓதல் இல் அரும் பிரம தத்துவம் முதல்*
*கடவுள் யாமும் உணராப்*
*பேதம் உறு மாயை பல பேணி விளையாடுதல்*
*செய்யாது, பெருமான்*
*நீத உருவம் கொளும் இராமன் எனவே சுருதி*
*நின்ற மொழி பொன்றி விடுமோ? (149-1)*

*957. பாறு படர் பகழி மாரி நிரைகள் பட, நீறுபடும் இரத நிரையின் உடல் தவிர, வேறு படர அடர் விரவு சுடர் வலையம், மாறுபட, உலகின் மலைகள் அளறுபட, (154-1)*

*958. திரிய அலகு இல் மலை, திரிய இரு சுடர்கள் திரிய ஒருவன், எதிர் சின விலொடும் அடர வரி கை ஒரு களிறு திரிய, விடு குயவர் திரிகை என உலகு முழுதும் இடை திரிய. (163-1)*

*959. கரிய திலத மலை திரிய, வளி சுடர்கள் இரிய, ஒரு விலுடை இரு கை ஒரு களிறு திரிய, விடு குயவர் திரிகை என உலகு தெரிய, எழு கடலும் முழுதும் முறை திரிய. (164-1)*

*960. ஆய வல் அரக்கர், மற்று அளவு இல்லாதவர், தீ எழும் விழியினர், சினம் கொள் சிந்தையர் காயும் வெம் படையினர், கடலின் பொங்கியே மேயினர், தம்தமில் இவை விளம்புவார். (170-1)*

*961. 'அன்றியும் ஒருவன், இங்கு அமரில், நம் படை என்று உள கரி, பரி, இரதம், ஈறு இல் போர் வென்றிடும் பதாதியர், அனந்த வெள்ளமும் கொன்றனன், கொதித்து, ஒரு கடிகை ஏழினே. (171-1)*

*962.* *இவ் உரை வன்னி அங்கு இயம்ப. 'ஈதுபோல் செவ் உரை வேறு இலை' என்று, தீயவர் அவ் உரைக்கு அனைவரும் அமைந்து, அங்கு (177-1)*
*அண்ணலோடு*
*எவ் உரையும் விடுத்து, அமரின் ஏற்றுவார்.*

*963.* *இன்னவர் ஐ - இரு கோடி என்று உள மன்னவர் சதமுகம் உடையர்; மற்று அவர் துன்னினர், மனத்து அனல் கறுக்கொண்டு ஏறிட உன்னினர், ஒருவருக்கு ஒருவர் ஓதுவார். (184-1)*

*964.* *அடல் ஐ - இரு கோடி அரக்கர் எனும் மிடல் மன்னவர் வீரனொடும் பொருவார்; கடை கண்டிலர், காய் கரி, தேர், பரிமாப் படை கண்டிலர்; கண்டிலர், பட்ட திறம். (206-1)*

*965.* *அங்கு அங்கு அவர்தம்மொடும் ஐயன் உயிர்க்கு அங்கு அங்கு உளன் என்பது தான் அறியாற்கு, எங்கு இங்கும் இராமன் இராமன் எனா, எங்கு எங்கும் இயம்பவும் உற்றுளனால். (212-1)*

*966.* *ஏயும் ஐ - இரண்டு கோடி இறைவர் ஒவ்வொருவர் (213-1)*
*சேனை*
*ஆயிர வெள்ளம்தானும் அத் துணை வெள்ளம் ஆகி, தூயவன் அவர்தம் சேனை தொலைத்தபின், இறைவர்*
*ஆவி*
*போய் அறப் பகழி மாரி பொழிந்தனன், பொன்றி*
*வீழ்ந்தான்.*

*967.* *இட்டதோர் பேயரின் ஈர் - ஐயாயிரம் பட்டபோது, ஆடும் ஓர் படு குறைத்தலை சுட்ட நூறாயிரம் கவந்தம் ஆடிடத் தொட்டனன், சிலை அணி மணி நுணுக்கென. (220-1)*

*968.* *மாத்திரைப் போதினில், மணி தொனித்திட, போர்த் தொழில் அரக்கர்மேல் பொருத பூசலில், ஏத்திடை இடைவிடாது ஏழு நாழிகை கீர்த்தியன் சிலை மணி கிணிகிணென்றதே. (220-20)*

*969.* *மொய்த்தனர், நூறு வெள்ள முரண் படைத்தலைவர் (222-1)*
*கூட்டம்,*
*பத்து நூறு ஆய வெள்ளப் படையொடு மாயை பற்றி, ஒத்த யோசனை நூறு என்ன ஓதிய வரைப்பின்*
*ஓங்கி,*
*பத்து எனும் திசையும் மூடி, சொரிந்தனர் படையின்*
*மாரி.*

*970.* *யோசனை நூற்றின் வட்டம் இடையறாது உற்ற (222-2)*
*சேனைத்*
*தூசி வந்து, அண்ணல்தன்னைப் போக்கு அற*
*வளைத்துச் சுற்றி,*
*வீசின படையும் அம்பும் மிடைதலின், விண்ணோர்*

*யாக்கை*
*கூசினர், பொடியர் என்றும் குமிழ்த்தனர், ஓமக்*
*கூடம்.*

*971. முன்னவன் அதனை நோக்கி, முறுவலித்து, அவர்கள் (222-3)*
*ஏவும்*
*பல் நெடும் பருவ மாரிப் படை எலாம் பொடிபட்டு*
*ஓட,*
*தன் நெடுஞ் சிலையின் மாரிதனக்கு எழு முகிலும்*
*அஞ்சத்*
*துன்னுவித்து, அரக்கர் சேனையைத் தொலைத்தல்*
*செய்தான்.*

*972. கால வெங் கனலின் மாயக் கடும் படை சிலையின்*
*பூட்டி,*
*மேலவன் விடுதலோடும், வெம் படை அரக்கர்*
*வெள்ளம் நாலும் மூ-இரண்டும் ஆன நூறு ஒரு கணத்தில் (222-4)*
*நண்ணி,*
*தாலமேல் படுத்து மீண்டது, அவன் சரம் தலைவர்த்*
*தள்ளி. 973. முடிந்தது மூலத்தானை; மூவுலகு இருண்ட தீமை விடிந்தது; மேலை வானோர் வெந் துயர் (222-5)*
*அவரினோடும்*
*பொடிந்தது; புனிதன் வாளி போக்கு உறப் பொய்யர்*
*ஆவி*
*படிந்தது, ககனம் எங்கும்; பலித்தது, தரும் அன்றே. 974. 'ஈது ஒரு விளையாட்டு; அன்பின், இத்துணை (222-6)*
*தாழ்த்தான், ஐயன்;*
*எது அவன் துணியின் இப்பால்? நீசர் ஓர்*
*பொருளோ? இன்னும்*
*போதுமோ? புவன கோடி போதினும், கணத்தில்*
*பொன்றிப்*
*போதும்' என்று, அயனோடு ஈசன் அமரர்க்குப்*
*புகன்று நின்றான். 975. சேனை அம் தலைவர், சேனை முழுவதும் அழிந்து (222-7)*
*சிந்த,*
*தான் எரி கனலின் பொங்கி, தரிப்பு இலர், கடலின்*
*சூழ்ந்தே*
*வானகம் மறைய, தம் தம் படைக் கல மாரி பெய்தார் ஆனவை முழுதும் சிந்த அறுத்தனன், அமலன்*
*அம்பால்.*

*976. பகிரண்டப் பரப்பில் நின்ற பல பல கோடி வெள்ளத் தொகை மீண்டும் அரக்கர் யாரும் துஞ்சினர், கருவும் (225-1)*
*துஞ்ச;*

*செகம் உண்ட ஒருவன் செங் கைச் சிலையுறு*
*மணியின் ஓசை*
*புக, அண்டம் முழுதும் பாலின் பிரை எனப்*
*பொலிந்தது அன்றே.* *977.* நணியனாய்த் தமியன்
தோன்றும் நம்பியை வளைந்த
வஞ்சர்
*அணி உறாது அகன்ற வெள்ளம் அவை மடிந்து*
*இறந்த காலக்*
*கணிதம் ஏழரையே கொண்ட கடிகை; அக்*
*கடிகைவாய் வில்*
*மணிஒலி எழும்ப, வானோர் வழுத்திட, வள்ளல்*
*நின்றான்.* *(225-2)*

## *31. வேல் ஏற்ற படலம்*

*978.* *அரக்கர் சேனை ஓராயிர வெள்ளத்தை, 'அமரில்*
*துரக்க, மானுடர்தம்மை' என்று, ஒருபுடை துரந்து,*
*வெருக் கொள் வானரச் சேனைமேல் தான்*
*செல்வான் விரும்பி*
*இருக்கும் தேரொடும் இராவணன் கதுமென*
*எழுந்தான்.* *(2-1)*

## *32. வானரர் களம் காண் படலம்*

*979.* *என்று உரைத்து, 'உயர் வான் பிறப்பு எய்திய*
*வென்றி வெஞ் சின வேழங்கள்தம்மொடும்*
*துன்று வாசித் தொகைகளும் கேண்ம்' எனா,*
*நின்ற வீடணன்தானும் நிகழ்த்துவான்.* *(27-1)*

## *33. இராவணன் களம் காண் படலம்*

*980.* *அலக்கண் எய்தி அமரர் அழிந்திட,*
*உலக்க வானர வீரரை ஓட்டி, அவ்*
*இலக்குவன்தனை வீட்டி, இராவணன்*
*துலக்கம் எய்தினன் தோம் இல் களிப்பினே.*

*(இப்பாடல் இந்தப் படலத்தின் முதற் செய்யுளாக உள்ளது.)* *981.*
*முற்று இயல் சிலை வலாளன் மொய் கணை துமிப்ப,* *(21-1)*
*ஆவி*
*பெற்று, இயல் பெற்றி பெற்றாலென்ன, வாள் அரக்கர்*

*யாக்கை,*
*சிற்றியல் குறுங் கால் ஓரிக் குரல் கொளை இசையா,*
*பல் பேய்*
*கற்று இயல் பாணி கொட்ட, களி நடம் பயிலக்*
*கண்டான்.* *34. இராவணன் தேர் ஏறு படலம்* *982.* *ஏழ் - இருநூறு கோடி எனும் படைத் தலைவரோடும் ஆழியின் வளைந்த சேனை ஐ - இருநூறு வெள்ளம் ஊழியின் எழுந்த ஓதத்து ஒலித்தலும், அரக்கர்* *(2-1)*
*வேந்தன்*
*'வாள் அமர் முடிப்பென் இன்றே' என மணித் தவிசு*
*நீத்தான்.* *983.* *உரை செயற்கு அருந் தவத்தினுக்கு உவந்து, உமை* *(4-1)*
*கேள்வன்*
*அருள உற்றது, அங்கு அவன் மழுக் குலிசமோடு*
*ஆழி*
*முரிய, மற்றவை முனை மடித்து, ஒன்றினும் முடியா விரவு வச்சிரக் கவசத்தை மேற்படப் புனைந்தான்.*
*984.* *அண்ட கோடிகள் எவற்றினும் தன் அரசு உரிமை கண்டு போய் வரும் காட்சியின், கண்ணுதற் பரமன், பண்டு அவன் செய்யும் தவத்தினின் பரிந்து, இனிது* *(18-1)*
*அளிக்கக்,*
*கொண்ட வானகத் தேரது; குதிரையைக் குறிக்கின்.*
*985.* *ஐம் முகம் பயின்று இரட்டி, அங்கு அடல் புயன்*
*நால் - ஐந்*
*தும், இந் நான்கு எனும் கரத்தொடும், உமையவள்*
*ஒழிய* *இம்மை இவ் உரு இயைந்து, எழில் கயிலையோடு* *(27-1)*
*ஈசன்*
*வெம்மை ஆடு அமரர்க்கு எழுந்தென, தேர்மிசை*
*விரைந்தான்.*

### *35. இராமன் தேர் ஏறு படலம்*

*986.* *இத் தகையன் ஆகி, 'இகல் செய்து, இவனை* *(4-1)*
*இன்னே*
*கொத்து முடி கொய்வென்' என, நின்று எதிர் குறிப்ப, தம்தம் முறுவல் செயல் தவிர்ந்தது என, வானில் சித்தர்கள், முனித் தலைவர், சிந்தை மகிழ்வுற்றார்.*

### *36. இராவணன் வதைப் படலம்*

*987.* *புரந்தரன் பகைவன் ஆவி போக்கிய புனிதன்,* *(5-1)*
*வென்றி*

*சுரந்தருள் அனுமன், நீலன், அங்கதன், சுக்கிரீவன், உரம் தரு வீரர் ஆதிக் கவிப் படைத் தலைவருள்ளார் பரந்திடும் அரக்கன் சேனை படுத்தனர், திரியலுற்றார்.*

*988. வரம் படைத்து உயர்ந்த வன் போர் வயப் படைத் (17-1)*
*தலைவரோடு*
*நிரம்பிய வெள்ளச் சேனை நிருதரும், களிறும்*
*தேரும்*
*மரம் படர் கானில் தீப்போல், வள்ளல்தன் பகழி மாரி, பொரும்படி உடல்கள் சிந்தி, பொன்றினர் எவரும்*
*அம்மா.*

*989. பொங்கிய குருதி வெள்ளம் பொலிந்து எழு கடலில்*
*போக,*
*தங்கிய பிணத்தின் குப்பை தடுத்தது; சமரபூமி*
*எங்கணும் கவந்தம் ஆட, எய்தி அங்கு (17-2)*
*அரக்கிமார்கள்,*
*தங்கள்தம் கணவர்ப் பற்றி, தம் உடல் தாங்கள்*
*நீத்தார்.*

*990. எழும் படை வெள்ளம் எல்லாம், இரண்டு கை கடிகை (17-3)*
*தன்னில் ஆங்கு*
*களம் பட, கமலக்கண்ணன் கடுங் கனல் பகழி மாரி வளம் படச் சிலையில் கோலி, பொழிந்து, அவை*
*மடித்தான்; கண்டு,*
*உளம் கனல் கொளுந்த, தேரின் உருத்து, எதிர்,*
*அரக்கன் வந்தான்.*

*991. மூஉலகு அடங்கலும் மூடும் அண்டமேல் தாவினன் தேரொடும், அரக்கன்; தாவியே, கூவினன்; அங்கு அறைகூவ, கொண்டலும் மேவினன், அரக்கனை விடாது பற்றியே. (71-1)*

*992. அண்டம் ஓராயிர கோடி எங்கணும் மண்டினர், செருத் தொழில் மலைதல் விட்டிலர் அண்டர்கள் கலங்கினர்; அரக்கராயுளோர் உண்டு, இனிக் கரு' என ஓதற்கு இல்லையால். (71-2)*

*993. உமையவள் ஒரு புடை உடையவன் உதவியது அமைவுறும் மயல் வினை அளவு இல புரிவது, சுமை பெறும் உலகு ஒரு நொடிவரை தொடருவது, இமையவர் அடல் வலி பருகியது, எளிமையின். (89-1)*

*994. ஆசுரப் பெரும் படைக்கலம், அமரரை அமரின் ஏசுவிப்பது, எவ் உலகமும் எவரையும் வென்று வீசு வெற்பு இறத் துரந்த வெங் (96-1)*

*கணையது - விசையின்*
*பூசுரர்க்கு ஒரு கடவுள்மேல் சென்றது போலாம்.*

*995. மயன் படைக்கலம் அழிந்தது கண்டு, இகல் மறவோன், 'சயம் படைத்தது நன்று; இவன் செருக்கினைத்*
*தடுக்க, பயன் படைத்துள தண்ட மாப் படைகள் உண்டு; (103-1)*
*அதனால்*
*நயம் படைப்பென்' என்று, ஒரு கதை நாதன்மேல்*
*எறிந்தான்.*

*996. அன்ன மாக் கதை விசையொடு வருதலும், அமலன் பொன்னின் ஆக்கிய சிலையிடை ஒரு கணை (105-1)*
*பொறுத்தான்*
*முன்னது ஆக்கிய கரங்களும் முதிர் பொதிர் எறிய, சின்னமாக்கினன்; அது கண்டு, அங்கு அரக்கனும்*
*சினந்தான்.*

*997. ஆயது ஆக்கிய செய்கை கண்டு, அரக்கனும் (107-1)*
*சினந்தே*
*தீயின் மாப் படை செலுத்த, அப் படையினின்*
*செறுத்தான்,*
*தூய நீக்கம் இல் வாயுவின் படை தொட, அரக்கன் ஏய அப் படை ஏவி, அங்கு அமலனும் இறுத்தான்.*

*998. இரவிதன் படை ஏவினன், அரக்கன்; மற்று அமலன் சுருதி, அன்ன திண் படைகொடு காத்தனன்; (107-2)*
*மதியின்*
*விரவு வெம் படை வெய்யவன் விடுத்தலும், வீரன், உரவு திங்களின் படைகொண்டு, அங்கு அதனையும்*
*ஒறுத்தான்.*

*999. வாருதிக்கு இறை படை கொண்டு அங்கு அரக்கனும் (107-3)*
*மறைத்தான்;*
*நேர் உதிக்க அப் படை கொண்டு நிமலனும் நீக்க தார் உதித்திடு தடம் புயத்து அரக்கனும் தருக்கி, 'பேருவிப்பென், மற்று இவன் உயிர்' எனும் உளம்*
*பிடித்தான். 1000. முக்கணான் படை முதலிய தேவர்தம் படைகள் ஒக்க வாரி, அங்கு அரக்கனும் ஊழ் முறை துரப்ப, புக்கி, அண்ணலை வலங்கொண்டு போனதும், (107-4)*
*பொடிபட்டு*
*உக்கி, ஓடினதும் அன்றி, ஒன்று செய்துளதோ?*

*1001.இத் திறம்பட மாயையின் படை வகுத்து, எழுந்து, (118-1)*
*அங்கு*
*எத் திறங்களும் இடிஉரும் எறிந்திட வெருவி, சித்திரம் பெற அடங்கிய கவிப் பெருஞ் சேனை மொய்த்து மூடியது, அண்டங்கள் முழுவதும் மாய.*

*1002.'அண்ட கோடிகள் முழுவதும் அடுக்கு அழிந்து, (118-2)*
*உலையக்*
*கொண்ட காலம் ஈதோ!' எனக் குலைகுலைந்து,*
*அமரர்*
*துண்டவான் பிறை சூடியைத் தொழ, அவன் துயரம் கண்டு, 'இராகவன் கடிந்திடும்; கலங்கலீர்' என்றான்.*

*1003.மாயையின் படை தொலைந்திட, வகுப்பொடும் எழுந்த தீய வெவ் வினைச் செய்கைகள் யாவையும் சிதைந்தே போயது; எங்கணும் இருள் அற ஒளித்தது; அப்*
*(123-1)*
*பொழுதில்*
*காயும் வெஞ் சினத்து அரக்கனும் கண்டு, உளம்*
*கறுத்தான்.*

*1004.நெற்றி விழியான் - அயன், நிறைந்த மறையாளர் மற்றை அமரர், புவியில் வானவர்கள், 'ஈர் - ஐந்து உற்ற தலை தானவன் விடும கொடிய சூலம் இற்று ஒழிய ஆன்று அழியுமோ?' என - இசைத்தான். (130-1)*

*1005.'வேதம் ஒரு நாலும், உள வேள்விகளும், வெவ்வேறு ஓத முதலாய் உதவு பூதம் அவை ஐந்தும் நீதியொடு கால்குலைய, நீசன் விடு சூலம் ஈது அழியும்' என்று இதயம் எண்ணினன், இராமன்.*
*(130-2)*

*1006.எவ் வகை உரகமும் இரியல் போயின, நொவ்வியல் உற்றென; நொடிப்பது என் இனி? அவ் வயின் அரன் அணி அடல் அராவுமே கவ்வையின் உழந்தன, சிறையின் காற்றினே. (143-1)*

*1007.பிறைத் தலைப் பகழியால் பின்னும் ஓர் தலை அறுத்தனன், முளைத்தது, அங்கு அதுவும் ஆர்த்து; (150-1)*
*உடன்*
*மறுத்து இரு தலைதனை மாற்ற, வள்ளலும் குறைத்திலன் எனும்படி முளைத்த, குன்றுபோல்.*

*1008.ஆயிரப் பதின் மடங்கு அரக்கன் மாத் தலை தீமுகப் பகழியால் சினந்து, இராகவன் ஓய்வு அறத் துணிக்கவும், உடன் முளைத்ததால் தீயவன் தவப் பெருஞ் செயலின் வன்மையால். (150-2)*

*1009.அண்ணலும் இடைவிடாது அறுத்து வீழ்த்தலால், மண்ணொடு வானகம், மருவும் எண் திசை எண்ணுறும் இடம் எலாம் இராவணன் தலை நண்ணியது; அமரரும் நடுக்கம் எய்தினார். (151-1)*

*1010.இத் திறத்து இராமன் அங்கு ஏவும் வாளியின் தத்துறும் தலை முளைத்து எய்தும் தன்மையால், அத் திறத்து அரக்கனும் அமர் ஒழிந்திலன் - முத் திறத்து உலகமும் முருக்கும் வெம்மையான். (152-1)*

*1011.தொடுத்த ஆழியின் தோமரம் தூள்பட, விடுத்த வீரன் அவ் வெய்யவன் மாத் தலை அடுத்து மீளவும் நின்று அறுத்தான்; உயிர் முடித்திலன் விளையாடலை முன்னியே. (159-1)*

*1012.ஆனபோது, அங்கு அரக்கன் அத் தேரொடும் வான்மீது எழ, மாதலி தூண்டிட, ஞான நாயகன் தேரும் எழூந்துறப் போனது; அண்டப்புறத்து அமர் கோலினார். (163-1)*

*1013.அஞ்சல் இன்றி, அமர்க் களத்து, ஆரியன் வெஞ் சினத்தோடு வேல் அரக்கன் பொர, எஞ்ச ஏழு திவசம் இராப் பகல், விஞ்சு போர் செயும் வேலையில், வீரனும். (182-1)*

*1014.ஆய கண்டு, அங்கு அமலன் விடும் சரம் சாயகங்களை நூறி, தலைத் தொகை போய் அகன்றிடச் செய்தலும், போக்கிலாத் தீயவன் சினந்து, இம் மொழி செப்புவான்: (182-2)*

*1015.'துறக்கும் என்பதை எண்ணி சிரத் தொகை அறுக்குமுன் முளைத்து உய்குவது அன்றியே, மறுக்கும் என்று மனக் கொளல், மா நிலத்து இறக்கும் மானுடர் போன்று, என் உயிரும், நீ. (182-3)*

*1016.ஈது அரக்கன் புகல, இராமனும் தீது இருக்குறும் சிந்தையின் நீ தெளிந்து ஓது உரைக்கு எதிருற்று, என் பகழி இப் போது உரைக்கும்' எனக் கொடு பொங்கினான். (182-4)*

*1017.மாறுபடத் தேவர்களை ஏவல்கொளும் (199-1)*
*வாள் அரக்கன் மடிய, அன்னான்*
*ஏறி வரு பொன் தடந் தேர் பாகனும்*
*பொன்றிட பண்டு அங்கு இமையா முக் கண்*
*ஈறு இல் பரன் புகன்றபடி சுரந்து இமைப்பின்*
*ஏகியதால் - இடையே கூடித்*
*தேறு செய்து உழல் போதில், தீவினை*
*மாய்த்திடப் போம் நல் வினையே போல.*

*1018.'வான் கயிலை ஈசன், அயன், வானவர் கோன்,*
*முதல் அமரர் வாழ்த்தி ஏத்தி, தான் புவனம் ஒரு மூன்றும் தனி புரந்து, (219-1)*
*வைகிய நீ, தாய் சொல் தாங்கி,*
*கான் புகுந்த மறை முதல்வன் விடும் கடவுள்*

*ஈன்று, காத்து, அழித்து, அவை இயற்றும் அவ் உரு*
*மூன்றுமாய் நான்குமாய் ஐந்துமாம் முதல்*
*சான்றினைப் பரதற்குச் சுட்டி, சாற்றுவான். (305-1)*

*1261.அப் பொழுது அவ் வயின் அடைந்துளோர்களைத்*
*'தப்பு அறக் காண்பென்' என்று ஐயன் தன் மனத்து*
*ஒப்பு அற எண்ணும் முன், உம்பர் நாடு வந்து*
*இப் புறத்து இழிந்தென இழிந்த, மானமும். (317-1)*

*1262.அவ் வயின், 'அயோத்தி வைகும் சனமொடும், அக்குரோணி*
*தவ்வல் இல் ஆறு பத்து ஆயிரமோடும், தாயரோடும்*
*இவ் வயின் அடைந்துளோரைக் காண்பென்' என்று இராமன்*
*செவ்வையின் நிலத்தை வந்து சேர்ந்தது, விமானம்தானும். (317-2)*

*1263.எவ் வயின் உயிர்கட்கும், இராமன் ஏறிய*
*செவ்விய புட்பகம் நிலத்தைச் சேர்தலும்*
*அவ் அவர்க்கு அணுகிய அமரர் நாடு உய்க்கும்*
*எவ்வம் இல் மானம் என்று இசைக்கல் ஆயதால். (317-3)*

*1264. நீடு வேல் ஏற்றவற்கு இளைய நின்மலன்*
*வாடிய மனத்தனாய் வசிட்டன் முன் வர, சூடிய கடி மலர் தூவி ஆர்த்தனன்;*
*ஏடு அவிழ் தாமரை இறைஞ்சி, எய்தினன். (329-1)*

*1265.ஆயிடைக் குகனும் வந்து, ஆங்கு, ஆண்டவன் அடியில் வீழ,*
*நாயகன் உவந்து புல்லி, 'நண்ணி, என் பின்பு வந்த*
*தூயனே! கிளையினோடும் சுகம் இருந்தனையோ?' என்று,*
*வாயிடை மொழிந்தான், - மற்றை மறைகளும் காணா அண்ணல். (332-1)*

*1266.வேறு வேறு உள்ள சுற்றத்தவர்களும் வேந்தர் ஆதி*
*கூறிய குழுவினோரும் குழுமி, அங்கு இராமன் பாதம்,*
*ஊறிய உவகை தூண்ட, தொழுதனர், உவந்த பின்பு*
*தேறிய கமலக்கண்ணன் திரு நகர்க்கு எழுதலுற்றான். (332-2)*

*1267.நம்பியும் பாதனோடு நந்தியம்பதியை நண்ணி,*
*'வெம்பிய எரியின் பாங்கர், விலக்குவென்' என்று விம்மும்*
*கொம்பு இயல் மருங்குல் தெய்வக் கோசலை குளிர்*

*பொன் பாதம்*
*தம்பியரோடும் தாழ்ந்தான், தாமரைக் கண்ணீர் தாழ.*
*(332-3)*

*1268. மூன்று என நின்ற தன்மைக் குணங்களின்*
*உயிர்கட்கு எல்லாம்*
*சான்று என நின்ற மானச் சிறுவனைத்*
*தலைப்பட்டாட்குத்*
*தோன்றிய உவகைக்கு ஆங்கு ஓர் எல்லையும்*
*சொல்லற்பாற்றோ?*
*ஈன்ற போது ஒத்தது அன்றே, எதிர்ந்த போது ஒத்த*
*தன்மை! (332-4)*

*1269. இணை மலர்த் தாளின் வீழ்ந்த இலக்குவன் தன்னை*
*ஏந்தி*
*பணை முலைப் பாலும் கண்ணீர்த் தாரையும் பாய,*
*நின்றாள்; பிணை எனத்தகைய நோக்கின்*
*சீதையை, பேடை*
*அன்னத்*
*துணையினை, உலகில் கற்பின் பெருங் கதித்*
*துறையை, கண்டாள். (332-5)*

*1270. நான்முகன் தாதைதான் தன் மகன் என்று நல்கி,*
*விம்மி*
*பால் முலை சோர நின்ற பல் பெருந் தவத்தினாளை,*
*கால்முதல் தொழுது, தங்கள் கட்டு இரும் பாவம்*
*விட்டார்*
*மான் முயல் உருவத்தோடும் தோன்றிய வானோர்*
*எல்லாம். (332-6)*

*1271. அவ் வயின் விமானம் தாவி, அந்தரத்து, அயோத்தி*
*நோக்கி,*
*செவ்வையின் படரல் உற்ற, செகதல மடந்தையோடும்,*
*இவ் உலகத்து உளோர்கள் இந்திரர் உலகு*
*காண்பான்,*
*கவ்வையின் ஏகுகின்ற நீர்மையைக் கடுக்கும் அன்றே.*
*(332-7)*

*1272. வளம் கெழு கயிலை ஈசன், மலர் அயன், மறைகள்*
*நான்கும்,*
*ஒழுங்கு உறும் அமரர் ஆதி உயிர்களும் உணர்தற்கு*
*எட்டா*
*விளங்கு தத்துவங்கள் மூன்றும் கடந்து உயர் வெளிப்*
*பாழ் மேலாய்,*
*விளங்குறும் நேமிப் புத்தேள் மேவும் மா அயோத்தி*

கண்டார். (332-8)

1273. விளங்கிய புட்பகம் நிலத்தின்மீது உற,
தொழும் தகை அமரர்கள் துள்ளி ஆர்த்திட,
களங்கனி அனைய அக் கண்ணன் மாதொடும்
விளங்கினன் நகரிடை, விளைவு கூரவே. (332-9)
1274. புகுந்தனர் நகரிடை - பொங்கும் ஓசையின்
மிகுந்துள கவிப் பெருங் கடலும், மேதகு
மகம் பயில் முனிவனும், மற்று உளோர்களும்,
அகம்தனில் அருங் களிப்பு எழுந்து துள்ளவே. (332-10)

1275. நம்பியும் வசிட்டன் கூற, நந்தியம்பதியில் சென்று,
வம்பு இயல் சடையும் மாற்றி, மயிர் வினை முற்றி, மாதோடு
இம்பரின் எவரும் ஏத்த ஈர்ம் புனல் படிந்த பின்னர்
உம்பரும் உவகை கூர, ஒப்பனை ஒப்பம் செய்தார். (332-11)

1276. உயிர் வரும் உலவை அன்ன பரதனை இளவலோடும்
மயிர் வினை செய்வித்து, ஆங்கே மாசு அற மண்ணில் தாழும்,
செயிர் அறு சடிலக் கற்றைத் திரள் அறக் களைந்து நீக்கி,
குயில் புரைமொழியர் ஆவி கொள்வது ஓர் கோலம் கொண்டார். (332-12)

## 38. திருமுடி சூட்டுப் படலம்

1277. எழு வகை முனிவரோடும், எண் திசைத் திசைகாப்பாளர்
குழுவினர், திசைகள்தோறும் குழாம் கொண்டு களித்துக் கூடி,
தொழுவன அமரர் கைகள் சுமக்கலாம் விசும்பில் துன்னி,
வழுவல் இல் மலர்கள் சிந்தி, மானிடம் சுருங்கச் சார்ந்தார். (6-1)

1278. ஆயது நிகழ, செங் கண் இராமனும் அயோத்தி நண்ணி,
தாயரை வணங்கி, தங்கள் இறையொடு முனியைத் தாழ்ந்து, நாயகக் கோயில் எய்தி, நானிலக் கிழத்தியோடும்
சேயொளிக் கமலத்தாளும் திரு நடம் செய்யக் கண்டான். (8-1)

*1279.உம்பரும் உலகும் உய்ய உதித்திடும் ஒருவன்தானே,*
*செம் பதுமத்தில் வாழும் செல்வி சானகியாம் மாதும்,*
*தம்பியர்தாமும், மற்றும் தாபதர் சங்கத்தோடும்,*
*அம் புவிதன்னில் மேலாம் அயோத்தியில், அமர்ந்தான்*
*அம்மா. (8-2)*

*1280.இருபத்து ஏழ் அமைந்த கோடி யானைமேல்*
*வரிசைக்கு ஏற்ற*
*திரு ஒத்த சிறப்பர் ஆகி, மானிடச் செவ்வி வீரர்*
*உருவத் தோள் ஒளிரும் பூணர், உச்சி வெண்*
*குடையர், பச்சை*
*மரு ஒத்த அலங்கல் மார்பர், வானரத் தலைவர்*
*போனார். (11-1)*

*1281.கயிலையில் வாழும் ஈசன் முதலிய கடவுளோர் தம்*
*அயில் விழி அரிவைமாரோடு அந்தரம் புகுந்து*
*மொய்த்தார்,*
*குயில் மொழிச் சீதை கொண்கன் நிலமகள்தன்னைக்*
*கொள்ளும்*
*இயல்புடை வதுவை காணும் ஆதரம் இதயத்து எய்த.*
*(26-1)*

*1282.வேறு இனி உரைப்பது என்னோ? வியன் தருக்*
*குலங்கள் ஆதி,*
*கூறிய பொருள்கள் எல்லாம் கொற்றவன் வதுவை*
*காண*
*தேறு தம் உருவு நீத்து, மானிட உருவில் சேர்ந்து,*
*ஆங்கு*
*ஊறிய உவகையோடும் அயோத்தி வந்து உற்ற*
*அன்றே. (26-2)* *1283.தேவர் கம்மியன்தான் செய்த செழு மணி*
*மாட*
*கோடி*
*யாவரும் புகுந்து மொய்த்தார்; எழுந்த மங்கலத்தின்*
*ஓசை*
*நா வரும் பனுவல் வீணை நாரதன் முதலாய் உள்ள*
*மேவரு முனிவர் எல்லாம் விதிமுறை வேள்வி*
*கொண்டார். (29-1)*

*1284.அந்தணர், வணிகர், வேளாண் மரபினோர், ஆலி*
*நாட்டுச்*
*சந்து அணி புயத்து வள்ளல் சடையனே அனைய*
*சான்றோர்*
*'உய்ந்தனம் அடியம்' என்னும் உவகையின் உவரி*
*நாண*

வந்தனர், இராமன் கோயில் மங்கலத்து உரிமை
மாக்கள். *(32-1)*

1285.'வான் உறு முகுர்த்தம் வந்தது' என்று மா மறைகள்
நான்கும்
தான் உருக் கொண்டு போற்ற, சலம் தவிர்ந்து
அமரர் ஏத்தி,
தேன் உறு மலர்கள் சிந்தி, திசைமுகம் பரவ, தெய்வ
வான் உறை மகளிர் ஆட, மா தவர் மகிழ்ந்து
வாழ்த்த. *(37-1)*

1286.இப்படித் தழுவி, மாதர் இருவரும், இரண்டு பாலும்,
செப்புறல் அரிய இன்பச் செல்வத்துள் செலுத்தும்
நாளில்,
கப்புடைச் சிரத்தோன் சென்னி கடிந்த வில் இராமன்
காதல்
வைப்புடை வளாகம்தன்னில், மன்னுயிர் வாழ்த்த,
வந்தான். *(41-1)*

1287.மறையவர் வாழி! வேத மனுநெறி வாழி! நன்னூல்
முறை செயும் அரக்கர், திங்கள் மும் மழை, வாழி!
மெய்ம்மை இறையவன் இராமன் வாழி ! இக் கதை
கேட்போர் வாழி !
அறை புகழ்ச் சடையன் வாழி ! அரும் புகழ் அனுமன்
வாழி ! *(42-1)*

## 39. விடை கொடுத்த படலம்

1288.கெவனோடு கெவாக்கன், தூம்பன், கேசரி,
கெந்தமாதன்
தவன் உறு சரபன், சாம்பன், சுடேணன், சம்பாதி,
நீலன்,
நவை அறு பனசன், தாரன், கெசன், நளன், சுமீரன்
நண்பாம்
இவன் அரிலோமன், மின்போல் எயிற்றினன், இடபன்
என்பான். *(7-1)*

1289.விரதன், வீமாக்கன், வேகதரிசியே, விந்தன், வெற்றிக்
கரமுடைச் சதுக்கன், சோதிமுகன், தெதிமுகன்,
கயந்தன்
அரன், விறல் கொடிய கோபன், இடும்பனோடு
அரம்பன், ஆண்மை
தெரிதரு வசந்தன், கொற்றத் துன்முகன், தீர்க்க

*பாதன். (7-2)*

*1290.* வான் வளம் சுரக்க; நீதி மனு நெறி முறையே
என்றும்
தான் வளர்த்திடுக; நல்லோர்தம் கிளை தழைத்து
வாழ்க;
தேன் வழங்கு அமுத மாலைத் தெசரத ராமன்
செய்கை
யான் அளந்து அறைந்த பாடல் இடைவிடாது ஒளிர்க,
எங்கும். *(37-1)*

*1291.* எறி கடல் ஞாலம் தன்னுள் இன் தமிழ்ப் புலவர்க்கு
எல்லாம்
முறுவலுக்கு உரியவாக முயன்றனம் இயன்ற எம்
சொல், சிறுமையே நோக்கார், தங்கள்
பெருமையே சிந்தை
செய்யும்,
அறிவுடை மாந்தர்க்கு எல்லாம் அடைக்கலம் ஆக
வாழி. *(37-2)*

*1292.* வாழிய, சீர் இராமன்! வாழிய, சீதை கோமான்!
வாழிய, கௌசலேசை மணி வயிற்று உதித்த
வள்ளல்!
வாழிய, வலி மார்பும் மராமரம் ஏழும் சாய,
வாழிய கணை ஒன்று ஏவும் தசரதன் மதலை வாழி!
*(37-3)*

*1293.* இராவணன்தன்னை வீட்டி, இராமனாய் வந்து
தோன்றி
தராதலம் முழுதும் காத்து, தம்பியும் தானும் ஆகப்
பராபரம் ஆகி நின்ற பண்பினைப் பகருவார்கள்
நராபதி ஆகி, பின்னும் நமனையும் வெல்லுவாரே.

*(37-4)*

## கதைக் குறிப்புகள்

***1. கண்ணன் குருந்தொசித்த வரலாறு... (26)***

*கண்ணனை மணக்க எண்ணிய பதினாயிரம் இயக்கியர் துவாரகையில் கோபியராகப் பிறந்து, அங்குப் பிறந்து வளரும் கண்ணனோடு பல லீலைகளைச் செய்து வருகின்றனர். ஒரு நாள் அவர்கள் கண்ணனோடு நீர் விளையாடியபோது, அவர்களின் ஆடைகளைக் கவர்ந்து யமுனைக் கரையில் இருந்த குருந்த மரக் கிளைகளில் தொங்கவிட, அச்சமயம் பார்த்து அங்கு வந்த சகோதரன் பலராமனைக் கண்டமையாலும், ஆயர்குலப் பெண்கள் தங்களின் ஆடைகளைத் தருமாறு வேண்டிக் கொண்டமையாலும் கண்ணன் குருந்த மரத்துக் கிளைகளை வளைத்து அவர்தம் ஆடைகள் அவர்கட்குக் கிடைக்குமாறு செய்ததோடு தானும் வேறு வழியில் கரையேறுகிறான்.*

***2. கண்ணன் மருதொசித்த வரலாறு (26)***

*குழந்தைப் பருவத்துக் கண்ணன் தாங்க வியலா அளவுக்குக் குறும்புகளைச் செய்வான். தானே அக்குறும்புகட்கு ஆட்பட்டும் பிறர் வாயிலாகவும் அறிந்த அன்னை யசோதை சிறு தாம்பினால் கண்ணனின் இடுப்பில் கட்டி மறுமுனையால் அவனை உரலில் இறுகப் பிணித்தாள். கட்டுண்ட கண்ணன் உரலை இழுத்துக் கொண்டே சென்று முற்றத்தில் வளர்ந்து நின்ற மருதமரங்கள் இரண்டின் இடையில் செல்ல, உரல் இரண்டு மருத மரங்கட்கும் இடையில் சிக்கியது. உரலை இழுப்பது போன்று அந்த இரண்டு மருத மரங்களையும் கண்ணன் சாய்த்தான். அம்மருத மரங்கள் இரண்டும் இரண்டு கந்தருவர்களாகிக் கண்ணனின் கழலடி வணங்கினர். அவர்கள் மதுவின் மயக்கத்தால் ஆடையின்றி நாரதர் வருவதையும் கருதாது நீர் விளையாட்டில் ஈடுபட்டு இருந்த நளகூபரன் மணிக்கிரீவன் என்ற பெயருடைய குபேரனின் பிள்ளைகளே, அவ்விருவரும். அவர்தம் செயல்களால் அருவறுப்புற்று வெகுண்டெழுந்த நாரதரின் சாபத்தால் மருத மரங்களாய் நின்ற அவர்கள் கண்ணனின் கழலடியால் முந்தை உருவங்களைப் பெற்று மகிழ்ந்தனர்.*

***3. கண்ணன் பொறிவரி அரவின் ஆடிய வரலாறு (26)***

*காளிங்கன் என்ற ஐந்தலைப் பாம்பு யமுனையாற்றின் மடு ஒன்றில் வாழ்ந்து தன் நஞ்சினைக் கக்கி, அம் மடுவினது நீரை உண்ணுதற்கு ஏற்றதாயல்லாது செய்து வந்தது. அம்மடுவில் நீர் ஆடுதற்கு அஞ்சி மக்கள் ஒதுங்கினர். தீராத விளையாட்டுப் பிள்ளையாகிய கண்ணன், விளையாட்டாகச் சென்று மடுவின் கரையில் இருந்த கடப்ப மரம் ஒன்றின் மேலேறி, காளிங்கனின் தலைமேல் குதித்து அதனைக் கொல்லப் போகையில் அப்பாம்பின் மனைவியரின் வேண்டுகோளை ஏற்று கண்ணன் அவர்களை மடுவை விட்டேறி, கடலில் வாழுமாறு பணித்தனன்.*

***4. புறவொன்றின் பொருட்டாக துலைபுக்க பெருந்தகையின்***

***வரலாறு (243, 6471)***

தன்னை இழந்தும் பிறர் நலம் காணும் வள்ளலாய் வாழ்ந்தவர் சூரியகுலத் தோன்றலாகிய சிபி என்னும் சக்கரவர்த்தி. அவர்தம் வள்ளல் தன்மையை உலகறியச் செய்ய எண்ணிய இந்திரனும், இயமனும் முறையே பருந்தாகவும், புறாவாகவும் உருக் கொண்டனர். புறாவினைப் பருந்து துரத்த, புறா சிபியிடம் அடைக்கலம் புகுந்தது. "என் இரையைக் கொடு" என்று பருந்து சிபியைக் கேட்க, சக்கரவர்த்தியோ தன்பால் அடைக்கலம் புகுந்த ஒன்றனைத் தருதல் இயலாது என மறுத்து ஈடாக வேறு எதனை வேண்டினும் தருவதாகக் கூறினான். அதற்கு உடன்பட்ட பருந்து அந்தப் புறாவின் எடையளவுக்குச் சிபியின் உடலில் இருந்து ஊன் தரின போதுமென்றது. மகிழ்ந்த சிபி புறாவினை ஒரு தட்டில் வைத்து, தன் உடல் தசையில் பகுதியை துலாக்கோலின் வேறு தட்டில் இட்டான். ஆனால், தன் உடல் உறுப்புகளையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக அரிந்து வைத்த போதும் துலாக்கோல் சமனடையாது புறாவின் தட்டு தாழ்ந்தே நின்றது. பின்னர் தானே தட்டில் ஏறி நின்றனன். தட்டுகள் சமநிலையுற்றன. அப்போது அத்தேவர்கள் இருவரும் தத்தம் உண்மையுருவோடு தோன்றி அவர்க்கு வேண்டிய வரங்களைத் தந்து போயினர் என்பது வரலாறு.

### 5. கரா மலையத் தளர் கைக் கரியை அளித்த

### வரலாறு (2564, 6281)

பாண்டிய குலத்து இந்திரத் துய்மன் ஒரு திருமால் பக்தன். ஒன்றிய சிந்தையனாய்த் திருமாலை வழிபடும் காலத்து அண்மையில் நிகழ்வது ஒன்றும் அறியான். அப்படி வழிபட்டுக் கொண்டிருந்த ஒரு நாளில் அங்கு அகத்தியர் வர அவர் வந்தது அறியானாதலால் அவரை வரவேற்று உபசரிக்கவில்லை. அகத்தியர அரசன் செருக்குற்றனன் எனத் தவறாக நினைத்து அவனை யானையாகுக எனச் சபித்தனர். உருவால் மாறினன் ஆயினும் உணர்வால் திருமாலின் திருநாமமும் பக்தியுமே அவன் உளத்து நிறைந்து நின்றன. அதனால் யானையான பின்னரும் திருமாலின் பூசனை தொடர்ந்தது. ஒரு நாள் பூசனைக்கான பூப்பறிக்க குளம் ஒன்றில் இறங்க அக்குளத்தில் வாழ் முதலை யானையின் காலைக் கவ்விக் கொள்ள, தன்னை விடுவித்துக் கொள்ள இயலா யானை "ஆதி மூலமே" என்று அரற்ற, திருமால் கருடன் மேல் ஏறி வந்து தனது சக்கரப் படையால் முதலையைத் துணித்து யானையைக் காத்தனன்: மோட்சம் அளித்தனன் என்பது வரலாறு.

### 6, அரன் மதி புனைந்த வரலாறு (303)

தட்சப் பிரஜாபதி பெற்ற பெண்களாகிய அசுவினி முதலாய இருபத்தி ஏழு பெண்களையும் சந்திரன் மணந்தனன். இவ் இருபத்தி எழுவரும் இருபத்தி ஏழு நட்சத்திரங்கள். சந்திரன் உரோகிணி என்பாளிடம் காதல் மிகக் கொண்டு அவளுடனே எப்பொழுதும் கூடி வாழ்ந்தனன். துன்புற்ற, எஞ்சிய இருபத்தி அறுவரும் தந்தையாகிய தட்சனிடம் முறையிட, மகளிரின் துன்பம் பொறாத தக்கன் க்ஷயம் உற்றுத் தேய்க எனச் சபித்தனன். அச்சாபத்தால் நாள் ஒன்றாகக் கலைகள் குறைந்து வரக் கண்டு சந்திரன் எஞ்சிய பதினாறாவது கலையும் தேய்ந்து போதற்கு முன்பு சிவபிரானைச் சரண் அடைந்தனன். அவ்வொற்றைக் கலையைச் சிவனார் தம் தலையில் அணிந்து மீண்டும் கலைகள் வளரப் பணித்தனர் என்பது வரலாறு.

### 7. புடை ஊற்றும் சடை முடிபெற்ற கதை (326)

சிவபெருமான் சடையில் கங்கை என்பாள் எப்போதும் இருப்பவள். சூரிய வம்சத்துப் பிறந்த பகீரதன் என்ற சக்கரவர்த்தி, தன் பிதுர்க்கள் நற்கதி அடைய சிவபெருமானை நினைத்துப் பல காலம் தவம் செய்தனன். அத்தவத்திற்கு மகிழ்ந்து இரங்கிய ஈசன் தன் சடையில் கரந்துறையும் கங்கையில் ஏழு துளைகளைத் தரையில் செலுத்தினன். அவைகளே ஏழு புண்ணிய ஆறுகளாய்ப் பாரதத்தில் ஊற்றெடுத்து ஓடுகின்றன என்பதும் கதை. இவ் ஏழு ஆறுகளும் மக்களின் வளவாழ்வுக்கு உறுதுணையாய் இருப்பன என்பது கதை.

பகீரதன் தன் பிதுர்க்கள் நற்கதி அடைய சிவபெருமானை வேண்டி ஆகாய கங்கையை நிலவுலகுக்குக் கொணர்ந்தான். ஆனால் அதன் வேகத்தைப் பூவுலகம் தாங்காது. எனவே, அதன் வேகத்தைத் தடுத்து ஆட்கொள மீண்டும் சிவனாரை வேண்டினான். சிவனார் தன் சடையில் அதன் வேகம் தாங்கினார். அக்கங்கை அன்றுமுதல் சிவனார்தம் சடையில் கலந்து உறைகின்றாள்; சுரக்கின்றாள் என்பதும் ஊற்றாய் வெளிப் போகின்றாள் என்பதும் கதை.

### *8. உவரி நீர்க் கடல் தொட்ட கதை (6441, 1586, 3923)*

நூறு அசுவமேத யாகங்களைச் செய்து முடிப்பவன் இந்திரப் பதவியை எய்துவன். இதனால் முன்பே உள்ள இந்திரன் இப்படி யாகம் செய்வார்க்கு இடையூறு செய்தல் இயல்பு. அவ்வாறு அசுவமேத யாகம் செய்ய முயன்றவர்களுள் ஒருவன் சகரன் என்ற மன்னன். இவன் விட்ட அசுவத்தை இந்திரன் மாயையாற் பிணித்து பாதாளத்தில் தவம் செய்யும் கபில முனிவரின் பின்புறம் உள்ள மரத்தில் கட்டி வைத்தனன். வேள்விக் குதிரை காணாமற் போன செய்தியை அறிந்த சகரன் தன் மக்கள் அறுபதினாயிர வரையும் அழைத்து குதிரையை மீட்டு வருமாறு ஏவினன். பூமி முழுவதும் தேடியும் குதிரையைக் காண இயலாத அவர்கள் பாதாள உலகில் தேடப் பூமியைத் தோண்டினர். அவ்வாறு அவர்கள் தோண்டிய குழியின் எல்லை நூறு யோசனை அகலமும் ஆழமும் கொண்டதாகும். அந்தக் குழியே நிலவுலகில் கடலாய் நிற்கின்றது. ஆதலால் கடல் சாகரம் என்ற பெயர்க்கு உரியது ஆயிற்று.

### *9. அநந்தன் கீழுற நெளிந்த கதை.... (மி119)*

### *ஆமையின் முதுகில் மந்தரம் திரிந்த கதை.. (மி120)*

சாவா, மூவா, நோவா வாழ்வளிக்கும் மாமருந்தாம் அமிழ்தம் பெறவேண்டி மந்தர மலையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிப் பாற்கடலைக் கடைந்தனர். தேவர்கள் வாற்புறமும் அசுரர்கள் வாய்ப்புறமுமாக வாசுகியைப் பற்றிக் கொண்டு இழுத்தனர். மந்தர மலையின் அழுத்தத்தால் ஏற்பட்ட பாரத்தைத் தாங்க இயலாத பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஆதிசேடன் நெளிந்தான். பூமி நிலைகுலையுமோ என்ற நிலையில் திருமால் ஆமை வடிவம் கொண்டு பூமியைத் தாங்கி மந்தரமெனும் மத்தின் அழுத்தமெலாம் தன்மீது விழுமாறு அனைத்தையும் தாங்கிக் கொண்டதாக வரலாறு.

### *10. இமயவில் வாங்கிய என்பதில்*

*அடங்கியுள்ள வரலாறு (677)*

தாரகாட்சன், வித்யுந்மாலி, கமலாட்சன் என்ற மூவரும் தாரகாசுரனின் மக்கள், இவர்கள் தவத்தில் சிறந்தவர்கள். தவ வலிமையால் முறையே மத்திய, சுவர்க்க, பாதாளம் என்ற மூன்றிடத்திலும் ஆட்சி புரிந்தனர். மயன் என்பானைக் கொண்டு வெண்பொன், பசும்பொன், கரும்பொன் ஆகியவற்றால் அரண்கள் அமைந்த, வானில் பறக்க வல்ல, மூன்று நகரங்களையும் பெற்றிருந்தனர். பல அரக்கர்களோடு அக்கோட்டை நகரங்களோடு வானில் பறந்து தாங்கள் விரும்பியவாறு நிலத்தில் இறங்கி மக்களை அழித்துத் துன்புறுத்தினர்; தேவர்களை அச்சுறுத்தினர். ஆற்றாத அமரரும் முனிவரும் சிவனிடம் வேண்ட, சிவனார் பூமியைத் தேராக சந்திர, சூரியர்களை தேர்ச் சக்கரங்களாக, நான்கு வேதங்களையு் நான்கு குதிரைகளாக, பிரம்மனைத் தேரோட்டியாக, மேருவை வில்லாக, அதிசேஷனை நாணாக, திருமாலை அம்பின் சிறகாக, அக்கினியை அம்பின் முனையாக, வாயுவை அம்பாக மற்றைத தேவர்களை வெவ்வேறு போர்க்கருவிகளாகக் கொண்டு போர்க்குப் புறப்பட்டார். ஆனால் தாம் உதவவில்லையெனில் சிவனால் அத்தீயவர்களை வெல்ல இயலாது என எல்லோரும் தனித்தனியே நினைத்தனர். மனத்தகத்தானாகிய மறைமுதல்வன் அந்தர்யாமியாய் இருந்து உணர்ந்து புன்முறுவல் பூத்தனன். அப்புன்முறுவலே அசுரர்களின் கோட்டைகளை அழித்து பொடியாக்கியது என்பது வரலாறு.

*11. சிவன் தக்கனார் வேள்வி அழித்த கதை.... (677)*

தக்கன் தான் செய்த வேள்விக்கு சிவனை அழைக்கவில்லை தக்கன் மகளான தாட் சாயிணி தன் தந்தை தன் கணவனை அழைக்கவில்லை யென்றாலும் தந்தையெனும் பாசத்தால் யாகம் காணச் சென்ற போது அவளை அவமதித்தான் செருக்குற்ற தட்சனையும் அவன் செய்யும் யாகத்தையும் அழிப்பதற்கு வீரபத்திரனை அனுப்பி தலைவனாகிய தன்னை மதியாமற் செய்த யாகத்திற்குச் சென்ற தேவர்கள் எல்லோரும் விரட்டப் பெற்றனர். பலரும் பல உறுப்புகளை இழந்தனர்.

*12. அருந்ததி அனைய கற்பு என்ற கதை (1137, 6836)*

இவர் கருத்தம முனிவரின் மகள். வசிட்டரின் மனைவி. மகா பதிவிரதை. எனினும், தன் கணவரிடம் ஐயம் கொண்டாளாதலால் கணவரின் சாபத்தால் கருமையும், செம்மையும் கலந்த உருவத்தளாய் யாவரும் காண நட்சத்திரமாய்த் திகழ்ந்து கொண்டுள்ளாள். துருவ மண்டலத்தின் அருகில் உள்ள சப்தரிஷி மண்டலத்தின் மத்தியில் வசிட்டரும் அவர் அருகே அருந்ததி மீனும் இருப்பதனை இன்றும் காணலாம். சிவனார் தம் சோதனைகளையெலாம் எளிதில் வென்ற மனத்திண்மையாம் கற்பின் வல்ல இவளிடம் வந்து இவர்தம் கற்பைச் சோதிக்க முயன்றபோது வெற்றி பெற்றவள்.

*13. அகத்தியர் தமிழ் எனும் அளப்பரும்*

*சலதி தந்த வரலாறு (2671, மி85)*

*ஒரு காலத்தில் இருடியர் எல்லாரும் கூடி வடமொழியைச் செம்மைப்படுத்த வடபுலத்துக் காசியில் வடமொழிச் சங்கமொன்றை நிறுவினர். அச்சங்கப் புலவர்களுள் ஒருவராகிய அகத்தியர் என்பார் அறிவிற் சிறந்தவர்; மற்றவர்களோடு வாதிட்டுத் தம் கருத்தை நிலை நாட்ட வல்லவர். எனவே ஏனைய எல்லாரும் ஒன்றுபட்டு இவரைத் தனித்துவிட்டு அவமதித்தனர். அவர்களோடு மாறுபாடு கொண்ட அகத்தியர், சிவபெருமானிடம் சென்று குறையிரந்தனர்; அவர்களின் இறுமாப்பை மாய்க்க வழிகாட்ட வேண்டினர். அப்போது அவர்கள் இருந்த அரங்கின் முழுமையிலும் நறுமணம் நிறைந்த நிலையை அனுபவித்த அகத்தியர் நறுமணத்திற்கான காரணம் வினவ, பரம சிவனார் அவ்அரங்கின் ஒரு மூலைக்கு அழைத்துச் சென்று குவிந்து கிடந்த ஏடுகளைக் காட்டினார். அது கண்ட அகத்தியர், இனிமை என்ற பொருள் தரும் 'தமிழ்' என்ற சொல்லைப் பன்முறை கூறினார். அம் மொழிக்கான ஆதார விதிகளே இவ் ஏடுகளில் உள்ளன; அவற்றைக் கொண்டு தென்திசை செல்க எனப் பணித்தனர் சிவனார். அவற்றோடு தென்திசை சென்று பொதிய மலையில் இருந்து தொல்காப்பியர் முதலான பன்னிரு மாணவர்க்குச் சொல்லிக் கொடுத்து, தமிழ் மொழியைத் தழைத்தோங்கச் செய்தனர் என்பது வரலாறு.*

***14. தையல் பாகன் என்பதன் வரலாறு (மி115)***

*பரமசிவனும், பார்வதி தேவியும் கைலையில் ஒருங்கே வீற்றிருந்த ஒரு நாள் பிருங்கி என்ற முனிவர் சிவனைக் காணச் சென்றார். பிருங்கி சிவனைத் தவிர மறந்தும் புறந்தொழா இயல்பினர். எனவே இருவரும் நெருக்கமாக அமர்ந்திருந்த நிலையில் சிவனை மட்டும் வழிபடுவான் வேண்டி, வண்டு வடிவெடுத்து இருவர்க்கும் இடையே உள்ள சிறிய இடை வெளியில் புகுந்து சிவனை மட்டும் வலம் வந்து வணங்கினார். அது கண்ட உமையம்மை முனிவனை வெகுளாது காரணம் காணும் ஆர்வத்தால் அய்யனை நோக்கி "முனிவர் தம் இச்செயலுக்கு என்ன காரணம்?" என வினவினள். இம்மை மறுமை ஆகிய இரண்டிலும வேண்டிய நலன்களைப் பெறுவார். உம்மையும் இம்மை, மறுமை ஆகிய இரண்டும் கடந்த செம்மை நிலையாம் வீடுபேறு பெற விழைவார் என்னையும் வழிபடுவர். இதுவே முனிவர்தம் செயலுக்குக் காரணம் என்றார். "இறைவன் வடிவைப் பிரிந்து தனியே நிற்றலினால் அன்றோ இந்த நிலைமை' என எண்ணிய அன்னை பிரிவு அறியாப் பெருநிலையைப் பெறுவான் வேண்டி கேதாரம் என்றதோர் தலத்தமர்ந்து அய்யனை நினைத்து அருந்தவம் புரிந்தார். அகமகிழ்ந்த அய்யன் தன் உடம்பில் பாதியை அன்னைக்கு அளித்துத் தன்னின் வலப்பாகம் ஆணாக இடப்பாகம் அன்னையாக என்றும் ஒன்றாய் விளங்க அருள் பாலித்தார். இதுவே அர்த்தநாரீசன் (தையல்பாகன்) வரலாறு ஆகும்.*

***15. திருமால் ஆகிய மோகினி மடந்தையால் அவுணர்,***

***தம் செய்கை மறந்ததும் அமரர்கள்***
***அமிழ்தம் துய்த்ததும் (மி121)***

*பாற்கடல் கடைந்தபோது சமமாக உழைத்த இரு சாராரும் (தேவர்கள், அசுரர்கள்) களைத்த காலத்து திருமாலே இரு வடிவெடுத்து இரு பக்கங்களிலும் நின்று உதவி கடைதலைச் செய்தார் என்பதும், அமிழ்தத்தைத் தேவர்களே பெற வேண்டும்*

*அசுரர் பெறல் ஆகாது என்று எண்ணிய திருமால் அழகிய மோகினி நங்கையாய் அவர்கள் முன்பு தோன்றி அசுரர்களிடையே உணர்ச்சியைத தூண்டி உழைப்பால் பெற்ற ஊதியம் மறந்து மோகினியின் காரணமாகத் தம்முள் பகைத்து சண்டையிட்டுக் கொண்ட காலத்து, தேவர்கள அமிழ்தை உண்டு களித்தனர் என்பதும் வரலாறு.*

### *16. சிவன் ஆலம் உண்ட கதை (மி122)*

### *சீதர மூர்த்தி திருவும் ஆரமும் அணிந்த கதை*

*வாசுகி என்னும் பாம்பின் வாய்ப்புறமாக அசுரர்களும், அதன் வால்புறமாக தேவர்களும் நின்று அதனைக் கயிறாகக் கொண்டு மந்தர மலையை மத்தாக்கி பாற்கடலைக் கடைந்த காலத்து, அதில் எத்தனையோ மங்கலப் பொருள்கள் தோன்றின. அவை அனைத்தையும் தேவர்களே எடுத்துக் கொண்டனர். அதில் தோன்றிய துளசி மணிமாலையையும் இலக்குமியையும் திருமால் எடுத்துக் கொண்டார் என்பது கதை. மங்கலப் பொருள்களையெலாம் தேவர்கள் எடுத்துக் கொண்ட பின்னர் அமிழ்தம் தோன்றுதற்கு முன்னர் தேய்ந்த பிறைச்சந்திரன் தோன்றினான். அதனைச் சிவனார்க்கு அளித்தனர். பின்னர் நஞ்சு தோன்றியது. அதனைக் கண்டு அஞ்சி ஓடிய இரு சாரார்க்கும் அச்சம் அகற்றித் தானே நஞ்சினை எடுத்துக் கொண்டான். எல்லாவற்றிற்கும் தலைவனாம் சிவபெருமான் என்பது வரலாறு. இது பல்வேறு வகையில் வழங்கும்.*

### *17. திதி அவள் வயிற்றுறு மகவு மருத்து எனும் நாமம்*

### *பெற்ற கதை (மி125)*

*அமிழ்தத்தைப் பெறாது தடுக்க வந்த மோகினியால் தம்முள் மாறுபட்டுச் சண்டையிட்டு அனைத்து அசுரர்களும் அழிந்தனர். இவர்களின் தாயான திதி என்பாள் இவ்வளவுக்கும் காரணம் தேவர் தலைவனாம் இந்திரன் தானே அவனைக் கொல்லும் ஆற்றல் பெற்ற மகன் ஒருவனைப் பெற நினைத்துத் தன் கணவனான காசிப முனிவரை வணங்கி வேண்டினாள். அவரால் கருவுற்றாள். முனிவர் இக்கரு ஆயிரம் ஆண்டுகள் உன் வயிற்றில் வளரும். அக்காலத்து நீ அறநெறிகளின்படி வாழ்தல் வேண்டும் இல்லையேல் கருச் சிதைவுறும் எனக் கூறிப் போந்தனன். இதனை அறிந்த இந்திரன், திதி என்பாளிடம் ஒரு பணியாளனாக வந்து சேர்ந்து இவள் எப்போது முறைமை தவிர்வாள் அச்சமயத்தில் அவள் வயிற்றுக் கருவைக் குலைக்கலாம் எனக் காலம் பார்த்து இருந்தான். ஆயிரம் முடிய இன்னும் பத்து ஆண்டுகளே இருக்கும் போது தெற்குப் புறம் தலை வைத்துப் படுத்தல் வேண்டும் என்ற முறைமைக்கு மாறாக ஒரு நாள் நடுப் பகலில் வடபால் தலை வைத்துப் படுத்து உறங்கினாள். இதுவே சமயம் என்று இந்திரன் அவள் வயிற்றுள் புகுந்து வளரும் கருவை ஏழு துண்டங்களாக்கினான். வயிற்றுக் கரு அழ, திதி கண்*

*விழித்து நிகழ்ந்தது உணர்ந்து கருவைக் கொல்ல வேண்டாவென வேண்டினாள், இந்திரன் அவள் முன் தோன்றி தன் பிழையைப் பொறுக்க வேண்டுமென வேண்டினான். திதியும் தன் தவறு உணர்ந்து தன்னால் கரு துண்டு பட்டது தெளிந்து, "என் மக்களான இவ் எழுவரும் எங்கும் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் மாருதர்கள் என்று பேர் பெற்று வாழவேண்டும்" என இந்திரனை வேண்டினாள். அவனும் அவ்ஏழு துண்டங்களுக்கும் ஆவகம், பிரவகம், சம்வகம், உத்வகம், விவகம், பரிவகம், பராவகம் எனப் பெயர் இட்டனன். அவர்கள் ஒவ்வொரு விண்மீன் மண்டலத்தில் இடம்பெற்றனர்.*

### *18. மலைமகள் கொழுநன் என்பதன் வரலாறு (மி149)*

*தட்சன் செய்த யாகத்தில் சிவபெருமானும் உமையம்மையும் அவமதிக்கப் பெற்றமையால் தட்சன் மகளாகப் பிறந்து தாட்சாயிணி என்ற பெயர்க்கு உரியவளான பார்வதி வருந்தி தாட்சாயிணி பெயர் மாறி வேறு ஒரு பெயரொடு சிவனைச் சேர வேண்டும் என்று வேண்டிக் கொண்டாள். அதன் காரணமாக மலையரசனாம் இமவானின் மகளாக வளர்ந்து சிவபெருமானை மீண்டும் சேர்ந்தார். சிவனார் மலைமகள் கணவன் பெயர்க்குரியவரானார் என்பது வரலாறு.*

### *19. சிவபெருமான், திருமாலின் தாள்நீரைத் தலையில்*

### *ஏற்ற கதை (1379)*

*ஈகையில் சிறந்தவனாயினும், அதனால் அனுபவிக்க வேண்டிய பெருமித உணர்வை மறந்து செருக்கில் நின்ற மாவலிச் சக்கரவர்த்தியின் செருக்கினை அடக்கி ஆட்கொள எண்ணிய திருமால் அவன் செய்யும் வேள்வியின்போது ஏற்கும் இயல்பினனாய் வாமன உருவில் வந்து தன் காலால் மூன்று அடி மண்ணை யாசித்தார். கொடுத்தான். ஆனால் அவரோ தன் பேருருவால் உலகனைத்தையும் ஈரடியால் அளந்து, மூன்றாவது அடியை அவன் தலையில் வைத்து அருள்பாலித்தார். அவ்வாறு அளந்த நாளில் பிரம்மா அவர்தம் திருப்பாதங்களைத் தம் குண்டிகையில் இருந்த நீரால் கழுவி மந்திரத்தால் வாழ்த்தினார். அவ்வாறு கழுவிய நீர் கங்கையாகப் பெருக அதனைச் சிவபெருமான் தலையால் தாங்கினார் என்பது வரலாறு.*

### *20. கங்கையை அவனியில் கொணர்ந்தோர் -*

### *பகீரதன் (1586, 3923)*

*சூரிய குலத்துத் தோன்றலாகிய திலீபன் என்பவனின் மகன் பகீரதன். தன் மூதாதையர்கள் சாபத்தால் இறந்த செய்தியை வசிட்டர் வாயிலாகக் கேட்டு, அவர்கள் நற்கதி அடையப் பிரம்மனை நோக்கி 10,000 ஆண்டுகள் தவம் புரிந்தான். பிரம்மனோ "நீ கங்கையையும் சிவனையும் நோக்கித் தவம் செய்து கங்கையைக் கொண்டு அவர்களின் சாம்பலை நனைத்தால் அவர்களுக்கு நற்கதி கிடைக்கும்" என்று கூற அவ்வாறே செய்தான். கங்கை சிவன் முன் தோன்றி, "நான் வருவதற்குத் தடையொன்றும் இல்லை, என் வேகத்தைத் தாங்கிக் கொள்வார்*

உண்டாயின்" என்றாள். பிரம்மன் கட்டளைப்படி சிவனாரை நோக்கித் தவம் புரிந்தான். சிவனாரும் கங்கையின் வேகத்தைத் தாங்கிக் கொள்வதாகக் கூற, பின் சிவன் வேண்டுகோளின்படி கங்கை வானுலகினின்று பூலோகம் வருகையில் சிவனாரால் கங்கை தாங்கப் பெற்றுப் பூமி பொறுக்கும் அளவுக்குப் பூமியில் விடப்பட்டாள். கங்கையை இறந்தோர் சாம்பலில் பாய வைத்து நற்கதி பெறச் செய்தவன். இவனால் கங்கை கௌரவம் பெற்றதால் கங்கைக்குப் பாகீரதி எனப் பெயர் வந்தது.

### 21. பரசுராமன் கதை (1630, 7415)

சமதக்கினி முனிவரின் மனைவி ரேணுகை. இவள் நீராடிப் புனல் கொணர கங்கை சென்றதொரு நாளில், அங்குச் சித்திராங்கதன் என்ற கந்தருவனைக் கண்டாள். அந்த அழகன் அழகிய கந்தர்வப் பெண்களோடு புனல் விளையாடிக் கொண்டிருந்தான். அவர்களை அந்நிலையில் கண்டு அவர்களின் அழகில் மயங்கி நின்றாள். காலம் கடந்த நிலையில் அச்சத்தோடு நீர்க்குடத்தோடு யாகசாலைக்கு வந்து கணவனாகிய சமதக்கினி முனிவர் முன் நின்றாள். நடந்தது உணர்ந்த முனிவன் முனிவு கொண்டு மனத்தால் கலக்கமுற்றாலும் கற்புக் கெட்டவளே என்ற முடிவில் தன் புதல்வர்களை அழைத்து அவளை மனச்சலனம் இன்றிக் கொல்லுங்கள் என்று ஆணையிட்டான். மூத்த பிள்ளைகள் நால்வரும் மறுத்தனர். ஐந்தாவதாக வந்த பரசுராமன் உடன்பட்டான். சொற்கேளாப் பிள்ளைகள் நால்வரையும் கற்பிழந்த மனைவியையும் கொல்லுமாறு பணித்தார். அவ்வாறே தன் மழுவால் ஐவரையும் மனச் சலனம் ஒன்றும் இன்றிக் கொன்று தந்தையை வணங்கினான். தன் சொற்கேட்ட தனயன் பால் அன்பு பூண்டு "என் சொல் கேட்டு அரிய செயலைச் செய்தமைக்கு மகிழ்ந்தோம். ஆதலின் என்பால வேண்டும் வரம் உண்டெனின் கேட்டுப் பெறுக' என்று தந்தை கூறிய கூற்றினை பயன்படுத்தித் தனக்குத் தாயும் தமையன்மார்களும் வேண்டும் என வேண்ட அவ்வாறே பெற்று மகிழ்ந்தான் என்பது கதை.

### 22. ஏழுலகும் ஒன்றான நீர் உழல் தெய்வமீன் (1841)

பிரமனுடைய நான்கு முகங்களில் இருந்தும் நான்கு வேதங்கள் தோன்றின. தோன்றிய நான்கு வேதங்களும் ஆண் உருவத்தில் உலவி வந்தன. அக்காலத்தில் சோமுகன் என அழைக்கப் பெற்ற ஆற்றல் மிக்க அசுரன் இருந்தான். வேதங்களையும் கவர்ந்து சென்று பிரளயகால வெள்ளத்துள் மறைத்து வைத்தான். வேதங்களை இழந்த பிரமன், திருமாலிடம் முறையிட திருமால் ஒரு பெருமீனாகத் தோன்றி, பெருங்கடலுள் புகுந்து சோமுகனைக் கண்டு பிடித்துக் கொன்று வேதங்களை மீட்டுப் பிரமனிடம் சேர்ப்பித்தார்.

### 23. கால நேமிமேல் ஏவிய திகிரி (2083)

நரசிங்க அவதாரத்தின்போது திருமாலால் கொல்லப்பட்டவன் இரணியன். அவனுக்குக் கால நேமி என்ற மகன் இருந்தான். அவனுக்கு நூறு தலைகளும் நூறு கால்களும் உண்டு. வரத்தால் பலம் மிகப் பெற்றவன். தேவாசுரப் போரில் அசுரர்கள் வணங்கிய போது அவர் பக்கம் சேர்ந்து தேவர்களை வென்று அடிமைப் படுத்தினான். சத்திய லோகம் சென்று பிரமனை வென்றான். எல்லாத் தேவர்களும் பிரமனை வணங்குவதற்கு மாறாகத் தன்னை வணங்க வேண்டும் என்று ஆணை பிறப்பித்தான். தன் தந்தையைக் கொன்ற திருமாலின் மீது பழிவாங்குவது தக்கதென்ற

தேவர்களின் அறிவுரைக்குச் செவி சாய்த்துத் திருமால்மீது போர் தொடுத்தான். திருமாலோ தன் சக்கரப்படையை ஏவி அவன் நூறு சிரங்களையும் நூறு கால்களையும் அறுத்துத் தள்ளினார் என்பது வரலாறு.

### 24. அகத்தியர் கடல் குடித்த வரலாறு (2287)

இந்திராதி தேவர்களின் பகைவர்களாகிய விருத்திரா சூரனும் அவனைச் சேர்ந்தவர்களும் தேவர்களுக்குத் தோற்றுக் கடலில் ஒளிந்து கொண்டனர். அவர்களைத் தேடிக் கொண்டு வெற்றி பெற இயலாத தேவர்கள் அகத்திய மாமுனிவரை வேண்ட, அகத்தியர் அப்பெருங்கடல் நீர் அனைத்தையும் தனது ஒரு கையால் உழுந்தளவாக்கி முகந்து பருகி கடலை வற்றச் செய்தார். வெளிப்பட்ட விருத்திராசூரனை இந்திரன் கொன்றான். தேவர்கள் மீண்டும் வேண்டிக் கொண்டபோது அகத்தியர் தான் உண்ட நீரை உமிழ்ந்து கடலைத் தந்தார் என்பது வரலாறு.

### 25. உலகம் நிலைபெற நிறுத்திய வரலாறு (2287)

சிவனார்க்கும் பார்வதிக்கும் திருமணம் நடந்த ஞான்று எல்லாத் தேவர்களும் மேருமலையில் திரண்ட காரணத்தால் வடதிசை தாழ்ந்தது. தென்திசை உயர்ந்தது. அதனைச் சமம் செய்யத் தக்கார் அகத்தியரே என அறிந்த ஆண்டவன் அகத்தியரைத் தென்திசை வருமாறு பணித்தார். ஆண்டவன் சொற்படி தென்திசைக்கு வந்து பொதிகை மலைமேல் நின்றார். நிலம் சமம் ஆயிற்று என்பது வரலாறு.

### 26. எழுவர் என நின்ற தொல்லை முதல் "முனிவர்"

### ஐயம் துடைத்திலையோ (2617)

ஒரு காலத்தில் தேவர்கள் முனிவர்கள் எல்லாரும் மேரு மலையில் ஒன்று கூடி மும்மூர்த்திகளில் பரத்துவ நிலையுற்றார் யார் என அறிய வேண்டும் என முடிவு செய்தனர். புராணச் செய்திகள் அவர்களை மேலும் மயங்கச் செய்தனவே அன்றித் தெளிவை உருவாக்கவில்லை. எனவே சப்தரிஷிகள் எனப்படும் ஏழு முனிவர்களை நாடித் தங்கள் விருப்பை வெளியிட்டனர். அவர்களின் தலைவரான பிருகு முனிவர் "முக்குணங்களுள்ளும் சத்துவ குணத்தை எல்லா நிலையிலும் போற்றி வாழ்பவனே பரத்துவ நிலையான் அவனை இன்னான் என அறிந்து கூறுவேன்" எனக் கூறி நேரே கைலை மலைக்குச் சென்றார். கோயில் வாயிலைச் சேர்ந்ததும் காவலராகிய நந்தியால் தடுக்கப் பெற்று, வாயிலிலேயே காத்து நின்றார். ஏழு நாள் காத்திருந்தும் சிவனார் தரிசனம் கிடைத்தபாடில்லை. சத்தியலோகம் சென்றார். பிரமனை வணங்கினார். தந்தையைத் தனயன் வணங்குதல் இயல்புதானே எனப் பிரமன் எதிர் வணக்கம் செய்யாது இருந்தான். வெகுண்ட பிருகு "செருக்கால் நிலை மறந்த உனக்கு ஆலயப் பிரதிஷ்டை இன்று முதல் இல்லாமற் போக" எனச் சபித்து நேரே வைகுந்தம் சென்றார். திருமாலோ அனந்தன் மீது பள்ளி கொள்ள திருமகள் உடல் வருடிக் கொண்டு அறிதுயிலில் இருந்தான். எனவே, பிருகு முனிவரைப் பார்க்க வாயிற் காவலர்கள் அஞ்சினர், என்றாலும் அவர் உயர்வு கருதி தடை செய்யவில்லை. நேரே உள் நுழைந்த பிருகு முனிவர் பரமனை மார்பில்

*உதைத்தார். துயில் எழுந்த திருமால், "அய்யா! தங்கள் அடி நொந்ததோ? தம் திருவடி தீண்டப் பெற்றதால் எம் மார்பு திருநின்ற நிலை பெற்றது. நும் வரவு அறியாது துயின்ற என்னை மன்னித்தருள்க!" என்று பணிவோடு கூறினார். முனிவன் வெகுளி நீங்கித் தன் நிலையுற்றுப் பரமனின் தாளிணைகளில் வீழ்ந்து மன்னித்து அருளுமாறு தன் செய்கையின் காரணத்தையும் கூறி வேண்டினான்.*

*தாமச குணத்தால் நிலைத்து நின்ற சிவனோ, ரஜோ குணத்தால் செருக்குற்ற பிரம்மனோ பரத்துவர் அல்லர். எப்போதும் சாத்துவிகத்தில் நிலைத்து நிற்கும் திருமாலே பரத்துவர் என்று உணர்த்தினார்.*

### *27. தாண்டக வன வரலாறு (2520)*

*சூரியகுல மன்னர்களுள் ஒருவன் மனுச் சக்கரவர்த்தி. மனுச் சக்கரவர்த்தியின் மகன் இட்சுவாகு. இவனுக்கு மக்கள் நூறு பேர். அவர்களில் கடைசியில் பிறந்தவனும் மூடனும் மூர்க்கனும், கொடியவனுமானவன் பெயர் தண்டன் என்பது. இவன் விந்திய மலைக்கும், கைலை மலைக்கும் இடையில் உள்ள நிலப் பகுதியை ஆண்டு வந்தான். அப்பகுதியின் தலைநகர் மதுமந்தம் என்பது. இவன் ஆட்சிக் காலத்தில் ஒரு நாள் இவனுடைய புரோகிதன் சுக்கிராச்சாரியாரின் ஆசிரமத்திற்கு இவன் சென்றான். அங்கே சுக்கிராச்சாரியாரின் மகள் அரளை என்பாளைக் கண்டு மயங்கி வலியச் சென்று அவளைக் கற்பழித்தான். இதனை அறிந்த சுக்கிராச்சாரியார் சினந்து, இவ்வாறு செய்த அவன் மட்டும் அன்றி அவனைச் சேர்ந்தார் அனைவரும் ஏழு நாட்களில அழிந்து போகுமாறும் அவனது நாடு மன்மலையால் மூடப் பெற்று ஓரறிவு உயிர் கூட இல்லாமல் போகுமாறும் சபித்தார். அங்ஙனமே ஆயிற்று. காலப் போக்கில் அது அடர்ந்த காடாயிற்று. தண்டனால் நாடு காடான காரணத்தால் அக்காடார்ந்த பகுதியைத் தாண்டக வனம் என அழைக்கலாயினர்.*

### *28. திருமால் மழுவாளிக்கு அன்றளித்த ஐயம்*

### *என்பதில் அடங்கியுள்ள வரலாறு (2574)*

*சிவபெருமான் பிரமனின் சிரங்களில் ஒன்றனைக் கிள்ளி விட்டார். கிள்ளப்பட்ட தலை சிவனின் கரத்தில் ஒட்டிக் கொண்டது. இப்பாவம் தொலைய கபாலத்தைப் பிச்சைப் பாத்திரமாகக் கொண்டு பிச்சை எடுக்கவேண்டும் எனவும், அப்பாத்திரம் நிரம்பும்போது அது கையை விட்டு அகலும் என்றும் தேவர்கள் கூறினர். அதன்படி பல இடங்களில் சென்று பிச்சை எடுத்தும் நிரம்பாத பாண்டம் திருமாலிடம் ஐயம் ஏற்றதும் நிரம்பிக் கையை விட்டுவிட்டது என்பது வரலாறு.*

### *29. திருமால் ஏனமாய் மண்ணிடந்ததில்*

### *அடங்கியுள்ள வரலாறு (2575, 9916, மி309)*

இரணியாக்கன் என்ற அசுரன் பூமியைப் பாயாகச் சுருட்டிக் கடலில் மறைத்து வைத்துக் கொண்டிருந்தான். திருமால் பன்றி உருவாகிக் கடலுள நுழைந்து பூமியைத் தன் கொம்பால் குத்தி எடுத்து வந்த கதை.

### *30. காவிரி கொணர்ந்தான் என்பதில் அடங்கியுள்ள வரலாறு (2676)*

முன்னொரு காலத்தில் சிவன், உமை திருமணம் காண தேவர்கள் முனிவர்கள் எல்லாரும் கைலையில் கூடினர். அவ்வாறு ஒரே நேரத்தில் எல்லாரும் கூடியதனால் வடதிசை தாழ்ந்து தென்திசை உயர்ந்தது. இதனைச் சமச்சீர் செய்ய அகத்தியரை அனுப்ப வேண்டும் என்பது முடிவு ஆயிற்று. சிவன் அகத்தியரை அழைத்துத் தென்திசை ஏகுமாறு கூறியபோது அப்பகுதி மக்களின் மொழி தெரியாதே என்ற போது அவர்க்குத் தமிழ் மொழியைச் சொல்லிக் கொடுத்தான் என்பதனால் இறைவன் தந்த மொழி தமிழ் என்ற வழக்கு வந்தது. கங்கையினிடம் சென்று காவிரியைப் பெற்றுக் கமண்டலத்தில் எடுத்து வந்தார். அப்போது தென்னகத்தில் வறட்சி நிலவியது. அதனை நீக்கப் பிள்ளையாரை வேண்டினர். குடகு மலையில் காலைக் கடன்களை ஆற்ற, கமண்டலத்தை ஒரு பக்கமாக வைத்துவிட்டுக் காலைக் கடன்களில் ஈடுபட்டு இருந்தபோது, பிள்ளையார் காக்கை வடிவில் கமண்டலத்தில் அமர்ந்தார். காக்கையை விரட்ட அகத்தியர் கையை அசைத்துப் 'போ' எனக் குரல் எழுப்பினார். காவிரி வரும் போதே, " என்று என்னைப் 'போ' என்று சொல்கின்றாயோ அன்றே உங்களை விட்டுப் பிரிவேன்" என்ற நிபந்தனையோடு வந்தாள். ஆகவே, போ என்றவுடன் காவிரி கமண்டலத்தை விட்டுப் புறப்பட்டுப் பெரு வெள்ளமாகப் புறப்பட்டாள் என்றும் காக்கையே கவிழ்த்து விட்டது என்றும் கூறி, காக்கையின் காரணமாகக் காவிரி எனப் பெயர் பெற்றது. அது தென்னகம் வரக் காரணமாக இருந்தவர் அகத்தியர் என்பதனால் காவிரி கொணர்ந்தவர் அகத்தியர் எனவும் கூறப்படுகின்றது.

### *31. அகத்தியர் வாதாவிதன் காயம் இனிதுண்ட என்பதில் அடங்கியுள்ள வரலாறு (2668)*

அஜமுகிக்குத் துர்வாசர் மூலம் பிறந்த வில்வலன், வாதாபி என்பவர்கள் அசுரர்கள்; தவம் செய்து மந்திர வலிமை பெற்றவர்கள்; இறந்தாரையும் உயிர்ப்பிக்கும் வல்லமை வாய்ந்தவர்கள். மூத்தவனாகிய வில்வலன் நாள்தோறும் பார்ப்பன வடிவம் பூண்டு தன் பெற்றோர்க்குத் திதி என்று கூறி முனிவர்களை அழைத்துத் தன் தம்பி வாதாபியை ஆட்டுருவம் பெறச் செய்து அதனை வெட்டி விருந்து வைப்பான். அவர்களும் மகிழ்ந்து உண்பர். உண்டு முடிந்த பின்பு, 'வாதாபி, வா வெளியே' என்பான். வாதாபியோ மந்திரத்தின் வன்மையால் உயிர் பெற்று, உண்ட முனிவர்களின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளி வருவான். இறந்த முனிவர்களின் உடல்களை இருவரும் உண்டு மகிழ்வர். இவர்களின் இச்செயலால் அழிந்து போன முனிவர்கள் பலர். உண்மை உணர்ந்த முனிவர்கள் அகத்தியரை அணுகிக் காத்தருள வேண்டும் என வேண்டினர். அகத்தியரும் வில்வலன் வேண்டு கோளின்படி வாதாபியை உண்டார். ஆனால் வில்வலன் வாதாபியை அழைப்பதற்கு முன்பாகவே

அகத்தியர் 'வாதாபி ஜீரணம் அடைவாயாக' என்று ஆணை பிறப்பித்தார். தவ முனிவர் ஆணைப்படி வாதாபி ஜீரணம் ஆனான். தம்பியை இழந்த வில்வலன் வெகுண்டு அகத்தியர் மீது போர்க்கு வரவே அகத்தியர் தம் கண்களில் தீப்பொறிகளைக் கிளப்பி வில்வலனை எரித்து அழித்தார்.

### 32. அகத்தியர் விண்தோய் விந்தம் அடக்கி

### நின்ற கதை (2287, 2669)

முன் ஒரு காலத்தில் விந்திய மலையானது மேரு முதலிய மலைகளைக் காட்டிலும் உயரமாக விளங்க வேண்டுமென்று கருதி விண்ணினை நோக்கி உயர்ந்து வளர்ந்த காரணத்தால் கதிரவனும், மதியும், விண்மீன்களும் தத்தம் இயக்கங்களைச் சரியாகச் செய்ய இயலாமல் தடையாயிற்று. இதனால் வருந்திய தேவர்கள் அகத்திய முனிவரை அணுகி அதன் வளர்ச்சியைத் தடை செய்யுமாறு வேண்டினர். அவர் வடதிசையில் இருந்து ஆண்டவன் கட்டளைப்படி தென்திசைக்கு வந்து கொண்டிருந்தார். விந்திய மலையை அணுகியவுடன் விந்திய மலை அகத்தியர் அடி பணிந்து குறுகி நின்றது. அப்போது அகத்தியர், "விந்தியமே! நான் தென் திசைக்கேகி மீண்டும் வடதிசை திரும்பும் வரை என் முன்னர் குறுகி நின்றது போன்று குறுகிக் கிடப்பாயாக" எனப் பணித்துச் சென்றார். அம்மலை மேல் ஏறி தென்திசை புறப்பட்டார் என்பது வரலாறு.

### 33. 'அநங்கன் நல்லுருப் பெற்றனன்" என்பதில்

### அடங்கியுள்ள வரலாறு (2744)

சூரபதுமன் என்ற அரக்கனும் அவனைச் சேர்ந்தாரும் அமரர்க்கு ஆரா அல்லல்களை அளித்து வந்தனர். சிவனிடம் வரம் பெற்ற வல்லாளர்கள் அவர்கள். எனவே, அவர்களை அமரர்களால் ஒன்றும் செய்ய இயலவில்லை. அப்போது எல்லாத் தேவர்களும் சிவனிடம் சென்று தங்கள் இன்னல்கள் கூறினர். "அமரர்களே! அஞ்ச வேண்டா என்பால் தோன்றும் மகன் ஒருவனால் சூரபதுமன் அழிக்கப் பெறுவான்" என்று அருள் பாலித்தார். அப்போது சனகாதி முனிவர்கள் நால்வரும் மனம் அடங்கும் மார்க்கம் என்னவென அருள் பாலிக்குமாறு வேண்டவே ஆண்டவன் கல்லாலின் மரத்தின் கீழ் யோக நிலையில் வீற்றிருந்து உணர்த்தி அந்நிலையிலேயே நீடித்து நின்றார். அவ்வாறு அவர் இருப்பின் மகவு தோன்றுவது எங்கே சூரனை அழிப்பது எங்கே என எண்ணி மன்மதனை அழைத்து ஆண்டவனின் மோன நிலையைக் கெடுத்து மன்மத பாணங்கட்கு ஆட்கொள்ளச் செய்ய வேண்டுமெனத் தேவர்கள் வேண்டினர். அவ்வாறே மன்மதனும் செய்தான். சிவன் தன் தவ நிலையைக் கெடுக்க வந்த மன்மதனை வெகுண்டு தன் நெற்றிக் கண்ணின் நெருப்பால் சாம்பலாக்கினார். மன்மதனின் மனைவி இரதி ஆண்டவனை வேண்டவே, 'உன் கண்களுக்கு மட்டும் தெரிவான். உலகத்தார்க்கு அவன் தோன்றான்' எனக் கூறி எழுப்பி அருளினார். அன்று முதல் மன்மதன் தோன்றா. உருவினன் (அநங்கன்) ஆயினன் என்பது வரலாறு.

### 34. மாவெலாம் தொலைத்து வெள்ளி மலை எடுத்ததில்

*அடங்கியுள்ள வரலாறு (2770, 2825, 3078)*

இராவணன் தன் வலியை நிலைநாட்ட எல்லாத் திக்குகளுக்கும் சென்று எதிர்த்தாரை வென்று வருகையில் குபேரனை எதிர்த்து வென்று அவன் பூந்தேரினைப் பறித்து அதன் மேல் ஏறித் திரும்பி வந்து கொண்டிருந்தான். அவ்வாறு திரும்பும் போது கைலை மலையை அணுகும் போது அவன் பூந்தேர் மேலும் செல்லவொட்டாமல் கயிலை தடுத்தது. காரணம் அறியாது மயங்கிய இராவணன் முன் நந்தியம் பெருமான் தோன்றி, சிவபெருமானின் இருப்பிடமான கைலை மலையின் பெருமை இது என்று சொல்லவும் அதனைக் கேளாமல் தசமுகன் வெகுண்டு கைலை மலையைப் பெயர்த்து எடுக்கின்றேன் எனத் தேரில் இருந்து குதித்து தன் இருபது கரங்களாலும் பெயர்த்து எடுக்க முனைந்த முயற்சியைச் சொல்வது இக்கதை. ஆனால் கைகள் மலையின் கீழ் அகப்பட்டுச் சிக்கித் துன்புற்றனவே தவிர அவனால் மலையை அசைக்கவும் இயலவில்லை. கைகளை எடுக்க முடியாமல் சிவன் தன் பெருவிரலால் கைலையை அழுத்தி ஊன்றி நின்றனன். இடர்ப்பட்ட இராவணன் பேர் இரைச்சலோடு அழுது அரற்றினன். அவன் இரைச்சலைக் கேட்ட அவன் அமைச்சர்கள் அங்கே ஓடோடி வந்து நிகழ்ந்தது அறிந்து 'சிவன் சாம வேதப் பிரியன். நீங்களோ இசையில் வல்லவர். எனவே பாடி சிவனை மகிழ்விக்க' என வேண்டினர். சிக்குண்ட இராவணனும் அவ்வாறே பல காலம் பாடிக்கொண்டே இருந்தனன். கேட்டு மகிழ்ந்த சிவன் விரலைத் தளர்த்தவே இராவணன் தோள்கள் விடுபட்டு வெளி வந்தான். சிவனை வணங்கினான். சிவன் மகிழ்ந்து அவன் வேண்டுகோளின் படி நீண்ட ஆயுளையும் சந்திரஹாசம் என்ற வாளையும் அளித்தனன்.

*35. ஆரண மறையோன் எந்தை என்பதில்*

*அடங்கியுள்ள வரலாறு (2781)*

பிரமனின் பிள்ளைகளில் ஒருவன் புலத்தியன் என்ற முனிவன், அவன் மேருமலைச் சாரலில் தவம் புரிந்து வேதம் படித்துக் காலம் கழித்தனன். அவன் இருந்த இடம் மலர் நிறை மரங்களும் செடிகளும் சுனைகளும் நிரம்பிய இடம். ஆதலால் மகளிர்க்கு மகிழ்வாக நீராடவும், பொழுது போக்கவும் இனிய இடமாக இருந்தது. அவர்கள் அவ்வாறு வந்து போய்க் கொண்டிருந்தது புலத்தியன் பணிகட்கு இடையூறாக இருந்தது. முனிவன் வெகுண்டு "இன்று முதல் என் முன்னர் எப்பெண் தோன்றினும் அவள் உடன் கருவுறுவாளாக" என்ற சாபத்தைக் கொடுத்தான். அறிந்த பெண்கள் வராமல் நின்றனர். இதனை அறியாத திருணபிந்து என்ற ராஜரிஷியின் மகள் சோலையின் அழகை அனுபவிக்க வந்தாள். புலத்தியன் பார்வையில் பட்டாள். கருவுற்றாள். வேறு வழியின்றி அவளின் தந்தை அப்புலத்திய முனிவனுக்கே அவளைத் திருமணம் செய்வித்தான். மனைவியைப் பார்த்து "நான் வேதம் ஓதிக் கொண்டிருக்கையில், நான் இட்ட சாபம் அறியாமல் என்முன் வந்து நின்று, சாபத்தினாலே கருவுற்றாய். எனவே, உன்னிடம் பிறக்கும் பிள்ளைக்கு "விஸ்ரவசு" என்று பெயர் இடுவாயாக" என்று பணித்தனன். அவ்வாறே பிறந்த குழந்தைக்கு விஸ்ரவஸ் எனப் பெயர் வைத்தனள். விஸ்ரவசு என்றால் ஆரணமறையோன் என்று பொருள். இவன் வழித் தோன்றல்களே இராவணாதியர். எனவே இராவணன்

*சூர்ப்பணகை தந்தை வழியால் புலத்தியர் மரபினர் ஆயினர்.* ***36.***

***சாலகடங்கர் மரபின் தையல் என்பதில்***

***அடங்கியுள்ள வரலாறு (2781)***

*விஸ்ரவஸ் வழி வந்தவர்களில் வித்யுத்கேசன் என்பவன் சாலகடங்கடை என்ற அசுரர் குலப் பெண்ணை மணந்தான். அவர்களுக்கு மாலியவான், சுமாலி, மாலி என்பவர் பிறந்தனர். சுமாலியின் மகள் இராவணன் முதலியோரைப் பெற்றெடுத்தவள். இவள் பெயர் கேகசி. எனவே, சூர்ப்பணகையின் தாய் அரசர் குல மரபினள்.*

***37. கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன்***

***என்பதில் அடங்கியுள்ள வரலாறு (3052)***

*விசுவகன்மன் இரண்டு வன்மை வாய்ந்த விற்களைச் செய்து ஒன்றை சிவனுக்கும் மற்றொன்றைத் திருமாலுக்கும் அளித்தனன். இவ் இரண்டு விற்களில் வலிமை மிக்கது எது என அறியத் தேவர்கள் விரும்பினர். பிரமன் அரிக்கும், அரனுக்கும் போரை மூட்டினான். இருவரும் அவ்விற்களை வைத்துப் போரிட்டனர். சிவனுடைய வில் கொஞ்சம் சிதைவுற்றது. அவ்வாறு கொஞ்சம் சிதைந்த அந்த வில்லை ஜனகரின் மூதாதையான தேவராதன் என்பானிடம் கொடுத்தான். அவன் முதல் ஜனகர் வரை அந்த வில்லைக் காத்து வந்தனர். அந்த வில்லைத்தான் இராமன் வளைத்துச் சீதையை மணந்தான். திருமாலோ தன் கை வில்லை இரிசிக முனி என்பானிடம் கொடுத்து விட்டார். அந்த வில் பரம்பரையாக மாறி மாறி வந்து பரசுராமனிடம் வந்தது. பரசு ராமன் இராமனோடு போர் தொடுத்து, "இற்ற வில்லை முறித்த வீரா, என் வில்லை ஒடி பார்ப்போம்" என அழைக்க இராமன் அந்த வில்லையும் வளைத்து அம்பினை ஏற்றினான். "ஏற்றப்பட்ட அம்புக்கு இலக்கு யாது?" எனப் பரசுராமரை இராமன் கேட்க, பரசுராமன் வணங்கி, "என் தவப்பயன் அனைத்தையும் உன் அம்பின் இலக்காக்கிக் கொள்" என வேண்டினான். அவ்வாறு செய்து பெற்ற அந்த வில்லினை வருணனிடம் கொடுத்து வைத்திருக்குமாறு இராமன் பணித்தான். அவன் அதனைப் பாதுகாப்பாக வைத்திருந்து வனம் புகுந்து அகத்தியர் ஆசிரமத்தில் தங்கியிருந்த இராமனிடம் ஒப்படைக்க வந்தான். ஆனால் இராமனோ 'தக்க சமயம் வரும்வரை உன்னிடமே பாதுகாப்பாய் இது இருக்கட்டும்' எனக் கூறி அவனிடம் கொடுத்து வைத்த அந்த வில்லை கரனை வதைக்கும் காலத்தில் கொணர்ந்து கொடுத்தனன் என்பது வரலாறு.*

***38. "புலியினது அதள் உடையான்" என்பதில்***

***அடங்கியுள்ள வரலாறு (1630, 3069, 3601)***

*தாருக வனத்து முனிவர்கள் "கடமைகளை ஒழுங்குறச் செய்து அறவோர்களாக வாழ்ந்தாலே போதும். கடவுளை வணங்க வேண்டியது இல்லை" என்று செருக்கோடு வாழ்ந்தனர். அவர்தம் மனைவியர் கணவனே தெய்வம் என்று கற்பொழுக்கத்தோடு*

வாழ்ந்தனர். இவர்களைச் சோதிக்க எண்ணிய சிவனும், திருமாலும் முறையே பிட்சாடனர் பெண் உருவங்கொண்டு தாருக வனத்து முனிவர்கள், பத்தினியார் முன்பு சென்றனர். அப்பெண்ணின் அழகில் மயங்கி முனிவர்கள் தம் வசம் இழந்தனர். பிச்சைக்காரன் உருவில் பேரழகோடு வந்த சிவனின் அழகில் முனிவர்களின் மனைவியர் மயங்கினர். இருசாராரும் தம் தம் நிலையில் தாழுமாறு செய்தனர். தாங்கள் கெடுவதற்குக் காரணமான திருமாலை விட்டுவிட்டுத் தங்கள் மனைவிமார்கள் மனங் கெடுவதற்குக் காரணமான சிவன்மீது வெகுண்டு அபிசாரயாகம் செய்தனர். அவ் யாகத்தினின்றும் பாம்புகள், பூதங்கள், மான், புலி, யானை, வெண்டலை போல்வன தோன்றின. இவற்றை யெல்லாம் சிவன் தனக்கு அணிகலன்களாகவும், கருவிகளாகவும், ஆடையாகவும், போர்வையாகவும் மாற்றி ஏற்றனன். அவற்றால் சிவனார்க்கு யாதொரு இடையூறும் ஏற்படவில்லை. இவற்றுள் புலித்தோல் சிவனாரின் ஆடையாய் அமைந்தது. யாகத் தீ அவன் கையில் எப்போதும் எரியும் கனலாய்ச் சென்று அமைந்தது.

### *39. கொடுமுடி இழந்த மேரு என்பதில்*

### *அடங்கியுள்ள வரலாறு (3661)*

ஒரு காலத்தில் வாயுவுக்கும் ஆதிசேடனுக்கும் தமக்குள் யார் பலம் பொருந்தியவர் என்பது பற்றிய சொற்போர் நிகழ்ந்தது. சொற்போரால் உண்மை காண இயலாது என்று உணர்ந்த அவர்கள் செயற்பாட்டினால் உண்மை காண தமக்குள் ஓர் உடன்பாட்டினைச் செய்துகொண்டனர். அதாவது வாயு பகவான் தன் வலிவான வீச்சால் மேரு மலையைப் பெயர்க்கவும், அவ்வாறு பெயர்க்க விடாமல் ஆதி சேடன் மேருவைக் காக்கவும் வேண்டும் எனவும் இதில் யார் தோற்றாலும் தோற்றவர் பலம் குறைந்தவர் என ஒத்துக்கொள்வது எனவும் உடன்பட்டனர். வாயு பலமாக வீசினான்; ஆதிசேடன் தன் ஆயிரம் படலங்களால் மேரு மலையின் ஆயிரம் சிகரங்களையும் கவித்துக் காத்து நின்றனன். வாயுவால் மேருவை அசைக்க முடியவில்லை. ஆனால் மூன்று சிகரங்களை மட்டும் கிள்ளித் தென்திசையில் தள்ள முடிந்தது. இப்படி இருவரில் யார் வல்லவர் என்று அறியவொண்ணாவாறு இருவருமே ஒத்த வலியினராய் நின்றனர் என்பது வரலாறு.

### *40. "மூளும் சாபத்தின் முற்றிய தீவினை" என்பதில்*

### *அடங்கியுள்ள வரலாறு (3680)*

கவந்தன் முன்பு விஸ்வாவசு என்ற பெயரினன், தனுவின் மகன்; அழகன், விஸ்வாவசு தன் அறிவின்மையால் அரக்க மனம் கொண்டு கவந்தன் என்ற அரக்க உருவோடு வனம் வாழ் முனிவர்க்கும் தபோதனர்க்கும் ஊறுகள் விளைத்து மகிழ்ந்தான். அவர்களின் பொருள்களைச் சூறையாடிச் சூரத் தனத்தைக் காட்டி வந்தான். அவ்வனத்தில் ஸ்தூல சிரஸ் என்ற வன்மை மிக்க முனிவர் இருந்தார். அவரின் வன்மையறியா இவன் அவருடைய உணவினைப் பறித்துச் சிதறினன். வெகுண்ட அவர், "இவ்வுருவமே உனக்கு நிலைக்கக் கடவது" எனச் சபித்தார். தருக்கு நீங்கித் தன்னுணர்வு பெற்ற விஸ்வாவசு முனிவர் தாளினைப் பணிந்து சாப நீக்கத்திற்கு வழி வேண்டி நின்றனன். அவரோ "அப்பா! திருமால் இராமாவதாரத்தில் இங்கு வந்து உன்

தோள்களைத் துணித்து,  உன் உடலைக் கொளுத்துவான். அப்போது உன்றன் இவ் உருவம் நீங்கும்" என்றார். இவன் பிரமனை நோக்கி நீண்டகாலம் தவம் செய்து பூரண ஆயுள் பெற்றான்.  அதனால் செருக்குற்ற  கவந்தன் இந்திரனோடு போர் தொடுத்தான். இந்திரன் இவனின்  தலையையும், இடுப்பின் கீழ்ப் பகுதியையும் இவனின் உடலில் ஒடுங்கச் செய்தான். தலையும், காலும் இழந்த  முண்டமாயினும்  வர பலத்தால் உயிரோடு இருந்தனன். இந்திரனின் காலில் விழுந்து 'நான் இயங்காத நிலையில் உணவுக்கென் செய்வேன்?'  என  வேண்ட  அவனோ யோசனை தூரம் நீளும் கைகளையும் கோரைப்  பற்களையும்  இவனுக்குத் தந்து "காட்டில் கிடைக்கிற உயிரினங்களைக் கரங்களை நீட்டிப் பிடித்துக் கோரைப் பற்களால்  உண்டு  வாழ்க" என  அருள் பாலித்தான்., "இராம இலக்குவர்கள் இங்கு வரும் போது  அறியாமல்  அவரை எதிர்ப்பாய். அவர்களால் உன் கரங்கள் வீழ்த்த பெற்று கோர உருவம் நீங்கி நல்லுருப் பெறுவாய்" என்றும் கூறியருளினான்.

### *41. "காதி காதலன் ஓதநீர் உலகமும் உயிர்கள்*

### *யாவையும் விழிப்ப" என்பதில்*

### *அடங்கியுள்ள வரலாறு (3712, 6156)*

சூரிய  குலத்து மன்னர்களின் குரு வசிட்டர். சூரிய குலத்தில் தோன்றிய மன்னர்களில் ஒருவன்  திரிசங்கு மகராசன் என்பவன். அவன் தன் குலகுருவாகிய வசிட்டரைப் பணிந்து  தான் உடலோடு சுவர்க்கம்  புக  வழிகாட்டுதல்  வேண்டும், அதற்கு  வழி கூற வேண்டும் என  வேண்டினான். அவரோ,  யாவராயினும் இறந்த பின்னரே சுவர்க்கம் புக  முடியும் என்றார்.  அரசனோ குருவோடு வெகுண்டு, தான் வேறொரு குருவை நாடிப் போவதாகச் சொன்னான். இதனைக்  கேட்ட  வசிட்டர், வெகுண்டு 'குரு நிந்தனை செய்த நீ சண்டாளன் ஆவாய்' என்று சபித்தார். குரு மனத்தைப் புண்படுத்திய திரிசங்கு  சண்டாளன் ஆன  முறையால் நகரை  விட்டுச் செல்ல வேண்டியதாயிற்று. பல இடங்களில் அலைந்து திரிய வேண்டியதாயிற்று. அலைந்த காலத்து  விசுவாமித்திர மாமுனியைச்  சந்திக்கும் வாய்ப்பு கிட்ட  அவரிடம் நடந்தவைகளைக் கூறி  தனக்கு உதவவேண்டும் என்று  வேண்டினான். அவரும் உடன்பட்டு  ஒரு வேள்வி செய்தார். அவ்வேள்விக்காகத்  தேவர்கள் வரவில்லை. அதனால் கோபம் கொண்டு  அரசனை ஒரு  தேரில் ஏறச்செய்து சுவர்க்கம் நோக்கி அனுப்பினார்.  விண்ணுலகத்தில் வல்லவர்களோ புலையன் சுவர்க்கம புகுவதனை விரும்பாமல் இவனைத் தள்ளினர். புலை மகனாக விளங்கும் திரிசங்கு  கீழே விழாமல்  விசுவாமித்திரர்  தாங்கிக் கொண்டார். விண்ணுலகுக்கும் ஏறாமல், மண்ணுலகிலும்  இறங்காமல்  இடையில் நின்றான்  திரிசங்கு. அவ்விடத்து சுவர்க்கலோகம் போன்றதொரு லோகத்தைப் படைத்தார். அது திரிசங்கு சொர்க்கம் எனப்படும்.

### *42. "காலன்தன் காலமும் காலால் அறுக்கும்"*

### *என்பதில் அடங்கியுள்ள வரலாறு (3860)*

மிருகண்டு முனிவர்க்கும் மருத்துவதி என்பவர்க்கும் நீண்ட நாள் குழந்தைப் பேறு இல்லை. இருவரும் சிறந்த சிவபக்தர். சிவனாரை நினைந்து பல்லாண்டுகள் தவம் செய்தனர். சிவன் தோன்றி "தமோகுணங்களின் உருவான நூறு வயது வாழக் கூடிய மகன் ஒருவன் வேண்டுமா, சிறந்த பக்தியும் அறிவும் மிக்க ஆனால் பதினாறு வயது வரையே வாழக்கூடிய மகன் ஒருவன் வேண்டுமா இருவரில் நீங்கள் விரும்பும் ஒரு மகனைப் பெறுவீர்" என, இவர்களோ பதினாறு வயதுடைய அறிவு மிக்க குழந்தையே போதும் என்ன, அவ்வாறே பெற்றுக் குழந்தைக்குப் பதினாறு வயது ஆனபோது உளம் வருந்தினர். காரணம் அறிந்த மார்க்கண்டேயன் எனப் பெயருடைய அக்குழந்தை நேரே சிவன் கோயில் சென்று சிவனை வழிபட்டு நின்றார். பதினாறு வயது முடிந்த நிலையில் எமதூதர்கள் வந்து இவரின் உயிரைக் கவர முடியாது சென்றனர். எமனே நேராக வந்து அழைக்கின்றான். ஆனால் அக்குழந்தையோ கோவிலை விட்டு வெளியே வர மறுக்கவே, எமன் தன் பாசக்கயிற்றை ஏவினான். குழந்தையோ சிவலிங்கத்தைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டது. இந்நிலையில் எமன் கயிற்றால இழுக்கவே அது சிவலிங்கத்தைச் சேர்த்து இழுத்தது. வெகுண்ட சிவன் காலனைக் காலால் உதைத்து வீழ்த்தி மார்க்கண்டேயரை என்றும் பதினாறு வயதுடையவராய் வாழ வரம் தந்தார் என்பது வரலாறு.

### *43. சுந்தோபசுந்தப் பெயர்த் தொல்லையினோர் (3986)*

நிசும்பன் என்ற அசுரன் இரணியகசிபு குலத்தில் தோன்றியவன். அவனுக்கு சுந்தன், உபசுந்தன் என்ற மக்கள் இருந்தனர். இவ்விருவரும் உண்ணல், உறங்கல், உரையாடல், இருத்தல், படுத்தல், எழுதல், நடத்தல் ஆகிய எல்லாச் செயல்களிலும் ஒன்றாகவே இயங்கினர். ஒருவனை விட்டு ஒருவன் பிரிவதே இல்லை. இன்பம், துன்பம் ஆகியவற்றை ஒன்று போலவே அனுபவித்தனர். இவர்கள் உலகங்களையெல்லாம் தன் கீழ்ப்படுத்த மும்மூர்த்திகளை எண்ணி கடுந்தவம் இருந்தனர். அதனால் அச்சமுற்ற அரசர்கள் பெண்கள் பலரை ஏவி அவர்களின் தவத்தைக் கலைக்க முயன்றும் முடியவில்லை. மும்மூர்த்திகள் தோன்றி பல வரங்களைக் கொடுத்தனர். அவைகளில் ஒன்று பிற உயிர்களால் அவர்களுக்கு மரணம் இல்லை என்பது. வரவலிமை பெற்ற அவர்கள் அரசர்களுக்கு மட்டுமல்லாமல் பிற உயிர்களுக்கும் தொல்லை தந்தனர். எல்லாரையும் அடிமைப் படுத்தினர். இன்னல் பெற்ற தேவர்கள் பிரமனிடம் சென்று தம் குறைகளைக் கூறினர். பிரமன் உலகின் அழகுடைய பொருள்கள் அனைத்தின் அழகான உறுப்புகளை ஒன்று சேர்த்து ஒருபெண் வடிவத்தை உருவாக்கி, திலோத்தமை என்று பெயர் இட்டு அவர்கள் முன் அனுப்பினார். கள்ளுண்டு களித்துத் தம்மை மறந்து மயங்கிய நிலையில் இவளைக் கண்டு காமமுற்று ஒவ்வொருவரும் ஒவ்வொரு கைகளைப் பற்றி இழுக்கத் தொடங்கினர். தனக்கே உரியவள் என்று வாதிட்டனர். அண்ணன் மனைவி தம்பிக்கு தாயன்றோ என சுந்தனும், தம்பி மனைவி அண்ணனுக்கு மகள் அன்றோ என உபசுந்தனும் கூறி ஒருவரையொருவர் எதிர்த்தனர். போரிட்டுக் கொண்டனர். இருவரும் ஒருவர் ஒருவரால் அழிந்தனர்.

### *44. "நஞ்சுவரு மிடற்று அரவுக்கு அமிழ்து நனி*

### *கொடுத்து ஆயைக் கலுழன் நண்ணும்" என்பதில்*

*அடங்கியுள்ள வரலாறு (4471)*

*காசியப முனிவருக்கு இரண்டு மனைவியர். ஒருத்தி விநதை. மற்றொருத்தி கத்துரு. இவர்கள் இருவரும் ஒருநாள் வானத்தில் சென்ற உச்சைச்சிரவம் என்ற தேவலோக குதிரையைக் கண்டனர். விநதை அதன் வாலின் நிறம் வெண்மை என்றாள். கத்துரு கருமை என்றாள். இருவர்க்கும் போட்டியும் பகையும் முற்றியது. கத்துரு தன் மக்களாகிய கருநாகங்களை ஏவி அக்குதிரையின் வாலைச் சுற்றிக்கொள்ளச் செய்து போட்டியில் வென்றாள். எனவே போட்டியின்படி விநதை கத்துருவிற்கு அடிமையானாள். விநதையின் புதல்வன் கருடன். எனவே கருடனும் விநதையும் கத்துருவையும் அவள் புதல்வர்களான நாகங்களையும் சுமக்க வேண்டியவராயினர். கருடனும் அவள் தாயும் அடிமை விலக்கம் பெற வேண்டுமானால் தேவருலக அமிர்தம் கொணர்ந்தாக வேண்டும் எனக் கருநாகங்கள் கூறின. அதன்படி கருடன் சென்று அசுரர்களை வென்று அமிர்தம் கொணர்கையில் தேவேந்திரனிடம் இந்த அமிர்தத்தை நீ தந்திரமாக திரும்ப எடுத்துவந்து விடு என வழியும் சொன்னான் கருடன். அமிர்தத்தைக் கொணர்ந்து தர்ப்பைப் புல் மீது வைத்துப் பாம்புகள் மகிழ்ந்தன. கத்துருவும், கலுழனும் அடிமை விலக்குப் பெற்றனர். தூயர்களாய் வந்து உண்ணுதல் நல்லது எனக் கலுழன் கூற அவை குளிக்கப் போனபோது இந்திரன் அமிர்தத்தை எடுத்துச் சென்று விட்டான். வந்து பார்த்த பாம்புகள் வருந்தி, வைத்த இடத்தில் சிந்தியாவது இருக்கும் என எண்ணி தர்ப்பையை நக்கின. அவற்றின் நா இரண்டானது தான் மிச்சம்.*

***45. தேர்மேல் குதிகொண்டவள் என்பதில்***

*அடங்கியுள்ள வரலாறு (4803)*

*அஞ்சனாதேவி என்பாள் கேசரி என்ற வானர வீரனின் மனைவி. அரக்கர்களோ அனைவர்க்கும் துன்பம் தருபவர்கள். அவர்களை அடிக்க வேண்டுமானால் அவர்களைவிட வலிமை பெற்றவர் வேண்டும். அத்தகைய ஒரு பிள்ளையைப் பெறுதல் வேண்டி அஞ்சனாதேவி வாயு தேவனிடம் சேர்ந்தாள். அப்படிப் பிறந்தவன் தான் அனுமன். அவனை உருத்திரன் அம்சம் என்று கூறுவர். அனுமன் பிறந்தவுடனே, தனது தாயை நோக்கி 'பசிக்கின்றது உணவு கொடு தாயே!' என்றான். அப்பா உனக்கும் பழமே உணவு என்று கூறி பழம் கொணர கானகம் புகுந்தாள். அப்போது வைகறைப் பொழுது. கதிரவன் குணதிசை எழுந்தான். கண்டான் அனுமன். அதுவும் பழம் எனக் கருதி, சூரியனின் மீது பாய்ந்து அவனின் தேரில் குதித்தான். ஆயினும், அனுமனால் பின்னர் ஏற்படவுள்ள இன்பச் செயல்களை எண்ணிக் கதிரவன் அவனைக் காயாமல் விட்டான் என்பது வரலாறு.*

***46. 'ஓதத்தின் மேவுமது கைடவர்' என்பதில்***

*அடங்கியுள்ள வரலாறு (4816)*

*உலகமெலாம் பிரளய வெள்ளத்தில் மூழ்கிற்று. அப்போது முன்னரே திருமாலிடம், எம்மைக் கொல்க எனத் தாங்கள் கூறிய பின்னரே தங்கட்கு இறுதி வேண்டும் என்று வரம் பெற்றிருந்த மதுவும் கைடவனும் மட்டில்லா வெள்ளத்தில் நீந்தியும், நீரைக்*

குழப்பியும் ஆரவாரத்தோடு பிரமனிடம் சென்றனர். பிரமனை எள்ளி நகையாடி அவனிடமிருந்த வேதங்களைப் பறித்துச் சென்று வெள்ளத்தில் மறைத்து வைத்தனர். பிரமன் செய்வது அறியாது திருமாலிடம் சென்று நடந்ததைச் சொல்லி வேதங்களை மீட்டுத் தருமாறு வேண்டினன். திருமாலும் கீத ஒலியை எழுப்பினார். ஒலியைக் கேட்டுக் கிறுகிறுத்த அசுரர் இருவரும் வேதங்களை ஓரிடத்தே வைத்து இனிய ஒலி வந்த திசையை நோக்கிச் சென்றனர். அந்நேரத்தில் திருமால் வேதங்களை எடுத்துச் சென்று பிரமனிடம் கொடுத்துவிட்டார். இவர்கள் நெடுந்தொலைவு சென்றும் யாரையும் காணாமல் திரும்பி வந்தனர். தங்களிடம் இருந்த வேதங்கள் எடுத்துச் செல்லப்பட்டதனைக் கண்டனர். நடந்தது உணர்ந்து திருமாலோடு போர்புரியத் தொடங்கினர். வெற்றி தோல்வி இன்றிப் பல்லாயிரம் ஆண்டுகள் போர் நடந்தது. முடிவில் மது, கைடவர் திருமாலைப் பார்த்து, "உனது ஆற்றலுக்கு மகிழ்ச்சி; வேண்டும் வரம் கேள்" எனக் கூற, "உங்களைக் கொல்லும் வரம் தருக" எனக் கூறினார். அவர்களும் கொடுத்தனர். திருமாலும் அவர்களைப் பார்த்து 'நீங்கள் வரம் ஒன்று கேட்க' என்றார். 'ஒருவரும் இறவாத இடத்தில் நாங்கள் இறக்கவேண்டும்' என வேண்டினர். திருமாலும் அவ்வாறே ஆகுக என்று சொல்லி, தன் தொடையினால் நெருக்கிக் கொன்றார் என்பது வரலாறு.

### *47. கண்டத்திடைக் கறையுடைக் கடவுள் என்பதில்*

### *அடங்கியுள்ள வரலாறு (4817)*

தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த காலத்து அமிழ்தம் வருவதற்கு முன்பு நஞ்சு வந்தது. எல்லோரும் அஞ்சி சிவனை வேண்டினர். சிவன் ஓடோடி வந்து நஞ்சினை எடுத்து உண்டு அச்சத்தைப் போக்கினான். நஞ்சு உண்டதனால் அவன் மிடறு கறுத்தது. சிவன் நீலகண்டன் ஆனான்.

### *48. கான் உயர் வரை நிகர் கார்த்தவீரியன் என்பதில்*

### *அடங்கியுள்ள வரலாறு (5195)*

கார்த்த வீரியன், கிருத வீரியன் என்பான் மகன்; சிறந்த ஆற்றல் உடையவன். இராவணன் திக் விஜயம் செய்த போது, கார்த்தவீரியனது தலை நகரமாகிய மாகிஷ்மதி நகர்க்குச் சென்றான். கார்த்தவீரியன் அப்போது அங்கு இல்லை. நருமதை நதியில் தன் மனைவியோடு நீராடிக் கொண்டிருந்தான். கேள்வியுற்ற இராவணன் அவனை நோக்கி அங்குச் சென்றான். அதற்குள் பூசை வேளை நேரிட்டதால், நருமதை யாற்றங்கரையில் மணலால் லிங்கம் செய்து பூசை செய்தான். இப்போது கார்த்த வீரியனும் அவனது மனைவியாரும் நீர் விளையாடினராதலால் அவர்களால் நீர் சிதறப்பட்டு மணலாலான லிங்கத்தைப் பாழ்படுத்தியது. வெகுண்ட இராவணன் கார்த்த வீரியன் மீது போர் தொடுத்தான். கார்த்தவீரியன் தனது ஆயிரங்கைகளால் இராவணனது இருபது கைகளைப் பற்றி ஒன்றும் செய்ய இயலாமற் செய்து, துன்புறுத்தி, சிறையில் அடைத்தனன். இராவணன் சிறையில அடைபட்டதனை அறிந்த அவன் பாட்டனான புலத்திய முனிவன், கார்த்தவீரியனிடம் வேண்டி, "இராவணஜித்" என்ற பெயரைக் கார்த்தவீரியனுக்கு நல்கி

இராவணனை விடுவித்தான்; பரசுராமனால் வெல்லப் பட்டவன் கார்த்தவீரியன் என்பது வரலாறு.

### 49. 'நோய் உனக்கு யான் என நுவன்றுளாள் அவள்'

### என்பதில் அடங்கியுள்ள வரலாறு (6151)

குசத்துவன் என்ற முனிவர் வேதம் ஓதுகையில் அந்த வேத ஒலியில் தோன்றியவள் வேதவதி என்பாள். திருமகளே அவ்வாறு தோன்றினாள் என்பது வரலாறு. வேதவதியைத் தன் மகளாக ஏற்று வளர்த்தார். அழகிய சிறந்த வேதவதியைத் திருமணம் செய்து கொள்ள தேவர்கள் பலரும் பெண் கேட்டு வந்தனர். என்றாலும் அவளோ திருமாலுக்கன்றி வேறு ஒருவர்க்கும் வாழ்க்கைப் படேன் என மறுத்து வந்தாள். ஆனால் சம்பு என்ற அரக்கன் ஆசை மயக்கத்தால் குசத்துவ முனிவனைக் கொன்றானாக. அதனைப் பொறாது அவன் மனைவியும் தீயில் புகுந்து உயிர்நீத்தாள். பெற்றோரை ஒருங்கே இழந்த வேதவதி தன் எண்ணம் ஈடேறக் காடேகிக் கடுந்தவம் புரிந்து நின்றாள். அப்போது கைலையைப் பெயர்க்க இயலாது கடுந் துன்பம் உற்று இறையவரின் அருளால் விடுவிக்கப் பெற்று மகிழ்வொடு வந்து கொண்டிருந்த இராவணனின் கண்ணில் வேதவதி பட்டாள். அவள அழகால் கவரப்பெற்ற இராவணன் தன்னை மணக்குமாறு வேண்டினான். மறுக்கவே வலியப் பிடித்து இழுத்தான். அதனைப் பொறாது வெகுண்ட வேதவதி "என்னை வலியப் பிடித்து இழுத்த உன்னையும் உன் கிளைகளையும் உன் நாட்டையும் ஒருங்கே அழிக்க மீண்டும் தோன்றி வருவேன்" எனக் கூறித் தீயில் புகுந்தாள். அவளே சீதையாகப் பிறந்துள்ளாள் என்பது வரலாறு.

### 50. சம்பரப் பெயருடைத் தானவர் இறைவனை

### அமரிடை தலைதுமித்த வரலாறு (6152)

தாண்டக வனத்தில் வைஜயந்தம் என்ற நகரில் இருந்து அரசு புரிந்தவன் துமித்துவசன் என்ற மறுபெயர் உள்ள சம்பரன் என்ற அசுரன். இவன் மாயையில் வல்லவன். இவன் அசுரர்கள் பலர்தம துணையொடு சென்று தேவர்களை வென்று தேவேந்திரனை அடிமைப்படுத்தி, பொன்னுலகைப் பற்றினான். அரசிழந்த இந்திரன் தப்பி ஓடி நிலவுலக மன்னனான தசரத சக்கர வர்த்தியின் துணை வேண்டினான். தசரதன் அவனுக்கு அபயம் நல்கி, தன்மனையாள் கைகேயியையும் உடன் அழைத்துக் கொண்டு மீண்டும் நடந்த தேவாசுரப் போரில் தேவர்கள் பக்கம் சேர்ந்து அசுரர்களை எதிர்த்தான். தசரதன் வலிமைக்கு முன்பு நிற்கவியலா அசுரன் மறைந்து ஓடினான். ஆனால், தசரதனோ அவன் சென்ற திசைகளிலெல்லாம் தொடர்ந்து சென்று அவனை மட்டுமின்றி அவனது சுற்றத்தாரையும் கொன்று ஆட்சியைக் கைப்பற்றி இந்திரனிடம் கொடுத்தான்.

### 51. அமரர்கோன் விடையதா வெரிநின் மேலாய்

### என்பதில் அடங்கியுள்ள வரலாறு (6153)

*தேவாசுரப் போர்களில் ஒன்றில் அசுரர்கள் வென்றனர்; தேவர்கள் தோற்றனர். தோற்ற தேவர்கள் காக்கும் கடவுளாம் திருமாலின் திருவடிகளில் வீழ்ந்து இறைஞ்சித் தங்களைக் காக்குமாறு வேண்டினர். அப்பெருமான் நிலவுலகில் புரஞ்சயன் என்ற மானிடனாய்த் தோன்றி அவுணர்களை வென்று தேவர்களைக் காப்பதாகச் சொல்லி அருளியபடி, இட்சுவாகு என்பானது மகன் சசாதனன் என்பவனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்த புரஞ்சயன் என்ற பெயரினராய் வளர்ந்தார். அறிந்த தேவர்கள் புரஞ்சயனிடம் தங்கட்கு உதவுமாறு வேண்டினர் வேண்டுதலைக் கேட்ட புரஞ்சயன் தேவேந்திரன் தனக்கு வாகனமாக அமையின் அவன் மீது அமர்ந்து போர் செய்து வெற்றி வாகை சூடி வருவேன் என்றான். இ ந்திரன் வெற்றி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு எருதின் வடிவெடுத்து நின்றான். புரஞ்சயன் எருதின் முதுகின் மேல் ஏறி அமர்ந்து அசுரர்களைப் போரில் வென்றான். முதுகுக்கு வடமொழியில் 'ககுத்' எனப் பெயர். இந்திரனை வாகனமாகக் கொண்டதனால் இந்திரவாகனன் என்றும் கருத்தத்தின் மீது அமர்ந்து போர் புரிந்தமையால் காகுத்தன் என்றும் திருமாலுக்குப் பெயர்கள் அமைந்தன என்பது வரலாறு.*

***52. அவனியை, "பெருவளம் தருக" என்று***

***வேண்டியதில் அடங்கியுள்ள வரலாறு (6153)***

*வேனன் என்பவன் ஓர் அரசன். அவன் செருக்கு மிக்கவன். செருக்கின் காரணமாக, திருமாலுக்குச் செய்ய வேண்டிய யாகங்கள் அர்ப்பணிப்புகள் ஆகியனவற்றைத் தான் செய்யாதது மட்டுமின்றிப் பிறரையும் செய்ய ஒட்டாமல் தடுத்து வந்தான். முனிவர்கள் பலரின் நல்லுரைகளைக் கேளாமல் விலக்கி வாழ்ந்தான். மக்கள் நலம் நாடிய முனிவர்கள் அவனைத் தருப்பைப் புல்லால் அடித்துக் கொன்றனர். மக்கள் தலைவனை இழந்தனர். தலைவன் இல்லாத நாடு நாடாக இராது என்பதனால் முனிவர்கள், அவனின் வலக்கையைக் கடைந்து தீ உண்டாக்கி, அத்தீயைக் கொண்டு பிரம்மனை நினைத்து யாகம் செய்தனர். அந்த யாகத்தில் வேள்வியில் பிருது என்பான் தோன்றினன். அவன் நாட்டின் மன்னன் ஆனான். ஆயினும் சிலகாலம் தலைவன் இல்லாது இருந்த நாட்டில் அராஜகம், முறையின்மைகள் பல தோன்றின; பூமி வளம் இழந்தது; வானம் பொய்த்து வறட்சி ஏற்பட்டது; மக்கள் பல துன்பங்களுக்கு ஆளாகி இருந்தனர். முடி மன்னன் வந்த பின்னர் தங்கள் குறைகளைக் கூறி மக்கள் அழுதனர். உணவின்றி வருந்தும் தங்கட்கு உணவு உற்பத்திக்கு வழிகோலுமாறு வேண்டினர். அவர்களைக் காப்பதாகக் கூறிய பிருது மன்னன், யாகத்தில் தன்னொடு பிறந்த அறகவம் என்ற வில்லையும், உயர்ந்து நிறைந்த அம்புகளையும் கொண்டு தற்காப்போடு நில அன்னையை எதிர்த்து நின்றான். நில அன்னை பசு உருக்கொண்டு ஓடினாள்; அரசனும் விடாமல் பின் தொடர்ந்தான். பசு எங்கு ஓடினும் அதற்குப் புகல் இடம் ஒன்றும் கிடைக்காமையால் அரசனை அடைந்து" எல்லா உணவுப் பொருள்களும் என்னிடம் பாலின் வடிவாக இருக்கின்றன. கன்று ஒன்றை உண்டாக்கி என்பால் அன்பு பெருகச் செய்து பாலை சுரக்கச் செய்து பலன் அடைந்து கொள்ளுங்கள். மேலும் என் பால் பூமியின் மேடு பள்ளங்களால் பாழ்பட்டும் பலர்க்குக் கிடைக்காமலும் போதல் ஆகாது. எனவே மேடு பள்ளமற்ற நிலையில் பூமியைச் சமப்படுத்திப் பயன் கொள்க எனவும் கூறியதாம். அரசன் அவ்வாறே தன் வில்லின்*

நுனியால் மேடுகளைத் தள்ளிப் பள்ளங்களை நிரப்பி, கன்று ஒன்றினை உருவாக்கிப் பசுவினிடம் நிறுத்தினான்.

தன் கையைப் பாத்திரமாகக் கொண்டு பசுவின் பாலைக் கறந்து நிலவுலகம் முழுவதும் பயன் அடையுமாறு பகிர்ந்தளித்தான். பிருது அரசனால் திருத்தப் பெற்ற நிலம் பிருதிவி என்று அவன் பெயரால் அழைக்கப்பட்டு வருகின்றது. இது வரலாறு.

***53. அயில்போல் வற்றக் கடல் சுடுகிற்பன என்பதில் அடங்கியுள்ள வரலாறு (7878)***

உக்கிர பாண்டியன் என்பான் மக்கள் நலம் நாடி முறை தவறாது ஆட்சி புரிந்த மன்னர்களுள் ஒருவன். மக்கள் நலம் நாடி பல அஸ்வமேத யாகங்கள் செய்து வந்தான். அவனின் ஆட்சிச் சிறப்பையும் வெற்றிச் சிறப்பையும் கண்டு பொறுக்க முடியாத இந்திரன், தன் ஏவலில் இயங்கும் வருணனை அழைத்து அந்நாடு வளம் குன்றுமாறு மழையைப் பெய்விக்க ஆணை பிறப்பித்தான். வருணன் தன் வாழ்இடமான கடலைப் பொங்கி எழுச் செய்து நாட்டை அழிக்க முனைந்தான்., கருணையம் கடவுளாம் சிவனார் பாண்டியன் கனவில் தோன்றி நிகழ்வன கூறி வேல் எறிந்து கடலை வற்றச் செய்யுமாறு வழி கூறிப் போனார். பாண்டியன் தன் கூரிய வேலைச் செலுத்தி வருணனின் எழுச்சிக்கு ஆதியாக உள்ள கடலை வற்றச் செய்து நாட்டைக் காத்தான் என்பது வரலாறு.

***54. அம்பரீடர்க்கு அருளியதில் அடங்கியுள்ள வரலாறு (8668)***

அம்பரீடன் என்பவன் சூரிய குலத்து மன்னர்களில் ஒருவன். இவன் சிறந்த வைணவ பக்தன். ஏகாதசி விரதத்தைத் தவறாது செய்பவன். ஒரு முறை அவ்வாறு விரதம் இருந்து துவாதசி அன்று காலை விருந்து செய்வித்தனன். அன்று துருவாச முனிவரும் வரவே அவரையும் வரவேற்று விருந்துண்ண வருமாறு வேண்ட அவரும் இசைந்து காலைக் கடன்களை முடித்து நாட்பூசனை செய்து வருவதாகக் கூறி யமுனைக்குச் சென்றார். துருவாசர் வருவதற்குத் தாமதம் ஆகவே அரசன் பாரணை செய்வதற்கு முன்பு பகவானுக்குப் பூசனை செய்த புனித நீரை உண்டு இருந்தனன். யமுனை சென்று கடன்களை முடித்துத் திரும்பிய துருவாசர் அரசன் புனித நீரை விருந்தினனாகிய தன்னை விட்டுவிட்டு உண்டதற்கு வெகுண்டு, தன் தலை மயிரில் ஒன்றைப் பறித்து மண்ணில் ஏறிய அதனின்று பூதம் ஒன்று தோன்றி அரசனை எதிர்த்தது. மன்னனோ திருமாலை நினைத்துத் தவம் செய்தான். பரமன் தன் சக்கராயுதத்தை அனுப்பிப் பூதத்தைக் கொன்றார். அதனோடு அமையாது அதனை உருவாக்கிய முனிவனைத் துரத்த, முனிவன் அஞ்சிப் பலரிடம் அடைக்கலம் புகுந்தும் பயனற்றுப் போக, அம்பரீட னிடமே வேண்டி நின்றார். அம்பரீடன் சக்கராயுதத்தைத் தொழுது வேண்டி முனிவனைத் துன்பத்தினின்றும் காத்தான்.

***55. அயனார் மகனுக்கு அளித்ததில் அடங்கியுள்ள***

*வரலாறு (8668)*

அயனார்தம் மகன் சிவன் என்ற கருத்தும் உண்டு. அந்தக் கருத்தின் அடிப்படையில், 'யார்தலையில் கை வைத்தாலும் அவர் பஸ்மமாகப் போக' சிவனிடம் வரம் பெற்ற பத்மாசூரன் சிவனார் தலையிலேயே கை வைக்க முனைந்தான். சிவன் அஞ்சி ஓடினார். அவ்வேளையில் திருமால் அழகிய பெண் உருக் கொண்டு சூரன் முன் தோன்றவே, அவள் மீது மையல் கொண்ட சூரன் சிவனை மறந்து பெண்ணைத் தொடர்ந்தான்; அப் பெண்ணைத் தழுவ நெருங்கினான். பெண் உருவில் வந்த திருமால் அவனை நீராடி வருமாறும் வந்தால் சேர்ந்து மகிழலாம் என்றும் கூறினார். செய்வதனை எண்ணாமல் நீராடத் தன் தலையில் தானே கையை வைத்தான். சிவனாரின் வரத்தின் படி அவனே எரிந்து சாம்பலானான். அயனால் மகனாம் சிவனார் அச்சம் நீங்கி வெளியே வந்தார். இவ்வாறு சிவனைத் திருமால் காத்தார் என்பது வரலாறு.

*56. தெள்ளரும் கால கேயர் என்பதில் அடங்கியுள்ள*

*வரலாறு (9242)*

காலகேயர் என்பார் காசியப முனிவர்க்கும் கலையென்பாட்கும் பிறந்தவர்கள் புலோமர் என்ற முனிவர்க்கும் துதி என்பாளுக்கும் பிறந்தவர்கள் என இரண்டுவித கருத்துக்கள் உண்டு. இவர்கள் மிக்க வலிமை உடையவர்கள். ஏனைய அசுரர்கள் போல கருநிறத்தவர் அல்லர்; பொன்னிறத்தவர். தேவர்களைப் பலமுறை வெற்றி கொண்டவர்கள். அவ்வளவு வலிமை மிக்கவர்கள். அவர்கள் ஒருமுறை கடலில் ஒளிந்திருந்த போது இராவணன் எட்டுத் திசைகளையும் காத்து நின்ற திசைக் காவலர்களை வெல்லச் சென்றான். அப்போது இவர்களை வென்று அடக்கினான் என்பது வரலாறு.

*57. உடல் கடைந்த நாள் ஒளியவன் உதிர்ந்த பொற்கதிரின்" என்பதில் அடங்கியுள்ள வரலாறு (9651)*

கதிரவன் நொடிக்கு நொடி தன் ஒளியாற்றலில் குறைந்து வருகின்றான் என்ற கருத்தை நம்பாது மக்கள் உணரும் வகையில் புனையப்பட்ட ஒரு புராண வரலாறு. இதில் அடங்கி உள்ளது; துவட்டா என்பவன் மகள் சஞ்சை. சஞ்சை கதிரவன் மனைவி யாக்கப்பட்டாள். ஆனால் கதிரவன் வெப்பம் தாங்க மாட்டாத சஞ்சை தன் உடல் நிழலை அவற்குத் தேவியாக அமைத்திட்டுத் தந்தை இல்லம் ஏகினாள். பலகாலம் சென்றபின் உண்மை உணர்ந்த கதிரவன் துவட்டாவின் விருப்பத்துக்கு இசைந்து தன்னைத் தன் ஒளி குறையுமாறு சாணை பிடிக்க ஒருப்பட்டான் என்பது புராணக் கதை.

## கம்பராமாயணக் கதைப் பாத்திரங்கள்

***அக்ககுமரன்*** : *இராவணன், மண்டோதரியின் மகன், இந்திரசித்தின் தம்பி.*

***அக்கினி தேவன்*** : *சீதை தீயில் புக, அவளைச் சுடாது இராமனிடம் சேர்ப்பித்தவன்.*

***அகத்திய முனிவர்*** : *'குறுமுனி' தமிழ் முனி எனவும் குறிப்பர். கானகத்தில் இராமனுக்குப் படைக்கலம் அளித்தவர்.*

***அசும்பன்*** : *(1) கரன் படை வீரருள் ஒருவன். தீ நிமித்தம் கண்டு கரனை எச்சரித்தவன். (2) இராவணன் துணைவருள் ஒருவன். நரசிங்கம் அனையான்.*

***அகலிகை*** : *கௌதம முனிவரின் பத்தினி. கல்லாய்க் கிடந்தவள். இராமன் கால் பட்டுச் சாபம் தீர்ந்தவள்.*

***அங்கதன்*** : *இந்திரன் அமிசமாக வாலிக்குத் தாரையிடம் பிறந்தவன். இராவணனிடம் தூது சென்றவன்.*

***அங்காரதாரை*** : *கடல் மேல் செல்வார் நிழல் கண்டு, அவர்களைப் பிடித்து உண்ணக் கூடியவள். ''சாயாக்கிரகிணி' என்பது அவளது மற்றொரு பெயர். அநுமன் கடல் தாவுகையில் குறுக்கிட்டுத், தோற்ற அரக்கி.*

***அசங்கன்*** : *வானரப் படைத்தலைவன்.*

***அசமஞ்சன்*** : *சகரனின் புதல்வன். தாய் விதர்ப்ப தேசத்து அரசன் மகள், விதர்ப்பை எனும் கேசினி. பகீரதனின் பாட்டனார்.*

***அசன்*** : *அயன். தசரதனின் தந்தை. சுயம்வரத்தில் இந்துமதியை மணந்தவன்.*

***அஞ்சனை*** : *அனுமனின் தாய்.*

***அஞ்சுமான்*** : *அசமஞ்சன் புதல்வன். சகரனின் பேரன்.*
***அத்திரிமுனிவர்*** : *பிரம்ம குமாரர்களுள் ஒருவர். காட்டில் இராம இலக்குவரை உபசரித்தவர்.*

***அதிகாயன்*** : *இராவணனுக்குத் தானியமாலையிடம் பிறந்தவன். 'பெரிய உடம்பை உடையவன்' எனப் பொருள்.*

***அதிதி*** : *காசிபன் மனைவி. புத்திரர் 33 கோடி சுரர்.*

***அம்பரீடன்*** : *சூரிய குல வேந்தன். நரமேதத்திற்கு ஆள் தேடி இரிசிக முனிவரின் நடுமகன் சுனச்சேபன் என்பவனைப் பெற்று யாகத்தை முடித்தவன்.*

***அயோமுகி*** *:* *இரும்பினால் ஆகியது போன்ற முகமுடைய அரக்கி. இலக்குவன் மீது காதல் கொண்டு அழிந்தவள்.*

***அரம்பை*** *:* *1. அருணன் மனைவி. 2. தேவநங்கை இராவணன் ஆட்சியில் குற்றேவல் செய்தவள்.*

***அரன்*** *:* *வீடணன் அமைச்சர் நால்வருள் ஒருவன்.*

***அருணன்*** *:* *காசியமுனிவருக்கு விநதையிடம் பிறந்தவன். மகன் - சடாயு; தம்பி - கருடன். சூரியனின் சாரதி.*

***அருந்ததி*** *:* *வசிட்டரின் மனைவி. கற்பில் சிறந்தவள்.*

***அனசூயை*** *:* *அழுக்காறு இல்லாதவள். அத்திரி முனிவரின் பத்தினி.*

***அனந்தன்*** *:* *வானர வீரன்.*

***அனலன்*** *:* *வீடணன் அமைச்சர் நால்வருள் ஒருவன்.*

***அனிலன்*** *:* *வீடணன் அமைச்சர் நால்வருள் ஒருவன்.*

***அனுமன்*** *:* *வாயுவின் மைந்தன். தாய் அஞ்சனை. இளம் பருவத்தில் சூரியனைப் பழம் எனக் கருதிப் பறிக்க முற்படுகையில் இந்திரன் வச்சிராயுதத்தால் அடிக்கப்பட்டுச் சிதைந்த கன்னம் உடையவன். (அனு - கன்னம்) இவன் தந்தை கேசரி.*

***ஆதூர்த்தன்*** *:* *குசன் மக்கள் நால்வருள் ஒருவன். தருமாரணியம் என்னும் ஊரைத் தலைநகரமாகக் கொண்டு வாழ்ந்தவன்.*

***ஆனிறக் கண்ணன்*** *:* *கவாக்ஷன் பசுவின் கண்ணைப் போன்ற கண்களை உடையவன். வானரப் படைத் தலைவன்.*

***இட்சுவாகு*** *:* *சூரிய குல மைந்தன்.*

***இடபன்*** *:* *வானரப் படைத் தலைவன். காளை போன்றவன். குடதிசையில் சீதையைத் தேடச் சென்றவன்.*

***இடும்பன்*** *:* *வானர வீரன்.*

***இந்திரசித்*** *:* *இராவணன் மைந்தன். இந்திரனை வென்றதால் 'இந்திரசித்' எனப் பெயர் பெற்றவன்.*

***இந்திரத்யும்நன்*** *:* *திருமால் பக்தன். அகத்தியர் சாபத்தால் யானையாகப் பிறந்து முதலை வாய்ப்பட்டுத் திருமாலால் வீடு பேறு அடைந்தவன்.*

***இந்திரன்*** *:* *சரபங்க முனிவரை இந்திரலோகம் அழைத்துச் செல்ல வருகையில், காட்டில் இராமனைக் கண்டு போற்றியவன்.*

***இரகுமன்னன்*** : *சூரியகுல வேந்தன்.*

***இரணியன்*** : *பிரமனது மகனாகிய மரீசி பிரஜாபதியின் மகனான காசிப முனிவர்க்குத் திதி என்பவளிடம் பிறந்தவன். இரண்யாட்சனின் தம்பி, பிரலாகதனின்தந்தை. இரணியன் என்பதற்குப் 'பொன்னிறமானவன்' என்பது பொருள்.*

***இரணியாட்சன்*** : *'பொற்கணான்' என்னும் பெயரினன். பூமியைப் பாயாக்கிக் கடலில் மறைக்க, வராக அவதாரமெடுத்துத் திருமால் மீட்டதாகப் புராண வரலாறு.*

***இராமன்*** : *காப்பியத் தலைவன்.*

***இராவணன்*** : *இலங்கை வேந்தன்.*

***இரிசிகன்*** : *பிருகுவின் மகன். கௌசியை மணந்தவன்.*

***இருசியசிருங்க முனிவர்*** : *விபாண்டக புதல்வர். மான்கொம்பைத் தலையில் கொண்டவர். கலைக்கோட்டு முனிவர் எனப்படுவார். மக்கள் பேறு வாய்க்கும் யாகம் செய்தவர்.*

***இரேணுகாதேவி*** : *சமதக்னி முனிவரின் மனைவி.*

***இலக்குவன்*** : *இராமன் தம்பி. சுமத்திரையின் மகன்.*

***இலங்காதேவி*** : *இலங்கையின் காவல் தெய்வம். அனுமன் அவளை வென்றதால் நகர் நீங்கிச் சென்றாள்.*

***உத்தானபாதன்*** : *மனுகுலத்து வேந்தன். உரோமபாதன் தந்தை.*

***உதாசித்து*** : *பரதனின் மாமன்.* ***உருமை*** : *சுக்கிரீவன் மனைவி.*

***உரோமபாதன்*** : *உத்தானபாதனின் மகன். கலைக்கோட்டு முனிவரின் மாமன்.*

***உல்காமுகன்*** : *வானரப் படைத்தலைவன்.*

***ஊர்மிளை*** : *சனகன் தம்பி குசத்துவன் மகள். இலக்குவனின் மனைவி.*

***ஊர்வசி*** : *தேவநங்கை. இலங்கையில் இராவணன் ஆட்சியில் குற்றேவல் புரிந்து வந்தவள்.*

***ஏமை*** : *ஹேமை. அசுரனாகிய மயனால் காதலிக்கப்பட்டவள் என்பது வான்மீகம். சுயம்பிரபையின் தோழி.*

***ககுத்தன்*** : *சூரியகுல மன்னன்*

***கங்காதேவி*** : பகீரதனால் உலகில் நதியாகிப் பெருகியவள்.

***கசகோமுகன்*** : மற்போரில் வல்ல வானரத் தலைவன்.

***கந்தமாதனன்*** : வானரப் படைத்தலைவன்.

***கபில முனிவர்*** : தன்னைப் பழி கூறியதால் சகரன் புத்திரர்களைச் சாம்பலாக்கியவர்.

***கயன்*** : கஜன்; யானை போன்ற வடிவமுடைய வானரத் தலைவன்.

***கரன்*** : இராவணன் தாய்மாமன் மகன். தண்டகாரண்யத்தில் சூர்ப்பணகைக்குத் துணையாக இருந்தவன்.

***கருடன்*** : அருணனின் தம்பி. போர்க்களத்தில் நாகபாசம் நீக்கியவன்.

***கவந்தன்*** : தலையற்று, வயிற்றில் வாய், கண் ஆகியவற்றை உடைய கொடிய வடிவினன். இராமனை எதிர்த்துச் சாபம் நீங்கப் பெற்றவன்.

***கவயன்*** : வானர வீரன்.

***கவயாக்கன்*** : கவயாக்ஷன், பசுவின் கண்போன்ற கண்களை உடையவன். 'கோலங்கூலம்' என்னும் கொண்டை முசுக்களுக்குத் தலைவன்.

***காசிபன்*** : காசியப முனிவர். தக்கன் மகளிர் பதின்மூவரை மணந்து சுர, அசுரர் முதலியோரைப் படைத்தவர். இம்முனிவருக்கும் அதிதி தேவிக்கும் திருமால் வாமனனாக அவதரித்தார். இம்முனிவர்க்கும் திதிக்கும் பிறந்தவர்கள் அசுரர்கள்.

***காதி*** : குசநாபனது மகன்.

***கார்த்தவீரியார்ச்சுனன்*** : ஆயிரந்தோள்களை உடையவன். பரசுராமன் அவற்றை வெட்டி வென்றனன்.

***காலகேயர்*** : ஒருவகை அசுரர்.

***காலசங்கன்*** : அரக்கன்.

***காலநேமி*** : இரண்யாட்சன் மகன். தந்தை இறந்தபின் திருமாலோடு போரிட்டு மடிந்தவன்.

***காலன்*** : இலக்குவனால் கொல்லப்பட்ட ஓர் அசுரன்.

***கியாதி*** : பிருகுவின் மனைவி.

***கிருதாசி*** : குசநாபனது மனைவி.

***கிலிஞ்சன்*** : *விராதன் தந்தை.*

***குகன்*** : *சிருங்கி பேரியர்கோன். வேடர தலைவன். இராமனால் தம்பியாக ஏற்றுக்கொள்ளப்பட்டவன்.*

***குசத்துவன்*** : *சனகன் தம்பி.*

***குசநாபன்*** : *குசன் மகன். மகோததி நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன்.*

***குசன்*** : *1. பிரமதேவனின் மகன். மனைவி வைதர்ப்பி. 2. குசனின் முதல் மகன். மூலநூலில் 'குசாம்பன்' எனக் காணப்படுகிறது. எனவே 'குசன்' என்பது 'குசாம்பன்' என்பதன் விகாரம் என்பர். கவுசாம்பியைத் தலை நகராகக் கொண்டு ஆண்டு வந்தவன்.*

***கும்பகர்ணன்*** : *குடம் போன்ற காதுகளை உடையவன். இராவணன் தம்பி.*

***கும்பன்*** : *கும்பகர்ணன் மகன்.*

***கும்பானு*** : *அரக்கர் தலைவன். இடும்பனால் அழிந்தவன்.*

***குமுதன்*** : *வானர வீரன். ஆம்பல் நிறமுடையவன்.*

***குமுதாக்கன்*** : *வானர வீரன்.*

***குமுதி*** : *ஓர் அரக்கி.*

***குருதியின்கண்ணன்*** : *சோணிதாட்சன். அரக்கர் படைத் தலைவன்.*
***குலிசன்*** : *அரக்கன்.*

***குவலையாசுவன்*** : *தசரதன் முன்னோன். துந்து என்பவனைக் கொன்றவன்.*

***கூனி*** : *மந்தரை. கைகேயியின் தோழி.*

***கேசரி*** : *அஞ்சனையின் கணவன். அநுமனின் தந்தை.*

***கைகேசி*** : *தசரதன் தேவி. பரதனின் தாய்.*

***கைடபன்*** : *கயிடன். திருமாலைப் பகைத்து அழிந்த ஓர் அரக்கன்.*

***கோசலை*** : *தசரதன் முதல் தேவி. இராமன் தாய்.*

***கௌசகி*** : *கோசிகரின் (விசுவாமித்திரர்) உடன்பிறந்தவள். பின்பு நதியாக மாறியவள்; கோசி.*

***கௌதமர*** : *அகலிகையின் கணவர்.*

***சகரர்*** *:* *சாகரர் எனப்படுவார். சகரனது இரண்டாவது மனைவியிடம் பிறந்த ஆயிரம் மக்கள்.*

***சகரன்*** *:* *'விஷத்தோடு பிறந்தவன்' எனப் பொருள்படும். அயோத்தி வேந்தன். விதர்ப்பதேசத்து அரசன் மகள் விதர்ப்பை எனப்படும் கேசினியை மணந்தவன்.*

***சகோத்ரன்*** *:* *வானரப்படைத் தலைவன்.*

***சங்கன்*** *:* *சங்கு போன்ற நிறமுடையவன். வானரச் சேனைத் தலைவன்.*

***சடாயு*** *:* *அருணனின் மகன். கழுகரசன். பல மயிர்கள் சேர்த்துத் திரித்த சடைபோன்ற ஆயுளையுடையவன். வைணவர்கள் இவனைப் 'பெரிய உடையார்' எனப் போற்றுவர்.*

***சடையப்பர்*** *:* *திருவெண்ணெய்நல்லூர் வள்ளல். கம்பரை ஆதரித்தவர்.*

***சத்துருக்கனன்*** *:* *தசரதன் மகன். தாய் சுமத்திரை.*

***சதவலி*** *:* *வானரத்தலைவன். முகத்தில் நூறு மடிப்புகளை உடையவன். வடதிசையில் சீதையைத் தேடச் சென்றவன்.*

***சதானந்தன்*** *:* *கௌதம முனிவரின் புதல்வர். தாய் அகலிகை சனகரின் குலகுரு.*

***சந்திரனை வென்றான்*** *:* *திலீபன் என்னும் சூரியகுல வேந்தன். சந்திரனை வென்றதால் 'சந்திரஜித்' எனப் பெயர் பெற்றவன்.*

***சம்பரன்*** *:* *அசுரன். 'திமித்துவசன் எனும் மறுபெயர் உள்ளவன். தண்டகாரண்யத்தில் வைஜயந்த நகரத்தில் ஆண்டு, தேவர்களை வருத்த, தசரதன் கைகேயியுடன் சென்று அவனை வென்று இந்திரனைக் காத்தான்.*

***சம்பாதி*** *:* *1. சடாயுவின் தமையன். அருணனின் மகன். சூரிய வெப்பத்தால் இழந்த சிறகுகளை, வானர வீரர் கூறிய இராம நாமத்தால் திரும்பப் பெற்றவன். கழுகரசன். சீதை உள்ள இடத்தை உரைத்தவன். 2. வீடணன் அமைச்சர் நால்வருள் ஒருவன்.*

***சம்புமாலி*** *:* *பிரகதத்தன் மகன். அனுமனால் அழிந்த அரக்கன்.*

***சயந்தன்*** *:* *இந்திரன் மகன். காக வடிவெடுத்துச் சீதையைத் துன்புறுத்த, இராமன் தொடுத்த பிரம்மாத்திரம் துரத்த, சரணம் வேண்டியதால் ஒரு கண்ணை மட்டும் இழந்தவன்.*

***சரகுல்பன்*** *:* *வானரப் படைத்தலைவன்.*

***சரபன்*** *:* *எண்கால் புள் போன்ற வலிமையுடையவன். பர்ஜ்ந்ம தேவதையின் மகன்.*

***சராரி*** *:* *வானரப் படைத்தலைவன்.*

***சலபோசனன்*** *:* *தசரதனுக்குச் சாபம் கொடுத்தவர்.*

***சவரி*** *:* *'சபரர்' என்னும் வேடர் குலத்தினள். இராமன் வருகை நோக்கிக் காத்திருந்து வீடு பேறு பெற்றவள்.*

***சனகன்*** *:* *மிதிலை வேந்தன். சீதையின் தந்தை.*

***சாந்தை*** *:* *தசரதன் மகள். உரோமபாத மன்னனுக்கு வளர்ப்பு மகளாகத் தரப்பட்டவள். இருசிய சிருங்கருக்கு மணம் முடிக்கப்பட்டவள்.*

***சாம்பவன்*** *:* *ஜாம்பவான். பிரம்மா கொட்டாவி விட்டபோது வாயினின்று கரடி வடிவில் தோன்றியவன். கரடிகளுக்கரசு.*

***சார்த்தூலன்*** *:* *இராவணனிடம் வானரசேனை குறித்துக் கூறிய ஒற்றன்.*

***சாரன்*** *:* *இராவணனின் ஒற்றன்.*

***சிங்கன்*** *:* *அசுரன் பனசனால் மடிந்தவன்.*

***சித்தார்த்தன்*** *:* *பரதனிடம் தூது சென்ற நால்வருள் ஒருவன்.*

***சிபி*** *:* *சூரியகுல வேந்தன். புறாவின் பொருட்டுத் துலை புக்கவன்*

***சீதை*** *:* *காவியத் தலைவி.*

***சுக்கிரீவன்*** *:* *அழகிய கழுத்துடையவன். சூரியன் மைந்தன். வாலியின் தம்பி.*

***சுக்கிரபகவான்*** *:* *மகாபலியின் அமைச்சரும் குருவும் ஆவார். மன்னன் வாமனனுக்கு மூன்றடி மண் தருகையில் தடுத்தவர். அதனால் ஒரு கண் இழந்தவர்.*

***சுகன்*** *:* *இராவணனின் ஒற்றன்.*

***சுகேசன்*** *:* *சுமாலியின் தந்தை.*

***சுகேது*** *:* *இயக்கன், சரண் என்பவனது மகன்.*

***சுசேடணன்*** *:* *சுசேஷன். தாரையின் தந்தை. வருணனின் மகன்.*

***சுதாகன்*** *:* *நூறு வேள்விகளைச் செய்த சூரிய குல வேந்தன்.*

***சுதீக்கணன்*** *:* *முனிவர்.*

***சுந்தன்*** *:* *தாடகையின் கணவன். அகத்தியர் சாபத்தால் சாம்பலானவன்.*

***சுந்தோபசுந்தர்*** *:* *சுந்தன், உபசுந்தன் எனும் உடன்பிறப்பாளர்.*

***சுபாகு*** : *தாடகையின் இரண்டாவது மகன். இராவணனுக்கு மாமன்.*

***சுபாரிசன்*** : *அரக்கன். அங்கதனால் மாண்டவன்.*

***சுமதி*** : *காசிப முனிவருக்கு விநதையிடம் தோன்றியவள். சகரனின் இரண்டாவது மனைவி.*

***சுமந்திரர்*** : *தசரதனின் அமைச்சரும் சாரதியும், நல்ல ஆலோசனை உடையவர் எனப் பொருள் படுபவர்.*

***சுமாலி*** : *இராவணன் தாய் கேசகி என்பவளின் தகப்பன். சுகேசன் என்னும் அரக்கனின் மகன். மாரீன், சுபாகுவிற்கு அடைக்கலம் அளித்தவன்.*

***சுமத்திரை*** : *தசரதனின் இளையதேவி. இலக்குவன் தாய்.*
***சுயம்பிரபை :*** *'இயற்கையில் மிக்க ஒளியை உடையவள்' மேரு சாவர்ணியின் மகன். பில நகரில் வானர வீரர்கள் கண்ட தவமாது. வானரர்கள் வரவால் சாபம் நீங்கப் பெற்றுத் துறக்கம் புக்கவள்.*

***சுரசை*** **:** *தக்கன் மகள். காசிபன் மனைவி. தேவர் வேண்ட அனுமனின் பலத்தை அறிய அரக்கியாகிச் சோதித்தவள்.*

***சுருதகீர்த்தி :*** *சத்துருக்கனனின் மனைவி.*

***சுரோசனன் :*** *சலபோசனின் மகன். தசரதன் அம்பால் உயிர் மாண்டவன்.*

***சுவாயம்புவமனு :*** *பிரமனின் மகன்.*

***சுனச்சேபன் :*** *இரிசிகனின் நடுமகன், அம்பரீடன் செய்த நரமேத யாகத்திற்காகக் கொடுக்கப்பட்டு, கவுசிக முனிவரிடம் பெற்ற இரு மந்திரங்களால், யாகமும் முடிய உயிர் தப்பியவன்.*

***சூர்ப்பணகை :*** *பிரமனின் மகனாகிய புலத்திய முனிவரின் மகனாகிய விசிரவசுக்கும் இரண்டாம் மனைவி கேகசிக்கும் பிறந்தவள். கணவன்- வித்யுக்சிருவன். தமையன் - இராவணன்.*

***சூரியன் பகைஞன் :*** *சூரியன் சத்துரு. இராவணன் மந்திரத்தொருவன்.*

***சூளி :*** *முனிவர்.*

***சோமதை :*** *தேவமகள்.*

***தக்கன்*** **:** *பிரமனின் மகன். சிவபிரானை மதியாது யாகம் செய்தமையால் சிவபிரானால் அழிக்கப் பெற்றவன்.*

***தண்டகன் :*** *சூரியகுல வேந்தன். இட்சுவாகுவின் நூறு மக்களில் கடைப்பட்ட மூடன் என்பதால் 'தண்டன்' எனப் பெயரிடப்பெற்றவன்.*

***ததிமுகன் :*** *மதுவனம் காக்கும் காவலர் தலைவன்.*

***தம்பன் :*** *தம்பம் போன்ற வானரன்.*

***தயரதன் :*** *அயோத்தி வேந்தன். இராமன் தந்தை.*

***தரீமுகன் :*** *குகை போன்ற முகத்தை உடைய வானரன்.*
***தாடகை*** *: சுகேதுவின் மகள், அகத்தியரால் சாபம் பெற்ற அரக்கி. சுந்தன் மனைவி. சுபாகு, மாரீசன் ஆகியோரின் தாய்.*

***தாரை*** *: வாலியின் மனைவி.*

***தாரன்*** *: ருமையின் தந்தை. தேவகுருவாகிய பிரகஸ்பதியின் புதல்வன்.*

***தாருகன்*** *: 1. அசுரன் மகளாகிய மாயை என்னும் மறுபெயருள்ள அரசை என்பவள் காசிப முனிவர் அருளால் பெற்ற புதல்வர் மூவருள் சூரபதுமனுக்கும் சிங்கமுகனுக்கும் இளையவன். யானை முகத்தோடு பிறந்தவன். 2. அரக்கன். அதிகாயனுக்குத் துணையாகச் சென்றவன்.*

***தானியமாலை*** *: இராவணன் மனைவி. அதிகாயன் தாய்.*

**திதி** *: காசிபன் மனைவி. புத்திரர் 66 கோடி அசுரர்.*

**திலோத்தமை** *: தேவநங்கை.*

**திரிசங்கு** *: அயோத்தி வேந்தன். கௌசிக முனிவர் தவ வலிமையால் இவனுக்கெனத் 'தனி உலகம்' உருவாக்கப்பட்டுத் 'திரிசங்கு சுவர்க்கம்' எனப்பட்டது.*

**திரிசடை** *: வீடணன் மகள்.*

**திரிசடன்** *: இராமன் காடு செல்கையில் பசு தானம் பெற்ற அந்தணன்.*

**திரிசிரன்** *: 1. திரிசிரஸ், கரனுடன் வந்த படைவீரன். 2. இராவணன் புதல்வர்களுள் ஒருவன்.*

**தீர்க்கபாதன்** *: நீண்ட கால்களை உடையவள். சீதையைக் குடதிசையில் தேடச் சென்ற வானர வீரன்.*

**துந்து** *: ஓர் அரசன்.*

**துந்துபி** *: எருமைக்கடாவின் வடிவினன். மாயாவியின் உடன் பிறப்பு. மயன் என்னும் அசுரன் மைந்தன். வாலியால் கொல்லப்பட்டு, எலும்பு மலையாகக் கிடந்தவனை இலக்குவன் கடலில் வீழச் செய்தான்.*

**துமிந்தன்** *: தேவ வைத்தியர்களான இரட்டையர் அசுவினி தேவர்களின் அம்சத்தால் பிறந்த இருவரில் ஒருவன்.*

***துவிந்தன்*** *: வானரப் படைத் தலைவன்.*

***துர்த்தரன்*** *: பஞ்சசேனாபதிகளுள் ஒருவன்* ***துருவாசர்*** *: தன்னை மதியாத இந்திரன் திருவைக் கடலில் மறைத்தவர்.*

***துன்முகன்*** *: இராவணனுக்கு ஆலோசனை கூறும் படைத் தலைவன். பகைவர்க்குப் பயங்கரமான முகத்தை உடையவன். அனுமானால் அழிந்தவன்.*

***தூடணன்*** *: யாவரையும் நிந்திப்பவன். இராவணன் தந்தை விசுரவசு முனிவர்க்கும், தாய் கேகசியின் தங்கை கும்பீநசிக்கும் பிறந்தவன்.*

***தூமநாட்டத்தன்*** *: தூமிராட்சன். புகை போன்ற கண்களை உடையவன். இந்திரசித்தின் தேர்ச்சக்கரக் காவலாக சென்று போரில், தப்பிவந்து மீண்டும் போர்க்களம் சென்று மாண்டவன்.*

***தூமிரன்*** *: கரடித் தலைவன். சாம்பவானுக்கு உடன்பிறப்பு.*

***தேவராந்தகன்*** *: தேவர்களுக்கு யமன் போன்றவன். இராவணன் மைந்தன் அனுமனால் அழிந்தவன்.*

***நந்தி*** *: குரங்குகளால் அழிவு என இராவணனைச் சபித்தவன்.*

***நராந்தகன்*** *: இராவணன் மைந்தருள் ஒருவன், பகைவர்க்கு யமன் போன்றவன்.*

***நளன்*** *: விசுவகர்மாவின் மகன். சந்திரன் அமிசமானவன். சேது அணை கட்டியவன்.*

***நாரதர்*** *: இசையில் வல்ல முனிவர்.*

***நிகும்பன்*** *: கும்பகர்ணனின் மகன்.*

***நீலமாலை*** *: சீதையின் தோழி. வில் முறித்த செய்தியைச் சீதைக்கு முதலில் அறிவித்தவள்.*

***நீலன்*** *: அக்கினியின் மைந்தன். நீல நிறமுடையவன். வானரப் படைக்கெல்லாம் தலைவன்.*

***ப்ரகஸன்*** *: பஞ்சசேனாபதிகளுள் ஒருவன்.*

***பகீரதன்*** *: அம்சுமானின் மகன். கங்கையை உலகிற்குகக் கொணர்ந்தவன்.*

***பதுமுகன்*** *: வானரப் படைத்தலைவன்.*

***பரத்துவாசர்*** *: காட்டில் இராம இலக்குவரை உபசரித்த முனிவர்.*

***பரதன்*** : *தசரதன், கைகேயி புதல்வன்.* ***பரசுராமன்*** : *சமதக்னி முனிவரின் மைந்தன். தந்தை கட்டளைப்படி தாய் இரேணுகாதேவியைக் கொன்றவன். கார்த்த வீரியார்ச்சுனனை வென்றவன்.*

***பாசகர்ணன்*** : *பஞ்சசேனாபதிகளுள் ஒருவன்.*

***பிசாசன்*** : *இராவணனுக்கு ஆலோசனை கூறும் படைத்தலைவன்.*

***பிரகத்தன்*** : *அரக்கர் படைத்தலைவன். நீலனால் மாண்டவன்.*

***பிரகலாதன்*** : *இரணியன் மைந்தன்.*

***பிரமதத்தா*** : *குசநாபன் பெற்ற மகளிரை மணந்தவன்.*

***பிரமன்*** : *சீதை தீப்புகல் நிகழ்ச்சியின்பின், இராமனது உண்மை இயல்புகளை உணர்த்தியவர்.*

***பிரஹஸ்தன்*** : *அரக்கர் சேனைத்தலைவன்.*

***பிருது*** : *தசரதன் முன்னோன்.*

***பிருகு*** : *முனிவர்.*

***புகைநிறக் கண்ணன்*** : *தூமிராட்சன். அரக்கர் படைத்தலைவன்.*

***புஞ்சிகஸ்தலை*** : *தேவநங்கை. இராவணன் இவளை வலியப்பற்ற, அதனால் சினந்த நான்முகன் இராவணனைச் சபித்தான்.*

***மகரக் கண்ணன்*** : *மகராட்சன், மகரம் போன்ற கண்களை உடையவன். கரன்புதல்வன். இந்திரசித்தின் தேர்ச்சக்கர காவலாகச் சென்றவன் தப்பி வந்து, மீண்டும் போர் புரிந்து மாண்டவன்.*

***மகாபாரிசுவன்*** : *படைத்தலைவன். அங்கதனால் மாண்டவன்.*

***மகோதரன்*** : *இராவணன் படைத்தலைவன்.*

***மண்டோதரி*** : *இராவணன் மனைவி. மயன் மகள்.*

***மத்தன்*** : *போர் மத்தன். அரக்கன்.*

***மதங்கமுனிவர்*** : *'ரிசியமுக மலைக்கு வரின் தலைவெடித்து இறப்பான்' என வாலிக்குச் சாபமிட்டவர்.*

***மந்தரை*** : *கைகேயி தோழி. கூனி.*

***மயன்*** : *அசுர சிற்பி.*

***மயிடன்*** : *அதிகாயன் இலக்குவனிடம் அனுப்பிய தூதன்.*
***மயிந்தன்*** : *தேவ வைத்தியர் இரட்டையரான அசுவினி தேவர்களின்அமிசத்தில் பிறந்த இருவரில் ஒருவன்.*

***மருத்தன்*** : *மாயாசனகனாக சீதை முன் தோன்றியவன்.*

***மனு*** : *சூரியனின் மகன். இராமன் வமிசத்துக்கு ஆதிமுதல்வன்.*

***மாதலி*** : *இந்திரன் கட்டளைப்படி தேவர்கள் அனுப்பிய தேரைப் போர்க்களத்தில் இராமனுக்கு ஓட்டியவன்.*

***மாண்டவி*** : *பரதன் மனைவி. சனகன் தம்பி மகள்.*

***மாந்தாதா*** : *சூரியகுல முன்னோன்.*

***மாபெரும் பக்கன்*** : *மகாபார்சுவன். இராவணன் படைத்தலைவன்.*

***மாயாவி*** : *வாலியின் குலப்பகைவன்.*

***மாரீசன்*** : *தாடகையின் மைந்தன். பொன்மானாய் வந்தவன்.*

***மாருதி*** : *அநுமன்.*

***மாலி*** : *1. பழைய அரக்கர் தலைவர்களுள் ஒருவன். 2. அசுரன்; இலக்குவனால் அழிந்தவன்.*

***மாலியவான்*** : *இராவணனின் தாயைப் பெற்றவன்.*

***முரபன்*** : *வானரப் படைத்தலைவன்.*

***முரன்*** : *நரகாசுரன் அமைச்சன். கண்ணனால் கொல்லப்பட்டவன்.*

**மேகநாதன்** : *இந்திரசித். இராவணன் மகன்.*

**மேனகை** : *தேவநங்கை. இராவணன் ஆட்சியில் குற்றேவல் புரிந்தவள்.*

***யூயாட்சன்*** : *பஞ்சசேனாபதிகளுள் ஒருவன்.*

**லோகசாரங்க முனிவர்** : *சம்பாதி உயிர் துறக்க முற்படுகையில் காப்பாற்றியவர்.*

**வச்சிரத்து எயிற்றன்** : *வஜ்ஜிரதந்தன். அரக்கர் படைத்தலைவன்.*

**வச்சிரமுட்டி** : *வஜ்ஜிரமுஷ்டி. சுக்கிரீவனால் கொல்லப்பட்ட அரக்கன்.*

***வசிட்டர்*** : *தசரதன் குலகுரு.*

**வசு** : குசனுடைய மைந்தன்.

**வயமத்தன்** : வயமஸ்தன். இராவணன் படைவீரன். இடபனால் அழிந்தவன். **வருணன்** : இராமன் கடல் கடக்க உதவியவன்.

**வன்னி** : வர்ணீ என்றதன் விகாரமாய் நித்திய பிரமச்சாரியாகிய, மதங்க முனிவரைக் குறிக்கும். வாலிக்குச் சாபமிட்டவர்.

**வாதாபி (வி)** : அசுரன்.

**வாயுதேவன்** : 'அதிகாயன் நான்முகப் படையால் இறப்பான்' என இலக்குவனுக்கு அறிவித்தவன்.

**வாலி** : இந்திரன் மகன். கிட்கிந்தை வேந்தன். இராவணனை வாலில் கட்டியவன்.

**விசயன்** : 1. பரதனிடம் தூது சென்ற நால்வருள் ஒருவன். 2. வானரப்படைத் தலைவன்.

**விசுவகர்மா** : கடவுள் தச்சன்.

**விசுவாமித்திரர்** : காதியின் மகன். இராமஇலக்குவரை யாகங்கள் காக்க அழைத்துச் சென்றவர்.

**விதியுக்சிருவன்** : சூர்ப்பணகையின் கணவன்.

**விதர்ப்பை** : சகரன் மனைவி. விதர்ப்பநாட்டு அரசன் மகள்.

**விந்தன்** : வானரப்படைத் தலைவருள் ஒருவன்.

**விநதை** : காசிபன் மனைவி.

**விபாண்டகன்** : காசிபமுனிவரின் புதல்வன். கலைக்கோட்டு முனிவரின் தந்தை.

**விபீடணன்** : இராவணன் தம்பி.

**விராதன்** : 'தும்புரு' எனும் தேவன். குபேரன் சாபத்தால் அரக்கனாகி இராமனால் உயர்ந்தவன்.

**விரூபாக்கன்** : விரூபாட்சன். பஞ்ச சேனாபதிகளுள் ஒருவன். விலங்கு நாட்டத்தன் எனவும் படுவன்.

**வினதன்** : வானரப் படைத்தலைவன்

**வேதவதி** : *குசத்துவமாமுனியின் மகள். இராவணன் வலிந்து பற்றியதால் சாபமிட்டுத் தீயில் புகுந்தவள். அவளே சீதையாகப் பிறந்தாள் என்பர்.*

**வேள்வியின் பகைஞன்** : *யக்ஞசத்துரு. அரக்கர் தலைவன்.*

**வைதர்ப்பி** : *குசனின் மனைவி.*

**வைதேகி** : *சீதை.*